# திருக்குர்ஆன்

*ஆன்மிகம், அறிவுத்தளம் ஆகிய இரண்டிலும் மனிதன் உண்மையைக் கண்டடைய வேண்டியதன் முக்கியத்துவத்திற்கு அழுத்தம் கொடுத்து, மனிதகுலத்திற்கான நற்செய்தியைக் கொண்டுள்ள நூலாகக் குர்ஆன் விளங்குகிறது.*

*ஒவ்வொரு நூலுக்கும் ஒரு கருப்பொருளும் ஒரு நோக்கமும் இருக்கும். குர்ஆனின் கருப்பொருளும் நோக்கமும் இறைவனின் படைப்புத் திட்டத்தை மனிதனுக்கு எடுத்துரைப்பதாகும். அதாவது இவ்வுலகத்தை இறைவன் படைத்தது ஏன்? பூமியில் மனிதனைக் குடியமர்த்தியதன் நோக்கம் என்ன? மரணத்திற்கு முன்னுள்ள இந்த வாழ்க்கையில் மனிதன் என்ன செய்ய வேண்டும்? மரணத்திற்குப் பின்னரான நிரந்தர வாழ்க்கையில் என்ன நிகழும்? என்பனவற்றைத் தெளிவுபடுத்துவதேயாகும்.*

*மனிதன் இறைவனைப்பற்றிய ஞானத்தை அடையச் செய்வதும், இறைவனின் நெருக்கத்தைப் பெறச்செய்வதும், அமைதி மற்றும் ஆன்மிக ரீதியிலான வாழ்க்கையை வாழச்செய்வதும் குர்ஆனின் முக்கிய நோக்கங்கள். இறைமையைக் குறித்தும் இறைவன் உலகில் ஏற்படுத்தியுள்ள சான்றுகளைக் குறித்தும் ஆழ்ந்து சிந்தித்துணர்ந்து இவற்றை அடையலாம். இதனைக் குறிக்க தவஸ்ஸும், ததப்புர் மற்றும் தஃபக்குர் போன்ற சொற்களைக் குர்ஆன் பயன்படுத்துகிறது.*

*இவற்றையெல்லாம் மனத்தில் கொண்டே இந்த மொழி பெயர்ப்பும் விளக்க அடிக்குறிப்புகளும் செய்யப்பட்டுள்ளன.*

# திருக்குர்ஆன்

## தமிழாக்கம்

ترجمة

معاني القرآن الكريم

باللغة التاميلية

குட்வேர்ட் புக்ஸ்

**அரபியிலிருந்து உருது மொழிபெயர்ப்பு**
**மவ்லானா வஹீதுத்தீன் கான்**
*(தஸ்கீருல் குர்ஆன் விளக்கவுரை ஆசிரியர்)*

**மொழியாக்க மேலாய்வாளர்**
*அபி (எ) ஹபீபுல்லாஹ்* M.A., Ph.D.,

**மொழிபெயர்ப்புக் குழு**

*நரியம்பட்டு அப்துஸ்ஸலாம்*
*அபூநதீரா உமரி*
*யூசுப் ராஜா*
*ஃபைஸ் காதிரி*

**ஒப்பிட்டு நோக்குதல் மற்றும் ஆய்வுக் குழு**

*ஹாஃபிஸ் சையத் இக்பால் அஹ்மத் உமரி*
*கதீப் அஸ்ராருல் ஹசன் உமரி*
*கொள்ளு நதீம்*

*அச்சுக்கோவை*
A.R. *ஷாஹ் கிராபிக்ஸ்*

**குட்வோர்ட் புக்ஸ்**

# பொருளடக்கம்



## திருக்குர்ஆன்
## அத்தியாயங்களின் பெயர்கள்

# முன்னுரை

## திருக்குர்ஆன்: இயற்கை மொழி

*குர்ஆன் இறை வேதமாகும். காலாகாலத்திற்குமாக முழுமையாகப் பாதுகாக்கப்பட்ட நிலையில் அது உள்ளது. அரபு மொழியில் எழுதப்பட்டிருந்தாலும் அந்த மொழி தெரியாதோர் குர்ஆனை அறிந்துகொள்ள வாய்ப்பாக மொழிபெயர்ப்புகள் உள்ளன. மூலமொழிக்கு மாற்றாக மொழிபெயர்ப்பு இருக்க முடியாது. எனினும் அரபுமொழி பேசும் மக்களுக்கு அப்பாற்பட்டு ஒட்டு மொத்த மனிதகுலத்திற்கும் இறை வசனத்தைப் பரப்பும் முக்கிய நோக்கம் நிறைவேற மொழிபெயர்ப்புகள் உதவுகின்றன.*

*அரபு மொழியில் குர்ஆன் எழுதப்பட்டுள்ளது என்பது வெளிப்படைதான். ஆனால் உண்மையில், ஆதிப் படைப்பின் போது மனிதர் அனைவரிடமும் இறைவன் நேரடியாகப் பேசிய 'இயற்கை மொழி'யில் அது (குர்ஆனின் அடிப்படை ஞானம்) இருக்கிறது. இவ்வகையில் மனிதகுலத்தை நோக்கிய இறை அழைப்பு மனிதர் அனைவரின் பிரக்ஞையிலும் எப்போதும் இருந்துவருகிறது. இதன் காரணமாகத்தான் குர்ஆன் முழுஉலகும் புரிந்துகொள்ளத்தக்க வேதமாக உள்ளது; சிலரிடம் உணர்வின் தளத்தில்; பிறரிடம் ஆழ்மனத்தில். இந்த உண்மை குர்ஆனில் இவ்விதம் விவரிக்கப்பட்டுள்ளது:*

*"மாறாக இவை அறிவு வழங்கப்பட்டோரின் உள்ளங்களில் (பதிவாகக்கூடிய) தெளிவான வசனங்களாகத் திகழ்கின்றன. தீவினையாளர்களைத் தவிர (வேறு எவரும்) எம் வசனங்களை நிராகரிக்கமாட்டார்கள்." (29:49)*

*உணர்வுத்தளத்தில் குர்ஆன் விளக்கும் இறைஉண்மை மனிதனின் ஆழ்மனத்தில் ஆதியிலிருந்தே இருந்துவருகிறது என்பதுதான் இதன் பொருளாகும். எனவே குர்ஆனின் செய்தி மனிதனுக்கு அந்நியமானதன்று. அதுமானிட இயற்கையில் இசைந்துள்ளதும் மனித அறிவுக்கு ஏற்கனவே நெருக்கமாகிவிட்டதுமாகும்.*

*முதல் மனிதர் ஆதம் படைக்கப்பட்ட போதே பின்னாளில் பிறக்கவிருக்கும் மனிதர்கள் அனைவரும் தொடக்கமாகப் படைக்கப்பட்டுவிட்டனர் எனக் குர்ஆன் கூறுவது இவ்வுண்மையைப் புலப்படுத்துகிறது. அந்தச் சமயத்தில்தான் இறைவன் அனைத்து மனிதர்களுடனும் நேரடியாக உரையாடினான்.*

*இந்த நிகழ்வு திருக்குர்ஆனில் இவ்விதம் மறைமுகமாகச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது :*

*"(நபியே!) உம் இறைவன் ஆதமுடைய மக்களின் முதுகுத் தண்டிலிருந்து அவர்களின் வழித்தோன்றல்களை வெளியாக்கி அவர்களுக்கு அவர்களையே சாட்சியாக்கி "நான் உங்கள் இறைவனல்லவா?" என்று கேட்டான். அதற்கு அவர்கள் "ஆம் இதற்கு நாங்களே சாட்சியாக இருக்கிறோம்" என்றனர். மறுமை நாளன்று "இதைப்பற்றி நாங்கள் எதுவும் அறிந்திருக்கவில்லையே" என்று நீங்கள் கூறக்கூடாது என்பதற்காகவே (உங்கள்) முன்னோர் அளித்த சாட்சியத்தை நாம் நினைவுபடுத்துகிறோம்." (07:172)*

*கீழ்க்கண்ட வசனத்தில் இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையேயான உரையாடலைப் பற்றி குர்ஆன் மேலும் தெரிவிப்பதாவது:*

*'நாம் (செயலுரிமை எனும்) இந்தப் பொறுப்பை வானங்கள், பூமி, மலைகள் (ஆகியவற்றின்) முன்னால் வைத்தபோது அவை அதனைச்சுமக்க அஞ்சி மறுத்துவிட்டன. ஆனால் மனிதன் அந்தச் சுமையை ஏற்றுக் கொண்டான். உறுதியாக அவன் தீவினையாளனாகவும் அறிவிலியாகவும் ஆகிவிட்டான்'. (33:72)*

*குர்ஆனின் சாரம் ஏற்கனவே மனிதன் அறிந்ததுதான்; முற்றிலும் புதிதன்று. உண்மையில் குர்ஆன் மனித மனத்தை மலரச்செய்கிறது. பின்னர் ஏற்பட்ட பாதிப்புகளிலிருந்து தன்னைக்காத்து, தன் இயல்பை உயிர்ப்புடன் வைத்துக் கொண்டிருக்கும் ஒருவன், குர்ஆனை ஓதும் போது அவன் மனம் திறக்கிறது; அங்குத்தான் இறைவனின் உரையாடல்*

*பாதுகாக்கப்பட்டுள்ளது. இதனை மனத்தில் கொண்டால் குர்ஆன் மொழிபெயர்ப்பு அதனைப் புரிந்துகொள்ளச் சிறந்த கருவியாகத் திகழ்வதை உணரலாம்.*

*மனிதருடனான இறைவனின் உரையாடல் முதல் உடன்படிக்கையெனில் குர்ஆன் இரண்டாம் உடன்படிக்கையாகும். ஒன்று மற்றதற்குச் சாட்சியாக இருக்கிறது. அரபுமொழியை மிகக்குறைவாக அறிந்த அல்லது அறவே அறியாத ஒருவனும் மொழிபெயர்ப்புகள் மூலம் குர்ஆனை வாசிக்கிறான்; இதனால் குர்ஆனை அதன் முழுமையில் புரிந்துகொள்ள முடியவில்லையே என அவன் நிராசை கொள்ளவேண்டியதில்லை. ஏனெனில் இறைவேத வசனங்களை இயற்கையாகவே பெறுபவன் என்பதே மனிதனைப் பற்றிய குர்ஆனின் கருத்தாக்கமாகும். தற்காலத்திய மரபணு தொடர்பான அறிவியலும் மானுடவியல் கண்டுபிடிப்புகளும் இதனை வலுப்படுத்துவதாக உள்ளன.*

## திருக்குர்ஆன்: இறை வாக்கு

*குர்ஆனைப் படிக்கும்போது 'இது இறைவசனம்' என மீண்டும் மீண்டும் அதில் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காண்பீர்கள். சாதாரணப் பார்வையில் இது ஒரு நேரான உண்மை. ஆனால் குறிப்பிட்ட சூழல்களில் வைத்துப் பார்க்கும்போது இது மிக அசாதாரணமான அறிவிப்பு. உலகில் எத்தனையோ நூல்கள் புனித நூல்களாகக் கருதப்படுகின்றன. ஆனால் குர்ஆனைத் தவிர வேறு எந்த மத நூலும் தன்னைக் கடவுளின் வசனம் என முன்னிறுத்தியதில்லை. குர்ஆனின் இத்தகைய தனித்தன்மை வாய்ந்தகூற்று, வாசகனுக்குச் சிறந்த தொடக்கப் புள்ளியாக அமைகிறது. பின்னர் அவன் மனிதர்கள் படைத்த நூல்களிலிருந்து வேறுபட்ட தனிச்சிறந்த நூலாகக் கண்டுக் குர்ஆனை வாசிக்கிறான். 'மனிதனே! உன் இறைவனே உன்னுடன் பேசிக்கொண்டிருக்கிறான். அவனுடைய வசனங்களுக்குச் செவிசாய்த்து அவற்றைப் பின்பற்று' என்ற விதமாக வரும் அறிவிப்புகளைக் குர்ஆனில் திரும்பத் திரும்பக் காணலாம். இத்தகைய நேர்ப்பேச்சுமுறை வித்தியாசமானது; வேறு எந்த*

நூலிலும் இல்லாதது; வாசகனிடம் அழுத்தமான பாதிப்பை உண்டாக்குவது. இறைவன் தன்னிடம் நேரடியாகப் பேசுவதாக அவன் உணர்கிறான். இந்த உணர்வு, குர்ஆனின் உறுதிவாய்ந்த வசனங்களைத் தீவிரமாகக் கருத்தில்கொள்ள அவனைத் தூண்டுகிறது.

குர்ஆன் வசனங்களின் தொகுப்புமுறை தனித்தன்மையுடையது. மனிதர்களால் எழுதப்படும் நூல்களில் கருத்துக்கள் தலைப்புகளின் அடிப்படையில் வரன்முறை படுத்தப்பட்டிருக்கும். ஆனால் குர்ஆன் இத்தகைய பாணியை பின்பற்றுவதில்லை. சாதாரண மனிதனுக்கு அது முறைப்படி அமையாதது போலத் தோன்றும். உண்மையில் ஆழ்ந்து நோக்கும்போது மிகச்சிறப்பான ஒழுங்குமுறையில் அமைந்திருப்பது புலப்படும். அதன் நடை கம்பீரமானது. அதைப் படிக்கும் போது, அதனை எழுதியவர் உன்னதமான உயரிய இடத்திலிருந்து ஒட்டுமொத்த இனத்தை நோக்கித் தனித்த அக்கறையுடன் பேசுவதாகத் தோன்றும்.

குர்ஆனின் ஒரு சிறப்பியல்பு, எந்த நேரத்திலும் அதனை எழுதிய ஆசிரியருடன் அதனை ஓதுபவர் தொடர்பு கொள்ளலாம், வினாக்களை எழுப்பி விடைகளைப் பெறலாம் என்பதாகும். படைத்தவனே அவன்தான் என்பதால் மனிதனின் அழைப்பிற்கு அவன் செவிசாய்க்கிறான்; பதில் தருகிறான். அவன் வாழும் இறைவன்.

## இறைவனால் வெளிப்படுத்தப்பட்ட வேதம்

இறைத்தூதர் முஹம்மதுக்கு இறைவனால் அருளப்பட்ட வேதம் குர்ஆன். ஒரே சமயத்தில் முழுவதுமாக அது வெளிப்படுத்தப்படவில்லை. பகுதி பகுதியாகப் பல்வேறு சூழ்நிலைகளில் 23 ஆண்டுகளில் அது அருளப்பட்டது. குர்ஆனின் முதற் பகுதி கி.பி. 610ஆம் ஆண்டில் இறைத்தூதருக்கு மக்காவில் இருந்தபோது அருளப்பட்டது. அதன்பின் குர்ஆனின் அடுத்தடுத்த பகுதிகள் தொடர்ந்து அவருக்கு அருளப்பட்டன. குர்ஆனின் இறுதிப் பகுதி கி.பி.632ஆம் ஆண்டு அவர் மதீனாவில் இருந்தபோது அருளப்பட்டது.

*சிறிதும் பெரிதுமாக 114 அத்தியாயங்கள் குர்ஆனில் உள்ளன. வசனங்களின் எண்ணிக்கை ஏறத்தாழ 6600 ஆகும். மனனம் செய்து ஓதுவதற்கு எளிதாகக் குர்ஆன் 30 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. வானவர் கேப்ரியேலின் வழிகாட்டுதலில் இப்பகுதிகள் இறுதியாக ஒழுங்குபடுத்தப்பட்டன. கேப்ரியேல் மூலமாகவே இறைவன் தூதர் முஹம்மதுவுக்குத் திருக்குர்ஆனை வெளிப்படுத்தினான்.*

*குர்ஆன் அருளப்பட்ட 7ஆம் நூற்றாண்டின் முதற் காலாண்டிலேயே காகிதம் கண்டுபிடிக்கப்பட்டுப் பயன்பாட்டில் இருந்தது. 'பேப்பிரஸ்' என வழங்கப்படும் இந்தக் காகிதம் குறிப்பிட்ட மரங்களின் நார்களைக் கொண்டு கைகளால் தயாரிக்கப்படுவதாகும். குர்ஆனின் ஒவ்வொரு பகுதியும் அருளப்பட்ட சமயத்திலேயே உடனுக்குடன் அது பேப்பிரஸில் அரபு மொழியில் (6:7) எழுதப்பட்டது. மக்களும் அந்தக் குர்ஆன் வசனங்களை அவ்வப்போதே மனனம் செய்துகொண்டனர். இறைவழிபாட்டின் போதும் இஸ்லாமிய அழைப்பிற்கான அழைப்புப் பணியின் போதும் குர்ஆன் வசனங்களே ஓதப்பட்டுவருகின்றன. இவ்விதமாக ஒரே சமயத்தில் குர்ஆன் எழுதப்பட்டும் மனனம் செய்யப்பட்டும் வந்தது. இறைத்தூதர் வாழ்ந்த காலக்கட்டம் வரை இவ்விதமாகவே குர்ஆன் பாதுகாக்கப்பட்டது.*

## இறைவனின் படைப்புத் திட்டம்

*ஒவ்வொரு நூலுக்கும் ஒரு நோக்கம் உண்டு. குர்ஆனின் நோக்கம் இறைவனின் படைப்புத் திட்டத்தை மனிதன் உணரும்படி செய்வதே ஆகும். அதாவது, இந்த உலகை இறைவன் ஏன் படைத்தான்? மனிதனைப் பூமியில் வாழச் செய்வதற்கான காரணம் என்ன? இறப்பிற்கு முன்புள்ள உலக வாழ்க்கையில் மனிதனிடமிருந்து இறைவனின் எதிர்பார்ப்பு என்ன? இறந்தபின் அவன் எதிர்கொள்ளவேண்டியது என்ன? இவற்றை மனிதனுக்கு விளக்குவதே குர்ஆனின் நோக்கம். முடிவற்றவனாகவே மனிதன் படைக்கப்படுகிறான். அவ்வாறு அவனைப் படைக்கும்போது*

*அவனது வாழ்வை இறைவன் இரு பகுதிகளாகப் பிரிக்கிறான். ஒன்று, இறப்புக்கு முன்புள்ள சோதனைக் காலப் பகுதி; அடுத்தது, இறந்தபின்புள்ள மறுமைக்காலப்பகுதி. இம்மை வாழ்வில் மனிதன் செய்த நற்செயல்களுக்கான கூலியும் தீச்செயல்களுக்கான தண்டனையும் வழங்கப்படும் பகுதி அது. இவை முறையே முடிவற்ற சொர்க்கமும் முடிவற்ற நரகமும் ஆகும். இந்த உண்மையை மனிதன் உணரும்படி செய்வதே குர்ஆனின் நோக்கமாகும். இப்புனித நூலின் கருப்பொருளும் இதுவேயாகும். இம்மையிலிருந்து மறுமைக்கான பயணத்தில் அவனுக்கு முழுவதுமாக வழிகாட்டி உதவுவது திருக்குர்ஆனின் கருப்பொருள்.*

**எச்சரிக்கை தரும் இறைவேதம்**

*திருக்குர்ஆன் படிப்பினைகளும் இறை எச்சரிக்கைகளும் கொண்ட நூல். இன்னும் சரியாகச் சொல்வதென்றால் அது ஒரு ஞான நூல். மரபான அறநூலின் வழிமுறையைக் குர்ஆன் பின்பற்றவில்லை. ஒரு சராசரி மனிதன் குர்ஆனை ஓதுகையில் துண்டு துண்டான அறிவிப்புகளின் தொகுப்பாக அவனுக்கு அது தோன்றலாம். மேலோட்டமான பார்வையில் இந்த உணர்வு உண்மை தான். குர்ஆனின் இந்த அமைப்பு ஒரு குறைபாடு அல்ல; முதன்முதலாக இறைத்தூதருக்கு அருளப்பட்ட மூலவடிவத்தை மாற்றாமல் பாதுகாக்கும் குர்ஆனியத் திட்டம் இது. வேதத்தில் தேடுதலில் ஈடுபடும் ஒருவன் ஒரு நேரத்தில் ஒரு பக்கத்தை அல்லது ஒரு வசனத்தை அல்லது ஒரு வரியை மட்டும் வாசித்தாலும் சத்தியத்தின் செய்தியை அவனுக்குத் தெரிவித்துவிடும் நோக்கம் இதனால் நிறைவேறிவிடுகிறது.*

*குர்ஆனின் அடிப்படையான ஓர் அம்சம் மாபெரும் கொடையாளனின் அருட்கொடைகளை மனிதனுக்கு நினைவூட்டுவதாகும். அவனது கொடைகளில் மிகச்சிறந்தது மனிதனைப் படைக்கையில் தனிச் சிறப்புமிக்க தன்மைகளை இறைவன் அவனுக்கு வழங்கியதாகும். மற்றொரு சிறந்த கொடை மனிதனுக்கு உதவும் அனைத்து ஆதாரங்களையும் கொண்ட*

பூமியில் அவனை வாழச் செய்ததாகும். இயற்கையின் இந்தக் கொடைகளை அனுபவிக்கும்போது தனக்கு அருள்கின்றவனை மனத்தில் கொள்ளவும் தன்னைப் படைத்தவனின் உன்னதத்தை உணர்ந்து ஏற்றுக்கொள்ளவும் செய்வது குர்ஆனின் நோக்கம். இவ்வாறு செய்தால் மனிதன் நிலையான சொர்க்கத்தில் நுழையும் பேறு பெறுவான். அருளாளனைப் புறக்கணிப்பது நரகத்திற்கு இட்டுச் செல்லும் செயலாகும். தப்பமுடியாத இந்தத் தண்டனை உறுதியை நினைவுறுத்துகிறது குர்ஆன்.

## ஆன்மிக உள்ளொளியும் இறைவனை உணர்தலும்

குர்ஆனின் ஒரு முக்கியமான தகுதி, அது நமக்கு அடிப்படையான, இன்றியமையாத கொள்கைகளை மட்டுமே விளக்கி, அடிக்கடி அவற்றையே வலியுறுத்துவதாகும். மாறாக அடிப்படையானவை அல்லாதவையும் வடிவம் தொடர்பானவையும் குர்ஆனில் ஆகக்குறைவாகவே காணப்படுகின்றன. குர்ஆனிய அமைப்பின்படி வடிவத்திற்கு இரண்டாமிடமே அளிக்கப்பட்டுள்ளது. வாசகன் உணர்ந்து போற்றும் வண்ணம் குர்ஆன் இவ்வியல்பில் மிகத்தெளிவாக உள்ளது.

இஸ்லாமிய ஆளுமை உருவாக்கத்தில் உள்ளுணர்வுக்கு மிக மிக முக்கியமான பங்குண்டு. உள்ளுணர்வு வளருமேயானால் இஸ்லாமிய அமைப்பு இயற்கையாகவே உருவாகிவிடும். ஆனால் அமைப்புமுறைச் செயல்பாட்டால் ஆன்மிக உள்ளுணர்வை ஒருபோதும் உருவாக்கமுடியாது. இதன் காரணமாகவே மனிதனுக்குள் ஒரு ஞானப்புரட்சியை உருவாக்கி அதனை வளர்த்தெடுப்பதைக் குர்ஆன் நோக்கமாகக்கொண்டுள்ளது. இந்தப் புரட்சியை 'மஃரிஃபா' (சத்தியத்தை உணர்தல்) என்று குர்ஆன் குறிப்பிடுகிறது. (05:83)

குர்ஆன், அறிதல் நிலையில் மனிதன் சத்தியத்தைக் கண்டடைவதற்கு முக்கியத்துவம் கொடுக்கிறது. இந்த நிலையில் இறைவன் மீது உண்மையான நம்பிக்கை பிறக்கிறது. ஆன்மிக உள்ளுணர்வு இல்லையெனில் அங்கே இறைநம்பிக்கை இல்லை.

## ஜிஹாத்: அமைதியான கொள்கைப் போராட்டம்

*ஊடகங்கள் மூலமாக மட்டுமே குர்ஆனை அறிபவர்களிடம் குர்ஆன் 'ஜிஹாத்'திற்கான வேதம் எனவும் ஜிஹாத் என்பது வன்முறையின் மூலம் நோக்கத்தை அடைதல் எனவும் கருத்துப் பதிவாகியிருக்கிறது. இது மிகத்தவறான புரிதல். குர்ஆனைச் சுயமாக வாசிப்பவர்களுக்கு அது வன்முறையைப் போதிக்கும் வேதம் அல்ல என்பது தெளிவாகத் தெரியும். குர்ஆன் தொடக்கம் முதல் இறுதி வரை அமைதியையே பரப்பும் வேதமாகும்; எவ்வகையிலும் அது தீவிரவாதத்தை ஆதரிப்பதன்று. குர்ஆனின் போதனைகளில் ஜிஹாத்தும் ஒன்று. ஆனால் 'ஜிஹாத்'தின் சரியான பொருள் 'அமைதியான அருமுயற்சி' என்பதுதான். ஜிஹாத் பற்றிய குர்ஆனியக் கருத்தாக்கத்தைக் கீழ்வரும் வசனம் தெளிவாக்கும்.*

*"எனவே நீர்மறுப்பாளர்களுக்குக் கீழ்ப்படியாதீர். (குர்ஆனாகிய) இதன் மூலம் அவர்களிடம் (இறைச் செய்தியைக் கொண்டு சேர்ப்பதற்காகக்) கடும் முயற்சி மேற்கொள்வீராக!" (25:52) என்பது இறைத்தூதருக்கு இறைவன் இட்ட கட்டளை.*

*குர்ஆன் என்பது ஆயுதமன்று; 'அமைதிப் போராட்டம்' எனும் புனிதக் கருத்தியலை அறிமுகம் செய்யும் வேத நூல். குர்ஆனைப் பொறுத்தவரை அத்தகைய போராட்டத்தின் வழிமுறை மனிதர்களின் உள்ளங்களில் ஆழப்பதிந்துவிடும் வார்த்தைகள் கொண்டு பேசுவதாகும் (04:63)*

*ஆக, மனிதனின் மனத்தையும் அறிவையும் தொட்டு ஈர்ப்பதுவே குர்ஆனிய அணுகுமுறையாகும். இவ்வாறு மக்களின் மனங்களை நோக்கிப் பேசுவதன்மூலம் அவர்களை நிறைவடையச் செய்யலாம்; குர்ஆனின் உண்மைத் தன்மையை உணரச் செய்யலாம். சுருக்கமாகச் சொல்வதென்றால் அவர்களுள் ஓர் அறிவுப் புரட்சியை உண்டாக்கலாம். இதுவே குர்ஆனின் நோக்கம். இவ்வகையிலான நோக்கங்களை விவேகமான விவாதங்கள் மூலமே அடையமுடியும்; வன்முறையாலோ ஆயுதம் தாங்கிய போராட்டத்தாலோ அல்ல.*

*“ஆகவே (உங்களுடன் போரிடும்) அவர்களை எங்குக் கண்டாலும் கொல்லுங்கள்” (02:191) எனப் போர்புரியஅனுமதி அளிக்கும் இதுபோன்ற சில வசனங்கள் குர்ஆனில் உள்ளன என்பது உண்மையே.*

*சிலர் இதுபோன்ற வசனங்களைக் சுட்டிக்காட்டி இஸ்லாம் போர் மற்றும் வன்முறையின் மார்க்கம் எனக் கருத்துருவாக்க முயல்கின்றனர். இது முற்றிலும் தவறானது. முஸ்லிம்கள் மீது வலுத்தாக்குதல் நிகழ்த்தியவர்கள் தொடர்பாக மட்டுமே, வரையறைக்குட்பட்ட பொருளில் அமைந்தவை இவ்வசனங்கள். மேற்குறித்த வசனம் இஸ்லாத்தின் பொதுவான கட்டளை அன்று.*

*குர்ஆன் முழுவதும் ஒரே சமயத்தில் இன்றுள்ள வடிவத்தில் அருளப்பட்டதன்று. சூழ்நிலைக்கு ஏற்ப 23 ஆண்டுகள் பகுதி பகுதியாக அவ்வப்போது குர்ஆன் வெளிப்படுத்தப்பட்டது. இதில் போர் நடைபெற்ற காலம் மூன்று ஆண்டுகளே. மீதி 20 ஆண்டுகள் அமைதியான காலகட்டமாகும். இந்தச் சமயத்தில் அருளப்பட்ட குர்ஆன் வசனங்கள் இறைவனை அறிதல், இறை வணக்கம், ஒழுக்கம், நீதிநெறிமுறை முதலிய இஸ்லாத்தின் அமைதி அறிவுரைகளையே தாங்கியுள்ளன.*

*இவ்விதம் இறைவேதத்தின் செய்திகள், கொள்கைகள் முதலியவை பல்வேறு வகைகளாய்ப் பிரிந்திருப்பது இயல்பானதும் சமய நூல்கள் அனைத்திலும் பொதுவாகக் காணப்படுவதுமாகும். உதாரணமாக, இந்துக்களின் புனித நூலான கீதை ஞானம் மற்றும் நீதிநெறிகள் தொடர்பானது. இவற்றுடன் கிருஷ்ணன் அர்ஜுனனைப் போர்புரிய ஊக்குவிக்கும் வசனமும் கீதையில் உள்ளது. (பகவத்கீதை 03:30) கீதை மீது நம்பிக்கை கொண்டோர் எப்போதும் போர் செய்வதில் ஈடுபட வேண்டும் என்பதல்ல இதன் பொருள். மகாத்மாகாந்தி தமது அகிம்சைக் கொள்கையை அதே கீதையிலிருந்து பெற்றார். வேறுவழியே இல்லாத, விதிவிலக்கான சூழ்நிலைகளில் மட்டுமே கீதையிலுள்ள போர்புரியத்தூண்டும் வசனங்கள் பொருந்தும். ஆனால் அன்றாட வாழ்வுக்கு*

மகாத்மாகாந்தி பெற்றுக்கொண்ட அமைதி அறவுரைகளையே கீதை போதிக்கிறது.

இதுபோலவே இயேசு கிறிஸ்துவும் 'பூமியில்மேல் சமாதானத்தை அனுப்பவந்தேன் என்று எண்ணாதிருங்கள்: சமாதானத்தையல்ல, பட்டயத்தையே அனுப்ப வந்தேன்" (மத்தேயு 10:34) என்று கூறினார்.

இயேசு கிறிஸ்து இவ்விதம் கூறியதால் அவர் போதித்த சமயம் போரையும் வன்முறையையும் கொண்டதெனத் தீர்மானிப்பது சரியன்று. இயேசுவின் இந்தக் கூற்று குறிப்பிட்ட சூழ்நிலைகளில் மட்டுமே பொருந்துவது. மற்றபடி மனிதவாழ்வில் நற்குணத்தை வளர்த்துக்கொள்ளுதல், ஒருவரை ஒருவர் நேசித்தல், ஏழைகளுக்கும் தேவையுள்ளவர்களுக்கும் உதவுதல் எனும் அமைதி விழுமியங்களையே அவர் போதித்தார்.

இதுவே குர்ஆனுக்கும் பொருந்தும். இறைத்தூதர் முஹம்மது மக்காவிலிருந்து மதீனாவிற்குப் புலம்பெயரும் நிலையில், சிலை வணக்கம் புரிந்துவந்த மக்காவாசிகள் அவரிடம் மிகக்கடுமையாக நடந்து கொண்டனர். ஆனால் இறைத்தூதர் எப்போதும் பொறுமையுடனும் மோதலைத் தவிர்க்கும் உத்தியுடனும் போரைத் தவிர்த்தே வந்தார். எனினும் தவிர்க்கவே முடியாத சூழ்நிலைகளில் வேறுவழியே இல்லாத காரணத்தால் தற்காப்பிற்காகச் சில சந்தர்ப்பங்களில் போர்புரிய வேண்டியிருந்தது. இது போன்ற சமயங்களிலேயே போர் தொடர்பான இறைவசனங்கள் வெளிப்பட்டன. இத்தகைய இறைக்கட்டளைகள் குறிப்பிட்ட அந்தச் சூழ்நிலைகளுக்கு மட்டுமே தவிரப் பொதுவாகப் பின்பற்றப்பட வேண்டியவை அல்ல; எல்லா காலங்களுக்கும் பொருந்துவனவும் அல்ல.

அதனால்தான் இறைத்தூதரின் நிலையான உயர் தகுதியை உணர்த்தவரும் குர்ஆன், 'அனைத்துலகத்தார்க்கும் ஓர் அருட்கொடை' எனக் குறிப்பிடுகிறது. இஸ்லாம் என்னும் அரபிச் சொல்லின் பொருளுக்கேற்ப, அதன் முழு அர்த்தத்தில், அது 'அமைதி மார்க்கம்' தான்.

*குர்ஆன் தனது வழியை 'அமைதிக்கான வழிகள்' (5:16) எனக் குறிப்பிடுகிறது. 'சமாதானமே சிறந்தது' (4:128) எனவும் விளக்குகிறது.*

*'(அமைதிக்குப் பங்கம் ஏற்படும் வகையில்) குழப்பம் ஏற்படுவதை இறைவன் விரும்புவதில்லை' (2:205) என்றும் குர்ஆன் தெளிவுபடுத்துகிறது. ஆகவே இஸ்லாமிய மார்க்கமும் வன்முறையும் ஒன்றுக்கொன்று முரணானவை என்பது மிகைக்கூற்று ஆகாது.*

*'இஸ்லாமிய வன்முறை' என்ற கருத்தாக்கம் எடுத்த எடுப்பிலேயே புறந்தள்ளப்படவேண்டிய ஒன்று. இன்றைய உலகில் வன்முறை நிலையானதன்று என்னும் உண்மையே இஸ்லாமியக் கொள்கைக்கு வன்முறை அந்நியமானது என்பதற்குப் போதுமானதாகும். சோதனையான எத்தனையோ காலக்கட்டங்களைத் தாண்டி நிலைத்திருக்கும் மார்க்கம் இஸ்லாம். அதனால் வன்முறை போன்ற எந்தக் கொள்கைக்கும் ஆதரவாக அது இருக்க முடியாது. இஸ்லாமிய மார்க்கத்துடன் வன்முறையை இணைக்க முற்படுவது நீடித்து வந்திருக்கும் இஸ்லாத்தின் தன்மையையே சந்தேகிக்கும் செயலாகும். எனவே 'இஸ்லாமிய வன்முறை' என்று கூறுவது 'அமைதியான வன்முறை' எனக் குறிப்பிடுவது போல முரணான ஒன்றாகும். இஸ்லாத்தின் போதனைகள் அனைத்திற்கும் நேரடியாகவோ மறைமுகமாகவோ அமைதியே அடிப்படையானதாகும்.*

## திருக்குர்ஆனை வாசிப்பது எப்படி?

*'குர்ஆனை நிறுத்தி நிதானமாக ஓதுவீராக!' (73:4) எனக் குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. மெதுவாக, அளவான ஒலிநயத்தொனியில் குர்ஆனைச் சீராக ஓத வேண்டும் என்பது இதன் பொருள். அதாவது உள்ளடக்கத்திற்கு முக்கியத்துவம் தந்து முழுக் கவனத்துடன் ஓதவேண்டும். அவ்வாறு ஓதும்போது குர்ஆனுக்கும் ஓதுபவருக்குமிடையே இருவழிச் செயல்பாடு நிகழ்கிறது.*

*ஓதுபவருக்குக் குர்ஆன் இறைவனின் பேச்சு. ஒவ்வொரு வசனத்திற்கும் அவர் உள்ளம் அப்பேச்சுக்குப் பதிலளிக்கத் தொடங்குகிறது.*

*இறைவனின் மாட்சிமையைக் குர்ஆன் கூற, வாசிப்பவர் அதனை உணரும்போது அவரது முழு வாழ்வும் வலுவான தாக்கத்திற்குள்ளாகிறது. இறைவனின் அருட்கொடைகளைக் குர்ஆன் அடுக்குகையில் வாசிப்பவர் உள்ளம் நன்றிப் பெருக்கால் நிறைகிறது. இறைவனின் தண்டனைகள் விவரிக்கப்படும்போது அவர் நடுநடுங்கிப் போகிறார். இறைவனின் கட்டளையைக் குர்ஆன் தெரிவிக்கையில் அதனை நிறைவேற்றி இறைவனின் அடியான் ஆகிவிட வேண்டும் எனும் தீவிர உணர்ச்சி அவருள் எழுகிறது.*

வஹீதுத்தீன் கான்
*டிசம்பர் 2015*
*புது டில்லி.*

www.mwkhan.com

# திருக்குர்ஆன் மற்றும் இறைத்தூதர் பற்றிய சில தகவல்கள்

கி.பி. 570 — அரேபியப் பழம்பெரும் நகரமான மக்காவில் முஹம்மது நபி பிறந்தார். நபிகள் நாயகம் என வரலாற்றில் அறியப்பட்ட அவர் பிறப்பதற்குச் சில மாதங்களுக்கு முன்னர், தம் தந்தை அப்துல்லாஹ்வை இழந்துவிட்டார்.

576 — இறைத்தூதர் முஹம்மதின் தாயாரான ஆமினா, முஹம்மதுக்கு ஆறு வயது ஆனபோதே இறந்துவிட்டார்.

578 — அநாதைச் சிறுவராகி விட்ட இறைத்தூதர் முஹம்மதின் பாட்டனாரான அப்துல் முத்தலிபும் முதுமையால் மரணமடைந்தார்.

595 — கதீஜா என்பவரை முஹம்மது திருமணம் செய்து கொண்டார்.

610 — முஹம்மது 40ஆம் வயதில் மக்காவின் ஒளிமலை என்னும் இடத்தில் வேத வெளிப்பாடுகளைப் பெறத் தொடங்கி இறைத்தூதரானார்.

613 — இஸ்லாம் குறித்து வெளிப்படையான பொது அழைப்பு விடுக்கப்பட்டது.

615 — மக்காவிலிருந்தவர்கள் ஒடுக்குமுறை செய்தபோது, அதிலிருந்து தப்பிக்க இறைத்தூதருடைய தோழர்களின் சிறுகுழு ஒன்று அபிசீனியா (இன்றைய எத்தியோப்பியா)வுக்குப் புலம் பெயர்ந்தது.

616 – 619 — இறைத்தூதர் முஹம்மதின் சொந்த இனக்குழுவான பனு ஹாஷிம், அன்னாரின் குடும்பத்தைச் சமூகப் புறக்கணிப்புச் செய்தது.

619 இறைத்தூதர் முஹம்மது அவர்களின் மனைவி கதீஜா மற்றும் சிறிய தகப்பனார் அபுதாலிப் ஆகியோர் மரணம் அடைந்தனர்.

619 அழைப்புப் பணிக்காக இறைத்தூதர் தாயிஃப் நகருக்குச் சென்றபோது அந்நகர மக்கள் அன்னாரை அவமதித்துத் துன்புறுத்தினர்.

620 இறைத்தூதரது ஜெருசலம் மற்றும் விண்ணகப் பயணம் இந்த ஆண்டில் நிகழ்ந்தது.

622 மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரா என்னும் புலப்பெயர்வு நிகழ்ந்தது. அதுவே இஸ்லாமிய நாட்காட்டியின் தொடக்கமானது.

624 பத்ருப் போர் நிகழ்ந்தது. மக்காவிலிருந்து வந்து போர் புரிந்த சிலை வணங்கிகள் தோற்கடிக்கப்பட்டனர்.

625 உஹத் போர் நிகழ்ந்தது. மதீனாவுக்கு அருகில் முஸ்லிம்களை மக்காவாசிகள் தோற்கடித்தனர்.

628 புகழ்பெற்ற ‘ஹுதைபிய்யா’ அமைதி ஒப்பந்தம் கையெழுத்தானது. பத்து ஆண்டுகளுக்குப் போர் நிறுத்தம் ஏற்பட்டதால் இஸ்லாமிய அழைப்புப்பணி தீவிரமடைந்தது. ஏராளமானோர் இஸ்லாத்தை ஏற்றனர்.

630 அமைதி ஒப்பந்தத்தைச் சிலை வணக்கம் புரிந்தவர்கள் முறித்துவிட்டனர். போரில் மக்கா நகரம் முஸ்லிம்களிடம் சரணடைந்தது. அந்நகரத்தில் இருந்த அனைவருக்கும் இறைத்தூதர் பொதுமன்னிப்பு வழங்கினார். மக்கள் தொகையும் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டது.

*631* அரேபியாவின் பழங்குடியினர் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டனர். யூத, கிறிஸ்தவ மக்களுடன் இறைத்தூதர் அமைதி ஒப்பந்தம் செய்துகொண்டார்.

*632* இறைத்தூதரின் விடைபெறும் ஹஜ் பயணம் நிகழ்ந்தது.

*632* இந்த ஆண்டில் ஜூன் மாதம் 8ஆம் நாளில் இறைத்தூதர் மதீனாவில் இயற்கை எய்தினார்.

*633* முதல் கலீஃபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அபுபக்கர் திருக்குர்ஆன் தொகுக்கும் பணியை முழுமைப் படுத்தினார்.

*645* மூன்றாம் கலீஃபாவான உஸ்மான் அதைப் பிரதிகள் எடுத்து அண்டை நாடுகளில் வழங்கச் செய்தார்.

*1942* அல்லாமா அப்துல் ஹமீத் பாகவியும், அறிஞர் பா. தாவூத் ஷாவும் தனியாக இயங்கித் திருக்குர்ஆன் தமிழ் மொழிபெயர்ப்புகளைப் பகுதிபகுதியாக 1925ஆம் ஆண்டு முதல் வெளியிடத் தொடங்கினர். முழுமையான மொழிபெயர்ப்பு 1942இல் வெளியான பிறகு தமிழில் இதுவரை ஏறக்குறைய 25 மொழிபெயர்ப்புகள் வந்துள்ளன.

## திருக்குர்ஆன் வெளிப்படுத்தப்பட்ட காலத்தைய (கி.பி. 610-632) அரேபிய தீபகற்பத்தின் வரைபடம்



# 1. தோற்றுவாய் (அல்ஃபாத்திஹா)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1]அனைத்துலகங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே
எல்லாப் புகழும். [2]அவன் அளவற்ற அருளாளன்; நிகரற்ற
அன்பாளன். [3]தீர்ப்பு நாளின் அதிபதி. [4](இறைவா!) உன்னையே
நாங்கள் வணங்குகிறோம்; உன்னிடமே நாங்கள் உதவி
தேடுகிறோம். [5]எங்களுக்கு நேர்வழியைக் காட்டுவாயாக! [6]அது
நீ யாருக்கெல்லாம் அருள்புரிந்தாயோ அவர்களின் வழி; [7]உன்
சினத்திற்குள்ளோனோர் வழியன்று; நெறிதவறியோரின் வழியும்
அன்று.

# 2. பசுமாடு (அல்பகரா)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1]அலிஃப் – லாம் – மீம்.

[2]இது இறைவேதமாகும். இதில் எத்தகைய ஐயமும் இல்லை;
இறையச்சமுடையோருக்கு இது நேர்வழிகாட்டியாகும்.
[3]அவர்கள் மறைவானவற்றை நம்புகின்றனர். தொழுகையைக்
கடைப்பிடிக்கின்றனர். நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து
(அறச்)செலவும் செய்கின்றனர். [4](நபியே!) அவர்கள் உமக்கு
அருளப்பட்ட இவ்வேதத்தின் மீதும் உமக்கு முன்னர் அருளப்பட்ட
வேதங்களின் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளனர். மறுமையின்
மீதும் உறுதியான நம்பிக்கை கொள்கிறார்கள். [5]அவர்கள்தாம்
தம் இறைவனின் நேர்வழியில் இருப்பவர்கள்; அவர்கள்தாம்
வெற்றியாளர்கள்.

[6](ஓரிறை)மறுப்பாளர்களை நீர் எச்சரிப்பதும் எச்சரிக்காமல்
இருப்பதும் ஒன்றுதான். அவர்கள் நம்பிக்கைகொள்ளமாட்டார்கள்.
[7]அல்லாஹ் அவர்களுடைய உள்ளங்களின் மீதும் செவிப்புலன்களின்

*மீதும் முத்திரையிட்டுவிட்டான். அவர்களுடைய பார்வைகளின்*
*மீதும் திரையுள்ளது. அவர்களுக்குக் கடும் வேதனையும் உண்டு.*

*[8]மனிதர்களில் சிலர், நாங்கள் அல்லாஹ்வின் மீதும் மறுமை*
*நாளின் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளோம் என்று (உதட்டளவில்)*
*கூறுகின்றனர். உண்மையில் அவர்கள் நம்பிக்கையாளர் அல்லர்.*
*[9]அவர்கள் அல்லாஹ்வையும் (ஓரிறை)நம்பிக்கையாளர்களையும்*
*ஏமாற்ற எண்ணுகின்றனர். அவர்கள் தம்மைத்தாமே ஏமாற்றிக்*
*கொள்கின்றனர். அதனை அவர்கள் உணர்ந்து கொள்வதில்லை.*
*[10]அவர்களின் உள்ளங்களில் நோய் இருக்கிறது. அல்லாஹ்*
*அதனை இன்னும் மிகுதியாக்கி விட்டான். பொய்யுரைத்துக்*
*கொண்டிருப்பதன் காரணமாக அவர்களுக்குத் துன்புறுத்தும்*
*வேதனையுண்டு. [11]“நாட்டில் குழப்பம் உண்டாக்காதீர்கள்”*
*என்று அவர்களிடம் கூறப்பட்டால் “நாங்கள் அமைதியை*
*ஏற்படுத்தக்கூடியவர்கள்தாம்” என்று கூறுகின்றனர். [12]எச்சரிக்கை!*
*அவர்கள்தாம் குழப்பவாதிகள். ஆயினும் அவர்கள் (அதனை)*
*உணர்ந்துகொள்வதில்லை. [13]“மற்ற மக்கள் நம்பிக்கை*
*கொண்டதைப்போல நீங்களும் நம்பிக்கை கொள்ளுங்கள்”*
*என்று அவர்களிடம் கூறப்பட்டால் “மூடர்கள் நம்பிக்கை*
*கொண்டதைப்போல நாங்களும் நம்பிக்கைகொள்ள வேண்டுமா?”*
*என்று கேட்கின்றனர். எச்சரிக்கை! உறுதியாக அவர்கள்தாம்*
*மூடர்கள். ஆயினும் அவர்கள் உணர்ந்துகொள்வதில்லை.*
*[14]அவர்கள் நம்பிக்கையாளர்களைச் சந்தித்தால் “நாங்களும்*
*நம்பிக்கை கொண்டுள்ளோம்” என்று கூறுகின்றனர். ஆனால்*
*தங்கள் சாத்தான்களுடன் தனித்திருக்கும்போது “நாங்கள்*
*உங்களுடன்தான் இருக்கிறோம். நாங்கள் அவர்களை ஏளனம்*
*செய்து கொண்டிருக்கிறோம்” என்று கூறுகின்றனர். [15]அல்லாஹ்*
*அவர்களை ஏளனம் செய்கிறான். அவர்களுடைய வரம்பு மீறலில்*
*தடுமாறித் திரியுமாறு அவர்களை விட்டுவிடுகிறான்.*

*[16]அவர்கள்தாம் நேர்வழிக்குப் பதிலாகக் கெடுவழியை விலைக்கு*
*வாங்கிக்கொண்டவர்கள். எனவே அவர்களின் இந்த வணிகம்*
*பயனளிக்கவில்லை. அவர்கள் நேர்வழி பெற்றவர்களாகவும்*

*இல்லை. [17]அவர்களின் நிலை, இருளில் (வழிகாட்ட)
நெருப்பு மூட்டிய ஒருவனின் நிலையைப் போன்றது. அது
அவர்களைச் சுற்றி ஒளி வீசியபோது அல்லாஹ் அவர்களுடைய
(கண்களின்) ஒளியைப் பறித்துவிட்டான். எதையும் பார்க்க
முடியாத காரிருளில் அவர்களை விட்டுவிட்டான். [18]அவர்கள்
செவிடர்கள், ஊமையர்கள், குருடர்கள். எனவே நேர்வழியின்
பக்கம் திரும்பமாட்டார்கள். [19]அல்லது அவர்களின் நிலை,
காரிருளில் இடிமின்னலுடன் வானிலிருந்து பொழியும் மழையில்
சிக்கிக் கொண்டவர்களின் நிலையைப் போன்றது. இடி
முழக்கம் கேட்டுச் சாவுக்கு அஞ்சி அவர்கள் தம் காதுகளில்
விரல்களைத் திணித்துக் கொள்கிறார்கள். அல்லாஹ் அந்த
மறுப்பாளர்களைச் சூழ்ந்து கொண்டிருக்கின்றான். [20]அம்மின்னல்
அவர்களின் பார்வைகளைப் பறித்துவிடப் பார்க்கிறது. அது
அவர்களுக்கு வெளிச்சம் தரும்போதெல்லாம் அதில் அவர்கள்
நடக்கிறார்கள். இருள் அவர்களைச் சூழ்ந்துகொள்ளும்போது
நின்று விடுகிறார்கள். அல்லாஹ் விரும்பினால் அவர்களின்
செவிப்புலனையும் பார்வைகளையும் பறித்துவிடுவான். உறுதியாக
அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.*

*[21]மனிதர்களே! உங்களையும் உங்களுக்கு முன்னிருந்தோரையும்
படைத்த உங்கள் இறைவனையே வணங்குங்கள். அதனால்
நீங்கள் நரகத்திலிருந்து தப்பித்துக் கொள்ளலாம். [22]அவன்தான்
உங்களுக்காக பூமியை விரிப்பாகவும் வானத்தைக் கூரையாகவும்
அமைத்தான்; உங்கள் உணவிற்காக வானத்திலிருந்து
மழை பொழியச்செய்து அதன்மூலம் கனி வகைகளை
வெளிப்படுத்துகிறான். எனவே (இவற்றையெல்லாம்) அறிந்திருந்தும்
நீங்கள் அல்லாஹ்வுக்கு இணைகளைக் கற்பிக்காதீர்கள். [23]நாம்
எமது அடியாருக்கு அருளிய (இவ்)வேதத்தின்மீது நீங்கள் ஐயம்
கொண்டால்– நீங்கள் உண்மையாளர்களாயின் – இதைப் போன்ற
ஒரு அத்தியாயத்தையேனும் கொண்டுவாருங்கள். அல்லாஹ்
அல்லாத உங்கள் உதவியாளர்களையும் (துணைக்கு) அழைத்துக்
கொள்ளுங்கள்.*

24நீங்கள் அவ்வாறு செய்யாவிட்டால் – உங்களால் ஒருபோதும்
அவ்வாறு செய்யமுடியாது – மனிதர்களையும் கற்களையும்
எரிபொருளாகக் கொண்ட (நரக) நெருப்புக்கு அஞ்சுங்கள். அது
மறுப்பாளர்களுக்காகவே தயார் செய்யப்பட்டுள்ளது. 25(நபியே!)
நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோருக்குச் சொர்க்கச்
சோலைகள் உண்டு. அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும்
எனும் நற்செய்தியைக் கூறுவீராக! அவர்களுக்கு அங்கு ஏதேனும்
கனி உணவாக வழங்கப்படும்போதெல்லாம் “இதற்கு முன்பும்
எங்களுக்கு வழங்கப்பட்டது இதுதானே!” என்று கேட்பார்கள்.
ஏனெனில் அவர்களுக்கு வழங்கப்படுபவை ஒன்றையொன்று
ஒத்தவையாக இருக்கும். அங்குத் தூய்மையான இணைகளும்
அவர்களுக்கு உண்டு. அங்கு அவர்கள் என்றென்றும்
இருப்பார்கள்.

26கொசுவையோ அதைவிட அற்பமானதையோ உவமையாகக்
கூறுவதற்கு அல்லாஹ் வெட்கப்படமாட்டான். நம்பிக்கையாளர்கள்,
“அந்த உவமை (உணர்த்துவது) தம் இறைவனிடமிருந்து வந்துள்ள
சத்தியமே” என்பதை அறிந்துகொள்வார்கள். மறுப்பாளர்களோ
“இத்தகைய உவமைகள் மூலம் அல்லாஹ் என்னதான் (உணர்த்த)
விரும்புகிறான்?” என்று (ஏளனமாகக்) கேட்கின்றனர். இதன்மூலம்
அவன் பலரை வழிதவறச் செய்கிறான்; பலருக்கு நேர்வழி
காட்டுகிறான். அவன் (தனக்குக்) கீழ்ப்படியாத மக்களைத்தான்
வழிதவறச் செய்கிறான். 27அவர்கள் அல்லாஹ்விடம் செய்த
(ஓரிறைக் கோட்பாட்டு) உடன்படிக்கையை உறுதிப்படுத்தியபின்
முறித்து விடுகின்றனர். (உறவுகளை) இணைத்துவைக்குமாறு
அல்லாஹ் கட்டளையிட்டிருக்க (அவற்றைத்) துண்டித்து
உலகில் குழப்பம் விளைவிக்கிறார்கள். அவர்கள்தாம்
இழப்பிற்குரியவர்கள்.

28(மனிதர்களே!) நீங்கள் எப்படி அல்லாஹ்வை மறுக்கிறீர்கள்?
நீங்களோ உயிரற்றவர்களாக இருந்தீர்கள். அவன்தான் உங்களுக்கு
உயிரளித்தான். பின்னர் உங்களை இறக்கச்செய்வான்; மீண்டும்

உங்களை (மறுமை நாளில்) உயிர்ப்பிப்பான். பின்னர் அவனிடமே
நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள். [29]அவன்தான்
பூமியிலுள்ள அனைத்தையும் உங்களுக்காகப் படைத்தான்.
பின்னர் வானத்தின் பக்கம் கவனம் செலுத்தி அவற்றை ஏழு
வானங்களாக ஒழுங்குபடுத்தினான். அவன் யாவற்றையும்
நன்கறிந்தவன்.

[30]உம் இறைவன் வானவர்களிடம், “நான் பூமியில் ஒரு
வழித்தோன்றலைப் படைக்கப்போகிறேன்” என்று கூறியபோது
அவர்கள், “நாங்களோ உன்னைத் துதித்துப் புகழ்ந்து உன்
தூய்மையைப் போற்றிக் கொண்டிருக்கிறோம். (ஆனால்) நீ
பூமியில் குழப்பம் விளைவித்து ரத்தம் சிந்தக்கூடிய மக்களையா
படைக்கப்போகிறாய்?” என்று கேட்டனர். (அதற்கு) அவன்,
“நீங்கள் அறியாதவற்றை எல்லாம் நான் அறிவேன்” என்று
கூறினான். [31]அவன் ஆதமுக்கு (ஆதமின் வழித்தோன்றல்களில்
வரவிருக்கும் நல்லோர்களின்) எல்லாப் பெயர்களையும் கற்றுக்
கொடுத்தான். பின்னர் அவர்களை வானவர்கள் முன் நிறுத்தி
“நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் இவர்களின் பெயர்களை
எனக்குக் கூறுங்கள்” என்றான். [32]அதற்கு அவர்கள், “நீ மிகவும்
(அப்பாற்பட்டுத்)தனித்துயர்ந்தவன். நீ எங்களுக்கு எதைக்
கற்றுக்கொடுத்தாயோ அதை மட்டுமே நாங்கள் அறிவோம்.
உறுதியாக நீயே முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்
என்று கூறினர். [33]அவன் “ஆதமே! அவர்களின் பெயர்களை
இவர்களுக்கு எடுத்துக்கூறும்” என்று கூறினான். அவர்களின்
பெயர்களை ஆதம் எடுத்துக் கூறியபோது, “வானங்களிலும்
பூமியிலுமுள்ள மறை(பொருள்)களை நான் அறிவேன். நீங்கள்
வெளிப்படுத்துவதையும் மறைத்துக்கொண்டிருப்பதையும்
நன்கறிவேன் என்பதை உங்களிடம் நான் கூறவில்லையா?” என்று
அவன் கேட்டான்.

[34]“ஆதமுக்குத் தலைபணியுங்கள்” என்று நாம் வானவர்களிடம்
கூறியபோது இப்லீஸைத்தவிர அவர்கள் அனைவரும்

*தலைபணிந்தனர். அவன் மறுத்ததோடு செருக்கும் கொண்டான்.*
*அவன் மறுப்பாளனாகி விட்டான். [35](பின்னர் ஆதமை நோக்கி)*
*“ஆதமே! நீரும் உமது மனைவியும் சொர்க்கத்தில் வசியுங்கள்.*
*இங்கே நீங்கள் விரும்பிய இடங்களில் எல்லாம் (சென்று விரும்பும்*
*உணவை) உண்ணுங்கள். ஆனால் இந்த மரத்தை நெருங்காதீர்கள்,*
*நெருங்கினால் தீவினையாளர்களாகி விடுவீர்கள்” என்று*
*நாம் கூறினோம். [36]ஆனால் அந்த மரத்தின் மூலம் சாத்தான்*
*அவ்விருவரையும் தவறிழைக்கச் செய்துவிட்டான். அவர்களிருந்த*
*நிலையிலிருந்து அவ்விருவரையும் அவன் வெளியேற்றி விட்டான்.*
*நாம் (அவர்களிடம்:) “நீங்கள் இங்கிருந்து இறங்கிவிடுங்கள்.*
*உங்களில் சிலர் சிலருக்குப் பகைவர்களாக இருப்பீர்கள்.*
*பூமியில் ஒரு குறிப்பிட்ட காலம்வரை உங்களுக்கு உறைவிடமும்*
*வாழ்க்கை வசதிகளும் உண்டு” என்று கூறினோம். [37]ஆதம் தம்*
*இறைவனிடமிருந்து (பாவமன்னிப்புக்கான) சில சொற்களைக்*
*கற்றுக்கொண்டார். இறைவன் அவரின் பாவமன்னிப்புக்கோருதலை*
*ஏற்றுக்கொண்டான். உறுதியாக அவன் பாவமன்னிப்பை*
*ஏற்றுக்கொள்பவன்; நிகரற்ற அன்பாளன். [38]“நீங்கள் அனைவரும்*
*இங்கிருந்து இறங்கி விடுங்கள். என்னிடமிருந்து உங்களுக்கு*
*வழிகாட்டுதல் வரும்போது யாரெல்லாம் என் வழிகாட்டுதலைப்*
*பின்பற்றுவார்களோ அவர்களுக்கு எத்தகைய அச்சமும் இல்லை;*
*அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். [39]மறுத்து எமது*
*சான்றுகளைப் பொய்மைப்படுத்துவோர் நரகவாசிகள். அதில்*
*அவர்கள் என்றென்றும் இருப்பார்கள்” என்று நாம் கூறினோம்.*

*[40]இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களுக்கு வழங்கிய*
*அருட்கொடைகளை நினைவுகூருங்கள். நீங்கள் எனக்கு அளித்த*
*வாக்குறுதியை நிறைவேற்றுங்கள். நான் உங்களுக்கு அளித்த*
*வாக்குறுதியை நிறைவேற்றுவேன். எனக்கே அஞ்சுங்கள். [41]நான்*
*அருளியுள்ளதன் (குர்ஆன்) மீது நம்பிக்கைகொள்ளுங்கள். அது*
*உங்களிடம் உள்ள(தவ்ராத் வேதத்)தை உண்மைப்படுத்துகிறது.*
*அதனை மறுப்பவர்களில் முதன்மையானவர்களாக*
*ஆகிவிடாதீர்கள். எமது வசனங்களை அற்ப ஊதியத்திற்கு*

*விற்றுவிடாதீர்கள். எனக்கே அஞ்சுங்கள். [42]அறிந்துகொண்டே
மெய்யைப் பொய்யுடன் கலக்காதீர்கள். உண்மையை மறைக்கவும்
செய்யாதீர்கள். [43]தொழுகையைக் கடைப்பிடியுங்கள்; (ஜகாத்
எனும்) கடமையாக்கப்பட்ட கொடையையும் கொடுத்து
வாருங்கள். (தொழுகைக்காகக்) குனிபவர்களுடன் நீங்களும்
குனியுங்கள். [44]பிற மக்களை நன்மை செய்யும்படி தூண்டிவிட்டு
உங்களை நீங்களே மறந்து விடுகிறீர்களா? நீங்களோ
(தவ்ராத்) வேதத்தை வாசித்துக் கொண்டிருக்கிறீர்கள்! நீங்கள்
புரிந்துகொள்ள மாட்டீர்களா? [45]பொறுமையின் மூலமும்
தொழுகையின் மூலமும் (இறைவனிடம்) உதவி தேடுங்கள். இது
உள்ளச்சமுடையவர்களுக்கே தவிர உறுதியாக மற்றவர்களுக்கு
மிகவும் பாரமானதாகவே இருக்கும். [46](உள்ளச்சமுடைய) அவர்கள்
தங்கள் இறைவனைச் சந்திக்கவிருக்கிறோம், அவனிடமே திரும்ப
இருக்கிறோம் என்பதை உறுதியாக அறிவார்கள்.*

*[47]இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களுக்கு வழங்கிய
அருட்கொடையையும் உலகத்தார் அனைவரையும்விட உங்களைச்
சிறப்பாக்கி வைத்திருந்ததையும் நினைவுகூருங்கள். [48]நீங்கள்
(மறுமையாகிய)ஒருநாளை(க்குறித்து)அஞ்சிநடந்துகொள்ளுங்கள்.
அந்நாளில் எந்த ஆன்மாவும் மற்றோர் ஆன்மாவுக்கு எத்தகைய
பயனையும் அளிக்க முடியாது; எவரிடமிருந்தும் எந்தப்
பரிந்துரையும் ஏற்கப்படாது; எவரிடமிருந்தும் ஈடாக (மீட்புத்
தொகை)எதுவும் ஏற்றுக்கொள்ளப்படாது; அவர்களுக்கு எத்தகைய
உதவியும் கிடைக்காது. [49]ஃபாரோவுடைய கூட்டத்தாரிடமிருந்து
நாம் உங்களைக் காப்பாற்றியதை எண்ணிப்பாருங்கள். அவர்கள்
உங்களுக்குக் கொடிய வேதனை அளித்து வந்தனர். அவர்கள்
உங்களுடைய ஆண்மக்களை அறுத்(துக் கொலை செய்)தனர்;
பெண்மக்களை(மட்டும்)உயிருடன்விட்டுவைத்தனர்.இவ்வகையில்
உங்கள் இறைவனிடமிருந்து பெரும் சோதனை ஏற்பட்டிருந்தது.
[50]நாம் கடலைப் பிளந்து உங்களைக் காப்பாற்றி நீங்கள் பார்த்துக்
கொண்டிருக்கும்போதே ஃபாரோவுடைய கூட்டத்தாரை
மூழ்கடித்தோம். [51](தவ்ராத் வேதத்தை அருள்வதற்காக)
நாம் மோசேவுக்கு நாற்பது இரவுகளை வாக்களித்தோம்.*

(அதற்காக) அவர் (ஸினாய் மலைக்குச்) சென்ற பிறகு நீங்கள்
காளைக்கன்றைக் கடவுளாக ஆக்கிக்கொண்டீர்கள். நீங்கள் வரம்பு
மீறியவர்களாகவே இருந்தீர்கள். 52நீங்கள் நன்றிசெலுத்தக்கூடும்
என்பதற்காக அதன் பின்னரும் நாம் உங்களை மன்னித்தோம்.
53நீங்கள் நேர்வழி பெறவேண்டும் என்பதற்காக நாம் மோசேவுக்கு
(தவ்ராத்) வேதத்தையும் (சத்தியத்தையும் அசத்தியத்தையும்)
பிரித்தறிவிக்கும் (பிற) சான்றுகளையும் வழங்கினோம்.
54மோசே தம் சமூகத்தாரிடம், “என் சமூகத்தோரே! நீங்கள்
காளைக் கன்றை கடவுளாக்கிக் கொண்டதன்மூலம் உங்களுக்கு
நீங்களே தீங்கிழைத்துக்கொண்டீர்கள். ஆகவே உங்களைப்
படைத்தவனிடம் பாவமன்னிப்புக் கேளுங்கள். உங்(களிலுள்ள
குற்றவாளி)களை நீங்களே மாய்த்துவிடுங்கள். இதுவே உங்களைப்
படைத்தவனிடம் உங்களுக்குச் சிறந்ததாகும்” என்று கூறியதை
நினைவுகூருங்கள். அவன் உங்கள் பாவமன்னிப்புக் கோரிக்கையை
ஏற்றுக்கொண்டான். உறுதியாக அவன் பெரும் மன்னிப்பாளன்;
நிகரற்ற அன்பாளன். 55“நீங்கள் மோசேயிடம், “மோசே!
அல்லாஹ்வை நாங்கள் கண்கூடாகக் காணும்வரை உம்மை
ஒருபோதும் நம்பமாட்டோம்” என்று கூறியதை (நினைவுகூருங்கள்.)
அப்போது நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே பேரிடி
உங்களைத் தாக்கியது.

56நீங்கள் இறந்துவிட்ட பின்னரும் நன்றி செலுத்தும்பொருட்டு
மீண்டும் உங்களை உயிர்ப்பித்தோம். 57(பாலைவனத்தில் நீங்கள்
திரிந்த காலத்தில் வெப்பத்திலிருந்து காக்க) உங்கள் மீது
மேகத்தை நிழலிடச் செய்தோம். உங்களுக்கு ‘மன்னு’, ‘சல்வா’
(எனும் உணவுகளை) வழங்கினோம். நாம் உங்களுக்கு வழங்கிய
தூய்மையான உணவுகளை உண்ணுங்கள்” (என்றோம்; எனினும்
அவர்கள் எமது கட்டளையை மீறினர்.) அதனால் அவர்கள் எமக்கு
எந்த இழப்பையும் ஏற்படுத்தவில்லை. மாறாகத் தமக்குத்தாமே
இழப்பை ஏற்படுத்திக்கொண்டனர். 58“(பைத்துல் மக்திஸ் என்னும்)
இந்நகருக்குள் நுழைந்து நீங்கள் விரும்பியவாறு தாராளமாக

*உண்ணுங்கள். அதன் வாயிலில் தலைபணிந்து, ‘இறைவா! எங்கள் பாவங்களை மன்னிப்பாயாக!’ என்று கூறியவாறு நுழையுங்கள். “நாம் உங்கள் பாவங்களை மன்னித்து விடுவோம். நன்மை செய்வோருக்கு அதிகமாகவும் வழங்குவோம்” என்று நாம் கூறியதை நினைவுகூருங்கள்.*
*[59]ஆனால் தீவினையாளர்கள் தமக்குச் சொல்லப்பட்ட சொல்லை மாற்றி வேறொரு சொல்லைச் சொன்னார்கள். ஆகவே வரம்பு மீறிய அவர்கள் மீது அவர்களின் கீழ்ப்படியாமையின் காரணமாக வானத்திலிருந்து வேதனையை நாம் இறக்கினோம்.*
*[60](பாலைவனத்தில்) மோசே தம் சமூகத்தாருக்காகத் தண்ணீர் வேண்டி இறைஞ்சியபோது, “உம் கைத்தடியால் பாறையின் மீது அடிப்பீராக!” என்று நாம் கூறினோம். அப்போது அதிலிருந்து பன்னிரண்டு ஊற்றுகள் பீறிட்டு வந்தன. ஒவ்வொரு பிரிவினரும் தாம் அருந்த வேண்டிய பகுதியை அறிந்துகொண்டனர். அவர்களிடம் “அல்லாஹ் வழங்கியவற்றிலிருந்து உண்ணுங்கள், பருகுங்கள்; ஆனால் பூமியில் குழப்பம் செய்துகொண்டு திரியாதீர்கள்” என்று நாம் கூறியதை நினைவுகூருங்கள்.*

*[61]“மோசே! நாங்கள் ஒரே வகையான உணவை உட்கொண்டு சகித்திருக்க முடியாது. ஆகவே எங்களுக்காக உம் இறைவனிடம் இறைஞ்சி வேண்டிக்கொள்ளும்! நிலம் விளைவிக்கின்ற கீரை, வெள்ளரிக்காய், கோதுமை, பருப்பு, வெங்காயம் ஆகியவற்றை அவன் எங்களுக்கு வெளிப்படுத்தித் தரட்டும்” என்று நீங்கள் கூறியபோது “சிறந்த பொருளுக்குப் பதிலாக அற்பப் பொருளையா வேண்டுகிறீர்கள்? அப்படியானால் நீங்கள் ஏதாவது ஒரு ஊருக்குச் சென்று விடுங்கள். அங்கு நீங்கள் கேட்பவையெல்லாம் கிடைக்கும்” என்று மோசே கூறினார். அவர்கள் மீது இழிவும் வறுமையும் சாட்டப்பட்டன. அவர்கள் அல்லாஹ்வின் சினத்திற்கு ஆளாகிவிட்டார்கள். ஏனெனில் அவர்கள் அல்லாஹ்வின் வசனங்களை மறுத்துக்கொண்டும் தூதர்களை நியாயமின்றிக் கொலை செய்துகொண்டும் இருந்தனர். இதற்குக் காரணம்*

அவர்கள் கீழ்ப்படியாமல் வரம்பு மீறிக்கொண்டிருந்ததேயாகும்.
62நம்பிக்கையாளர்கள், யூதர்கள், கிறிஸ்தவர்கள், சாபியீன்கள்
ஆகியோரில் யார் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும்
நம்பிக்கைகொண்டு, நற்செயல் புரிகிறார்களோ அவர்களுக்கு
இறைவனிடம் கூலி இருக்கிறது. அவர்களுக்கு எத்தகைய அச்சமும்
இல்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.

63(இஸ்ராயீலின் மக்களே!) நாம் (ஸினாய்) மலையை உங்கள்
மீது உயர்த்தி உங்களிடம் உறுதிமொழி பெற்றபோது, “உங்களுக்கு
வழங்கிய(வேதத்)தை உறுதியாகப் பற்றிக்கொள்ளுங்கள்.
அதிலுள்ளவற்றை நினைவில் வையுங்கள். அதன் மூலம்
நீங்கள் உங்களைக் காத்துக்கொள்ளலாம்” (என்று நாம்
கூறியதை நினைவுகூருங்கள்). 64அதன் பின்னரும் நீங்கள்
புறக்கணித்துவிட்டீர்கள். அல்லாஹ்வின் அருளும் பரிவும் உங்கள்
மீது இல்லாதிருந்தால் உறுதியாக நீங்கள் அழிந்து விட்டிருப்பீர்கள்.
65(உங்கள் முன்னோர்களில்) சனிக்கிழமை(களில் மீன்பிடிக்கக்
கூடாது என்ற) வரம்பை மீறியவர்களைப்பற்றி நீங்கள் நன்றாக
அறிந்திருக்கிறீர்கள். அவர்களை நோக்கி, “நீங்கள் இழிவான
குரங்குகளைப் போலாகி விடுங்கள்” என்று கூறினோம். 66நாம்
அதனை அன்று வாழ்ந்த மக்களுக்கும் அதற்குப்பின் வரக்கூடிய
மக்களுக்கும் படிப்பினையாகவும் இறையச்சமுடையோருக்கு
அறிவுரையாகவும் ஆக்கினோம்.

67மோசே தம் சமூகத்தாரிடம், “நீங்கள் ஒரு பசுவை அறுக்க
வேண்டும் என்று அல்லாஹ் கட்டளையிடுகிறான்” என்று
கூறியபோது அவர்கள், “நீர் எங்களை ஏளனம் செய்கிறீரா?”
என்றனர். அதற்கு அவர், “நான் அறிவிலி ஆவதிலிருந்து
அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன்” என்றார். 68(அதற்கு)
அவர்கள், “அது எத்தகையது என்பதை எங்களுக்கு விளக்குமாறு
உம் இறைவனிடம் எங்களுக்காகக் கேட்பீராக” என்றனர்.
அதற்கு அவர், “அது கிழமாடாகவோ, கன்றாகவோ இல்லாமல்
இரண்டிற்கும் இடைப்பட்டதாக இருக்கவேண்டும் என்று இறைவன்
கூறுகிறான். ஆகவே உங்களுக்கு இடப்பட்ட கட்டளையை

*நிறைவேற்றுங்கள்” என்றார். [69]மீண்டும் அவர்கள், “அதனுடைய நிறம் என்ன என்பதை விளக்கும்படி உம் இறைவனிடம் கேட்பீராக” என்றனர். (அதற்கு) அவர், “அது காண்போரை ஈர்க்கக்கூடிய தூயமஞ்சள் நிறப் பசுவாகும் என்று இறைவன் கூறுகிறான்” என்றார். [70](அப்போது) அவர்கள், “அது எத்தகையது என்பதை விளக்கும்படி உம் இறைவனிடம் கேட்பீராக! ஏனெனில் எங்களுக்குப் பசுக்கள் ஒரே மாதிரியாகவே தோன்றுகின்றன. அல்லாஹ் விரும்பினால் இதில் நாங்கள் நேர்வழி பெறுவோம்” என்றனர். [71](அதற்கு) அவர், “அது நிலத்தை உழுவதற்கோ நீரிறைப்பதற்கோ பயன்படுத்தப்படாத, ஆரோக்கியமான, தழும்புகளற்ற பசுவாக இருக்கவேண்டும் என இறைவன் கூறுகிறான்” என்றார். (அதற்கு) அவர்கள், “இப்போதுதான் நீர் தெளிவான விவரத்தைக்கொண்டு வந்துள்ளீர்” என்று கூறி (அத்தகைய பசு ஒன்றைக் கொணர்ந்து) அறுக்க மனமின்றியே அறுத்தனர். [72]நீங்கள் ஒருவரைக் கொன்றுவிட்டு ஒருவருக்கொருவர் குற்றம்சாற்றிக் கொண்டிருந்தீர்கள். ஆனால் நீங்கள் மறைக்கக் கருதியிருந்ததை அல்லாஹ் வெளிப்படுத்த விரும்பிவிட்டான். [73]“(அறுக்கப்பட்ட) அதன் ஒரு பகுதியைக்கொண்டு அந்த வெற்றுடலின் மீது அடியுங்கள்” என்று நாம் கட்டளையிட்டோம். (அவ்வாறு அடித்தபோது கொலையுண்டவர் உயிர்பெற்றெழுந்து கொலையாளியை அறிவித்தார்). இவ்வாறே அல்லாஹ் இறந்தவர்களை உயிர்ப்பிக்கிறான். நீங்கள் புரிந்து கொள்வதற்காக அவன் உங்களுக்குத் தன் சான்றுகளைக் காட்டுகிறான். [74]அதன் பின்னரும் உங்கள் இதயங்கள் இறுகி விட்டன. அவை கற்பாறைகளைப் போல அல்லது அவற்றை விடவும் கடினமாகி விட்டன. ஏனெனில் சில பாறைகளிலிருந்து ஆறுகள் பொங்கி ஓடுகின்றன. சில பாறைகள் பிளந்து அவற்றிலிருந்து நீரூற்று வெளிப்படுவதும் உண்டு. அவற்றில் சில இறையச்சத்தால் உருண்டு விழுவதுண்டு. (ஆனால் நீங்கள் எவ்வகையிலும் திருந்தவில்லை). நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் கவனிக்காமலில்லை.*

*[75](நம்பிக்கையாளர்களே!) நீங்கள் சொல்வதைக்கேட்டு (இஸ்ராயீலின் மக்களாகிய) இவர்கள் நம்பிக்கைகொள்வார்கள்*

*என்று எதிர்பார்க்கிறீர்களா? இவர்களில் ஒரு பிரிவினர் (தவ்ராத்தின்) இறைவாக்குகளைச் செவிமடுத்துப் புரிந்துகொண்ட பின்னரும் அறிந்துகொண்டே அவற்றைத் திரித்துக்கொண்டிருந்தனர்.*
[76]*அவர்கள் நம்பிக்கையாளர்களைச் சந்தித்தால் "நாங்களும் நம்பிக்கை கொண்டுள்ளோம்" என்று கூறுகின்றனர். ஆனால் அவர்கள் தங்களுக்குள் தனிமையில் சந்தித்துக்கொண்டால் "அல்லாஹ் உங்களுக்கு(த் தவ்ராத்தில் இறுதித் தூதரின் வருகை பற்றி) வெளிப்படுத்தி இருப்பதை அவர்களிடம் கூறி விடுகிறீர்களே! (அதைக்கொண்டு) அவர்கள் உங்கள் இறைவன்முன் உங்களுக்கு எதிராக வாதாடுவதற்காகவா?, உங்களுக்கு அறிவு இல்லையா?" என்று கேட்கின்றனர்.*
[77]*அவர்கள் மறைப்பதையும் வெளிப்படுத்துவதையும் அல்லாஹ் நன்கறிவான் என்பதை அவர்கள் அறியமாட்டார்களா என்ன?*
[78]*அவர்களில் படிப்பறிவற்றவர்களும் உள்ளனர். ஆசைக் கற்பனைகளைத்தவிர வேதத்தைப்பற்றி எதையும் அவர்கள் அறியமாட்டார்கள். அவர்களிடம் வெற்று ஊகங்களைத்தவிர வேறொன்றுமில்லை.*
[79]*தங்கள் கைகளாலேயே கற்பனையாக ஒரு வேதத்தை எழுதிக்கொண்டு அற்ப ஊதியம் பெறுவதற்காக 'இது அல்லாஹ்விடமிருந்து வந்துள்ளது' என்று கூறுவோருக்குக் கேடுதான். அவர்களின் கைகள் எழுதியதற்காகவும் அவர்களுக்குக் கேடுதான். அதைக்கொண்டு ஈட்டியதும் அவர்களுக்குக் கேடுதான்.*
[80]*"(விரல்விட்டு) எண்ணப்படும் சில நாட்களைத் தவிர நரகம் எங்களைத் தீண்டாது" என்று அவர்கள் கூறுகின்றனர். (நபியே!) நீர் "அப்படியொரு உறுதிமொழியை அல்லாஹ்விடமிருந்து பெற்றிருக்கிறீர்களா? அவ்வாறாயின் அல்லாஹ் ஒருபோதும் தன் உறுதிமொழியை மீறவேமாட்டான். அல்லது நீங்கள் அறியாததை அல்லாஹ்வின் மீது (புனைந்து) கூறுகிறீர்களா?" என்று அவர்களிடம் கேளும்.*
[81]*அவ்வாறல்ல. யாரெல்லாம் தீச்செயல்கள் புரிந்து, தங்களது பாவங்களால் சூழப்பட்டார்களோ அவர்கள் நரகவாசிகள்தாம். அதில் அவர்கள் என்றென்றும் கிடப்பார்கள்.*
[82]*நம்பிக்கைகொண்டு,*

*நற்செயல்கள் புரிபவர்கள்தாம் சொர்க்கவாசிகள். அதில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள்.* [83]*(நினைத்துப் பாருங்கள்) நாம் இஸ்ராயீலின் மக்களிடம், "நீங்கள் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரையும் வணங்கக்கூடாது. பெற்றோர்கள், உறவினர்கள், அநாதைகள், ஏழைகள் ஆகியோருடன் நல்லமுறையில் நடந்து கொள்ளவேண்டும். மக்களிடம் நல்லவற்றைப் பேசுங்கள்; தொழுகையைக் கடைப்பிடியுங்கள்; கடமையாக்கப்பட்ட கொடையையும் கொடுத்து வாருங்கள்" என்று வாக்குறுதி பெற்றோம். ஆனால் உங்களில் சிலரைத் தவிர அனைவருமே பின்வாங்கிவிட்டீர்கள். நீங்கள் வாக்குறுதியளித்துவிட்டுப் புறக்கணிக்கும் மக்களாக இருக்கிறீர்கள்.*

[84]*"நீங்கள் உங்களிடையே ரத்தம் சிந்தக்கூடாது; உங்கள் மக்களை உங்கள் ஊர்களிலிருந்து வெளியேற்றக்கூடாது" என்று நாம் உங்க(ள் முன்னோர்க)ளிடம் வாக்குறுதி பெற்றதை (நினைவுகூருங்கள்!). (அவர்களின் வழிவந்த) நீங்கள் அதனை ஏற்றுக்கொண்டீர்கள்; நீங்களே அதற்குச் சாட்சியாகவும் இருந்தீர்கள்.* [85]*(ஆயினும்) அதன் பின்னர் (இப்போது) உங்கள் சொந்த மக்களையே கொலை செய்கிறீர்கள். உங்களைச் சார்ந்த ஒரு சாராரை அவர்களுடைய உறைவிடங்களிலிருந்து வெளியேற்றுகிறீர்கள். அவர்களுக்கெதிராகப் பாவமான, அநியாயமான செயல்களில் அவர்களின் பகைவர்களுக்கு உதவி செய்கிறீர்கள். அவர்களே (எதிரிகளிடம்) சிறைப்பட்டு உங்களிடம் (உதவி தேடி) வந்தால் அவர்களை மீட்புத்தொகை கொடுத்து விடுவிக்கிறீர்கள். ஆனால் அவர்களை வெளியேற்றுவதே உங்களுக்குத் தடைசெய்யப்பட்டு இருந்ததே! அப்படியென்றால் (தவ்ராத்) வேதத்தின் ஒருபகுதியை ஏற்றுக்கொண்டு மறுபகுதியை மறுக்கிறீர்களா? உங்களில் இவ்வாறு செய்பவர்களுக்கு இவ்வுலக வாழ்வில் இழிவைத் தவிர வேறொன்றும் கிடைக்காது. மறுமை நாளிலோ கடும் வேதனைக்கு அவர்கள் உட்படுத்தப்படுவார்கள். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் கவனிக்காமலில்லை.*

*[86]இ(த்தகைய)வர்கள்தாம் மறுமைக்கு ஈடாக இவ்வுலக வாழ்வை விலைக்கு வாங்கிக் கொண்டவர்கள். எனவே இவர்களின் தண்டனை எளிதாக்கப்படாது. இவர்களுக்கு எத்தகைய உதவியும் கிடைக்காது. [87]நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். அவருக்குப்பின், தொடர்ந்து தூதர்களை அனுப்பினோம். மர்யத்தின் மைந்தர் இயேசுவுக்குத் தெளிவான சான்றுகளைக் கொடுத்துப் பரிசுத்த ஆன்மாவின் மூலம் அவரை வலுப்படுத்தினோம். உங்கள் மனம் விரும்பாததைத் தூதர்கள் கொண்டுவந்த போதெல்லாம் நீங்கள் செருக்குக் கொண்டீர்கள்; அவர்களில் சிலரைப் பொய்மைப்படுத்தினீர்கள்; வேறு சிலரைக் கொலை செய்தீர்கள்.*

*[88]"எங்களுடைய உள்ளங்கள் மூடப்பட்டுள்ளன" என்று (இஸ்ராயீலின் மக்களாகிய) அவர்கள் கூறுகின்றனர். அப்படியல்ல. அவர்களின் (ஓரிறை)மறுப்பினால் அல்லாஹ் அவர்களைச் சபித்து விட்டான். எனவே அவர்கள் நம்பிக்கைகொள்வது மிக அரிதே. [89]அவர்களிடம் உள்ள(தவ்ராத் வேதத்)தை உண்மைப்படுத்தக்கூடிய (குர்ஆன்) வேதம் இறைவனிடமிருந்து அவர்களிடம் வந்தபோது அதனை அவர்கள் மறுத்து விட்டனர். இதற்கு முன்பு அவர்கள் மறுப்பாளர்களுக்கு எதிராகத் தமக்கு வெற்றியளிக்க (இவ்வேதத்துடன் தூதர் வர வேண்டுமென இறைவனை) இறைஞ்சிக் கொண்டிருந்தனர். ஆனால் அவர்கள் அறிந்து வைத்திருந்த ஒன்று அவர்களிடம் வந்தபோது அதனை அவர்கள் மறுத்து விட்டனர். எனவே மறுப்பாளர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்! [90]அவர்கள் தங்களைத் தாங்களே விற்றுப் பெற்றுக்கொண்டது எவ்வளவு கேடானது! அதாவது அல்லாஹ் தனது அடியார்களில் தான் விரும்பியவர் மீது தன் அருட்கொடையிலிருந்து இறக்கியதற்காகப் பொறாமை கொண்டு அவன் இறக்கி வைத்ததையே மறுக்கின்றனர். எனவே அவர்கள் (அவனது) சினத்திற்கு ஆளாகி விட்டனர். மறுப்பாளர்களுக்கு இழிவுமிக்க வேதனையுண்டு.*

[91]*“அல்லாஹ் அருளிய இவ்வேதத்தின் மீது
நம்பிக்கைகொள்ளுங்கள்” என்று அவர்களிடம் கூறப்பட்டால்
“எங்களுக்கு அருளப்பட்டதையே நாங்கள் நம்புவோம்”
என்கிறார்கள். அதற்குப் பின்னால் வந்த இவ்வேதத்தை
ஏற்க மறுக்கிறார்கள். ஆனால் இதுவோ சத்தியமானதாகவும்
அவர்களிடமுள்ள(தவ்ராத் வேதத்)தை உண்மைப்படுத்தக்
கூடியதாகவும் இருக்கின்றது. (நபியே!) நீர் கேளும்: “உண்மையில்
நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் இதற்கு முன்
இறைத்தூதர்களை ஏன் கொலை செய்துகொண்டிருந்தீர்கள்?”*
[92]*மோசே உங்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு
வந்தார். ஆனால் அதற்குப் பின்னரும் நீங்கள் காளைக் கன்றைக்
கடவுளாக்கிக் கொண்டீர்கள். நீங்கள் தீவினையாளர்களாக
இருந்தீர்கள்.* [93]*நினைத்துப் பாருங்கள்! மலையை நாம்
உங்(கள் முன்னோர்)களுக்கு மேலே உயர்த்தி “உங்களுக்கு
(நாம்) வழங்கிய(வேதத்)தை உறுதியாகப் பற்றிக்கொள்ளுங்கள்;
செவிசாயுங்கள்” என்று வாக்குறுதி பெற்றோம்(அப்போது)அவர்கள்,
“நாங்கள் செவியுற்றோம், ஆனால் ஏற்றுக்கொள்ளவில்லை”
என்றனர். அவர்களின் மறுப்பினால் காளைக்கன்றின் மீதுள்ள
(மன)விருப்பம் அவர்களின் உள்ளங்களில் ஆழப்பதிந்து
விட்டது. (நபியே!) நீர் (அவர்களிடம்) “நீங்கள் (தவ்ராத் மீது)
நம்பிக்கைகொண்டவர்களாக இருந்தால் உங்களது நம்பிக்கை
கற்றுக்கொடுப்பது எவ்வளவு கேடானது?” என்று கேட்பீராக!*
[94]*(நபியே!) நீர் “அல்லாஹ்விடமுள்ள மறுமையின் வீடு மற்ற
மக்களுக்கு அன்றி உங்களுக்கு மட்டுமே உரியது என்பதில் (உங்கள்
கூற்றில்) நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் (அதனை
அடைவதற்காகச்) சாவை விரும்புங்கள்” என்று (அவர்களிடம்)
கூறுவீராக!* [95]*அவர்களின் கைகள் முன்னர்ச் செய்த(தீய)வற்றின்
காரணமாக ஒருபோதும் அவர்கள் அதனை விரும்பமாட்டார்கள்.
அல்லாஹ் தீவினையாளர்களை முற்றும் அறிந்தவன்.* [96]*(நபியே!)
எல்லா மக்களை விடவும் இணைவைப்பாளர்களை விடவும்
வாழ்வின் மீது மிகுந்த பேராசை உடையவர்களாக (யூதர்களாகிய)*

*அவர்களை நீர் காண்பீர். அவர்களில் ஒவ்வொருவரும் ஆயிரம்*
*ஆண்டுகள் வாழ வேண்டுமென விரும்புகின்றனர். ஆயினும்*
*அவர்களுடைய நீண்ட ஆயுள் அவர்களை வேதனையிலிருந்து*
*காப்பாற்றி விடாது. அவர்கள் செய்வதையெல்லாம் அல்லாஹ்*
*பார்த்துக்கொண்டிருக்கிறான்.*

97*(நபியே!) நீர் கூறுவீராக : “எவர் கேப்ரியேலின் பகைவரோ*
*(அவர் அறிந்துகொள்ளட்டும்)” ஏனெனில், அவர்(கேப்ரியேல்)*
*தாம் அல்லாஹ்வின் கட்டளைப்படி இதனை (குர்ஆன்)*
*உமது உள்ளத்தில் இறக்கினார். இது தனக்கு முன்பு*
*வந்ததை உண்மைப்படுத்துகிறது; நம்பிக்கையாளர்களுக்கு*
*நேர்வழிகாட்டுவதாகவும் நற்செய்தியாகவும் இருக்கிறது”* 98*யார்*
*அல்லாஹ்வுக்கும் அவனது வானவர்களுக்கும் அவனது*
*தூதர்களுக்கும் கேப்ரியேலுக்கும் மைக்கேலுக்கும் பகைவர்களாக*
*இருக்கிறார்களோ அத்தகைய மறுப்பாளர்களுக்கு அல்லாஹ்வும்*
*பகைவனாக இருக்கிறான்.* 99*(நபியே!) நாம் உமக்குத் தெளிவான*
*வசனங்களை அருளியுள்ளோம். வரம்பு மீறியவர்களைத்தவிர*
*வேறு எவரும் அவற்றை மறுக்கமாட்டார்கள்.* 100*அவர்கள்*
*ஏதேனும் உடன்படிக்கை செய்தபோதெல்லாம் அவர்களில்*
*ஒரு பிரிவினர் அதனை முறித்துவிடவில்லையா? மாறாக*
*அவர்களில் பெரும்பாலோர் (இவ்வேதத்தின்மீது) நம்பிக்கை*
*கொள்ளமாட்டார்கள்.* 101*அவர்களிடம் உள்ளவற்றை*
*உண்மைப்படுத்தக்கூடிய ஒரு தூதர் அல்லாஹ்விடமிருந்து*
*வந்தபோது வேதம் அருளப்பட்டவர்களில் ஒரு பிரிவினர் ஏதும்*
*அறியாதவர்களைப்போல் அல்லாஹ்வின் (இவ்)வேதத்தைத்*
*தங்கள் முதுகுகளுக்குப் பின்னால் எறிந்து விட்டனர்.*

102*(யூதர்களாகிய) அவர்கள் சாலமன் ஆட்சிக்காலத்தில்*
*(அவருக்கு எதிராக) சாத்தான்கள் ஓதிய(சூனியத்)தைப்*
*பின்பற்றினார்கள். ஆனால் சாலமன் (சூனியத்தைப் பின்பற்றும்)*
*(இறை)மறுப்பாளராக இல்லை; மாறாக, சாத்தான்கள்தாம்*
*மறுத்துக்கொண்டிருந்தனர். அவர்கள் மக்களுக்குச் சூனியத்தைக்*
*கற்றுக் கொடுத்தனர்; பாபிலோன் நகரத்தில் இருந்த ஹாரூத்,*

*மாரூத் என்ற வானவர்களுக்கு இறக்கப்பட்ட(தாக அவர்களே சொல்லிக் கொண்ட)தையும் (தவறாகப் பயன்படுத்திக்) கற்றுக் கொடுத்தனர். அவ்வானவர்கள் தங்களிடம் (சூனியம் கற்க) வருவோரிடம் “மனிதர்களுக்கு (அவர்களின் இறைநம்பிக்கையை அறியும்) சோதனையாகவே நாங்கள் இருக்கிறோம். ஆகவே (இதனைக் கற்று) மறுப்பாளர்களாகி விடாதீர்கள்” என்று (எச்சரித்துச்) சொல்லாமல் (அதனை எவருக்கும்) அவர்கள் கற்பிப்பதில்லை. ஆயினும் அவர்கள் அவ்விருவரிடமிருந்து கணவன், மனைவிக்கிடையே பிரிவு ஏற்படுத்தக்கூடிய (சூனியத்)தைக் கற்றுக்கொண்டனர். ஆயினும் அல்லாஹ்வின் அனுமதியின்றி அவர்களால் அதன்மூலம் எவருக்கும் எந்தத் தீங்கும் இழைத்துவிட முடியாது. அவர்கள் தங்களுக்கு தீங்கிழைக்கக்கூடிய, பயனளிக்காத ஒன்றையே கற்றுக் கொண்டனர். இதனை விலைக்கு வாங்கிக்கொண்டவனுக்கு மறுமையில் எத்தகைய பேறும் இல்லை என்பதை அவர்கள் உறுதியாக அறிந்தே இருந்தனர். தம்மையே விற்று அவர்கள் வாங்கிக்கொண்ட பொருள் எவ்வளவு தீயது! (இதனை) அவர்கள் அறிந்திருக்க வேண்டுமே!*
*103அவர்கள் நம்பிக்கைகொண்டு, இறையச்சத்துடன் செயல்பட்டிருந்தால் அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்குக் கிடைக்கும் கூலி மேலானதாக இருந்திருக்கும். (இதனையும்) அவர்கள் அறிந்திருக்க வேண்டுமே!*

*104நம்பிக்கையாளர்களே! மறுப்பாளர்கள் தூதரை விளிக்கப் பயன்படுத்தும் (இரட்டைப்பொருள் கொண்ட சொல்லாகிய) ‘ராயினா’ என்னும் சொல்லை நீங்கள் சொல்லாதீர்கள் மாறாக ‘உன்ளுர்னா’ என்று கூறுங்கள். அவர் கூறுவதைக் கவனமாகக் கேளுங்கள்.* மறுப்பாளர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.*

---

***மக்களில் சிலர் இறைத்தூதருக்கருகில் அமர்ந்து கொண்டு அவரது போதனைகளை ஏளனம் செய்யும் வகையிலான வார்த்தைகளைப் பேசுவார்கள். உதாரணமாக, ‘கொஞ்சம் கவனிக்கிறீர்களா’ என்று பொருள்படும் அரபு மொழிச் சொல்லான ‘உன்ளுர்னா’ என்பதற்குப் பதிலாக ஏளனம் செய்யும் விதத்தில் அவர்கள் ‘எங்கள் இடையனே’ என்று பொருள்படும் ‘ராயினா’ என்ற சொல்லைப் பயன்படுத்துவார்கள்.**

[105]மறுப்பாளர்கள், வேதமுடையோர் ஆயினும் சரி,
இணைவைப்பாளர் ஆயினும் சரி உங்கள் இறைவனிடமிருந்து
உங்களுக்கு எந்தவொரு நன்மையும் அருளப்படுவதை
விரும்பமாட்டார்கள். ஆயினும் அல்லாஹ் தான் விரும்பியோரையே
தன் அருளை வழங்கத் தேர்ந்தெடுத்துக்கொள்கிறான். அல்லாஹ்
மாபெரும் அருளாளன் ஆவான். [106]“நாம் ஏதேனும் ஒரு வசனத்தை
நீக்கினால் அல்லது மறக்கடிக்கச் செய்தால் அதைவிடச்
சிறந்த அல்லது அதற்கு நிகரான வேறொரு வசனத்தைக்
கொண்டுவருவோம். அல்லாஹ் அனைத்துப் பொருளின்
மீதும் பேராற்றலுடையவன் என்பது உங்களுக்குத் தெரியாதா?
[107]வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி அல்லாஹ்வுக்கே
உரியது என்பது உங்களுக்குத் தெரியாதா? அவனைத்தவிர வேறு
எந்தப் பாதுகாவலனும் உதவியாளனும் உங்களுக்கு இல்லை.
[108]இதற்கு முன்னர் மோசேயிடம் (அவருடைய மக்கள் வீண்)
கேள்விகள் கேட்டதைப்போல நீங்கள் உங்கள் தூதரிடமும்
கேட்க விரும்புகிறீர்களா? (இறை)நம்பிக்கையை (இறை)மறுப்பாக
மாற்றிக்கொண்டவர் உறுதியாக நேர்வழியிலிருந்து தவறி
விட்டவராவார்.

[109](நம்பிக்கையாளர்களே!) நீங்கள் நம்பிக்கைகொண்ட
பின், உங்களை (இறை)மறுப்பாளர்களாக மாற்றிவிடவேண்டும்
என வேதமுடையோரில் பெரும்பாலோர் விரும்புகின்றனர்.
அவர்களுக்கு (முஹம்மது இறைத்தூதரே எனும்) உண்மை
தெளிவாகிவிட்ட பின்னரும் (உங்கள் மீதுள்ள) காழ்ப்புணர்வின்
காரணமாகவே (இவ்வாறு விரும்புகின்றனர்.) எனவே
அல்லாஹ்வின் தீர்ப்பு வரும்வரை அவர்களை மன்னித்துப்
புறக்கணித்திருங்கள். உறுதியாக அல்லாஹ் ஒவ்வொரு பொருளின்
மீதும் பேராற்றலுடையவன். [110]நீங்கள் தொழுகையைக்
கடைப்பிடித்துக் கடமையாக்கப்பட்ட கொடையையும் கொடுத்து
வாருங்கள். நீங்கள் உங்களுக்காக முன்னரே சேர்த்து வைக்கும்
நன்மையை (மறுமையில்) அல்லாஹ்விடம் பெற்றுக்கொள்வீர்கள்.

*உறுதியாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். [111]“யூதர்கள் அல்லது கிறிஸ்தவர்களைத் தவிர வேறு எவரும் சொர்க்கத்தில் நுழையமாட்டார்கள்” என்று அவர்கள் கூறுகிறார்கள். இது அவர்களின் ஆசைக் கற்பனையே ஆகும். (நபியே! அவர்களிடம்) “நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் உங்கள் (கூற்றுக்கான) சான்றைக்கொண்டு வாருங்கள்” என்று கேட்பீராக! [112](உண்மை) அதுவன்று; எவர் தம்மை(த் தூய எண்ணத்துடன்) அல்லாஹ்விடம் ஒப்படைத்து நற்செயல்புரிபவராகவும் இருக்கிறாரோ அவரின் கூலி இறைவனிடமுள்ளது. இத்தகையோருக்கு எத்தகைய அச்சமும் இல்லை; அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.*

*[113]“கிறிஸ்தவர்கள் எதன் அடிப்படையிலும் இல்லை” என யூதர்கள் கூறுகின்றனர். “யூதர்கள் எதன் அடிப்படையிலும் இல்லை” என்று கிறிஸ்தவர்கள் கூறுகிறார்கள். ஆயினும் அவர்கள் அனைவரும் வேதம் ஓதுகின்றனர். அவர்கள் கூறுவதைப் போலவே, (வேதம்) எதையும் அறியாத(இணைவைப்ப)வர்களும் கூறுகின்றனர். அவர்கள் முரண்பட்டுக் கொண்டிருப்பதில் அல்லாஹ்வே மறுமையில் தீர்ப்பளிப்பான். [114]இறையில்லங்களில் அவனது பெயர் நினைவுகூரப்படுவதைத் தடுத்து அவற்றைப் பாழாக்க முயல்பவனைவிடக் கொடியவன் யார்? இறையச்சம் உடையவர்களாக அன்றி அவற்றில் நுழைய அவர்களுக்கு உரிமையில்லை. அவர்களுக்கு இம்மையில் இழிவும் மறுமையில் கடும் வேதனையும் உண்டு.*

*[115]கிழக்கும் மேற்கும் அல்லாஹ்வுக்கே உரியன. நீங்கள் எங்குத் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இருக்கிறது. உறுதியாக அல்லாஹ் தாராளமானவன்; முற்றும் அறிந்தவன்.*

*[116]“அல்லாஹ் தனக்கு ஒரு மகனை ஏற்படுத்திக்கொண்டான்” என்று அவர்கள் கூறுகின்றனர். மாறாக, அவன் இதிலிருந்து மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். வானங்களிலும்*

பூமியிலுமுள்ள அனைத்தும் அவனுக்கே உரியன. அனைத்தும்
அவனுக்கே கீழ்ப்படிகின்றன. 117அவன் வானங்கள், பூமி ஆகிய
படைப்புகளின் மூலமானவன். ஏதேனும் ஒரு செயலைச் செய்யத்
தீர்மானித்து விட்டால் 'ஆகுக' என்று கூறுவான், உடனே அது
ஆகிவிடும்.

118"அல்லாஹ் ஏன் எங்களுடன் பேசக்கூடாது, அல்லது
ஏதேனும் ஒரு சான்று ஏன் எங்களிடம் வரக்கூடாது?" என்று
அறியாதவர்கள் கேட்கின்றனர். இவ்வாறே இவர்களுக்கு
முன்னிருந்தோரும் கேட்டனர். இவர்களின் உள்ளங்கள்
(அவர்களின் உள்ளங்களை) ஒத்தவையாகவே இருக்கின்றன.
உறுதியாக நம்பிக்கை கொண்டோருக்குச் சான்றுகளை மிகத்
தெளிவாக நாம் விளக்கிவிட்டோம். 119(நபியே!) உம்மைச்
சத்தியத்துடன் நற்செய்தியாளராகவும் எச்சரிக்கையாளராகவும்
அனுப்பியுள்ளோம். நரகவாசிகளைப்பற்றி உம்மிடம்
கேட்கப்படமாட்டாது. 120.யூதர்களும் கிறிஸ்தவர்களும் அவர்களின்
வழிமுறையை நீர் பின்பற்றாதவரை உம்மைப்பற்றி ஒருபோதும்
நிறைவடையமாட்டார்கள். (ஆகவே) நீர் (அவர்களிடம்)
"அல்லாஹ் காட்டுவதே நேர்வழியாகும்" என்று கூறுவீராக!
உமக்கு இந்த ஞானம் வந்தபின்னரும் அவர்களின் (மன)
விருப்பங்களை நீர் பின்பற்றுவீராயின் அல்லாஹ்வுக்கு எதிராக
உமக்கு உதவ எந்த நண்பரோ உதவியாளரோ இருக்கமாட்டார்.
121(நபியே!) நாம் வேதம் வழங்கியவர்களில் எவர் அதனை
ஓதவேண்டிய முறைப்படி ஓதுகிறார்களோ அவர்கள் (குர்ஆன்
ஆகிய) இதன்மீதும் நம்பிக்கை கொள்கிறார்கள். இந்த வேதத்தை
மறுப்பவர்கள்தாம் இழப்பிற்குரியவர்கள்.

122இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களுக்கு வழங்கிய எனது
அருட்கொடையையும் உலக மக்கள் அனைவரினும் உங்களைச்
சிறப்பாக்கி வைத்திருந்ததையும் நினைவுகூருங்கள். 123(வரவிருக்கும்
மறுமையாகிய) ஒருநாளை(க் குறித்து) அஞ்சி நடந்துகொள்ளுங்கள்.
அந்நாளில் எந்த ஆன்மாவும் மற்றோர் ஆன்மாவுக்கு எத்தகைய

*பயனையும் அளிக்க முடியாது. எவரிடமிருந்தும் ஈடாக மீட்புத் தொகை எதுவும் ஏற்கப்படாது. எத்தகைய பரிந்துரையும் அவருக்குப் பயனளிக்காது. (குற்றவாளிகளான) அவர்களுக்கு எங்கிருந்தும் உதவி கிடைக்காது.*

[124]*ஆப்ரஹாமை அவரது இறைவன் சில கட்டளைகள் மூலம்
சோதித்ததை (நினைவுகூருங்கள்). அவர் அவற்றை முழுமையாக
நிறைவேற்றினார். அப்போது அவன், "நான் உம்மை மனித
குலத்துக்குத் தலைவராக்கப் போகிறேன்" என்றான். (அதற்கு)
அவர், "எனது வழித்தோன்றல்களிலிருந்தும் தலைவர்களை
ஏற்படுத்துவாயா?" என்று கேட்டார். அவன் "எனது வாக்குறுதி
தீவினை செய்வோரைச் சாராது" என்று கூறினான்.* [125]*நாம்
(கஅபா எனும் ஓரிறை வணக்க) இல்லத்தை மக்கள் ஒன்றுகூடும்
இடமாகவும் பாதுகாப்பளிக்கும் இடமாகவும் ஆக்கினோம்.
"(வணங்குவதற்காக) ஆப்ரஹாம் நின்ற இடத்தைத் தொழுகை புரியும்
இடமாக ஆக்கிக் கொள்ளுங்கள்" என்று கட்டளையிட்டோம்.
ஆப்ரஹாமிடமும் இஸ்மவேலிடமும் "என் இல்லத்தை இடஞ்சுற்றி
வருபவர்கள், அங்குத் தங்கியிருப்பவர்கள், (தொழுகைக்காகக்)
குனிபவர்கள், தலைவணங்குபவர்கள் ஆகியோருக்காகத்
தூய்மையாக வைத்திருங்கள்" என்று உறுதிமொழி பெற்றோம்.*
[126]*ஆப்ரஹாம், "நீ இந்த நகரத்தைப் பாதுகாப்பளிக்கும் நகரமாக
ஆக்கி வைப்பாயாக! இங்கு வசிப்பவர்களில் யாரெல்லாம்
அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்புகிறார்களோ
அவர்களுக்கு உணவாகக் கனிவகைகளை அளிப்பாயாக" என்று
இறைஞ்சினார். (அதற்கு) இறைவன், "(நம்பிக்கையாளர்களுக்கு
மட்டுமல்ல என்)மறுப்பாளர்களுக்கும் நான் வாழ்வாதாரம்
வழங்குவேன். பின்னர் அவர்களை நரக வேதனையில்
தள்ளிவிடுவேன். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்" என்று
கூறினான்.*

[127]*ஆப்ரஹாமும் இஸ்மவேலும் இறையில்லத்தின்
அடித்தளத்தை உயர்த்திக் கொண்டிருந்தபோது, "எங்கள்*

இறைவா! எங்களிடமிருந்து (இப்பணியை) ஏற்றுக்கொள்வாயாக! உறுதியாக நீ செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.
128இறைவா! எங்கள் இருவரையும் உனக்குக் கீழ்ப்படிந்தவர்களாக ஆக்குவாயாக! எங்கள் வழித்தோன்றல்களிலிருந்து முற்றிலும் உனக்குக் கீழ்ப்படிந்து வாழும் ஒரு சமூகத்தை உருவாக்குவாயாக! எங்களுடைய வழிபாட்டு முறைகளை எங்களுக்குக் கற்பிப்பாயாக! எங்களை மன்னித்து விடுவாயாக! உறுதியாக நீ பெரும் மன்னிப்பாளனும் நிகரற்ற அன்பாளனும் ஆவாய்.
129"எங்கள் இறைவா! (எங்கள் வழித்தோன்றல்களாகிய) அவர்களுக்கு உன் வசனங்களை எடுத்துரைத்து, வேதத்தையும் ஞானத்தையும் கற்றுக்கொடுத்து அவர்களைத் தூய்மைப்படுத்தக்கூடிய ஒரு தூதரை அவர்களிலிருந்தே அனுப்புவாயாக! உறுதியாக நீ யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்" என்று இறைஞ்சி வேண்டினர்.

130தன்னைத் தானே மூடனாக்கிக் கொண்டவனைத் தவிர ஆப்ரஹாமின் வழிமுறையை வேறு யார்தான் புறக்கணிப்பார்? நாம் இவ்வுலகில் அவரைத் (தூதராகத்) தேர்ந்தெடுத்தோம். மறுமையில் அவர் உறுதியாக நல்லோர்களில் ஒருவராக இருப்பார்.
131அவரது இறைவன், அவரிடம் "முற்றிலும் கீழ்ப்படிந்து விடுவீராக!' என்று கூறியபோது, "அனைத்துலகங்களின் இறைவனிடம் நான் முற்றிலும் கீழ்ப்படிந்துவிட்டேன்" என்று அவர் கூறினார்.
132இதனையே ஆப்ரஹாமும் ஜேக்கபும் தம் மக்களுக்கு, "என் மக்களே! அல்லாஹ் உங்களுக்காக இம்மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்துள்ளான். எனவே கீழ்ப்படிந்தவர்களாகவே அன்றி நீங்கள் இறந்துவிடாதீர்கள்" என்று அறிவுறுத்தி இருந்தனர்.
133இஸ்ராயீலின் மக்களே! ஜேக்கப்புக்கு மரணம் நெருங்கிய நேரத்தில், (அவர் கூறிய சொற்களைக் கேட்க) நீங்கள் அங்கே இருந்தீர்களா என்ன? அப்போது அவர் தம் மக்களிடம் "மக்களே! எனக்குப்பின் நீங்கள் யாரை வணங்குவீர்கள்?" என்று கேட்டபோது அவர்கள், "உங்கள் இறைவனும் உங்கள் முன்னோர் ஆப்ரஹாம், இஸ்மவேல், ஈசாக் ஆகியோரின் இறைவனுமான ஒரே

*இறைவனையே நாங்கள் வணங்குவோம். நாங்கள் அவனுக்கே கீழ்ப்படிந்தவர்களாக இருப்போம்” என்று கூறினர். [134](முன்னர்க் கூறப்பட்ட தூதர்களும் அவர்களுடைய மக்களுமாகிய) அவர்கள் கடந்து போன சமூகத்தார்; அவர்கள் ஈட்டியது அவர்களுக்கு, நீங்கள் ஈட்டியது உங்களுக்கு. அவர்களின் செயல்களைக் குறித்து நீங்கள் விசாரிக்கப்படமாட்டீர்கள்.*

*[135](ஓரிறை நம்பிக்கையாளர்களிடம்) அவர்கள் “யூதர்களாகவோ, கிறிஸ்தவர்களாகவோ ஆகிவிடுங்கள். நீங்கள் நேர்வழி பெறுவீர்கள்” என்று அவர்கள் கூறுகின்றனர். (நபியே!) நீர் “அப்படியல்ல. நாங்கள் ஆப்ரஹாமின் வழிமுறையைப் பின்பற்றுகிறோம். அவர் (இறைவனிடமே) முழு நம்பிக்கைகொண்டவராக இருந்தார். அவர் இணைவைப்பவராக இருந்ததில்லை” என்று கூறுவீராக.
[136](நம்பிக்கையாளர்களே!) “நாங்கள் அல்லாஹ்வின் மீதும், எங்களுக்கு அருளப்பட்டதன் மீதும் ஆப்ரஹாம், இஸ்மவேல், ஈசாக், ஜேக்கப் மற்றும் அவருடைய வழித்தோன்றல்களுக்கு அருளப்பட்டவற்றின் மீதும், மோசேவுக்கும் இயேசுவுக்கும் வழங்கப்பட்டவற்றின் மீதும், ஏனைய தூதர்களுக்கு அவர்களுடைய இறைவனிடமிருந்து வழங்கப்பட்டவற்றின் மீதும் நம்பிக்கைகொண்டோம். நாங்கள் அவர்களுக்கிடையே எத்தகைய வேற்றுமையும் பாராட்ட மாட்டோம். நாங்கள் அல்லாஹ்வுக்கே கீழ்ப்படிந்தவர்களாக இருக்கிறோம்” என்று கூறுங்கள். [137]நீங்கள்
நம்பிக்கைகொண்டது போல அவர்களும் நம்பிக்கைகொண்டால், உறுதியாக அவர்கள் நேர்வழி பெற்றவர்கள் ஆவர். அவர்கள் புறக்கணித்தால் பிடிவாதத்தில் இருப்பவர்கள் ஆவர். அவர்களுடனான தொடர்பில் (உங்களைக் காக்க) அல்லாஹ்வே போதுமானவன். அவன் செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.
[138]“(நம்பிக்கையாளர்களே! இறைமார்க்கமாகிய) அல்லாஹ்வுடைய வண்ணம்! அல்லாஹ்வுடைய வண்ணத்தைவிட எது சிறந்தது? நாங்கள் அவனையே வணங்குபவர்களாக இருக்கிறோம்” (என்று கூறுவீர்களாக.) [139]“அல்லாஹ்வைப்பற்றி நீங்கள் எங்களிடம்
சச்சரவு செய்கிறீர்களா? அவனோ எங்களின் இறைவனும்*

*உங்களின் இறைவனுமாக இருக்கிறான். எங்களின் செயல்கள் எங்களுக்கே. உங்களின் செயல்கள் உங்களுக்கே. நாங்கள் அவனுக்கே உரியவர்களாக இருக்கிறோம்'' என்றும் கூறுவீர்களாக!*
*[140](நபியே!) "ஆப்ரஹாம், இஸ்மவேல், ஈசாக், ஜேக்கப் மற்றும் அவரின் வழித்தோன்றல்கள் அனைவருமே யூதர்களாக அல்லது கிறிஸ்தவர்களாக இருந்தார்கள் என்று நீங்கள் உறுதியாக கூறுகிறீர்களா? நீங்கள் நன்கறிவீர்களா? அல்லது அல்லாஹ் நன்கறிவானா?" என்று நீர் கேளும் "அல்லாஹ்விடமிருந்து தன்னிடம் வந்துள்ள சாட்சியத்தை மறைப்பவனைவிடப் பெரும் தீவினையாளன் யார்? நீங்கள் செய்கின்றவற்றை அல்லாஹ் கவனிக்காமலில்லை." (என்றும் கூறுவீராக!)*
*[141]அவர்கள் கடந்து போன சமூகத்தார்; அவர்கள் ஈட்டியது அவர்களுக்கு, நீங்கள் ஈட்டியது உங்களுக்கு. அவர்களின் செயல்களைக் குறித்து நீங்கள் விசாரிக்கப்படமாட்டீர்கள்.*

*[142]மக்களில் (சில) அறிவிலிகள், "முஸ்லிம்களை(த் தொழுகைக்காக) அவர்கள் முன்னோக்கி நின்ற திசையிலிருந்து (வேறு திசைக்குத்) திருப்பியது எது?" என்று கேட்பார்கள். (நபியே!) நீர் கூறும்: "கிழக்கும் மேற்கும் அல்லாஹ்வுக்கே உரியவை. தான் விரும்பியோருக்கு அவன் நேர்வழியைக் காட்டுகிறான்."*
*[143]இவ்வாறே நாம் (நம்பிக்கையாளராகிய) உங்களை (இறைத்தூதருக்கும் பிற மக்களுக்கும் இடையில்) ஒரு நடுநிலைச் சமூகத்தாராக ஆக்கியுள்ளோம். (அவ்வாறு ஆக்கியது) நீங்கள் மக்களுக்கு எடுத்துக் கூறுபவர்களாகவும் தூதர் உங்களுக்கு எடுத்துக் கூறுபவராகவும் திகழவேண்டும் என்பதற்காகவே ஆகும். உங்களில் தூதரைப் பின்பற்றுபவர் யார், வந்த வழியே திரும்பிச் செல்பவர் யார் என்பதை அறிந்து கொள்வதற்காகவே, நீங்கள் (இதுவரை) தொழுதுவந்த (பைத்துல் முகத்தஸின்) திசையை முன்னோக்கும் திசையாக ஆக்கியிருந்தோம். அல்லாஹ் நேர்வழிகாட்டியவர்களைத் தவிர மற்றவர்களுக்கு உறுதியாக இ(த்திசையை மாற்றுவ)து கடினமானதாக இருக்கும். அல்லாஹ் உங்கள் நம்பிக்கையை வீணாக்குபவன் அல்லன். உறுதியாக அல்லாஹ் மனிதர்களிடத்தில் மிகுந்த பரிவுடையவன்; நிகரற்ற அன்பாளன்.*

*[144](நபியே!) உமது முகம் அடிக்கடி வானத்தை நோக்கித்
திரும்புவதை நாம் காண்கிறோம். எனவே நீர் விரும்பும்
முன்னோக்கு திசையின் பக்கமே நாம் உம்மைத் திருப்பி
விடுகிறோம். ஆகவே நீர் (தொழும்போது) உம் முகத்தைப்
புனித (கஅபா) இறையில்லத்தின்பக்கம் திருப்பிக்கொள்வீராக!
(நம்பிக்கையாளர்களே!) நீங்களும் (இனி) எங்கிருந்தபோதிலும்
(தொழுகையில்) உங்கள் முகங்களை அதன் பக்கமே திருப்பிக்
கொள்வீர்களாக! வேதம் வழங்கப்பட்டவர்கள், இது தங்கள்
இறைவனிடமிருந்து வந்துள்ள சத்தியமே என்பதை அறிவர்.
(எனினும் இதற்கு எதிராக அவர்கள்) செய்பவற்றை அல்லாஹ்
கவனிக்காமலில்லை. [145]வேதம் வழங்கப்பட்டோரிடம் நீர்
அனைத்துவிதமான சான்றுகளையும் கொண்டு வந்தாலும்
அவர்கள் உம் முன்னோக்கு திசையைப் பின்பற்றமாட்டார்கள்.
நீரும் அவர்களுடைய முன்னோக்கு திசையைப் பின்பற்றுபவராக
இல்லை. அவர்களிலேயே ஒருவர் மற்றவருடைய முன்னோக்கு
திசையைப் பின்பற்றுவதில்லை. உம்மிடம் ஞானம் வந்த பின்னரும்
அவர்களின் மனவிருப்பங்களை நீர் பின்பற்றினால் உறுதியாகத்
தீவினையாளர்களில் ஒருவராகி விடுவீர். [146]எவருக்கெல்லாம்
நாம் வேதத்தை வழங்கியுள்ளோமோ அவர்கள் அதனைத் தம்
பிள்ளைகளை அறிவதைப்போன்று நன்றாக அறிவர். ஆயினும்
அவர்களில் ஒரு பிரிவினர் அறிந்துகொண்டே உண்மையை
மறைக்கிறார்கள். [147]உம் இறைவன் கூறியதே சத்தியமாகும். ஆகவே
நீர் ஒருபோதும் ஐயம்கொள்வோரில் ஒருவராகி விடாதீர்.*

*[148](ஓரிறை நம்பிக்கையாளர்களே!) ஒவ்வொரு(சமூகத்த)வருக்கும்
ஒரு திசையுண்டு. (தொழுகையில்) அதையே அவர்கள்
முன்னோக்குவர். எனவே நீங்கள் நன்மையை நோக்கி
விரையுங்கள். நீங்கள் எங்கிருந்தபோதிலும் அல்லாஹ் உங்கள்
அனைவரையும் ஓரிடத்திற்குக் கொண்டுவருவான். உறுதியாக
அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.
[149](நபியே!) நீர் எங்கிருந்து புறப்பட்டாலும் (தொழும்போது)*

உமது முகத்தைப் புனித (கஅபா) இறையில்லத்தை நோக்கித்
திருப்புவீராக! உறுதியாக இது உம் இறைவனிடமிருந்து வந்துள்ள
உண்மையாகும். (இதனைப்பற்றி வீண்வாதம் செய்பவர்களே!)
நீங்கள் செய்பவற்றை எல்லாம் அல்லாஹ் கவனிக்காமலில்லை.
150(நபியே!) நீர் எங்கிருந்து புறப்பட்டாலும் (தொழும்போது)
உமது முகத்தைப் புனித (கஅபா) இறையில்லத்தை நோக்கியே
திருப்புவீராக!(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் எங்கிருந்தபோதிலும்
உங்கள் முகங்களை அதன் பக்கமே திருப்பிக்கொள்ளுங்கள்.
ஏனெனில் தீவினையாளர்களைத் தவிர மற்ற மக்களிடம்
உங்களுக்கு எதிராக வாதம்புரிய எந்தச் சான்றும் இருக்கக்
கூடாது. எனவே நீங்கள் அவர்களுக்கு அஞ்சாதீர்கள். எனக்கே
அஞ்சுங்கள். (திசை மாற்றம் குறித்த) இது நான் உங்கள் மீது எனது
அருட்கொடையை நிறைவு செய்வதற்காகவும் நீங்கள் நேர்வழி
பெறவேண்டும் என்பதற்காகவும்தான். 151இது நாம் உங்களிலிருந்தே
ஒரு தூதரை உங்களிடையே அனுப்பியது போன்றதேயாகும்.
அவர் உங்களுக்கு எமது வசனங்களை எடுத்துரைத்து உங்களைத்
தூய்மைப்படுத்துகிறார்; உங்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும்
கற்பிக்கிறார்; நீங்கள் அறியாதிருந்த(மற்ற)வற்றையும் அவர்
உங்களுக்குக் கற்றுக்கொடுக்கிறார். 152எனவே நீங்கள் என்னை
நினைவுகூருங்கள், நானும் உங்களை நினைவுகூர்கிறேன்.
நீங்கள் எனக்கு நன்றி செலுத்தி வாருங்கள்; மறுப்பாளர்களாகி
விடாதீர்கள்.

153நம்பிக்கையாளர்களே! பொறுமையின் மூலமும்
தொழுகையின் மூலமும் (அல்லாஹ்விடம்) உதவி தேடுங்கள்.
உறுதியாக அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கிறான்.
154இறைவழியில் கொல்லப்படுகின்றவர்களை நீங்கள் ‘இறந்தவர்கள்’
என்று கூறாதீர்கள். மாறாக அவர்கள் உயிருடன் உள்ளனர்.
ஆனால் நீங்கள் உணர்ந்து கொள்ளமாட்டீர்கள். 155உடைமைகள்,
உயிர்கள், விளைச்சல்கள் ஆகியவற்றில் இழப்புகளை ஏற்படுத்தியும்
ஓரளவு அச்சத்தாலும் பசியாலும் உறுதியாக நாம் உங்களைச்

*சோதிப்போம். இதில் பொறுமையுடன் இருப்போருக்கு (நபியே!)
நற்செய்தி கூறுவீராக! [156]அவர்களுக்கு ஏதேனும் துன்பம்
ஏற்பட்டால் “நாங்கள் அல்லாஹ்வுக்கே உரியவர்கள், அவனிடமே
மீள்வோம்” என்று கூறுவார்கள். [157]இத்தகைய மக்கள் மீதுதான்
அவர்களுடைய இறைவனிடமிருந்து வாழ்த்துக்களும் அருளும்
இறங்குகின்றன. இவர்கள்தாம் நேர்வழியில் உள்ளவர்கள்.*

*[158]உறுதியாக ஸஃபா, மர்வா (குன்றுகள்) ஆகியவை
இறைச்சின்னங்கள் ஆகும். எனவே இறையில்லத்தை ஹஜ்
அல்லது உம்ரா செய்கின்றவர் அவற்றைச்சுற்றி வருவது
(சிலர் கருதியது போல) அவர்மீது குற்றமாகாது. எவரேனும்
ஆர்வத்துடன் (கூடுதல்) நன்மைகள் புரிந்தால் அல்லாஹ் நன்றி
பாராட்டுபவனாகவும் முற்றும் அறிந்தவனாகவும் இருக்கிறான்.
[159]நாம் அருளிய சான்றுகளையும் நேர்வழியையும் மக்களுக்காக
வேதத்தில் நாம் தெளிவுபடுத்திய பின்னரும் அவற்றை(ச்சிலர்)
மறைக்கின்றனர்; அவர்களை அல்லாஹ் சபிக்கின்றான்;
சபிப்ப(தற்குத் தகுதியுடைய)வர்களும் சபிக்கின்றனர். [160]ஆயினும்
யாரெல்லாம் (பாவ)மன்னிப்புக் கோரி, தம்மைச் சீர்திருத்திக்
கொண்டு, (தங்கள் வேதங்களில் தாம் மறைத்தவற்றை மக்களுக்குத்)
தெளிவாக எடுத்துரைத்துவிடுகின்றனரோ அவர்களை நான்
மன்னித்துவிடுவேன். நான் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற
அன்பாளன். [161]உறுதியாக எவர் (ஓரிறையை) மறுத்து அதே
நிலையிலேயே இறந்தும் விடுகிறார்களோ அவர்களின் மீதுதான்
அல்லாஹ், வானவர்கள், மனிதர்கள் ஆகிய அனைவரின் சாபமும்
உண்டாகும். [162]அந்த(ச் சாப) நிலையிலேயே அவர்கள் நிலையாக
இருப்பர். அவர்களுடைய தண்டனை எளிதாக்கப்படாது.
(பாவமன்னிப்புக் கோர) அவர்களுக்குக் காலநீட்டிப்பும்
அளிக்கப்படாது.*

*[163]உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான். அவனைத்தவிர
வேறு இறைவன் இல்லை. அவன் அளவற்ற அருளாளன்; நிகரற்ற
அன்பாளன். [164]உறுதியாக வானங்கள், பூமி ஆகியவற்றின்*

*படைப்பிலும் இரவுபகல் மாறிமாறி வருவதிலும் மக்களுக்குப் பயன்தரக்கூடிய பொருள்களைச் சுமந்துகொண்டு கடலில் செல்கின்ற கப்பல்களிலும் வானத்திலிருந்து அல்லாஹ் இறக்கி வைக்கும் நீரிலும் பின்னர் அதன் மூலம் வறண்ட பூமியைச் செழிக்க வைப்பதிலும் அவன் பூமியில் அனைத்து விதமான உயிரினங்களையும் பரவச் செய்திருப்பதிலும் காற்றுகளின் சுழற்சியிலும் வானத்திற்கும் பூமிக்குமிடையே வசப்படுத்தப்பட்டுள்ள மேகங்களிலும் சிந்திக்கும் மக்களுக்கு (இறைவனின் ஆற்றலையும் அருளையும் புலப்படுத்தும்) சான்றுகள் உள்ளன.*
[165]*மனிதர்களில் சிலர், அல்லாஹ்வையன்றி மற்றவைகளை அவனுக்கு இணையாக்குகின்றனர். அல்லாஹ்வை நேசிப்பதைப் போன்றே அவற்றையும் நேசிக்கின்றனர். ஆனால் நம்பிக்கையாளர்கள் (அனைத்தையும்விட)அல்லாஹ்வையே அதிகமாக நேசிக்கின்றனர். தீவினையாளர்கள் (மறுமையில்) வேதனையைக் காணும்போது 'வல்லமை அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியன. அவன் தண்டிப்பதில் கடுமையானவன்' என்பதை அறிந்துகொள்வார்கள்.*
[166]*எவருடைய வழிகாட்டுதலின்படி இவர்கள் நடந்து கொண்டார்களோ, அவர்கள் தம்மால் வழிகாட்டப்பட்டவர்களை விட்டு விலகிவிடுவார்கள். அவர்கள், வேதனையை(நேரடியாக)க் காண்பார்கள். அவர்களிடையே (உலகில்) இருந்த தொடர்புகள் அனைத்தும் துண்டிக்கப்பட்டுவிடும்.*
[167]*பின்பற்றிச் சென்றவர்கள், "நாங்கள் மீண்டும் உலகத்திற்குத் திரும்பிச் செல்ல முடிந்தால் அவர்கள் எங்களை விலகி விட்டதைப் போன்று நாங்களும் அவர்களை விட்டு விலகிவிடுவோம்" என்பார்கள். இவ்வாறு அவர்களின் செயல்களை அல்லாஹ் அவர்களுக்குத் துயரம் அளிப்பவையாக எடுத்துக் காட்டுவான். அவர்கள் (நரக) நெருப்பிலிருந்து வெளியேற முடியாது.*

[168]*மனிதர்களே! பூமியிலுள்ள பொருள்களில் அனுமதிக்கப்பட்ட, தூய்மையானவற்றையே உண்ணுங்கள். சாத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். உறுதியாக*

*அவன் உங்களுக்கு வெளிப்படையான பகைவன் ஆவான்.*
169*அவன் உங்களுக்குத் தீயவற்றைச் செய்யவும் மானக்கேடான*
*செயல்களைச் செய்யவும் நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின்*
*மீது புனைந்து கூறவும்தான் தூண்டுகிறான்.* 170*“அல்லாஹ்*
*அருளிய(வேதத்)தைப் பின்பற்றுங்கள்” என்று அவர்களிடம்*
*கூறப்பட்டால் “எங்கள் முன்னோர்களை எவ்வழியில்*
*கண்டோமோ அதே வழியைத்தான் பின்பற்றுவோம்” என்று*
*கூறுகின்றனர். அவர்களின் முன்னோர்கள் எதையும் புரிந்து*
*கொள்ளாதவர்களாகவும் நேர்வழியில் இல்லாதவர்களாகவும்*
*இருந்தாலுமா?*

171*மறுப்பவர்கள் (உரத்துக்) கத்துபவனின் வெறும் கூச்சலையும்*
*ஓசையையும் தவிர வேறெதையும் புரிந்துகொள்ள முடியாத*
*கால்நடையைப் போன்றவர்கள். அவர்கள் செவிடர்களாக,*
*ஊமையர்களாக, குருடர்களாக இருக்கின்றனர். எனவே அவர்கள்*
*எதையும் புரிந்துகொள்ள மாட்டார்கள்.* 172*நம்பிக்கையாளர்களே!*
*நாம் உங்களுக்கு வழங்கிய தூய்மையானவற்றையே உண்ணுங்கள்.*
*நீங்கள் அல்லாஹ்வை மட்டுமே வணங்குபவர்களாக இருந்தால்*
*அவனுக்கே நன்றி செலுத்துங்கள்.* 173*தானாகச் செத்தது, இரத்தம்,*
*பன்றி இறைச்சி, அல்லாஹ் அல்லாதவற்றின் பெயர்கூறிப்*
*பலியிடப்பட்டது ஆகியவற்றைத்தான் அல்லாஹ் உங்களுக்குத்*
*தடை செய்துள்ளான். ஆயினும் யாரேனும் விரும்பாமலும்*
*வரம்பு மீறாமலும் (இருக்கும்நிலையில் அவற்றை உண்ணுமாறு)*
*கட்டாயப்படுத்தப்பட்டால் (அவற்றை உண்பது) அவர்மீது*
*குற்றமாகாது. உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்;*
*நிகரற்ற அன்பாளன்.*

174*வேதத்தில் அல்லாஹ் அருளியுள்ளதை மறைத்து, அதற்கு*
*ஈடாக அற்ப ஊதியத்தைப் பெற்றுக்கொள்பவர்கள் தம்*
*வயிற்றில் நெருப்பைத்தான் நிரப்புகிறார்கள். மறுமை நாளன்று*
*அல்லாஹ் அவர்களுடன் பேசவும் மாட்டான், அவர்களைத்*
*தூய்மைப்படுத்தவும் மாட்டான். அவர்களுக்குத் துன்புறுத்தும்*
*வேதனையும் உண்டு.* 175*அவர்கள்தாம் நேர்வழிக்குப் பதிலாகக்*

*கெடுவழியையும் மன்னிப்பிற்குப் பதிலாக வேதனையையும் விலைக்கு வாங்கியவர்கள். நரக நெருப்பைச் சகித்துக் கொள்ளலாம் எனத் தோன்றும்படி அவர்களைச் செய்தது எது? [176](இவ்வேதனை) ஏனெனில், தன் வேதத்தைச் சத்தியம் கொண்டதாக அல்லாஹ் அருளியிருக்க (அதனுடன் அவர்கள் முரண்படுகிறார்கள். அவ்வாறு) வேதத்தில் முரண்பட்டவர்கள் பிடிவாதத்தில் மிகுந்த தொலைவுக்குச் சென்று விட்டனர்.*

*[177]நன்மை என்பது உங்கள் முகங்களைக் கிழக்கிலோ மேற்கிலோ திருப்பிக்கொள்வதில் இல்லை. மாறாக நன்மை என்பது ஒருவர் அல்லாஹ்வின் மீதும், மறுமை நாளின் மீதும், வானவர்களின் மீதும், வேதத்தின் மீதும் தூதர்களின் மீதும் நம்பிக்கை கொள்வதாகும். நல்லோர் (யாரெனில்) அல்லாஹ்வின் மீதுள்ள அன்பால் உறவினர்களுக்கும் அநாதைகளுக்கும் ஏழைகளுக்கும் வழிப்போக்கர்களுக்கும் இரப்போருக்கும் அடிமைகளை விடுதலை செய்வதற்காகவும் தம் செல்வத்தைச் செலவு செய்வோர், தொழுகையைக் கடைப்பிடித்துக் கடமையாக்கப்பட்ட கொடையை அளிப்போர், வாக்குறுதி அளித்தால் அதனை நிறைவேற்றுவோர், வறுமைத் துயரத்திலும் (நோய் நொடித்) துன்பத்திலும் போர்க் காலத்திலும் பொறுமை காப்போர் ஆகியோர்களே ஆவர். இத்தகையோர்தாம் உண்மையாளர்கள்; இவர்கள்தாம் இறையச்சமுடையவர்கள்.*

*[178]நம்பிக்கையாளர்களே! கொலை செய்யப்பட்டவர்களுக்காகப் பழிவாங்கு(ம்போது நேர்மையுடன் நடந்துகொள்)வது உங்கள் மீது விதியாக்கப்பட்டுள்ளது. (கொல்லப்பட்ட) சுதந்திரமானவனுக்குப் பதிலாக(க் கொலைசெய்த) சுதந்திரமானவன், (கொல்லப்பட்ட) அடிமைக்குப் பதிலாக(க் கொலைசெய்த) அடிமை, (கொல்லப்பட்ட) பெண்ணுக்குப் பதிலாக(க் கொலைசெய்த) பெண் (எனக் கொலையாளிகளே பழிவாங்கப்பட வேண்டும்). எனினும் கொலை செய்யப்பட்டவருடைய சகோதர (உறவின)ரிடமிருந்து (கொலை செய்த) அவருக்கு மன்னிப்பு*

வழங்கப்பட்டு விட்டால் அவர் (இழப்பீடு வழங்குவதில்) வழக்கமான முறையைப் பின்பற்றி நன்றியுடன் அதனை நிறைவேற்ற வேண்டும். இது உங்கள் இறைவனிடமிருந்து கிடைத்துள்ள சலுகையும் அருளுமாகும். இதற்குப் பின்னரும் எவர் வரம்பு மீறுகிறாரோ அவருக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.
[179]அறிவுடையோரே! (சட்டப்படி) பழிவாங்குவதில் உங்களுக்கு வாழ்வுள்ளது. இதனால் நீங்கள் (கொலை செய்ய எண்ணுபவரும் கொலை செய்யக் கருதப்பட்டவரும்) தப்பித்துக் கொள்ளலாம்.

[180]உங்களில் ஒருவருக்குச் சாவு நெருங்கிவிட்டால் அவர் தமக்குப் பின் பொருளை விட்டுச் செல்பவராக இருப்பின்– முறைப்படி தம் பெற்றோருக்கும் நெருங்கிய உறவினர்களுக்கும் ‘இறுதி விருப்பம்’ தெரிவித்துவிடுவது விதியாக்கப்பட்டுள்ளது. இறையச்சமுடையோர்களுக்கு இது கடமையாகும். [181]அதனைச்
செவியுற்றவர் பிறகு அதனை மாற்றி விட்டால் அப்பாவமெல்லாம் மாற்றியவர் மீதுதான் (சாரும்). உறுதியாக அல்லாஹ் செவிமடுப்பவன்; முற்றும் அறிந்தவன். [182]இறுதி விருப்பம்
தெரிவிப்பவர் விருப்புவெறுப்புக் காட்டுபவர் அல்லது அநீதி இழைப்பவர் என்று யாரேனும் அஞ்சி, அவ(ருடைய உறவின)ர்களுக்கிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்தி (அதனை மாற்றி) விட்டால் அவர்மீது எந்தக் குற்றமுமில்லை. அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.

[183]நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு முன்பிருந்தோர்மீது கடமையாக்கப்பட்டதைப் போன்றே உங்கள் மீதும் நோன்பு கடமையாக்கப்பட்டுள்ளது. இதனால் நீங்கள் இறையச்சமுடையோராகலாம். [184]இது குறிப்பிட்ட சில நாட்களில்
(நோன்பு) நோற்பதாகும். ஆயினும் உங்களில் யாரேனும் நோயாளியாகவோ, பயணத்திலோ இருந்தால் அவர் வேறு நாட்களில் கணக்கிட்டு நோன்பு நோற்றுக்கொள்ள வேண்டும். எவரெல்லாம் நோற்பதைக் கடினமாக உணர்கிறார்களோ அவர்கள் ஒரு நோன்புக்கு ஈடாக ஓர் ஏழைக்கு உணவளிக்க

*வேண்டும். எவரேனும் (அதற்கும்) மிகுதியாக நன்மைகள் புரிந்தால் அது அவருக்கே சிறந்ததாகும். நீங்கள் (நோன்பின் பயனை) அறிந்தவர்களாக இருந்தால் (ஈடுசெய்வதைவிட)நோன்பு நோற்பதே உங்களுக்கு மிகச் சிறந்ததாகும்.*
185*ரமலான் மாதத்தில்தான் குர்ஆன் அருளப்பட்டது. அது மக்களுக்கு வழிகாட்டியாகவும் நேர்வழியைத் தெளிவாக்கக் கூடியதாகவும் சத்தியத்தையும் அசத்தியத்தையும் பிரித்தறிவிப்பதாகவும் இருக்கிறது. எனவே உங்களில் அம்மாதத்தை அடைபவர் நோன்பு நோற்கட்டும். ஒருவர் நோயாளியாக அல்லது பயணத்தில் இருப்பவராக இருந்தால் அவர் வேறு நாட்களில் கணக்கிட்டு (நோன்பு நோற்று)க்கொள்ளட்டும். அல்லாஹ் உங்களுக்கு எளிதானதையே விரும்புகிறான்; அவன் உங்களுக்குச் சிரமம் தர விரும்பவில்லை. இதற்குக் காரணம் (நோன்புநாள்) எண்ணிக்கையை நீங்கள் நிறைவு செய்யுங்கள். அல்லாஹ் உங்களுக்கு நேர்வழிகாட்டியதற்காக அவனைப் பெருமைப்படுத்துவதற்கும். (அவனுக்கு) நீங்கள் நன்றியுள்ளவராவதற்குமேயாகும்.*

186*(நபியே!) என் அடியார்கள் என்னைப்பற்றி உம்மிடம் கேட்டால், "நான் மிக அருகிலேயே இருக்கிறேன். என்னை அழைப்பவருக்கு (அப்போதே) நான் பதிலளிக்கிறேன். எனவே அவர்கள் என் கட்டளையை ஏற்றுக்கொள்ளட்டும்; என்மீதே நம்பிக்கை வைக்கட்டும். அதனால் அவர்கள் நேர்வழி பெறுவர்" என்று கூறுவீராக!*

187*(நம்பிக்கையாளர்களே!) நோன்புக்கால இரவில் உங்கள் மனைவியருடன் கூடுவது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது. அவர்கள் உங்களுக்கு ஆடையாகவும் நீங்கள் அவர்களுக்கு ஆடையாகவும் இருக்கிறீர்கள். நீங்கள் உங்களையே ஏமாற்றிக் கொண்டிருந்ததை அல்லாஹ் அறிந்துகொண்டான். எனவே அவன் உங்கள்மீது அருள்புரிந்து உங்களை மன்னித்து விட்டான். இனி இரவில் நீங்கள் (விரும்பினால்) அவர்களுடன் கூடுங்கள். அல்லாஹ் உங்களுக்காக விதித்திருப்பதைத் தேடிக்கொள்ளுங்கள்.*

*(இரவு எனும்) கருப்பு நூலிலிருந்து வைகறை (எனும்) வெள்ளைநூல் பிரியும் வரை உண்ணுங்கள், பருகுங்கள். பின்னர் இரவு வரும் வரை நோன்பை நிறைவு செய்யுங்கள். நீங்கள் பள்ளிவாசல்களில் தங்கி (இஃதிகாஃப்) இருக்கும் நிலையில் மனைவியருடன் கூடாதீர்கள். இவை இறைவரம்புகளாகும். எனவே இவற்றை மீறாதீர்கள். மக்கள் தங்களைக் காத்துக்கொள்ளும் பொருட்டு இவ்வாறு தன் வசனங்களை அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான்.*
[188]*உங்களுக்கிடையே (ஒருவர் மற்றொருவருடைய) செல்வத்தைத் தவறான முறையில் உண்ணாதீர்கள். (பிற) மனிதர்களுடைய பொருள்களில் ஒரு பகுதியைப் பாவமான முறையில் உண்பதற்காக அறிந்துகொண்டே அதிகாரிகளை அணுகாதீர்கள்.*

[189]*(நபியே!) பிறை(யின் நிலை)களைப் பற்றி அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள். "அவை உங்களுக்குக் காலங்காட்டியாகவும் ஹஜ்ஜுடைய காலத்தை அறிவிக்கக் கூடியவையாகவும் உள்ளன" என்று நீர் கூறுவீராக. (நம்பிக்கையாளர்களே! நீங்கள் ஹஜ், உம்ரா வழிபாடுகளுக்காக இஹ்ராம் அணிந்திருக்கும்போது) வீடுகளுக்குள் அவற்றின் பின்புற வழியாக வருவது (நீங்கள் கருதி வந்ததுபோல) நன்மையானதன்று. மாறாக இறைவனுக்கு அஞ்சுவதே நன்மையாகும். வீடுகளுக்குள் அவற்றின் வாசல்கள் வழியாகவே வாருங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். நீங்கள் வெற்றியடைவீர்கள்.*
[190]*உங்களுடன் போர் புரிபவர்களுடன் நீங்களும் இறைவழியில் போர்புரியுங்கள். (ஆனால்) வரம்பு மீறாதீர்கள். வரம்பு மீறுவோரை அல்லாஹ் நேசிப்பதில்லை.*
[191]*(நம்பிக்கையாளர்களே! உங்களுடன் போரிடும்) அவர்களை எங்குக் கண்டாலும் கொல்லுங்கள். எங்கிருந்து அவர்கள் உங்களை வெளியேற்றினார்களோ அங்கிருந்து அவர்களை நீங்களும் வெளியேற்றுங்கள். கலகம் (விளைவிப்பது) கொலையைவிடக் கொடியது. புனித (கஅபா) இறையில்லத்தில் அவர்கள் உங்களுடன் போர் தொடுக்காதவரை நீங்களும் அவர்களுடன் போரிட வேண்டாம். ஆயினும் (அங்கு) அவர்கள்*

உங்களுடன் போர்தொடுத்தால் அவர்களைக் கொல்லுங்கள். இதுவே மறுப்பாளர்களுக்குரிய தண்டனையாகும்.*
192ஆயினும் அவர்கள் விலகிக்கொண்டால் (நீங்களும் விலகிக்கொள்ளுங்கள்.) அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனும் நிகரற்ற அன்பாளனும் ஆவான்.
193(மதஒடுக்குமுறை எனும்) குழப்பம் ஒழிந்து மார்க்கம் அல்லாஹ்வுக்கே உரியதாக ஆகும்வரை அவர்களுடன் போரிடுங்கள். அவர்கள் விலகிக் கொண்டால் தீவினையாளர்களைத் தவிர வேறு எவரிடமும் அத்துமீறக் கூடாது.

194(போர் செய்வது விலக்கப்பட்டுள்ள) புனிதமான மாதத்திற்குப் புனித மாதமே ஈடாகும். புனிதங்களுக்கும் ஈடு உண்டு. எனவே யாரேனும் (புனித மாதத்தில்) உங்கள் மீது வரம்புமீறினால் அவர் வரம்பு மீறிய விதத்திலேயே (அதே அளவில்) நீங்களும் (அம்மாதத்தில்) அவர்மீது வரம்புமீறுங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அல்லாஹ் இறையச்சமுடையோருடன் இருக்கிறான் என்பதை அறிந்துகொள்ளுங்கள்.
195இறைவழியில் (அறச்)செலவு செய்யுங்கள். அவ்வாறு செய்யாமல் உங்கள் கைகளாலேயே உங்களுக்கு அழிவைத் தேடிக்கொள்ளாதீர்கள். நல்லமுறையில் செயலாற்றுங்கள். நல்லமுறையில் செயலாற்றுபவர்களையே அல்லாஹ் நேசிக்கிறான்.

196அல்லாஹ்வுக்காக ஹஜ்ஜையும் உம்ராவையும் நிறைவேற்றுங்கள். ஆனால் நீங்கள் தடுக்கப்பட்டால் உங்களால் இயன்ற பலிப்பிராணியை அனுப்பி வையுங்கள். பலிப்பிராணி அதற்குரிய இடத்தை அடை(ந்து பலிகொடுக்கப்படு)கிற வரை உங்கள் தலைமுடியை மழிக்காதீர்கள். ஆனால் உங்களில் எவரேனும் நோயாளியாக அல்லது தனது தலையில் ஏதேனும் பிணி உள்ளவராக இருந்தால் (முன்னரே மழிக்கலாம்) அதற்கு ஈடாக நோன்பு நோற்கவோ, ஈகை அறம் செய்யவோ, பலி கொடுக்கவோ வேண்டும். அமைதிநிலை ஏற்பட்டு ஒருவர் ஹஜ்ஜுடைய காலம் வரும்முன் (மக்காவை அடைந்து) உம்ரா

*முன்னுரை காண்க : பக்கம் எண் XX

*செய்ய விரும்பினால் அவர் தமக்கு இயன்றதைப் பலியிடவேண்டும். பலிப்பிராணி கிடைக்கப் பெறாதவர் ஹஜ்ஜின் காலத்தில் மூன்று நாட்களும் வீடு திரும்பிய பின்னர் ஏழு நாட்களும் நோன்பு நோற்கவேண்டும். இது மொத்தம் பத்து நாட்களாகும். இது எவர் புனித இறையில்லத்திற்கு அருகில் வசிக்கவில்லையோ அவருக்குப் பொருந்துவதாகும். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன் என்பதை அறிந்துகொள்ளுங்கள்.*
*197ஹஜ்ஜுடைய மாதங்கள் வரையறுக்கப்பட்டவை. எனவே யாரேனும் அந்த மாதங்களில் ஹஜ் செய்யத் தீர்மானித்து விட்டால் அவர் ஹஜ்ஜின்போது அருவருப்பான பேச்சு, பாவச்செயல் மற்றும் பிணக்குகளில் ஈடுபடக்கூடாது. நீங்கள் செய்யும் நற்செயல்களை அல்லாஹ் அறிவான். நீங்கள் வழித்துணைப் பொருள்களை எடுத்துச் செல்லுங்கள். மிகச் சிறந்த வழித்துணைப் பொருள் இறையச்சமேயாகும். அறிவுடையோரே! எனக்கே அஞ்சுங்கள்.*

*198அந்தப் பயணத்தின்போது (வணிகம் செய்து) உங்கள் இறைவனின் அருளையும் தேடிக்கொள்வது குற்றமாகாது. நீங்கள் 'அரஃபா'விலிருந்து திரும்பும்போது, மஷ்அருல் ஹராமில் தங்கி அல்லாஹ்வை நினைவுகூருங்கள். அல்லாஹ் உங்களுக்குக் கற்றுத்தந்தவாறே அவனை நினைவுகூருங்கள். இதற்கு முன்னர் நீங்கள் வழிதவறியவர்களாக இருந்தீர்கள்.*
*199பின்னர் எல்லோரும் திரும்புகின்ற (முஸ்தலிஃபா எனும்) இடத்திலிருந்து (மினா என்னும் இடத்திற்கு) நீங்களும் திரும்புங்கள். அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருங்கள். உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனும் நிகரற்ற அன்பாளனும் ஆவான்.*
*200உங்கள் ஹஜ்ஜின் கடமைகளை நீங்கள் நிறைவேற்றி விட்டால் உங்கள் முன்னோர்களை நினைவுகூர்வது போல, ஏன் அதைவிடவும் அதிகமாக அல்லாஹ்வை நினைவுகூருங்கள். மனிதர்களில் சிலர், "எங்கள் இறைவா! இவ்வுலகிலேயே (எல்லா நன்மைகளையும்) எங்களுக்குத் தந்துவிடு" என்று இறைஞ்சுகின்றனர். அவர்களுக்கு மறுமையில் எந்தப் பேறும் இல்லை.*
*201அவர்களில் சிலர்,*

*“எங்கள் இறைவா! எங்களுக்கு இம்மையிலும் மறுமையிலும்*
*நன்மையை அருள்வாயாக! எங்களை (நரக)நெருப்பின்*
*வேதனையிலிருந்து காப்பாற்றுவாயாக!” என்று இறைஞ்சுகின்றனர்.*
*202இத்தகையோருக்குத்தான் அவர்கள் ஈட்டியதற்குரிய (மறுமைப்)*
*பங்கு உண்டு. அல்லாஹ் கணக்குத் தீர்ப்பதில் விரைவானவன்.*
*203நம்பிக்கையாளர்களே! (ஹஜ்ஜின்) குறிப்பிட்ட சில*
*நாட்கள் (மினாவில்) தங்கி அல்லாஹ்வை நினைவுகூருங்கள்.*
*எவரேனும் அவசரப்பட்டு இரண்டு நாட்களில் மக்காவுக்குத்*
*திரும்பிவிட்டால் அவர் மீது குற்றமாகாது. எவராவது தங்கித்*
*தாமதமாகப் புறப்பட்டால் அவர் மீதும் குற்றமாகாது. இவை*
*இறையச்சமுடையோருக்கு உரியவை ஆகும். அல்லாஹ்வுக்கு*
*அஞ்சுங்கள். அவனிடமே நீங்கள் ஒன்று திரட்டப்படுவீர்கள்*
*என்பதை அறிந்துகொள்ளுங்கள்.*

*204(நபியே!) இவ்வுலக வாழ்க்கை பற்றித் தன்(நயப்பு)*
*வார்த்தையால் உம்மை வியப்புக்குள்ளாக்கும் மனிதனும்*
*இருக்கிறான். அவன் தன் உள்ளத்தில் உள்ளதற்கு*
*அல்லாஹ்வைச் சாட்சியாளனாக்குவான். ஆனால் (உண்மையில்)*
*அ(த்தகைய)வன்தான் (உமக்குக்) கொடிய பகைவனாவான்.*
*205அவன் உம்மிடமிருந்து புறப்பட்டதும் பூமியில் குழப்பத்தை*
*உண்டாக்குவதிலும் விளைநிலங்களையும் கால்நடைகளையும்*
*அழிக்கும் முயற்சியிலும்தான் ஈடுபடுவான். அல்லாஹ் குழப்பத்தை*
*விரும்புவதில்லை. 206“அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்துகொள்” என்று*
*அவனிடம் கூறப்பட்டால் செருக்கு அவனைப் பாவத்தின்மீது*
*நிலைநிறுத்தி விடுகிறது. எனவே அத்தகையோருக்கு நரகமே*
*ஏற்றது. அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்.*

*207அல்லாஹ்வின் உவப்பை விரும்பித் தம் உயிரையே*
*அர்ப்பணிப்போரும் மனிதர்களில் உள்ளனர். (இத்தகைய) தன்*
*அடியார்களின் மீது அல்லாஹ் மிகுந்த பரிவுடையவனாக*
*இருக்கின்றான். 208நம்பிக்கையாளர்களே! நீங்கள் முழுக்கமுழுக்க*
*இறைவனுக்குக்) கீழ்ப்படிந்தவர்களாகி விடுங்கள். சாத்தானின்*

*அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். அவன் உங்களுக்கு வெளிப்படையான பகைவன் ஆவான். [209]உங்களிடம் தெளிவான சான்றுகள் வந்த பின்னரும் நீங்கள் தவறிவிடுவீர்களாயின் அறிந்துகொள்ளுங்கள், அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன். [210](நபியே!) மேகத்தின் நிழல்களில் அல்லாஹ்வும் வானவர்களும் (அவர்களிடம்) வரவேண்டும்; (அவர்களின்) விவகாரம் முடிக்கப்படவேண்டும் என்பதைத்தான் அவர்கள் எதிர்பார்க்கிறார்களா? அனைத்து விவகாரங்களும் அல்லாஹ்விடமே கொண்டுவரப்படும்.*

*[211]இஸ்ராயீலின் மக்களுக்கு நாம் எவ்வளவு தெளிவான சான்றுகளை வழங்கியிருந்தோம் என்று (நபியே!) நீர் கேட்பீராக! எவர் அல்லாஹ்வின் அருட்கொடை தன்னிடம் வந்த பின்னரும் அதனை (இறை மறுப்பாக) மாற்றிவிடுகிறாரோ உறுதியாக அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன் (என்பதை அவர் அறிந்துகொள்ளட்டும்.) [212]மறுப்பாளர்களுக்கு இவ்வுலக வாழ்வு அழகானதாகக் காட்டப்பட்டுள்ளது. அவர்கள் நம்பிக்கையாளர்களை ஏளனம் செய்கின்றனர். ஆனால் இறையச்சமுடையோர் மறுமை நாளில் அவர்களைவிட உயர்ந்த நிலையில் இருப்பார்கள். தான் விரும்பியோருக்கு அல்லாஹ் கணக்கின்றி வழங்குகிறான்.*

*[213](தொடக்கத்தில்) மனிதர்கள் (அனைவரும்) ஒரே சமூகத்தினராக இருந்தனர். (அவர்கள் தமக்குள் கருத்துவேறுபாடு கொண்டதனால்) தூதர்களை நற்செய்தியாளர்களாகவும் எச்சரிக்கையாளர்களாகவும் அல்லாஹ் அனுப்பிவைத்தான். அவர்கள் முரண்பட்டவற்றில் அவர்களிடையே தீர்ப்பு வழங்குவதற்காக அ(த்தூது)வர்களுடன் சத்திய வேதத்தையும் அருளினான். சத்தியம் வழங்கப்பட்டவர்கள் தங்களிடம் தெளிவான வழிகாட்டுதல் வந்த பின்னரும் தங்களுக்கிடையே இருந்த காழ்ப்புணர்வினால்தான் முரண்பட்டுக் கொண்டனர். ஆயினும் சத்தியத்தைக் குறித்து அவர்கள் பிணங்கிக் கொண்டவற்றில்*

*அல்லாஹ் தன் அருளால் நம்பிக்கையாளர்களுக்கு நேர்வழியைக் காட்டினான். தான் விரும்பியோருக்கு அல்லாஹ் நேர்வழியைக் காட்டுகிறான்.*

214*(நம்பிக்கையாளர்களே!) உங்களுக்கு முன்சென்றவர்களுக்கு ஏற்பட்ட நிலைமை உங்களுக்கும் ஏற்படாமலேயே நீங்கள் சொர்க்கம் சென்றுவிடலாம் என்று எண்ணிக்கொண்டீர்களா? அவர்களுக்கு வறுமையும் துன்பங்களும் ஏற்பட்டன. தூதரும் அவருடன் நம்பிக்கை கொண்டவர்களும் "இறையுதவி எப்போது வரும்" என்று கேட்கும்வரை அலைக்கழிக்கப்பட்டனர். நினைவில் வையுங்கள், இறையுதவி மிக அருகில் இருக்கிறது.*

215*(நபியே!) "தாம் என்ன செலவு செய்யவேண்டும்" என்று மக்கள் உம்மிடம் கேட்கிறார்கள். நீர் (அவர்களிடம்) "நல்லவையான எப்பொருளை நீங்கள் செலவு செய்தாலும் அதில் உங்கள் பெற்றோருக்கும் நெருங்கிய உறவினர்களுக்கும் அநாதைகளுக்கும் ஏழைகளுக்கும் வழிப்போக்கர்களுக்கும் உரிமை உண்டு. நீங்கள் எந்த நன்மை செய்தாலும் அதனை அல்லாஹ் முற்றும் அறிவான்" என்று கூறுவீராக!*

216*(தற்காப்பிற்காகப்) போர்புரிவது உங்களுக்கு வெறுப்பாக இருப்பினும் அது உங்கள்மீது கடமையாக்கப்பட்டுள்ளது. ஒரு பொருளை நீங்கள் வெறுக்கலாம்; (ஆனால்) அது உங்களுக்கு நன்மையாக இருக்கும். ஒரு பொருளை நீங்கள் விரும்பலாம்; (ஆனால்) அது உங்களுக்குத் தீமையாக இருக்கும். (அவற்றின் உண்மையை) அல்லாஹ்வே நன்கறிவான்; நீங்கள் அறியமாட்டீர்கள்.* 217*(நபியே!) "புனித மாதத்தில் போர்புரியலாமா?" என (ஓரிறை மறுப்பாளர்களாகிய) அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர். நீர் அவர்களிடம், "அம்மாதத்தில் போர்புரிவது பெரும் குற்றம்தான். ஆயினும் இறைவழியிலிருந்து அடியார்களைத் தடுப்பதும் இறைவனை மறுப்பதும் புனித (கஅபா) இறையில்லத்தில் (நுழையவிடாமல்) மக்களைத் தடுப்பதும் இன்னும் அங்கு வாழ்பவர்களை அங்கிருந்து வெளியேற்றுவதும்*

*அல்லாஹ்விடத்தில் (அதைவிடப்) பெரும் குற்றமாகும். குழப்பம் விளைவிப்பது கொலையைவிடக் கொடியதாகும்." என்று கூறுவீராக! (நம்பிக்கையாளர்களே!) அவர்களால் இயன்றால் உங்களை மார்க்கத்திலிருந்து திருப்பும்வரை ஓயாமல் உங்களுடன் போரிட்டுக்கொண்டே இருப்பார்கள். உங்களில் எவரேனும் தம் மார்க்கத்தை விட்டுவிலகி மறுத்த நிலையிலேயே இறந்தும் விட்டால் இம்மையிலும் மறுமையிலும் அவரின் நற்செயல்கள் யாவும் பாழாகிவிடும். அத்தகையவர்கள்தாம் நரகவாசிகள். அங்கு அவர்கள் நிலையாகக் கிடப்பார்கள்.*
*[218]நம்பிக்கைகொண்டு புலம்பெயர்ந்து இறைவழியில் பாடுபடுபவர்கள் அல்லாஹ்வின் அருளைத்தான் எதிர்பார்க்கின்றனர். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

*[219](நபியே!) மது பற்றியும் சூதாட்டம் பற்றியும் மக்கள் உம்மிடம் கேட்கின்றனர். "அவ்விரண்டிலும் பெரும் பாவமுள்ளது; மக்களுக்குச் சில பயன்களும் இருக்கின்றன. அவற்றால் ஏற்படும் பயனைவிட அவற்றின் பாவம்தான் மிக அதிகம்" என்று கூறுவீராக! "அவர்கள் (இறைவழியில்) என்ன செலவு செய்யவேண்டும்?" என்றும் உம்மிடம் கேட்கின்றனர். "(உங்கள் தேவை போக) எஞ்சியிருப்பதைச் செலவு செய்யுங்கள்" என்று கூறுவீராக! நீங்கள் சிந்திக்கும் பொருட்டு இவ்வாறு அல்லாஹ் கட்டளைகளை உங்களுக்குத் தெளிவுபடுத்துகிறான்.*
*[220]இம்மை மறுமை பற்றி நீங்கள் சிந்திப்பதற்காக (இவ்வாறு தெளிவுபடுத்துகிறான்). (நபியே!) அநாதைகளைப்பற்றி அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர். நீர் அவர்களிடம் "அவர்களைச் சீர்படுத்துவது நன்மையானதாகும். நீங்கள் அவர்களுடன் கலந்(து வாழ்ந்)தால் அவர்கள் உங்கள் சகோதரர்களே. சீர்திருத்தம் செய்பவர் யார் தீங்கு செய்பவர் யார் என்பதை அல்லாஹ் நன்கறிவான். அல்லாஹ் விரும்பியிருந்தால் அவன் இதனை உங்களுக்குக் கடினமாக்கி இருப்பான். அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம்மிக்கவன்.*

*[221](நம்பிக்கையாளர்களே!) இணைவைக்கும் பெண்களை அவர்கள் நம்பிக்கைகொள்ளும் வரை நீங்கள் திருமணம் செய்து*

*கொள்ளாதீர்கள். இணைவைக்கும் பெண் உங்கள் மனம் கவர்ந்தவளாக இருந்தபோதிலும் அவளைவிட நம்பிக்கைகொண்ட அடிமைப்பெண் சிறந்தவள் ஆவாள். இணைவைக்கும் ஆண்களுக்கு அவர்கள் நம்பிக்கை கொள்ளும்வரை (உங்கள் பெண்களைத்) திருமணம் செய்து வைக்கவேண்டாம். இணைவைப்பவன் உங்களுக்குப் பிடித்தமானவனாக இருந்தாலும் நம்பிக்கைகொண்ட அடிமை ஆண் அவனைவிடச் சிறந்தவன் ஆவான். இவர்கள் நரகத்தின்பால் (உங்களை) அழைக்கின்றனர். அல்லாஹ்வோ தன் கட்டளையால் (உங்களைச்) சொர்க்கத்தின்பாலும் மன்னிப்பின்பாலும் அழைக்கின்றான். மக்கள் அறிவுரை பெறும் பொருட்டுத் தன் கட்டளைகளை அவன் தெளிவுபடுத்துகிறான்.*

222*(நபியே!) அவர்கள் உம்மிடம் மாதவிலக்கு குறித்துக் கேட்கின்றனர். நீர் கூறும்: "அது ஓர் உபாதையாகும். அந்தக் காலங்களில் பெண்களைவிட்டு விலகியிருங்கள். அவர்கள் தூய்மையடையும்வரை அவர்களை நெருங்க வேண்டாம். அவர்கள் தூய்மையடைந்தபின் அல்லாஹ் கட்டளையிட்ட முறைப்படி அவர்களை நெருங்குங்கள். பாவத்திலிருந்து மீள்வோரையும் தூய்மையானவர்களையும் அல்லாஹ் நேசிக்கிறான்" என்று நீர் கூறுவீராக!*
223*"உங்கள் மனைவியர் உங்கள் விளைநிலங்கள் ஆவர். எனவே உங்கள் விளைநிலங்களுக்கு நீங்கள் விரும்பியவாறு செல்லுங்கள். உங்களுக்காக (நல்லறங்களை) முன்னரே செய்து வைத்துக்கொள்ளுங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அறிந்துகொள்ளுங்கள், உறுதியாக நீங்கள் அவனைச் சந்தித்தே தீரவேண்டும்" என நம்பிக்கையாளர்களுக்கு (நபியே!) நற்செய்தி கூறி விடுவீராக!*

224*"மனிதர்களே! நீங்கள் நன்மை செய்வதற்கும் இறையச்சத்தைக் கடைப்பிடிப்பதற்கும் மக்களிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்துவதற்கும் தடையாகச் செய்யும் சத்தியங்களுக்கு அல்லாஹ்வின் பெயரைப் பயன்படுத்திவிடாதீர்கள். அல்லாஹ் செவியேற்பவன்; முற்றும் அறிபவன்.*
225*நீங்கள் செய்யும் பொருளற்ற சத்தியங்களுக்காக அல்லாஹ் உங்களைக்*

குற்றவாளியாக்கமாட்டான். ஆனால் உளப்பூர்வமாக நீங்கள் செய்யும் சத்தியங்களுக்காக உங்களைக் குற்றவாளியாக்குவான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; சகிப்புத்தன்மையுடையவன்.
[226]தங்கள் மனைவியருடன் கூடுவதில்லை என்று சத்தியம் செய்து விலகியிருப்பவர்களுக்கு நான்கு மாதங்கள்வரை காலக்கெடு உண்டு. அதற்குள் அவர்கள் (தங்கள் சத்தியத்தைக் கைவிட்டு மனைவியரிடம்) திரும்பிவிட்டால் (மண உறவு தொடரும்.) அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் நிகரற்ற அன்பாளனாகவும் இருக்கிறான். [227]ஆனால் அவர்கள் மணவிலக்குச் செய்யத் தீர்மானித்துவிட்டால் (காலக்கெடு முடிவில் மண உறவு முறிந்துவிடும்). உறுதியாக அல்லாஹ் செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.

[228]மணவிலக்குச் சொல்லப்பட்ட பெண்கள் மூன்று மாதவிலக்கு (முடியும்) வரை பொறுத்திருக்க வேண்டும். அவர்கள் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால் அவர்களின் கருவறையில் அல்லாஹ் படைத்திருப்பதை மறைக்கக் கூடாது. அத்தவணைக்குள் அவர்(களுடைய கணவர்)கள் இணக்கத்தை விரும்பினால் (அக்) கணவர்களுக்கு அவர்களை மீண்டும் அழைத்துக்கொள்ள உரிமை உண்டு. அப்பெண்களுக்குப் பொதுவான வழக்கப்படி உரிமைகள் இருப்பது போலவே கடமைகளும் உள்ளன. ஆண்களுக்கு அவர்களைவிடச் சற்று அதிகமாகவே உள்ளன. அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன். [229](இவ்வாறு மீட்டுக் கொள்ளக்கூடிய) மணவிலக்கு இருமுறைதான் கூற முடியும். (காலக்கெடு முடியுமுன்) முறைப்படி அவர்களை (மனைவியராக) இருத்திக்கொள்ளலாம் அல்லது நல்லமுறையில் அவர்களை விடுவித்துவிடலாம். நீங்கள் உங்கள் மனைவியருக்குக் கொடுத்தவற்றிலிருந்து எதையும் எடுத்துக் கொள்வது அனுமதிக்கப்படவில்லை. அன்றி, (மனைவி கணவனைவிட்டு விலக விரும்பும் சூழ்நிலையில்) அல்லாஹ்வின் (ஒழுக்க) வரம்புகளுக்குள் நிலைத்திருக்க முடியாது என (அக்கணவன்; மனைவியாகிய இருவரும்) அஞ்சினால், மேலும் அவ்விருவரும்

இறை வரம்புகளுக்குள் நிலைத்திருக்க மாட்டார்கள் என்று
(நடுவர்களாக அமைந்த) நீங்களும் அஞ்சினால், மனைவி
(கணவனிடமிருந்து பெற்றவற்றுள் மணவிலக்கு நிகழ்வதற்காக)
எதையேனும் ஈடாகக் கொடுத்துப் பிரிந்து விடுவதில் அவர்கள் மீது
தவறில்லை. இவை இறைவரம்புகளாகும், இவற்றை மீறிவிடாதீர்கள்.
இறைவரம்புகளை மீறுபவர்கள்தாம் தீவினையாளர்கள்.
230 அவன் அவளுக்கு (மூன்றாம் முறையாக) மணவிலக்குக்
கூறிவிட்டால் அதன்பிறகு அப்பெண் வேறொரு(வனைத்)
திருமணம் செய்து, அவன் மணவிலக்கு அளித்தால்அன்றி
முதல் கணவனுக்கு அவள் அனுமதிக்கப்பட்டவள் அல்ல.
இரண்டாவது கணவன் மணவிலக்கு அளித்துவிடும் நிலையில்
முதல் கணவனும் அவளும் இறைவரம்புகளைப் பேணமுடியும்
என்று எண்ணினால் மீண்டும் இணைந்துகொள்வதில் எந்தக்
குற்றமுமில்லை. இவை இறைவரம்புகளாகும். அறிவுள்ள
மக்களுக்கு இவற்றை அவன் தெளிவுபடுத்துகிறான். 231 நீங்கள்
பெண்களை மணவிலக்குச் சொல்லித் தமக்குரிய காலக்கெடுவின்
இறுதிப்பகுதியை (அவர்கள்) அடைந்துவிட்டால் (அது
முடிவதற்குள்) முறைப்படி அவர்களை (மனைவியராக) இருத்திக்
கொள்ளுங்கள்; அல்லது (காலக்கெடு முடிவில்) அவர்களை
நல்ல விதமாக அனுப்பிவிடுங்கள். துன்புறுத்துவதற்காகவும்
வரம்பு மீறுவதற்காகவும் அவர்களை நீங்கள் தடுத்து
நிறுத்தி வைக்காதீர்கள். அவ்வாறு செய்பவர் தமக்குத்தாமே
தீங்கிழைத்துக் கொண்டவர் ஆவார். இறை வசனங்களை
ஏளனமாக எடுத்துக் கொள்ளாதீர்கள். அல்லாஹ் உங்கள் மீது
பொழிந்துள்ள அருட்கொடைகளையும் அவன் உங்களுக்கு
அறிவுரையாக அருளிய அவனது வேதத்தையும் ஞானத்தையும்
நினைவுகூருங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அல்லாஹ்
யாவற்றையும் நன்கறிந்தவன் என்பதைப் புரிந்துகொள்ளுங்கள்.
232 நீங்கள் உங்கள் மனைவியரை மணவிலக்குச் செய்து அவர்கள்
தங்கள் காலக்கெடுவை நிறைவு செய்தபிறகு மனம் விரும்பி வேறு
துணைவர்களை ஒழுங்கான முறைப்படி மணந்து கொள்வதைத்

*தடுக்காதீர்கள். உங்களில் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கைகொண்டவர்களுக்கு இவ்வாறு அறிவுரை கூறப்படுகிறது. இதுவே உங்களுக்கு மிக நேர்மையானதும் தூய்மையானதும் ஆகும். அல்லாஹ் நன்கறிவான், நீங்கள் அறியமாட்டீர்கள்.*

233*பாலூட்டுவதை முழுமைப்படுத்த விரும்புகிற (கண)வர்களுக்காக (மணவிலக்குச் செய்யப்பட்ட பிறகும்) தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு இரண்டு ஆண்டுகள் பாலூட்டவேண்டும். இந்நிலையில் தாய்மார்களுக்குரிய உணவையும் உடையையும் முறைப்படி தரவேண்டியது குழந்தையின் தந்தை மீதுள்ள பொறுப்பாகும். எவர்மீதும் அவரின் சக்திக்கு உட்பட்டே தவிரப் பொறுப்பு சுமத்தப்படாது. தாயும் தனது குழந்தையினால் சிரமத்திற்குள்ளாக்கப்படமாட்டாள். தந்தையும் தனது குழந்தையினால் சிரமத்திற்குள்ளாக்கப்படமாட்டான். (தந்தை இறந்துவிட்டால்) அவனது வாரிசுக்கு இப்பொறுப்பு உண்டு. (மணவிலக்கான) அவர்கள் இருவரும் தங்களுக்குள் ஆலோசித்துப் பாலூட்டுவதை மனநிறைவோடு நிறுத்த விரும்பினால் இருவர் மீதும் எந்தக் குற்றமுமில்லை. உங்கள் குழந்தைகளுக்குச் செவிலித் தாய்மார்கள் மூலம் பாலூட்ட விரும்பினால் அப்போதும் உங்கள்மீது எந்தக் குற்றமும் இல்லை. ஆனால் அவர்களுக்கு நீங்கள் வரையறுத்ததை முறைப்படி கொடுத்துவிடவேண்டும். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள் நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான்.*

234*உங்களில் எவரேனும் மனைவியரைவிட்டு இறந்துவிட்டால் அப்பெண்கள் (மறுமணம் செய்துகொள்ளாமல்) நான்கு மாதங்கள் பத்துநாட்கள் வரை காத்திருக்க வேண்டும். தம் காலக்கெடுவை நிறைவுசெய்த பின்னர் அவர்கள் நியாயமான முறைப்படி (தங்களை அழகு) செய்துகொள்வது (அவர்களின் பொறுப்பாளர்களான) உங்கள் மீது குற்றமாகாது. அல்லாஹ் நீங்கள் செய்வதை நன்கறிந்தவன்.* 235*(நம்பிக்கையாளர்களே!)*

*அப்பெண்களைத் திருமணம் செய்யும் விருப்பத்தை மறைமுகமாகச் சொல்வதிலோ உங்கள் உள்ளங்களில் மறைத்து வைப்பதிலோ உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை. உறுதியாக நீங்கள் அவர்களை நினைப்பீர்கள் என்பதை அல்லாஹ் அறிவான். ஆனால் நீங்கள் (திருமணம் தொடர்பான) முறையான வார்த்தை கூறுவதைத் தவிர அவர்களிடம் மறைமுகமாகக்கூட வாக்களிக்காதீர்கள். வரையறுக்கப்பட்ட காலக்கெடு நிறைவடையும்வரை நீங்கள் திருமணம் செய்ய விரும்பாதீர்கள். அறிந்துகொள்ளுங்கள்! உங்கள் உள்ளங்களில் உள்ளவற்றையெல்லாம் அல்லாஹ் அறிகிறான். எனவே அவனுக்கே அஞ்சுங்கள். அறிந்துகொள்ளுங்கள்! அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; சகிப்புத்தன்மையுடையவன்.*

*[236]பெண்களைத் தீண்டாமலும் மணக்கொடையை அறுதியிடாமலும் இருக்கிற நிலையில் நீங்கள் அவர்களை மணவிலக்குச் செய்துவிட்டால் உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை. ஆயினும் வசதியுள்ளவர் தமது வசதிக்கேற்பவும் வசதியற்றவர் தமது சக்திக்கேற்பவும் முறைப்படி அவர்களுக்கு ஏதேனும் கொடுத்து விடவேண்டும். இது நற்செயல்புரிவோர் மீதுள்ள கடமையாகும். [237]நீங்கள் அவர்களுக்குரிய மணக்கொடையை அறுதியிட்ட பிறகு அவர்களைத் தீண்டுவதற்கு முன்னர் மணவிலக்கு அளித்துவிட்டால் அறுதியிட்ட மணக்கொடையில் பாதியை அவர்களுக்குக் கொடுத்து விடவேண்டும். ஆனால் அப்பெண்கள் (அப்பாதி) மணக்கொடையையும் விட்டுக்கொடுத்துவிடலாம். அல்லது திருமண முடிச்சை கையில் வைத்திருப்பவர்கள் (கணவர்கள் – முழு மணக்கொடையையும்) கொடுத்துவிடலாம். (கணவர்களாகிய) நீங்கள் விட்டுக் கொடுத்துவிடுவதே இறையச்சத்திற்கு மிக நெருக்கமானது. நீங்கள் ஒருவருக்கொருவர் தாராளமாக நடந்துகொள்ளும் வாய்ப்பைப் புறக்கணித்துவிடாதீர்கள். நீங்கள் செய்பவற்றையெல்லாம் அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கின்றான்.*

*[238](நம்பிக்கையாளர்களே!) தொழுகைகளைப் பேணிவாருங்கள். குறிப்பாக நடுத்தொழுகையைப் பேணுங்கள். அல்லாஹ்விற்கு*

*முன்னால் பணிந்தவர்களாக நில்லுங்கள். [239]உங்களுக்கு(ப் பகைவர்கள் காரணமாக) அச்சம் (தரும் சூழல்) ஏற்பட்டால் நடந்துகொண்டோ வாகனத்தின் மீது அமர்ந்த நிலையிலோ தொழுதுகொள்ளுங்கள். பின்னர் அமைதிநிலை ஏற்பட்டதும் நீங்கள் அறியாதவற்றையெல்லாம் உங்களுக்குக் கற்றுத்தந்த அல்லாஹ்வை அவன் உங்களுக்குக் கற்றுத்தந்தவாறே நினைவுகூருங்கள்.*

*[240]உங்களில் மனைவியரை விட்டு இற(க்கும் தறுவாயில் இரு)ப்போர் தங்கள் மனைவியரை (வீட்டிலிருந்து) வெளியேற்றிவிடாமல் ஓராண்டுக் காலம்வரை அவர்களுக்குரிய வாழ்வாதாரம் அளிக்கப்பட வேண்டும் என்று (தம் வாரிசுகளிடம்) இறுதிவிருப்பம் தெரிவிக்கவேண்டும். ஆனால் அவர்கள் தாமாகவே வீட்டைவிட்டு வெளியேறித் தங்கள் வாழ்க்கைக்கு முறைப்படி ஏதேனும் செய்துகொண்டால் (வாரிசுகளாகிய) உங்கள் மீது குற்றமாகாது. அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன். [241]மணவிலக்குச் செய்யப்பட்ட பெண்களுக்கும் முறைப்படி ஏதேனும் வழங்கிவிட வேண்டும். இது இறையச்சமுடையோர் மீது கடமையாகும். [242]இவ்வாறு நீங்கள் புரிந்துகொள்ளும் பொருட்டுத் தன் கட்டளைகளை அல்லாஹ் உங்களுக்குத் தெளிவுபடுத்துகிறான்.*

*[243](நபியே!) சாவு அச்சத்தால் தங்கள் வீடுகளை விட்டு ஓட முற்பட்டவர்களைப்பற்றி நீர் அறியவில்லையா? அவர்கள் ஆயிரக்கணக்கில் இருந்தனர். ‘நீங்கள் இறந்துவிடுங்கள்’ என்று அல்லாஹ் அவர்களிடம் கூறினான். பின்னர் (ஓர் இறைத்தூதரின் இறைஞ்சுதலை ஏற்று) மீண்டும் அவன் அவர்களை உயிர்ப்பித்தான். உறுதியாக அல்லாஹ் மனிதர்களின் மீது பேரருள் புரிபவன். ஆயினும் மனிதர்களில் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை. [244](நம்பிக்கையாளர்களே! தற்காப்பிற்காக) இறைவழியில் போர்புரியுங்கள். அறிந்து கொள்ளுங்கள்! அல்லாஹ் செவியுறுபவன்; முற்றும் அறிபவன்.*

245அல்லாஹ்வுக்கு அழகிய கடன் தருபவர் யார்? அல்லாஹ் அதனை அவருக்குப் பன்மடங்காக்கித் தருவான். அல்லாஹ்வே (சிலருக்குக்) குறைவாகவும் (சிலருக்குத்) தாராளமாகவும் (செல்வத்தை) வழங்குகிறான். நீங்கள் அனைவரும் அவனிடமே திரும்பக் கொண்டுவரப்படுவீர்கள்.

246(நபியே!) மோசேவுக்குப் பிறகு (வந்த) இஸ்ராயீல் மக்களுடைய தலைவர்களைப்பற்றி நீர் அறியவில்லையா? அவர்கள் தம்முடைய (ஒரு) தூதரிடம் “நாங்கள் இறைவழியில் போர்புரிவதற்காக எங்களுக்கு ஓர் அரசரை நியமியுங்கள்” என்று கேட்டபோது அவர், “உங்களுக்குப் போர் புரிவதற்கான கட்டளை இடப்பட்டும் நீங்கள் போரிடாமல் இருந்துவிட்டால்?” என்று கேட்டார். அதற்கு அவர்கள், “நாங்கள் இறைவழியில் போரிடாமல் எப்படி இருக்க முடியும்? நாங்கள் எங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றப்பட்டு, எங்கள் பிள்ளைகளிடமிருந்து பிரிக்கப்பட்டுள்ளோம்” என்று கூறினர். ஆனாலும் அவர்களுக்குப் போர் புரியுமாறு கட்டளை இடப்பட்டபோது அவர்களில் ஒரு சிலரைத்தவிர மற்ற அனைவரும் பின்வாங்கி விட்டனர். இத்தகைய
முறைகேடர்களை அல்லாஹ் நன்கறிவான். 247அவர்களுடைய
தூதர் அவர்களிடம், “தாலூத் என்பவரை அல்லாஹ் உங்களுக்கு அரசராக நியமித்துள்ளான்” என்று கூறியபோது அவர்கள், “எங்கள் மீது ஆட்சிபுரிய அவருக்கு என்ன தகுதியிருக்கிறது? நாங்கள்தாம் ஆட்சிபுரிய அவரைவிட மிகுந்த தகுதியுடையோராக இருக்கிறோம். அவருக்குச் செல்வமும் வழங்கப்படவில்லையே!” என்று கூறினர். அதற்கு அவர், “அல்லாஹ் உங்களைவிட மேலானவராக அவரைத் தேர்ந்தெடுத்துள்ளான். அவருக்கு அறிவாற்றலையும் உடல் வலிமையையும் மிகுதியாக வழங்கியுள்ளான். தான் விரும்பியவர்களுக்கே அல்லாஹ் தன் ஆட்சியதிகாரத்தை வழங்குகிறான். அல்லாஹ் தாராளமானவன்;
முற்றும் அறிந்தவன்” என்று கூறினார். 248பின்னும் தூதர்
அவர்களிடம், “அவருடைய அரசுரிமைக்குச் சான்றாக உங்களிடம் ஒரு பேழை வரும், அதில் உங்கள் இறைவனிடமிருந்து (உங்களுக்குச்) சாந்தியும் மோசேயின் குடும்பத்தினரும்

*ஆரோனின் குடும்பத்தினரும் விட்டுச் சென்ற(வற்றில் எஞ்சிய)வையும் இருக்கும். அந்தப்பேழையை வானவர்கள் கொண்டுவருவார்கள். நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருப்பின் அதில் உங்களுக்குப் பெரும் சான்றுள்ளது" என்றும் கூறினார்.*

*[249]தாலூத் படைகளுடன் புறப்பட்டபோது, (அத்தூதர்) "அல்லாஹ் உங்களை ஒரு நதியின் மூலம் சோதிப்பான். எவர் அதன் நீரை (மிகுதியாக) அருந்துகிறாரோ அவர் என்னைச் சார்ந்தவரல்லர். எவர் அதன் நீரை ஒரு கையளவுக்குமேல் அருந்தவில்லையோ அவரே என்னைச் சார்ந்தவராவார்" என்று கூறினார். ஆயினும் அவர்களில் ஒரு சிலரைத் தவிர அனைவரும் அதிலிருந்து மிகுதியாக அருந்திவிட்டனர். தாலூத்தும் அவருடன் (சென்ற) நம்பிக்கை கொண்டோரும் ஆற்றைக் கடந்தபோது, "இன்று கோலியத்துடனும் அவனது படைகளுடனும் போரிடும் சக்தி எங்களிடம் இல்லை" என்றனர் (ஆனால் அவர்களில்) நாம் அல்லாஹ்வை உறுதியாகச் சந்திப்போம் என்பதில் உறுதி கொண்டிருந்தவர்கள், "எத்தனையோ சிறுபடைகள் இறைக்கட்டளையால் பெரும்படைகளை வென்றிருக்கின்றன. அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கிறான்" என்று கூறினர். [250]கோலியத்தையும் அவனது படைகளையும் அவர்கள் எதிர்கொண்டபோது, "எங்கள் இறைவா! எங்கள் மீது பொறுமையைப் பொழிவாயாக! எங்களை உறுதிப்படுத்துவாயாக! (இந்த)மறுப்பாளர்களை வென்றிட எங்களுக்கு உதவிபுரிவாயாக!' என்று இறைஞ்சி வேண்டினர். [251]இறுதியில் அவர்கள் அல்லாஹ்வின் கட்டளைப்படி கோலியத்தின் படைகளைத் தோல்வியுறச் செய்தனர். தாவீத், கோலியத்தைக் கொன்றார். அல்லாஹ் தாவீதுக்கு ஆட்சியதிகாரத்தையும் ஞானத்தையும் வழங்கினான். தான் விரும்பியவற்றை அவருக்குக் கற்றுக்கொடுத்தான். இவ்வாறு அல்லாஹ் மக்களில் சிலரைக் கொண்டு சிலரைத் தடுக்காவிட்டால் பூமி குழப்பத்தால் சீர்குலைந்து போயிருக்கும். ஆயினும் அல்லாஹ் அனைத்துலகத்தாரின் மீதும் பேரருள் புரிபவனாக இருக்கிறான்.*

[252]*(நபியே!) இவை இறைவசனங்களாகும். இவற்றை நாம் உமக்கு உண்மையைக் கொண்டே ஓதி உணர்த்துகிறோம். (முஹம்மதே!) உறுதியாக நீர் (இறைத்)தூதர்களில் உள்ளவராவீர்.* [253]*அத்தூதர்களில் சிலரைவிடச் சிலரை நாம் சிறப்பாக்கி வைத்துள்ளோம்; அவர்களில் சிலருடன் அல்லாஹ் பேசியிருக்கிறான்; சிலருடைய படிநிலையை உயர்த்தியும் இருக்கிறான். நாம் மர்யத்தின் மைந்தர் இயேசுவுக்குத் தெளிவான சான்றுகளை வழங்கினோம். அவரைத் தூய ஆன்மாவின் மூலம் வலுப்படுத்தினோம். அல்லாஹ் விரும்பியிருந்தால் அவர்களுக்குப் பின்வந்தவர்கள் தெளிவான கட்டளை வந்த பின்னரும் (தங்களுக்குள்) சண்டையிட்டிருக்க மாட்டார்கள். ஆயினும் அவர்கள் முரண்பட்டனர். அவர்களில் சிலர் நம்பிக்கை கொண்டனர்; சிலர் மறுத்தனர். அல்லாஹ் விரும்பியிருந்தால் அவர்கள் சண்டையிட்டிருக்க மாட்டார்கள். ஆயினும் தான் விரும்பியதையே அல்லாஹ் செய்கிறான்.*

[254]*நம்பிக்கையாளர்களே! எந்தவிதமான பேரமும் நட்பும் பரிந்துரையும் இல்லாத அந்த நாள் வருவதற்குமுன் நாம் உங்களுக்கு வழங்கியவற்றிலிருந்து (அறச்)செலவு செய்யுங்கள். மறுப்பாளர்தாம் முறைகேடர்கள்.* [255]*அல்லாஹ்! அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவன் என்றென்றும் உயிர்த்திருப்பவன்; என்றென்றும் நிலைத்திருப்பவன்; உறக்கக் கலக்கமோ, உறக்கமோ அவனைப் பீடிக்கமாட்டா. வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியன. அவனது அனுமதியின்றி அவனிடம் பரிந்து பேசுபவர் யார்? அவர்களுக்கு முன்னால் இருப்பவற்றையும் பின்னால் இருப்பவற்றையும் அவன் அறிவான். அவனது அறிவிலிருந்து அவன் விரும்பியதை அன்றி வேறு எதையும் (எவரும்) அறிந்து கொள்ளமுடியாது. அவனது இருக்கை (ஆட்சி) வானங்கள், பூமி எங்கிலும் சூழ்ந்திருக்கிறது. அவற்றைப் பாதுகாப்பது அவனைச் சோர்வடையச் செய்வதில்லை. அவன்தான் மிக உயர்ந்தவன்; மகத்துவமிக்கவன்.*
[256]*மார்க்கத்(தை ஏற்றுக் கொள்வ)தில் எந்த வற்புறுத்தலும்*

*இல்லை. தவறான வழியிலிருந்து நேர்வழி தெளிவாகி விட்டது. எனவே எவர் சாத்தானை மறுத்து அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்கிறாரோ அவர் என்றும் அறுபடாத பலமான கயிற்றைப் பற்றிக்கொண்டவர் ஆவார். அல்லாஹ் செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன். [257]அல்லாஹ்வே நம்பிக்கையாளர்களுக்குப் பாதுகாவலன். அவன் அவர்களை இருளிலிருந்து வெளியேற்றி வெளிச்சத்தின்பால் கொண்டுவருகிறான். (ஓரிறை) மறுப்பாளர்களுக்குச் சாத்தான்களே ஆதரவாளர்கள். (அவர்கள்) இவர்களை வெளிச்சத்திலிருந்து வெளியேற்றி இருளின்பால் கொண்டு செல்கின்றனர். இவர்கள்தாம் நரகவாசிகள்; அதில் என்றென்றும் கிடப்பார்கள்.*

*[258](நபியே!) அல்லாஹ் தனக்கு ஆட்சியை வழங்கியிருந்த காரணத்தால் ஆப்ரஹாமிடம் அவருடைய இறைவனைக் குறித்து வாதம்புரிந்தவனைப் பற்றி நீர் அறிந்திருக்கவில்லையா? “வாழ்வையும் சாவையும் அளிப்பவன் என் இறைவனே” என்று ஆப்ரஹாம் கூறியபோது அவன், “நானும்தான் வாழ்வையும் சாவையும் அளிக்கிறேன்” என்றான். அதற்கு ஆப்ரஹாம், “அல்லாஹ் சூரியனைக் கிழக்கிலிருந்து உதிக்கச் செய்கிறான். நீ அதனை மேற்கிலிருந்து உதிக்கச்செய்” என்றார். இறைவனை மறுத்த அவன் திகைத்துப் போனான். அல்லாஹ் தீவினையாளர்களுக்கு நேர்வழி காட்டுவதில்லை.*

*[259]அல்லது, வீடுகளின் கூரைகள் எல்லாம் தகர்ந்து அடியோடு அழிந்துவிட்ட ஓர் ஊரைக் கடந்து சென்றபோது “இந்த அழிவுக்குப்பின் இந்த ஊரை அல்லாஹ் எவ்வாறு உயிர்ப்பிப்பான்” என்று (வியந்து) கேட்ட ஒருவரை (நீர்) அறிவீரா? எனவே அல்லாஹ் நூறு ஆண்டுகள் அவரை இறந்திருக்கச் செய்தான். பின்னர் அவன் அவரை மீண்டும் எழுப்பி “நீர் எவ்வளவு காலம் இந்நிலையில் இருந்தீர்?” என்று வினவினான். அதற்கு அவர், “ஒருநாள் அல்லது ஒருநாளுக்கும் சற்றுக் குறைவாக” என்றார். “இல்லை, நீர் நூறு ஆண்டுகள் இந்நிலையில் இருந்தீர். இப்போது நீர் உமது உணவையும் பானத்தையும் பாரும். அவை (இதுவரை)*

*கெட்டுப்போகவில்லை. (மடிந்துபோன) உமது கழுதையையும் பாரும். உம்மை மனிதர்களுக்கு ஒரு சான்றாக ஆக்குவதற்காகவே இவ்வாறு செய்தோம். அதன் எலும்புகளை நாம் எவ்வாறு ஒன்றுசேர்த்துப் பின்னர் அதன்மீது தசையைப் போர்த்து (உயிர்ப்பிக்)கிறோம் என்பதைப் பாரும்" என்று அல்லாஹ் கூறினான். எனவே அவருக்கு எல்லாம் தெளிவாகிவிட்ட பிறகு, "உறுதியாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன் என்பதை நான் அறிகிறேன்" என்றார். [260]ஆப்ரஹாம் இறைவனை நோக்கி "என் இறைவா! இறந்தவர்களை நீ எவ்வாறு உயிர்ப்பிக்கிறாய் என்பதை எனக்குக் காட்டுவாயாக!" என்று கேட்டபோது அவன், "நீர் நம்பவில்லையா?" என்று கேட்டான். (அதற்கு) அவர் "ஆம் (உறுதியாக நம்புகிறேன்). ஆயினும் என் உள்ளம் நிறைவடைவதற்காகவே (இவ்வாறு கேட்கிறேன்.)" என்றார். இறைவன், "நீர் நான்கு பறவைகளைப் பிடித்து (அவற்றைப் பழக்கிப் பின்னர்) அவற்றை அறுத்து(த் துண்டு துண்டாக்கி) அவற்றின் ஒவ்வொரு பகுதியையும் தனித்தனி மலைகளில் வைத்துவிட்டுப் பின் அவற்றை அழைப்பீராக! அவை உம்மிடம் பறந்தோடி வரும். அறிந்துகொள்ளும்! அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்" என்று கூறினான்.*

*[261]இறைவழியில் தம் உடைமைகளை (அறச்)செலவு செய்வோருக்கு உவமை ஒரு தானியம். அதிலிருந்து ஏழு கதிர்கள் முளைக்கின்றன. ஒவ்வொரு கதிரிலும் நூறு தானியங்கள் உள்ளன. (இவ்வாறு) தான் விரும்பியோருக்கு அல்லாஹ் (நன்மைகளைப்) பன்மடங்காக்குகிறான். அல்லாஹ் தாராளமானவன்; முற்றும் அறிந்தவன். [262]தம் செல்வங்களை இறைவழியில் செலவு செய்த பின்னர் அதனைச் சொல்லிக் காட்டாமலும் (பொருளைப் பெற்றவரைப்) புண்படுத்தாமலும் இருப்போருக்கு உரிய நற்கூலி அவர்களின் இறைவனிடம் இருக்கிறது. அவர்களுக்கு எந்த அச்சமுமில்லை; அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். [263]ஈகை அளித்துவிட்டு (அதை வாங்கியவனைப்) புண்படுத்துவதை விடக் கனிவான சொல்லும் மன்னித்தலும் சிறந்தவையாகும்.*

அல்லாஹ் தேவை எதுவுமற்றவன்; சகிப்புத்தன்மையுடையவன்.
264நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வின் மீதும், மறுமை நாளின் மீதும் நம்பிக்கைகொள்ளாமல் தன் செல்வத்தை வெளிப்பகட்டிற்காகச் செலவு செய்பவனைப் போல (நீங்களும்) கொடுத்ததைச் சொல்லிக்காட்டியும் புண்படப்பேசியும் உங்கள் ஈகைகளைப் பாழாக்கி விடாதீர்கள். அத்தகையவன் மண்மூடிய ஒரு வழுக்குப் பாறையைப் போன்றவன். அதன்மீது பெருமழை பெய்து அதனை முற்றிலும் வெறுமையாக்கிவிடும். அதுபோல அத்தகையோர் தாங்கள் செய்யும் ஈகையின் மூலம் எப்பயனும் பெறமாட்டார்கள். மறுப்பாளர்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவதில்லை.
265இறைவனின் உவப்பை விரும்பியும் தங்கள் உள்ளத்தை உறுதிப்படுத்திக் கொள்ளவும் (அறச்)செலவு செய்வோர் உயரமான இடத்திலுள்ள ஒரு தோட்டத்தைப் போன்றவர்கள். அதன்மீது பெருமழை பொழிந்தால் அது தனது விளைச்சலை இருமடங்காக்கித் தருகிறது. பெருமழை பொழியாவிட்டாலும் அதற்குச் சிறு தூறல்கூடப் போதுமானதாகும். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் பார்த்துக்கொண்டிருக்கிறான்.

266ஒருவரிடம் பேரீச்சைகளும் திராட்சைகளும் கொண்ட ஒரு தோட்டமுள்ளது. அதில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கின்றன. அதில் அவருக்கு எல்லாவகையான கனிகளும் கிடைக்கின்றன. அவரை முதுமை வந்தடைந்து விடுகிறது. அவருடைய குழந்தைகளோ இன்னும் (பொருளீட்ட) இயலாத(சிறு)வர்களாகவே இருக்கின்றனர். இந்நிலையில் அந்தத் தோட்டத்தில் தீயுடன் கூடிய புயல்காற்று அ(த்தோட்டத்)தை தாக்கிக் கரித்து விடுவதை உங்களில் எவரேனும் விரும்புவாரா? இவ்வாறு நீங்கள் சிந்தித்துணரும் பொருட்டுத் தன் சான்றுகளை அல்லாஹ் உங்களுக்கு உதாரணங்கள் கொண்டு தெளிவுபடுத்துகிறான்.

267நம்பிக்கையாளர்களே! நீங்கள் ஈட்டிய(நல்ல)வற்றிலிருந்தும் பூமியிலிருந்து நாம் உங்களுக்கு வெளிப்படுத்தித் தந்ததிலிருந்தும்

(அறச்)செலவு செய்யுங்கள். தரக்குறைவான பொருள்களைச் செலவு செய்ய எண்ணாதீர்கள். நீங்கள் அத்தகைய பொருள்களைக் கண்களை மூடிக் கொண்டிருந்தால் அன்றி வாங்கமாட்டீர்களே! அறிந்துகொள்ளுங்கள்! அல்லாஹ் தேவை எதுவுமற்றவன்; புகழுக்குரியவன்.
268சாத்தான் உங்களை வறுமையின் மூலம் அச்சமூட்டுகிறான். மானக்கேடானவற்றைச் செய்யுமாறு தூண்டுகிறான். ஆனால் அல்லாஹ் தன்னிடமிருந்து மன்னிப்பையும் அருளையுமே வாக்களிக்கிறான். அல்லாஹ் தாராளமானவன்; முற்றும் அறிந்தவன்.
269தான் விரும்பியோருக்கு அவன் ஞானத்தை வழங்குகிறான், எவருக்கு ஞானம் கிடைத்துவிட்டதோ அவருக்குப் பெரும் செல்வம் கிடைத்து விட்டது. அறிவுடையோரே இதனை உணர்வர்.

270நீங்கள் (அறச்)செலவாக எதனைச் செலவிட்டாலும் நேர்ச்சை செய்தாலும் அதனை அல்லாஹ் நன்கறிவான். முறைகேடர்களுக்கு (மறுமையில்) உதவுவோர் எவரும் இல்லை.
271நீங்கள் ஈகை அறங்களை வெளிப்படையாகச் செய்தால் அது நல்லதுதான். ஆயினும் மறைமுகமாக ஏழைகளுக்குக் கொடுப்பீர்களாயின் அது மேலும் சிறந்ததாகும். அது உங்களின் சில பாவங்களைப் போக்கிவிடும். அல்லாஹ் உங்களின் செயல்களை அறிந்தேயிருக்கிறான்.

272(நபியே!) அவர்களை நேர்வழியில் கொண்டுவருவது உமது பொறுப்பன்று. மாறாகத் தான் விரும்பியோரை அல்லாஹ்வே நேர்வழியில் செலுத்துகிறான். (நம்பிக்கையாளர்களே!) எந்த (நல்ல) பொருளை நீங்கள் (அறச்)செலவு செய்தாலும் அது உங்களுக்கே நன்மையாக அமையும். நீங்கள் இறை உவப்புக்காகவே அன்றி (வேறெந்த நோக்கிலும்) செலவு செய்யாதீர்கள். நல்லவற்றிலிருந்து நீங்கள் எதைச் செலவு செய்தாலும் அதற்குரிய கூலி நிறைவாக உங்களுக்கு வழங்கப்படும். அதில் உங்களுக்கு எந்தக் குறைவும் செய்யப்படமாட்டாது.
273(பொருளீட்டுவதற்காகப்) பூமியில் ஓடியாடி உழைக்க முடியா வண்ணம் தங்களை

*இறைவழியில் அர்ப்பணித்துக்கொண்ட ஏழைகளுக்கு ஈகை(ப்பொருள்)கள் உரியனவாகும். அவர்கள் இரந்து கேட்காததால் அறியாதோர் அவர்களைச் செல்வர்கள் என எண்ணிவிடுகின்றனர். அவர்களின் தோற்றத்தைக் கொண்டு அவர்களை (நபியே!) நீர் அறிந்துகொள்ளலாம். ஆனால் அவர்கள் மக்களிடம் கெஞ்சிக் கேட்பதில்லை. (நம்பிக்கையாளர்களே! அவர்களுக்காக) நீங்கள் எந்த (நற்) பொருளைச் செலவு செய்தாலும் அதை அல்லாஹ் முற்றும் அறிந்தவனாக இருக்கிறான்.*
[274]*தம் செல்வங்களை இரவிலும் பகலிலும் மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் (அறச்)செலவு செய்பவர்களுக்கு அவர்களின் இறைவனிடம் நற்கூலி இருக்கிறது. அவர்களுக்கு எந்த அச்சமுமில்லை; அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.*

[275]*வட்டியை உண்பவர்கள் சாத்தானால் தீண்டப்பட்டதால் (மறுமைநாளில்) பைத்தியமாகி விட்டவர்களைப் போலத்தான் எழுவார்கள். இதற்குக் காரணம் "வணிகமும் வட்டியைப் போன்றதுதான்" என்று அவர்கள் கூறியதே ஆகும். உண்மையில் அல்லாஹ் வணிகத்தை அனுமதிக்கப்பட்டதாகவும் வட்டியைத் தடுக்கப்பட்டதாகவும் ஆக்கியுள்ளான். ஆகவே எவர் தமது இறைவனிடமிருந்து அறிவுரை வந்த பின்னர் (வட்டியினின்றும்) விலகிக் கொண்டாரோ அவர் முன்னர் வாங்கியது அவருக்குரியதாகும். அவரது விவகாரம் அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது. யாரேனும் அதனை மீண்டும் செய்தால் அவர்கள் நரகவாசிகளாவர். அதில் அவர்கள் என்றென்றும் கிடப்பார்கள்.*
[276]*அல்லாஹ் வட்டியை அழிக்கிறான்; (ஈகை) அறங்களை வளர்க்கிறான். நன்றி கொன்று தீச்செயல் புரிவோரையும் அல்லாஹ் விரும்புவதில்லை.*
[277]*(ஓரிறை) நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்து தொழுகையைக் கடைப்பிடித்துக் கடமையாக்கப்பட்ட கொடையைக் கொடுத்து வருபவர்களுக்கு அவர்களுடைய இறைவனிடம் நற்கூலி இருக்கிறது. அவர்களுக்கு எந்த அச்சமுமில்லை. அவர்கள்*

*கவலைப்படவும் மாட்டார்கள். [278]நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். நீங்கள் நம்பிக்கையாளர்களாயின் எஞ்சியுள்ள வட்டியை (வாங்காமல்) விட்டுவிடுங்கள். [279]நீங்கள் அவ்வாறு செய்யவில்லையெனில் அல்லாஹ்விடமிருந்தும் அவனது தூதர்களிடமிருந்தும் போருக்கான அறிவிப்பை எதிர்பாருங்கள். நீங்கள் (பாவ)மன்னிப்புக் கோரினால் உங்கள் அசல் தொகைகளுக்கு நீங்கள் உரிமையாளர் ஆவீர்கள். நீங்கள் யார் மீதும் அநீதி இழைக்கக் கூடாது. உங்கள் மீதும் அநீதி இழைக்கப்படமாட்டாது. [280](உங்களிடம் கடன் வாங்கிய) ஒருவர் நிதிநெருக்கடியில் இருந்தால் அவருக்கு வசதி ஏற்படும்வரை காலநீட்டிப்பு அளியுங்கள். நீங்கள் அறிந்தவர்களாக இருப்பின் (அக்கடனை) ஈகையாக விட்டுவிடுவதே உங்களுக்கு மிகச் சிறந்ததாகும்.*

*[281]அல்லாஹ்விடம் திரும்பக் கொண்டு வரப்படும் அந்த நாளை(க் குறித்து) அஞ்சுங்கள். பின்னர் ஒவ்வொருவருக்கும் அவரவர் செய்தவற்றிற்கான கூலி முழுமையாக வழங்கப்பட்டுவிடும். அவர்கள்மீது அநீதி இழைக்கப்படமாட்டாது.*

*[282]நம்பிக்கையாளர்களே! நீங்கள் ஒரு குறிப்பிட்ட தவணைக்குக் கடன் கொடுக்கல் வாங்கலை வைத்துக்கொண்டால் அதனை எழுதிக் கொள்ளுங்கள். உங்களுக்கிடையே யாராவது ஒருவர் அதனை நேர்மையுடன் எழுதிக்கொள்ள வேண்டும். எழுதுபவர் எழுதுவதற்கு மறுப்புத் தெரிவிக்கக் கூடாது. அல்லாஹ் அவருக்குக் கற்றுத் தந்தவாறே அவர் அதனை எழுதி விடவேண்டும். கடன் வாங்கியவரே (கடன் ஆவணத்துக்கு) வாசகம் சொல்ல வேண்டும். தம் இறைவனான அல்லாஹ்வுக்கு அவர் அஞ்சி நடந்துக்கொள்ளட்டும். அதில் (கடன்தொகையில்) எதுவும் குறைத்து விடக்கூடாது. கடன் வாங்கியவர் அறியாதவராக அல்லது பலவீனராக அல்லது தானே வாசகம் சொல்ல இயலாதவராக இருந்தால் அவரது பொறுப்பாளர் நேர்மையான முறையில் (கடன் பத்திரத்தின்) வாசகம் சொல்லவேண்டும். உங்கள்*

*ஆண்களிலிருந்து இருவரைச் சாட்சியாக்கிக் கொள்ளுங்கள். இரண்டு ஆண்கள் இல்லையென்றால் நீங்கள் விரும்பியோரில் ஓர் ஆணையும் இரண்டு பெண்களையும் சாட்சியாக்கிக் கொள்ளுங்கள். (ஏனெனில்) அவ்விரு பெண்களில் ஒருவர் மறந்துவிட்டால் மற்றொருவர் நினைவூட்டுவார். என்பதற்காக. சாட்சியாளர்கள் (சாட்சியம் கூற) அழைக்கப்படும்போது அவர்கள் மறுக்கக்கூடாது. கடன்தொகை சிறியதோ பெரியதோ அதனுடைய தவணையைக் குறிப்பிட்டு எழுதுவதில் நீங்கள் சோம்பி இருந்துவிடாதீர்கள். இதுவே அல்லாஹ்விடம் மிக நீதியானதாகும்; சாட்சியத்துக்கு வலுவூட்டக்கூடியதும் ஆகும். உங்களுக்கிடையே ஐயம் ஏற்படாதிருக்க உதவுவதும் ஆகும்; ஆனால் உங்களுக்கிடையே அப்போதே நடக்கும் உடனடி ரொக்க வணிகமாக இருந்தால் அதனை நீங்கள் எழுதிக்கொள்ளாமல் இருப்பது உங்கள் மீது குற்றமாகாது. ஆயினும் நீங்கள் இந்த (ரொக்க) வணிகத்தைச் செய்தால் (அதற்குச்) சாட்சியங்களை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். (தவணை கொடுக்கல் வாங்கலில்) எழுதுபவரோ சாட்சியாளரோ (தவறாக நடந்துகொள்ளுமாறு) துன்புறுத்தப்படக்கூடாது. அவ்வாறு செய்வீர்களானால் அது உங்களுக்குப் பெரும்பாவமாகும். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அல்லாஹ்தான் உங்களுக்கு (இவ்விதிகளைக்) கற்றுக்கொடுக்கிறான். அல்லாஹ் எல்லாவற்றையும் முற்றும் அறிந்தவன். [283]நீங்கள் பயணத்தில் இருக்கும்போது எழுதக்கூடிய எவரும் கிடைக்காவிட்டால் (கடன் வாங்குபவரிடமிருந்து) ஈடாக அடைமானப் பொருளைப் பெற்றுக்கொள்ளலாம். உங்களில் ஒருவர் மற்றவரை நம்பி ஒப்படைக்கிறார் எனில் நம்பப்பட்டவர் அந்த நம்பிக்கையைக் காப்பாற்றட்டும். தன் இறைவனாகிய அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்துகொள்ளட்டும். சாட்சியத்தை மறைத்து விடாதீர்கள். எவர் அதனை மறைக்கிறாரோ அவரது உள்ளம் பாவத்திற்கு உள்ளாகிவிடும். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் முற்றும் அறிந்தவன்.*

[284]வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. நீங்கள் உங்கள் உள்ளங்களில் உள்ளவற்றை வெளிப்படுத்தினாலும் மறைத்தாலும் அல்லாஹ் அது குறித்து உங்களிடம் விசாரணை செய்வான்; தான் விரும்பியவரை அவன் மன்னிப்பான். தான் விரும்பியவரைத் தண்டிப்பான். அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.

[285]இத்தூதர் தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பட்டதன் மீது நம்பிக்கை கொண்டுள்ளார். அவரை ஏற்றுக் கொண்டவர்களும் அதன்மீது நம்பிக்கை கொண்டுள்ளனர். இவர்கள் அனைவரும் அல்லாஹ்வின் மீதும் அவனது வானவர்களின் மீதும் அவனது வேதங்களின் மீதும் அவனது தூதர்களின் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளனர். "நாங்கள் அவனது தூதர்களில் எவருக்கிடையிலும் வேறுபாடு காட்டமாட்டோம்" என்றும் "(உன் வசனங்களைச்) செவிமடுத்தோம், கீழ்ப்படிந்தோம், எங்கள் இறைவா! உன்னுடைய மன்னிப்பை வேண்டுகிறோம்; நாங்கள் மீளவிருப்பதும் உன்னிடமேதான்" என்றும் கூறுகின்றனர்.

[286]அல்லாஹ் எவர் மீதும் அவரது சக்திக்கு மேல் பொறுப்பை ஏற்றுவதில்லை. அவர் ஈட்டிய (நன்மைகளின்) பயன் அவருக்கே. அவரது (தீய)செயலின் விளைவும் அவருக்கே. நம்பிக்கையாளர்கள், "இறைவா! நாங்கள் மறந்துவிட்டாலோ தவறிழைத்து விட்டாலோ எங்களைத் தண்டித்து விடாதே! இறைவா! எங்களுக்கு முன்னிருந்தோர் மீது சுமத்தியதைப் போல எங்கள் மீதும் சுமையைச் சுமத்தி விடாதே! எங்கள் இறைவா! (எங்களால்) சுமக்கமுடியாத சுமையை எங்கள்மீது சுமத்தி விடாதே! எங்களைப் பொறுத்தருள்வாயாக! எங்களை மன்னிப்பாயாக! எங்கள்மீது அருள்புரிவாயாக! நீயே எங்கள் பாதுகாவலன். எனவே மறுப்பாளர்களுக்கு எதிராக எங்களுக்கு உதவிபுரிவாயாக!" என்று இறைஞ்சுகின்றனர்.

# 3. இம்ரானின் குடும்பத்தினர் (ஆலு இம்ரான்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

1 *அலிஃப் – லாம் – மீம்.*

2 *அல்லாஹ்வாகிய அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவன் என்றென்றும் உயிர்த்திருப்பவன்; (என்றென்றும்) நிலைத்திருப்பவன்;* 3 *(நபியே!) சத்தியத்தைக் கொண்டுள்ள இவ்வேதத்தை அவன்தான் உமக்கு அருளியுள்ளான். இது தனக்கு முன்னருள்ள வேதங்களை உண்மைப்படுத்துகிறது. இதற்கு முன்னர் மக்களுக்கு வழிகாட்டியாக தவ்ராத்தையும் இன்ஜீலையும் (அவன்)அருளினான்.* 4 *(சத்தியத்தையும் அசத்தியத்தையும்) பிரித்தறிவிப்பதையும் (பிற சான்றுகளையும்) அருளினான். அல்லாஹ்வின் சான்றுகளை மறுப்போருக்கு கடும்வேதனை உண்டு. அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; தக்க தண்டனை அளிப்பவன்.* 5 *வானத்திலும் பூமியிலுமுள்ள எதுவும் அல்லாஹ்வுக்கு மறைவானதன்று.* 6 *அவன்தான் தாயின் கருவறையில் தான் விரும்பியவாறு உங்களை வடிவமைக்கிறான். அவனைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அவன் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.*

7 *(நபியே!) அவன்தான் உமக்கு வேதத்தை அருளினான். அதில் சில வசனங்கள் தெளிவாகப் பொருள் தரக்கூடியவையாக உள்ளன; அவைதாம் வேதத்தின் அடிப்படையாகும். வேறு சில வசனங்கள் (சிந்தையும் மொழியும் எட்டாத) மறைபொருள் அடங்கியவை. மனப்பிறழ்வு கொண்டவர்கள் குழப்பம் செய்ய விரும்பி அவற்றின் விளக்கத்தைத் தேடி (பூடகமானவற்றுக்குப்) பின்னால் அலைகின்றனர். ஆயினும் அவற்றின் மெய்ப்பொருளை அல்லாஹ்வைத்தவிர வேறு எவரும் அறியமாட்டார். அறிவு முதிர்ச்சி பெற்றவர்களே “நாங்கள் இதன்மீது நம்பிக்கைகொண்டோம். இவையனைத்தும் எங்கள் இறைவனிடமிருந்து வந்தவைதாம்” என்று கூறுவார்கள். அறிவுடையோர்கள்தாம் அறிவுரையை*

*ஏற்றுக்கொள்வர். [8](மேலும் அவர்கள்) "எங்கள் இறைவா! நீ எங்களை நேர்வழியில் செலுத்திய பின்பு எங்கள் உள்ளங்களைத் தடுமாறச் செய்துவிடாதே. எங்களுக்கு உன் அருளை வழங்குவாயாக! உறுதியாக நீயே பெரும் கொடையாளியாவாய்" என்றும் [9]"இறைவா! நீ மக்கள் அனைவரையும் (மறுமையாகிய) ஒருநாளில் ஒன்று திரட்டுபவன். அந்நாள் வருவதில் எத்தகைய ஐயமும் இல்லை; உறுதியாக அல்லாஹ் வாக்குறுதிக்கு எதிராகச் செயல்படமாட்டான்" (என்றும் இறைஞ்சிக் கூறுவர்.)*

*[10]உறுதியாக மறுப்பாளர்களுக்கு அவர்களுடைய செல்வங்களோ மக்க(ட்செல்வங்க)ளோ அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து தடுத்துக் காக்கமாட்டா. அவர்கள்தாம் நரகத்தின் எரிபொருள்களாவர். [11]ஃபாரோவைச் சார்ந்தவர்களுக்கும் அவர்களுக்கு முன்பு இருந்தவர்களுக்கும் நேர்ந்ததைப் போலவே இவர்களுக்கும் நேரும். அவர்கள் எம் சான்றுகளைப் பொய்யென்று கூறினர். எனவே அவர்களின் பாவங்களின் காரணமாக அவர்களை அல்லாஹ் தண்டித்தான். அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன். [12](நபியே!) மறுப்பாளர்களிடம் நீர் கூறும்: "நீங்கள் ஒடுக்கப்பட்டு நரகத்தை நோக்கி விரட்டிச் செல்லப்படுவீர்கள். அது மிகவும் கெட்ட உறைவிடமாகும்."*

*[13](பத்ருப்போரில்) மோதிக்கொண்ட இரு பிரிவினரிடம் உறுதியாக உங்களுக்கு ஒரு சான்று இருக்கிறது. அதில் ஒரு பிரிவினர் இறைவழியில் போரிட்டுக் கொண்டிருந்தனர். எதிர்ப்பிரிவினர் (ஓரிறை)மறுப்பாளர்கள். அவர்களின் கண்களில் (இறைவழிப் போராளிகளான) அவர்கள் (எண்ணிக்கையில்) இரு மடங்காகத் தெரிந்தனர். தான் விரும்பியோரை அல்லாஹ் தன் உதவியால் வலுப்படுத்துகிறான். இதில் பார்வையுடையோருக்குப் பெரும் படிப்பினை இருக்கிறது.*

*[14]பெண்கள், ஆண் பிள்ளைகள், தங்கம், வெள்ளியின் குவியல்கள், உயர்ரகக் குதிரைகள், கால்நடைகள், விளைநிலங்கள்*

ஆகியவற்றை விரும்புவது மனிதர்களுக்கு அழகாக்கப்பட்டுள்ளது.
ஆயினும் இவையனைத்தும் இவ்வுலக வாழ்வின்
இன்பங்களேயாகும். அல்லாஹ்விடம்தான் அழகிய உறைவிடம்
இருக்கிறது. [15](நபியே!) நீர் கூறும்: “இதைவிடச் சிறந்ததை
நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? இறையச்சமுடையோருக்கு
அவர்களின் இறைவனிடம் சொர்க்கச் சோலைகள் உண்டு.
அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள்
நிலையாகத் தங்கியிருப்பார்கள். அங்குத் தூய துணைகளும் இறை
உவப்பும் உண்டு. தன் அடியார்களை அல்லாஹ் கண்காணித்துக்
கொண்டிருக்கிறான்.” [16](உலக வாழ்வில்) அவர்கள், “எங்கள்
இறைவா! நாங்கள் நம்பிக்கைகொண்டோம். எனவே நீ எங்கள்
பாவங்களை மன்னித்து நரக வேதனையிலிருந்து எங்களைக்
காப்பாற்றுவாயாக!” என்று இறைஞ்சி வேண்டிக் கொண்டிருப்பர்.
[17]அவர்கள் பொறுமையாளர்களாகவும் உண்மையாளர்களாகவும்
கீழ்ப்படிந்தவர்களாகவும் (அறச்)செலவு செய்பவர்களாகவும்
பின்னிரவு நேரங்களில் பாவமன்னிப்புக் கோருபவர்களாகவும்
இருப்பர்.

[18]தன்னைத்தவிர வேறு இறைவன் இல்லை என்று அல்லாஹ்வே
சாட்சி கூறுகிறான். அவ்வாறே வானவர்களும் அறிஞர்களும்
சாட்சி கூறுகின்றனர். அவன் நீதியை நிலைநாட்டக்கூடியவன்.
அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் யாவற்றினும்
வல்லவன்; ஞானம் மிக்கவன். [19]அல்லாஹ்விடத்தில்
முழுமையாக இறைவனுக்குக் கீழ்ப்படிதல் (இஸ்லாம்) மட்டுமே
மார்க்கமாகும். வேதம் வழங்கப்பட்டவர்கள் தெளிவான அறிவு
வந்தடைந்த பின்னரும் தங்களுடைய பிடிவாதத்தினால்தான்
முரண்பட்டனர். இறைவசனங்களை மறுப்பவர்கள் அறிந்து
கொள்ளட்டும். உறுதியாக அல்லாஹ் விசாரணை செய்வதில்
விரைவானவன். [20](நபியே!) அவர்கள் உம்மிடம் தர்க்கம்
செய்தால் நீர் “நானும் என்னைப் பின்பற்றியவர்களும்
அல்லாஹ்வுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்துவிட்டோம்” என்று
கூறிவிடும். (மேலும்) வேதம் வழங்கப்பட்டவர்களிடமும்

*பாமர மக்களிடமும் "நீங்களும் இவ்வாறு கீழ்ப்படிகிறீர்களா?" என்று கேளும். அவர்கள் கீழ்ப்பணிந்து விட்டால் நேர்வழியை அடைந்துவிடுவர். அவர்கள் புறக்கணித்தால் – (இறைத்தூதை) எடுத்துரைப்பது மட்டுமே உமது பொறுப்பாகும். தன் அடியார்களை அல்லாஹ் கண்காணித்துக் கொண்டிருக்கிறான்.*
*[21]யாரெல்லாம் அல்லாஹ்வின் வசனங்களை (ஏற்க)மறுத்துத் தூதர்களை அநியாயமாகக் கொலை செய்கிறார்களோ, மேலும் நீதியை நோக்கி அழைக்கின்ற மக்களையும் கொலை செய்கிறார்களோ அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு எனும் 'நற்செய்தி'யைக் கூறிவிடுவீராக! [22]அவர்களின் செயல்கள் இம்மையிலும் மறுமையிலும் வீணாகி விட்டன. அவர்களுக்கு உதவிபுரிவோர் எவருமில்லை.*

*[23](நபியே!) வேதத்தின் ஒரு பகுதி வழங்கப்பட்ட(யூதர்களாகிய இ)வர்களை நீர் கவனிக்கவில்லையா? அவர்களிடையே தீர்ப்பு வழங்குவதற்காக இறைவேதத்தின்பால் நோக்கி அவர்கள் அழைக்கப்படுகின்றனர். ஆயினும், அவர்களில் ஒரு பிரிவினர் புறக்கணித்து விலகிச் சென்று விடுகின்றனர். [24]இதற்குக் காரணம் "(விரல்விட்டு) எண்ணத்தக்க நாட்களைத் தவிர (வேறெப்போதும்) நரகநெருப்பு எங்களைத் தீண்டாது" என்று (அவர்கள்) கூறி வந்ததேயாகும். அவர்கள் புனைந்து கொண்டவை அவர்களின் மத விவகாரத்தில் அவர்களை ஏமாற்றத்தில் ஆழ்த்தி விட்டன.*
*[25]ஐயமின்றி வரக்கூடிய (மறுமையாகிய) ஒருநாளில் நாம் அவர்களை ஒன்று சேர்க்கும்போது அவர்களின் நிலை என்னவாகும்? அந்நாளில் ஒவ்வொருவருக்கும் அவரவர் செயலுக்கான கூலி முழுமையாக வழங்கப்படும். அவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள்.*

*[26](நபியே!) நீர் (இறைஞ்சிக்) கூறுவீராக! "அல்லாஹ்வே! ஆட்சியின் முழு உரிமையாளனே! நீ விரும்பியோருக்கு ஆட்சியை வழங்குகிறாய். நீ விரும்பியவரிடமிருந்து ஆட்சியைப் பறித்து விடுகிறாய். நீ விரும்பியோரைக் கண்ணியப்படுத்துகிறாய். நீ விரும்பியோரை இழிவுபடுத்துகிறாய். நன்மைகள் அனைத்தும்*

*உன் வசமே உள்ளன. உறுதியாக நீ எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன். [27]நீ இரவைப் பகலில் புகுத்துகிறாய். பகலை இரவில் புகுத்துகிறாய். நீ உயிரற்றதிலிருந்து உயிருள்ளதை வெளிப்படுத்துகின்றாய்; உயிருள்ளதிலிருந்து உயிரற்றதை வெளிப்படுத்துகின்றாய்; நீ விரும்பியோருக்குக் கணக்கின்றி வழங்குகிறாய்."*

*[28]நம்பிக்கையாளர்கள் நம்பிக்கையாளர்களை விடுத்து மறுப்பாளர்களை உற்ற நண்பர்களாக்கிக் கொள்ளவேண்டாம். அவர்களிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டிய நிலையில் அன்றி, அவ்வாறு நட்புக்கொள்பவருக்கு அல்லாஹ்வுடன் எந்தத் தொடர்பும் இல்லை. அல்லாஹ் தன்னைப்பற்றி உங்களை எச்சரிக்கிறான். அனைவரும் அல்லாஹ்விடமே திரும்பிச் செல்ல வேண்டியுள்ளது.* [29](நபியே!) நீர் கூறும்: "உங்கள் நெஞ்சங்களில் உள்ளவற்றை நீங்கள் மறைத்தாலும் அல்லது வெளிப்படுத்தினாலும் அவற்றை அல்லாஹ் நன்கறிவான். வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றை அவன் அறிகிறான். அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்." [30]ஒவ்வொரு மனிதனும் தான் செய்த நன்மைகளையும் தீமைகளையும் தன் கண்ணெதிரில் காணும் நாளில் தனக்கும் அந்நாளுக்கும் இடையில் மிகத் தொலைவான இடைவெளி இருக்கக்கூடாதா என்று துடிப்பான். அல்லாஹ் தன்னைப்பற்றி உங்களை எச்சரிக்கிறான். தன் அடியார்களின் மீது அல்லாஹ் மிகுந்த பரிவுடையவன். [31](நபியே!) நீர் கூறும்: "நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான். உங்கள் பாவங்களையும் மன்னிப்பான்." அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன். [32]"அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் கீழ்ப்படியுங்கள்" என்று (நபியே!) நீர் கூறும்.*

---

***ஒரு நம்பிக்கையாளர் முஸ்லிம்கள் – முஸ்லிம் அல்லாதவர்கள் என்ற பாகுபாடின்றி நியாயமாகவும் முறையான மரியாதையுடனும் அனைவரையும் நடத்த வேண்டும். ஆனால் இஸ்லாத்திற்கு எதிராகப் போர் புரிபவர்களுடன் நட்பு பாராட்டக் கூடாது.**

அவர்கள் புறக்கணித்தால் (அறிந்துகொள்ளுங்கள்!) அல்லாஹ் மறுப்பாளர்களை நேசிப்பதில்லை.

[33]உறுதியாக அல்லாஹ் ஆதமையும் நோவாவையும் ஆப்ரஹாமின் வழித்தோன்றல்களையும் இம்ரானின் வழித்தோன்றல்களையும் உலகத்தார் அனைவரையும்விட
மேலாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டான். [34]இவர்களுள் ஒருவர்
மற்றவரின் வழித்தோன்றலே ஆவர். அல்லாஹ் செவியுறுபவன்;
முற்றும் அறிந்தவன். [35]இம்ரானின் மனைவி, “என் இறைவா!
என் வயிற்றில் உள்ளதை உனக்காக அர்ப்பணிக்க நான் நேர்ச்சை செய்துகொண்டேன். எனவே நீ என்னிடமிருந்து (அதை) ஏற்றுக்கொள்வாயாக! உறுதியாக நீ செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்” என்று கூறியதை (நபியே! நீர்) எண்ணிப்
பார்ப்பீராக! [36]அவர் (இம்ரானின் மனைவி குழந்தையைப்)
பெற்றெடுத்தபோது “என் இறைவா! நான் பெண் குழந்தையைப் பெற்றெடுத்துவிட்டேனே” என்று கூறினார். அவர் எ(த்தகைய மேன்மையான)தைப் பெற்றெடுத்தார் என்பதை அல்லாஹ்தான் நன்கறிவான். “ஆண் குழந்தை பெண் குழந்தையைப் போன்றதன்று. நான் அதற்கு மர்யம் எனப் பெயரிட்டுள்ளேன். நான் அக்குழந்தைக்கும் அதன் வழித்தோன்றல்களுக்கும் விரட்டப்பட்ட சாத்தானிடமிருந்து உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்”
(என இறைஞ்சினார்). [37]ஆகவே இறைவன் அவரை (குழந்தை
மர்யத்தை) நல்ல முறையில் ஏற்றுக்கொண்டான். அவரைச் சிறந்த முறையில் வளரச் செய்தான். அவருக்கு ஸகரிய்யாவை பொறுப்பாளராக்கினான். மர்யத்தின் அறைக்கு ஸகரிய்யா செல்லும் போதெல்லாம் அங்கே ஏதேனும் உணவை அவரிடம் காண்பார். “மர்யமே, இது உனக்கு எங்கிருந்து கிடைக்கிறது?” என்று கேட்பார். அதற்கு மர்யம், “இது அல்லாஹ்விடமிருந்து வந்ததாகும். தான் விரும்பியவருக்கு அல்லாஹ் கணக்கின்றி வழங்குகின்றான்” என்று கூறுவார்.

38அப்போது ஸகரிய்யா தம் இறைவனிடம், “இறைவா!
எனக்கு உன்னிடமிருந்து ஒரு தூய வழித்தோன்றலை
அளிப்பாயாக! உறுதியாக நீ இறைஞ்சுதலைச் செவியுறுபவன்”
என்று வேண்டினார். 39அவர் தம் தொழுகை மாடத்தில் நின்று
தொழுது கொண்டிருந்தபோது வானவர்கள் அவரை அழைத்து,
“அல்லாஹ் உமக்கு(ப் பிறக்கவிருக்கும் யஹ்யா) ஜான் (எனும்
குழந்தை) குறித்து நற்செய்தி கூறுகிறான். அவர் அல்லாஹ்வின்
வார்த்தை(ஆகிய இயேசு நபி)யை உண்மைப்படுத்தக்
கூடியவராகவும் தலைவராகவும் விளங்குவார். மனக்கட்டுப்பாடு
கொண்ட(தூய)வராகவும் நல்லோர்களிலுள்ள தூதராகவும்
இருப்பார்” என்று கூறினர். 40(ஸகரிய்யா இறைவனிடம்)
“என் இறைவா! எனக்கு எவ்வாறு மகன் பிறப்பான்? நானோ
முதியவனாகி விட்டேன்; எனது மனைவியோ மலடியாக
இருக்கிறாள்” என்று வினவினார். அதற்கு அவன், “தான்
விரும்பியதை இவ்வாறே அல்லாஹ் செய்துவிடுகிறான்” என்று
கூறினான். 41அதற்கு அவர், “என் இறைவா! எனக்கு ஏதேனும்
ஓர் அடையாளத்தை வழங்குவாயாக! என்று வேண்டினார்.
(அதற்கு) அவன், “நீர் மூன்று நாட்கள்வரை மக்களுடன்
சைகை மூலமாகவே அன்றி (வாயால்) பேசமாட்டீர் என்பதே
அதன் அடையாளமாகும். உம் இறைவனை மிகமிக அதிகமாக
நினைவுகூர்வீராக! காலையிலும் மாலையிலும் அவனது புகழைப்
பாடுவீராக!” என்று கூறினான்.

42வானவர்கள் (மர்யத்திடம் வந்து), “மர்யமே! உம்மை
அல்லாஹ் தேர்ந்தெடுத்துத் தூய்மையாக்கியுள்ளான். உலகிலுள்ள
பெண்கள் அனைவரையும்விட உம்மைத் தேர்ந்தெடுத்துச்
சிறப்பித்துள்ளான். 43மர்யமே! உமது இறைவனுக்குக் கீழ்ப்படிந்து
தலைவணங்குவீராக! குனிந்து தொழுவோருடன் சேர்ந்து நீரும்
குனிந்து தொழுவீராக!” என்று கூறினர். 44(நபியே!) இவை
மறைவான செய்திகள் ஆகும். இவற்றை நாம்தாம் உமக்கு
அறிவிக்கிறோம். மர்யத்துக்குப் பொறுப்பேற்பவர் யார் என்பதை
முடிவு செய்ய (அதற்காகப் போட்டியிட்ட) அவர்கள் தங்களது

*எழுதுகோல்களை ஆற்றில் எறிந்தபோது நீர் அவர்களுடன் இருக்கவில்லை. அவர்கள் தங்களுக்கிடையே பிணங்கிக் கொண்டிருந்தபோதும் நீர் அவர்களுடன் இருக்கவில்லை.*

[45]*வானவர்கள், "மர்யமே! தன்னிடமிருந்து அல்லாஹ் தனது
வார்த்தையின் மூலம் உமக்கு(க் குழந்தை பிறக்கும் என)நற்செய்தி
கூறுகிறான். அவரின் பெயர் மஸீஹ் மர்யத்தின் மைந்தர்
இயேசு என்பதாகும். அவர் இம்மையிலும் மறுமையிலும்
உயர் மதிப்பிற்குரியவராகவும் அல்லாஹ்வுக்கு நெருக்கமான
அடியாராகவும் இருப்பார்.* [46]*அவர் தொட்டில் பருவத்தில்
இருக்கும்போதும் பக்குவமான வயதை அடைந்த பின்பும்
மக்களிடம் பேசுவார்; நல்லோர்களில் ஒருவராகவும் இருப்பார்"
என்று கூறினர்.* [47]*அவர், "என் இறைவா! என்னை எந்த ஆணும்
தீண்டாதிருக்க எனக்கு எவ்வாறு குழந்தை பிறக்கும்?" என்று
வினவினார். அவன், "அப்படித்தான். தான் விரும்பியதை
அல்லாஹ் படைக்கிறான். அவன் ஒன்றை தீர்மானித்து
விட்டால் 'ஆகு' என்றுதான் கூறுவான். அது ஆகிவிடும்"
என்றான்.* [48]*"அல்லாஹ் அவருக்கு வேதத்தையும் ஞானத்தையும்
தவ்ராத்தையும் இன்ஜீலையும் கற்றுக் கொடுப்பான்.*
[49]*இஸ்ராயீலின் மக்களுக்கு(க் கீழ்க்காணும் செய்தியுடன்
அவரை)த் தூதராகவும் ஆக்குவான் (என்றும் அல்லாஹ்
கூறினான். இயேசு பிறந்து வளர்ந்தபின்) அவர் (அம்மக்களை
நோக்கி) "நான் இறைவனின் சான்றை உங்களிடம் கொண்டு
வந்துள்ளேன்; நான் உங்களுக்காகக் களிமண்ணால் பறவையின்
உருவம் செய்து அதில் ஊதுவேன்; அது இறைக்கட்டளையால்
உண்மையான பறவையாகிவிடும்; நான் இறைக்கட்டளையால்
பிறவியிலேயே பார்வையற்றவரையும் தொழுநோயாளியையும்
குணப்படுத்துவேன்; இறந்துபோனவர்களையும் உயிர்ப்பிப்பேன்.
நீங்கள் உண்பவற்றையும் உங்கள் வீடுகளில் சேமித்து
வைப்பவற்றையும் நான் உங்களுக்குத் தெரிவிப்பேன். நீங்கள்
நம்பிக்கையாளர்களாக இருந்தால் உறுதியாக இவற்றில்*

*உங்களுக்குச் சான்று உள்ளது” [50]நான் எனக்கு முன்னுள்ள தவ்ராத்தை உண்மைப்படுத்த(க்கூடியவனாக)வும் உங்கள்மீது தடை செய்யப்பட்டுள்ள சில பொருள்களை உங்களுக்கு அனுமதிக்கப்பட்டதாக ஆக்குவதற்கும் வந்துள்ளேன். உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்குச் சான்றினைக் கொண்டு வந்துள்ளேன். எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; எனக்குக் கீழ்ப்படியுங்கள். [51]உறுதியாக அல்லாஹ்தான் என் இறைவனும் உங்கள் இறைவனுமாவான். எனவே அவனையே வணங்குங்கள். இதுவே நேர்வழியாகும்” என்று அவர் கூறினார்.*

*[52](எனினும்) இயேசு அவர்களின் மறுப்பைக் கண்டபோது, “இறைவழியில் எனக்கு உதவிசெய்வோர் யார்?” என்று வினவினார். அவரின் சீடர்கள், “நாங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாக இருக்கிறோம். நாங்கள் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டுள்ளோம். நாங்கள் கீழ்ப்படிந்தவர்களாக இருக்கிறோம் என்பதற்கு நீங்களே சாட்சியாக இருங்கள்” என்றனர். [53]“எங்கள் இறைவா! நீ அருளியதன் மீது நம்பிக்கைகொண்டு தூதரையும் பின்பற்றினோம். எனவே சாட்சியளிப்போருடன் எங்களையும் நீ சேர்த்துப் பதிவு செய்வாயாக!” என்றும் கூறினர். [54](இயேசுவை மறுத்த) அவர்கள் (அவரைக் கொல்லச்) சூழ்ச்சி செய்தனர். அல்லாஹ்வும் (அவர்களுக்கு எதிராகச்) சூழ்ச்சி செய்தான். சூழ்ச்சி செய்வோரில் அல்லாஹ்வே மிகச் சிறந்தவன். [55]“இயேசுவே! நான் உம்மைக் கைப்பற்றி என் பக்கம் உயர்த்திக் கொள்வேன். மறுப்பாளர்களிடமிருந்து உம்மைத் தூய்மைப்படுத்துவேன். மறுமை நாள்வரை உம்மைப் பின்பற்றுவோரை மறுப்பாளர்களைவிட மேலோங்கச் செய்வேன். இறுதியில் நீங்கள் அனைவரும் என்னிடமே திரும்ப வேண்டியுள்ளது. அப்போது நீங்கள் முரண்பட்டுக் கொண்டிருந்தவற்றில் நான் உங்களிடையே தீர்ப்பளிப்பேன்” என்று அல்லாஹ் கூறியதை (நபியே! நீர்) நினைவு கூர்வீராக. [56]“மறுப்பாளர்களுக்கு இம்மையிலும்*

*மறுமையிலும் கடுந்தண்டனை அளிப்பேன். அவர்களுக்கு உதவிசெய்வோர் யாரும் இருக்கமாட்டார்கள்” என்றும் அல்லாஹ் கூறினான். [57]நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தோருக்கு அவர்களின் கூலியை அல்லாஹ் முழுமையாக வழங்கிவிடுவான். தீவினைபுரிவோரை அல்லாஹ் நேசிக்கமாட்டான். [58](நபியே!) நாம் எடுத்துரைக்கும் இவை (இறை)வசனங்களும் ஞானம் நிறைந்த அறிவுரைகளுமாகும்.*

*[59]உறுதியாக அல்லாஹ்வின் பார்வையில் (தந்தையின்றிப் படைக்கப்பட்ட) இயேசு ஆதமைப் போன்றவராவார். அல்லாஹ் (ஆதமாகிய) அவரை மண்ணால் படைத்தான். பின்னர் ‘ஆகுக’ என்று கூறினான். அவர் ஆகிவிட்டார். [60](நபியே!) இது உம் இறைவனிடமிருந்து வந்துள்ள சத்தியமாகும். எனவே நீர் ஐயம் கொள்வோரில் ஒருவராகி விடாதீர். [61](நபியே!) இது குறித்துத் தெளிவான அறிவு உம்மிடம் வந்த பின்னரும் யாரேனும் இது தொடர்பாக உம்மிடம் தர்க்கம் செய்தால் அவரிடம் நீர் கூறிவிடும் : “வாருங்கள், எங்கள் மக்களையும் உங்கள் மக்களையும் எங்கள் பெண்களையும் உங்கள் பெண்களையும் அழைத்து இன்னும் எங்களையும் உங்களையும் சேர்த்து ‘பொய்யர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்’ என்று நாம் ஒன்றுசேர்ந்து இறைஞ்சி வேண்டுவோம்”. [62]உறுதியாக இதுதான் உண்மையான வரலாறாகும். அல்லாஹ்வைத்தவிர வேறு இறைவன் இல்லை. அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன். [63]அவர்கள் புறக்கணித்தால் – அல்லாஹ் குழப்பவாதிகளை நன்கறிந்தவன்.*

*[64](நபியே! மேலும்) நீர் கூறும்: “வேதமுடையோரே! அல்லாஹ்வைத்தவிர வேறு யாரையும் நாம் வணங்கக் கூடாது; அவனுக்கு எதனையும் இணையாக்கக் கூடாது; நம்முள் எவரும் அல்லாஹ்வைத் தவிர வேறு எவரையும் இறைவனாகக் கொள்ளக்கூடாது என்ற எங்களுக்கும் உங்களுக்கும் பொதுவான கோட்பாட்டுக்கு வாருங்கள்; அவர்கள் புறக்கணித்தால் “நாங்கள் இறைவனுக்குக் கீழ்ப்படிந்தவர்களாக இருக்கிறோம்*

*என்பதற்கு நீங்களே சாட்சியாக இருங்கள்” என்று (அவர்களிடம்) கூறிவிடுங்கள்.*

[65]வேதமுடையோரே! *நீங்கள் ஆப்ரஹாமைப் பற்றி ஏன்*
*தர்க்கம் புரிகிறீர்கள்? அவருக்குப் பின்னர்த்தான் தவ்ராத்தும்*
*இன்ஜீலும் அருளப்பட்டன. நீங்கள் புரிந்துகொள்ள*
*மாட்டீர்களா?* [66]*நீங்கள் அறிந்த விஷயத்தில்(கூட, வீணாகத்)*
*தர்க்கம் புரிந்து கொண்டிருந்தீர்கள். இப்போது நீங்கள் அறியாத*
*(விஷயத்)தைப் பற்றி ஏன் தர்க்கம் புரிகிறீர்கள்? அல்லாஹ்வே*
*அறிவான். நீங்கள் அறியமாட்டீர்கள்.* [67]*ஆப்ரஹாம்*
*யூதராகவோ கிறிஸ்தவராகவோ இருந்ததில்லை. மாறாக*
*அவர் நேர்மையாளராகவும் இறைவனுக்கு முழுமையாகக்*
*கீழ்ப்படிந்தவராகவும் இருந்தார். இணைவைப்பாளர்களில்*
*ஒருவராக அவர் இருந்ததில்லை.* [68]*மனிதர்களில் ஆப்ரஹாமுக்கு*
*மிகவும் நெருங்கியவர்கள் அவரைப் பின்பற்றுபவர்களும் இந்தத்*
*தூதரும் இவர்மீது நம்பிக்கை கொண்டவர்களுமே ஆவர்.*
*அல்லாஹ் நம்பிக்கையாளர்களின் பாதுகாவலனாக இருக்கிறான்.*
[69]*(ஓரிறை நம்பிக்கையாளர்களே!) வேதமுடையோரில் ஒரு*
*சாரார் எப்படியாவது உங்களை வழிகெடுத்துவிட வேண்டும்*
*என்று விரும்புகிறார்கள். ஆனால் அவர்கள் தம்மைத்தாமே*
*வழிகெடுத்துக் கொள்கிறார்கள். ஆயினும் (இதை) அவர்கள்*
*உணர்ந்து கொள்வதில்லை.* [70]*வேதமுடையோரே! நீங்கள்*
*சாட்சியாக இருந்துகொண்டே அல்லாஹ்வின் வசனங்ககளை ஏன்*
*மறுக்கிறீர்கள்?* [71]*வேதமுடையோரே! நீங்கள் ஏன் உண்மையைப்*
*பொய்யுடன் கலக்கிறீர்கள்? அறிந்துகொண்டே ஏன் உண்மையை*
*மறைக்கிறீர்கள்?*

[72]*வேதமுடையோரில் ஒரு சாரார், (தங்களுக்குள்)*
*“நம்பிக்கையாளர்களுக்கு அருளப்பட்டதன் மீது காலையில்*
*நம்பிக்கைகொண்டு மாலையில் மறுத்துவிடுங்கள். இதனால்*
*அவர்கள் (குழப்பத்தில்) தம் நம்பிக்கையைவிட்டுத் திரும்பிவிடக்*
*கூடும்.* [73]*உங்கள் மார்க்கத்தைப் பின்பற்றுவோரைத்தவிர*
*வேறு யாரையும் நம்பாதீர்கள்” என்று கூறிக்கொள்கிறார்கள்.*

*(நபியே!) "அல்லாஹ் காட்டியதே நேர்வழியாகும்" என்று நீர் கூறும். அவர்கள் இவ்வாறு கூறுவதற்கெல்லாம் காரணம், அவர்கள் (தங்களுக்குள்) "உங்களுக்குக் கொடுக்கப்பட்டதைப் போல மற்றவர்களுக்கும் ஏன் கொடுக்கப்பட்டது? அல்லது உங்கள் இறைவனிடம் அவர்கள் உங்களைவிட மேலோங்கி விட்டார்களா?" என்று பேசிக் கொள்வதேயாகும். (நபியே!) நீர் கூறும்: "சிறப்பு அனைத்தும் அல்லாஹ்வின் கையிலேயே உள்ளன. தான் விரும்பியவருக்கு அதனை அவன் வழங்குகிறான். அல்லாஹ் தாராளமானவன்; முற்றும் அறிந்தவன்.*
*[74]அவன் தான் விரும்பியோரைத் தன் அருள் வழங்கத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். அல்லாஹ் மாபெரும் அருளாளன் ஆவான்.*
*[75]வேதமுடையோர்களில் சிலர் இருக்கின்றனர். அவர்களிடம் (நபியே! நீர்) ஒரு பொற்குவியலையே ஒப்படைத்தாலும் (கேட்கும்போது) அதனை அவர்கள் (குறைவின்றித்) திரும்பச் செலுத்தி விடுவார்கள். அவர்களில் (வேறு) சிலர் இருக்கின்றனர். அவர்களிடம் நீர் ஒரேயொரு (வெள்ளி) நாணயத்தை நம்பி ஒப்படைத்தால்கூட, அதற்காக நீர் விடாப்பிடியாக நின்றாலொழிய அதனை அவர்கள் திருப்பித் தரமாட்டார்கள். இதற்குக் காரணம் "(வேதமுடையோர் அல்லாத) எழுதப்படிக்கத் தெரியாதோர் விஷயத்தில் நாங்கள் குற்றஞ்சாட்டப்பட மாட்டோம்" என்று அவர்கள் கூறிவந்ததே ஆகும். அவர்கள் அறிந்துகொண்டே (தங்களைக் குறை காணமாட்டான் என) அல்லாஹ்வின் மீது பொய்யுரைக்கின்றனர்.*
*[76]மாறாக எவர் தம் வாக்குறுதியை நிறைவேற்றி இறைவனுக்கு அஞ்சி நடக்கிறாரோ அத்தகைய இறையச்சமுடையோரை உறுதியாக அல்லாஹ் நேசிக்கிறான்.*
*[77]அல்லாஹ்விடம் செய்த உடன்படிக்கையையும் தங்கள் சத்தியங்களையும் அற்ப ஊதியத்திற்கு விற்றுவிடுபவர்களுக்கு மறுமையின் நன்மையில் எந்தப் பங்கும் இல்லை. மறுமை நாளில் அல்லாஹ் அவர்களுடன் பேசவும் மாட்டான்; அவர்களைப் பார்க்கவும் மாட்டான்; அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.*
*[78]அவர்களில் இப்படியும் சிலர் இருக்கின்றனர். அவர்கள் கூறுவது*

வேதத்தில் உள்ளதென நீங்கள் எண்ணவேண்டும் என்பதற்காக(ச் சிலவற்றைச் சேர்த்துத்) திரித்துக் கூறுகின்றனர். உண்மையில் அவர்கள் கூறுபவை வேதத்திலுள்ளவை அல்ல. இவை அல்லாஹ்விடமிருந்து வந்தவை என்று கூறுகின்றனர். உண்மையில் அவை அல்லாஹ்விடமிருந்து வந்தவை அல்ல. அவர்கள் அறிந்துகொண்டே அல்லாஹ்வின் மீது பொய்யுரைக்கின்றனர்.

[79]ஒரு மனிதருக்கு அல்லாஹ் வேதத்தையும் ஞானத்தையும்
தூதுத்துவத்தையும் வழங்கியிருக்க, அவர் மக்களிடம் "நீங்கள்
அல்லாஹ்வைவிடுத்து என் அடியார்களாகி விடுங்கள்" என்று
கூறுவது அனுமதிக்கப்பட்டதன்று. மாறாக "நீங்கள் வேதத்தை
மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதனாலும் நீங்கள் அதனைக்
கற்பதனாலும் இறைவனைச் சார்ந்தவர்களாகி விடுங்கள்" என்றே
அவர் கூறுவார். [80]"நீங்கள் வானவர்களையும் தூதர்களையும்
இறைவனாக்கிக் கொள்ளுங்கள்" என்றும் அவர் உங்களுக்குக்
கட்டளையிடமாட்டார். நீங்கள் இறைவன் ஒருவனுக்கே முற்றிலும்
கீழ்ப்படிந்த பிறகு அவனை மறுக்கும்படி உங்களுக்கு அவர்
கட்டளையிடுவாரா என்ன? [81](வேதமுடையோரே!) எண்ணிப்
பாருங்கள்! அல்லாஹ்தன் தூதர்களிடம் இவ்வாறு உடன்படிக்கை
செய்துகொண்டான்: "நான் உங்களுக்கு வேதத்தையும்
ஞானத்தையும் வழங்குகிறேன். உங்களிடமுள்ளவற்றை
(முன்னறிவிப்புகளை) உண்மைப்படுத்தக்கூடிய ஒரு தூதர் (புதிதாக)
வரும்போது அவர்மீது நீங்கள் நம்பிக்கைகொண்டு அவருக்கு
உதவிபுரிய வேண்டும். இதை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா? இந்த
அடிப்படையில் நான் உங்களுக்கு வழங்கிய பொறுப்பை ஏற்றுக்
கொள்கிறீர்களா?" என்று இறைவன் கேட்டான். "நாங்கள் ஏற்றுக்
கொண்டோம்" என்று அவர்கள் கூறினர். "நீங்கள் சாட்சியாக
இருங்கள். நானும் உங்களுடன் சாட்சியாக இருக்கிறேன்" என்று
அவன் கூறினான். [82]எனவே இதன் பின்னரும் அதனைவிட்டுப்
பின்வாங்கிவிடுபவர்களே கீழ்ப்படியாதவர்கள். [83]இவர்கள்

*இறைமார்க்கம் அல்லாத வேறொன்றையா விரும்புகிறார்கள்? உண்மையில் வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவனது கட்டளைப்படியே செயல்படுகின்றன. அனைத்தும் அவனிடமே திரும்பக்கொண்டு வரப்படும்.*

[84]*(நபியே!) "நாங்கள் அல்லாஹ்வின் மீதும் எங்களுக்கு அருளப்பட்டதன் மீதும் ஆப்ரஹாம், இஸ்மவேல், ஈசாக், ஜேக்கப் மற்றும் ஜேக்கபின் வழித்தோன்றல்கள் ஆகியோருக்கு அருளப்பட்டதன் மீதும் மோசே, இயேசு மற்றும் ஏனைய தூதர்களுக்கு இறைவனிடமிருந்து அருளப்பட்டவற்றின் மீதும் நம்பிக்கை கொண்டோம். அவர்களுக்கிடையே நாங்கள் வேறுபாடும் காட்டமாட்டோம். நாங்கள் இறைவனுக்கே கீழ்ப்படிந்து நடப்பவர்களாக இருக்கிறோம்" என்று கூறும்.*
[85]*எவர் இஸ்லாத்தைத்தவிர (இறைவனுக்குக் கீழ்ப்படிதல்) வேறொரு மார்க்கத்தை விரும்புகிறாரோ அவரிடமிருந்து ஒருபோதும் அது ஏற்கப்படாது. மறுமையில் அவர் இழப்படைந்தவர்களுடன் இருப்பார்.* [86]*நம்பிக்கை கொண்ட பிறகு மறுத்துவிட்ட மக்களுக்கு அல்லாஹ் எப்படி நேர்வழி காட்டுவான்? (இந்தத்)தூதர் உண்மையானவர்தான் என்று அவர்கள் சாட்சியம் அளித்திருந்தனர். மேலும் அவர்களிடம் (அதற்கான) தெளிவான சான்றுகள் வந்திருந்தன. அல்லாஹ் இத்தகைய தீவினையாளர்களுக்கு நேர்வழி காட்டுவதில்லை.*
[87]*இத்தகையவர்களுக்கு அல்லாஹ்வும் வானவர்கள், மனிதர்கள் ஆகியோர்களும் இடுகின்ற சாபம்தான் தக்க தண்டனையாகும்.*
[88]*அ(ச் சாபத்)திலேயே அவர்கள் என்றென்றும் இருப்பார்கள். அவர்களின் வேதனை குறைக்கப்படாது. அவர்களுக்குக் கால நீட்டிப்பு அளிக்கப்படவும் மாட்டாது.* [89]*ஆனால் இதன் பின்னர் பாவமன்னிப்புக் கோரித் தங்களைச் சீர்திருத்திக் கொண்டவர்கள் யாரோ அவர்களைத் தவிர. அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.* [90]*உறுதியாக நம்பிக்கைகொண்டபின் மறுத்து அம்மறுப்பை மிகுதிப்படுத்திக்கொண்டோரின் பாவமன்னிப்புக் கோரிக்கை ஒருபோதும் ஏற்கப்படாது.*

அவர்கள்தாம் வழிகேடர்கள். [91]உறுதியாக (ஓரிறையை) மறுத்து
அந்நிலையிலேயே இறந்தும் போனவர்கள் பூமி நிறையத் தங்கத்தை
ஈடாகக் கொடுத்தாலும் அது ஏற்கப்படாது. அவர்களுக்குத்
துன்புறுத்தும் வேதனையுண்டு. அவர்களுக்கு உதவி புரிபவர்
எவரும் இருக்கமாட்டார்.

[92]உங்களுக்குப் பிடித்தவற்றிலிருந்து (அறச்)செலவு
செய்யாதவரை நீங்கள் நன்மையின் உயர்நிலையை அடைய
முடியாது. நீங்கள் எப்பொருளைச் செலவு செய்தாலும் இறைவன்
அதனை நன்கறிவான்.

[93]தவ்ராத் அருளப்படுவதற்கு முன்னால், இஸ்ராயீல்
(ஜேக்கப்) தமக்குத்தாமே தடை செய்துகொண்டதைத் தவிர மற்ற
அனைத்து உணவுப் பொருள்களும் இஸ்ராயீலின் மக்களுக்கு
அனுமதிக்கப்பட்டிருந்தன. (இதற்கு எதிராகப் பேசுவோரிடம்)
“நீங்கள் உண்மையாளர்களாயின் தவ்ராத்தைக் கொண்டு வந்து
வாசித்துக் காட்டுங்கள்” என்று நபியே நீர் கூறுவீராக! [94]இதன்
பின்னரும் இறைவனின் மீது பொய்யைப் புனைபவர்கள்தாம்
தீவினையாளர்கள்.

[95](நபியே!) நீர் கூறும்: “அல்லாஹ் உண்மையே கூறினான்.
எனவே முழுமையான நம்பிக்கை கொண்ட ஆப்ரஹாமின்
வழிமுறையைப் பின்பற்றுங்கள். அவர் இணைவைப்பவராக
இருக்கவில்லை.” [96]உறுதியாக மக்களுக்காக அமைக்கப்பட்ட
முதல் இறையில்லம் மக்காவிலுள்ளதுதான். அது பேரருள்
கொண்டதாகவும் உலகம் அனைத்திற்கும் வழிகாட்டும் மையமாகவும்
உள்ளது. [97]அங்குத் தெளிவான சான்றுகளும் ஆப்ரஹாம்
நின்று வழிபட்ட இடமும் உள்ளன. அங்கு நுழைந்து விட்டவர்
பாதுகாப்புப் பெற்றவராகிறார். மக்களில் இறையில்லத்திற்கு
(கஅபா) சென்றுவரச் சக்தி பெற்றவர் அல்லாஹ்வுக்காக அந்த
இல்லத்திற்கு ஹஜ் பயணம் செல்வது கடமையாகும். யாரேனும்
இதனை மறுத்தால் (அவர் அறிந்துகொள்ளட்டும்) அல்லாஹ்
உலகத்தார் அனைவரிடமிருந்தும் எந்தத் தேவையுமற்றவன்.

98*(நபியே!) நீர் கூறும்: “வேதமுடையோரே! நீங்கள்
அல்லாஹ்வின் வசனங்களை ஏன் மறுக்கிறீர்கள்? நீங்கள்
செய்வதையெல்லாம் அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான்.
99நீர் கூறும்: “வேதமுடையோரே! நம்பிக்கையாளர்களை ஏன்
இறைவழியிலிருந்து தடுக்கிறீர்கள்? (அது நேரானது என்பதற்கு)
நீங்கள் சாட்சியாளர்களாக இருந்துகொண்டே அதைக்
கோணலாகக் காட்ட ஏன் முனைகிறீர்கள்? அல்லாஹ் உங்கள்
செயல்களைக் கவனிக்காமலில்லை”*

100*நம்பிக்கையாளர்களே! வேதம் வழங்கப்பட்டோரில் ஒரு
பிரிவினரின் கருத்துக்களை நீங்கள் ஏற்றுக் கொண்டீர்களானால்
நீங்கள் நம்பிக்கைகொண்ட பின்னரும் உங்களை அவர்கள்
மறுப்பாளர்களாக்கி விடுவார்கள். 101அல்லாஹ்வின் தூதர்
உங்களுக்கிடையில் இருக்க, இறை வசனங்கள் உங்களுக்கு
எடுத்துரைக்கப்படும் நிலையில் நீங்கள் எவ்வாறு அல்லாஹ்வை
மறுக்கமுடியும்? எவர் அல்லாஹ்வை உறுதியாகப் பற்றிக்
கொள்கிறாரோ அவர் நேர்வழியை அடைந்துவிட்டார்.
102நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சவேண்டிய
முறைப்படி அஞ்சுங்கள். நீங்கள் கீழ்ப்படிந்தவர்களாக (இருக்கும்
நிலையில்) அன்றி இறந்துவிடாதீர்கள். 103நீங்கள் அனைவரும்
ஒன்று சேர்ந்து அல்லாஹ்வின் கயிற்றை(குர்ஆனை)ப்
பற்றிக்கொள்ளுங்கள். பிரிந்து விடாதீர்கள். அல்லாஹ் உங்கள் மீது
பொழிந்த அருட்கொடையை நினைவுகூருங்கள். (முன்னர்) நீங்கள்
ஒருவருக்கொருவர் பகைவர்களாக இருந்தீர்கள். அவன்தான்
உங்கள் உள்ளங்களுக்கிடையில் இணக்கத்தை ஏற்படுத்தினான்.
அவனது அருளால் நீங்கள் சகோதரர்கள் ஆகி விட்டீர்கள்.
நீங்கள் நரகப் படுகுழியின் விளிம்பில் நின்று கொண்டிருந்தீர்கள்.
அவன்தான் உங்களை அதிலிருந்து காப்பாற்றினான். இவ்வாறு
நீங்கள் நேர்வழி பெறும்பொருட்டுத் தன் சான்றுகளை அல்லாஹ்
தெளிவுபடுத்துகிறான்.*

*[104](மக்களை) நன்மையின்பால் அழைக்கக்கூடிய ஒரு கூட்டம்*
*உங்களிடையே கண்டிப்பாக இருக்கவேண்டும். அவர்கள்*
*நன்மை புரியும்படித் தூண்டவேண்டும்; தீமையிலிருந்து*
*தடுக்கவேண்டும். இத்தகைய கூட்டத்தினர்தாம் வெற்றியாளர்கள்.*
*[105](நம்பிக்கையாளர்களே!) தங்களிடம் தெளிவான கட்டளைகள்*
*வந்தபின்னரும் முரண்பட்டுப் பல பிரிவினர்களாகப்*
*பிரிந்து விட்டவர்களைப் போல நீங்களும் ஆகிவிடாதீர்கள்.*
*அவர்களுக்குக் கடும் வேதனை உண்டு. [106](மறுமையாகிய)*
*அந்நாளில் சில முகங்கள் ஒளிரும்; சில முகங்கள் கருத்திருக்கும்.*
*எவருடைய முகங்கள் கருத்திருக்குமோ அவர்களிடம், “நீங்கள்*
*நம்பிக்கைகொண்ட பின்னர் மறுப்பாளராகிவிட்டீர்கள்*
*அல்லவா? எனவே உங்கள் மறுப்பினால் வேதனையை*
*அனுபவியுங்கள்” என்று கூறப்படும். [107]எவருடைய முகங்கள்*
*ஒளிர்ந்து கொண்டிருக்குமோ அவர்கள் இறையருளில்*
*இருப்பார்கள். அதில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள்.*
*[108](நபியே!) இவை இறைவசனங்களாகும். சத்தியம் அடங்கியுள்ள*
*இவற்றை நாம் உமக்கு எடுத்துரைக்கிறோம். உலகத்தாருக்கு*
*அல்லாஹ் அநீதி இழைக்க விரும்புவதில்லை. [109]வானங்களிலும்*
*பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. அனைத்து*
*விவகாரங்களும் அல்லாஹ்விடமே திரும்பக்கொண்டு வரப்படும்.*
*[110](நம்பிக்கையாளர்களே!) மனித குல(ச் சீர்திருத்த)த்திற்காகத்*
*தோற்றுவிக்கப்பெற்ற சிறந்த சமூகத்தினர் (நீங்களே) ஆவீர்கள்.*
*நீங்கள் நன்மையை ஏவுகிறீர்கள்; தீமையிலிருந்து தடுக்கிறீர்கள்;*
*அல்லாஹ்வின் மீது நம்பிக்கைகொண்டுள்ளீர்கள். வேதம்*
*வழங்கப்பட்டோரும் (இவ்வாறே) நம்பிக்கைகொண்டிருந்தால்*
*அது அவர்களுக்குச் சிறந்ததாக அமைந்திருக்கும். அவர்களில்*
*சிலர் உண்மையான நம்பிக்கையாளர்கள்; எனினும் அவர்களில்*
*பெரும்பாலோர் கீழ்ப்படியாதவர்களாகவே இருக்கின்றனர்.*
*[111]அவர்களால் உங்களுக்குச் சிறுசிறு தொல்லைகள் தருவது*
*தவிர வேறு எந்தத் தீங்கும் இழைத்துவிட முடியாது. அவர்கள்*
*உங்களோடு போரிட்டால் புறங்காட்டி ஓடிவிடுவர். அவர்களுக்கு*

*எந்த உதவியும் கிடைக்காது.*
*112அல்லாஹ்விடமிருந்து அல்லது மக்களிடமிருந்து ஏதேனும் பாதுகாப்பைப் பெற்றாலே அன்றி அவர்கள் எங்கு இருந்தாலும் அவர்களை இழிவு வந்தடைந்தே தீரும். அவர்கள் இறைச்சினத்திற்கு ஆளாகிவிட்டதோடு வீழ்ச்சியும் அவர்கள் மீது விதிக்கப்பட்டு விட்டது. இவற்றிற்கெல்லாம் காரணம் அவர்கள் அல்லாஹ்வின் வசனங்களை மறுத்துக்கொண்டும் தூதர்களை அநியாயமாகக் கொலை செய்துகொண்டும் இருந்ததேயாகும். (மேலும்) இவை அவர்களின் கீழ்ப்படியாமையாலும் வரம்புமீறலாலும் ஏற்பட்ட விளைவுகளேயாகும்.*

*113வேதமுடையோர் அனைவரும் ஒரே மாதிரியானவர்கள் அல்லர். அவர்களில் வாக்குறுதியில் நிலைத்து நிற்கும் ஒரு பிரிவினரும் இருக்கின்றனர். அவர்கள் இரவு நேரங்களில் இறைவசனங்களை ஓதித் தலைபணிபவர்களாக இருக்கின்றனர்.*
*114அவர்கள் அல்லாஹ்வின்மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொள்கின்றனர்; நன்மை செய்யும்படித் தூண்டித் தீமையிலிருந்து தடுக்கின்றனர்; நற்செயல்களில் விரைகின்றனர்; அவர்கள்தாம் நேர்மையானவர்கள்.*
*115அவர்கள் செய்த நற்செயல்களுக்கான நற்கூலி மறுக்கப்படாது. அல்லாஹ் இறையச்சமுடையோரை நன்கறிந்தவன்.*

*116உறுதியாக மறுப்பாளர்களின் செல்வங்களோ பிள்ளைகளோ அல்லாஹ்விடமிருந்து அவர்களைச் சற்றும் காக்க முடியாது. அவர்கள் நரகவாசிகள். அதில் அவர்கள் என்றென்றும் இருப்பார்கள்.*
*117அவர்கள் இவ்வுலக வாழ்க்கைக்காகச் செலவுசெய்வது, தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்ட கூட்டத்தாரின் வயல்களில் கடுங்குளிர்காற்று வீசி நாசமாக்கி விடுவதைப் போல (வீணானது) ஆகும். அவர்கள் மீது அல்லாஹ் அநீதி இழைக்கவில்லை. மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டனர்.*

*118நம்பிக்கையாளர்களே! உங்களைச் சார்ந்தவர்களையன்றி மற்றவர்களை மனங்கலந்த நண்பர்களாக்கிக் கொள்ளாதீர்கள்.*

*அவர்கள் உங்களுக்குக் கேடு விளைவிப்பதில் குறை*
*வைக்கமாட்டார்கள். நீங்கள் துன்புறுவதையே அவர்கள்*
*விரும்புவார்கள். பகையுணர்ச்சி அவர்களின் வாய்களிலிருந்தே*
*வெளிப்பட்டுவிட்டது. அவர்களின் உள்ளங்களினுள் (மறைத்து*
*வைத்து) இருப்பது அதைவிடக் கொடியது. நாம் உங்களுக்கு*
*(அவர்களின்) அடையாளங்களைத் தெளிவுபடுத்திவிட்டோம்;*
*நீங்கள் அறிவுடையோர்களாயின் (அறிந்துகொள்ளலாம்).*
[119]*நீங்கள் அவர்களை நேசிக்கிறீர்கள்; ஆனால் அவர்களோ*
*உங்களை நேசிப்பதில்லை. நீங்களோ எல்லா வேதங்களையும்*
*ஏற்றுக்கொள்கிறீர்கள். அவர்கள் உங்களைச் சந்தித்தால் “நாங்கள்*
*நம்பிக்கைகொண்டோம்” என்று (வாயளவில்) கூறுகின்றனர்.*
*ஆனால் தனித்திருக்கும்போது உங்கள் மீதுள்ள சினத்தால்*
*விரல்(நுனி)களைக் கடித்துக் கொள்கின்றனர். (நபியே!) நீர்*
*கூறும்: “உங்கள் சினத்திலேயே செத்து மடியுங்கள்”. உறுதியாக*
*அல்லாஹ் (மனித) மனங்களிலுள்ளவற்றை முற்றும் அறிந்தவன்.*
[120]*(நம்பிக்கையாளர்களே!) உங்களுக்கு ஏதேனும் நன்மை*
*ஏற்பட்டால் அது அவர்களுக்கு வருத்தத்தை ஏற்படுத்துகிறது.*
*உங்களுக்கு ஏதேனும் தீங்கு நேர்ந்தால் அதனால் அவர்கள்*
*மகிழ்ச்சியடைகின்றனர். நீங்கள் பொறுமையை மேற்கொண்டு*
*இறையச்சத்துடன் நடந்தால் அவர்களின் சூழ்ச்சி உங்களுக்குச்*
*சிறிதும் தீங்கு விளைவிக்காது. அவர்கள் செய்து கொண்டிருக்கும்*
*அனைத்தையும் அல்லாஹ் சூழ்ந்து அறிகிறான்.*

[121]*(நபியே!) விடிகாலையில் உமது குடும்பத்தினரிடமிருந்து*
*புறப்பட்டு நம்பிக்கையாளர்களை(உஹுது)ப் போர்க்களத்தில்*
*அவர்களுக்குரிய இடங்களில் நிறுத்தியதை (நீர் நினைவுகூர்வீராக!)*
*அல்லாஹ் செவிமடுப்பவன்; முற்றும் அறிந்தவன்.* [122]*உங்களில் இரு*
*பிரிவினர் துணிவிழக்க இருந்த சமயத்தில் நேர்ந்தபோது அல்லாஹ்*
*அவ்விரு பிரிவினருக்கும் பாதுகாப்பாளனாக இருந்தான்.*
*(எனவே) நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே முற்றிலும்*
*சார்ந்திருக்க வேண்டும்.* [123]*அல்லாஹ் உங்களுக்கு பத்(ருப் போ)ரில்*

*உதவி புரிந்துள்ளான். அப்போது நீங்கள் வலுவற்றவர்களாக இருந்தீர்கள். எனவே நீங்கள் நன்றிசெலுத்தும் பொருட்டு அல்லாஹ்வுக்கே அஞ்சுங்கள்.*
124*“உங்கள் இறைவன் மூவாயிரம் வானவர்களை இறக்கி உதவிபுரிவது உங்களுக்கு போதாதா?” என்று நம்பிக்கையாளர்களிடம் (அப்போது) நீர் கூறியதை (நபியே!) நினைவுகூரும்.*
125*நீங்கள் பொறுமையை மேற்கொண்டு இறையச்சத்துடன் நடந்துகொண்டால் எதிரிகள் உங்களைத் திடீரென்று தாக்கும்போது (போர்) அடையாளமுடைய ஐயாயிரம் வானவர்களின் மூலம் இறைவன் உங்களுக்கு உதவிபுரிவான்.*
126*உங்களுக்கு நற்செய்தியாகவும் உங்கள் உள்ளங்கள் அமைதி பெறுவதற்காகவுமே அல்லாஹ் இவ்வாறு செய்தான். யாவற்றினும் வல்லவனும் ஞானம் மிக்கவனுமாகிய அல்லாஹ்விடமிருந்து மட்டுமே உதவி கிடைக்கிறது.*
127*இது மறுப்பாளர்களில் ஒரு பிரிவினரை அழிப்பதற்காகவோ அல்லது அவர்கள் (தோல்வியினால் சிறுமைப்பட்டு ஏமாற்றத்துடன்) திரும்பிச் சென்று விடுவதற்காகவோ ஆகும்.*
128*(நபியே! மறுப்பாளர்கள் தொடர்பாக) உமக்கு எந்த அதிகாரமுமில்லை. அல்லாஹ் அவர்களின் பாவமன்னிப்புக் கோரிக்கையை ஏற்றுக்கொள்ளலாம்; அல்லது அவர்களுக்குத் தண்டனை அளிக்கலாம். ஏனெனில் அவர்கள் தீவினையாளர்களாக இருக்கிறார்கள்.*
129*வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்விற்கே உரியனவாகும். தான் விரும்பியோரை மன்னிக்கிறான்; தான் விரும்பியோரைத் தண்டிக்கிறான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

130*(ஓரிறை) நம்பிக்கையாளர்களே! வட்டியைப் பன்மடங்காகப் பெருக்கி உண்ணாதீர்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அதனால் நீங்கள் வெற்றியடைவீர்கள்.*
131*(ஓரிறை) மறுப்பாளர்களுக்காகத் தயார் செய்யப்பட்டுள்ள (நரக) நெருப்பிற்கு அஞ்சி நடந்துகொள்ளுங்கள்.*
132*அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் கட்டுப்படுங்கள். அதனால் நீங்கள் அருள் செய்யப்படலாம்.*

[133]உங்கள் இறைவனின் மன்னிப்பையும் சொர்க்கத்தையும் நோக்கி
விரையுங்கள். அது வானங்கள், பூமி ஆகியவற்றின் அளவு விரிவானது.
அது இறையச்சமுடையோருக்காகத் தயார் செய்யப்பட்டுள்ளது.
[134]அவர்கள் வளமான நிலையிலும் வறிய நிலையிலும் இறைவழியில்
செலவுசெய்வர். சினத்தை அடக்கி மக்களை மன்னித்துவிடுவர்.
அல்லாஹ் நற்செயல்கள் புரிவோரை நேசிக்கிறான்.
[135]அவர்கள் மானக்கேடான செயலைச் செய்துவிட்டாலோ
தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டாலோ அல்லாஹ்வை
நினைவுகூர்ந்து தம் பாவங்களுக்காக மன்னிப்புக் கோருவர்.
அல்லாஹ்வைத் தவிர வேறு யார் அவர்களின் பாவங்களை
மன்னிக்க முடியும்? தெரிந்துகொண்டே தாம் செய்தவற்றில்
அவர்கள் பிடிவாதமாக நிலைத்திருக்கவும் மாட்டார்கள்.
[136]இத்தகையோரின் கூலி அவர்களின் இறைவனிடமிருந்து
கிடைக்கின்ற (பாவ)மன்னிப்பும் (சொர்க்கச்) சோலைகளுமாகும்.
அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும்; அங்கு அவர்கள்
என்றென்றும் தங்கியிருப்பர். நன்மைசெய்வோரின் கூலி
எவ்வளவு சிறந்தது! [137]உங்களுக்கு முன்னர்ப் பல (சமூகங்களின்)
முன்னுதாரண நிகழ்வுகள் கடந்துவிட்டன. எனவே உண்மையைப்
பொய்யென்று கூறியோரின் முடிவு என்னவாயிற்று என்பதைப்
பூமியில் பயணம் செய்து பாருங்கள். [138](குர்ஆன் ஆகிய) இது
மக்களுக்குத் தெளிவான விளக்கமாகவும் இறையச்சமுடையோருக்கு
வழிகாட்டியாகவும் அறிவுரையாகவும் இருக்கிறது.

[139](நம்பிக்கையாளர்களே!) மனம் தளர்ந்து விடாதீர்கள்;
கவலைப்படாதீர்கள். நம்பிக்கையாளர்களாயின் நீங்கள்தான்
மேலோங்கி நிற்பீர்கள். [140]உங்களுக்குக் காயம் ஏற்பட்டுள்ளதென்றால்
எதிரிகளுக்கும் இதுபோன்று காயம் ஏற்படத்தான் செய்தது. இத்தகைய
நாட்களை நாம் மனிதர்களிடையே மாறிமாறி வரச்செய்கிறோம்.
இது ஏனெனில் (அல்லாஹ்) நம்பிக்கையாளர்களை(ப்

*பிறர்) அறி(யச்செய்)வதற்காகவும் உங்களில் சிலரை (உயிர்த்தியாக)ச் சாட்சிகளாக்குவதற்காகவும்தான். அநீதி இழைப்போரை அல்லாஹ் நேசிப்பதில்லை.*
*[141]நம்பிக்கையாளர்களை (அவர்களின் பாவங்களிலிருந்து பிரித்து)த் தூய்மைப்படுத்தவும் மறுப்பாளர்களை அழித்துவிடுவதற்காகவும்தான் அல்லாஹ் இவ்வாறு செய்கிறான்.*
*[142]உங்களில் இறைவழியில் பாடுபடுபவர்கள் யார் என்பதையும் மனஉறுதியோடு நிற்பவர்கள் யார் என்பதையும் அல்லாஹ் அறியாமலேயே நீங்கள் சொர்க்கம் சென்றுவிடலாம் என்று எண்ணுகிறீர்களா?*
*[143]நீங்கள் இறப்பைச் சந்திக்கும் முன்னரே (இறைவழியில்) அதனை (அடைய) விரும்பிக் கொண்டிருந்தீர்கள். இப்போது அதனைக் கண்கூடாகப் பார்த்துவிட்டீர்கள்.*

*[144]முஹம்மத் ஒரு தூதரேயாவார். அவருக்கு முன்னரும் தூதர்கள் வந்து சென்றுள்ளனர். அவர் இறந்துவிட்டாலோ கொலை செய்யப்பட்டாலோ வந்த வழியே நீங்கள் திரும்பிச் சென்று விடுவீர்களா என்ன? அவ்வாறு திரும்பிச் செல்பவர் அல்லாஹ்வுக்கு எந்தத் தீங்கும் இழைத்துவிட முடியாது. நன்றி செலுத்துவோருக்கு அல்லாஹ் (அதற்குரிய) கூலியை வழங்கிவிடுவான்.*
*[145]எந்த உயிரும் அல்லாஹ்வின் அனுமதியின்றி (அவன் விதித்த நேரத்திலன்றி) இறவாது. எவர் உலகியல் பயனை விரும்புகிறாரோ அவருக்கு நாம் இவ்வுலகிலேயே அதனை அளித்துவிடுகிறோம். எவர் மறுமையின் பயனை விரும்புகிறாரோ அவருக்கு நாம் அதனையும் வழங்குவோம். நன்றி செலுத்துவோருக்குரிய கூலியை (உறுதியாக) வழங்கிவிடுவோம்.*
*[146]எத்தனையோ தூதர்களும் அவர்களுடன் (இணைந்து) இறையடியார்கள் பலரும் போர் புரிந்துள்ளனர். இறைவழியில் தங்களுக்கு ஏற்பட்ட துன்பங்களால் அவர்கள் மனம் தளர்ந்து விடவுமில்லை; பலவீனப்பட்டுப் (பகைவர்களுக்குப்) பணிந்துவிடவுமில்லை. இத்தகைய பொறுமையாளர்களை அல்லாஹ் நேசிக்கிறான்.*
*[147](இத்தகைய நேரங்களில்) அவர்களுடைய இறைஞ்சுதல் "இறைவா! எங்கள் பாவங்களையும் எங்கள் செயல்களில் நாங்கள்*

*வரம்புமீறிச் செய்தவற்றையும் மன்னித்துவிடுவாயாக! எங்களின்
பாதங்களை உறுதிப்படுத்துவாயாக! மறுப்பாளருக்கு எதிராக
எங்களுக்கு உதவிபுரிவாயாக!” என்பதாகத்தான் இருந்தது.
[148]எனவே அவர்களுக்கு அல்லாஹ் இவ்வுலக நன்மையையும்
மறுமையின் அழகிய நன்மையையும் வழங்கினான். அல்லாஹ்
நற்செயல்புரிவோரை நேசிக்கிறான். [149]நம்பிக்கையாளர்களே!
நீங்கள் மறுப்பாளர்களுக்குக் கீழ்ப்படிந்தால் அவர்கள் உங்களை
வந்தவழியே திருப்பிவிடுவார்கள். நீங்கள் இழப்பிற்குரியவர்களாகி
விடுவீர்கள். [150]மாறாக, அல்லாஹ்வே உங்களுக்கு
உதவுபவனாக இருக்கிறான். அவன்தான் உதவிசெய்வோரில்
சிறந்தவன். [151]மறுப்பாளரின் உள்ளங்களில் நாம் அச்சத்தை
ஏற்படுத்திவிடுவோம். ஏனெனில் அவர்கள் அல்லாஹ்வுக்கு
இணைவைத்துவிட்டார்கள். இணைவைப்பதற்கு அவன் எந்தச்
சான்றையும் இறக்கி வைக்கவில்லை. அவர்களின் தங்குமிடம்
நரகமேயாகும். தீவினையாளர்களின் உறைவிடம் எவ்வளவு
கேடானது! [152]தன் வாக்குறுதியை அல்லாஹ் உங்களுக்கு
உண்மைப்படுத்திக் காட்டினான். நீங்கள் அவனது கட்டளைப்படி
(உஹுதுப் போரில்) எதிரிகளைக் கொன்றுவிடும் நிலையில்
இருந்தபோது ஊக்கம் குன்றி (இறைத்தூதருடைய கட்டளை
தொடர்பாக) உங்களுக்குள் முரண்பட்டீர்கள். நீங்கள் விரும்பிய
(வெற்றியை) அல்லாஹ் உங்களுக்கு நெருக்கத்தில் காட்டிய
பின்னரும் எதிராகச் செயல்பட்டீர்கள். உங்களில் சிலர் இம்மையை
விரும்புவோராக இருந்தனர். சிலர் மறுமையை விரும்புவோராக
இருந்தனர். பின்னர் அவன் உங்களைச் சோதிப்பதற்காக
அவர்களை வெல்வதிலிருந்து உங்களைத் தடுத்துவிட்டான்.
(பின்னர்) அல்லாஹ் உங்களை மன்னித்து விட்டான். அல்லாஹ்
நம்பிக்கையாளர்கள் மீது பேரருள் புரிபவன். [153]நினைத்துப்
பாருங்கள்! (போர்க்களத்தில்) தூதர் உங்களுக்குப் பின்னாலிருந்து
உங்களை அழைத்துக் கொண்டிருக்க நீங்கள் யாரையும் திரும்பிப்
பார்க்காமல் ஓடிக் கொண்டிருந்தீர்கள். எனவே (நீங்கள்
தூதருக்கு ஏற்படுத்திய) துயரத்திற்குப் பதிலாக(த் தோல்வி எனும்)*

*துயரத்தை அல்லாஹ் உங்களுக்குத் ஏற்படுத்தினான். (இனி, நீங்கள் எவற்றையேனும் இழந்தால் அந்த) இழப்பைப்பற்றியும் (இனி, எவையேனும் துன்பம் உங்களுக்கு நேர்ந்தால் அந்தத்) துன்பத்தைப்பற்றியும் நீங்கள் கவலைப்படாமல் (பொறுமையுடன்) இருக்கவேண்டும் என்பதற்காகவே (இத்தகைய துன்பத்தை அவன் உங்களுக்குக் கொடுத்தான்) அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவன்.*

154 *இத்துயரத்திற்குப் பிறகு அமைதியளிக்கக்கூடிய சிறு தூக்கத்தை அல்லாஹ் உங்களுக்கு அருளினான். அது உங்களில் ஒரு பிரிவினரைத் தழுவிக்கொண்டது. மற்றொரு பிரிவினரோ தம் உயிரின் மீது கவலைகொண்டு அல்லாஹ்வைக் குறித்து ஐயுற்று உண்மைக்குப் புறம்பான அறியாமைக்கால எண்ணங்களைக் கொண்டிருந்தனர். “இ(ப் போர்)ச் செயலில் நமக்கு ஏதேனும் அதிகாரம் உண்டா?” என்று அவர்கள் கேட்கிறார்கள். (நபியே!) அவர்களிடம் நீர் “அனைத்து அதிகாரங்களும் அல்லாஹ்விடமே உள்ளன” என்று கூறுவீராக. அவர்கள் உம்மிடம் வெளிப்படுத்தாத விஷயங்களையும் தம் உள்ளங்களில் மறைத்து வைத்துள்ளனர். “இச்செயலில் நமக்கு ஏதேனும் அதிகாரம் இருந்திருந்தால் நம்மில் ஒருவரும் இங்கே கொல்லப்பட்டிருக்கமாட்டார்கள்” என்றும் கூறுகின்றனர். “நீங்கள் உங்கள் வீடுகளில் இருந்திருந்தாலும் எவருக்குச் சாவு விதிக்கப்பட்டுள்ளதோ அவர்கள் தாங்கள் கொல்லப்பட இருக்கும் இடங்களை நோக்கி வந்தேயிருப்பார்கள்” என்று (நபியே!) நீர் கூறுவீராக! உங்கள் நெஞ்சங்களில் உள்ளவற்றைச் சோதிக்கவும் உங்கள் உள்ளங்களில் உள்ளவற்றைத் தூய்மைப்படுத்தவுமே (அல்லாஹ் இவ்வாறெல்லாம் நிகழ்த்துகிறான்.) உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன்.*
155 *(நம்பிக்கையாளர்களும் மறுப்பாளர்களுமாகிய) இரு பிரிவினரும் மோதிக்கொண்ட நாளில் உங்களில் புறங்காட்டி ஓடியவர்களை அவர்களின் சில செயல்களினால் சாத்தான் வழிதவறச் செய்தான். ஆயினும்*

*அவர்களை அல்லாஹ் மன்னித்துவிட்டான். உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; சகிப்புத்தன்மையுடையவன்.*

156*(இறை)நம்பிக்கையாளர்களே! நீங்கள் மறுப்பாளர்களைப் போல் ஆகிவிடாதீர்கள். அவர்கள் பயணத்திலோ போரிலோ இறந்துவிட்ட தங்கள் சகோதரர்களைப்பற்றி “அவர்கள் நம்முடன் இருந்திருந்தால் இறந்திருக்கவும் மாட்டார்கள்; கொல்லப்பட்டிருக்கவும் மாட்டார்கள்” என்று கூறுகிறார்கள். அவர்களின் உள்ளங்களில் வருத்தத்தை ஏற்படுத்தவே அல்லாஹ் இவ்வாறு (அவர்கள் நினைக்குமாறு) செய்கிறான். அல்லாஹ்தான் உயிர்ப்பிக்கிறான்; அவன்தான் இறப்பையும் அளிக்கிறான்; நீங்கள் செய்பவற்றையெல்லாம் அல்லாஹ் பார்த்துக்கொண்டிருக்கிறான்.*
157 *நீங்கள் இறைவழியில் கொல்லப்பட்டாலோ இறந்து விட்டாலோ அல்லாஹ்விடமிருந்து (உங்களுக்குக்) கிடைக்கும் (பாவ) மன்னிப்பும் அருளும் (மறுப்பாளர்களாகிய) அவர்கள் சேர்த்து வைத்திருக்கும் அனைத்தையும்விடச் சிறந்தனவாகும்.*
158 *நீங்கள் இறந்துவிட்டாலோ கொல்லப்பட்டாலோ அல்லாஹ்விடமே ஒன்றுதிரட்டப்படுவீர்கள்.*
159*(நபியே!) இறைவனின் அருளால்தான் நீர் இவர்களுடன் மென்மையாக நடந்துகொள்கிறீர். நீர் கண்டிப்பானவராகவும் கடினமனம் கொண்டவராகவும் இருந்திருந்தால் இவர்கள் உம்மைவிட்டு ஓடியிருப்பார்கள். எனவே இவர்களை மன்னித்து இவர்களுக்காக (இறைவனிடம்) பாவமன்னிப்புக் கோருவீராக! அனைத்துச் செயல்பாடுகளிலும் இவர்களுடன் கலந்தாலோசிப்பீராக! (பின்னர் ஒன்றை) நீர் முடிவு செய்துவிட்டால் அல்லாஹ்வையே முழுமையாக நம்பியிருப்பீராக! உறுதியாக அல்லாஹ் முழுமையாகத் தன்னை நம்பியிருப்போரை நேசிக்கிறான்.*
160*அல்லாஹ் உங்களுக்கு உதவி செய்தால் உங்களை எவராலும் வெல்ல முடியாது. அவன் உங்களைக் கைவிட்டுவிட்டால் அதன் பின்னர் உங்களுக்கு உதவுகின்றவர் யார்? நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே சார்ந்திருக்க வேண்டும்.*

[161]மோசடி செய்வது எந்தத் தூதரின் செயலுமன்று. எவர் அதனைச் செய்கிறாரோ அவர் மறுமை நாளில் தான் செய்தவற்றுடன் வருவார். பின்னர் ஒவ்வொருவருக்கும் அவரது செயலுக்குரிய முழுமையான கூலி வழங்கப்படும். அவர்மீது எந்த அநீதியும் இழைக்கப்படமாட்டாது. [162]இறைவனின் உவப்பை வேண்டி நடப்பவர் இறைச்சினத்திற்கு ஆளானவனைப்போல் ஆவாரா? அவனது தங்குமிடம் நரகமாகும். அது மிகவும் கெட்ட இருப்பிடம். [163]அவர்கள் அல்லாஹ்விடத்தில் பல (உயர்) தகுதிகளைப் பெறுவார்கள். அவர்கள் அனைவரின் செயல்களையும் அல்லாஹ் பார்த்துக்கொண்டிருக்கிறான். [164](இறை)நம்பிக்கையாளர்கள் மீது அல்லாஹ் பேரருள் புரிந்துள்ளான். அதாவது அவர்களிலிருந்தே ஒரு தூதரை அவர்களிடம் அனுப்பியுள்ளான். அவர் அவனது வசனங்களை எடுத்துரைத்துக்கிறார்; அவர்களைத் தூய்மைப்படுத்துகிறார்; அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் கற்பிக்கிறார். உறுதியாக அவர்கள் இதற்கு முன்னர் வெளிப்படையான கெடுவழியிலேயே இருந்தனர்.

[165](நம்பிக்கையாளர்களே! பத்ருப் போரில்) இதுபோன்ற இரு மடங்கு துன்பத்தை (எதிரிகளுக்கு) நீங்கள் ஏற்படுத்தியிருக்க (உஹுதுப் போரில்) உங்களுக்கு ஒரு (மடங்கு) துன்பம் நேர்ந்தபோது “இது எப்படி (ஏற்பட்டது?)” என்று கேட்கிறீர்கள். “(நபியே!) “இது உங்களால்தான் ஏற்பட்டது” என்று நீர் கூறும். உறுதியாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன். [166]இரு கூட்டத்தாரும் மோதிக்கொண்ட நாளில் உங்களுக்கு ஏற்பட்ட துன்பமானது அல்லாஹ்வின் கட்டளையால் ஏற்பட்டதேயாகும். அது நம்பிக்கையாளர்கள் யார்? என்பதை அறி(வித்து விடு)வதற்காகவே ஆகும். [167](மேலும்) நயவஞ்சகர்கள் யார்? என்பதை அறி(வித்து விடு)வதற்காகவும் ஆகும். “வாருங்கள். இறைவழியில் போர்புரியுங்கள் அல்லது எதிரிகளிடமிருந்து தற்காத்துக்கொள்ளுங்கள்” என்று அவர்களிடம் கூறப்பட்டால்

*“போர் நடக்கும் என்று நாங்கள் அறிந்திருந்தால் கண்டிப்பாக உங்களுடன் வந்திருப்போம்” என்கிறார்கள். அவர்கள் அன்று நம்பிக்கையைவிட மறுப்பிற்கே நெருக்கமானவர்களாக இருந்தனர்; தம் உள்ளங்களில் இல்லாதவற்றைத் தம் வாய்களால் வெளிப்படுத்தினர். அவர்கள் மறைப்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன். [168]அவர்கள் போருக்குச் செல்லாமல் தம் வீட்டில் அமர்ந்துகொண்டு தம் சகோதர்களைப்பற்றி “அவர்கள் நம் பேச்சைக் கேட்டிருந்தால் கொல்லப்பட்டிருக்க மாட்டார்கள்” என்று கூறுகின்றனர். (அவர்களிடம்) “நீங்கள் உண்மையாளர்களாயின் சாவிலிருந்து உங்களைக் காத்துக் கொள்ளுங்கள் பார்க்கலாம்” என்று (நபியே!) நீர் கூறும்.*

*[169](நம்பிக்கையாளர்களே!) இறைவழியில் கொல்லப்பட்டவர்களை இறந்தவர்களாகக் கருதாதீர்கள். மாறாக அவர்கள் தம் இறைவனிடம் (நெருக்கமாக) உயிரோடு உள்ளனர். அவர்கள் உணவளிக்கப் பெறுகின்றனர். [170]அல்லாஹ் தன் அருளால் அவர்களுக்கு வழங்கியவற்றின் மூலம் அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கின்றனர். இன்னும் தங்களுடன் வந்து சேராமல் பின்னால் (வர) இருக்கும் மக்களைக் குறித்து “அவர்களுக்கு எந்த அச்சமுமில்லை; (அவர்கள்) துயரப்படவும் மாட்டார்கள்” என (நற்செய்தி பெற்று) மகிழ்பவர்களாகவும் உள்ளனர். [171]அல்லாஹ்விடமிருந்து கிடைத்த அருட்கொடையாலும் மேன்மையாலும் நம்பிக்கையாளர்களின் கூலியை அல்லாஹ் வீணாக்கமாட்டான் என்பதாலும் அவர்கள் மகிழ்ச்சியடைகின்றனர்.*

*[172](போரில் காயமுற்றவர்கள்) தங்களுக்குக் காயம் ஏற்பட்ட பின்னரும் அல்லாஹ்வும் தூதரும் இட்ட கட்டளையை ஏற்றுக் கொண்டனர். அவர்களில் நற்செயல்புரிபவர்களாகவும் இறையச்சமுடையவர்களாகவும் இருப்பவர்களுக்கு அரும்பெரும் கூலி உண்டு. [173]சிலர் அவர்களிடம் (வந்து) “உங்களுக்கெதிராக (மறுப்பாளர்களாகிய)மக்கள்(பெரும்படையாகத்)திரண்டுள்ளனர். எனவே அவர்களுக்கு அஞ்சி இருங்கள்” என்று கூறியபோது அது*

அவர்களின் நம்பிக்கையை மேலும் மிகுதியாக்கியது. அப்போது
அவர்கள், “அல்லாஹ்வே எங்களுக்குப் போதுமானவன்.
அவன்தான் சிறந்த பொறுப்பாளன்” என்று கூறினர்.
[174](எதிரிகள் போரிடாமல் திரும்பிச் சென்றுவிட்டமையால்)
அவர்கள் இறைவனின் அருளுடனும் (அங்கு வணிகம் செய்து
ஈட்டிய) வளத்துடனும் திரும்பினர். அவர்களுக்கு எந்தத் தீங்கும்
ஏற்படவில்லை. அவர்கள் இறைவிருப்பத்தின்படி நடந்தனர்.
அல்லாஹ் பேரருள் புரிபவன். [175](நம்பிக்கையாளர்களே!)
சாத்தான் தன் நண்பர்களின்மூலம் உங்களை அச்சுறுத்துகிறான்.
எனவே நீங்கள் அவர்களைக் கண்டு அஞ்சாதீர்கள். நீங்கள்
நம்பிக்கையாளர்களாக இருந்தால் எனக்கே அஞ்சுங்கள்.

[176](நபியே! இறை) மறுப்பில் விரைவாகச் செல்பவர்கள்
உம்மை கவலைக்கு உள்ளாக்கிட வேண்டாம். அவர்கள்
அல்லாஹ்வுக்கு எந்தத் தீங்கையும் செய்துவிட முடியாது.
அவர்களுக்கு மறுமையில் எந்த நற்பேறும் கிடைக்கக் கூடாது
என்று அல்லாஹ் விரும்புகிறான். அவர்களுக்குப் பெரும்
வேதனை உண்டு. [177]நம்பிக்கையை விலையாகக் கொடுத்து
மறுப்பை வாங்கிக் கொண்டவர்கள் அல்லாஹ்வுக்கு எந்தத்
தீங்கையும் இழைக்க முடியாது. அவர்களுக்குத் துன்புறுத்தும்
வேதனையுண்டு. [178]மறுப்பாளர்களுக்கு நாம் காலநீட்டிப்பு
அளித்துக் கொண்டிருப்பதைத் தங்களுக்கு நல்லதென அவர்கள்
எண்ணிவிட வேண்டாம். நாம் அவர்களுக்குக் காலநீட்டிப்பு
அளிப்பதெல்லாம் அவர்கள் தங்கள் பாவங்களை இன்னும்
மிகுதிப்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதற்காகத்தான்.
அவர்களுக்கு இழிவுமிக்க வேதனையுண்டு. [179](இறை)
நம்பிக்கையாளர்(களான உங்)களை, நீங்கள் (இப்போது
நயவஞ்சகர்களுடன் கலந்து) இருக்கும் இதே நிலையில் அல்லாஹ்
விட்டுவைத்திருக்க மாட்டான். தூய்மையானவர்களைத்
தூய்மையற்றவர்களிடமிருந்து வேறுபடுத்தியே தீருவான்.
அல்லாஹ் மறைவானவற்றை உங்களுக்கு அறிவித்துத் தருபவன்

*அல்லன். ஆயினும் தன் தூதர்களிலிருந்து தான் விரும்பியோரை (அதற்காக) அல்லாஹ் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். ஆகவே நீங்கள் அல்லாஹ்வின் மீதும் அவனது தூதர்களின் மீதும் நம்பிக்கைகொள்ளுங்கள். நீங்கள் நம்பிக்கைகொண்டு இறையச்சத்துடன் நடந்து கொண்டால் உங்களுக்கு அரும்பெரும் கூலி உண்டு.*

*[180]தன் அருளால் அல்லாஹ் தங்களுக்கு வழங்கியவற்றில்
கஞ்சத்தனம் செய்பவர்கள் அதனைத் தங்களுக்கு நல்லது என்று
எண்ணிவிட வேண்டாம். மாறாக அது அவர்களுக்குத் தீயதே
ஆகும். அவர்கள் கஞ்சத்தனம் புரிந்த பொருள்கள் மறுமை
நாளில் அவர்களின் கழுத்தில் விலங்காக மாட்டப்படும்.
அல்லாஹ்வே வானங்கள், பூமி ஆகியவற்றின் நிலையான
உரிமையாளன். நீங்கள் செய்கின்றவற்றை அல்லாஹ்
நன்கறிந்தவன். [181]“அல்லாஹ் ஏழை, நாங்கள்தாம் செல்வர்கள்”
என்று கூறியவர்களின் கூற்றை அல்லாஹ் கேட்டுக்கொண்டான்.
அவர்கள் கூறியதையும் தூதர்களை நியாயமின்றிக் கொன்றதையும்
நாம் எழுதிக்கொள்வோம் (மறுமையில்) “இதோ சுட்டெரிக்கும்
வேதனையைச் சுவையுங்கள்” என்று (அவர்களிடம்) நாம்
கூறுவோம். [182]இது உங்கள் கைகள் முன்னர்ச் செய்தனுப்பிய
(தீய)வற்றின் விளைவாகும். தன் அடியார்களுக்கு அல்லாஹ்
ஒரு சிறிதும் அநீதியிழைக்கமாட்டான். [183]“நெருப்பு ஒரு பலியை
உண்பதை எங்கள் கண்முன்னால் காட்டாதவரை நாங்கள் எந்தத்
தூதரையும் ஏற்றுக்கொள்ளக்கூடாது என்று எங்களுக்கு அல்லாஹ்
கட்டளையிட்டுள்ளான்” என்று அவர்கள் கூறுகின்றனர். (நபியே!)
நீர் அவர்களிடம் “எனக்கு முன்னால் உங்களுக்குத் தெளிவான
சான்றுகளையும் நீங்கள் கேட்ட(பலி பற்றிய)தையும் தூதர்கள்
கொண்டுவந்தார்களே! நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால்
அவர்களை ஏன் கொலை செய்தீர்கள்?” என்று கேட்பீராக!
[184]அவர்கள் உம்மைப் பொய்மைப்படுத்துகின்றனர் என்றால்
(கவலைப்படாதீர்!) உமக்கு முன்னர்த் தெளிவான சான்றுகளையும்
ஆகமங்களையும் ஒளிரும் வேதத்தையும் கொண்டுவந்த பல*

*தூதர்களும் பொய்மைப்படுத்தப்பட்டனர். [185]ஒவ்வோர் உயிரும் சாவைச் சுவைத்தே தீரவேண்டும். உங்களுக்கு முழுமையான கூலி மறுமையில்தான் கிடைக்கும். எனவே எவர் நரகத்தினின்றும் தொலைவாக்கப்பட்டுச் சொர்க்கத்தில் அனுமதிக்கப்படுகிறாரோ அவரே வெற்றி பெற்றவராவார். உலக வாழ்க்கை மயக்கக்கூடிய அற்ப இன்பமேயன்றி வேறில்லை.*

*[186](நம்பிக்கையாளர்களே!) உங்கள் செல்வங்கள், (உங்கள்) உயிர்கள் ஆகியவற்றால் உறுதியாக நீங்கள் சோதிக்கப்படுவீர்கள். உங்களுக்கு முன் வேதம் வழங்கப்பட்டோரிடமிருந்தும் இணைவைப்போரிடமிருந்தும் உறுதியாக வேதனைப்படுத்தும் (வசை) மொழிகளைச் செவியுறுவீர்கள். நீங்கள் பொறுமையை மேற்கொண்டு இறையச்சத்தோடு இருந்தால் உறுதியாக அது மனவுறுதிமிக்க செயலாகும். [187]வேதம் வழங்கப்பட்டோரிடம் “வேதத்தை மக்களுக்குத் தெளிவாக எடுத்துரைக்க வேண்டும். அதனை நீங்கள் மறைத்து விடக்கூடாது” என்று அல்லாஹ் உறுதிமொழி பெற்றதை (நபியே! நீர்) நினைவூட்டுவீராக. ஆனால் அவர்கள் அதனைத் தம் முதுகுக்குப் பின்னால் எறிந்துவிட்டனர். குறைந்த ஊதியத்திற்காக அதனை விற்றுவிட்டனர். அவர்கள் வாங்கிக் கொண்டது எவ்வளவு கேடானது! [188]தாம் செய்த (தவறான) செயல்களுக்காக மகிழ்வடைந்து தாம் செய்யாத (நல்ல) செயல்களுக்காகப் பாராட்டப்பட வேண்டும் என்று விரும்புபவர்கள் (இறை)வேதனையிலிருந்து தப்பித்துவிடுவர் என்று (நபியே! நீர்) எண்ணிவிட வேண்டாம். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. [189]வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.*

*[190]வானங்கள், பூமி ஆகியவற்றின் படைப்பிலும் இரவு பகல் மாறிமாறி வருவதிலும் அறிவுடையோருக்குப் பல சான்றுகள் உள்ளன. [191]அவர்கள் நின்ற நிலையிலும் அமர்ந்த நிலையிலும்*

*சாய்ந்து படுத்த நிலையிலும் அல்லாஹ்வை நினைவு கூர்வார்கள்;
(அவன்) வானங்களையும் பூமியையும் படைத்திருப்பது
பற்றியும் சிந்திப்பார்கள். (பிறகு அவர்கள்) "எங்கள் இறைவா!
நீ இவற்றை(யெல்லாம்) வீணாகப் படைக்கவில்லை; நீ
தனித்துயர்ந்தவன்; எனவே எங்களை நரக நெருப்பின்
வேதனையிலிருந்து காப்பாற்றுவாயாக!" (என்றும்) [192]"எங்கள்
இறைவா! எவரை நீ நரகத்தில் புகுத்தினாயோ அவர்களை
உண்மையில் இழிவுபடுத்தி விட்டாய். தீவினையாளர்களுக்கு
உதவி செய்வோர் எவரும் இல்லை" (என்றும்) [193]"எங்கள்
இறைவா! நம்பிக்கையின்பால் அழைக்கும் ஓர் அழைப்பாளர்,
'உங்கள் இறைவனின் மீது நம்பிக்கைகொள்ளுங்கள்' என்று
அழைப்பு விடுத்ததை நாங்கள் செவியுற்றோம்; உடனே
நம்பிக்கை கொண்டோம். எங்கள் இறைவா! எங்கள்
பாவங்களை மன்னித்தருள்வாயாக! எங்களிடம் உள்ள
தீமைகளை அகற்றுவாயாக! எங்களை நல்லோர்களுடன் இறக்கச்
செய்வாயாக!" (என்றும்) [194]"எங்கள் இறைவா! உன் தூதர்களின்
வாயிலாக நீ எங்களுக்கு அளித்துள்ள வாக்குறுதிகளை
நிறைவேற்றுவாயாக! மறுமை நாளில் எங்களை இழிவுக்குள்ளாக்கி
விடாதே. உறுதியாக நீ வாக்குறுதி மீறமாட்டாய்" (என்றும்)
அவர்கள் இறைஞ்சி வேண்டுவர்.*

*[195]இறைவன் அவர்களின் இறைஞ்சுதலை ஏற்றுக்கொண்டு
"உங்களில் ஆணாயினும் பெண்ணாயினும் எவரது
(நற்)செயலையும் நான் வீணாக்கிவிட மாட்டேன். நீங்கள்
ஒருவர் மற்றொருவருடன் தொடர்புள்ளவராவீர்கள். எனவே
புலம்பெயர்ந்தவர்கள், தம் வீடுகளிலிருந்து வெளியேற்றப்பட்டவர்கள்,
எனது பாதையில் துன்புறுத்தப்பட்டவர்கள், போரிட்டவர்கள்,
அதில் கொல்லப்பட்டவர்கள் ஆகியோரின் பாவங்களை
உறுதியாக நான் அவர்களிடமிருந்து அகற்றி விடுவேன்.
அவர்களைச் சொர்க்கச் சோலைகளில் நுழையச் செய்வேன்.
அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும்" என்று கூறுவான்.*

*இது அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்குக் கிடைக்கும் கூலியாகும். மிகச்சிறந்த கூலி அல்லாஹ்விடமேயுள்ளது.*
*196(நபியே!)மறுப்பாளர்கள் (வசதியுடையவர்களாய் மகிழ்ச்சியுடன்) நகரங்களில் சுற்றித் திரிவது உம்மை ஏமாற்றத்திற்கு உள்ளாக்கி விடவேண்டாம்.*
*197அது (இம்மையின்) அற்ப சுகம்தான். பின்னர் அவர்களின் உறைவிடம் நரகமாகும். அது மிகவும் கொடிய இருப்பிடம்.*
*198ஆயினும் தம் இறைவனை அஞ்சுவோருக்குச் சொர்க்கச் சோலைகள் இருக்கின்றன. அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். இது அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்குக் கிடைக்கும் போற்றுதல் ஆகும். நல்லோர்களுக்காக அல்லாஹ்விடம் இருப்பதே மிகச் சிறந்ததாகும்.*
*199(நம்பிக்கையாளர்களே!) வேதமுடையோரில் சிலர் (இவ்வாறு) உள்ளனர்; அவர்கள் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்கின்றனர். உங்களுக்கு அருளப்பட்ட இ(வ்வேதத்)தையும் தமக்கு அருளப்பட்ட (முந்தைய வேதத்)தையும் ஏற்றுக் கொள்கின்றனர்; அல்லாஹ்விற்குப் பணிந்தவர்களாக இருக்கின்றனர்; அவர்கள் இறைவசனங்களை அற்ப ஊதியத்திற்கு விற்றுவிடுவதில்லை. இறைவனிடம் அவர்களுக்குரிய கூலியுள்ளது. அல்லாஹ் கணக்கெடுப்பதில் மிக விரைவானவன்.*
*200(ஓரிறை) நம்பிக்கையாளர்களே! பொறுமை காத்திருங்கள்; பொறுமை காட்டுவதில் (ஒருவருக்கொருவர்) போட்டியிடுங்கள்; (நம்பிக்கையில்) உறுதியாக நிலைத்து நில்லுங்கள்; அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். நீங்கள் வெற்றியாளர் ஆவீர்கள்.*

## 4. பெண்கள் (அன்னிஸா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*1மனிதர்களே! உங்கள் இறைவனுக்கு அஞ்சி நடந்துகொள்ளுங்கள். அவன் உங்களை ஒரே ஆன்மாவிலிருந்து படைத்தான்; அதிலிருந்தே அதனுடைய இணையைப் படைத்தான். அவ்விருவரிலிருந்து எண்ணற்ற ஆண்களையும் பெண்களையும்*

*(படைத்து உலகில்) பரவச் செய்தான்.* எவனை முன்னிறுத்தி நீங்கள் ஒருவருக்கொருவர் வேண்டிக் கொள்கிறீர்களோ அந்த அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்து கொள்ளுங்கள். உறவுகளைப் பேணுவதில் கவனமாக இருங்கள். உறுதியாக அல்லாஹ் உங்களைக் கண்காணித்துக் கொண்டிருக்கிறான்.* [2]*அநாதைகளின் சொத்துக்களை (அவர்கள் பருவமடைந்த பின்) அவர்களிடம் ஒப்படைத்து விடுங்கள். (அவர்களுடைய) நல்லதற்குப் பதிலாக (உங்களுடைய) கெட்டதை மாற்றி விடாதீர்கள். அவர்களின் சொத்துக்களை உங்கள் சொத்துக்களுடன் சேர்த்து விழுங்கிவிடாதீர்கள். உறுதியாக இது பெரும் பாவமாகும்.* [3]*(உங்கள் பொறுப்பில் உள்ள) அநாதை(ப் பெண்)களிடம் (அவர்களின் அழகிலும் செல்வத்திலும் ஆசைகொண்டு மணக்க விரும்பி) அவர்களுக்குரிய(மணக்கொடை, சொத்துரிமை ஆகிய)வற்றை வழங்கி நியாயமாக நடக்க முடியாது என நீங்கள் அஞ்சினால், நீங்கள் விரும்பும் (வேறு) பெண்கள் இருவரை, மூவரை அல்லது நால்வரைத் திருமணம் செய்துகொள்ளுங்கள். (அம்மனைவியரிடையே) நியாயமாக நடக்கமுடியாது என நீங்கள் அஞ்சினால் ஒரு பெண்ணை மட்டுமே அல்லது உங்கள் வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்ட (அடிமைப்) பெண்ணை மட்டுமே போதுமாக்கிக் கொள்ளுங்கள். நீங்கள் நீதி பிறழாமல் இருப்பதற்கு இதுவே சிறந்த வழியாகும்.* [4]*பெண்களுக்கு அவர்களின் மணக்கொடைகளை மனமுவந்து அளித்துவிடுங்கள். அவர்கள் அதிலிருந்து ஏதேனும் உங்களுக்கு மனமுவந்து விட்டுக் கொடுத்தால் நீங்கள் அதனை நல்லெண்ணத்துடனும் மகிழ்ச்சியுடனும் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.* [5]*(உங்கள் பொறுப்பில் உள்ள அநாதைகள்) விவரம் அறியாதவர்(களாக*

---

***பிறப்பின் அடிப்படையில் மனிதர் அனைவரும் ஒன்றே. ஒவ்வொருவரும் தமது ஆதிமூலத்தை ஒரு பெண், ஓர் ஆணிடமே காணமுடியும். ஆகவே அனைவரும் பெரியதொரு குடும்பத்தின் உறுப்பினர் என்ற முறையில் ஒருவருக்கொருவர் அன்புடனும் நல்லிணக்கத்துடனும் வாழ வேண்டும். இந்த இறைவசனம் உண்டாக்கும் உணர்வு உண்மை இது.**

*இருக்கும் நிலையில், அவர்)களிடம் (உங்கள்) வாழ்க்கைக்கு ஆதாரமாக அல்லாஹ் ஆக்கி வைத்துள்ள உங்களிடமுள்ள (அவர்களின்) செல்வங்களை நீங்கள் ஒப்படைத்துவிட வேண்டாம். அவற்றிலிருந்து அவர்களுக்கு உணவளியுங்கள்; ஆடை அணிவியுங்கள்; அவர்களிடம் கனிவான சொற்களைக் (கொண்டு நல்லறிவுரைகளைக்) கூறுங்கள். [6]அநாதை(ச் சிறுவர்)களை அவர்கள் திருமண வயதை அடையும்வரை (அவர்களிடம் பக்குவ வளர்ச்சியைச்) சோதித்துக்கொண்டே இருங்கள். அவர்களிடம் நீங்கள் தெளிவான அறிவு முதிர்ச்சியைக் கண்டால் அவர்களின் செல்வங்களை அவர்களிடம் ஒப்படைத்து விடுங்கள். அவர்களின் செல்வத்தை விரயம் செய்ய வேண்டாம்; அவர்கள் பெரியவர்களாகிவிடுவார்களே என்று அஞ்சி அவசரமாக விழுங்கிவிடவும் வேண்டாம். (மேலும் அநாதைகளின் பொறுப்பாளர்) செல்வமுடையவர் ஆயின் அவ்வநாதைகளின் செல்வத்திலிருந்து உண்பதைத் தவிர்த்துக் கொள்ளட்டும். ஏழ்மை நிலையில் இருப்பவர் நியாயமான முறையில் உண்டு கொள்ளட்டும். அநாதைகளின் செல்வங்களை நீங்கள் அவர்களிடம் ஒப்படைக்கும்போது அதற்குச் சாட்சிகளை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். கணக்குக் கேட்பதற்கு அல்லாஹ் போதுமானவன்.*

*[7]பெற்றோர் மற்றும் நெருங்கிய உறவினர் விட்டுச் சென்ற (சொத்)தில் ஆண்களுக்குப் பங்கு உண்டு; (அதைப் போலவே) பெற்றோர் மற்றும் நெருங்கிய உறவினர் விட்டுச் சென்ற சொத்தில் பெண்களுக்கும் பங்கு உண்டு. அ(ந்தச் சொத்)து குறைவாகவோ அதிகமாகவோ எப்படி இருந்தாலும் சரியே. இது (அல்லாஹ்வினால்) விதிக்கப்பட்ட பங்காகும். [8]பங்கீடு செய்யும்போது (சொத்துக்கு உரிமையற்ற) உறவினர்களோ, அநாதைகளோ, ஏழைகளோ வந்தால், அவர்களுக்கும் அதிலிருந்து ஏதேனும் கொடுங்கள். அவர்களோடு கனிவாகப் பேசுங்கள். [9]தமக்குப் பின் பலவீனமான குழந்தைகளை விட்டுச்செல்ல நேர்வோர் (அவர்களைக் குறித்து) அஞ்சுவதுபோல் (அநாதைகள் தொடர்பாகவும்) அஞ்சி*

*நடந்துகொள்ளட்டும். எனவே அவர்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி நேர்மையான வார்த்தைகளையே பேசட்டும்.*
*[10]அநாதைகளின் செல்வங்களை முறைகேடாக உண்பவர்கள் தங்கள் வயிறுகளில் நெருப்பைத்தான் நிரப்பிக்கொள்கிறார்கள். அவர்கள் விரைவில் கொழுந்து விட்டெரியும் (நரக)நெருப்பில் எரிவார்கள்.*

*[11]உங்கள் பிள்ளைகளிடையே (சொத்துப் பங்கீட்டில்) ஓர்ஆணின் பங்கு இரண்டு பெண்களின் பங்கிற்குச் சமமாகும். (ஆண் பிள்ளைகள் இல்லாமல் இரண்டு அல்லது) இரண்டுக்கும் மேற்பட்ட பெண்கள் இருந்தால், அவர்களுக்கு (இறந்த) அவர் விட்டுச்சென்ற(சொத்)தில் மூன்றில் இரண்டு பங்கு உண்டு. ஒரே பெண்ணாக இருந்தால் அவளுக்குப் பாதி உண்டு. இறந்து போனவருக்குக் குழந்தைகள் இருக்க, அவருடைய (பெற்றோரும் இருந்தால்) தாய், தந்தை ஒவ்வொருவருக்கும் அவர் விட்டுச்சென்ற(சொத்)தில் ஆறில் ஒரு பங்கு உண்டு. இறந்துபோனவருக்கு குழந்தைகள் இல்லாமல் பெற்றோரே அவருக்கு வாரிசுகளாக இருந்தால் அவரது தாய்க்கு மூன்றில் ஒரு பங்கு உண்டு. அவருக்குச் சகோதர சகோதரிகள் இருந்தால் அவரது தாய்க்கு ஆறில் ஒரு பங்கு உண்டு. இவையாவும் இறந்தவர் செய்த இறுதி விருப்பத்தையும் கடன்களையும் நிறைவேற்றிய பிறகே செய்யப்படவேண்டும். உங்கள் பெற்றோர்களோ உங்கள் பிள்ளைகளோ உங்களுக்குப் பயனளிப்பதில் மிக நெருங்கியவர்கள் யார் என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள். இவை அல்லாஹ் வரையறுத்துள்ளவை ஆகும். உறுதியாக அல்லாஹ் நன்கறிந்தவன்; ஞானம் மிக்கவன்,*

*[12]உங்கள் மனைவிகளுக்குப் பிள்ளைகள் இல்லையென்றால் அவர்கள் விட்டுச் சென்ற(சொத்)தில் பாதி உங்களுக்கு உண்டு. அவர்களுக்குப் பிள்ளைகள் இருந்தால் அவர்கள் விட்டுச் சென்ற(சொத்)தில் நான்கில் ஒரு பங்குதான் உங்களுக்கு உண்டு. இவை யாவும் அவர்கள் செய்த இறுதிவிருப்பத்தையும் கடன்களையும் நிறைவேற்றிய பின்னரே (பங்கிடப்பட வேண்டும்.)*

*உங்களுக்குப் பிள்ளைகள் இல்லையென்றால் நீங்கள் விட்டுச் சென்ற(சொத்)திலிருந்து (உங்கள் மனைவியராகிய) அவர்களுக்கு நான்கில் ஒரு பங்கு உண்டு. உங்களுக்குப் பிள்ளைகள் இருந்தால் நீங்கள் விட்டுச்சென்ற(சொத்)தில் உங்கள் மனைவியருக்கு எட்டில் ஒரு பங்குதான் உண்டு. இதுவும் நீங்கள் செய்த இறுதிவிருப்பத்தையும் கடன்களையும் நிறைவேற்றிய பின்னரே ஆகும். நேரடி வாரிசுகள் (பெற்றோர் அல்லது குழந்தைகள்) இல்லாதவராக இறந்துவிட்ட ஆணுக்கோ, பெண்ணுக்கோ ஒரு சகோதரர் அல்லது ஒரு சகோதரி இருந்தால் ஒவ்வொருவருக்கும் ஆறில் ஒரு பங்கு உண்டு. அவர்கள் அதைவிட அதிகமாக இருந்தால் அவர்கள் மூன்றில் ஒரு பங்கில் (சமமான) கூட்டாளிகள் ஆவர். அதுவும் அவர் செய்த இறுதி விருப்பத்தையும் கடன்களையும் நிறைவேற்றிய பிறகே ஆகும். அவர் (இறுதி விருப்பத்தைக் கொண்டு வாரிசுகளுக்குப்) பாதிப்பளிக்காதவராக இருக்கவேண்டும். இது அல்லாஹ்விடமிருந்து வந்த கட்டளையாகும். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; பொறுமையாளன். [13]இவை இறை வரம்புகளாகும். அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்ப்படிவோரை அவன் சொர்க்கச்சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பர். இதுவே மாபெரும் வெற்றியாகும். [14]அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் எதிராகச் செயல்பட்டு அவன் விதித்துள்ள வரம்புகளை மீறுபவனை அவன் நெருப்பில் நுழையச் செய்வான். அதில் அவன் என்றென்றும் கிடப்பான். அவனுக்கு இழிவுதரும் வேதனையுண்டு.*

*[15]உங்கள் பெண்களில் யாரேனும் ஒழுக்கக்கேடான (குற்றத்)தைச் செய்துவிட்டால் அதை நிரூபிக்க உங்களிலிருந்து நான்கு (ஆண்) சாட்சிகளைக் கொண்டுவாருங்கள். அவர்கள் சாட்சியம் கூறிவிட்டால் அப்பெண்கள் இறந்துபோகும் வரை அல்லது அல்லாஹ் அவர்களுக்கு ஏதேனும் ஒரு வழியை ஏற்படுத்தும்வரை வீடுகளுக்குள் தடுத்துவையுங்கள்.*

[16](அதேபோன்று) உங்கள் ஆண்களில் இருவர் அ(க்குற்றத்)தைச்
செய்துவிட்டால் அவர்களைத் தண்டியுங்கள். அவர்கள் இருவரும்
மனம் வருந்தித் தங்களைச் சீர்திருத்திக் கொண்டால் அவர்களை
விட்டுவிடுங்கள். உறுதியாக அல்லாஹ் பாவமன்னிப்பை
ஏற்றுக்கொள்பவன்; நிகரற்ற அன்பாளன். [17]எவர் அறியாமையால்
தீயசெயலைச் செய்துவிட்டுப் பின்னர் உடனடியாகப்
பாவமன்னிப்புக் கோருகின்றனரோ அவர்களைத்தான்
அல்லாஹ் மன்னிப்பான். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்;
ஞானம் மிக்கவன். [18]தொடர்ந்து பாவங்கள் செய்துகொண்டே
இருந்து இறக்கும் தறுவாயில் இறுதியாக "நான் பாவமன்னிப்புக்
கோருகிறேன்" என்று கூறுகின்றவர்களுக்கும் (இறை)மறுப்பு
நிலையிலேயே இறப்பவர்களுக்கும் மன்னிப்புக் கிடையாது.
அவர்களுக்காகவே நாம் துன்புறுத்தும் வேதனையைத்
தயார்செய்து வைத்துள்ளோம்.

[19](ஓரிறை)நம்பிக்கையாளர்களே! (இறந்தவருடைய விதவைப்)
பெண்களை (இறந்தவர் விட்டுச் சென்ற சொத்தாகக் கருதி
அவருடைய வாரிசுகள்) வலுக்கட்டாயமாக உரிமைப்படுத்திக்
கொள்வது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டதன்று. (உங்கள்
மனைவியருள்) நீங்கள் வெறுக்கும் பெண்கள் வெளிப்படையாக
ஒழுக்கக்கேடான செயலைச் செய்தாலன்றி, அவர்களுக்கு நீங்கள்
வழங்கிய (மணக்கொடை போன்ற) சிலவற்றை எடுத்துக்கொள்ளும்
பொருட்டு அவர்களைத் தடுத்து வைக்காதீர்கள். அவர்களுடன்
நல்லமுறையில் குடும்ப வாழ்க்கை நடத்துங்கள். நீங்கள்
அவர்களை வெறுத்தால் – ஒன்றை நீங்கள் வெறுக்கக் கூடும்;
அல்லாஹ் அதில் உங்களுக்குப் பல்வேறு நன்மைகளை
வைத்திருக்கலாம். [20]நீங்கள் ஒரு மனைவியை மணவிலக்குச்
செய்து வேறொரு பெண்ணை மணக்க விரும்பினால், நீங்கள்
(மணவிலக்கு செய்த) அவளுக்கு (மணக்கொடையாக) ஒரு
(பொற்) குவியலையே வழங்கியிருந்தாலும் அதிலிருந்து எதையும்
(திரும்ப) எடுத்துக்கொள்ளாதீர்கள். நீங்கள் (அவள்மீது)

*பழிச்சொல் கூறியும் வெளிப்படையாகக் கொடுமை இழைத்தும் அதனை எடுத்துக்கொள்வீர்களா?* [21]*அவர்கள் உங்களிடம் உறுதியான வாக்குறுதியைப் பெற்று ஒருவரோடு ஒருவர் கலந்துறவாடியிருக்கும் நிலையில் நீங்கள் அதனை எவ்வாறு எடுத்துக்கொள்வீர்கள்?* [22]*கடந்த காலத்தில் நடந்து முடிந்து விட்டதைத் தவிர, உங்கள் தந்தையர் மணமுடித்துக்கொண்ட பெண்களை இனி நீங்கள் மணந்துகொள்ளாதீர்கள். உறுதியாக இது ஒழுக்கக்கேடான, வெறுக்கத்தக்க, மிகவும் தீய செயலாகும்.*

[23]*உங்கள் அன்னையர், புதல்வியர், சகோதரிகள், (உங்கள்) தந்தையின் சகோதரிகள், அன்னையரின் சகோதரிகள், சகோதரனின் புதல்வியர், சகோதரியின் புதல்வியர், உங்களுக்குப் பாலூட்டிய (செவிலித்) தாய்கள், உங்கள் பால்குடிச் சகோதரிகள், உங்கள் மனைவியரின் அன்னையர், நீங்கள் உடலுறவுகொண்ட மனைவியருக்கு (அவர்களுடைய முந்தைய கணவன் மூலம்) பிறந்து உங்கள் வளர்ப்பில் உள்ள புதல்வியர் ஆகியோரைத் திருமணம் செய்துகொள்வது உங்களுக்குத் தடை செய்யப்பட்டுள்ளது. ஆனால் அந்த மனைவியருடன் நீங்கள் உடலுறவு கொள்ளாத நிலையில் (அவர்களை மணவிலக்குச் செய்திருந்தால்) அப்பெண்மக்களைத் திருமணம்செய்வது உங்கள் மீது குற்றமாகாது. இதற்கு முன் நடந்து விட்டவற்றைத் தவிர உங்கள் சொந்த மகன்களின் மனைவியரை மணமுடிப்பதும் சகோதரிகள் இருவரை ஒன்றாகச் சேர்த்து மணமுடிப்பதும் தடுக்கப்பட்டுள்ளன. உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.* [24]*மணமாகிய (கணவருடன் வாழும்) பெண்களும் உங்களுக்குத் தடை செய்யப்பட்டுள்ளனர், நீங்கள் உரிமை கொண்டுள்ள (அடிமைப்) பெண்களைத் தவிர! இவை அல்லாஹ் உங்களுக்கு இட்ட கட்டளையாகும். இவர்களைத் தவிர ஏனைய பெண்களைத் தவறான முறையில் அல்லாமல் உங்கள் பொருள்களிலிருந்து (மணக்கொடை வழங்கி) மணம்புரிந்து அடைந்துகொள்வது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது.*

*(மணக்கொடை அளிக்கப்படவில்லையெனில்) அவர்களில் நீங்கள் இன்பம் அனுபவித்த அவர்களுக்கு வரையறுக்கப்பட்ட மணக்கொடையை அளித்துவிடுங்கள் (அதனை) வரையறுத்த பின்னர் (அதைக் கூட்டவோ குறைக்கவோ) உங்களிடையே நீங்கள் ஏதேனும் உடன்பாடு செய்துகொண்டால் உங்கள் மீது குற்றமேதுமில்லை. உறுதியாக அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்.*

*[25]உங்களில் சுதந்திரமான, நம்பிக்கைகொண்ட பெண்களை மணமுடித்துக்கொள்ள வசதியற்றவர் உங்களிடம் உள்ள நம்பிக்கைகொண்ட அடிமைப் பெண்களில் யாரையாவது மணந்துகொள்ளட்டும். அல்லாஹ் உங்கள் நம்பிக்கையை நன்கு அறிந்தவன். (அடிமைப் பெண்கள் உள்ளிட்ட நம்பிக்கையாளர்களாகிய) நீங்கள் அனைவரும் ஒருவருக்கு ஒருவர் சமமானவர்களே. எனவே அடிமைப் பெண்களின் உரிமையாளர்களுடைய அனுமதி பெற்று அவர்களை மணந்துகொள்ளுங்கள். முறைப்படி அவர்களுக்குரிய மணக்கொடைகளை அளித்துவிடுங்கள் அவர்கள் ஒழுக்கமானவர்களாகவும் தவறான நடத்தையில் ஈடுபடாதவர்களாகவும் கள்ளக்காதலர்களை வைத்துக் கொள்ளாதவர்களாகவும் இருக்கவேண்டும். திருமணம் செய்துகொள்ளப்பட்ட (அடிமைப்) பெண்கள் நடத்தை தவறினால் (இத்தகைய குற்றம் செய்த திருமணமான) சுதந்திரப் பெண்களுக்கு விதிக்கப்படும் தண்டனையில் பாதி அவர்களுக்கு விதிக்கப்படும். உங்களில் எவர் (மனைவியின்றி இருந்தால்) தவறுசெய்ய நேரும் என அஞ்சுகிறாரோ அவருக்கே (அடிமைப் பெண்ணை மணக்கும்) இந்த அனுமதி(உரியதாகும்). (எனினும் திருமணமின்றியே) நீங்கள் பொறுமையைக் கடைப்பிடித்தால் அதுவே உங்களுக்கு மிகச் சிறந்ததாகும். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன். [26]அல்லாஹ் உங்களுக்குத் தெளிவாக விளக்கவும் உங்களுக்கு முன்சென்ற (நல்ல)வர்களின் நேர்வழிகளில் உங்களை*

*செலுத்தவும் அருட்பார்வை செலுத்தவுமே விரும்புகிறான். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன். [27]அல்லாஹ் உங்கள்மீது அருட்பார்வையைச் செலுத்தவே விரும்புகிறான். ஆனால் தம் மன விருப்பங்களைப் பின்பற்றுபவர்கள், நீங்கள் (நேர்வழியிலிருந்து) மிகுதொலைவு சென்றுவிடவேண்டும் என்று விரும்புகின்றனர். [28]அல்லாஹ் (தன் கட்டளைகளை) உங்களுக்கு எளிதாக்கவே விரும்புகிறான். ஏனெனில் மனிதன் (மன) வலுவற்றவனாகவே படைக்கப்பட்டுள்ளான்.*

*[29](இறை)நம்பிக்கையாளர்களே! உங்களிடையே இணக்கத்துடன் நடைபெறும் வணிகத்தின் மூலமாக (ஈட்டிக் கொள்வது) அல்லாமல் ஒருவர் செல்வத்தை ஒருவர் தவறான முறையில் உண்ணாதீர்கள். (இதற்காக) நீங்கள் ஒருவர் மற்றவரைக் கொலை செய்யாதீர்கள். உறுதியாக அல்லாஹ் உங்கள்மீது நிகரற்ற அன்பாளனாக இருக்கிறான். [30]எவனேனும் வரம்புமீறி முறைகேடாக இவ்வாறு செய்தால் அவனை நாம் நரகத்தில் எரிப்போம். இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது. [31]தடை செய்யப்பட்டுள்ள பெரும் பாவங்களிலிருந்து நீங்கள் விலகிக் கொண்டால் நாம் உங்களின் சிறுபாவங்களை அகற்றி விடுவோம். உங்களைக் கண்ணியமான இடத்தில் நுழையச் செய்வோம். [32]உங்களில் சிலரைவிடச் சிலரை அல்லாஹ் மேன்மையாக்கி வைத்திருப்பதுகொண்டு ஏக்கம் கொள்ளாதீர்கள். ஆண்களுக்கு அவர்கள் ஈட்டிய(நல்ல)வற்றுக்கேற்ற பங்கு உண்டு. பெண்களுக்கும் அவர்கள் ஈட்டிய(நல்ல)வற்றுக்கேற்ற பங்கு உண்டு. (ஆகவே) அல்லாஹ்விடமே அவனது அருளைக் கேளுங்கள். உறுதியாக அல்லாஹ் யாவற்றையும் அறிந்தவன். [33]தாய், தந்தையரும் நெருங்கிய உறவினர்களும் விட்டுச் சென்ற(சொத்)திலிருந்து (வரையறுத்தபடி ஆண், பெண்) வாரிசுகளை ஏற்படுத்தியுள்ளோம். நீங்கள் (வாரிசுரிமை) உடன்படிக்கை செய்து கொண்டவர்களுக்கும் அவர்களுக்குரிய பங்கைக் கொடுத்துவிடுங்கள். உறுதியாக அல்லாஹ் யாவற்றையும் கண்காணித்துக் கொண்டிருக்கிறான்.*

[34]ஆண்கள், பெண்களின் காப்பாளர்கள் ஆவர். இதற்குக் காரணம் அல்லாஹ் சிலரைவிடச் சிலரை மேன்மையாக்கி வைத்திருக்கிறான்; (மேலும் ஆண்களாகிய) அவர்கள் தங்கள் செல்வத்திலிருந்து (பெண்களாகிய) அவர்களுக்குச் செலவும் செய்கின்றனர். எனவே நல்ல பெண்கள் கீழ்ப்படிந்து நடப்பார்கள். (கணவன்) இல்லாத பொழுதில் (தம் ஒழுக்கத்தையும் கணவனின் உடைமைகளையும்) அல்லாஹ் வழங்கிய பாதுகாப்பைக் கொண்டு காத்துக்கொள்வார்கள். எந்தப் பெண்களின் நன்னடத்தை குறித்து அவர்கள் கீழ்ப்படியமாட்டார்கள் என்று நீங்கள் அஞ்சுகிறீர்களோ அவர்களுக்கு அறிவுரை கூறுங்கள்; (திருந்தாவிடில்) அவர்களை படுக்கையில் விலக்கிவையுங்கள்; (பின்னும்) திருந்தாவிடில் அவர்களை (மெலிதாக) அடியுங்கள். பிறகு அவர்கள் உங்களுக்குக் கீழ்ப்படிந்துவிட்டால் அவர்களுக்கு எதிராக(க் குற்றம் சுமத்த) எந்த வழியையும் தேடாதீர்கள். உறுதியாக அல்லாஹ் உயர்ந்தவன்; மிகப் பெரியவன். [35](கணவன், மனைவி ஆகிய) அவ்விருவரிடையே பிளவு ஏற்பட்டுவிடுமோ என நீங்கள் அஞ்சினால் அவனுடைய குடும்பத்தாரிலிருந்து ஒரு நடுவரையும் அவளுடைய குடும்பத்திலிருந்து ஒரு நடுவரையும் நியமித்துக் கொள்ளுங்கள். அவ்விருவரும் (கணவன் மனைவிக்கிடையே) இணக்கத்தை ஏற்படுத்த விரும்பினால் அல்லாஹ் அவர்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்திவிடுவான். உறுதியாக அல்லாஹ் யாவற்றையும் அறிந்தவன்; நன்கு உணர்ந்தவன்.

[36]அல்லாஹ்வை வணங்குங்கள். அவனுக்கு எதனையும் இணையாக்காதீர்கள். தாய் தந்தையர், உறவினர், அநாதைகள், ஏழைகள், உறவினரான அண்டை வீட்டார், அந்நியரான அண்டை வீட்டார், (தொழிலில், பயணத்தில்) உங்களுடன் இருக்கும் தோழர்கள், வழிப்போக்கர்கள், உங்கள் அடிமைகள் ஆகியோருடன் நல்லமுறையில் நடந்துகொள்ளுங்கள். உறுதியாக செருக்குக்கொண்டு தற்பெருமை பேசுவோரை அல்லாஹ் நேசிப்பதில்லை; [37](மேலும்) கஞ்சத்தனம் செய்வோர்,

*(மற்ற) மக்களையும் கஞ்சத்தனம் செய்யத் தூண்டுவோர்,*
*அல்லாஹ் தன் அருளிலிருந்து வழங்கியவற்றை மறைப்போர்*
*ஆகியோரையும் அல்லாஹ் நேசிப்பதில்லை; மறுப்பாளர்களுக்கு*
*இழிவுமிக்க வேதனையை நாம் தயார்செய்து வைத்துள்ளோம்.*
*[38]மக்களுக்குக் காட்டுவதற்காகவே தம் செல்வங்களை செலவு*
*செய்வோரையும் அல்லாஹ்வின் மீதும் மறுமைநாளின் மீதும்*
*நம்பிக்கைகொள்ளாதோரையும் (அல்லாஹ் நேசிப்பதில்லை.)*
*சாத்தானை உற்ற நண்பனாக்கிக் கொண்டவன் எவ்வளவு கொடிய*
*நண்பனைப் பெற்றிருக்கிறான்! [39]அல்லாஹ்வின் மீதும் மறுமை*
*நாளின் மீதும் நம்பிக்கைகொண்டு, அல்லாஹ் அவர்களுக்கு*
*வழங்கியதிலிருந்து (அறச்)செலவு செய்தால் அவர்களுக்கு என்ன*
*(இழப்பு) ஏற்பட்டுவிடப் போகிறது? அல்லாஹ் அவர்களை*
*முற்றும் அறிந்தவன். [40]உறுதியாக அல்லாஹ் எவருக்கும் ஒரு*
*கடுகு வித்தளவுகூட அநீதியிழைக்கமாட்டான். (அவன் செய்தது)*
*நன்மையாக இருந்தால் அதை அவன் இரட்டிப்பாக்கி விடுவான்;*
*தன்னிடமிருந்து மாபெரும் கூலியையும் வழங்குவான்.*

*[41](நபியே! மறுமையில்) நாம் ஒவ்வொரு சமூகத்திலிருந்தும்*
*ஒரு சாட்சியாளரைக் கொண்டு வந்து உம்மை இவர்களுக்குச்*
*சாட்சியாளராகக் கொண்டு வரும்போது (இவர்களுடைய நிலை)*
*எப்படியிருக்கும்?*

*[42](மறுமையாகிய) அந்நாளில் (அல்லாஹ்வை) மறுத்துத்*
*தூதருக்கு எதிராகச் செயல்பட்டவர்கள் “பூமி (பிளந்து தங்களை*
*விழுங்கி) சமதளமாகிவிடக் கூடாதா?” என்று ஏங்குவர்.*
*அவர்களால் எதையும் அல்லாஹ்விடம் மறைக்க இயலாது.*

*[43]நம்பிக்கையாளர்களே! நீங்கள் கூறுவது உங்களுக்கே*
*விளங்காதவாறு போதையிலிருக்கும் நிலையில் தொழுகையை*
*நெருங்காதீர்கள். (உடலுறவுக்குப் பின்) குளித்தல் கட்டாயமான*
*நிலையிலும் குளிக்கும்வரை தொழுகையை நெருங்காதீர்கள் –*
*நீங்கள் பயணத்தில் இருந்தாலன்றி! நீங்கள் நோயாளியாகவோ*

பயணத்திலோ இருந்தால் அல்லது மலம், சிறுநீர் கழித்துவிட்டு
வந்தால் அல்லது நீங்கள் பெண்களைத் தீண்டியிருந்தாலோ
(குளிப்பதற்காக) உங்களுக்குத் தண்ணீர் கிடைக்கவில்லையெனில்
சுத்தமான மண்ணால் ‘தயம்மும்’ செய்யுங்கள். (மண்ணில்
தோய்த்த கைகளால்) உங்கள் முகங்களையும் கைகளையும்
தடவிக்கொள்ளுங்கள். உறுதியாக அல்லாஹ் பிழை பொறுப்பவன்;
பெரும் மன்னிப்பாளன். 44(நபியே!) வேதத்திலிருந்து
ஒருபகுதி வழங்கப்பட்டோரை நீர் கவனிக்கவில்லையா?
அவர்கள் கெடுவழியை விலைக்கு வாங்குகின்றனர்; நீங்களும்
வழிதவறிவிட வேண்டும் என்று விரும்புகின்றனர். 45(ஓரிறை
நம்பிக்கையாளர்களே!) அல்லாஹ் உங்கள் பகைவர்களை
நன்கறிவான். பாதுகாப்பதற்கும் அல்லாஹ்வே போதுமானவன்;
உதவி புரிவதற்கும் அல்லாஹ்வே போதுமானவன். 46யூதர்களில்
ஒரு பிரிவினர் சொற்களை அவற்றிற்குரிய இடங்களிலிருந்து
புரட்டி விடுகின்றனர். (நபியே! உம்மிடம்) “நாங்கள் செவியுற்றோம்,
(ஆனால்) கீழ்ப்படியமாட்டோம். கேளுங்கள் உங்களுக்கு அது
கேட்காமல் போகட்டும்” என்று கூறுகிறார்கள். மார்க்கத்தை
குறைகூறித் தங்கள் நாவுகளை வளைத்து (உம்மை நோக்கி
“ராயினா” (இருபொருள்: ‘எங்களைக் கவனியுங்கள்’ ‘இடையரே’)
என்றும் கூறுகிறார்கள். “நாங்கள் செவியுற்றோம், கீழ்ப்படிந்தோம்
(நாங்கள் சொல்வதைக்) கேளுங்கள், “உன்ளுர்னா” (எங்களை
அன்பாக நோக்குவீராக) என்று அவர்கள் கூறியிருந்தால் அது
அவர்களுக்குச் சிறந்ததாகவும் சீரானதாகவும் அமைந்திருக்கும்.
ஆயினும் அவர்களின் மறுப்பினால் அல்லாஹ் அவர்களைச்
சபித்து விட்டான். எனவே அவர்களுள் மிகக் குறைவானவர்களே
அன்றி (ஏனையோர்) நம்பிக்கைகொள்ளமாட்டார்கள்.

47வேதமுடையோரே! நாம் (உங்கள்) முகங்களைச் சிதைத்து
அவற்றை முதுகுப்புறம் திருப்புவதற்கு முன்னர், அல்லது
சனிக்கிழமைக்காரர்களைச் சபித்ததைப்போல(உங்களை)ச் சபிப்பதற்கு

*முன்னர் நாம் அருளியதன்மீது நம்பிக்கை கொள்ளுங்கள். அது
உங்களிடமுள்ள(வேதத்)தை உண்மைப்படுத்தக்கூடியதாகும்.
அல்லாஹ்வின் கட்டளை நிறைவேறியே தீரும். [48]உறுதியாக
அல்லாஹ் தனக்கு இணைவைப்பதை மன்னிக்கவே மாட்டான்.
அதனைத்தவிர(ப் பிற பாவம்) எதனையும் தான் விரும்புவோர்க்கு
மன்னித்து விடுவான். அல்லாஹ்வுக்கு இணைவைப்பவர்
மிகப்பெரும் பாவத்தைச் செய்தவராவார். [49]தம்மைத்தாமே
தூய்மையானவர்கள் என்று கருதிக்கொள்வோரை நீர்
கவனிக்கவில்லையா? மாறாக தான் விரும்பியோரை
அல்லாஹ்தான் தூய்மைப்படுத்துகிறான். அவர்கள்மீது மிகச்சிறு
அளவும் அநீதியிழைக்கப்பட மாட்டாது. [50](நபியே!) இவர்கள்
அல்லாஹ்வின்மீது எவ்வாறு பொய்யைப் புனைகிறார்கள்
என்பதைப் பார்ப்பீராக! வெளிப்படையான பாவத்திற்கு இதுவே
போதுமான சான்றாகும்.*

*[51]வேதத்திலிருந்து ஒருபகுதி வழங்கப்பட்டோரை
(நபியே!) நீர் கவனிக்கவில்லையா? அவர்கள் சிலைகளையும்
தீயசக்திகளையும் நம்புகின்றனர். மறுப்பாளர்களைக் குறித்து
“இவர்கள்தாம் நம்பிக்கையாளர்களைவிட மிகச்சரியான
பாதையில் இருக்கின்றனர்” எனக் கூறுகின்றனர். [52]இத்தகைய
மக்களைத்தான் அல்லாஹ் சபித்துள்ளான். அல்லாஹ்வால்
சபிக்கப்பட்டவர்களுக்கு உதவிபுரிவோர் எவரையும் நீர்
காணமாட்டீர். [53](இறைவனின்) ஆட்சியில் இவர்களுக்கு ஏதாவது
பங்கு இருக்கிறதா? (அவ்வாறு இருக்குமானால்) இவர்கள்
மக்களுக்கு எள்ளளவும் எதையும் அளிக்கமாட்டார்கள். [54]தன்
அருளால் (மற்ற) மக்களுக்கு அல்லாஹ் வழங்கியுள்ளதற்காக
(அவர்கள் மீது) இவர்கள் பொறாமை கொள்கின்றனரா? நாம்
ஆப்ரஹாமின் குடும்பத்தாருக்கு வேதத்தையும் ஞானத்தையும்
அருளினோம். நாம் அவர்களுக்கு மாபெரும் அரசாட்சியையும்
வழங்கினோம். [55](எனினும்) அவர்களில் சிலர் (மட்டும்)
அதன்மீது நம்பிக்கை கொண்டனர். சிலர் அதனைப் புறக்கணித்து
விட்டனர். இத்தகையோருக்கு நரகத்தின் கொழுந்து விட்டெரியும்*

நெருப்பே பொருத்தமானதாகும். [56]எமது (வேத) வசனங்களை
மறுப்போரை உறுதியாக நாம் நரகத்தில் புகுத்தி விடுவோம்.
அவர்களின் தோல்கள் கருகிவிடும்போதெல்லாம் வேதனையை
அனுபவித்துக் கொண்டே இருப்பதற்காக (அவர்களுக்கு) வேறு
தோல்களை மாற்றுவோம். உறுதியாக அல்லாஹ் யாவற்றினும்
வல்லவன்; ஞானம் மிக்கவன்.

[57]நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோரை நாம் சொர்க்கச்
சோலைகளில் நுழையச் செய்வோம். அவற்றிடையே ஆறுகள்
ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும்
தங்கியிருப்பர். அங்கே அவர்களுக்குத் தூய்மையான இணைகளும்
உண்டு. நாம் அவர்களை அடர்ந்த நிழல்களிலும் நுழையச்
செய்வோம்.

[58](நம்பிக்கையாளர்களே!) உங்களிடம் நம்பி ஒப்படைக்கப்பட்ட
அடைக்கலப் பொருள்களை உரியவர்களிடம் ஒப்படைத்துவிட
வேண்டும் என்றும் மக்களிடையே தீர்ப்பு வழங்கும்போது
நியாயமான முறையில் தீர்ப்பளிக்க வேண்டும் என்றும்
அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகிறான். அல்லாஹ்
வழங்கும் இந்த அறிவுரைகள் மிகச் சிறப்பானவை. உறுதியாக
அல்லாஹ் அனைத்தையும் செவியுறுபவன்; உற்றுநோக்குபவன்.
[59](இறை)நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படியுங்கள்
தூதருக்கும் உங்களில் அதிகாரம் வழங்கப்பட்டோருக்கும்
கீழ்ப்படியுங்கள். உங்களிடையே ஏதாவதொன்றில் பிணக்கு
ஏற்பட்டால் நீங்கள் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின்மீதும்
நம்பிக்கைகொண்டவர்களாயின் அதனை அல்லாஹ்விடமும்
தூதரிடமும் கொண்டு செல்லுங்கள். இதுவே சிறந்ததும் நல்ல
முடிவும் ஆகும்.

[60](நபியே!) “உமக்கு அருளப்பட்டதையும் உமக்கு முன்னால்
அருளப்பட்டதையும் (நாங்கள்) நம்பிக்கைகொண்டோம்” என்று
வாதிடுவோரை நீர் பார்க்கவில்லையா? ஆனால் தீய சக்திகளை
மறுத்து ஒதுக்குமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டிருந்தும்

*அவர்கள் தீய சக்திகளிடமே தீர்ப்புத் தேடிச் செல்ல விரும்புகின்றனர். சாத்தானோ அவர்களை நல்வழியிலிருந்து மிகுதொலைவில் தள்ளிவிடவே விரும்புகிறான். [61]"அல்லாஹ் அருளிய வேதத்தை நோக்கியும் தூதரை நோக்கியும் வாருங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால் அந்நயவஞ்சகர்கள் உம்மைவிட்டு விலகிச் செல்வதையே நீர் காண்பீர். [62]அவர்களின் கைகள் தேடிக்கொண்ட (தீ)வினைகளின் விளைவாக அவர்களுக்கு ஒரு துன்பம் நேரும்போது (அவர்களின்) நிலைமை என்னவாகும்? அப்போது அவர்கள் உம்மிடம் வந்து "அல்லாஹ்வின்மீது ஆணையாக, நன்மையையும் இணக்கத்தையும் தவிர வேறெதனையும் நாங்கள் விரும்பவில்லை" என்று சத்தியம் செய்கின்றனர். [63]அவர்களின் உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் நன்கறிவான். எனவே நீர் அவர்களைப் பொருட்படுத்தாமல் அவர்களுக்கு அறிவுரை கூறுவீராக! அவர்களின் உள்ளங்களில் பதிந்து விடும்படியான சொற்களைக் கூறுவீராக!*

*[64]எந்தத் தூதரையும் அல்லாஹ்வின் கட்டளைப்படி மக்கள் அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும் என்பதற்காகவே அன்றி (வேறு நோக்கத்தில்) நாம் அனுப்பவில்லை. (நபியே!) மக்கள் தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொள்ளும்போதெல்லாம் உம்மிடம் வந்து அல்லாஹ்வின் மன்னிப்பை வேண்ட, தூத(ராகிய நீ)ரும் அவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோரினால் உறுதியாக அவர்கள் அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன் என்பதைக் கண்டு கொள்வார்கள். [65](நபியே!) உம் இறைவனின் மீது ஆணையாக, அவர்கள் தங்களுக்கிடையே ஏற்பட்ட பிணக்குகளுக்கு உம்மை நீதிபதியாக ஏற்றுப் பின்னர் உமது தீர்ப்பைக் குறித்துத் தங்களது உள்ளங்களில் எந்தக் குறையுமின்றி அதனை முழு மனதாக ஏற்றுக்கொள்ளும் வரை அவர்கள் ஒருபோதும் நம்பிக்கையாளர்களாக முடியாது. [66]"உங்கள் உயிர்களை "மாய்த்துக்கொள்ளுங்கள்" என்றோ "உங்கள் வீடுகளைவிட்டு வெளியேறி விடுங்கள்" என்றோ நாம் (நயவஞ்சகர்களாகிய) அவர்களுக்குக் கட்டளையிட்டிருந்தால் அவர்களில் மிகு சிலரே*

*(அவ்வாறு) செய்திருப்பார்கள். அவர்களுக்கு வழங்கப்பட்ட அறிவுரையின்படி செயல்பட்டிருந்தால் அது அவர்களுக்குச் சிறந்ததாகவும் நம்பிக்கையை உறுதிப்படுத்துவதாகவும் இருந்திருக்கும். [67]அப்போது நாம் அவர்களுக்கு எம்மிடமிருந்து மாபெரும் கூலியை வழங்கியிருப்போம்; [68](அவர்களுக்கு) நேர்வழியைக் காட்டியிருப்போம். [69]அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் கீழ்ப்படிகின்றவர்கள் (மறுமையில்) அல்லாஹ்வின் அருளைப் பெற்றவர்களான தூதர்கள், உண்மையாளர்கள், சாட்சியாளர்கள், நல்லோர்கள் ஆகியோருடன் இருப்பர். அவர்களது தோழமை எவ்வளவு சிறப்பானது! [70]இது அல்லாஹ்வின் அருளாகும். (இத்தகையோரை அறிந்துகொள்ள) அல்லாஹ்வின் முடிவற்ற அறிவே போதுமானதாகும்.*

*[71](ஓரிறை)நம்பிக்கையாளர்களே! நீங்கள் (போருக்குப் புறப்படும்போது) முன்னெச்சரிக்கையாக இருந்துகொள்ளுங்கள். பின்னர்(ச் சூழ்நிலைக்கேற்பச் சிறு சிறு) அணிகளாகவோ (அனைவரும்) ஓரணியாகவோ புறப்படுங்கள். [72]உங்களில் பின்தங்கிவிடக்கூடிய சிலரும் இருக்கின்றனர். உங்களுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டால் “அல்லாஹ் என்மீது அருள்புரிந்து விட்டான் (அதனால்) அவர்களுடன் நான் கலந்துகொள்ளவில்லை” என்று (பின்தங்கிய நயவஞ்சகன்) கூறுகிறான். [73](மாறாக) அல்லாஹ்விடமிருந்து ஏதேனும் அருள் உங்களுக்குக் கிடைத்தால், (இதற்குமுன்) உங்களுக்கும் அவனுக்குமிடையில் எந்த நட்பும் இருந்ததில்லை என்பதுபோல “நானும் இவர்களுடன் இருந்திருந்தால் மாபெரும் வெற்றியைப் பெற்றிருப்பேனே!” என்று அவன் கூறுகின்றான். [74]எனவே மறுமை(பேற்று)க்காக இவ்வுலக வாழ்வை விற்பவர்கள் இறைவழியில் போர் புரியட்டும். எவர் இறைவழியில் போரிட்டு அதில் கொல்லப்படுகிறாரோ அல்லது வெற்றி பெறுகிறாரோ அவருக்கு நாம் பெரும் கூலியை வழங்குவோம்.* [75](எதிரிகள்*

---

***முன்னுரை காண்க : பக்கம் எண்* XX**

*வாழும் பகுதியில் சிக்கிக் கொடுமைக்கு உட்படுத்தப்படும்) வலுவற்ற ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகியோருக்காக இறைவழியில் போர் புரியாமலிருக்க உங்களுக்கென்ன நேர்ந்தது? (கொடுமைக்கு ஆளாகும்) அவர்களோ, "எங்கள் இறைவா! தீவினையாளர்கள் வாழ்கின்ற இந்த ஊரிலிருந்து எங்களை வெளியேற்றுவாயாக! எங்களுக்கு உன்னிடமிருந்து ஒரு பாதுகாவலரை ஏற்படுத்துவாயாக! எங்களுக்கு உன்னிடமிருந்து ஓர் ஆதரவாளரையும் ஏற்படுத்துவாயாக!" என்று இறைஞ்சிக் கொண்டிருக்கிறார்கள். [76]நம்பிக்கையாளர்கள் இறைவழியில் போரிடுகின்றனர். மறுப்பாளர்கள் சாத்தானுக்காகப் போரிடுகின்றனர். எனவே (நம்பிக்கையாளர்களான) சாத்தானின் கூட்டாளிகளுடன் போரிடுங்கள். உறுதியாக சாத்தானின் சூழ்ச்சி மிகவும் வலுவற்றதே ஆகும்.*

*[77]"(போர் கடமையாக்கப்படாத காலத்தில் போர்புரிவதிலிருந்து) உங்கள் கைகளைத் தடுத்துக்கொள்ளுங்கள்; தொழுகையைக் கடைப்பிடியுங்கள்; கடமையாக்கப்பட்ட கொடையைக் கொடுத்து வாருங்கள்" என்று யாருக்குக் கட்டளையிடப்பட்டதோ அவர்களை (நபியே!) நீர் காணவில்லையா? பின்னர் அவர்களுக்குப் போர் கடமையாக்கப்பட்டபோது அவர்களில் ஒரு பிரிவினர் அல்லாஹ்வுக்கு அஞ்சுவது போல அல்லது அதைவிட மிகுதியாக மனிதர்களுக்கு அஞ்சுகின்றனர். "இறைவா! எங்கள் மீது ஏன் போரைக் கடமையாக்கினாய்? நீ எங்களுக்குச் சிறிது காலநீட்டிப்பு வழங்கியிருக்கக் கூடாதா?" என்று அவர்கள் கேட்கின்றனர். நீர் கூறும்: "இவ்வுலக இன்பம் அற்பமானதே! இறையச்சமுடையோருக்கு மறுமையே சிறந்ததாகும். உங்கள்மீது மிகச்சிறு அளவும் அநீதி இழைக்கப்படமாட்டாது. [78]நீங்கள் எங்கிருந்தபோதிலும் சாவு உங்களை அடைந்தே தீரும். நீங்கள் உறுதியான கோட்டைக்குள் இருந்தாலும் சரியே. (போருக்குச் சென்ற நயவஞ்சகர்களான) அவர்களுக்கு ஏதேனும் நன்மை ஏற்பட்டால், "(நபியே!) இது அல்லாஹ்விடமிருந்து வந்தது" என்று கூறுகின்றனர். அவர்களுக்கு ஏதேனும் தீங்கு ஏற்பட்டால், "இது*

*உம்மால்தான் ஏற்பட்டது" என்று கூறுகின்றனர். "அனைத்தும் அல்லாஹ்விடமிருந்து வருபவவைதாம்" என்று (நபியே!) நீர் கூறும். இந்த மக்களுக்கு என்ன நேர்ந்தது? எதையும் இவர்கள் புரிந்து கொள்வதில்லையே. [79](மனிதனே!) உனக்கு ஏதேனும் நன்மை ஏற்பட்டால் அது அல்லாஹ்விடமிருந்து ஏற்பட்டதேயாகும். உனக்கு ஏதேனும் தீங்கு ஏற்பட்டால் அது (நீ இழைத்த தவறான செயல்கள் காரணமாக) உன்னால்தான் ஏற்பட்டது" (என்றும் நபியே! நீர் கூறுவீராக!) நாம் உம்மை மனித குலத்துக்குத் தூதராகவே அனுப்பியுள்ளோம். அல்லாஹ்வின் சாட்சியமே போதுமானது.*

*[80]தூதருக்குக் கீழ்ப்படிகின்றவர் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிகின்றவராவார். (நபியே!) யாரேனும் (உம்மைப்) புறக்கணித்தால் – (அறிந்துகொள்ளும்) – நாம் உம்மை அவர்களின் கண்காணிப்பாளராக அனுப்பவில்லை. [81]"நாங்கள் (உங்களுக்குக்) கீழ்ப்படிந்தோம்" என்று அவர்கள் கூறுகின்றனர். ஆனால் உம்மைவிட்டுச் சென்றவுடன் அவர்களில் ஒரு பிரிவினர் தாம் கூறியதற்கு மாறாக இரவில் சதித்திட்டம் தீட்டுகின்றனர். அல்லாஹ் அவர்களின் மறைமுக திட்டங்களைப் பதிவு செய்து கொண்டிருக்கின்றான். எனவே அவர்களை நீர் பொருட்படுத்தாமல் அல்லாஹ்வையே நம்பியிருப்பீராக! பொறுப்பேற்க அல்லாஹ்வே போதுமானவன். [82]அவர்கள் இந்தக் குர்ஆனை ஆராய்ந்து பார்க்கமாட்டார்களா? இது அல்லாஹ்வைத் தவிர வேறொருவரிடமிருந்து வந்திருந்தால் இதில் பல்வேறு முரண்பாடுகளைக் கண்டிருப்பர். [83]அவர்களிடம் அமைதி குறித்த செய்தியோ அல்லது அஞ்சத்தக்க செய்தியோ ஏதேனும் வந்தால் அதனை(அவசரப்பட்டு)ப் பரப்பி விடுகின்றனர். (அவ்வாறன்றி) அதனை அவர்கள் தூதரிடமோ பொறுப்பாளர்களிடமோ தெரிவித்திருந்தால் அவர்களில் ஆராய்ந்தறிவோர் அதன் உண்மை நிலையை அறிந்திருப்பர். "உங்கள்மீது இறைவனின் அருளும் அன்பும் இல்லாதிருந்தால் உங்களில் சிலரைத் தவிர அனைவரும்*

*சாத்தானைப் பின்பற்றியிருப்பீர்கள். [84]எனவே (நபியே!) நீர் இறைவழியில் போர்புரிவீராக! உம்மைத்தவிர வேறு யாருக்கும் நீர் பொறுப்பாளியல்லர். நம்பிக்கையாளர்களுக்கு ஆர்வமூட்டுவீராக! மறுப்பாளர்களின் வலிமையை அல்லாஹ் முறித்து விடக்கூடும். அல்லாஹ் வல்லமை மிக்கவன்; கடுந்தண்டனை அளிப்பவன்.*

*[85]ஒரு நன்மையான நோக்கத்திற்காகப் பரிந்துரை செய்கிறவருக்கு அதில் பங்கு உண்டு. தீய நோக்கத்திற்காகப் பரிந்துரை செய்கிறவருக்கு அதில் பங்கு உண்டு. அல்லாஹ் யாவற்றையும் கண்காணிப்பவன். [86](நம்பிக்கையாளர்களே!) உங்களுக்கு யாராவது முகமன் கூறினால் அதைவிடச் சிறந்த முறையில் நீங்கள் (பதில்) முகமன் கூறுங்கள்; அல்லது அதனையே திருப்பிக் கூறுங்கள். அல்லாஹ் அனைத்தையும் கணக்கில் கொள்பவன். [87]அல்லாஹ் அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. உங்கள் அனைவரையும் அவன் மறுமை நாளில் ஒன்று திரட்டுவான். அந்நாள் வருவதில் எத்தகைய ஐயமும் இல்லை. அல்லாஹ்வின் சொல்லைவிட வேறு யாருடைய சொல் உண்மையானதாக இருக்கமுடியும்?*

*[88](நம்பிக்கையாளர்களே!) உங்களுக்கு என்ன ஆயிற்று? நயவஞ்சகர்கள் தொடர்பானதில் நீங்கள் இரு பிரிவினராகி விட்டீர்களே! அல்லாஹ் அவர்களின் தீச்செயல்களால் தலைகீழாக்கி(ப் பாவத்தினுள்) திருப்பி விட்டான். அல்லாஹ் வழிதவறச் செய்துவிட்டவர்களை நேர்வழிக்குக் கொண்டுவர நீங்கள் விரும்புகிறீர்களா? (நபியே!) எவரை அல்லாஹ் வழிதவறச் செய்துவிட்டானோ அவருக்கு எந்த (நல்)வழியையும் நீர் காணமாட்டீர். [89]அவர்கள் மறுப்பாளராகி விட்டதைப்போலவே நீங்களும் மறுப்பாளராகி அவர்களுக்குச் சமமாகிவிட வேண்டும் என்று அவர்கள் விரும்புகின்றனர். எனவே அவர்கள் (தங்கள் இல்லங்களைவிட்டு) அல்லாஹ்வின் பாதையில் புறப்படும் வரை அவர்களில் யாரையும் நீங்கள் நண்பர்களாக்கிக்*

*கொள்ளவேண்டாம். அவர்கள் (பகைமை உணர்வில்) திரும்பிவிட்டால் அவர்களை எங்குக் கண்டாலும் பிடித்துக் கொன்றுவிடுங்கள். அவர்களில் யாரையும் நண்பராகவோ உதவியாளராகவோ ஆக்கிக்கொள்ளாதீர்கள்** [90]ஆயினும் நீங்கள் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டுள்ள சமூகத்தினரிடம் அடைக்கலம் பெற்றுள்ளவர்கள் அல்லது உங்களுடன் போர்புரியவோ, தம் சமூகத்தாருடன் போர்புரியவோ மனமில்லாமல் உங்களிடம் வருபவர்கள் ஆகியோரை விட்டுவிடுங்கள். அல்லாஹ் விரும்பியிருந்தால் அவர்களை உங்கள் மீது ஆதிக்கம் செலுத்த வைத்திருப்பான். அவர்களும் உங்களுக்கெதிராகப் போரிட்டிருப்பர். எனவே அவர்கள் உங்களுடன் (போரிடாது) விலகியிருந்து, சமாதானத்திற்கு முன்வந்தால் (அதனை ஏற்றுக்கொள்ளுங்கள்). அல்லாஹ் அவர்களுக்கெதிராகச் செயல்பட உங்களுக்கு அனுமதியளிக்கமாட்டான். [91]வேறு சிலரையும் நீங்கள் காண்பீர்கள். அவர்கள் உங்களிடமிருந்து பாதுகாப்புப் பெற வேண்டும், (உங்கள் எதிரிகளாகிய) தங்கள் சமூகத்தாரிடமிருந்தும் பாதுகாப்புப்பெற வேண்டும் என்று விரும்புகிறவர்கள். ஆனால் அவர்கள் கலகம் விளைவிக்கும் வாய்ப்பைப் பெறும்போதெல்லாம் அதில் தீவிரமாக இறங்கிவிடுவார்கள். இத்தகையோர் உங்களை (எதிர்ப்பதிலிருந்து) விலகாமலும் உங்களிடம் சமாதானத்தை வேண்டாமலும் (உங்களுடன் போர் புரிவதிலிருந்து) தம் கைகளைத் தடுத்துக்கொள்ளாமலும் இருந்தால் அவர்களைப் பிடியுங்கள்; அவர்களை எதிர்கொள்ளும் இடங்களில் கொன்றுவிடுங்கள். அவர்களுக்கு எதிராக நாம் உங்களுக்குத் தெளிவான அதிகாரத்தைத் தந்துள்ளோம். [92]தவறுதலாக நடைபெற்றுவிட்டால் அன்றி, ஒரு நம்பிக்கையாளர் மற்றொரு நம்பிக்கையாளரைக் கொலை செய்வது தகாது. எவர் தவறுதலாக ஒரு நம்பிக்கையாளரைக் கொலை செய்துவிடுகிறாரோ அவர்*

---

***முன்னுரை காண்க : பக்கம் எண் XX**

நம்பிக்கைகொண்ட ஓர் அடிமையை விடுதலை செய்யவேண்டும்; (மேலும்)கொல்லப்பட்டவரின் குடும்பத்தினர் விட்டுக்கொடுத்தால் அன்றி, அவர்களுக்கு இழப்பீட்டை அளித்துவிட வேண்டும். கொல்லப்பட்ட அவர் உங்கள் எதிரி சமூகத்தைச் சார்ந்தவராக இருந்து நம்பிக்கையாளராகவும் இருந்தால் நம்பிக்கைகொண்ட ஓர் அடிமையை விடுதலை செய்துவிட வேண்டும். (கொல்லப்பட்ட) அவர் உங்களுடன் உடன்படிக்கை செய்துகொண்ட சமூகத்தைச் சார்ந்தவராக இருந்தால் அவரது குடும்பத்தாருக்கு இழப்பீட்டை அளித்து நம்பிக்கைகொண்ட ஓர் அடிமையை விடுதலை செய்துவிடவும் வேண்டும். (பொருளும் அடிமையும் ஆகிய) வசதி இல்லாதவர் இரண்டு மாதங்கள் தொடர்ந்து நோன்பு நோற்கவேண்டும். இதுவே அல்லாஹ் அளிக்கும் பாவமன்னிப்பாகும். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன். [93]ஒரு நம்பிக்கையாளரை வேண்டுமென்றே கொலை செய்பவனுக்குரிய தண்டனை நரகமேயாகும். அதில் அவன் என்றென்றும் கிடப்பான். அவன்மீது இறைவனின் சினமும் சாபமும் உண்டாகும். அல்லாஹ் அவனுக்கு மாபெரும் வேதனையைத் தயார் செய்து வைத்துள்ளான்.

[94]நம்பிக்கையாளர்களே! இறைவழியில் (போரிட) நீங்கள் பயணம் செய்யும்போது (உங்களிடம் போர் புரிவோர் நம்பிக்கையாளர்களா மறுப்பாளர்களா என்பதைத்) தெளிவாக ஆராய்ந்து கொள்ளுங்கள். (தாம் நம்பிக்கையாளர் என்பதை உங்களுக்குத் தெரிவிப்பதற்காக) யாராவது உங்களுக்கு ஸலாம் (முகமன்) கூறினால் (அவரிடம் உள்ள இவ்வுலகத்து அற்பப் பொருளுக்கு ஆசைப்பட்டு) “நீர் நம்பிக்கையாளர் அல்லர்” என்று கூறி (அவரைக் கொன்று) விடாதீர்கள். நீங்கள் இவ்வுலகச் செல்வத்தை விரும்பினால் அல்லாஹ்விடம் ஏராளமான செல்வம் இருக்கிறது. நீங்களும் முன்பு இவ்வாறுதான் (அஞ்சி) இருந்தீர்கள். அல்லாஹ் உங்கள்மீது அருள்புரிந்தான். எனவே (களத்தில் இருப்போர் யார் என ஆராய்ந்து) தெளிவுபடுத்திக்

*கொள்ளுங்கள். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிபவன்.*
*95நம்பிக்கையாளர்களில் (நோய் போன்ற) தக்க காரணம் எதுவுமின்றி இறைவழியில் போரிடாமல் (தம் இல்லங்களில்) தங்கிவிடுவோரும் இறைவழியில் தங்கள் பெருஞ்செல்வத்தாலும் உயிர்களாலும் போராடுபவர்களும் சமமாகமாட்டார்கள். (போருக்குச் செல்லாமல் இல்லங்களில்) தங்கிவிடுவோரை விடத் தங்கள் செல்வங்களாலும் உயிர்களாலும் போராடுவோரைத் தகுதியால் அல்லாஹ் மேம்படுத்தி வைத்துள்ளான். (நம்பிக்கையாளர்) அனைவருக்கும் அல்லாஹ் நன்மையையே வாக்களித்துள்ளான். எனினும் வெறுமனே இருப்பவர்களைவிடப் போராடுவோரை மாபெரும் கூலியின் மூலம் மேன்மைப்படுத்தியுள்ளான்.*
*96அவர்களுக்கு அல்லாஹ்விடமிருந்து உயர்ந்த தகுதியும் பாவமன்னிப்பும் அருளும் உண்டு. அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

*97(இறைவழியில் புலம்பெயர்ந்து செல்லாமல்)தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்டவர்களின் உயிர்களை வானவர்கள் கைப்பற்றும்போது, “நீங்கள் எந்நிலையில் இருந்தீர்கள்?” என்று கேட்பர். “நாங்கள் பூமியில் வலுவற்றவர்களாக இருந்தோம்” என்று அவர்கள் கூறுவர். அல்லாஹ்வின் பூமி விரிவானதாக இல்லையா? அதில் நீங்கள் புலம் பெயர்ந்து போயிருக்கலாம் அல்லவா? என்று (வானவர்கள்) கேட்பர். இ(த்தகைய)வர்களின் இருப்பிடம் நரகமாகும். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்.*
*98ஆனால் எந்த வாய்ப்புவசதிகளும் கிடைக்காத (மெய்யாகவே) வலுவற்ற ஆண்கள், பெண்கள் மற்றும் குழந்தைகளைத்தவிர (மற்றவர்களே தண்டனைக்குள்ளாவர்.) 99அ(த்தகைய)வர்களை அல்லாஹ் மன்னித்து விடக்கூடும். அல்லாஹ் பிழைகளைப் பொறுப்பவன்; பெரும் மன்னிப்பாளன். 100இறைவழியில் புலம் பெயர்பவர் பூமியில் எண்ணற்ற புகலிடங்களையும் வசதியையும் பெறுவார். யாரேனும் தம் வீட்டிலிருந்து அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நோக்கிப் புலம்பெயர்ந்து செல்லும்போது*

அவருக்கு இறப்பு ஏற்பட்டுவிட்டால் அவரின் கூலி அல்லாஹ்விடம் உறுதியாகி விட்டது. அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.

[101](நம்பிக்கையாளர்களே!) பூமியில் பயணம் செய்யும்போது
மறுப்பாளர் உங்களைத் துன்புறுத்துவர் என நீங்கள் அஞ்சினால்
தொழுகையைச் சுருக்கிக்கொள்வது உங்கள் மீது குற்றமாகாது.
உறுதியாக மறுப்பாளர் உங்களுக்கு வெளிப்படையான
எதிரிகளாக இருக்கின்றனர். [102](நபியே! போர்முனையில்)
நீர் நம்பிக்கையாளர்களிடையே இருந்து அவர்களுக்குத்
தொழுகை நடத்தினால் அவர்களில் ஒரு பிரிவினர் உம்முடன்
(தொழுகையில்) நிற்கட்டும்; அவர்கள் தம் ஆயுதங்களையும்
தயாராக வைத்துக்கொள்ளட்டும். (தொழுது) தலைபணிந்தபின்
அவர்கள் உங்கள் பின்புறம் (காவலாக) நிற்கட்டும். (பின்னர்த்)
தொழாமல் இருக்கும் அடுத்த பிரிவினர் வந்து உம்முடன்
தொழுதுகொள்ளட்டும். அவர்களும் ஆயுதங்களுடன்
எச்சரிக்கையாக இருக்கட்டும். நீங்கள் உங்கள் ஆயுதங்களையும்
தளவாடங்களையும் விட்டு கவனமற்று இருக்கும்
நேரத்தில் மறுப்பாளர்கள் திடீரென உங்களைத் தாக்கிவிட
விரும்புகின்றனர். ஆயினும் மழையால் உங்களுக்கு ஏதேனும்
சிரமம் இருந்தாலோ நீங்கள் நோயாளியாக இருந்தாலோ உங்கள்
ஆயுதங்களை(க் கீழே) வைத்துவிடுவது உங்கள்மீது குற்றமாகாது.
(எனினும்) எச்சரிக்கையாக இருங்கள். உறுதியாக அல்லாஹ்
மறுப்பாளர்களுக்கு இழிவுமிக்க வேதனையைத் தயார்செய்து
வைத்துள்ளான். [103](இவ்வாறு) நீங்கள் தொழுகையை
நிறைவேற்றியபின் நின்றிருக்கும்போதும் அமர்ந்திருக்கும்போதும்
சாய்ந்து படுத்திருக்கும்போதும் அல்லாஹ்வை நினைவு
கூருங்கள். அச்சம் நீங்கி அமைதி ஏற்பட்டுவிட்டால் நீங்கள்
தொழுகையை உரிய முறையில் நிறைவேற்றுங்கள். உறுதியாகக்
குறிப்பிட்ட நேரங்களில் தொழுகையை நிறைவேற்றுவது
நம்பிக்கையாளர்களின்மீது விதிக்கப்பட்ட கடமையாகும்.
[104]பகைவர்களை விரட்டிச்செல்வதில் தளர்ந்துவிடாதீர்கள்.

*நீங்கள் துன்புறுகிறீர்கள் என்றால் அவர்களும் உங்களைப் போன்றே துன்புறுகின்றனர். ஆனால் அல்லாஹ்விடமிருந்து அவர்கள் எதிர்பார்க்க முடியாததை நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்.*

[105]*(நபியே!) அல்லாஹ் உமக்குக் காட்டிய முறைப்படி
மக்களிடையே நீர் தீர்ப்பு வழங்குவதற்காக இவ்வேதத்தை
நாம் சத்தியத்துடன் உமக்கு அருளியுள்ளோம். எனவே
மோசடிக்காரர்களுக்காக வாதாடும் ஒருவராக ஆகிவிடாதீர்.*
[106]*(இதில் தவறு ஏதேனும் நேர்ந்துவிட்டால்) அல்லாஹ்விடம்
பாவமன்னிப்புக் கோருவீராக! உறுதியாக அல்லாஹ் பெரும்
மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.* [107]*(பிறருக்கு மோசடி
செய்வதன்மூலம்) தமக்குத் தாமே துரோகம் இழைப்பவர்களுக்காக
(நபியே!) நீர் வாதிடாதீர்! துரோகிகளையும் பாவிகளையும் அல்லாஹ்
நேசிப்பதில்லை.* [108]*அவர்கள் மனிதர்களிடம் (வெட்கப்பட்டு)
மறைக்கின்றனர். ஆனால் அல்லாஹ்விடம் மறைக்கமுடியாது.
அவர்கள் இரவில் அவனுக்கு விருப்பமில்லாதவற்றைப் பேசிச்
சதி செய்யும்போது அவன் அவர்களுடன்தான் இருக்கிறான்.
அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் சூழ்ந்தறிபவனாக இருக்கிறான்.*
[109]*(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் இவ்வுலக வாழ்க்கையில்
அவர்களுக்காக வாதாடுகிறீர்கள். (ஆனால்) மறுமை நாளன்று
அவர்களுக்காக அல்லாஹ்விடம் யார் வாதாடுவார்? அல்லது
அவர்களுக்குப் பொறுப்பேற்பவர் யார்?* [110]*குற்றம் புரிந்துவிட்டு
அல்லது தமக்குத்தாமே அநீதி இழைத்துக்கொண்டு பின்னர்
அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருபவர் அல்லாஹ் பெரும்
மன்னிப்பாளன், நிகரற்ற அன்பாளன் என்பதைக் காண்பார்.*
[111]*பாவம் செய்பவன் தனக்குக் கேடாகவே அதனைச் செய்கிறான்.
அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்.* [112]*ஒரு
தவற்றையோ, பாவத்தையோ செய்துவிட்டு அதன் பழியைக்
குற்றமற்ற ஒருவரின் மீது சுமத்திவிடுபவன் பெரும் அவதூற்றையும்
வெளிப்படையான பாவத்தையும் தலையில் சுமந்தவனாவான்.*

*[113](நபியே!) அல்லாஹ்வின் அருளும் பரிவும் உம்மீது இல்லாதிருந்தால் – அவர்களில் ஒரு பிரிவினர் உம்மை வழிகெடுக்க முடிவுசெய்திருந்தனர். ஆனால் அவர்கள் தம்மைத்தாமே வழிகெடுத்துக் கொண்டனர். அவர்கள் உமக்கு எந்தத் தீங்கையும் இழைத்துவிடவும் முடியாது. அல்லாஹ் உமக்கு வேதத்தையும் ஞானத்தையும் அருளியுள்ளான். (முன்பு) நீர் அறிந்திராது இருந்தவற்றையும் அவன் உமக்குக் கற்றுக்கொடுத்துள்ளான். உம்மீதுள்ள அல்லாஹ்வின் அருள் மகத்தானது.*

*[114]அறக்கொடைக்காகவும் நன்மைக்காகவும் மக்களிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்துவதற்காகவும் (பேசப்படுவன) அல்லாத மனிதர்களின் பெரும்பாலான மறைமுகப் பேச்சுக்களில் எந்த நன்மையும் இல்லை. இறை உவப்பை விரும்பி அவ்வாறு செய்பவருக்கு நாம் மாபெரும் கூலியை வழங்குவோம்.*

*[115]நேர்வழி (எதுவெனத்) தமக்குத் தெளிவான பின்னரும் தூதருக்கு எதிராகச் செயல்பட்டு (ஓரிறை)நம்பிக்கையாளர்களின் பாதையிலிருந்து வேறொரு பாதையில் செல்பவனை நாம் அவன் சென்ற திசையிலேயே செலுத்தி நரகத்தில் சேர்த்து விடுவோம். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்.*

*[116]உறுதியாக அல்லாஹ் தனக்கு இணைவைப்பதை மன்னிக்கவே மாட்டான். அதுதவிர அனைத்தையும் தான் விரும்பியோருக்கு மன்னித்துவிடுவான். எவன் அல்லாஹ்வுக்கு இணைவைக்கிறானோ அவன் கெடுவழியில் மிகு தொலைவுக்குச்*
*சென்றுவிட்டவன் ஆவான். [117]அல்லாஹ்வை விட்டுவிட்டுப்*
*பெண்(தெய்வங்)களையும் வரம்புமீறிய சாத்தானையுமே அவர்கள்*
*அழைக்கின்றனர். [118]அல்லாஹ் அவனைச் சபித்தான். (அப்போது)*
*அவன் அல்லாஹ்விடம், “உன் அடியார்களில் கணிசமான*
*எண்ணிக்கையினரை நான் எடுத்துக்கொள்வேன்; [119]அவர்களை*
*நான் வழிகெடுப்பேன்; அவர்களுக்கு(த் தவறான) ஆசை*
*ஊட்டுவேன்; (நேர்ச்சைக்கடனான) தங்கள் கால்நடைகளின்*

*காதுகளை அறுக்கும்படி கட்டளையிடுவேன்; அல்லாஹ்வின் படைப்பில் மாற்றம் செய்யும்படி கட்டளையிடுவேன்." என்று கூறினான். அல்லாஹ்வைத் தவிர்த்துச் சாத்தானைத் தன் நண்பனாக்கிக்கொள்பவன் வெளிப்படையான இழப்பை அடைவான். [120]அவன் அவர்களுக்கு வாக்குறுதியளிக்கிறான்; வீண் ஆசைகளை ஊட்டுகிறான்; சாத்தானின் வாக்குறுதிகள் அனைத்தும் ஏமாற்றமேயன்றி வேறில்லை. [121]அத்தகையோரின் உறைவிடம் நரகமேயாகும். அதிலிருந்து தப்பிச் செல்வதற்கான எந்த வழியையும் அவர்கள் காணமாட்டார்கள். [122]நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிவோரை நாம் சொர்க்கச் சோலைகளில் நுழையச் செய்வோம். அவற்றிடையே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பர். அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. அல்லாஹ்வைவிடச் சொல்லில் மிக உண்மையாளன் யார்?*

*[123](நம்பிக்கையாளர்களே!) உங்கள் விருப்பப்படியோ வேதமுடையோரின் விருப்பப்படியோ (இறுதிமுடிவு) இராது. தீமை செய்தவன் அதற்குரிய தண்டனையைப் பெறுவான். அவன் அல்லாஹ்வைத்தவிர வேறு எந்தப் பொறுப்பாளரையும் உதவியாளரையும் (அங்குக்) காணமாட்டான். [124]ஆணாயினும் பெண்ணாயினும் நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர்கள் சொர்க்கம் புகுவர். அவர்கள்மீது சிறிதளவும் அநீதி இழைக்கப்படமாட்டாது. [125]எவர் அல்லாஹ்விற்கு முற்றிலும் கீழ்ப்படிந்து நற்செயல்புரிந்து, முழுமையான நம்பிக்கைகொண்ட ஆப்ரஹாமின் வழிமுறையைப் பின்பற்றுகிறாரோ அவரைவிட மார்க்கத்தால் அழகியவர் யார்? அல்லாஹ் ஆப்ரஹாமை(த் தன்) நண்பராக ஆக்கிக்கொண்டான். [126]வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. அனைத்தையும் அல்லாஹ் சூழ்ந்தறிபவன்.*

[127](நபியே!) பெண்களைக் குறித்து மக்கள் உம்மிடம் மார்க்கத் தீர்ப்புக் கேட்கிறார்கள். (அவர்களுக்கு) நீர் கூறுவீராக! “பெண்களைக் குறித்து அல்லாஹ் உங்களுக்குத் தீர்ப்பு வழங்குகிறான். அநாதைப் பெண்களுக்கு வரையறுக்கப்பட்டதை நீங்கள் அவர்களுக்கு வழங்காமலே அவர்களை மணந்துகொள்ள விரும்புவது பற்றியும் (அவர்களுடன் உள்ள) வலுவற்ற குழந்தைகள் குறித்தும் அநாதைகளிடம் நீதியோடு நடந்துகொள்ள வேண்டும் என்பது குறித்தும் இவ்வேதத்திலுள்ள வசனங்கள் உங்களுக்கு ஓதிக் காண்பிக்கப்படுகின்றன. (அவர்களுக்கு) நீங்கள் எந்த ஒரு நன்மையைச் செய்தாலும் அதனை அல்லாஹ் நன்கறியக்கூடியவன்.
[128]ஒருபெண் தன் கணவன் தன்னை வெறுத்துவிடுவான் என்றோ அல்லது புறக்கணித்துவிடுவான் என்றோ அஞ்சினால் அவ்விருவரும் தங்களிடையே ஏதேனும் ஒரு சமாதான முடிவை ஏற்படுத்திக்கொள்வது குற்றமாகாது. சமாதானமே சிறந்ததாகும். ஆனால் பேராசை மனித இயல்பில் கலந்துள்ளது. நீங்கள் நல்லமுறையில் நடந்து இறையச்சத்தோடு செயல்பட்டீர்களானால் நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக உள்ளான்.
[129](நம்பிக்கையாளர்களே!) நீங்கள் என்னதான் விரும்பினாலும் மனைவியருக்கு இடையே ஒருபோதும் நீதியுடன் நடந்துகொள்ள முடியாது. ஆகவே ஒருத்தியின் பக்கம் முற்றிலும் சாய்ந்து அடுத்தவளைப் பேணாமலும் (மணவிலக்கு அளிக்காமலும்) அந்தரத்தில் தொங்கவிடப்பட்டவள் போல் ஆக்கிவிடாதீர்கள். நீங்கள் சமாதானம் செய்து இறையச்சத்துடன் நடந்தால் (அறிந்துகொள்ளுங்கள்) அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன். [130](சமாதானமாக வாழமுடியாத நிலையில்) அவர்கள் இருவரும் பிரிந்துவிட்டால் அல்லாஹ் தன் விரிந்த (அருள்) வளத்தால் ஈடுசெய்து (ஒருவர் மற்றொருவரிடம் தேவையற்ற) தன்னிறைவுடையவராக ஆக்கிவிடுவான். அல்லாஹ் விரிந்த (அருள்) வளமுடையவன்; ஞானம் மிக்கவன்.

131வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. (நம்பிக்கையாளர்களே!) உங்களுக்கு முன் வேதம் வழங்கப்பட்டோருக்கும் உங்களுக்கும் “அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்” என்றே அறிவுறுத்தியுள்ளோம். நீங்கள் மறுத்தால் (அவனுக்கு இழப்பு ஏதுமில்லை) வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியவையாகும். அல்லாஹ் தேவை எதுவுமற்றவன்; புகழுக்குரியவன். 132வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. சார்ந்திருப்பதற்கு அல்லாஹ்வே போதுமானவன். 133மனிதர்களே! அவன் விரும்பினால் உங்கள் அனைவரையும் அகற்றிவிட்டு மற்றவர்களைக் கொண்டு வருவான். இவ்வாறு செய்வதற்கு அல்லாஹ் முழு ஆற்றலுடையவன். 134எவர் இவ்வுலக நன்மையை (மட்டும்) விரும்புகிறாரோ (அவர் அறிந்துகொள்ளட்டும்) – அல்லாஹ்விடம் இவ்வுலக நன்மையும் மறுமையின் நன்மையும் உள்ளன. அல்லாஹ் அனைத்தையும் செவியுறுபவன்; உற்றுநோக்குபவன்.

135(ஓரிறை)நம்பிக்கையாளர்களே! நீதியில் உறுதியாக நிலைத்திருப்பவர்களாகவும் அல்லாஹ்வுக்காகச் சாட்சியம் அளிப்பவர்களாகவும் இருங்கள். அ(ச்சாட்சியமான)து உங்களுக்கோ உங்கள் தாய் தந்தையருக்கோ உறவினர்களுக்கோ எதிராக இருந்தாலும் சரியே. (எவருக்கெதிராகச் சாட்சியம் கூறுகிறீர்களோ) அவர் செல்வராயினும் ஏழையாயினும் சரி (உண்மையே கூறுங்கள், ஏனெனில்) அவ்விருவருக்கும் நலம் விரும்புவதில் உங்களைவிட அல்லாஹ்வே மேலானவன். எனவே நீங்கள் மனவிருப்பத்தைப் பின்பற்றி நீதியிலிருந்து பிறழ்ந்து விடாதீர்கள். நீங்கள் (உண்மையை) மறைத்தாலோ (அதிலிருந்து) விலகினாலோ (அறிந்து கொள்ளுங்கள்!) – நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக உள்ளான்.

136நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வின் மீதும் அவனது தூதரின் மீதும் அவன் தன் தூதருக்கு அருளியுள்ள வேதத்தின்

*மீதும் அவன் முன்னர் அருளியுள்ள வேதங்களின் மீதும் நம்பிக்கைகொள்ளுங்கள். எவர் அல்லாஹ்வையும் அவனது வானவர்களையும் அவனது வேதங்களையும் அவனது தூதர்களையும் மறுமை நாளையும் நம்ப மறுக்கின்றாரோ அவர் வழிதவறி மிகு தொலைவு சென்றுவிட்டார்.*
*[137](ஓரிறை)நம்பிக்கை கொண்டு பின்னர் மறுத்து, பின்னர் நம்பிக்கைகொண்டு மீண்டும் மறுத்துத் தொடர்ந்து மறுப்பையே உறுதிப்படுத்திக் கொண்டவர்களை அல்லாஹ் மன்னிக்கவேமாட்டான்; அவர்களை நேர்வழியில் செலுத்தவும் மாட்டான்.*
*[138](இத்தகைய) "நயவஞ்சகர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு" என (நீர் அவர்களுக்கு 'நற்செய்தி' கூறுவீராக!*
*[139]அவர்கள் நம்பிக்கையாளர்களைத் தவிர்த்து மறுப்பாளர்களை நண்பர்களாக்கிக் கொள்பவர்கள். அவர்களிடமா இவர்கள் (நயவஞ்சகர்கள்) கண்ணியத்தைத் தேடுகின்றனர்? கண்ணியம் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியன.*
*[140]இறை வசனங்கள் (எவராலும்) மறுக்கப்படுவதையும் ஏளனம் செய்யப்படுவதையும் நீங்கள் செவியுற்றால் அதை விட்டுவிட்டு, வேறு பேச்சில் ஈடுபடும்வரை அவர்களுடன் நீங்கள் அமர வேண்டாம் என்று அல்லாஹ் இந்த வேதத்தில் கட்டளையிட்டுள்ளான். அப்(படி அமரும்)போது நீங்களும் அவர்களைப்போல் ஆகிவிடுவீர்கள். நயவஞ்சகர்களையும் மறுப்பாளர்களையும் அல்லாஹ் நரகத்தில் ஒன்று சேர்ப்பான்.*
*[141](நயவஞ்சகர்களாகிய) அவர்கள் உங்களை கவனித்துக் கொண்டிருக்கின்றனர். உங்களுக்கு அல்லாஹ்வினால் ஏதேனும் வெற்றி கிடைத்தால் (அவர்கள் உங்களிடம் வந்து) "நாங்களும் உங்களுடன் இருக்கவில்லையா?" என்று கேட்கின்றனர். மறுப்பாளர்களுக்கு (வெற்றியில்) ஏதேனும் பங்கு கிடைத்துவிட்டால், (அவர்களிடம் சென்று) "நாங்கள் (நம்பிக்கையாளர்களுக்கு உதவிபுரிந்து) உங்களை வெல்ல முடியும் என்றிருந்தும் நம்பிக்கையாளர்களிடமிருந்து உங்களைக் காப்பாற்றவில்லையா?" என்று கேட்கின்றனர். மறுமை நாளில் அல்லாஹ்வே உங்களிடையே தீர்ப்பளிப்பான். அல்லாஹ்*

*ஒருபோதும் நம்பிக்கையாளர்களுக்கு எதிராக மறுப்பாளர்களுக்கு எந்த வழியையும் ஏற்படுத்த மாட்டான்.*

*[142]இந்நயவஞ்சகர்கள் அல்லாஹ்வை வஞ்சிக்(க எண்ணு)கின்றனர். (உண்மையில்,) அவன்தான் அவர்களை வஞ்சிக்கிறான். அவர்கள் தொழுகையில் நிற்கும்போது சோம்பலாக நின்று மக்களுக்குக் காட்டு(வதற்காகவே தொழு)கின்றனர். அவர்கள் அல்லாஹ்வை நினைவுகூர்வது மிக அரிதே!* [143]*இவர்கள் (மறுப்பாளர்களாகிய) அவர்கள் பக்கமும் இல்லாமல் (நம்பிக்கையாளர்களாகிய) இவர்கள் பக்கமும் இல்லாமல் (நம்பிக்கை, மறுப்பு ஆகிய) இரண்டிற்குமிடையே தடுமாறிக் கொண்டிருக்கின்றனர். எவனை அல்லாஹ் வழிதவற விட்டுவிடுகிறானோ அவனுக்காக எந்த (நல்) வழியையும் (நபியே! நீர்) காணமாட்டீர்.* [144]*நம்பிக்கையாளர்களே! நீங்கள் நம்பிக்கையாளர்களைத் தவிர்த்து (உங்களுடன் போரிடும்) மறுப்பாளர்களை (உங்களுக்கு உற்ற) நண்பர்களாக்கிக் கொள்ளாதீர்கள். உங்களுக்கு எதிராக அல்லாஹ்விடம் தெளிவான ஆதாரத்தை ஏற்படுத்திக்கொள்ள நீங்கள் விரும்புகிறீர்களா?*
[145]*உறுதியாக நயவஞ்சகர்கள் நரகத்தின் அடித்தளத்தில்தான் இருப்பர். (நபியே!) அவர்களுக்கு உதவிசெய்வோர் எவரையும் நீர் காணமாட்டீர்.* [146]*ஆயினும் (அவர்களில்) எவர் (பாவ) மன்னிப்புக் கோரிச் சீர்திருந்தி அல்லாஹ்வை உறுதியாகப் பற்றிப்பிடித்துக் கொண்டு தங்கள் வழிபாட்டை அல்லாஹ்வுக்கு மட்டுமே உரித்தாக்கிக் கொள்கிறார்களோ அவர்களைத் தவிர! அத்தகையோர் நம்பிக்கையாளர்களுடன் இருப்பர். அல்லாஹ் நம்பிக்கையாளர்களுக்கு மாபெரும் கூலி வழங்குவான்.* [147]*நீங்கள் அவனுக்கு நன்றி செலுத்துபவர்களாகவும் உண்மையான நம்பிக்கை கொண்டவர்களாகவும் இருந்தால் அல்லாஹ் உங்களுக்கு வேதனையை அளித்து என்ன செய்யப் போகிறான்? அல்லாஹ் நன்றியை ஏற்பவன்; அனைத்தையும் அறிந்தவன்.*

*[148]அநீதி இழைக்கப்பட்டவரைத்தவிர வேறு யாரும் தீயசொற்களை வெளிப்படையாகக் கூறுவதை அல்லாஹ்*

விரும்புவதில்லை. அல்லாஹ் அனைத்தையும் செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன். [149]நீங்கள் (ஒருவருக்குச் செய்த) நன்மையை வெளிப்படுத்தினாலும் அல்லது அதனை மறைத்துக்கொண்டாலும் அல்லது (உங்களுக்கு இழைக்கப்பட்ட) தீமையை மன்னித்துவிட்டாலும் (அது உங்களுக்கு) நன்மையே. அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; பேராற்றலுடையவன்.

[150]சிலர் அல்லாஹ்வையும் அவனது தூதர்களையும் மறுத்து, அல்லாஹ்வுக்கும் அவனது தூதர்களுக்குமிடையே வேறுபாடு காட்ட விரும்பி, “நாங்கள் (தூதர்களில்) சிலரை ஏற்றுக்கொள்வோம், சிலரை ஏற்றுக்கொள்ளமாட்டோம்” என்று கூறி அவர்களுக்கிடையே (தமது மனஇச்சைப்படி) ஒரு (புதிய) வழியை உண்டாக்க விரும்புகின்றனர். [151]அவர்கள்தாம் உண்மையில் மறுப்பாளர்கள். நாம் மறுப்பாளர்களுக்காக இழிவுமிக்க வேதனையைத் தயார்செய்து வைத்துள்ளோம். [152]அல்லாஹ்வின் மீதும் அவனது தூதர்களின் மீதும் நம்பிக்கைகொண்டு அவர்களிடையே வேறுபாடு காட்டாதவர்களுக்கு அல்லாஹ் அவர்களுக்குரிய கூலிகளை வழங்குவான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.

[153](நபியே!) வேதமுடையோர் வானத்திலிருந்து ஒரு வேதத்தைத் தங்களிடம் இறக்கிக்கொண்டு வரவேண்டும் என்று உம்மிடம் கேட்கின்றனர். இவர்(களின் முன்னோர்)கள் இதைவிட பெரிய(அற்புதத்)தை மோசேயிடம் கேட்டுள்ளனர். “எங்களுக்கு அல்லாஹ்வை நேரில் காட்டுவீராக” என்று அவர்கள் கூறினர். அவர்களின் தீவினையால் பேரிடி அவர்களைத் தாக்கியது. அவர்களிடம் தெளிவான சான்றுகள் வந்துவிட்ட பின்னரும் காளைக்கன்றைக் கடவுளாக எடுத்துக் கொண்டனர். நாம் அதனையும் மன்னித்தோம். மோசேவுக்கு நாம் தெளிவான சான்றை வழங்கியிருந்தோம். [154]அவர்களிடம் வாக்குறுதி பெறுவதற்காக நாம் அவர்களின் மீது மலையை உயர்த்தினோம்.

*“(இந்நகரின்) வாயிலில் தலை தாழ்த்தியவர்களாக நுழையுங்கள்”
என்று அவர்களிடம் கூறினோம். சனிக்கிழமையின் விஷயத்தில்
வரம்புமீறிவிட வேண்டாம் என்றும் அவர்களிடம் கூறினோம்.
நாம் அவர்களிடம் உறுதியான வாக்குறுதியைப் பெற்றிருந்தோம்.
[155]ஆனால் அவர்கள் தங்கள் வாக்குறுதியை முறித்து விட்டதனாலும்
அல்லாஹ்வின் வசனங்களை மறுத்து விட்டதனாலும் தூதர்களை
நியாயமின்றிக் கொலை செய்ததனாலும், “எங்கள் உள்ளங்கள்
மூடப்பட்டுள்ளன” என்று அவர்கள் கூறியதனாலும் நாம்
அவர்களைச் சபித்தோம். உண்மையில், அவர்களது மறுப்பினால்
அல்லாஹ் அவர்களின் உள்ளங்களில் முத்திரை இட்டுவிட்டான்.
எனவே அவர்களில் மிகக்குறைவானவர்கள் தவிர மற்றவர்கள்
நம்பிக்கைகொள்ள மாட்டார்கள்.*

*[156]அவர்கள் (இயேசுவை ஏற்க) மறுத்ததாலும் மர்யத்தின்
மீது பெரும் பழிச்சொல் கூறியதனாலும் (அல்லாஹ் அவர்களின்
உள்ளங்களில் முத்திரையிட்டுவிட்டான்.) [157]இறைத்தூதராகிய
“மர்யத்தின் மைந்தர் இயேசுவை நாங்கள் கொன்றுவிட்டோம்”
என்று அவர்கள் கூறியதனாலும் (நாம் அவர்களைச் சபித்தோம்.
உண்மையில்) அவர்கள் அவரைக் கொல்லவுமில்லை;
சிலுவையில் அறையவுமில்லை. மாறாக, (அவ்வாறு நடந்ததாக)
அவர்களுக்குக் (குழப்பிக்) காட்டப்பட்டது. (இதற்கு) மாறான
கருத்துக் கொண்டவர்கள் அது தொடர்பான ஐயங்களில்
இருக்கின்றனர். வெறும் ஊகத்தைத் தவிர அவர்களிடம் வேறு
அறிவு இல்லை. உறுதியாக அவர்கள் அவரைக் கொலை
செய்யவில்லை. [158]மாறாக அல்லாஹ் அவரைத் தன்னிடம்
உயர்த்திக் கொண்டான். அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்;
ஞானம் மிக்கவன். [159]வேதமுடையோரில் எவரும் தமது
இறப்பிற்கு முன்னால் அவர்மீது நம்பிக்கைகொள்ளாமல்
இருக்கமாட்டார்கள். (எனினும்) மறுமை நாளில் அவர்களுக்கு
எதிரான சாட்சியாளராக அவர் இருப்பார்.*

*[160]எனவே யூதர்களின் தீவினைகள் காரணமாகவும் மிகுதியானவர்களை அவர்கள் இறைவழியிலிருந்து தடுத்துக்கொண்டிருந்த காரணத்தாலும் அவர்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்த தூய்மையான பொருள்களைக்கூட நாம் அவர்களுக்குத் தடை செய்துவிட்டோம். [161]வட்டி அவர்களுக்குத் தடுக்கப்பட்டிருக்க அதனை அவர்கள் வாங்கிக் கொண்டிருந்ததனாலும் மக்களின் செல்வங்களைத் தவறான முறையில் அவர்கள் விழுங்கிக் கொண்டிருந்ததனாலுமே (இவ்வாறு தடை செய்தோம்.) அவர்களில் மறுப்பாளர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையை நாம் தயார்செய்து வைத்துள்ளோம். [162]ஆயினும் (நபியே!) அவர்களில் கல்வியறிவில் நிலைபெற்றவர்களும் நம்பிக்கையாளர்களும் உமக்கு அருளப்பட்ட(வேதத்)தையும் உமக்கு முன்னர் அருளப்பட்ட(வேதத்)தையும் நம்புகின்றனர். அவர்கள் தொழுகையைக் கடைப்பிடித்துக் கடமையாக்கப்பட்ட கொடையை வழங்கி அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கைகொள்பவர்கள். இத்தகையோருக்கு உறுதியாக நாம் மாபெரும் கூலியை வழங்குவோம்.*

*[163](நபியே!) நோவாவுக்கும் அவருக்குப் பின்னால் வந்த தூதர்களுக்கும் நாம் (இறைச்செய்தி) அறிவித்தது போலவே உமக்கும் அறிவித்தோம். ஆப்ரஹாம், இஸ்மவேல், ஈசாக், ஜேக்கப், அவருடைய வழித்தோன்றல்கள், இயேசு, யோப், யோனா, ஆரோன், சாலமன் ஆகியோருக்கும் அறிவித்தோம். தாவீதுக்கு ஜபூர் வேதத்தை அளித்தோம்.*

*[164]நாம் அனுப்பிய சில தூதர்களைப்பற்றி முன்னரே உமக்கு எடுத்துரைத்திருக்கிறோம். வேறு சில தூதர்களைப்பற்றி நாம் உமக்கு எடுத்துரைக்கவில்லை. மோசேயுடன் அல்லாஹ் உரையாடியும் இருக்கிறான். [165]நற்செய்தி கூறுவோராகவும் எச்சரிக்கை செய்வோராகவும் தூதர்களை நாம் அனுப்பி வைத்தோம்; தூதர்களின் (வருகைக்குப்) பின் மனிதர்கள் அல்லாஹ்வுக்கு எதிராகக் (குறை)கூற அவர்களுக்கு ஆதாரம்*

*எதுவும் இருக்கக் கூடாது என்பதற்காக (இவ்வாறு) அனுப்பி வைத்தோம். அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.**
166(நபியே!) அல்லாஹ் உமக்கு அருளிய(வேதத்)தைக் குறித்து அவன்தான் சாட்சி கூறுகிறான். அவன் அதனைத் தனது ஞானத்தின் அடிப்படையில் அருளினான். வானவர்களும் (அதற்குச்) சாட்சி சொல்கின்றனர். சாட்சியத்திற்கு அல்லாஹ்வே போதுமானவன்.
167சத்தியத்தை மறுத்து இறைவழியிலிருந்து மக்களைத் தடுத்துக் கொண்டிருந்தவர்கள் வழிதவறி மிகு தொலைவு சென்று விட்டனர்.
168(சத்தியத்தை) மறுத்துத் தீவினை செய்தவர்களை அல்லாஹ் மன்னிக்கவே மாட்டான். அவர்களுக்கு(ச் சரியான) வழியையும் காட்டமாட்டான்,
169நரகத்தின் வழியைத்தவிர. அதில் அவர்கள் என்றென்றும் இருப்பர். இவ்வாறு செய்வது அல்லாஹ்விற்கு மிக எளிதானது.
170மனிதர்களே! உங்கள் இறைவனிடமிருந்து சத்தியத்துடன் இத்தூதர் உங்களிடம் வந்துள்ளார். எனவே (அவர்மீது) நம்பிக்கைகொள்ளுங்கள். அது உங்களுக்கு நன்மையாகும். (அவரை) நீங்கள் ஏற்க மறுத்தால் (அல்லாஹ்வுக்கு இழப்பு ஏதுமில்லை; ஏனெனில்) வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்.*

171வேதமுடையோரே! நீங்கள் உங்கள் மார்க்க(விஷய)த்தில் வரம்பு கடந்து சென்று விடாதீர்கள். அல்லாஹ்வைக் குறித்து உண்மையைத்

---

****இறைவன் முதலில் மனிதனைப் படைத்து அதன்பிறகு சொர்க்கம், நரகம் ஆகியவற்றைப் படைத்தான். பின்னர் வந்த காலகட்டத்தில் மனிதனைப் பூமியில் வசிக்கச் செய்தான். தான் விரும்பியதைச் செய்யும் சுதந்திரம் மனிதனுக்கு இங்கே உள்ளது. ஆனால் இந்தச் சுதந்திரம் என்றென்றைக்கும் நிரந்தரமானதல்ல. அது தற்காலிகமானதும் அவனுக்கான சோதனையுமாகும். நல்லதையும் கெட்டதையும் பிரித்தறிந்து செயல்பட வேண்டும் என்பதாக அந்தச் சோதனை அமைந்துள்ளது. எதனையும் செய்வதற்கான சுதந்திரம் இருந்தும் சரியான எண்ணத்தைக் கொண்டு எவர் செயல்படுகிறார்கள், இறைவனிடம் தங்களை அர்ப்பணிக்கிறார்கள் என்பதை இறைவன் கண்காணித்துக் கொண்டே இருக்கிறான்.***

*தவிர வேறு எதையும் கூறாதீர்கள். மர்யத்தின் மைந்தர் இயேசு மஸீஹ் அல்லாஹ்வின் தூதரும் அவனது வார்த்தையும் ஆவார். அதை அவன் மர்யத்திடம் அளித்தான். அவர் அவனிடமிருந்து வந்த ஓர் ஆன்மாவே ஆவார். எனவே அல்லாஹ்வின் மீதும் அவனது தூதர்களின் மீதும் நம்பிக்கைகொள்ளுங்கள். "(தெய்வங்கள்) மூன்று" என்று கூறாதீர்கள். அவ்வாறு கூறுவதை விட்டுவிடுங்கள். அதுவே உங்களுக்குச் சிறந்ததாகும். அல்லாஹ் மட்டுமே ஒரே இறைவன். அவனுக்கு மகன் இருப்பதாகச் சொல்லப்படுவதிலிருந்து அவன் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியன. (அனைத்திற்கும்) பொறுப்பேற்பதற்கு அல்லாஹ்வே போதுமானவன்.*
172*அல்லாஹ்வின் அடியாராக இருப்பதை மஸீஹும் நெருக்கமான வானவர்களும் ஒருபோதும் இழிவாக எண்ணமாட்டார்கள். ஆனால் அவனை வணங்குவதை இழிவெனக் கருதிச் செருக்குக்கொள்வோர் அனைவரையும் அல்லாஹ் ஒன்று திரட்டித் தன்முன் கொண்டுவருவான்.*
173*நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிவோருக்கு அவர்களுடைய கூலியை அவன் நிறைவாக வழங்குவான். தன் அருளால் அவர்களுக்கு (நன்மையை) மிகுதிப்படுத்தவும் செய்வான். ஆனால் அவனை வணங்குவதை இழிவெனக் கருதிச் செருக்குக்கொள்வோருக்குத் துன்புறுத்தும் வேதனையைத் தருவான். அவர்கள் அல்லாஹ்வுக்கு எதிராக உதவி செய்யவோ காப்பாற்றவோ யாரையும் காணமாட்டார்கள்.*
174*மனிதர்களே! உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு ஒரு சான்று வந்துவிட்டது; நாம் உங்கள்மீது ஒரு தெளிவான ஒளியை அருளியுள்ளோம்.*
175*எனவே அல்லாஹ்வின்மீது நம்பிக்கைகொண்டு அவனை உறுதியாகப்பற்றிக் கொண்டவர்களை உறுதியாக அல்லாஹ் தனது பரிவிலும் அருளிலும் நுழையச் செய்வான். அவர்களுக்குத் தன்னிடம் வருவதற்கான நேர்வழியையும் காட்டுவான்.*

176*(நபியே!) அவர்கள் உம்மிடம் மார்க்கத் தீர்ப்புக் கேட்கின்றனர். நீர் கூறுவீராக! "அல்லாஹ் உங்களுக்கு நேரடி*

*வாரிசற்ற சொத்தைப் பற்றி இவ்வாறு கட்டளையிடுகிறான்: குழந்தைகள் யாரும் இல்லாத ஒருவர் இறந்து போய்விட அவருக்கு ஒரு சகோதரி மட்டும் இருந்தால் அவளுக்கு அவரின் சொத்தில் பாதிப் பங்கு உண்டு. குழந்தைகள் யாருமில்லாத ஒரு பெண் இறந்தால் அவள் சகோதரன் அவளுக்கு வாரிசாவான். (இறந்து போனவருக்கு) இரண்டு சகோதரிகள் இருந்தால் அவர்களுக்கு அவரது சொத்தில் மூன்றில் இரண்டு பங்கு உண்டு. ஆண்கள் பெண்கள் என உடன்பிறந்தோரில் பலர் இருந்தால் அவர்களில் இரண்டு பெண்களுக்குச் சமமான பங்கு ஓர் ஆணுக்கு உண்டு. நீங்கள் வழிதவறி விடக் கூடாது என்பதற்காக அல்லாஹ் உங்களுக்குத் தெளிவுபடுத்துகிறான். அல்லாஹ் அனைத்தையும் முற்றும் அறிந்தவன்".*

# 5. உணவுத் தட்டு (அல்மாயிதா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]*(ஓரிறை)நம்பிக்கையாளர்களே! உங்களுடைய உடன்படிக்கைகளை முழுமையாக நிறைவேற்றுங்கள். பின்னர்க் கூறப்பட உள்ளவற்றைத் தவிரப் பிற கால்நடைகள் அனைத்தும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. எனினும் நீங்கள் (புனிதப் பயண ஆடையாகிய) இஹ்ராம் அணிந்த நிலையில் இருக்கும்போது அவற்றை வேட்டையாடுவது அனுமதிக்கப்பட்டதென எண்ணி விடாதீர்கள். தான் விரும்பியதை அல்லாஹ் கட்டளையிடுகிறான்.*
[2]*நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வின் (புனிதப் பயண இடங்கள், சடங்குகள் முதலிய) சின்னங்களையும் புனிதமான மாதங்களையும் புனிதத்தலத்தில் பலியிடப்படும் விலங்குகளையும் அடையாளமிடப்பட்ட நேர்ச்சை விலங்குகளையும் இறையருளையும் இறைஉவப்பையும் தேடிப் புனித இல்லத்தை நாடி வருவோரையும் அவமதிக்காதீர்கள். நீங்கள் இஹ்ராமுடைய நிலையிலிருந்து விடுபட்டுவிட்டால் வேட்டையாடலாம். (கஅபா என்னும்) இறையில்லத்திலிருந்து உங்களைத் தடுத்துவிட்ட ஒரு*

*சமூகத்தின் மீதுள்ள பகைமை உங்களை வரம்பு மீறச் செய்துவிடக் கூடாது. நன்மைக்கும் இறையச்சத்திற்கும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்ளுங்கள். ஆனால் பாவத்திற்கும் வரம்பு மீறலுக்கும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவக் கூடாது. அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். உறுதியாக அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன். [3]தானாகச் செத்தது, இரத்தம், பன்றி இறைச்சி, அல்லாஹ் அல்லாதவற்றின் பெயர்கூறிப் பலியிடப்பட்டவை ஆகியன உங்களுக்குத் தடைசெய்யப்பட்டுள்ளன. கழுத்து நெரிபட்டுச் செத்தது, அடிபட்டுச் செத்தது, (உயரத்திலிருந்து) கீழே விழுந்து செத்தது, கொம்பால் முட்டப்பட்டுச் செத்தது, காட்டுவிலங்குகளால் கடிக்கப்பட்டுச் செத்தது ஆகியவை உங்களுக்குத் தடை செய்யப்பட்டுள்ளன; அவ்விலங்குகளில் (உயிர் இருந்து) நீங்கள் முறைப்படி அறுத்தவற்றைத் தவிர! (அத்தகையவற்றை நீங்கள் உண்ணலாம்.) நட்டுவைக்கப்பட்ட (சிலைபோன்ற)வற்றுக்கு அருகில் பலியிடப்பட்டவையும் (உங்களுக்குத்) தடை செய்யப்பட்டுள்ளன. குறிகேட்பதற்குரிய அம்புகள் கொண்டு பங்கிடப்பட்ட(இறைச்சியை உண்ப)தும் (தடை செய்யப்பட்டதாகும்). இவை பாவமான செயல்களாகும். இன்று மறுப்பாளர்கள் உங்கள் மார்க்கத்தை (அழித்துவிடுவது) பற்றிய நம்பிக்கையை இழந்துவிட்டனர். எனவே நீங்கள் அவர்களுக்கு அஞ்சவேண்டாம்; எனக்கே அஞ்சுங்கள். நான் இன்று உங்களுக்காக உங்கள் மார்க்கத்தை முழுமையாக்கி விட்டேன். உங்கள்மீது என் அருட்கொடைகளை நிறைவுபடுத்தி விட்டேன். இஸ்லாத்தை உங்களுக்குரிய மார்க்கமாக தெரிவு செய்துவிட்டேன். யாரேனும் பாவம் செய்யும் நோக்கமின்றி (கடும்) பசியினால் தடுக்கப்பட்டதை உண்ணும்படி கட்டாயத்திற்கு உள்ளாகிவிட்டால் (அது குற்றமாகாது.) அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

*[4](நபியே!) தங்களுக்கு உண்ண அனுமதிக்கப்பட்டவை எவை என அவர்கள் கேட்கின்றனர். நீர் கூறும்: “தூய்மையானவை*

*அனைத்தும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. (மேலும்) அல்லாஹ் உங்களுக்குக் கற்றுக்கொடுத்தபடி உங்கள் (பருந்து போன்ற) பறவைகளுக்கும் (நாய் போன்ற) விலங்குகளுக்கும் நீங்கள் பயிற்சியளித்து அவை வேட்டையாடி உங்களுக்காகப் பிடித்(து வந்)ததை உண்ணுங்கள். ஆனால் (அவற்றை வேட்டைக்கு அனுப்புமுன்) அல்லாஹ்வின் பெயர்கூறி அனுப்புங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். உறுதியாக அல்லாஹ் விசாரணை செய்வதில் விரைவானவன்."*

5*(நம்பிக்கையாளர்களே!) இன்று தூய்மையானவை அனைத்தும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டு விட்டன. வேதம் வழங்கப்பட்டோரின் உணவு உங்களுக்கும் உங்களின் உணவு அவர்களுக்கும் அனுமதிக்கப்பட்டவையாகும். நம்பிக்கைகொண்ட ஒழுக்கமுள்ள பெண்களும் முன்னர் வேதம் வழங்கப்பட்டோரிலுள்ள ஒழுக்கமுள்ள பெண்களும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளனர். அவர்களுக்கு நீங்கள் மணக்கொடை அளித்துவிட்டு அவர்களை முறைப்படி மணந்துகொள்ளலாம். ஆனால் அவர்களுடன் முறையற்ற உறவிலோ கள்ளக் காதலிலோ ஈடுபடக் கூடாது. எவர் நம்பிக்கை கொண்டுவிட்டுப் பின்னர் மறுக்கிறாரோ அவரின் (நற்)செயல்கள் அனைத்தும் வீணாகிவிடும். அவர் மறுமையில் இழப்படைந்தவர்களுள் ஒருவராகவே இருப்பார்.*

6*நம்பிக்கையாளர்களே! நீங்கள் தொழுகைக்குத் தயார் ஆகும்போது உங்கள் முகங்களையும் முழங்கைகள் வரை உங்கள் கைகளையும் கழுவிக்கொள்ளுங்கள். உங்கள் தலைகளை (ஈரக்கைகளால்) தடவிக்கொள்ளுங்கள்; உங்கள் பாதம்முதல் கணுக்கால்வரை கழுவிக்கொள்ளுங்கள்; நீங்கள் குளிக்கக் கடமைப்பட்டவர்களாக இருந்தால் குளித்துக் கொள்ளுங்கள். நீங்கள் நோயாளியாக இருந்தாலோ பயணத்தில் இருந்தாலோ மலஜலம் கழித்துவிட்டு வந்திருந்தாலோ பெண்களுடன் பாலுறவு கொண்டிருந்தாலோ அந்நிலைகளில் உங்களுக்குத்*

தண்ணீர் கிடைக்கவில்லையெனில் நீங்கள் தூய மணலை நாடுங்கள். (அதாவது) உங்கள் முகங்களையும் கைகளையும் (மணலைத்தொட்டுத்) தடவிக்கொள்ளுங்கள். அல்லாஹ் உங்களுக்கு எந்தச் சிரமத்தையும் ஏற்படுத்த விரும்பவில்லை. மாறாக நீங்கள் நன்றி செலுத்தும்பொருட்டு உங்களைத் தூய்மைப்படுத்தவும் உங்கள்மீது தன் அருட்கொடையை முழுமைப்படுத்தவுமே விரும்புகின்றான்.

7உங்கள் மீதான அல்லாஹ்வின் அருட்கொடையையும்
உங்களிடம் அவன் பெற்ற வாக்குறுதியையும் நினைவுகூருங்கள்.
அப்போது நீங்கள் "நாங்கள் செவியுற்றோம், கீழ்ப்படிந்தோம்"
என்று கூறினீர்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். உறுதியாக
அல்லாஹ் உள்ளங்களில் உள்ளவற்றையும் நன்கறிந்தவன்.
8நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்காக
உறுதியானவர்களாகவும் நியாயமாகச் சாட்சி கூறுபவர்களாகவும்
இருங்கள். ஒரு சமூகத்தின் மீது(உங்களுக்கு)ள்ள பகைமை
உங்களை நீதி செலுத்தாமலிருக்கத் தூண்டிவிட வேண்டாம். நீதி
செலுத்துங்கள். அதுவே இறையச்சத்திற்கு மிக நெருக்கமானது.
அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். உறுதியாக அல்லாஹ் நீங்கள்
செய்பவற்றை நன்கறிந்தவன். 9(ஓரிறை)நம்பிக்கைகொண்டு
நற்செயல்புரிவோருக்கு(ப் பாவ)மன்னிப்பும் மாபெரும் கூலியும்
உண்டு என்று அல்லாஹ் வாக்களித்துள்ளான். 10(ஆனால்
சத்தியத்தை)மறுத்துஎமதுவசனங்களைப்பொய்மைப்படுத்துவோர்
நரகவாசிகள்தாம். 11நம்பிக்கையாளர்களே! உங்கள் மீதான
அல்லாஹ்வின் அருளை நினைத்துப் பாருங்கள். ஒரு சமூகத்தினர்
தங்கள் கைகளை உங்களுக்கு எதிராக நீட்டத் திட்டமிட்டபோது
அல்லாஹ் அவர்களின் கைகளை உங்களைவிட்டுத்
தடுத்தான். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். நம்பிக்கையாளர்கள்
அல்லாஹ்வையே சார்ந்திருக்க வேண்டும்.

12இஸ்ராயீலின் மக்களிடம் அல்லாஹ் உறுதிமொழி
பெற்றிருந்தான். அவர்களிலிருந்து பன்னிரண்டு தலைவர்களை

*(நாம்) நியமித்தோம். (உறுதிமொழி வாங்கியபோது) அல்லாஹ் அவர்களிடம், “நான் உங்களுடன் இருக்கிறேன், நீங்கள் தொழுகையைக்கடைப்பிடித்துக்கடமையாக்கப்பட்டகொடையை வழங்கி, என் தூதர்களிடம் நம்பிக்கைகொண்டு அவர்களுக்கு உதவி புரிந்து, அல்லாஹ்வுக்கு அழகிய கடன் அளித்தும் வருவீர்களாயின் நான் உங்கள் பாவங்களைப் போக்கிச் சொர்க்கச் சோலைகளில் உங்களை நுழையச் செய்வேன். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். எனவே உங்களில் இதற்குப் பின்னரும் மறுப்பவர் நேர்வழியிலிருந்து பிறழ்ந்து விட்டவராவார்” என்று கூறினான்.*
*[13]அவர்கள் தமது உறுதிமொழியை மீறியதனால் நாம் அவர்களைச் சபித்து அவர்களின் இதயங்களை இறுகச் செய்துவிட்டோம். அவர்கள் (வேத) வசனங்களை அவற்றுக்குரிய (உண்மையான) பொருள்களிலிருந்து புரட்டுகின்றனர். அவர்களுக்கு வழங்கப்பட்ட அறிவுரைகளில் பெரும் பகுதியை மறந்துவிட்டனர். (நபியே!) அவர்களில் சிலரைத்தவிர மற்றவர்களிடம் நீர் துரோகத்தைக் கண்டுகொண்டே இருப்பீர். அவர்களை மன்னித்துப் புறக்கணிப்பீராக! அல்லாஹ் நன்மை செய்வோரை நேசிக்கிறான்.*

*[14]‘நாங்கள் கிறிஸ்தவர்கள்’ என்று கூறிக்கொண்டவர்களிடமும் நாம் உறுதிமொழி பெற்றோம். அவர்களும் தங்களுக்கு வழங்கப்பட்ட அறிவுரைகளில் பெரும்பகுதியை மறந்து விட்டனர். எனவே நாம் மறுமைநாள் வரை அவர்களிடையே பகைமையையும் வெறுப்பையும் உண்டாக்கிவிட்டோம். அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றைப் பற்றி (மறுமையில்) அல்லாஹ் அவர்களுக்கு அறிவிப்பான்.*

*[15]வேதமுடையோரே! உங்களிடம் எம் தூதர் வந்துவிட்டார். வேதத்தில் நீங்கள் மறைத்துக் கொண்டிருந்தவற்றில் பெரும்பாலானவற்றை அவர் உங்களுக்குத் தெளிவாக எடுத்துரைக்கிறார். வேறு பலவற்றுக்காக உங்களை மன்னித்தும் விடுகிறார். உறுதியாக உங்களுக்கு அல்லாஹ்விடமிருந்து ஓர்*

*ஒளியும் தெளிவுபடுத்தும் வேதமும் வந்துவிட்டன.*
[16]*அதன்மூலம் அல்லாஹ்வின் உவப்பைத் தேடுவோருக்கு அமைதிக்கான வழிகளை அவன் காட்டுகிறான். தன் அருளால் அவன் அவர்களை இருளிலிருந்து வெளிக் கொணர்ந்து ஒளியின்பால் கொண்டுவருகிறான். அவர்களுக்கு நேர்வழியையும் காட்டுகிறான்.*
[17]*"மர்யத்தின் மைந்தர் மஸீஹ்தான் அல்லாஹ்" என்று கூறியவர்கள் உறுதியாக மறுப்பாளர்களாகி விட்டனர். (நபியே!) நீர் கூறும்: (அவ்வாறு கூறுவது தவறு,) "மர்யத்தின் மைந்தர் மஸீஹையும் அவரது தாயையும் இன்னும் பூமியிலுள்ள அனைவரையும் அல்லாஹ் அழித்துவிட விரும்பியிருந்தால் அதனைச் சிறிதளவும் தடுக்கும் ஆற்றலுடையவர் யார்? வானங்கள், பூமி அவற்றிற்கிடையில் உள்ளவை ஆகியவற்றின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. தான் விரும்பியதை அவன் படைக்கிறான். அல்லாஹ் யாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.*

[18]*யூதர்களும் கிறிஸ்தவர்களும் "நாங்கள் அல்லாஹ்வின் பிள்ளைகள்; அவனது அன்பிற்குரியவர்கள்" என்று கூறுகின்றனர். (நபியே!) நீர் கூறும்: "அவ்வாறாயின் உங்கள் பாவங்களுக்காக அவன் ஏன் உங்களைத் தண்டிக்கப்போகிறான்? உண்மையில் நீங்களும் அவன் படைத்த மற்றவர்களைப் போன்ற மனிதர்களே. தான் விரும்பியோரை அவன் மன்னிக்கிறான்; தான் விரும்பியோரைத் தண்டிக்கிறான்." வானங்களிலும் பூமியிலும் அவற்றிற்கு இடையிலும் உள்ளவற்றின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அவனிடமே அனைவரும் திரும்பச் செல்ல வேண்டியிருக்கிறது.*
[19]*வேதமுடையோரே! (இயேசுவுக்குப் பின்) இறைத்தூதர் வருகையில் இடைவெளி ஏற்பட்டிருந்த நிலையில், "எங்களுக்கு நற்செய்தி கூறுபவரோ எச்சரிக்கை செய்பவரோ வரவில்லை" என்று நீங்கள் கூறக்கூடாது என்பதற்காக உங்களுக்கு(எமது செய்திகளை)த் தெளிவுபடுத்துகின்ற எம் தூதர் (முஹம்மத்) உங்களிடம் வந்துள்ளார். ஆக, நற்செய்தி கூறுபவரும் எச்சரிக்கை செய்பவரும் (ஆகிய ஒருவர்) உண்மையில்*

உங்களிடம் வந்துவிட்டார். அல்லாஹ் யாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.

[20]மோசே தம் சமூகத்தவர்களிடம், "என் சமூகத்தோரே,
அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய அருட்கொடையை
நினைத்துப்பாருங்கள். அவன் உங்களிடையே தூதர்களைத்
தோற்றுவித்தான், (எகிப்தியர்களிடம் அடிமைகளாக இருந்த)
உங்களை அரசர்களாகவும் ஆக்கினான். உலகில் எவருக்கும்
வழங்காதவற்றை எல்லாம் உங்களுக்கு வழங்கினான்" என்று
கூறியதை (நபியே! நீர் அவர்களுக்கு) நினைவூட்டுவீராக! [21]"என்
சமூகத்தோரே! அல்லாஹ் உங்களுக்கென விதித்த இந்தப்
புனிதமான பூமியில் நுழையுங்கள். (அங்கு இருப்போருக்கு
அஞ்சிப்) புறங்காட்டி ஓடிவிடாதீர்கள். (ஓடினால்) இழப்புக்கு
ஆளாகி விடுவீர்கள்" (என்றும் கூறினார்). [22](அதற்கு) அவர்கள்,
"மோசே! அங்குப் பெருவலிமைமிக்க ஒரு சமூகத்தினர்
இருக்கின்றனர். அவர்கள் அங்கிருந்து வெளியேறும்வரை நாங்கள்
ஒருபோதும் அங்கு நுழையமாட்டோம். அவர்கள் அங்கிருந்து
வெளியேறிவிட்டால் நாங்கள் நுழைவோம்" என்றனர். [23](அப்போது)
அல்லாஹ்வின் அருள் பெற்றிருந்த (அல்லாஹ்வுக்கு) அஞ்சி
நடக்கும் இருவர் (மற்றவர்களை நோக்கி) "நீங்கள் அவர்களை
எதிர்த்து நகரத்தின் வாயிலில் நுழைந்துவிடுங்கள். அதில்
நீங்கள் நுழைந்துவிட்டால் நீங்கள்தாம் வெற்றி பெறுவீர்கள்.
நீங்கள் (உண்மையான) நம்பிக்கையாளர்களாக இருந்தால்
அல்லாஹ்வையே சார்ந்திருங்கள்" என்று கூறினர். [24]மோசேயின்
சமூகத்தினர், "மோசே!, அவர்கள் அங்கு இருக்கும்வரை நாங்கள்
ஒருபோதும் நுழையமாட்டோம். ஆகவே நீரும், உமது இறைவனும்
சென்று போரிடுங்கள். நாங்கள் இங்கே அமர்ந்திருக்கிறோம்"
என்றனர். [25](அப்போது மோசே) "என் இறைவனே! என்னையும்
என் சகோதரரையும்தவிர வேறு எவர் மீதும் எனக்கு
அதிகாரமில்லை. எனவே கீழ்ப்படியாத இந்த மக்களிடமிருந்து
எங்களை விலக்கி விடுவாயாக!" என்று (பணிந்து) வேண்டினார்.

26(அதற்கு அல்லாஹ்) “நாற்பதாண்டுக் காலம்வரை அந்த
நிலப்பகுதி அவர்களுக்குத் தடுக்கப்பட்டு விட்டது. அம்மக்கள்
பூமியில் தடுமாறித் திரிவர். எனவே பாவிகளான அம்மக்களுக்காக
நீர் வருந்தாதீர்” என்று கூறினான்.

27(நபியே!) ஆதமுடைய இரு புதல்வர்களின் உண்மை
வரலாற்றை அவர்களுக்கு எடுத்துரைப்பீராக! அவர்கள்
இருவரும் (அல்லாஹ்வுக்கான) காணிக்கையை முன்வைத்தபோது
அவர்களில் ஒருவரிடமிருந்து அது ஏற்றுக்கொள்ளப்பட்டது.
மற்றவரிடமிருந்து ஏற்றுக்கொள்ளப்படவில்லை. (இரண்டாமவர்)
“நான் உன்னைக் கொன்று விடுவேன்” என்றார். (அதற்கு
முதலாமவர்) “இறையச்சமுடையோரிடமிருந்துதான் அல்லாஹ்
ஏற்றுக்கொள்கிறான்” என்றார். 28“நீ என்னைக் கொல்வதற்காகக்
கையை நீட்டினாலும் நான் உன்னைக் கொல்வதற்காகக் கையை
நீட்டமாட்டேன். அனைத்து உலகங்களுக்கும் இறைவனாகிய
அல்லாஹ்வுக்கு நான் அஞ்சுகிறேன். 29நீ உன் பாவத்துடன்
என்(னைக் கொலை செய்யும்) பாவத்தையும் சுமந்துகொண்டு
நரகவாசிகளுடன் இணைந்து விடுவதையே நான் விரும்புகிறேன்.
தீவினையாளர்களுக்கு இதுவே தண்டனையாகும்” (என்றும்
கூறினார்.)

30(இதன் பின்னரும்) தன் சகோதரரைக் கொலை
செய்துவிடுமாறு (காணிக்கை ஏற்கப்படாத) அவரது மனம்
தூண்டிற்று. அவர் முதலாமவரைக் கொன்று விட்டார்.
எனவே அவர் இழப்பிற்குரியவராகிவிட்டார். 31பின்னர்த் தன்
சகோதரரின் வெற்றுடலை எவ்வாறு (புதைத்து) மறைப்பது
என்பதை அவருக்குக் காட்டுவதற்காக ஒரு காகத்தை அல்லாஹ்
அனுப்பினான். அது பூமியில் தோண்டிற்று. அவர் அந்தோ!
நான் இந்தக் காகத்தைப்போலக்கூட இல்லாமல் ஆகிவிட்டேனே!
அப்படியிருந்திருந்தால் என் சகோதரரின் வெற்றுடலை நான்
மறைத்திருப்பேனே” என்று புலம்பி வருந்தினார். 32இதன்
காரணமாகவே “ஒரு கொலைக்குப் பதிலாகவோ பூமியில்

*கலகம் விளைவித்த காரணத்திற்காகவோ அன்றி ஒருவரைக் கொலை செய்கிறவர் மனிதர்கள் அனைவரையும் கொன்றவரைப் போன்றவர் ஆவார் (என்றும்) ஒருவரை வாழவைக்கிறவர் மனிதர்கள் அனைவரையும் வாழவைத்தவர் போன்றவர் ஆவார் என்றும் இஸ்ராயீலின் மக்களுக்கு நாம் விதிசெய்தோம். எமது தூதர்கள் அவர்களிடம் தெளிவான கட்டளைகளைக் கொண்டு வந்தனர். அதன் பின்னரும் அவர்களில் பெரும்பாலோர் பூமியில் வரம்புமீறுபவர்களாகவே இருந்து வந்தனர்.*

[33]*அல்லாஹ்வுடனும் அவனது தூதருடனும் போரிட்டுக் கொண்டும் பூமியில் கலகம் விளைவித்துக்கொண்டும் திரிகின்றவர்களுக்குரிய தண்டனை இதுதான்: 'அவர்கள் கொல்லப்பட வேண்டும் அல்லது தூக்கிலிடப்பட வேண்டும் அல்லது அவர்களின் மாறுகை மாறுகால் வெட்டப்பட வேண்டும் அல்லது அவர்கள் நாடு கடத்தப்பட வேண்டும்' இது அவர்கள் இம்மையில் அடையும் இழிவாகும். மறுமையிலோ அவர்களுக்குக் கடுமையான தண்டனையுண்டு.*
[34]*ஆயினும் (நம்பிக்கையாளர்களாகிய) உங்கள் ஆளுகைக்குள் கொண்டுவரப்படுவதற்கு முன்னரே பாவமன்னிப்புத் தேடிக்கொள்பவர்களைத் தவிர! அறிந்துகொள்ளுங்கள், அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

[35]*(ஓரிறை)நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; அவனது நெருக்கத்திற்கான வழிவகைகளைத் தேடுங்கள்; அவனது வழியில் கடுமுயற்சி புரியுங்கள். அதனால் நீங்கள் வெற்றியடையலாம்.* [36]*உறுதியாக மறுப்பாளர்களிடம் பூமியில் உள்ளவை அனைத்தும் அத்துடன் அதேபோன்று இன்னொரு பங்கும் இருந்து, மறுமை நாளின் வேதனையிலிருந்து தப்பிக்க அவற்றை அவர்கள் ஈடாகக் கொடுத்தாலும் அவர்களிடமிருந்து அது ஏற்கப்படாது. அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு.*
[37]*நரகத்திலிருந்து வெளியேறிவிட அவர்கள் விரும்புவார்கள்.*

ஆனால் அவர்களால் வெளியேற முடியாது. அவர்களுக்கு நிலையான வேதனை உண்டு.

[38]திருடியவர்கள் ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் அவர்களின் (வலது) கைகளைத் துண்டித்து விடுங்கள். இது அவர்கள் செய்தவற்றுக்காக அல்லாஹ்விடமிருந்து கிடைக்கும் கூலியும் படிப்பினையான தண்டனையுமாகும். அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன். [39](ஆயினும்) எவரேனும் தீவினை செய்த பின்னர்ப் பாவமன்னிப்புக் கோரித் தம்மைச் சீர்திருத்திக்கொண்டால் உறுதியாக அல்லாஹ் அவரை மன்னிப்பான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன். [40](நபியே!) “வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது என்பதை நீர் அறியவில்லையா? தான் (தண்டிக்க) விரும்பியோரை அவன் தண்டிப்பான். தான் விரும்பியோரை அவன் மன்னிப்பான். அல்லாஹ் யாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.

[41](எமது)தூதரே! மறுப்பின்பால் விரைந்தோடுவோர் (செயல்கள்) உம்மைக் கவலைப்படுத்த வேண்டாம். அவர்கள் “நாங்கள் நம்பிக்கைகொண்டோம்” என்று வாயளவில் கூறிவிட்டு உள்ளங்களில் நம்பிக்கைகொள்ளாதவர்கள். யூதர்களிலும் சிலர் உள்ளனர். அவர்கள் பொய்யை விரும்பி மிகுதியாகச் செவிமடுப்பவர்கள். உம்மிடம் வராத வேறு கூட்டத்தாருக்கு (உளவு சொல்வதற்காக உம்மை)ச் செவிமடுப்பவர்கள். அவர்கள் (தவ்ராத் வேத)வார்த்தைகளை அவற்றின் இடங்களிலிருந்து மாற்றுகின்றனர். (இந்தத் தூதரிடமிருந்து நீங்கள் விரும்பும்) இன்ன கட்டளை உங்களுக்குக் கொடுக்கப்பட்டால் அதை ஏற்றுக்கொள்ளுங்கள். அது உங்களுக்குக் கொடுக்கப்படவில்லையெனில் அதிலிருந்து விலகிக்கொள்ளுங்கள்” என்று கூறுகின்றனர். எவரை அல்லாஹ் குழப்பத்திற்கு உள்ளாக்க விரும்புகிறானோ அவர் தொடர்பாக அல்லாஹ்விடம் உம்மால் ஒன்றுமே செய்யமுடியாது. அவர்களின் உள்ளங்களை அல்லாஹ் தூய்மைப்படுத்த விரும்பவில்லை.

*அவர்களுக்கு இவ்வுலகில் இழிவும் மறுமையில் கடும் வேதனையும் உண்டு.* [42]*அவர்கள் பொய்யையே ஆர்வமாகச் செவிமடுக்கின்றனர். தடை செய்யப்பட்ட(வட்டி போன்ற)வற்றையே மிகுதியாக விழுங்கிக் கொண்டிருக்கின்றனர். (நபியே!) அவர்கள் உம்மிடம் (தீர்ப்புக்காக) வந்தால் அவர்களிடையே நீர் தீர்ப்பு வழங்கலாம்; அல்லது அவர்களைப் புறக்கணித்துவிடலாம். நீர் அவர்களைப் புறக்கணிப்பீராயின் அவர்கள் உமக்கு எந்தத் தீங்கும் இழைத்துவிட முடியாது. நீர் தீர்ப்பு வழங்கினால் அவர்களிடயே நியாயமாகத் தீர்ப்பு வழங்குவீராக! உறுதியாக அல்லாஹ் நீதி செலுத்துவோரை நேசிக்கிறான்.* [43]*ஆனால் அவர்களிடம் இறைவனின் கட்டளைகள் அடங்கியுள்ள தவ்ராத் இருக்கிறது. அதனையே அவர்கள் புறக்கணித்துக் கொண்டிருக்கின்றனர். (இந்நிலையில்) உம்மைத் தீர்ப்பாளராக எவ்வாறு எடுத்துக்கொள்வார்கள்? அவர்கள் உறுதியாக நம்பிக்கையாளராக மாட்டார்கள்.*

[44]*உறுதியாக நாம் தவ்ராத்தை அருளினோம். அதில் நேர்வழியும் ஒளியும் இருக்கின்றன. (இறைவனுக்கு) முற்றிலும் கீழ்ப்படிந்த தூதர்களும் இறையடியார்களும் அறிஞர்களும் அதன்படியே யூதர்களுக்குத் தீர்ப்பளித்துக் கொண்டிருந்தனர். ஏனெனில் அவர்கள் இறைவேதத்திற்குப் பாதுகாவலர்களாக நியமிக்கப்பட்டிருந்தனர். அதற்கு அவர்களே சாட்சியாளர்களாகவும் இருந்தனர். எனவே (யூதர்களே!) நீங்கள் மனிதர்களுக்கு அஞ்சாதீர்கள்; எனக்கே அஞ்சுங்கள் எனது வசனங்களை அற்ப ஊதியத்திற்கு விற்றுவிடாதீர்கள். அல்லாஹ் அருளியதன்படி தீர்ப்பு வழங்காதவர்கள் மறுப்பாளர்கள்தாம்.* [45]*நாம் அ(ந்த வேதத்)தில் ‘உயிருக்கு உயிர், கண்ணுக்குக் கண், மூக்குக்கு மூக்கு, காதுக்குக் காது, பல்லுக்குப் பல், காயங்களுக்குச் சமமான அளவு காயப்படுத்துதல்’ (எனப் பழிவாங்கல் அனுமதிக்கப்பட்டுள்ளது என்று) அவர்கள்மீது விதித்து விட்டோம். ஆயினும், எவர் மன்னித்து விடுகிறாரோ, அது அவரின் பாவங்களுக்குப் பரிகாரமாகிவிடும். அல்லாஹ் அருளியதன்படி தீர்ப்பு*

*வழங்காதவர்கள் தீவினையாளர்கள் தாம்.*
46*அவர்களுக்குப்பின் மர்யத்தின் மைந்தர் இயேசுவை நாம் (தூதராக) அனுப்பினோம். அவர் தமக்கு முந்தைய (வேதமான) தவ்ராத்தை உண்மைப்படுத்தக் கூடியவராக இருந்தார். (மேலும்) அவருக்கு (வேதமாகிய) இன்ஜீலையும் வழங்கினோம். அதில் நேர்வழியும் ஒளியும் இருந்தன. அது தனக்கு முன்பு வந்த தவ்ராத்தை உண்மைப்படுத்துவதாகவும் இறையச்சமுடையோருக்கு வழிகாட்டியாகவும் அறிவுரையாகவும் இருந்தது.*
47*இன்ஜீல் (வேதத்தை) உடையவர்கள் அதில் அல்லாஹ் அருளியதன்படி தீர்ப்பளிக்கட்டும். அல்லாஹ் அருளியதன்படி தீர்ப்பளிக்காதவர்கள் கீழ்ப்படியாதவர்களே ஆவர்.*

48*(நபியே!)நாம் உமக்குச் சத்தியத்தைக் கொண்டுள்ள இவ்வேதத்தை அருளியுள்ளோம். இது தனக்கு முன்புள்ள வேதங்களை உண்மைப்படுத்தக் கூடியதாகவும் அவற்றைப் பாதுகாக்கக் கூடியதாகவும் இருக்கிறது. எனவே நீர் அல்லாஹ் (உமக்கு) அருளிய இதனைக்கொண்டே அவர்களிடையே தீர்ப்பு வழங்குவீராக. உம்மிடம் வந்துள்ள சத்தியத்தை விட்டுவிட்டு அவர்களின் (மன)விருப்பங்களைப் பின்பற்றாதீர். (நம்பிக்கையாளர்களே!)நாம் உங்களில் ஒவ்வொரு கூட்டத்தாருக்கும் ஒரு சட்டத்தையும் செயல்முறையையும் ஏற்படுத்தியுள்ளோம். அல்லாஹ் விரும்பியிருந்தால் உங்களை ஒரே சமூகத்தாராக ஆக்கியிருப்பான். ஆனால் அவன் உங்களுக்கு வழங்கியவற்றைக் கொண்டு உங்களைச் சோதிக்கவே (இவ்வாறு பல சமூகத்தாராக உங்களை ஆக்கினான்.) எனவே நீங்கள் நன்மைகளை நோக்கி விரையுங்கள். நீங்கள் அனைவரும் அல்லாஹ்விடமே திரும்பிச் செல்ல வேண்டியிருக்கிறது. அப்போது (உலகில்) நீங்கள் முரண்பட்டுக் கொண்டிருந்தவற்றைப் பற்றி(ய உண்மையை) அவன் உங்களுக்குத் தெளிவுறுத்துவான்.*
49*(நபியே!) அல்லாஹ் அருளியதைக்கொண்டு அவர்களுக்கிடையே தீர்ப்பு வழங்குவீராக! அவர்களின் (மன)விருப்பங்களைப் பின்பற்றாதீர். அல்லாஹ்*

*உமக்கு அருளிய(வற்றில் எவையேனும்) சிலவற்றிலிருந்து அவர்கள் உம்மைத் திருப்பிவிடாதபடி அவர்களிடம் எச்சரிக்கையாக இருப்பீராக! (உமது தீர்ப்பை) அவர்கள் புறக்கணித்தால் – அறிந்துகொள்வீராக! அல்லாஹ் அவர்களின் சில பாவங்கள் காரணமாக அவர்களைத் தண்டிக்க விரும்புகிறான். உறுதியாக மனிதர்களில் பெரும்பாலோர் கீழ்ப்படியாதவர்களாகவே இருக்கின்றனர்.*
*[50]அறியாமைக்காலத்துத் தீர்ப்பையா அவர்கள் விரும்புகிறார்கள்? உறுதியாக நம்பிக்கைகொள்ளும் மக்களுக்குத் தீர்ப்பு வழங்குவதில் அல்லாஹ்வைவிடச் சிறந்தவன் யார்?*

*[51]நம்பிக்கையாளர்களே! யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் நண்பர்களாக்கிக்கொள்ளாதீர்கள். அவர்கள் ஒருவருக்கொருவர் நண்பர்களாக இருக்கின்றனர். உங்களில் யாரேனும் அவர்களை நண்பர்களாக்கிக் கொண்டால் அவரும் அவர்களைச் சார்ந்தவராவார். அல்லாஹ் தீவினையாளர்களுக்கு நேர்வழி காட்டமாட்டான்.**
*[52](நபியே!) உள்ளங்களில் (ஐயம், நயவஞ்சகம் ஆகிய) நோயுள்ளவர்கள் அவர்களை நோக்கி (நட்புக்கொள்ள) விரைந்தோடுவதை நீர் காண்பீர். (அவர்களிடமிருந்து விலகுவதால்) “எங்களுக்கு ஏதேனும் பாதிப்பு ஏற்படுமோ என்று நாங்கள் அஞ்சுகிறோம்” என்று அவர்கள் கூறுகின்றனர். அல்லாஹ் உங்களுக்கு வெற்றியையோ தன்னிடமிருந்து ஏதேனும் நன்மை பயக்கும் ஓர் முடிவையோ அளித்துவிடலாம். அப்போது அவர்கள் தங்கள் உள்ளங்களில் மறைத்து வைத்தவற்றைக் குறித்து வருந்துவர்.*
*[53](மறுமையில்)நம்பிக்கையாளர்கள் “இவர்கள்தானே அல்லாஹ்வின் மீது உறுதியாக ஆணையிட்டு ‘நாங்களும் உங்களுடன் இருக்கிறோம்’ என நம்பிக்கையூட்டியவர்கள்” என்று கேட்பர். அவர்களின் (நற்)செயல்கள் அனைத்தும் வீணாகி விடும். அவர்கள் இழப்பிற்குள்ளாகிவிடுவர்.*

*[54]நம்பிக்கையாளர்களே! உங்களில் யாரேனும் தமது மார்க்கத்தை விட்டு விலகிவிட்டாரானால் அல்லாஹ் விரைவில்*

---

***இதற்கான குறிப்பு 3:28க்கானதே**

*வேறொரு சமூகத்தினரைக் கொண்டு வருவான். அவன் அவர்களை நேசிப்பான்; அவர்களும் அவனை நேசிப்பர். அவர்கள் நம்பிக்கையாளர்களிடம் மென்மையாகவும் மறுப்பாளர்களிடம் கண்டிப்பாகவும் நடந்துகொள்வர். அவர்கள் இறைவழியில் கடுமுயற்சி புரிவர். பழிப்போரின் பழிப்புக்கு அஞ்சமாட்டார்கள். இது அல்லாஹ்வின் அருளாகும். தான் விரும்பியோருக்கு இதனை அவன் வழங்குகிறான். அல்லாஹ் தாராளமானவன்; முற்றும் அறிந்தவன்.*
*[55]உறுதியாக உங்களுடைய நண்பர்கள் அல்லாஹ்வும் அவனது தூதரும் தொழுகையைக் கடைப்பிடித்துக் கடமையாக்கப்பட்ட கொடையை அளித்து(அல்லாஹ்வின் கட்டளைக்கு)ப் பணிவோராக உள்ள நம்பிக்கையாளர்களுமே ஆவர்.*
*[56]அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்பிக்கையாளர்களையும் நேசர்களாக்கிக்கொள்வோர் (அறிந்து கொள்ளட்டும்) உறுதியாக அல்லாஹ்வின் கூட்டத்தினரே வெற்றி பெறக்கூடியவர்கள்.*

*[57]நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு முன்னால் வேதம் வழங்கப்பட்டவர்களில் உங்கள் மார்க்கத்தை ஏளனமாகவும் விளையாட்டாகவும் எடுத்துக் கொள்கின்றவர்களையும் மறுப்பாளர்களையும் நீங்கள் நண்பர்களாக்கிக் கொள்ளாதீர்கள்.* நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்துகொள்ளுங்கள்.*
*[58]நீங்கள் தொழுகைக்காக அழைக்கும்போது அவர்கள் அதை ஏளனமாகவும் விளையாட்டாகவும் எடுத்துக்கொள்கிறார்கள். இதற்குக் காரணம் அவர்கள் அறிவற்ற மக்களாக இருப்பதேயாகும்.*
*[59](நபியே!) நீர் கூறுவீராக: "வேதமுடையோரே! நாங்கள் அல்லாஹ்வின் மீதும் எங்களுக்கு அருளப்பட்டதன் மீதும் எங்களுக்கு முன்னர் அருளப்பட்டதன் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளோம் என்பதற்காகவா எங்களை வெறுக்கிறீர்கள்? உங்களில் பெரும்பாலோர் கீழ்ப்படியாதவர்களாகவே இருக்கிறீர்கள்"*
*[60]நீர் கூறுவீராக: "அல்லாஹ்விடம் இதைவிட(க்கொடுஞ்செயல் புரிந்து) மிக*

***இதற்கான குறிப்பு 3:28க்கானதே**

*மோசமான விளைவைச் சந்தித்தவர்களைப்பற்றி நான் உங்களுக்குக் கூறட்டுமா? இஸ்ராயீல்களை அல்லாஹ் சபித்துள்ளான். அவர்கள்மீது சினங்கொண்டு அவர்களில் சிலரைக் குரங்குகள் போலும் (சிலரைப்) பன்றிகள் போலும் (இயல்புள்ளவர்களாக) ஆக்கிவிட்டான்.* அவர்கள்தாம் சாத்தானை வணங்கியவர்கள். இத்தகைய மனிதர்கள் மிகவும் தரம் தாழ்ந்தவர்கள். நேர்வழியிலிருந்து மிகுதொலைவு விலகிச் சென்றவர்கள்.*

[61]*(நம்பிக்கையாளர்களே!) அவர்கள் உங்களிடம் வந்தால் "நாங்கள் நம்பிக்கைகொண்டோம்" என்று கூறுகின்றனர். உண்மையில் அவர்கள் மறுப்பாளர்களாகவே உங்களிடம் வந்தனர்; மறுப்பாளர்களாகவே சென்றனர். அவர்கள் மறைப்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன் ஆவான்.* [62]*(நபியே!) அவர்களில் பெரும்பாலோர் பாவத்திற்கும் வரம்புமீறலுக்கும் தடுக்கப்பட்ட(வட்டி போன்ற)வற்றை விழுங்குவதற்கும் விரைந்து செல்வதை நீர் காண்கிறீர். அவர்கள் செய்து கொண்டிருப்பவை எவ்வளவு தீயவை!* [63]*பாவமான சொற்களைக் கூறுவதிலிருந்தும் தடுக்கப்பட்டவற்றை விழுங்குவதிலிருந்தும் அவர்களின் குருமார்களும் அறிஞர்களும் அவர்களைத் தடுக்கவேண்டாமா? அவர்கள் செய்துகொண்டிருப்பவை எவ்வளவு தீயவை!*

[64]*"அல்லாஹ்வின் கை கட்டப்பட்டுள்ளது" என்று யூதர்கள் கூறுகின்றனர். ஆனால் அவர்களுடைய கைகள்தாம் கட்டப்பட்டுள்ளன. இவ்வாறு கூறியதால் அவர்கள் சபிக்கப்பட்டு விட்டனர். அவனுடைய இரு கைகளும் விரிந்தே இருக்கின்றன. தான் விரும்பியவாறு அவன் வாரி வழங்குகிறான். (நபியே!) உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பட்டவை அவர்களில் பெரும்பாலோருக்கு வரம்புமீறலையும் (இறை)மறுப்பையுமே*

---

***இது நேரடியாகப் பொருள் கொள்ளக்கூடியதல்ல. மாறாக அவர்களுடைய கீழ்மையான பண்புகளைக் குறியீடாக விளக்குவதேயாகும். அவர்கள் அந்த விலங்குகளைப் போல உருவத்தில் மாறுவதில்லை. ஆனால் அவர்களுடைய குணநலன்கள் அந்த விலங்குகளைப் போலாகி விடும்.**

மிகுதிப்படுத்துகின்றன. நாம் அவர்களுக்கிடையே மறுமை நாள்வரை பகைமையையும் வெறுப்பையும் விதைத்துவிட்டோம். அவர்கள் (உங்களுக்கெதிராகப்) போர் நெருப்பை மூட்டும்போதெல்லாம் அல்லாஹ் அதனை அணைத்து விடுகிறான். (ஆயினும்) அவர்கள் பூமியில் கலகம் விளைவிக்க முனைந்துகொண்டுதான் இருக்கின்றனர். அல்லாஹ் கலகம் விளைவிப்போரை விரும்புவதில்லை.

65வேதமுடையோர் நம்பிக்கைகொண்டு இறையச்சத்துடன் நடந்திருந்தால் நாம் அவர்களின் பாவங்களை அவர்களிடமிருந்து அகற்றியிருப்போம். அருட்கொடைகள் நிறைந்த சொர்க்கச் சோலைகளில் நுழையச் செய்திருப்போம். 66அவர்கள் தவ்ராத்தையும் இன்ஜீலையும் இன்னும் தங்கள் இறைவனிடமிருந்து அருளப்பட்டதையும் பின்பற்றியிருந்தால் தங்களுக்கு மேலே (வானத்தில்) இருந்தும் கீழே (பூமியில்) இருந்தும் கிடைப்பவற்றை உண்டிருப்பர். அவர்களில் சிலர் நேர்வழியில் இருக்கின்றனர். ஆயினும் பெரும்பாலோர் தீயசெயல்களைச் செய்பவர்களாகவே இருக்கின்றனர்.

67(எமது) தூதரே! உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பட்டதை (மக்களுக்கு) எடுத்துரைத்து விடுவீராக! அவ்வாறு நீர் செய்யாவிடில் அவனது தூதை நிறைவேற்றியவர் ஆகமாட்டீர். அல்லாஹ் (தீங்கிழைக்கும்) மக்களிடமிருந்து உம்மைக் காப்பாற்றுவான். உறுதியாக அல்லாஹ் (தன்னை) மறுக்கும் மக்களுக்கு நேர்வழி காட்டமாட்டான். 68“வேதமுடையோரே! தவ்ராத்தையும் இன்ஜீலையும் உங்கள் இறைவனிடமிருந்து நீங்கள் உங்களுக்கு அருளப்பட்டதையும் கடைப்பிடிக்காதவரை எ(ந்த நல்லமார்க்கத்)தையும் நீங்கள் சார்ந்தவர்கள் அல்லர்” என்று (நபியே,) நீர் கூறுவீராக! இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பட்ட வேதம் அவர்களில் பெரும்பாலோருக்கு வரம்புமீறலையும் மறுப்பையுமே மிகுதிப்படுத்துகின்றது. எனவே நீர் மறுப்பாளர்கள் பற்றிக் கவலைப்படாதீர்.

69நம்பிக்கையாளர்கள், யூதர்கள், சாபியீன்கள், கிறிஸ்தவர்கள்
ஆகியோரில் யார் அல்லாஹ்வின்மீதும் மறுமை நாளின் மீதும்
நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிகிறார்களோ அவர்களுக்கு
எந்த அச்சமுமில்லை; அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.
70நாம் இஸ்ராயீலின் மக்களிடம் உறுதிமொழி வாங்கினோம்.
அவர்களிடம் பல தூதர்களை அனுப்பினோம். அவர்களுக்குப்
பிடிக்காத கட்டளையைத் தூதர்கள் அவர்களிடம் கொண்டு
வந்தபோதெல்லாம் சிலரைப் பொய்மைப்படுத்தினர்; சிலரைக்
கொலை செய்தனர். 71இதனால் எந்தத் துன்பமும் தமக்கு
ஏற்படாது என அவர்கள் எண்ணிக் கொண்டனர். எனவே
அவர்கள் (மனத்தளவில்) குருடர்களாகவும் செவிடர்களாகவும்
ஆகிவிட்டனர். ஆயினும் அல்லாஹ் அவர்களை(த் தன் அருளால்)
மன்னித்தான். அதன் பின்னரும் அவர்களில் பெரும்பாலோர்
குருடர்களாகவும் செவிடர்களாகவும் இருக்கின்றனர்.
அவர்கள் செய்பவற்றையெல்லாம் அல்லாஹ் உற்றுநோக்கிக்
கொண்டிருக்கிறான்.

72“மர்யத்தின் மைந்தர் மஸீஹ்தான் அல்லாஹ்” என்று
கூறியவர்கள் உறுதியாக மறுப்பாளர்களாகி விட்டனர். ஆனால்
மஸீஹ், “இஸ்ராயீலின் மக்களே! என் இறைவனும் உங்கள்
இறைவனுமாகிய அல்லாஹ்வையே வணங்குங்கள்” என்றே
கூறினார். எவர் அல்லாஹ்வுக்கு இணைவைக்கிறாரோ அவருக்கு
அல்லாஹ் சொர்க்கத்தைத் தடைசெய்துவிடுவான். அவரது
தங்குமிடம் நரகமாகும். தவறிழைப்போர்களுக்கு உதவிசெய்வோர்
யாரும் இல்லை 73“அல்லாஹ் (கடவுளர்) மூவரில் ஒருவன்”
என்று கூறியவர்களும் உறுதியாக மறுப்பாளர்களாகி விட்டனர்.
உண்மையில் ஒரே இறைவனைத் தவிர வேறு இறைவன் இல்லை.
இவ்வாறு கூறுவதிலிருந்து அவர்கள் விலகாவிட்டால் அந்த
மறுப்பாளர்களைத் துன்புறுத்தும் வேதனை வந்தடைந்தே தீரும்.
74அவர்கள் அல்லாஹ்விடம் மீண்டு அவனிடம் பாவமன்னிப்புக்
கோர வேண்டாமா? அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்;

*நிகரற்ற அன்பாளன். [75]மர்யத்தின் மைந்தர் மஸீஹ் ஒரு தூதரே அன்றி வேறில்லை. அவருக்கு முன்னரும் பல தூதர்கள் வந்து சென்றுள்ளனர். அவருடைய தாய் வாய்மையானவர். இருவரும் (மற்ற மனிதர்களைப் போல) உணவு உண்போராகவே இருந்தனர். (நபியே!) அம்மக்களுக்கு நாம் எவ்வாறு சான்றுகளைத் தெளிவுபடுத்துகிறோம் என்பதைப் பார்ப்பீராக! பின்னர் அவர்கள் எங்கே திரும்பிச் செல்கிறார்கள் என்பதையும் பார்ப்பீராக!*

*[76](மேலும் நபியே! அவர்களிடம்) "அல்லாஹ்வையன்றி உங்களுக்கு எந்தத் தீங்கையோ நன்மையையோ அளிக்க முடியாதவற்றையா நீங்கள் வணங்குகிறீர்கள்?" என்று நீர் கேட்பீராக! அல்லாஹ்வே செவிமடுப்பவன்; முற்றும் அறிந்தவன்.*

*[77]"வேதமுடையோரே! உங்கள் மார்க்க(விஷய)த்தில் உண்மைக்குப் புறம்பாக எதையும் மிகைப்படுத்தி விடாதீர்கள். இதற்கு முன்னர்த் தாங்களும் கெட்டுப் பலரையும் வழிதவறச்செய்து நேரான பாதையிலிருந்தும் பிறழ்ந்துவிட்ட மக்களின் மனவிருப்பங்களைப் பின்பற்றாதீர்கள்" என (நபியே!) கூறுவீராக. [78]இஸ்ராயீலின் மக்களில் அல்லாஹ்வை மறுத்தோர் தாவீத், மர்யத்தின் மைந்தர் இயேசு ஆகியவர்களின் நாவினால் சபிக்கப்பட்டு உள்ளனர். அவர்கள் கீழ்ப்படியாததும் வரம்புமீறியதுமே அதற்குக் காரணமாகும். [79]அவர்கள் தாம் செய்துகொண்டிருந்த தீமைகளிலிருந்து ஒருவரையொருவர் தடுக்காமலும் இருந்தனர். அவர்களின் செயல்கள் (உண்மையில்) மிகவும் தீயவை ஆகும். [80](நபியே!) அவர்களில் பெரும்பாலோர் மறுப்பாளர்களுடன் நட்புக் கொண்டிருப்பதை நீர் காண்கிறீர். அல்லாஹ் அவர்கள்மீது சினம்கொள்ளும் வண்ணம் தங்களுக்காக அவர்கள் தேடி அனுப்பியிருப்பது மிகக் கெட்டது. (மறுமையில்) அவர்கள் முடிவில்லாத வேதனையில் இருப்பார். [81]அவர்கள் அல்லாஹ்வின் மீதும் (இத்)தூதரின் மீதும் அவருக்கு அருளப்பட்டதன்மீதும் நம்பிக்கை கொண்டவர்களாக*

இருந்திருந்தால் மறுப்பாளர்களை நண்பர்களாக்கிக் கொண்டிருக்க
மாட்டார்கள். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர்
கீழ்ப்படியாதவர்களாகவே இருக்கின்றனர்.

82மற்ற மக்களைவிட யூதர்களும் இணைவைப்பாளர்களுமே
நம்பிக்கையாளர்களுக்குக் கடும் பகைவர்களாக இருப்பதை
(நபியே!) நீர் காண்பீர். தங்களைக் கிறிஸ்தவர்கள் எனக்
கூறுபவர்களே மற்ற மக்களைவிட நம்பிக்கையாளர்களுக்கு மிக
நெருக்கமான நேசம் கொண்டவர்களாக இருப்பதையும் நீர்
காண்பீர். ஏனெனில் அவர்களில் குருமார்களும் துறவிகளும்
இருக்கின்றனர்; அவர்கள் செருக்குக்கொள்வதில்லை.
83(எமது) தூதருக்கு அருளப்பட்ட இ(வ்வேதத்)தை அவர்கள்
செவியுறும்போது சத்தியத்தை அறிந்துகொண்டதனால்
அவர்களின் கண்களிலிருந்து கண்ணீர் வடிவதை (நபியே!) நீர்
காண்பீர். “எங்கள் இறைவா! நாங்கள் நம்பிக்கைகொண்டோம்.
எனவே (உன் தூதரும் உன் வேதமும் உண்மை என்று) சாட்சி
கூறுவோருடன் எங்களையும் பதிவு செய்வாயாக!” என்று
இறைஞ்சி வேண்டுகின்றனர். 84“அல்லாஹ்வின் மீதும் எங்களிடம்
வந்துள்ள சத்தியத்தின் மீதும் நம்பிக்கைகொள்ளாமலிருக்க
எங்களுக்கு என்ன (தடை) இருக்கிறது? எங்கள் இறைவன்
எங்களை நல்லோர்களுடன் சேர்த்துவிட வேண்டும்
என்றே நாங்கள் பேராவல் கொண்டிருக்கிறோம்” (என்றும்
கூறுகின்றனர்.) 85அவர்கள் இவ்வாறு கூறியதன் பயனாக
அல்லாஹ் அவர்களுக்குச் சொர்க்கச் சோலைகளை வழங்குவான்.
அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள்
என்றென்றும் தங்கியிருப்பர். இதுவே நன்மைபுரிவோருக்கான
கூலியாகும். 86(எமது தூதரை) மறுத்து எமது வசனங்களைப்
பொய்மைப்படுத்துபவர்கள் நரகவாசிகளே ஆவர்.

87நம்பிக்கையாளர்களே! அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்த
தூயபொருள்களை (நீங்களே) தடை செய்துகொள்ளாதீர்கள்;

வரம்பு மீறாதீர்கள். வரம்பு மீறுவோரை அல்லாஹ் நேசிப்பதில்லை.
88அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய அனுமதிக்கப்பட்ட தூயவற்றை உண்ணுங்கள். நீங்கள் நம்பிக்கை கொண்டுள்ள அல்லாஹ்வுக்கே அஞ்சி நடந்துகொள்ளுங்கள்.
89நீங்கள் செய்த பொருளற்ற சத்தியங்களுக்காக அல்லாஹ் உங்களைக் குற்றவாளியாக்க மாட்டான். நீங்கள் உறுதியாகச் செய்த சத்தியங்களுக்காக (அவற்றில் தவறினால்) அவன் உங்களைக் குற்றவாளி ஆக்குவான். எனவே அதற்கு ஈடாக நீங்கள் உங்கள் குடும்பத்தினருக்கு அளிக்கும் உணவுகளில் நடுத்தரமான உணவைப் பத்து ஏழைகளுக்கு அளிக்க வேண்டும்; அல்லது ஆடை வழங்க வேண்டும்; அல்லது ஓர் அடிமையை விடுதலை செய்யவேண்டும். இவ்வாறு செய்ய வசதியற்றவர்கள் மூன்று நாட்கள் நோன்பு நோற்க வேண்டும். நீங்கள் சத்தியம் செய்(து அதை முறித்)தால் இதுவே உங்கள் சத்திய முறிவுக்கான ஈடாகும். உங்கள் சத்தியங்களைப் பேணிக்கொள்ளுங்கள். நீங்கள் நன்றி செலுத்துவோராக இருக்க வேண்டும் என்பதற்காக இவ்வாறு அல்லாஹ் உங்களுக்குத் தனது கட்டளைகளைத் தெளிவுபடுத்துகிறான்.

90(ஓரிறை)நம்பிக்கையாளர்களே! மது (அருந்துதல்), சூதாட்டம், நடுகல் (சிலைவணக்கம்), அம்புகளைக் கொண்டு குறிபார்த்தல் ஆகிய அனைத்தும் சாத்தானின் அருவருக்கத்தக்க செயல்களாகும். எனவே நீங்கள் வெற்றிபெறும் பொருட்டு அவற்றிலிருந்து விலகிக்கொள்ளுங்கள்.
91சாத்தான் மது, சூதாட்டம் ஆகியவற்றின் மூலம் உங்களிடையே பகைமையையும் வெறுப்பையும் உண்டாக்கவும் அல்லாஹ்வின் நினைவிலிருந்தும் தொழுகையிலிருந்தும் உங்களைத் தடுக்கவுமே விரும்புகிறான். நீங்கள் அவற்றிலிருந்து விலகிக்கொள்ள மாட்டீர்களா?
92அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படியுங்கள்; தூதருக்கும் கீழ்ப்படியுங்கள்; எச்சரிக்கையாக இருங்கள். (இதனை) நீங்கள் புறக்கணித்து விடுவீர்களாயின் – அறிந்துகொள்ளுங்கள்! எமது தூதருடைய பொறுப்பு தெளிவாக எடுத்துரைத்துவிடுவது மட்டுமேயாகும்.
93நம்பிக்கைகொண்டு

*நற்செயல் புரிந்தவர்கள் (தடை செய்யப்பட்டவற்றை அவை தடை செய்யப்படும் முன்னர்) உட்கொண்டிருந்தால் (அது) அவர்கள்மீது குற்றமுமில்லை. அவர்கள் (இறைவனுக்கு) அஞ்சி, (உறுதியான) நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்து, பின்னரும் (இறைவனுக்கு) அஞ்சி, நம்பிக்கையில் (நிலைத்திருந்து), பின்னரும் (இறைவனுக்கு) அஞ்சி நற்செயல் செய்து கொண்டிருந்தால் (அவர்கள்மீது குற்றமில்லை.) அல்லாஹ் நற்செயல் செய்வோரை நேசிக்கிறான்.*

*94நம்பிக்கையாளர்களே! தனிமையி(லிருக்கும் போதி)லும் யார் அஞ்சுகிறார்கள் என்பதை அறிவதற்காக (நீங்கள் புனிதப் பயண ஆடையில் (இஹ்ராமில்) இருக்கும் போது) அல்லாஹ் உங்கள் கைகளுக்கும் ஈட்டிகளுக்கும் எட்டும் வகையில் வேட்டை விலங்குகளைக் காட்டி உங்களைச் சோதிப்பான். இதன் பின்னரும் எவர் வரம்பு மீறுகிறாரோ அவருக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.*
*95நம்பிக்கையாளர்களே! நீங்கள் இஹ்ராம் அணிந்திருக்கும் நிலையில் வேட்டை(யாடி) விலங்குகளைக் கொல்லாதீர்கள். உங்களில் வேண்டுமென்றே (விலங்கு) ஒன்றைக் கொன்றவர் (ஆடு, மாடு, ஒட்டகம் போன்றவற்றுள்) அதற்குச் சமமான ஒரு கால்நடையை ஈடாகக் கொடுக்க வேண்டும். உங்களில் நியாயமான இரு சாட்சிகள் இதனை முடிவுசெய்வர். அது கஅபாவிற்கு அனுப்பிவிட வேண்டிய காணிக்கை ஆகும். அல்லது அதற்கு ஈடாகச் சில ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். அல்லது தான் செய்த செயலின் விளைவை அனுபவிப்பதற்காக அதற்குச் சமமான நோன்புகள் நோற்கவேண்டும். இதற்கு முன்னர் நடந்துவிட்டதை அல்லாஹ் மன்னித்து விட்டான். யாரேனும் மீண்டும் இவ்வாறு செய்தால் அல்லாஹ் அவரைத் தண்டிப்பான். அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; தண்டனையளிப்பவன்*
*96(நீங்கள் இஹ்ராம் அணிந்திருந்தாலும்) உங்களுக்கும் (பிற) பயணிகளுக்கும் பயன்தரும் பொருட்டுக் கடலில் வேட்டையாடுவதும் அதனை உண்பதும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. ஆயினும் நீங்கள் இஹ்ராமுடைய*

நிலையில் இருக்கும்வரை தரையில் வேட்டையாடுவது தடுக்கப்பட்டுள்ளது. அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்துகொள்ளுங்கள். அவனிடமே நீங்கள் ஒன்றுசேர்க்கப்படுவீர்கள்.
[97]அல்லாஹ் புனித இல்லமான கஅபாவை மனிதர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் இடமாக ஆக்கியுள்ளான். அவ்வாறே புனிதமான மாதங்களையும் பலிப் பிராணிகளையும் அவற்றின் கழுத்தில் அணிவிக்கப்பட்ட பட்டைகளையும் (அடையாளங்களாக) அவன் ஆக்கியுள்ளான். இ(வ்வாறாக்கப்பட்டிருப்ப)து வானங்களிலும் பூமியிலும் உள்ளவை அனைத்தையும் அல்லாஹ் அறிவான் என்பதை நீங்கள் அறிந்து கொள்வதற்காகத்தான். அல்லாஹ் அனைத்தையும் முற்றும் அறிந்தவன்.
[98]அறிந்துகொள்ளுங்கள்! தண்டிப்பதில் அல்லாஹ் கடுமையானவன். ஆயினும் அவன் பெரும் மன்னிப்பாளன் நிகரற்ற அன்பாளன்.

[99](இறைக்கட்டளைகளை) எடுத்துரைத்து விடுவதே தூதர் மீதுள்ள கடமையாகும். நீங்கள் வெளிப்படுத்துவதையும் மறைத்துவைப்பதையும் அல்லாஹ் நன்கறிவான்.
[100](நபியே! உலகில்) தீயவையே பெருகியிருப்பது உம்மை மயங்கச் செய்யலாம். தீயவையும் நல்லவையும் சமமாகமாட்டா. எனவே (நீர் மக்களிடம்) “அறிவுடையோரே! அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்துகொள்ளுங்கள். அதனால் நீங்கள் வெற்றி பெறலாம்” என்று கூறும்.

[101]நம்பிக்கையாளர்களே! (நபியிடம் தேவையில்லாமல்) சிலவற்றைக் குறித்துக் கேள்வி கேட்காதீர்கள். அவை வெளிப்படுத்தப்பட்டால் உங்களுக்கு வருத்தம் ஏற்படக்கூடும். குர்ஆன் அருளப்படுகின்ற வேளையில் அவற்றைக் குறித்து நீங்கள் கேள்வி எழுப்பினால் அவை உங்களுக்கு வெளிப்படுத்தப்பட்டுவிடும். (அதனால் நீங்கள் துன்பப்பட நேரிடலாம்) அல்லாஹ் (இதுவரை நீங்கள் வீணாகக் கேட்ட) அவற்றை மன்னித்துவிட்டான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; சகிப்புத்தன்மையுடையவன்.
[102]உங்களுக்கு முந்தைய சமூகத்தினரும் (தங்கள் தூதர்களிடம்) இதேபோன்றுதான் கேள்வி கேட்டுக்கொண்டிருந்தனர். பின்னர்

*(அவர்களுக்கு அவை தெரிவிக்கப்பட்டபோது) அவற்றை (ஏற்க) மறுப்பவர்களாகி விட்டனர்.*
103*(சிலைகளின் பெயர்களில் நேர்ந்து விடப்படும்) பஹீரா, ஸாயிபா, வஸீலா, ஹாம்* (எனும் பெயர்களைக் கொண்ட) பிராணிகளை அல்லாஹ் (மார்க்கச் சின்னங்களாக) ஏற்படுத்தவில்லை. ஆனால் மறுப்பாளர்கள்தாம் அல்லாஹ்வுக்கு எதிராகப் பொய்யைப் புனைந்து கூறுகின்றனர். அவர்களில் பெரும்பாலோர் அறிவற்றவர்களாகவே இருக்கின்றனர்.*
104*"அல்லாஹ் உங்களுக்கு அருளிய(வேதத்)தை நோக்கியும் தூதரை நோக்கியும் வாருங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால் "எங்கள் முன்னோர்களை எவ்வழியில் கண்டோமோ அவ்வழியே எங்களுக்குப் போதுமானது" என்று கூறுகின்றனர். அவர்களின் முன்னோர்கள் எதையும் புரிந்து கொள்ளாதவர்களாகவும் நேர்வழியில் இல்லாதவர்களாகவும் இருந்தாலுமா (அவர்களைப் பின்பற்றுவர்?)*
105*(இறை)நம்பிக்கையாளர்களே! உங்களை நீங்களே காத்துக்கொள்ளுங்கள். நீங்கள் நேர்வழியில் இருந்தால் வழிதவறியோர் உங்களுக்கு எந்தத் தீங்கும் இழைக்கமுடியாது. நீங்கள் அனைவரும் அல்லாஹ்விடமே திரும்ப வேண்டியிருக்கிறது; அப்போது நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றைப்பற்றி அவன் உங்களுக்கு அறிவிப்பான்.*

106*நம்பிக்கையாளர்களே! உங்களில் எவருக்கேனும் சாவு வேளை நெருங்கிவிட்டால் இறுதிவிருப்பம் தெரிவிக்கும்போது உங்களிடையே நேர்மையான இருவர் சாட்சிகளாக இருக்க வேண்டும். அல்லது நீங்கள் பயணத்தில் இருக்கும்போது சாவுத்துன்பம் உங்களை நெருங்கினால் (உங்களைச் சார்ந்தவர் கிடைக்காத நிலையில்) உங்களைச் சாராத மற்றவர்களிலிருந்து இருவர் சாட்சிகளாக இருக்கலாம். (சாட்சிகளின் நேர்மை மீது) உங்களுக்கு ஐயம் ஏற்பட்டால் இரு சாட்சிகளையும்*

---

***இவை இஸ்லாத்திற்கு முந்தைய காலகட்டத்தில் வாழ்ந்த அரேபியர்கள் தங்கள் கடவுள் சிலைகளுக்கு நேர்ந்துவிடும் கால்நடைகளுக்கு வைத்துக்கொண்ட பெயர்கள் ஆகும்.**

*தொழுகைக்குப் பின்னர் நிறுத்தி வையுங்கள். அவர்கள் இருவரும் "நாங்கள் ஒருபோதும் எந்த விலைக்கும் சாட்சியத்தை விற்றுவிடமாட்டோம், அவர்கள் நெருங்கிய உறவினர்கள் ஆயினும் சரியே. நாங்கள் அல்லாஹ்வின் (பெயரால் கூறும்) சாட்சியத்தை மறைக்கமாட்டோம். அவ்வாறு நாங்கள் செய்வோமானால் உறுதியாக நாங்கள் பாவிகளாகி விடுவோம்" என்று அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூறவேண்டும்.*
*107அவர்கள் இருவரும் (நேர்மைக்கு மாறாகச் சாட்சியம் கூறிக்) குற்றத்துக்கு ஆளாகிவிட்டனர் என்று தெரியவந்தால் அப்போது (பொய்ச் சத்தியத்தால்) பாதிக்கப்பட்டவர்களின் சார்பில் வேறு இருவர் சாட்சி கூறவேண்டும். அவர்கள் "எங்களின் சாட்சியம் அவ்விரு சாட்சியங்களைவிட உண்மையானது, இதில் நாங்கள் வரம்பு மீறவில்லை. அவ்வாறு செய்தால் நாங்கள் தீவினையாளர்களாகி விடுவோம்" என்று அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூறவேண்டும்.*
*108மக்கள் சரியான முறையில் சாட்சி கூறுவதற்கும் தாம் அளித்த சாட்சியம் மற்றவர்கள் அளிக்கும் சாட்சியத்தால் மறுக்கப்பட்டுவிடுமோ என்று அவர்கள் அஞ்சுவதற்கும் இதுவே ஏற்ற வழிமுறையாகும். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; செவிசாயுங்கள்; கீழ்ப்படியாதோரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துவதில்லை.*

*109அல்லாஹ் தூதர்கள் அனைவரையும் ஒன்றுசேர்க்கும் (அந்த மறுமை) நாளில், "உங்களுக்கு (மக்களிடமிருந்து) என்ன எதிர்வினை கிடைத்தது? என்று கேட்பான். (அப்போது) அவர்கள் "எங்களுக்கு எதுவும் தெரியாது. மறைவானவற்றை நீயே அறியக்கூடியவன்" என்று கூறுவர்.*
*110அப்போது அல்லாஹ் (இயேசுவை நோக்கிக்) கூறுவான்: "மர்யத்தின் மைந்தர் இயேசுவே! உமக்கும் உம்முடைய அன்னைக்கும் நான் வழங்கிய அருளை நினைவு கூர்வீராக! தூய ஆன்மாவின் மூலம் உம்மை வலிமைப்படுத்தினேன். நீர் தொட்டில் பருவத்திலும் வாலிபப் பருவத்திலும் மக்களிடம் பேசியதையும் உமக்கு வேதத்தையும் ஞானத்தையும் தவ்ராத்தையும்*

*இன்ஜீலையும் நான் கற்பித்ததையும் (நீர்) எனது கட்டளைப்படி*
*(களி)மண்ணால் பறவையின் வடிவத்தைச்செய்து அதில்*
*ஊதியவுடன் என் கட்டளைப்படி அது பறவையாகிவிட்டதையும்*
*நீர் (பிறவிக்)குருடனையும் தொழுநோயாளியையும் என்*
*கட்டளைப்படி குணப்படுத்தியதையும் இறந்தவர்களை என்*
*கட்டளைப்படி நீர் மீண்டும் உயிர்ப்பித்து எழச் செய்ததையும்*
*(நினைவு கூர்வீராக!) இஸ்ராயீலின் மக்களிடம் நீர் தெளிவான*
*சான்றுகளைக் கொண்டு வந்தபோது அவர்களிலிருந்த*
*மறுப்பாளர்கள் “இது வெளிப்படையான ஒரு சூனியமேயாகும்”*
*என்று கூறிய வேளையில் அவர்களின் தீங்கிலிருந்து நான் உம்மைக்*
*காப்பாற்றியதையும் (நினைவு கூர்வீராக!)* [111]*(மேலும் இயேசுவே!)*
*“என்னிடமும் எனது இந்தத் தூதரிடமும் நம்பிக்கைகொள்ளுங்கள்”*
*என்று உம்முடைய சீடர்களுக்கு நான் உணர்த்தியபோது அவர்கள்*
*(உம்மிடம்) “நாங்கள் நம்பிக்கை கொண்டோம்; உறுதியாக*
*நாங்கள் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்தவர்கள் என்பதற்கு நீரே*
*சாட்சியாக இருப்பீராக!’ என்று கூறியதையும் நினைவு கூரும்”*
*(என்றும் அல்லாஹ் கூறுவான்.)*

[112]*இயேசுவின் சீடர்கள் “மர்யத்தின் மைந்தர் இயேசுவே! உம்*
*இறைவனால் எங்களுக்காக வானத்திலிருந்து ஓர் உணவுத்தட்டை*
*இறக்கி வைக்க இயலுமா? என்று கேட்டபோது “நீங்கள்*
*நம்பிக்கை கொண்டவர்களாக இருப்பின் அல்லாஹ்வுக்கு அஞ்சி*
*நடந்துகொள்ளுங்கள்” என்று அவர் கூறினார்.* [113]*(அதற்கு)*
*அவர்கள் “நாங்கள் அதிலிருந்து உண்டு எங்கள் உள்ளங்கள்*
*நிறைவடைய வேண்டும்; நீர் எங்களிடம் உண்மையே கூறினீர்*
*என்பதை அறிந்துகொள்ளவும் அதற்கு நாங்கள் சாட்சியாக*
*இருக்கவும் விரும்புகிறோம்” என்றனர்.* [114]*(ஆகவே) மர்யத்தின்*
*மைந்தர் இயேசு (தம் இறைவனிடம்) “அல்லாஹ்வே! எங்கள்*
*இறைவனே! வானத்திலிருந்து எங்களுக்கு ஓர் உணவுத்தட்டை*
*நீ இறக்கி வைப்பாயாக! அந்த நாள் எங்களுக்கும் எங்கள்*

*முன்னோர்களுக்கும் எங்களுக்குப் பின் வருவோருக்கும் திருநாளாகவும் உன்னிடமிருந்து ஒரு சான்றாகவும் அமையட்டும். எங்களுக்கு வாழ்வாதாரம் வழங்குவாயாக! வாழ்வாதாரம் வழங்குபவர்களில் மிகச் சிறந்தவன் நீயே" என்று இறைஞ்சி வேண்டினார்.*
115*(அதற்கு) அல்லாஹ் "உறுதியாக நான் உங்களுக்கு அதை இறக்குவேன்; ஆனால் அதன் பின்னரும் உங்களில் யாரேனும் (என்னை) மறுத்தால் அவருக்கு நான் உலகில் யாருக்கும் வழங்காத கடுந்தண்டனையை வழங்குவேன்" என்று கூறினான்.*

116*(மறுமையில் அல்லாஹ் இயேசுவிடம்) "மர்யத்தின் மைந்தர் இயேசுவே! 'அல்லாஹ்வையன்றி என்னையும் என் அன்னையையும் இரு தெய்வங்களாக ஆக்கிக்கொள்ளுங்கள்' என்று நீர் மக்களிடம் கூறினீரா?" என்று கேட்கும்போது, அவர் "நீ மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன், எனக்குத் தகுதியல்லாத ஒன்றைக் குறித்துக் கூறுவது எனது பணியல்ல. அவ்வாறு நான் கூறியிருந்தால் அதனை நீ அறிந்திருப்பாய். என் உள்ளத்தில் இருப்பதை நீ நன்கறிவாய்; ஆனால் உன் உள்ளத்தில் இருப்பதை நான் அறியேன்; உறுதியாக நீயே மறைவானவற்றை அறிந்தவன்" என்று கூறுவார்.*
117*"நீ எனக்குக் கட்டளையிட்டபடி (மக்களிடம்) நான் 'என் இறைவனும் உங்கள் இறைவனுமாகிய அல்லாஹ்வையே வணங்குங்கள்' என்பதைத் தவிர (வேறு எதனையும்) கூறவில்லை. அவர்களிடையே நான் இருந்தவரை அவர்களுக்குச் சாட்சியாளராக இருந்தேன், என்னை நீ கைப்பற்றிய பிறகு நீயே அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தாய். நீயே எல்லாவற்றுக்கும் சாட்சியாளன்."*

118*"நீ அவர்களுக்குத் தண்டனை அளித்தால் – அவர்கள் உன் அடியார்கள்தாம். அவ்வாறன்றி அவர்களை நீ மன்னித்துவிட்டால் – உறுதியாக நீயே யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்" (என்றும் இயேசு கூறுவார்.)*
119*(அப்போது)*

அல்லாஹ் “இன்றையநாள் உண்மையாளர்களுக்கு அவர்களின்
உண்மை பயனளிக்கக் கூடிய நாளாகும்” என்று கூறுவான்.
அவர்களுக்குச் சொர்க்கங்கள் உண்டு. அவற்றில் ஆறுகள்
ஓடிக்கொண்டிருக்கும். அவற்றில் அவர்கள் என்றென்றும்
தங்கியிருப்பர். அல்லாஹ் அவர்களைக் குறித்து நிறைவடைவான்;
அவர்களும் அல்லாஹ்வைக் குறித்து நிறைவடைவர்; இதுவே
மாபெரும் வெற்றியாகும். 120வானங்கள், பூமி அவற்றிலுள்ளவை
ஆகியவற்றின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அவன் யாவற்றின்
மீதும் பேராற்றலுடையவன்.

# 6. கால்நடைகள் (அல்அன்ஆம்)

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...

1அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன்தான்
வானங்களையும் பூமியையும் படைத்தான். இருள்களையும்
ஒளியையும் உண்டாக்கினான். இவ்வாறிருந்தும் மறுப்பாளர்கள்
தம் இறைவனுக்கு இணைகளைக் கற்பிக்கின்றனர். 2அவன்தான்
உங்களை களிமண்ணிலிருந்து படைத்து ஒரு (வாழ்நாள்)
காலக்கெடுவை விதித்தான். (மறுமையில் விசாரிக்க
உயிர்ப்பிக்கப்படும்) மற்றொரு காலக்கெடுவும் அவனிடம் உண்டு.
அவ்வாறிருந்தும் நீங்கள் ஐயம்கொள்கிறீர்கள்!

3அவன்தான் வானங்களிலும் பூமியிலும் (வணக்கத்திற்குரிய)
அல்லாஹ். நீங்கள் மறைப்பதையும் வெளிப்படுத்துவதையும் அவன்
அறிவான்; நீங்கள் செய்பவற்றையும் அவன் அறிவான். 4எனினும்
(மறுப்பாளர்கள்) தங்கள் இறைவனின் வசனங்களில் எந்த
வசனம் வந்தபோதும் அதைப் புறக்கணிக்காமல் இருந்ததில்லை.
5(அவ்வாறே இப்போது) தங்களிடம் வந்துள்ள இந்தச்
சத்திய(வேத)த்தையும் அவர்கள் பொய்மைப்படுத்துகின்றனர்.
ஆகவே அவர்கள் எதனை ஏளனம் செய்து கொண்டிருந்தனரோ
அதனைப்பற்றிய (உண்மைச்) செய்திகள் விரைவில் வந்துசேரும்.

*[6]அவர்களுக்கு முன்னர் நாம் எத்தனையோ சமூகத்தினரை அழித்திருக்கிறோம் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா? பூமியில் உங்களுக்கு வழங்காத வசதிகளையெல்லாம் அவர்களுக்கு வழங்கியிருந்தோம். நாம் அவர்களின்மீது வானத்திலிருந்து தொடர்ந்து மழை பொழியச்செய்தோம்; அவர்களின் (வாழ்விடங்கள்) இடையே ஆறுகளை ஓடச் செய்தோம். ஆயினும் அவர்களது பாவங்கள் காரணமாக அவர்களை அழித்துவிட்டோம். அவர்களுக்குப் பின்னர் வேறொரு சமூகத்தினரை உருவாக்கினோம்.*

*[7](நபியே!) காகிதத்தில் எழுதப்பெற்ற ஒரு வேத(ப்புத்தக)த்தை நாம் உமக்கு அருளி அதனை மறுப்பாளர்களாகிய அவர்கள் தம் கைகளால் தொட்டுப் பார்த்தாலும்கூட “இது வெளிப்படையான சூனியமேயன்றி வேறில்லை” என்றுதான் கூறுவர். [8](மேலும்) அவர்கள் (இவர் இறைத்தூதர் எனச் சாட்சி கூற) “இவருடன் ஒரு வானவர் அனுப்பப்பட்டிருக்க வேண்டாமா?” என்று கேட்கின்றனர். அவ்வாறு நாம் ஒரு வானவரை அனுப்பியிருந்தால் (அவர்களின்) கணக்கு முடிந்திருக்கும். அவர்களுக்குச் சிறிதும் தவணை அளிக்கப்பட்டிருக்காது. [9]ஒரு வானவரைத் தூதராக நாம் அனுப்பியிருந்தால் அவரையும் மனித உருவிலேயே அனுப்பியிருப்போம். இப்போது அவர்கள் ஐயம் கொண்டிருப்பதைப் போலவே (அப்போதும்) அவர்கள் ஐயம் கொள்ளுமாறு செய்திருப்போம். [10](நபியே!) உமக்கு முன்னரும் தூதர்கள் (பலர்) ஏளனம் செய்யப்பட்டனர். முடிவில் எ(ந்த வே)தனை குறித்து ஏளனம் செய்தார்களோ அது அவர்களைச் சூழ்ந்து கொண்டது. [11](நபியே! “எமது தூதர்களைப்) பொய்மைப்படுத்தியவர்களின் முடிவு என்னவாயிற்று என்பதைப் பூமியில் பயணம் செய்து கண்டுகொள்ளுங்கள்” என்று நீர் கூறும்!*

*[12](நபியே!) “வானங்களிலும் பூமியிலும் உள்ளவை (அனைத்தும்) யாருக்குரியவை?” என்று (அவர்களிடம்) நீர் கேட்பீராக! “(அனைத்தும்) அல்லாஹ்வுக்கே உரியவை” என்று*

நீர் கூறுவீராக! அருள்புரிவதை அவன் தன்மீது கடமையாக்கிக்
கொண்டான். மறுமை நாளில் உறுதியாக அவன் (மனிதர்களே!)
உங்கள் அனைவரையும் ஒன்று சேர்ப்பான். அதில் ஐயமேயில்லை.
யாரெல்லாம் தமக்குத்தாமே இழப்பை ஏற்படுத்திக்
கொண்டார்களோ அவர்கள் இதன்மீது நம்பிக்கைகொள்ளவே
மாட்டார்கள். 13இரவி(ன் இருளி)லும் பகலி(ன் ஒளியி)லும்
வாழ்பவை (அனைத்தும்) அல்லாஹ்வுக்கே உரியன. அவன்
(அனைத்தையும்) செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.

14(நபியே!) “வானங்களையும் பூமியையும் படைத்த
அல்லாஹ்வையன்றி வேறு எவரையும் நான் பாதுகாவலனாக
எடுத்துக்கொள்வேனா? அவன்தான் (அனைவருக்கும்)
உணவளிக்கிறான், எவராலும் அவன் உணவளிக்கப்படுவதில்லை”
என்று கூறுவீராக! “(அவனுக்குக்) கீழ்ப்படிவோரில்
முதலாமவராக இருக்கவேண்டும் என்றும் ஒருபோதும்
இணைவைப்போரில் ஒருவராக ஆகிவிடக்கூடாது எனவும்
நான் கட்டளையிடப்பட்டுள்ளேன்” என்றும் கூறுவீராக! 15“நான்
என் இறைவனுக்கு எதிராகச் செயல்பட்டால் மாபெரும்
நாளின் வேதனை குறித்து அஞ்சுகிறேன்” என்றும் கூறுவீராக!
16எவர் (மறுமையாகிய) அந்நாளின் வேதனையிலிருந்து
காக்கப்படுகிறாரோ உண்மையில் அவர்மீது அவன் பேரருள்
புரிந்துவிட்டான். இதுதான் தெளிவான வெற்றியாகும். 17(நபியே!)
அல்லாஹ் உமக்கு ஏதேனும் துன்பத்தை ஏற்படுத்தினால் அதை
நீக்குவோர் அவனைத் தவிர வேறு எவரும் இல்லை. அவன் உமக்கு
ஏதேனும் நன்மையை அளித்தால் (அதைத் தடுப்போர் எவரும்
இல்லை, அறிக!) அவன் யாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.
18அவன் தன் அடியார்கள்மீது முழு அதிகாரம் உடையவன்;
ஞானம் மிக்கவன்; நன்கு அறிந்தவன்.

19(நபியே! அவர்களிடம்) “சாட்சியங்களுள் மிக வலுவானது
எது?” என்று நீர் கேட்பீராக! நீரே (அவர்களிடம்)
“அல்லாஹ்தான் எனக்கும் உங்களுக்கும் இடையே (வலுவான)

*சாட்சியாக இருக்கிறான்" என்று கூறுவீராக! "உங்களுக்கும்
இந்தக் குர்ஆனை யாரெல்லாம் அடையப்பெறுகிறார்களோ
அவர்களுக்கும் எச்சரிக்கை செய்வதற்காகவே எனக்கு இது
(வேத)அறிவிப்பாக அருளப்பெற்றுள்ளது. அல்லாஹ்வுடன்
வேறு கடவுள்களும் இருக்கின்றன என்பதற்கு நீங்கள் சாட்சி
கூறுகிறீர்களா? நான் (அவ்வாறு) சாட்சி கூறமாட்டேன்"
என்று நீர் கூறுவீராக! "அவன் ஒருவனே இறைவன். உங்கள்
இணைவைப்பிலிருந்து உறுதியாக நான் விலகியவனாக
இருக்கிறேன்" என்றும் கூறுவீராக. [20]வேதம் வழங்கப்பட்டோர்
தம்முடைய குழந்தைகளை (ஐயமின்றி) அறிந்துகொள்வதைப்
போல(க்குர்ஆனாகிய) இதனை நன்கு அறிந்துகொள்வர். ஆயினும்
தமக்குத்தாமே இழப்பை எற்படுத்திக் கொண்டவர்கள்தாம்
இதனை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். [21]அல்லாஹ்வின் மீது
பொய்யைப் புனைபவனைவிட அல்லது அவனது வசனங்களைப்
பொய்யென்று கூறுபவனைவிட மிகப்பெரும் முறைகேடன்
யார்? உறுதியாக முறைகேடர்கள் வெற்றி பெறமாட்டார்கள்.
[22]அந்த (மறுமை)நாளில் நாம் அவர்கள் அனைவரையும்
ஒன்று சேர்ப்போம்; அந்நாளில் இணைவைத்தோரிடம் "நீங்கள்
(உங்கள் தெய்வங்கள் எனச்) சாதித்துக் கொண்டிருந்த இணை(த்
தெய்வங்)கள் எங்கே?" என்று கேட்போம். [23]அப்போது "எங்கள்
இறைவனாகிய அல்லாஹ்வின் மீது ஆணையாக!, நாங்கள்
இணைவைப்பாளர்களாக இருந்திருக்கவில்லை" என்று (பொய்)
கூறுவதைத் தவிர அவர்களிடம் வேறு எந்தப் பதிலும் இராது.
[24]அவர்கள் தங்களைக் குறித்தே எவ்வாறு பொய்யுரைப்பர்
என்பதையும் அவர்கள் கற்பித்து வைத்தவை (இணைத்
தெய்வங்கள்) அவர்களைக் கைவிட்டு விலகிவிடும் என்பதையும்
நபியே! (உணர்ந்து) பார்ப்பீராக!*

*[25](நபியே!) அவர்களில் சிலர் உமக்குச் செவிசாய்(ப்பது
போல நடி)க்கின்றனர். ஆனால் அவர்கள் அதனைப்
புரிந்துகொள்ள முடியாதவாறு நாம் அவர்களின் உள்ளங்களில்*

*திரைகளையும் காதுகளில் செவிட்டுத்தன்மையையும் உண்டாக்கிவிட்டோம். (ஆகவே) சான்றுகள் அனைத்தையும் அவர்கள் (நேருக்குநேர்) பார்த்துவிட்டாலும் அவற்றின் மீது நம்பிக்கை கொள்ளமாட்டார்கள். அவ்விறைமறுப்பாளர்கள் உம்மிடம் வாதம்புரிய வந்தாலும் (நீர் கொண்டு வந்துள்ள) இவை "முன்னோர்களின் கட்டுக்கதைகள்தாம்" என்று கூறுவர்.*
*[26]அன்றி அவர்கள் மக்களை (நம்பிக்கை கொள்ளவிடாமல்) தடுத்துத் தாமும் அதனை விட்டு விலகிவிடுகின்றனர். அவர்கள் தம்மைதாமே அழிவுக்குள்ளாக்கிக் கொள்கின்றனர். ஆயினும் (அதனை) அவர்கள் உணர்ந்துகொள்வதில்லை.*

*[27](நபியே!) அவர்கள் (நரக) நெருப்பின் முன் நிறுத்தப்படும்போது நீர் பார்க்க வேண்டுமே! அவர்கள் "அந்தோ! நாங்கள் (உலகத்திற்குத்) திரும்ப அனுப்பப்பட வேண்டுமே! நாங்கள் எங்கள் இறைவனின் வசனங்களை மறுக்காமல் நம்பிக்கை கொண்டோர்களாக ஆகியிருப்போமே"*
*என்று புலம்புவர். [28]இல்லை, இதற்குமுன் அவர்கள் மறைத்துக்*
*கொண்டிருந்தவை யாவும் அவர்களின்முன் வெளிப்பட்டுவிட்டன. ஒருவேளை அவர்கள் திரும்ப அனுப்பப்பட்டாலும் தடை செய்யப்பட்டதையே மீண்டும் செய்வர். உறுதியாக அவர்கள்*
*பொய்யர்களே! [29]"நம்முடைய இவ்வுலக வாழ்க்கை தவிர*
*வேறு (வாழ்க்கை) இல்லை. நாம் மீண்டும் எழுப்பப்படப்*
*போவதில்லை" என்று அவர்கள் கூறிவந்தனர். [30](நபியே!) தம்*
*இறைவனுக்கு முன் அவர்கள் நிறுத்தப்படும்போது நீர் காண வேண்டுமே! (மறுமையாகிய) "இது உண்மை அல்லவா?" என்று அவன் அவர்களிடம் கேட்பான். அதற்கு அவர்கள், "ஆம்! எங்கள் இறைவனின் மீது ஆணையாக! (உண்மைதான்)" என்பர். "நீங்கள் (இதனை) மறுத்துக் கொண்டிருந்ததனால் இப்போது வேதனையைச் சுவையுங்கள்" என்று அவன்*
*கூறுவான். [31]அல்லாஹ்வைச் சந்திக்க இருப்பதைப் பொய்யெனக்*
*கூறியவர்கள் இழப்பிற்குள்ளாகிவிட்டனர். இறுதியில், அந்த நேரம் திடீரென வந்துவிடும்போது அவர்கள், "அந்தோ! இதுபற்றி*

*நாங்கள் புறக்கணிப்பாக இருந்து விட்டதனால் எங்களுக்கு நேர்ந்த துயரமே!" என்று புலம்புவர். அவர்கள் தம் சுமைகளை முதுகுகளில் சுமந்து கொண்டிருப்பர். அவர்கள் சுமப்பது எவ்வளவு கேடானது! [32]இவ்வுலக வாழ்க்கை விளையாட்டும் கேளிக்கையுமேயன்றி வேறில்லை. இறையச்சமுடையோருக்கு மறுமையின் வீடே சிறந்தது. நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா?*

*[33](நபியே!) அவர்கள் கூறுவது உறுதியாக உமக்குக் கவலை அளிக்கிறது என்பதை நாம் அறிவோம். அவர்கள் உம்மைப் பொய்மைப்படுத்தவில்லை; அந்தத் தீவினையாளர்கள் உண்மையில் அல்லாஹ்வின் வசனங்களைத்தான் (பொய்மைப்படுத்தி) மறுக்கின்றனர். [34]உமக்கு முன்னரும் தூதர்கள் (பலர்) பொய்மைப்படுத்தப்பட்டனர். அவர்கள் எம்முடைய உதவி வரும்வரை அவர்கள் பொய்மைப்படுத்தப்பட்டதையும் துன்புறுத்தப்பட்டதையும் பொறுத்துக் கொண்டனர். அல்லாஹ்வின் வாக்குகளை மாற்றுபவர் எவரும் இல்லை. தூதர்களின் சில செய்திகள் உறுதியாக உம்மிடம் வந்திருக்கின்றன.*
*[35](நபியே!) அவர்களின் புறக்கணிப்பு உமக்குப் பெரும் துன்பமாகத் தோன்றலாம்; உமக்கு வல்லமை இருந்தால் பூமிக்குள் (செல்ல) ஒரு சுரங்கத்தையோ வானத்தில் (ஏற) ஓர் ஏணியையோ தேடி(க் கண்டுபிடித்து) அவர்களுக்காக ஒரு சான்றைக் கொண்டு வந்தாலும் (அவர்கள் உம்மை நம்பமாட்டார்கள்.) அல்லாஹ் விரும்பியிருந்தால் அவர்கள் அனைவரையும் நேர்வழியில் ஒன்று சேர்த்திருப்பான். எனவே நீர் அறியாதோரில் ஒருவராக ஆகிவிடாதீர். [36](உமக்குச்) செவி சாய்ப்பவர்கள்தாம் (உம்மை) ஏற்பர். (செவி சாய்க்காமல்) இறந்தவர்(போன்றிருப்பவர்)களை (மறுமையில்) அல்லாஹ் எழுப்புவான். பின்னர் அவர்கள் அவனிடமே திரும்பக் கொண்டுவரப்படுவர். [37]"அவரது இறைவனிடமிருந்து ஏதேனும் ஒரு சான்று (அற்புதம்) அவருக்கு அருளப்பட்டிருக்க வேண்டாமா?" என்று அவர்கள் கேட்கின்றனர். "சான்றை இறக்கி அருள்வதற்கு அல்லாஹ்*

*ஆற்றலுடையவனே” என்று (நபியே!) நீர் கூறுவீராக! ஆயினும்
அவர்களில் பெரும்பாலோர் (அதனை) அறிந்துகொள்வதில்லை.
38பூமியின் மேல் இயங்கும் எந்த உயிரினமாயினும் தம் இரு
சிறகுகளால் பறந்து செல்லும் எந்தப் பறவையாயினும் (அவை)
உங்களைப் போன்ற உயிரினங்கள்தாம். (எம்முடைய) பதிவேட்டில்
குறிப்பிடாமல் எந்த ஒன்றையும் நாம் விட்டுவிடவில்லை. பின்னர்
அவையனைத்தும் தங்கள் இறைவனிடமே ஒன்று திரட்டப்படும்.
39எம்முடைய வசனங்களை(ப் பொய்யென) மறுப்பவர்கள்
காரிருளில் தத்தளிக்கும் செவிடர்களும் ஊமையர்களும் ஆவர்.
தான் விரும்பியோரை அல்லாஹ் வழிதவற விட்டுவிடுகிறான்.
தான் விரும்பியோரை நேர்வழியில் செலுத்துகிறான்.*

*40(நபியே!) “இறை வேதனை உங்களிடம் வந்துவிட்டால்
அல்லது (இறுதித்தீர்ப்பு) நேரம் வந்துவிட்டால் நீங்கள்
அல்லாஹ் அல்லாதவற்றையா (உதவிக்கு) அழைப்பீர்கள்? நீங்கள்
உண்மையாளர்களாயின் கூறுங்கள்” என்று நீர் கேட்பீராக!
41“மாறாக, நீங்கள் அவனையே அழைப்பீர்கள். நீங்கள் எ(தை
நீக்குவ)தற்காக அவனை அழைக்கிறீர்களோ அ(த்துன்பத்)தை
அவன் விரும்பினால் நீக்கிவிடுவான். உங்கள் இணைத்தெய்வங்களை
(அந்த நேரத்தில்) நீங்கள் மறந்துவிடுவீர்கள்” என்றும் நீர்
கூறுவீராக! 42(நபியே!) உமக்கு முன்னர்ப் பல சமூகத்தாரிடம் நாம்
தூதர்களை அனுப்பினோம். அச்சமூகத்தார் பணிந்திட வேண்டும்
என்பதற்காக அவர்களை நாம் வறுமையினாலும் பிணியாலும்
பற்றினோம். 43எமது வேதனை (அவர்களிடம்) வந்தபோது
அவர்கள் பணிந்திருக்க வேண்டாமா? உண்மையில் அவர்களின்
இதயங்கள் இறுகிவிட்டன. (ஏனெனில்) அவர்களின் செயல்களை
சாத்தான் அவர்களுக்கு அழகாக்கிக் காட்டினான். 44தங்களுக்கு
வழங்கப்பட்ட அறிவுரைகளை அவர்கள் மறந்துவிட்டபோது
(அவர்களைச் சோதிப்பதற்காக) நாம் அவர்களுக்கு அனைத்துப்
பொருள்களின் வாசல்களையும் திறந்துவிட்டோம். தங்களுக்கு
வழங்கப்பட்டவற்றால் அவர்கள் மகிழ்ந்திருந்தபோது திடீரென*

*நாம் அவர்களைப் பற்றிக்கொண்டோம். அப்போது அவர்கள் (முற்றிலும்) நம்பிக்கையிழந்து விட்டனர்.* [45]*எனவே தீவினை செய்த மக்கள் வேரோடு சாய்க்கப்பட்டனர். அனைத்துலகங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும்!*

[46]*(நபியே!) "அல்லாஹ் உங்கள் செவிப்புலன்களையும் பார்வையையும் பறித்து உங்கள் இதயங்களின் மீதும் முத்திரையிட்டுவிட்டால் அல்லாஹ்வையன்றி வேறு எந்த இறைவனால் அவற்றைத் திருப்பிக் கொண்டுவர முடியும்? என்பதைச் (சிந்தித்துப் பார்த்தீர்களா?)" என்று அவர்களிடம் கேட்பீராக! நாம் எவ்வாறு சான்றுகளை(ப் பல்வேறு முறைகளில்) தெளிவுபடுத்துகிறோம் என்பதைப் பார்ப்பீராக. ஆயினும் அவர்கள் புறக்கணித்தே வருகின்றனர்.*
[47]*"இறைவேதனை உங்களிடம் திடீரென்றோ முன்னறிவிப்புடனோ வந்துவிட்டால் அழிக்கப்படுவோர் தீவினையாளர்கள் அன்றி வேறு யார் என்பதையும் சிந்தித்தீர்களா?" (என்று நபியே!) நீர் கேட்பீராக!* [48]*நாம் தூதர்களை நற்செய்தி கூறுபவர்களாகவும் எச்சரிக்கை செய்பவர்களாகவும் மட்டுமே அனுப்பியுள்ளோம். நம்பிக்கைகொண்டு தம்மைச் சீர்திருத்திக் கொள்பவர்களுக்கு எந்த அச்சமுமில்லை; அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.* [49]*ஆனால் எமது சான்றுகளைப் பொய்மைப்படுத்தியவர்களைத்தான் அவர்களது கீழ்ப்படியாமை காரணமாக வேதனை பற்றிக்கொள்ளும்.* [50]*(நபியே!) நீர் (மக்களிடம்)"அல்லாஹ்வின் கருவூலங்கள் என்னிடம் இருக்கின்றன என்றோ மறைவானவற்றை அறிவேன் என்றோ உங்களிடம் நான் கூறவில்லை. நான் ஒரு வானவர் என்றும் உங்களிடம் கூறவில்லை. எனக்கு இறைவனிடமிருந்து அறிவிக்கப்படுவதையே அன்றி (வேறு எதனையும்) நான் பின்பற்றுவதில்லை" என்று கூறுவீராக! மேலும் "பார்வையற்றவனும் பார்வையுள்ளவனும் சமமாவார்களா? நீங்கள் சிந்திக்கமாட்டீர்களா?" என்றும் கேட்பீராக!*

[51]*(நபியே! மறுமையில்) தாங்கள் இறைவனிடம் ஒன்றுதிரட்டப்படும்போது அவர்களுக்கு உதவியாளரோ*

*பரிந்துரையாளரோ இல்லை என்பது குறித்து அஞ்சுபவருக்கு
இ(ந்த வேதத்)தைக் கொண்டு எச்சரிக்கை செய்வீராக! அதனால்
அவர்கள் இறைவனுக்கு அஞ்சி நடக்கக் கூடும். [52]தங்கள்
இறைவனின் உவப்பை நாடிக் காலையிலும் மாலையிலும்
இறைவனை இறைஞ்சிக் கொண்டிருக்கும் (எளிய) மக்களை
(வேறு சிலரின் விருப்பத்திற்காக) நீர் விரட்டாதீர். அவர்களின்
கணக்கில் உமது பொறுப்பு ஏதுமில்லை; உமது கணக்கில்
அவர்களுக்குப் பொறுப்புமில்லை. அவர்களை நீர் விரட்டினால்
தீவினையாளர்களில் ஒருவராகி விடுவீர். [53]இவ்வாறு
"நமக்கிடையே (நலிந்த நிலையிலுள்ள) இவர்கள் மீதா அல்லாஹ்
அருள் புரிந்துள்ளான்?" என்று, (செல்வர்களான) அவர்கள்
கேட்கின்றனர்; (இவ்வாறு கேட்கச் செய்து) அவர்களில்
சிலரை (வேறு) சிலரைக்கொண்டு நாம் சோதித்தோம்.
நன்றி செலுத்துவோரை (இத்தகையவர்களைவிட) அல்லாஹ்
நன்கறிந்தவன் அல்லவா?*

*[54]எமது வசனங்களின் மீது நம்பிக்கைகொள்வோர் உம்மிடம்
வந்தால் நீர் அவர்களிடம் "உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும்!
உங்கள் இறைவன் (உங்களுக்கு) அருள் புரிவதைத் தனக்குக்
கடமையாக்கிக் கொண்டான். உங்களில் ஒருவர் அறியாமையால்
பாவம் செய்துவிட்டு அதன் பின்னர் மன்னிப்புக்கோரித்
தம்மைச் சீர்திருத்திக் கொண்டால் (அவன் மன்னிப்பான்).
அவன் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்." என்று
கூறுவீராக! [55]குற்றவாளிகளின் வழி (இன்னதென்று) தெளிவாகி
விட வேண்டும் என்பதற்காக இவ்வாறு எமது சான்றுகளை நாம்
தெளிவாக விவரிக்கிறோம்.*

*[56](நபியே! ஓரிறை மறுப்பாளர்களிடம்) நீர் கூறுவீராக! "நான்
அல்லாஹ்வையன்றி நீங்கள் அழைக்கின்றவற்றை வணங்கத் தடை
செய்யப்பட்டிருக்கிறேன்" (மேலும்) நீர் கூறுவீராக! உங்களின்
(தவறான) விருப்பங்களை நான் பின்பற்றமாட்டேன், (அவ்வாறு
செய்தால்) நான் வழிதவறியவனாகி விடுவேன்; நேர்வழி
பெற்றவர்களுள் ஒருவனாக இல்லாமல் போவேன்" [57](நபியே!)*

*நீர் கூறுவீராக: "உறுதியாக நான் என் இறைவனிடமிருந்து வந்துள்ள தெளிவான ஆதாரத்திலேயே இருக்கின்றேன். ஆயினும் நீங்கள் அதனைப் பொய்மைப்படுத்திவிட்டீர்கள். எதற்கு நீங்கள் அவசரப்படுகிறீர்களோ அ(ந்த வேதனையான)து என்னிடமில்லை. (அதன்) அதிகாரம் அல்லாஹ்வைத் தவிர (வேறு) எவரிடமும் இல்லை. அவன் சத்தியத்தையே கூறுகின்றான். தீர்ப்பு வழங்குவோரில் அவன்தான் மிகச் சிறந்தவன்" [58](நபியே!) நீர் கூறுவீராக: "நீங்கள் அவசரப்படுவது என்னிடம் இருந்திருந்தால் எனக்கும் உங்களுக்குமிடையேயுள்ள விவகாரம் (இதற்குள்) முடிந்திருக்கும். அல்லாஹ் தீவினையாளர்களை நன்கறிவான்" [59]மறைவானவற்றின் திறவுகோல்கள் அவனிடமே இருக்கின்றன. அவனையன்றி (வேறு) எவரும் அவற்றை அறியமாட்டார்கள். நிலத்திலும் கடலிலும் உள்ளவற்றை அவன் அறிவான். அவன் அறியாமல் ஓர் இலைகூட உதிர்வதில்லை. பூமிக்குள் இருளில் (புதைந்து) கிடக்கும் விதை, ஈரமான அல்லது உலர்ந்த பொருள் அனைத்தின் விவரமும் தெளிவான பதிவேட்டில் இல்லாமல் இல்லை.*

*[60]இரவில் (நீங்கள் உறங்கும்போது) அவன்தான் உங்களைக் கைப்பற்றுகிறான்; பகலில் (நன்மை தீமை) என நீங்கள் ஈட்டுவதை அறிகிறான். பின்னர் வரையறுக்கப்பட்ட (உங்கள் வாழ்நாள்) தவணையை நிறைவுசெய்வதற்காக உங்களை மீண்டும் அவன் (துயில்) எழுப்புகிறான். பின்னர் அவனிடமே நீங்கள் திரும்பிச் செல்ல வேண்டி உள்ளது. அப்போது (உலகில்) நீங்கள் செய்து கொண்டிருந்ததை அவன் உங்களுக்கு அறிவிப்பான். [61]அவன் தன் அடியார்களின் மீது பேரதிகாரம் கொண்டவன். (மேலும்) உங்களுக்கு (வானவர்களாகிய) பாதுகாவலர்களை அவன் அனுப்புகிறான். இறுதியில் உங்களில் எவருக்கேனும் இறப்புவேளை வந்துவிட்டால் எமது தூதர்(களாகிய வானவர்)கள் அவரின் உயிரைக் கைப்பற்றுகின்றனர். தங்கள் கடமையில் ஒருபோதும் அவர்கள் தவறுவதில்லை. [62]பின்னர் அனைவரும் தம்முடைய உண்மையான உரிமையாளனாகிய அல்லாஹ்விடமே கொண்டு வரப்படுவர்.*

*அறிந்துகொள்ளுங்கள்! தீர்ப்பு அதிகாரம் அவனுக்கே உரியது. அவன் கணக்குத் தீர்ப்பதில் விரைவானவன்.*

[63]*“நிலத்திலும் கடலிலும் உள்ள இருள்களிலிருந்து உங்களைக்*
*காப்பாற்றுகிறவன் யார்? என்று (நபியே!) நீர் (அவர்களிடம்)*
*கேளும். “இதிலிருந்து எங்களை அவன் காப்பாற்றினால் நாங்கள்*
*நன்றி செலுத்துவோர் ஆகிவிடுவோம் என்று மறைமுகமாகவும்*
*பணிவுடனும் நீங்கள் அவனிடம் இறைஞ்சுகிறீர்கள்*
[64]*“அவற்றிலிருந்தும் இன்னும் அனைத்துத் துன்பங்களிலிருந்தும்*
*அல்லாஹ்தான் உங்களைக் காப்பாற்றுகிறான். இருப்பினும் நீங்கள்*
*இணைவைக்கிறீர்கள்” என்று (நபியே!) நீர் கூறும்.* [65]*“உங்களுக்கு*
*மேலிருந்தோ உங்கள் பாதங்களின் கீழிருந்தோ உங்கள்மீது ஏதேனும்*
*ஒரு வேதனையை அனுப்புவதற்கும் அல்லது உங்களைப் பல*
*பிரிவினர்களாக்கி உங்களில் சிலர் தரும் துன்பத்தை வேறு சிலர்*
*சுவைக்குமாறு செய்வதற்கும் அவன் ஆற்றல் படைத்தவன்” என்று*
*(நபியே!) கூறுவீராக. அவர்கள் உணர்ந்துகொள்ள வேண்டும்*
*என்பதற்காக(எம் வசனங்களை)ப் பல வகைகளில் விவரிக்கிறோம்*
*என்பதை நீர் கவனிப்பீராக!* [66]*(நபியே! குர்ஆனாகிய) இது*
*சத்தியமானதாக இருந்தபோதிலும் உம் சமூகத்தினர் இதனைப்*
*பொய்மைப்படுத்தினர். “நான் உங்களுக்குப் பொறுப்பாளன்*
*அல்லன்” என்று நீர் கூறும்.* [67]*ஒவ்வொரு (முன்) அறிவிப்புக்கும்*
*(நிறைவேறுவதற்குரிய) ஒரு நேரம் வரையறுக்கப்பட்டுள்ளது.*
*விரைவில் நீங்கள் அறிந்துகொள்வீர்கள்.*

[68]*(நபியே!) எம்முடைய வசனங்கள் குறித்து வீண்விவாதங்களில்*
*மூழ்கியிருப்போரைக் கண்டால் அவர்கள் வேறு பேச்சில்*
*ஈடுபடும்வரை அவர்களிடமிருந்து நீர் விலகிவிடும். சாத்தான்*
*உம்மை மறக்கடித்துவிட்டால் அது நினைவுக்கு வந்த பின்னர்த்*
*தீவினைபுரியும் இத்தகைய மக்களுடன் அமர்ந்திருக்காதீர்.*
[69]*(வீண் வாதம்புரியும்) அவர்களுடைய (செயல்களின்) கணக்கில்*
*இறையச்சமுடையோருக்குப் பொறுப்பு எதுவும் இல்லை. ஆயினும்*
*அவர்களும் அல்லாஹ்வுக்கு அஞ்சக்கூடும் எனும் நோக்கத்தில்*
*நினைவூட்டுவது மட்டுமே (இறையச்சமுடையோர்) கடமையாகும்.*

[70](நபியே!) யார் தமது மார்க்கத்தை விளையாட்டாகவும் வேடிக்கையாகவும் எடுத்துக் கொண்டார்களோ, யாரை இவ்வுலக வாழ்க்கை (மயக்கி) ஏமாற்றிவிட்டதோ அவர்களை நீர் விட்டுவிடும். ஒவ்வோர் ஆன்மாவும் தன் (தீய)செயல்களின் காரணத்தால் பீடிக்கப்படாமல் இருக்கும் பொருட்டு இந்தக் குர்ஆனைக் கொண்டு அறிவுறுத்திக் கொண்டே இருப்பீராக! (மறுமையில்) அல்லாஹ்வையன்றி அதற்கு வேறு காப்பாளனோ பரிந்துரையாளனோ இருக்கமாட்டார்கள். உலகிலுள்ள அனைத்தையும் (தண்டனைக்கு) ஈடாகக் கொடுத்தாலும் அதனிடமிருந்து ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. இத்தகையோரே தம்முடைய செயல்களின் காரணமாக அழிக்கப்படுவார்கள். அவர்கள் மறுத்துக்கொண்டிருந்ததால் அவர்களுக்குக் (குடிக்கக்) கொதிநீரும் துன்புறுத்தும் வேதனையும் உண்டு. [71](நபியே!) நீர் (அவர்களிடம்:) “அல்லாஹ்வை விடுத்து எங்களுக்குப் பயனளிக்கவோ தீங்கிழைக்கவோ இயலாதவற்றையா நாங்கள் (இறைஞ்சி) அழைக்க வேண்டும்? அல்லாஹ் எங்களுக்கு நேர்வழிகாட்டிய பின்னரும் நாங்கள் பின் திருப்பப்பட்டுவிடுவோமா? ‘எங்களுடன் வா’ என நேர்வழியின்பால் அழைக்கும் நண்பர்கள் இருந்தும் சாத்தான்களால் வழிகெடுக்கப்பட்டு பூமியில் தடுமாறித் திரிபவனைப் போல நாங்கள் ஆகிவிடுவோமா?” என்று கேட்பீராக! “அல்லாஹ்வுடைய வழியே நேர்வழியாகும். நாங்கள் அனைத்துலகங்களின் இறைவனுக்கு முற்றிலும் கீழ்ப்படியவேண்டும் என்றே கட்டளையிடப்பட்டுள்ளோம்” என்றும் கூறுவீராக! [72](மேலும்) “தொழுகையைக் கடைப்பிடியுங்கள்; அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள் (என்றும் கட்டளையிடப்பட்டுள்ளோம்.) அவனிடமே நீங்கள் ஒன்று திரட்டப்படுவீர்கள்” (என்றும் கூறுவீராக!) [73]அவன்தான் வானங்களையும் பூமியையும் உண்மையான நோக்கத்தோடு படைத்துள்ளான். அவன் “ஆகுக” என்று கூறும் (மறுமை) நாளில் அது ஆகிவிடும். அவனது சொல்லே உண்மையானது. எக்காளம் ஊதப்படும் நாளில் ஆட்சி அவனுடையதாகவே இருக்கும். மறைவானவற்றையும் வெளிப்படையானவற்றையும்

அவன் அறிந்தவன். அவன் ஞானம் மிக்கவனும் நன்கறிந்தவனும்
ஆவான்.

74ஆப்ரஹாம் தம் தந்தை ஆஸரிடம், “சிலைகளையா நீங்கள்
கடவுள் எனக்கொண்டீர்கள்? நீங்களும் உங்கள் சமூகத்தினரும்
வெளிப்படையான கெடுவழியில் இருப்பதை நான் காண்கிறேன்”
என்று கூறியதை (நபியே!) நினைவுகூர்வீராக! 75உறுதியான
நம்பிக்கையாளராக அவர் திகழவேண்டும் என்பதற்காக
ஆப்ரஹாமுக்கு நாம் வானங்கள், பூமி ஆகியவற்றின் (மீதான
எமது) ஆட்சியை இவ்வாறு காட்டினோம்: 76(ஒருநாள்) இரவு
அவர்மீது கவிந்தபோது அவர் ஒரு நட்சத்திரத்தைக் கண்டார்.
“இது என் இறைவன் ஆகுமோ?” என்றார். ஆனால் அது
மறைந்தபோது, “மறையக்கூடியவற்றை (இறைவனாகக் கொள்ள)
நான் விரும்பமாட்டேன்” என்று கூறினார். 77(பின்னர்) அவர்
ஒளிவீசித் தோன்றும் சந்திரனைக் கண்டபோது “இதுதான் என்
இறைவன் ஆகுமோ?” என்றார். ஆனால் அதுவும் மறைந்தபோது,
“என் இறைவன் எனக்கு வழிகாட்டவில்லையென்றால் நான்
வழிதவறிய மக்களில் ஒருவனாகிவிடுவேன்” என்று கூறினார்.
78பிறகு அவர் ஒளி வீசித் தோன்றும் சூரியனைக் கண்டபோது
“இது எல்லாவற்றையும்விடப் பெரியது, இது என் இறைவன்
ஆகுமோ?” என்றார். ஆனால் அதுவும் மறைந்தபோது அவர்
தம் சமூகத்தாரை நோக்கி “மக்களே! நீங்கள் (இறைவனுக்கு)
இணையாக்கி வணங்கும் எல்லாவற்றிலிருந்தும் நான்
நீங்கிவிட்டேன்” என்று கூறினார். 79“வானங்களையும் பூமியையும்
படைத்தவனை நோக்கி ஒருமித்த மனத்துடன் என் முகத்தைத்
திருப்பிக் கொண்டேன். நான் இணைவைப்பாளர்களில் ஒருவன்
அல்லன்” (என்றும் கூறினார்).

80அவரது சமூகத்தார் அவருடன் வாதம் புரிந்தனர்.
(அப்போது அவர்) “அல்லாஹ்வே எனக்கு நேர்வழிகாட்டிவிட்ட
நிலையில் அவனைக் குறித்தா நீங்கள் என்னுடன் வாதம்
செய்கிறீர்கள்? உங்கள் இணைத்தெய்வங்களைக் கண்டு நான்
அஞ்சமாட்டேன். என் இறைவன் எதை விரும்புகின்றானோ

*அதைத்தவிர (எனக்கு எதுவும் நேராது) இறைவன் தன் ஞானத்தால் எல்லாவற்றையும் சூழ்ந்தறிகிறான். நீங்கள் சிந்திக்கமாட்டீர்களா?" (என்று கேட்டார்).*
81"அவன் (உங்களின் இணைவைப்புக்கு) எந்தச் சான்றையும் வழங்காதிருந்தும் நீங்கள் அல்லாஹ்வுக்கு இணைவைப்பதுபற்றி அஞ்சாதிருக்கும்போது நீங்கள் இணைவைப்பவற்றுக்கு நான் ஏன் அஞ்சவேண்டும்? நீங்கள் அறிவுடையோர்களாக இருந்தால் கூறுங்கள், (நம்) இரு பிரிவினரில் அச்சமற்று இருக்கத் தகுதியுடையவர் யார்?" (என்றும் கேட்டார்.)
82"நம்பிக்கைகொண்டு, தம் நம்பிக்கையில் (இணைவைத்தல் என்னும்) தீவினையைக் கலக்காதவர்களுக்குத்தான் உண்மையில் அமைதி உண்டு. அவர்கள்தாம் நேர்வழி பெற்றவர்கள்" (என்றும் கூறினார்.)
83இதுதான் ஆப்ரஹாம் தம் சமூகத்தாருக்கு எதிராக வாதிட நாம் அவருக்கு வழங்கிய சான்று ஆகும். நாம் விரும்பியோருக்குத் தகுதிகளை உயர்த்தி விடுகிறோம். உறுதியாக (நபியே!) உம் இறைவன் ஞானம் மிக்கவன்; முற்றும் அறிந்தவன்.

84நாம் அவருக்கு ஈசாக்கையும் ஜேக்கப்பையும் (பரிசாக) அளித்தோம். (இவர்கள்) அனைவருக்கும் நேர்வழி காட்டினோம். இதற்கு முன்னர் நோவாவுக்கும் நேர்வழி காட்டினோம். அவரது (ஆப்ரஹாம்) வழித்தோன்றல்களில் தாவீத், சாலமன், யோப், ஜோஸஃப், மோசே மற்றும் ஆரோன் ஆகியோருக்கும் (நேர்வழி காட்டினோம்) நாம் நன்மை செய்பவர்களுக்கு இவ்வாறுதான் (நற்)கூலி வழங்குகிறோம்.
85(மேலும்) ஸகரிய்யா, ஜான் (யஹ்யா), இயேசு, இல்யாஸ் ஆகியோருக்கும் (நேர்வழி காட்டினோம்.) அவர்கள் அனைவரும் நல்லோர்களாக இருந்தனர்.
86இஸ்மவேல், அல்யஸ்வு, யோனா, லோத் ஆகியோருக்கும் (நேர்வழி காட்டினோம்). அவர்கள் அனைவரையும் நாம் உலகத்தார் அனைவரையும்விடச் சிறப்பாக்கினோம்.
87அவர்களின் முன்னோர்கள், வழித்தோன்றல்கள், சகோதரர்கள் ஆகியோரில் பலரை நாம் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு நேர்வழியைக் காட்டினோம்.
88இது அல்லாஹ்வின் வழிகாட்டுதலாகும். தன் அடியார்களில் தான் விரும்பியோரை இதன்மூலம் அவன்

நேர்வழியில் செலுத்துகிறான். அவர்கள் இணைவைத்தால்
அவர்களின் (நற்)செயல்கள் அனைத்தும் நாசமாகிவிடும்.
89அவர்களுக்குத்தான் நாம் வேதத்தையும் ஞானத்தையும்
தூதுத்துவத்தையும் வழங்கினோம். இந்த (மக்காவாழ்) மக்கள்
இவற்றை மறுத்துவிட்டால், ஏற்றுக்கொள்ள மறுக்காத
வேறு மக்களிடம் நாம் ஒப்படைத்து விடுவோம். 90(முந்தைய
நபிமார்களான) அவர்களுக்குத்தான் அல்லாஹ் நேர்வழி
காட்டியுள்ளான். எனவே (நபியே!) நீரும் அவர்களின் வழியிலேயே
செல்வீராக! “இ(ந்தக் குர்ஆனை எடுத்துரைப்ப)தற்காக நான்
உங்களிடம் எந்த ஊதியத்தையும் கேட்கவில்லை. இது உலக
மக்கள் அனைவருக்கும் ஓர் அறிவுரையே அன்றி வேறில்லை”
என்று (இவர்களிடம்) நீர் கூறுவீராக!

91அவர்கள் அல்லாஹ்வை மதிப்பீடு செய்ய வேண்டிய
முறையில் மதிப்பீடு செய்யவில்லை. அதனால்தான் அவர்கள்
“அல்லாஹ் எந்த மனிதர்மீதும் எ(ந்த வேதத்)தையும் அருளவில்லை”
என்று கூறுகின்றனர். நபியே! நீர் கேளும்: “மக்களுக்கு
ஒளியாகவும் வழிகாட்டியாகவும் மோசே கொண்டுவந்த
வேதத்தை அருளியவன் யார்?” அதனை நீங்கள் தனித்தனி
ஏடுகளாக ஆக்கிக் கொண்டீர்கள். சிலவற்றை (மக்களுக்கு)
வெளிப்படுத்துகிறீர்கள், (உங்கள் நோக்கத்திற்கு மாறான)
பெரும்பாலானவற்றை மறைத்து விடுகிறீர்கள். (அந்த வேதத்தின்)
நீங்களும் உங்கள் முன்னோர்களும் அறியாதவையெல்லாம்
உங்களுக்குக் கற்பிக்கப்பட்டன” (நபியே!) நீர் “அல்லாஹ்தான்
(அதனை அருளினான்)” என்று சொல்லிவிட்டுத் தங்கள் வீண்
விவாதங்களிலேயே விளையாடிக் கொண்டிருக்குமாறு அவர்களை
விட்டுவிடுவீராக! 92(நபியே! குர்ஆனாகிய) இது ஒரு வேதம் ஆகும்.
(இதனை) நாமே (உமக்கு) அருளினோம். இது அருட்பேறுடையது.
தனக்கு முன் வந்த(வேதத்)தை உண்மைப்படுத்துவது. தாய்நகர
(மக்கா)வாசிகளையும் அதன் சுற்றுப்புற மக்களையும் நீர்
(அச்சமூட்டி) எச்சரிப்பதற்காக (இதனை அருளினோம்) எவர்

மறுமையை நம்புகின்றனரோ அவர்கள் இதனை நம்புவர். அவர்கள் தம் தொழுகையைப் பேணுவதில் உறுதியாக இருப்பர்.

93அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனைந்துரைப்பவனைவிட, அல்லது தனக்கு (இறை அறிவிப்பு) எதுவும்வராத நிலையில் 'எனக்கு இறைவனிடமிருந்து செய்தி அறிவிக்கப்படுகிறது' என்பவனைவிட 'அல்லாஹ் அருளியுள்ள இ(வ்வேதத்)தைப் போலவே நானும் அருளுவேன்' என்பவனைவிடப் பெரும் முறைகேடன் யார்? அந்தோ! இந்த முறைகேடர்கள் மரண வேதனையில் கிடக்கும்போது நீர் காண வேண்டுமே! அப்போது வானவர்கள் (அவர்களை நோக்கி) தங்கள் கைகளை நீட்டி "உங்கள் உயிர்களை நீங்களே வெளியேற்றுங்கள்; நீங்கள் அல்லாஹ்வின் மீது பொய்யானவற்றைப் புனைந்து கொண்டிருந்ததாலும் அல்லாஹ்வின் வசனங்களை மறுத்துச் செருக்குக் கொண்டிருந்ததனாலும் இன்று உங்களுக்கு இழிவுமிக்க வேதனை அளிக்கப்படும்" என்று கூறுவர்.
94(இறைவன் மறுமையில் அவர்களை நோக்கி) "நாம் உங்களை முதன்முறையாக படைத்ததைப் போன்றே (இப்போது) நீங்கள் எம்மிடம் தன்னந்தனியாக வந்துள்ளீர்கள். நாம் உங்களுக்கு வழங்கிய அனைத்தையும் உங்களுக்குப் பின்னால் விட்டு (வந்து)விட்டீர்கள். உங்கள் செயல்களில் உதவுவர் என அல்லாஹ்வுக்கு இணையாக நீங்கள் எண்ணிக் கொண்டிருந்த பரிந்துரையாளர்களையும் நாம் (இப்போது) காணவில்லை. உங்களிடையே உறவு முற்றிலும் முறிந்து விட்டது. நீங்கள் (நம்பி) வாதாடிக் கொண்டிருந்தவை எல்லாம் உங்களிடமிருந்து மறைந்து விட்டன" (என்று கூறுவான்).

95உறுதியாக அல்லாஹ்தான் விதைகளையும் கொட்டைகளையும் பிளக்கச் செய்(து முளைக்க வைப்)பவன். அவன்தான் உயிரற்றதிலிருந்து உயிருள்ளதையும் உயிருள்ளதிலிருந்து உயிரற்றதையும் வெளிப்படுத்துகிறான். அவன்தான் (உங்கள்) அல்லாஹ்! பிறகு நீங்கள் எவ்வாறு (சத்தியத்திலிருந்து) திசை திருப்பப்படுகிறீர்கள்?
96அவன்தான் (இருளிலிருந்து) விடியலைக்

*கொண்டுவருபவன். அவன் இரவை ஓய்வுக்காக ஆக்கியுள்ளான்.*
*சூரியனையும் சந்திரனையும் (குறிப்பிட்ட காலக்) கணக்கில்*
*வைத்திருக்கிறான். இது யாவற்றினும் வலிய, முற்றும் அறிந்த*
*(இறை)வனின் ஏற்பாடாகும். [97]தரை, கடல் ஆகியவற்றின்*
*இருளில் நீங்கள் வழியை அறிந்து கொள்வதற்காக அவன்தான்*
*உங்களுக்காக நட்சத்திரங்களைப் படைத்தான். உறுதியாகப்*
*புரிந்துகொள்ளும் மக்களுக்காக நாம் எமது வசனங்களைத்*
*தெளிவுபடுத்துகிறோம்.*

[98]*அவன்தான் முதலில் ஓரே உயிரிலிருந்து உங்களைப்*
*படைத்தான். ஒவ்வொருவருக்கும் (வாழ்வில்) ஒரு தங்குமிடமும்*
*இறப்புக்குபின் ஒப்படைக்கப்படும் இடமும் உண்டு.*
*உணர்ந்துகொள்ளும் மக்களுக்காக நாம் சான்றுகளைத்*
*தெளிவுபடுத்திவிட்டோம். [99]அவன்தான் வானத்திலிருந்து*
*மழையைப் பொழிவிக்கிறான். அதன்மூலம் அனைத்துத்*
*தாவரங்களையும் நாம் முளைக்க வைக்கிறோம். அவற்றிலிருந்து*
*பசுந்தழைகளை வெளிப்படுத்துகிறோம்; அவற்றிலிருந்து*
*கொத்துக்கொத்தான தானியங்களையுடைய கதிர்களையும்*
*விளைவிக்கிறோம். பேரீச்ச மரத்தின் பாளைகளிலிருந்து(தாழ்ந்து)*
*தொங்கும் பழக்குலைகளையும் (நாமே விளைவிக்கிறோம்).*
*திராட்சைத் தோட்டங்களையும் (தோற்றத்தில்) ஒரே மாதிரியாகவும்*
*சுவையில் வெவ்வேறாகவுமுள்ள ஆலிவ், மாதுளை (நிறைந்த)*
*தோட்டங்களையும் (நாமே விளைவிக்கிறோம்). அவற்றின்*
*கனிகளை உற்றுநோக்குங்கள். அவை காய்ப்பதையும் முதிர்ந்து*
*கனிவதையும் கவனியுங்கள். உறுதியாக நம்பிக்கைகொண்ட*
*மக்களுக்கு அவற்றினுள் பல சான்றுகள் இருக்கின்றன.*

[100]*அவர்கள் ஜின்களை அல்லாஹ்வுக்கு இணையாக்கிவிட்டனர்.*
*உண்மையில் அந்த ஜின்களையும் அவன்தான் படைத்தான்.*
*அ(வ்விணைவைப்ப)வர்கள் அறிவில்லாமல் அவனுக்குப்*
*புதல்வர்களையும் புதல்விகளையும் கற்பித்துக்கொண்டனர்.*

*இவ்வாறு அவர்கள் கற்பித்துக் கூறுவதிலிருந்தும் அவன் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன் [101]அவன்தான் வானங்களையும் பூமியையும் முன்மாதிரியின்றிப் படைத்தவன். அவனுக்கு மனைவியே இல்லாதபோது எவ்வாறு மகன் இருக்க முடியும்? அனைத்தையும் அவன்தான் படைத்தான்; அவன் அனைத்தையும் முற்றும் அறிந்தவன். [102](இத்தகைய) அவன்தான் உங்கள் இறைவனாகிய அல்லாஹ். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவன்தான் அனைத்துப் பொருள்களின் படைப்பாளன். எனவே அவனையே வணங்குங்கள். அவனே எல்லாப் பொருள்களுக்கும் பொறுப்பாளன். [103]பார்வைகள் அவனை அடைய முடியாது. ஆனால் அவனோ எல்லாப் பார்வைகளையும் அடைவான். அவன் நுட்பமானவன்; அனைத்தையும் நன்கறிந்தவன்.*

*[104]உங்கள் இறைவனிடமிருந்து (உங்கள் கண்களைத் திறக்கும்) தெளிவு வந்துவிட்டது. எனவே எவர் கூர்ந்து நோக்குகிறாரோ அது அவருக்கே நன்மையானதாகும். எவர் குருடராகி விடுகிறாரோ அவர் தமக்கே இழப்பை ஏற்படுத்திக்கொள்கிறார். (நபியே!) “நான் ஒன்றும் உங்களுக்குப் பாதுகாவலன் அல்லன்” (என்று அவர்களிடம் கூறுவீராக.)* [105]“இதனை நீர் மற்றவர்களிடமிருந்து கற்றுக் கொண்டீர்” என அவர்கள் கூறுகின்றனர். (அது*

---

****தொட்டுணரக்கூடிய வடிவத்தில் இறைவன் இருக்க வேண்டும் என மனிதன் விரும்புகிறான். இவ்வகையில் இறைவன் தன்னை வெளிப்படுத்தாதபோது, தொட்டுணரக் கூடியவற்றை இறைவன் என்று மனிதன் எடுத்துக் கொண்டு, அதன் வழியாக உருவங்களை விரும்பும் தன் உணர்ச்சியை திருப்திப்படுத்திக் கொள்கிறான். எல்லாவற்றிற்கும் மேலாக, மாபெரும் பிரபஞ்சத்தைப் படைத்துப் பரிபாலிப்பவனான இறைவன், பார்த்துத் தொட்டுணரக்கூடிய சாதாரண வடிவத்தில் பலவீனமான படைப்பான மனிதன் முன்பு எப்படி வெளிப்படுத்துவான்? மனிதன் தனது இதயத்தால் இறைவனைக் கண்டறிந்து தான் கொண்டிருக்கும் இறைநம்பிக்கை மூலமாக இறைவனைப் பார்க்க வேண்டும். அகப்பார்வை மூலமாக இறைவனைக் காண்பவனே இறைவனைக் கண்டறிய முடியும். நறுமணத்தைக்கொண்டு மலரை அறிய முடியாத மனிதன் அதன் வேதியியல் தரங்களைக் கேட்டு வற்புறுத்துவது போன்றதே, இறைவனைப் புறக்கண்களால் பார்ப்பதை வலியுறுத்தும் மனிதனின் நிலையாகும்.***

தவறு எனக் காட்டுவதற்காகவும்) அறிந்துகொள்ள விரும்பும்
மக்களுக்குத் தெளிவுபடுத்துவதற்காகவும் நாம் எம்முடைய
வசனங்களைப் பல்வேறு முறைகளில் (திரும்பத் திரும்ப)
விவரிக்கின்றோம். 106(நபியே!) உம் இறைவனால் உமக்கு
அறிவிக்கப்படுகின்றவற்றையே நீர் பின்பற்றுவீராக! அவனைத்
தவிர வேறு இறைவன் இல்லை. இணைவைப்பாளர்களைப்
புறக்கணித்துவிடுவீராக! 107அல்லாஹ் விரும்பியிருந்தால் அவர்கள்
இணைவைத்திருக்க மாட்டார்கள். நாம் உம்மை அவர்களுக்குப்
பாதுகாவலராக ஆக்கவில்லை; நீர் அவர்(களின் செயல்)களுக்குப்
பொறுப்பாளருமல்லர். 108அவர்கள் அல்லாஹ்வை விடுத்து
யாரை(த் தெய்வங்களாக) அழைக்கிறார்களோ அவர்களை நீங்கள்
இகழாதீர்கள். இல்லையேல் அவர்கள் அறிவில்லாமல் வரம்புமீறி
அல்லாஹ்வை இகழ்வர். இதேபோன்று நாம் ஒவ்வொரு
சமூகத்தாருக்கும் அவர்களின் செயல்கள் அழகானவை எனத்
தோன்றுமாறு செய்துள்ளோம். பின்னர் அவர்கள் அனைவரும்
தங்கள் இறைவனிடமே திரும்ப வேண்டி இருக்கிறது. அப்போது
அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றை அவர்களுக்கு அவன்
அறிவிப்பான்.

109தங்களிடம் (தாங்கள் விரும்பியபடி) ஏதேனும் ஒரு
சான்று (அற்புதம்) வருமானால் "உறுதியாக நாங்கள்
நம்பிக்கைகொள்வோம்" என்று அவர்கள் அல்லாஹ்வின்
மீது ஆணையிட்டுக் கூறுகின்றனர். "சான்றுகள் அனைத்தும்
அல்லாஹ்விடமே உள்ளன" என்று (நபியே!) நீர் கூறும்.
(நம்பிக்கையாளர்களே!) அது (அவர்களிடம்) வந்துவிட்டாலும்
அவர்கள் நம்பிக்கை கொள்ளமாட்டார்கள் என்பது உங்களுக்குத்
தெரியுமா? 110அவர்கள் தொடக்கத்தில் இ(வ்வேதத்)தை
நம்பாததைப் போலவே (இறுதிவரை நம்பாதிருக்க) நாம்
அவர்களின் உள்ளங்களையும் பார்வைகளையும் பிறழச்
செய்வோம்; அவர்களின் வரம்பு மீறலிலேயே தடுமாறித் திரியுமாறு
அவர்களை விட்டுவிடுவோம். 111நாம் அவர்களிடம் வானவர்களை

*அனுப்பினாலும், இறந்தவர்கள் (வந்து) அவர்களுடன் பேசும்படிச் செய்தாலும், இன்னும் அனைத்துப் பொருள்களையும் அவர்களின் கண்முன்னால் கொண்டு வந்தாலும் அல்லாஹ் விரும்பினாலேயன்றி அவர்கள் நம்பிக்கைகொள்ளமாட்டார்கள். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிவற்றவர்களே ஆவர்.*

*112இவ்வாறே நாம் (உமக்கு முன்பு வந்த) ஒவ்வொரு தூதருக்கும் மனிதர்களிலும் ஜின்களிலுமுள்ள சாத்தான்களைப் பகைவர்களாக்கினோம். அவர்கள் (மக்களை) ஏமாற்றுவதற்காக(த் தமக்குள்) ஒருவருக்கொருவர் கவர்ச்சிகரமான சொற்களைச் சொல்லித் தீய எண்ணங்களை உருவாக்குகின்றனர். உம் இறைவன் விரும்பியிருந்தால் அவர்கள் அவ்வாறு செய்திருக்கமாட்டார்கள். எனவே நீர் அவர்களையும் அவர்களின் புனைந்துரைகளையும் விட்டுவிடுவீராக! 113இது, மறுமையை நம்பாதவர்களின் உள்ளங்கள் அ(த் தீய)வற்றின்பால் சாயட்டும்; அவற்றில் மகிழ்ந்து அவர்கள் ஈட்ட விரும்பிய (தீய)வற்றை ஈட்டிக்கொள்ளட்டும் என்பதற்காகவே ஆகும்.*

*114(நபியே!) “அல்லாஹ்வைத் தவிர வேறு ஒருவனையா நான் (எனக்கும் உங்களுக்கும் இடையில் தீர்ப்பளிக்கும்) நீதிபதியாகக் கொள்வேன்? அவன்தான் உங்களுக்குத் தெளிவான இவ்வேதத்தை அருளியுள்ளான்” என்று நீர் கூறும். (இதற்கு முன்னர்) எவருக்கெல்லாம் நாம் வேதத்தை வழங்கினோமோ அவர்கள் இது உம் இறைவனிடமிருந்து அருளப்பட்ட சத்தியம் என்பதை அறிவர். எனவே நீர் ஐயம் கொள்வோரில் ஒருவராகி விட வேண்டாம். 115உம் இறைவனின் வாக்கு சத்தியத்தாலும் நீதியினாலும் முழு நிறைவு பெற்றுவிட்டது. அவனது வாக்குகளை மாற்றுபவர் எவருமிலர். அவன் செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன். 116உலகிலுள்ள பெரும்பான்மையினரை நீர் பின்பற்றினால் அவர்கள் இறைவழியிலிருந்து உம்மைப் பிறழச் செய்துவிடுவர். அவர்கள் (அடிப்படையற்ற) வெறும் ஊகத்தையே பின்பற்றுகின்றனர். (மேலும்) அவர்கள் (பொய்க்)*

*கற்பனையாளர்களே அன்றி வேறல்லர். 117(மேலும்) உறுதியாக உம்
இறைவன் அவனது பாதையிலிருந்து பிறழ்ந்து விட்டவர்களையும்
நன்கறிவான்; நல்வழியில் நடப்பவர்களையும் நன்கறிவான்.*

*118(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் அவனது வசனங்களின்
மீது நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால் அல்லாஹ்வின்
பெயர்கூறப்பட்(டு அறுக்கப்பட்)டதையே உண்ணுங்கள்.
119அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டவற்றை உண்ணாமலிருக்க
உங்களுக்கு என்ன நேர்ந்தது? நீங்கள் கட்டாய நிலைக்கு
உட்பட்டாலன்றி (இயல்பான நிலையில் உங்களுக்கு உண்ண)த்
தடை செய்யப்பட்டவற்றை அல்லாஹ் உங்களுக்கு விரிவாக விளக்கி
விட்டான். ஆயினும் பெரும்பாலோர் தம் மன விருப்பங்களின்
அடிப்படையில் அறிவில்லாமல் மக்களை வழிகெடுக்கின்றனர்.
உறுதியாக உம் இறைவன் வரம்பு மீறுவோரை நன்கறிவான்.
120வெளிப்படையான பாவத்தையும் மறைமுகமான பாவத்தையும்
விட்டுவிடுங்கள். பாவங்களை ஈட்டுபவர்கள் அவற்றுக்கான
தண்டனையைப் பெறுவர். 121அல்லாஹ்வின் பெயர் கூறப்ப(ட்டு
அறுக்கப்)டாதவற்றை நீங்கள் உண்ணாதீர்கள். உறுதியாக அது
பாவமாகும். சாத்தான்கள் தங்கள் கூட்டாளிகளை உங்களுடன்
வாதம் செய்யுமாறு தூண்டுகின்றனர். அவர்கள் கூறுவதை
நீங்கள் ஏற்றுக்கொண்டால் நீங்களும் இணைவைப்பாளர்களாகி
விடுவீர்கள்.*

*122(ஆன்ம விழிப்பில்லாமல்) இறந்(தவன் போல்
இருந்)த ஒருவனுக்கு நாம் உயிரையும் ஒளியையும் வழங்கினோம்.
அதைக் கொண்டு அவன் மக்களிடையே நடமாடுகிறான்.
அத்தகையவனும் இருளில் சிக்கி அதிலிருந்து வெளியேற
முடியாமலிருக்கும் ஒருவனும் சமமாக முடியுமா? இவ்வாறுதான்
மறுப்பாளருக்கு அவர்களின் (தீச்)செயல்கள் அழகாகத்
தோன்றுமாறு செய்யப்பட்டுள்ளன. 123இவ்வாறே ஒவ்வோர்
ஊரிலும் சதி(ச் செயல்கள்) புரிவதற்காக நாம் குற்றவாளிகளையே
தலைவர்களாக ஆக்கியுள்ளோம். (ஆயினும்) அவர்கள் தங்களுக்கு*

*எதிராகவேயன்றி (வேறு யாருக்கும்) சதி செய்ய இயலாது. ஆனால் அவர்கள் அதனை உணர்ந்து கொள்வதில்லை.*
*[124]அவர்களிடம் (தூதர் வாயிலாக) ஏதேனும் சான்று வரும்போது "இறைத்தூதர்களுக்கு வழங்கப்படுவது போலவே எங்களுக்கும் (வானவர்கள் மூலமாக நேரில்) வழங்கப்படாதவரை நாங்கள் (அதனை) ஏற்றுக்கொள்ளவே மாட்டோம்" என்று கூறுகின்றனர். ஆனால் தூதுத்துவத்தை எங்கு (எவருக்கு) வழங்க வேண்டும் என்பதை அல்லாஹ்வே நன்கறிவான். குற்றவாளிகளுக்கு அவர்கள் செய்துகொண்டிருந்த சூழ்ச்சியின் காரணத்தால் உறுதியாக அல்லாஹ்விடம் இழிவும் கடுந்தண்டனையும் உண்டு.*

*[125]அல்லாஹ் எவருக்கு நேர்வழிகாட்ட விரும்புகிறானோ அவரது நெஞ்சை இஸ்லாத்திற்காக விரிவாக்குகிறான். எவரை (அவரது) கெடுவழியிலேயே (செல்ல) விட்டுவிட விரும்புகின்றானோ அவரது இதயத்தை வானில் ஏறுபவனின் இதயத்தைப் போலச் சுருங்கி இறுகிவிடச் செய்கிறான். இவ்வாறு அல்லாஹ் நம்பிக்கை கொள்ளாதோர்மீது (இழிவு என்னும்) மாசைக் குவித்துத் தண்டிக்கிறான்.*
*[126]இதுவே உங்கள் இறைவனின் நேர்வழியாகும். சிந்தித்துணரும் மக்களுக்கு நாம் (எமது) வசனங்களைத் தெளிவுபடுத்தியிருக்கிறோம்.*
*[127]இறைவனிடம் அவர்களுக்கு சாந்தி இல்லம் உண்டு. அவர்கள் செய்துவந்த நற்செயல்களின் காரணமாக அவர்களின் பாதுகாவலனாக அவன் இருக்கிறான்.*

*[128]அவர்கள் அனைவரையும் அவன் ஒன்று சேர்க்கும் நாளில், (ஜின்களை நோக்கி) "ஜின் இனத்தோரே! நீங்கள் மனிதர்களில் பலரை(க் கெடுத்து) உங்களுடன் சேர்த்துக்கொண்டீர்கள்" என்று கூறுவான். அதற்கு மனிதர்களிலுள்ள அவர்களின் கூட்டாளிகள், "எங்கள் இறைவனே! நாங்கள் ஒருவரையொருவர் பயன்படுத்திக் கொண்டோம். (இறுதியில்) நீ எங்களுக்காக ஏற்படுத்தியிருந்த தவணையையும் (அந்தோ) நாங்கள் அடைந்துவிட்டோம்" என்று கூறுவர். (அப்போது அல்லாஹ்) "இனி நரகம்தான் உங்கள் இருப்பிடமாகும்; அல்லாஹ் விரும்பினாலே அன்றி நீங்கள்*

*அதில் என்றென்றும் கிடப்பீர்கள்" என்று கூறுவான். உங்கள் இறைவன் ஞானம் மிக்கவன்; முற்றும் அறிந்தவன்.*
[129]*இவ்வாறு நாம் தீவினையாளர்களை அவர்கள் ஈட்டிக் கொண்டிருந்த (தீய)வற்றின் காரணத்தால் ஒருவருக்கொருவரை நெருக்கமாக்கி விடுவோம்.*
[130]*"ஜின் மற்றும் மனித இனத்தோரே! உங்களிலிருந்தே உங்களிடம் தூதர்கள் வரவில்லையா? அவர்கள் எமது வசனங்களை எடுத்துரைத்து இந்நாளின் சந்திப்பைக் குறித்து உங்களுக்கு எச்சரிக்கை செய்யவில்லையா?" (என்று அல்லாஹ் கேட்பான்). அதற்கு அவர்கள், "எங்களுக்கு எதிராக நாங்களே சாட்சி கூறுகிறோம்" என்று கூறுவர். இம்மை வாழ்வு அவர்களை ஏமாற்றிவிட்டது. தாங்கள் மறுப்பாளர்களாகவேதான் இருந்ததாக அவர்கள் தங்களுக்கு எதிராகத் தாங்களே சாட்சி கூறுவர்.*

[131]*(நபியே!) உம்முடைய இறைவன் (தம் தூதர்களை அனுப்பி எச்சரிக்காமல்) எந்த ஊராரையும் அவர்கள் செய்துவிட்ட தீவினைக்காக அவர்கள் அறியாமலிருக்கும் நிலையில் அழிப்பவன் இல்லை.*
[132]*ஒவ்வொருவருக்கும் அவரவர்களின் (நல்ல / தீய) செயல்களுக்கேற்பப் படிநிலைகள் உள்ளன. உம் இறைவன் அவர்களின் செயல்களைக் கவனிக்காமலில்லை.*
[133]*(நபியே!) உம்முடைய இறைவன் தேவை எதுவுமற்றவன்; நிகரற்ற அன்புடையவன். (மக்களே! முன்பு) வேறு சமுதாயத்தின் வழித்தோன்றல்களிலிருந்து உங்களைக் கொண்டு வந்ததுபோலவே, அவன் விரும்பினால் உங்களை அகற்றிவிட்டுப் பின்னர்த் தான் விரும்பியோரை உங்களுக்கு மாற்றாகக் கொண்டுவருவான்.*
[134]*உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட(மறுமை நாளான)து வந்தே தீரும் உங்களால் (இறைவனை) இயலாதவனாக ஆக்கிவிட முடியாது.*
[135]*(நபியே!) நீர் கூறும்: "என்னுடைய சமூகத்தோரே! நீங்கள் உங்கள் வழியில் செயல்படுங்கள். நானும் (என் வழியில்) செயல்படுகிறேன். இவ்வுலகின் இறுதி(வெற்றி) யாருக்குச் சாதகமாக அமையும் என்பதை விரைவில் நீங்கள் அறிந்துகொள்வீர்கள்". உறுதியாகத் தீவினையாளர்கள் வெற்றியடைய மாட்டார்கள்.*

[136]அவர்கள் அல்லாஹ் படைத்த பயிர்கள், கால்நடைகள் ஆகியவற்றிலிருந்து ஒரு பங்கை(ப் பிரித்து) 'இது அல்லாஹ்வுக்குரியது' என்றும் (மற்றொரு பங்கை) 'இது எங்கள் இணைத் தெய்வங்களுக்குரியது' என்றும் தங்கள் நோக்கப்படி கூறுகின்றனர். அவர்களின் இணைத் தெய்வங்களுக்குரியது அல்லாஹ்வுக்குச் சேர்வதில்லை; ஆனால் அல்லாஹ்வுக்குரியதோ அவர்களது இணைத்தெய்வங்களுக்குச் சேர்ந்து விடுகிறது! அவர்கள் எடுக்கும் முடிவு எத்துணைத் தீயது! [137]இவ்வாறே இணைவைப்பாளர்களில் பெரும்பாலோருக்குத் தங்கள் குழந்தைகளைக் கொலை செய்வதை அவர்களின் இணைத்தெய்வங்கள் அழகாக்கி(ச் சிறப்பானதென)க் காட்டின. அவர்களை அழிவுக்குள்ளாக்கி, அவர்களின் மார்க்கத்தைக் குழப்பத்திற்குள்ளாக்க வேண்டும் என்பதற்காக (அவ்வாறு செய்தன!) அல்லாஹ் விரும்பியிருந்தால் அவர்கள் அவ்வாறு செய்திருக்கமாட்டார்கள். எனவே (நபியே!) அவர்களை அவர்களின் (பொய்க்) கற்பனைகளிலேயே கிடக்க விட்டுவிடுவீராக! [138]"இந்தக் கால்நடைகளும் பயிர்களும் (எங்கள் தெய்வங்களுக்கு நேர்ச்சையாகத்) தடுத்து வைக்கப்பட்டுள்ளன. நாங்கள் அனுமதிப்போரைத் தவிர வேறு யாரும் இவற்றை உண்ணக்கூடாது" என அவர்கள் தங்களின் (மூடக்) கொள்கையின்படி கூறுகின்றனர். (மேலும்) "சில கால்நடைகளின் முதுகுகள் (மீது ஏறிப் பயணம் செய்தல் போன்றவை) தடுக்கப்பட்டுள்ளன!" என்றும் கூறுகின்றனர். "சில கால்நடைகளை (உணவுக்காக) அறுக்கும்போது அல்லாஹ்வின் பெயரைக் கூறக்கூடாது" என்று (அல்லாஹ் கட்டளையிட்டிருப்பதாக) அல்லாஹ்வின்மீது (பொய்யைப்) புனைந்துகொண்டிருந்தனர். அதற்காக அவன் அவர்களைத் தண்டிப்பான். [139]"இன்ன கால்நடைகளின் வயிற்றில் இருப்பவை எங்கள் ஆண்களுக்கு மட்டுமே (உண்ண) உரியவை; அவை எங்கள் பெண்களுக்குத் தடுக்கப்பட்டவை ஆகும். ஆனால் அவை செத்துப் பிறந்தால் (ஆண், பெண்) அனைவருக்கும் அதில் பங்கு உண்டு" என்று அவர்கள் கூறுகின்றனர். இந்தப் பொய்ப் புனைவுக்காக

*விரைவில் அவன் அவர்களைத் தண்டிப்பான். உறுதியாக அல்லாஹ் ஞானம் மிக்கவன்; முற்றும் அறிந்தவன். [140]அறிவின்றி மூடத்தனத்தால் தங்கள் குழந்தைகளைக் கொன்றவர்களும் அல்லாஹ் தங்களுக்கு (உண்ண) அனுமதித்தவற்றை (ஆகாதென) அவன்மீதே இட்டுக்கட்டி விலக்கிக் கொண்டவர்களும் பெரும் இழப்பிற்குள்ளாகி விட்டனர். அவர்கள் வழிபிறழ்ந்து விட்டனர். அவர்கள் நேர்வழி பெற்றவர்களாகவும் இல்லை.*

*[141]படரும் கொடிகள், படராத செடிகள் ஆகியவற்றைக் கொண்ட தோட்டங்களையும் பேரீச்சை மரங்களையும் பலவகை உணவுத் தானியங்களையும் (பார்வைக்கு) ஒரே மாதிரியாகவும் (சுவையில்) வேறுபட்டும் இருக்கக்கூடிய ஆலிவ், மாதுளை ஆகியவற்றையும் அவன்தான் படைத்தான். அவை விளையும்போது அவற்றின் விளைச்சலை உண்ணுங்கள். அதன் அறுவடைநாளில் அவனுடைய பங்கை(ஏழைகளுக்கு)க் கொடுத்து விடுங்கள். வீண்விரயம் செய்யாதீர்கள். வீண்விரயம் செய்வோரை அவன் நேசிக்கமாட்டான். [142]கால்நடைகளில் சிலவற்றைச் சுமை சுமப்பதற்காகவும் சிலவற்றை உணவுக்காகவும் அவன் படைத்துள்ளான். அல்லாஹ் உங்களுக்கு வழங்கியவற்றிலிருந்து உண்ணுங்கள். சாத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். உறுதியாக சாத்தான் உங்களுக்கு வெளிப்படையான பகைவன் ஆவான். [143](நபியே!) உண்பதற்குரிய விலங்குகளில் (ஆண், பெண்) இணைகளாக எட்டு விலங்குகளைப் படைத்துள்ளான். அவற்றில் (ஆண், பெண் எனச்) செம்மறியாட்டில் இரண்டும் வெள்ளாட்டில் இரண்டும் உள்ளன. நீர் (அவர்களிடம்) “அவன் இரண்டு ஆண் இனங்களைத் தடை செய்தானா? அல்லது பெண் இனங்களையா? அல்லது அந்த இருவகைப் பெண் ஆடுகளின் கருவறையில் இருக்கும் குட்டிகளையா? நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் எனக்கு ஆதாரத்துடன் விளக்குங்கள்” என்று நீர் கேளும். [144]“இவ்வாறே ஒட்டகத்திலும் (ஆண், பெண்) இரண்டையும் மாட்டில் (ஆண், பெண்) இரண்டையும் (அவன் படைத்துள்ளான், நபியே!) “அவன் இரு*

ஆண் இனங்களைத் தடை செய்தானா? அல்லது இரு பெண் இனங்களையா? அல்லது இவ்விரு வகைப் பெண் விலங்குகளின் கருவறையில் உள்ளவற்றையா? அல்லாஹ் இவ்வாறு உங்களுக்குக் கட்டளையிட்ட சமயத்தில் நீங்கள் அங்கு இருந்தீர்களா?" என்றும் நீர் கேட்பீராக! மக்களை வழிகெடுப்பதற்காக அறிவின்றி அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனைந்துரைப்பவனைவிட மிகப் பெரிய முறைகேடன் யார்? உறுதியாக அல்லாஹ் முறைகேடர்களுக்கு நேர்வழி காட்டமாட்டான். [145](நபியே!) "எனக்கு அருளப்பட்ட (வேத) அறிவிப்பில் (தானாகச்) செத்தது, வடியவிடப்பட்ட இரத்தம், பன்றி இறைச்சி ஆகிய மிகவும் தூய்மையற்றவையும் அல்லாஹ் அல்லாதவற்றுக்காகப் பலியிடப்பட்டவையும் தவிர (வேறு எதுவும்) உண்பதற்குத் தடை செய்யப்பட்டிருப்பதாக நான் காணவில்லை" என்று நீர் கூறும். ஆயினும் வரம்பு மீறாமலும் பாவநோக்கம் இன்றியும் எவராவது (கடும் பசி போன்றவற்றால்) நிர்ப்பந்திக்கப்பட்டு விட்டால் (அவற்றை உண்பது குற்றமாகாது.) உறுதியாக உம்முடைய இறைவன் பெரும் மன்னிப்பாளனும் நிகரற்ற அன்பாளனும் ஆவான்.

[146]யூதர்களுக்கு நகமுடைய (விலங்குகள், பறவைகள்) அனைத்தையும் நாம் தடை செய்திருந்தோம். மாடு, ஆடு ஆகியவற்றின் முதுகுகளிலும் குடல்களிலும் எலும்புகளிலும் படிந்திருக்கும் கொழுப்புகளைத்தவிர வேறு கொழுப்புகளையும் தடை செய்திருந்தோம். அது அவர்களின் கீழ்ப்படியாமைக்குத் தண்டனையாக நாம் விதித்ததாகும். உறுதியாக நாம் உண்மையாளராக இருக்கிறோம். [147](நபியே! இதன் பின்னரும்) அவர்கள் உம்மைப் பொய்மைப்படுத்தினால் நீர் (அவர்களிடம்) "உங்கள் இறைவன் விரிவான அருளுடையவன். ஆயினும் குற்றம்புரியும் சமூகத்தாருக்கு அவன் விதிக்கும் தண்டனை தடுக்கப்பட முடியாதது" என்று கூறிவிடுவீராக!

148இணைவைப்பாளர்கள் “அல்லாஹ் விரும்பியிருந்தால் நாங்களோ எங்கள் முன்னோர்களோ இணை வைத்திருக்கமாட்டோம். (உண்ணத்தகுந்த) எதையும் தடைசெய்து கொண்டிருக்கவும் மாட்டோம்” என்று கூறுவர். இவ்வாறுதான் இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் எம்முடைய வேதனையை அனுபவிக்கும்வரை பொய்மைப்படுத்தி (வாதித்து)க் கொண்டிருந்தனர். (நபியே!) நீர் அவர்களிடம் “(இது தொடர்பான உறுதியான) அறிவு உங்களிடம் உள்ளதா? (இருந்தால்) எங்கள் முன் எடுத்து வையுங்கள். நீங்கள் ஊகத்தையே பின்பற்றுகிறீர்கள். நீங்கள் பொய்ப் புனைவுகளையே செய்து கொண்டிருக்கிறீர்கள்”
என்று கூறும். 149(நபியே!) “முழுமையான சான்று அல்லாஹ்விற்கே உரியது. அல்லாஹ் விரும்பியிருந்தால் உங்கள்
அனைவருக்கும் நேர்வழிகாட்டியிருப்பான். 150“அல்லாஹ்தான்
தடை செய்துள்ளான் என்று சாட்சி கூறும் உங்கள் சாட்சிகளை அழையுங்கள்” என்று நீர் கூறுவீராக! அவர்கள் (பொய்ச்) சாட்சி கூறினாலும் அவர்களுடன் நீரும் சாட்சி கூறிவிடாதீர். எமது சான்றுகளைப் பொய்மைப்படுதுபவர்கள் மறுமையின்மீது நம்பிக்கைகொள்ளாதவர்கள் ஆகியோரின் விருப்பங்களுக்கு நீர் இணங்கிவிடாதீர்! அவர்கள் தம் இறைவனுக்கு இணைவைக்கின்றனர்.

151(நபியே!) நீர் கூறும்: “(மக்களே!) வாருங்கள். உங்கள் இறைவன் (உண்மையில்) உங்களுக்குத் தடை செய்துள்ளவற்றை எடுத்துரைக்கிறேன். நீங்கள் அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்காதீர்கள். பெற்றோர்களுக்கு நன்மை செய்யுங்கள். வறுமைக்கு அஞ்சி உங்கள் குழந்தைகளைக் கொன்று விடாதீர்கள். (ஏனெனில்) உங்களுக்கும் அவர்களுக்கும் நாமே உணவளிக்கிறோம். வெளிப்படையாகவோ மறைமுகமாகவோ மானக்கேடான செயல்களின்பால் நெருங்காதீர்கள். (கொல்லக்கூடாதென) அல்லாஹ் தடுத்துள்ள எந்த (மனித) உயிரையும் முறைகேடாகக் கொன்று விடாதீர்கள். நீங்கள் சிந்தித்துணரும்பொருட்டு அல்லாஹ் இவற்றை உங்களுக்கு அறிவுறுத்தியுள்ளான்.”

[152]*(மேலும் கூறும்) "அநாதை பருவ வயதை அடையும்வரை அவரது சொத்தை, நியாயமான முறையில் அன்றி அணுகாதீர்கள். அளவை நிறுவை ஆகியவற்றை நியாயத்துடன் நிறைவு செய்யுங்கள். நாம் எந்த ஆன்மா மீதும் அது தாங்க முடிந்த அளவுக்குமேல் பொறுப்பைச் சுமத்தமாட்டோம். பேசும்போது நியாயமாகப் பேசுங்கள். அது உங்கள் நெருங்கிய உறவினர் தொடர்பானதாக இருந்தாலும் சரி, அல்லாஹ்வுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுங்கள். இவை நீங்கள் படிப்பினை பெறும்பொருட்டு அல்லாஹ் உங்களுக்கிட்டுள்ள கட்டளையாகும்"* [153]*"இதுவே எனது நேர்வழியாகும்" (என அல்லாஹ் அறிவிக்கின்றான்). எனவே இதனையே நீங்கள் பின்பற்றுங்கள். வேறு வழிகளைப் பின்பற்றாதீர்கள். அவை அவனது வழியிலிருந்து உங்களை விலக வைத்துவிடும். இது உங்களை நீங்கள் காத்துக்கொள்ளும் பொருட்டு அல்லாஹ் உங்களுக்கிட்டுள்ள கட்டளையாகும் (என்றும் கூறுவீராக!)*

[154]*நாம் மோசேவுக்கு (தவ்ராத்) வேதத்தை வழங்கினோம். அது நற்செயல்கள் புரிவோருக்கு (எம்முடைய அருட்கொடைகளை) நிறைவுசெய்வதும் அனைத்தையும் தெளிவுபடுத்துவதும் வழிகாட்டியும் அருளும் ஆகும். அவர்கள் தம் இறைவனை (மறுமையில்) சந்திக்கவிருப்பதை நம்புவதற்காக (அதனை) நாம் வழங்கினோம்.* [155]*(மக்களே!) இது நாம் அருளியுள்ள வேதம் ஆகும். (குர்ஆனாகிய) இது அருள்மிக்கது. இதனையே நீங்கள் பின்பற்றுங்கள். (அல்லாஹ்வுக்கு) அஞ்சுங்கள். அதனால் நீங்கள் அருள் வழங்கப்படுவீர்கள்.* [156]*(அரபிகளே) "எங்களுக்கு முன்சென்ற (யூதர்கள் கிறிஸ்தவர்கள் ஆகிய) இரு கூட்டத்தாருக்கு மட்டுமே வேதம் வழங்கப்பட்டிருந்தது. அவர்கள் ஓதிக் கொண்டிருந்ததை நாங்கள் கவனியாதிருந்து விட்டோம்" என்று நீங்கள் கூறிவிடக்கூடும் என்பதற்காகவே (இந்த வேதத்தை உங்களுக்கு அருளினோம்)* [157]*(அல்லது) "எங்களுக்கும் வேதம் வழங்கப்பட்டிருந்தால் நாங்கள் அவர்களைவிட நல்வழி நடப்பவர்களாகியிருப்போம்"*

*என்று நீங்கள் கூறக்கூடும் என்பதற்காகவும் (உங்கள் மொழியில் இவ்வேதத்தை அருளினோம்) உங்களுக்கு உங்கள் இறைவனிடமிருந்து (வேதமாகிய) தெளிவான சான்றும் வழிகாட்டுதலும் அருளும் உறுதியாக வந்துவிட்டன. ஆகவே அல்லாஹ்வின் சான்றுகளைப் பொய்மைப்படுத்தி அவற்றினின்றும் விலகிக் கொள்பவனைவிட மிகப்பெரும் முறைகேடன் யார்? எம்முடைய சான்றுகளைவிட்டு விலகிக்கொண்டிருப்பவர்களுக்கு அவர்கள் விலகிக்கொண்டிருந்ததால் மிகக் கொடிய வேதனையை அளிப்போம்.*
*158(நபியே!) அவர்கள் தம்முன் வானவர்கள் வரவேண்டும்; அல்லது உமது இறைவன் வர வேண்டும்; அல்லது உமது இறைவனின் அடையாளங்களில் சில வெளிப்பட வேண்டும் என்றுதான் எதிர்பார்க்கிறார்களா? உம் இறைவனின் (உலக அழிவு) அடையாளங்கள் சில வெளிப்படும் நாளில், முன்னரே நம்பிக்கைகொள்ளாதவருக்கும் அல்லது நம்பிக்கை கொண்டிருந்தும் எந்த நன்மையையும் ஈட்டியிராதவருக்கும் (இறுதி நேரத்தில்) அவர்கள் கொள்ளும் நம்பிக்கை பயனளிக்காது. (ஆகவே) நீர் அவர்களிடம் "நீங்கள் எதிர்பாருங்கள். நாங்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்" என்று கூறுவீராக!*

*159தங்கள் மார்க்கத்தில் பிரிவினையை ஏற்படுத்திப் பல்வேறு குழுக்களாகப் பிரிந்து விட்டவர்களுடன் உமக்குத் தொடர்பு ஏதுமில்லை. அவர்களின் விவகாரம் அல்லாஹ்விடமுள்ளது. அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றைப்பற்றி (மறுமையில்) அவன் அவர்களுக்கு அறிவிப்பான்.*
*160யார் ஒரு நன்மையைச் செய்கிறாரோ அவருக்கு அதைப் போன்று பத்து மடங்கு (நன்மை) உண்டு. யார் ஒரு தீமையைச் செய்கிறாரோ அவருக்கு அதே அளவிலான தண்டனை மட்டுமே கொடுக்கப்படும். அவர்கள் அநீதி இழைக்கப்படமாட்டார்கள்.*

*161(நபியே!) நீர் கூறும்: "என் இறைவன் எனக்கு நேர்வழியைக் காட்டியுள்ளான்; அது உறுதியான மார்க்கமாகும்; உண்மையில்*

*நிலைத்துநின்ற ஆப்ரஹாமின் நேரிய வழிமுறையாகும். அவர் இணைவைப்பவராக இருந்ததில்லை.”* [162]*(மேலும்)நீர் கூறும்: “எனது தொழுகையும் எனது தியாகமும் எனது வாழ்வும் எனது இறப்பும் அனைத்துலகங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே உரியவையாகும்”.* [163]*அவனுக்கு (எந்த) இணையுமில்லை. இவ்வாறே நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். நான் கீழ்ப்படிவோரில் முதன்மையானவன் ஆவேன்.” (என்றும்) கூறுவீராக!*
[164]*(மேலும் நபியே!) “அல்லாஹ்வையன்றி வேறொருவனையா நான் இறைவனாகத் தேடுவேன்? அவன்தான் அனைத்துப் பொருள்களுக்கும் இறைவன்” என்றும் கூறுவீராக. பாவத்தைத் தேடிக்கொள்ளும் ஒவ்வோர் ஆன்மாவும் தனக்குக் கேடாகவே தேடிக்கொள்கிறது. பாவத்தைச் சுமக்கும் எந்த ஆன்மாவும் மற்றோர் ஆன்மாவின் பாவத்தைச் சுமப்பதில்லை. பின்னர் உங்கள் இறைவனின் பக்கமே நீங்கள் திரும்ப வேண்டியிருக்கிறது. அப்போது நீங்கள் முரண்பட்டுக் கொண்டிருந்தவை பற்றிய உண்மை நிலையை அவன் உங்களுக்கு அறிவிப்பான்.*
[165]*அவன்தான் பூமியில் உங்களை வழித்தோன்றல்களாக ஆக்கினான். உங்களுக்கு வழங்கியவற்றைக் கொண்டு அவன் உங்களைச் சோதிப்பதற்காக உங்களில் சிலரை வேறு சிலரைவிடத் தகுதிகளால் உயர்த்தியுள்ளான். உங்கள் இறைவன் தண்டிப்பதில் விரைவானவன். ஆயினும் உறுதியாக அவன் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

## 7. சிகரங்கள் (அல்அஃராஃப்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]*அலிஃப் – லாம் – மீம் – ஸாத்.*

[2]*(நபியே!) இது உமக்கு அருளப்பட்ட வேதமாகும். இதனால் உமக்கு உள்ளத்தில் எவ்வகை மனக்கலக்கமும் ஏற்பட்டுவிட வேண்டாம். மக்களுக்கு நீர் எச்சரிக்கை செய்வதற்காகவும்*

நம்பிக்கையாளர்களுக்கு அறிவுரையாக அமைய வேண்டும்
என்பதற்காகவும் (இது அருளப்பட்டது). 3(மனிதர்களே!)
உங்கள் இறைவனால் உங்களுக்கு அருளப்பெற்றுள்ள
(இவ்வேதத்)தைப் பின்பற்றுங்கள். அவனைத் தவிர வேறு
(எவரையும்) பாதுகாவலர்களாகப் பின்பற்றாதீர்கள். நீங்கள்
நல்லுணர்ச்சி பெறுவது மிக அரிதாகவே உள்ளது. 4எத்தனையோ
ஊர்களை நாம் அழித்திருக்கிறோம். இரவிலோ, நண்பகலில்
அவர்கள் உறங்கிக் கொண்டிருந்தபோதோ எம் தண்டனை
திடீரென அவர்களை வந்தடைந்தது. 5எம் தண்டனை
அவர்களை வந்தடைந்தபோது “நாங்கள் உண்மையிலேயே
தீவினையாளர்கள்தாம்” என்பதைத் தவிர அவர்களால்
வேறொன்றும் கூற முடியவில்லை. 6எவருக்கெல்லாம் தூதர்கள்
அனுப்பப்பட்டனரோ அவர்களை உறுதியாக விசாரிப்போம்,
தூதர்களையும் விசாரிப்போம். 7நாம் (அவர்களின் செயல்களை
முழுமையாக) அறிந்திருப்பதால் (எல்லாவற்றையும்) அவர்களுக்கு
எடுத்துரைப்போம். ஏனெனில் நாம் (அவர்களிடமிருந்து எங்கும்
எப்போதும்) மறைந்திருக்கவில்லை. 8(ஒவ்வொருவர் செயல்களும்
சரியாக) அந்நாளில் எடைபோடப்படுவது உண்மையாகும்.
எனவே யாருடைய (நன்மையின்) எடை கனமாக இருக்குமோ
அவர்கள்தாம் வெற்றியாளர்கள். 9யாருடைய எடை
குறைவாக இருக்குமோ அவர்கள்தாம் எமது வசனங்களுக்கு
எதிராகச் செயல்பட்டுக் கொண்டிருந்ததால் தம்மைத்தாமே
இழப்பிற்குள்ளாக்கிக் கொண்டவர்கள்.

10(மனிதர்களே!) நாம் உங்களுக்குப் பூமியில் வாழ
இடமளித்தோம். அதில் உங்களுக்காக வாழ்க்கை வசதிகளையும்
ஏற்படுத்தினோம். ஆயினும் நீங்கள் நன்றி செலுத்துவது மிக
அரிதே. 11நாம் உங்களைப் படைத்து, உங்களை வடிவமைத்தோம்.
பின்னர் “ஆதமுக்குத் தலைபணியுங்கள்” என்று வானவர்களிடம்
கூறினோம். அவர்கள் அனைவரும் தலைபணிந்தனர்,
இப்லீசைத்தவிர! அவன் தலை பணியவில்லை. 12(இறைவன்

*இப்லீஸை நோக்கி) “நான் உனக்குக் கட்டளையிட்டபோது தலைபணியவிடாமல் உன்னைத் தடுத்தது எது?” என்று கேட்டான். அதற்கு அவன், “நான் அவரைவிடச் சிறந்தவன். நீ என்னை நெருப்பினால் படைத்தாய். அவரை நீ மண்ணால்தான் படைத்துள்ளாய்” என்று கூறினான். [13]“நீ இங்கிருந்து இறங்கிவிடு! இங்குத் தற்பெருமை பாராட்ட உனக்கு உரிமை இல்லை. எனவே வெளியேறிவிடு. உறுதியாக நீ இழிவடைந்தோரில் ஒருவனாகி விட்டாய்” என்று (இறைவன்) கூறினான். [14](அப்போது அவன்) “அவர்கள் எழுப்பப்படும் நாள்வரை எனக்கு நீ தவணை அளிப்பாயாக” என்று வேண்டினான். [15]அதற்கு (இறைவன்), “உனக்குத் தவணை அளிக்கப்பட்டுவிட்டது” என்றான். [16](இப்லீஸ்) “நீ என்னை வழிகெடுத்து(வெளியேற்றி)விட்டதனால் (ஆதமுடைய மக்கள்) உன்னுடைய நேர்வழியில் (செல்வதற்குத் தடையாக) அமர்ந்துகொள்வேன். [17]பின்னர் அவர்களுக்கு முன்னாலும் பின்னாலும் வலப்புறமாகவும் இடப்புறமாகவும் (அவர்களைக் கெடுக்க) அவர்களிடம் நான் வந்துகொண்டிருப்பேன். அவர்களில் பெரும்பாலோரை நன்றி உள்ளவர்களாக நீ காணமாட்டாய்” என்று கூறினான். [18](இறைவன் இப்லீஸிடம்,) “இழிவுபடுத்தப்பட்டவனாகவும் துரத்தப்பட்டவனாகவும் இங்கிருந்து நீ வெளியேறிவிடு. (உன்னையும்) உன்னைப் பின்பற்றும் அனைவரையும் கொண்டு நான் நரகத்தை நிரப்புவேன்” என்று கூறினான். [19](பின்னர் ஆதமை நோக்கி) ஆதமே! நீரும் உமது மனைவியும் (இந்தச்) சொர்க்கத்தில் வாழுங்கள். நீங்கள் விரும்பிய இடங்களிலெல்லாம் (சென்று விரும்பும் உணவை) உண்ணுங்கள். ஆனால் இந்த மரத்தை நெருங்காதீர்கள். (நெருங்கினால் நீங்கள்) தீவினையாளர்களாகி விடுவீர்கள்” (என்று இறைவன் கூறினான்). [20]சாத்தான் மறைக்கப்பட்டிருந்த அவர்களின் மறைவுறுப்புகளை வெளிப்படுத்துவதற்காக அவர்கள் இருவருக்குள்ளும் ஊசலாட்டத்தை உண்டாக்கினான். “நீங்கள் இருவரும் வானவர்களாகவோ (சொர்க்கத்தில்) நிலைத்த வாழ்வு பெற்றவர்களாகவோ ஆகிவிடக்கூடாது என்பதற்காகத்தான்*

*உங்கள் இறைவன் உங்களை இந்த மரத்திலிருந்து தடுத்துள்ளான்”*
*என்று அவர்களிடம் கூறினான். [21]“உறுதியாக நான் உங்கள்*
*இருவருக்கும் நலம்விரும்பியாக இருக்கிறேன்” என்றும் அவன்*
*சத்தியம் செய்தான். [22]அவன் (இவ்வாறு) அவர்களை ஏமாற்றி*
*(அவர்களின் உயர்நிலையிலிருந்து) தாழ (வழி)செய்தான்.*
*அவர்கள் இருவரும் அந்த மரத்(தின் பழத்)தைச் சுவைத்த போது*
*அவர்களது மறைவுறுப்புகள் அவர்களுக்கு வெளிப்பட்டு விட்டன.*
*அவர்கள் தம்மைச் சொர்க்கத்தின் இலைகளைக் கொண்டு*
*தங்களை மறைத்துக்கொள்ள முயன்றனர். அப்போது இறைவன்*
*அவர்களை அழைத்து, “இந்த மரத்திலிருந்து நான் உங்களைத்*
*தடுக்கவில்லையா? சாத்தான் உங்களுக்கு வெளிப்படையான*
*பகைவன் என்றும் உங்களிடம் நான் கூறவில்லையா?” என்று*
*கேட்டான். [23](அதற்கு அவர்கள்) “எங்கள் இறைவா! எங்களுக்கு*
*நாங்களே அநீதியிழைத்துக் கொண்டோம். நீ எங்களை*
*மன்னித்து எங்களுக்கு அருள்புரியாவிட்டால் நாங்கள் உறுதியாக*
*இழப்பிற்குள்ளாகி விடுவோம்” என்று கூறினர். [24](அப்போது*
*அல்லாஹ்) “நீங்கள் (இங்கிருந்து) இறங்கி விடுங்கள். (பூமியில்*
*பல்கிப் பெருகும்போது) உங்களில் சிலர் (வேறு) சிலருக்குப்*
*பகைவர்களாக இருப்பீர்கள். பூமியில் உங்களுக்குக் குறிப்பிட்ட*
*காலம்வரை தங்குமிடமும் வாழ்க்கை வசதியும் உண்டு” என்று*
*கூறினான். [25]“அங்குத்தான் நீங்கள் வாழ்வீர்கள். அங்குத்தான்*
*நீங்கள் இறப்பீர்கள். அங்கிருந்துதான் நீங்கள் மீண்டும்*
*எழுப்பப்படுவீர்கள்” என்றும் அவன் கூறினான்.*

*[26]ஆதமுடைய மக்களே! உங்கள் மறைவுறுப்புகளை*
*மறைப்பதற்காகவும் (உங்களை) அழகுபடுத்திக் கொள்வதற்காகவும்*
*நாம் உங்களுக்கு ஆடையை அருளியுள்ளோம். ஆயினும்*
*இறையச்சமெனும் ஆடையே மிகச் சிறந்தது. இது அல்லாஹ்வின்*
*(அருட்)சான்றுகளில் ஒன்றாகும். இதனைக் கொண்டு அவர்கள்*
*நல்லறிவு பெறலாம். [27]ஆதமுடைய மக்களே! சாத்தான் உங்கள்*
*(மூலப்) பெற்றோரைச் சொர்க்கத்திலிருந்து வெளியேறச்*

*செய்ததுபோல உங்களையும் கெடுத்துவிட (இடமளிக்க) வேண்டாம். அவன் அவ்விருவரின் மறைவுறுப்புகளை ஒருவருக்கொருவர் வெளிப்படுத்தும் வகையில் அவர்களின் ஆடைகளை இழக்கச் செய்தான். அவனும் அவனது கூட்டாளிகளும் நீங்கள் காணாத வண்ணம் உங்களை (வழிகெடுப்பதற்காகப்) பார்த்துக் கொண்டிருக்கின்றனர். நம்பிக்கை கொள்ளாதோருக்குச் சாத்தான்களை நாம் நண்பர்களாக்கி விட்டோம்.*

[28]*(நம்பிக்கைகொள்ளாத) அவர்கள் மானக்கேடான ஒரு செயலைச் செய்துவிட்டால் “எங்கள் முன்னோர்கள் இவ்வாறே செய்தனர்; அல்லாஹ்வும் எங்களுக்கு இதனையே கட்டளையிட்டுள்ளான்” என்று கூறுகின்றனர். (நபியே!) “அல்லாஹ் ஒருபோதும் மானக்கேடானவற்றை(ச் செய்யுமாறு) ஏவமாட்டான். நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின் மீது இட்டுக்கட்டுகிறீர்களா?” என்று நீர் கேட்பீராக!*
*[29](மேலும்) “என் இறைவன் நீதியைக் கடைப்பிடிக்குமாறு கட்டளையிட்டுள்ளான். தொழும் ஒவ்வோர் இடத்திலும் (தொழுகையின்போது) உங்கள் முகங்களை இறைவனை நோக்கியே திருப்பிக்கொள்ளுங்கள். அவனுக்காக மார்க்கத்தில் நேர்மையாளர்களாக அவனையே வழிபட்டு இறைஞ்சுங்கள்; உங்களை முதன்முறையாக அவன் படைத்ததைப் போன்றே மீண்டும் நீங்கள் (அவனிடம்) திரும்புவீர்கள்” என்றும் கூறுவீராக!*
*[30]ஒரு பிரிவினருக்கு அவன் வழிகாட்டினான். மற்றொரு பிரிவினருக்கோ கெடுவழி விதியாகி விட்டது. அவர்கள் அல்லாஹ்வை விடுத்துச் சாத்தான்களை நண்பர்களாக்கிக் கொண்டனர். தாங்கள்தாம் நேர்வழி பெற்றவர்கள் என்றும் அவர்கள் எண்ணிக் கொள்கின்றனர்.*

[31]*ஆதமுடைய மக்களே! தொழும் ஒவ்வோர் இடத்திலும் (ஆடைகளால் முறையாக) உங்களை அணி செய்துகொள்ளுங்கள். உண்ணுங்கள், பருகுங்கள். ஆனால் வீண்விரயம் செய்யாதீர்கள். உறுதியாக அல்லாஹ் வீண்விரயம் செய்வோரை நேசிக்கமாட்டான்*
*[32](நபியே!) நீர் “தன் அடியார்களுக்காக அல்லாஹ் அளித்துள்ள*

*(ஆடை) அணிகளையும் தூய உணவையும் (ஆகாதவை எனத்)*
*தடை செய்தவர் யார்?” என்று கேட்பீராக! இவ்வுலக வாழ்வில்*
*அவை நம்பிக்கையாளர்களுக்கு(ம்) உரியவை. மறுமையிலோ*
*அவை அவர்களுக்கு மட்டுமே உரிமையானவை ஆகும்.*
*அறிந்துகொள்ளும் மக்களுக்கு இவ்வாறே எமது வசனங்களை*
*நாம் தெளிவுபடுத்துகிறோம். 33(நபியே!) நீர் கூறும்: “என்*
*இறைவன் தடை செய்திருப்பவை, வெளிப்படையாகவோ*
*மறைமுகமாகவோ மானக்கேடானவற்றைச் செய்தல், பாவம்*
*செய்தல், நியாயமின்றி வரம்புமீறுதல், (இணைவைப்புக்கு) எந்த*
*ஆதாரத்தையும் அவன் இறக்கி வைக்காத நிலையில் அவனுக்கு*
*இணைவைத்தல், அல்லாஹ்வின் மீது நீங்கள் அறியாதவற்றை(ப்*
*புனைந்து) கூறுதல் ஆகியவைதாம்.”*

*34ஒவ்வொரு சமூகத்தினருக்கும் ஒரு (குறிப்பிட்ட)*
*தவணையுண்டு. அவர்களின் தவணை (முடிவு) வந்துவிட்டால்*
*அவர்கள் ஒரு நொடியும் பிந்தவும் மாட்டார்கள்; முந்தவும்*
*மாட்டார்கள். 35ஆதமுடைய மக்களே! உங்களிலிருந்தே*
*உங்களிடம் தூதர்கள் வந்து என்னுடைய வசனங்களை*
*உங்களுக்கு எடுத்துரைக்கும்போது யார் (இறைவனுக்கு)*
*அஞ்சி(த் தம்மை)ச் சீர்திருத்திக் கொள்கின்றனரோ*
*அவர்களுக்கு எந்த அச்சமுமில்லை, அவர்கள் துயரப்படவும்*
*மாட்டார்கள். 36என்னுடைய வசனங்களைப் பொய்மைப்படுத்தி*
*அவற்றைப் புறக்கணித்துச் செருக்குக்கொள்பவர்கள்*
*நரகவாசிகளே. அதில் அவர்கள் என்றென்றும் கிடப்பார்கள்.*
*37அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனைபவனைவிட*
*அல்லது அவனது வசனங்களைப் பொய்மைப்படுத்துபவனை*
*விடப் பெரும் முறைகேடன் யார்? அ(த்தகைய)வர்களுக்கு*
*(இவ்வுலகில்) விதிக்கப்பட்ட பங்கு அவர்களுக்குக்*
*கிடைத்துக்கொண்டிருக்கும். இறுதியில் எமது வானவர்கள்*
*அவர்களின் உயிரைக் கைப்பற்ற வரும்போது, (அவர்களிடம்)*
*“அல்லாஹ்வை அல்லாமல் நீங்கள் (யாரை) அழைத்து*
*(வழிபட்டு)க் கொண்டிருந்தீர்களோ அவர்கள் எங்கே?” என்று*

*கேட்பர். அதற்கு அவர்கள், "எங்களிடமிருந்து அவர்கள் மறைந்து விட்டனர்" என்பர். உறுதியாக தாங்கள் மறுப்பாளர்களாகவே இருந்ததாக அவர்கள் தமக்கு எதிராகத்தாமே சாட்சி கூறுவர்.*

*[38](மறுமைநாளில் அல்லாஹ் அவர்களை நோக்கி) "உங்களுக்கு முன்னர் (வாழ்ந்து) சென்றுவிட்ட ஜின், மனித சமூகங்களின் (தீவினையாளர்) கூட்டத்துடன் நீங்களும் நரகத்தில் நுழைந்துவிடுங்கள்" என்று கூறுவான். ஒவ்வொரு கூட்டத்தாரும் (நரகத்தில்) நுழையும்போது (அங்குள்ள) தங்கள் சகோதரக் கூட்டத்தாரைச் சபிப்பர். இறுதியில் (அங்கு) அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்துவிடும்போது அவர்களில் பிந்தியவர்கள் தங்களுக்கு முந்தியவர்களைப்பற்றி, "எங்கள் இறைவனே! இவர்கள்தாம் எங்களை வழிகெடுத்தவர்கள்; எனவே நீ இவர்களுக்கு இரு மடங்கு நரகவேதனையை அளிப்பாயாக!" என்று கூறுவர். அதற்கு அவன், "(உங்கள்) அனைவருக்குமே இரு மடங்கு(வேதனை)தான். எனினும் நீங்கள் (அதனை) அறியமாட்டீர்கள்" என்று கூறுவான்.*
*[39]அவர்களில் முந்தியவர்கள் தங்களுக்குப் பிந்தியவர்களிடம் "உங்களுக்கு எங்களைவிட எந்தச் சிறப்பும் இல்லை. எனவே நீங்கள் தேடிக்கொண்டிருந்த(தீய)வற்றின் விளைவாக வேதனையைச் சுவையுங்கள்" என்று கூறுவர்.*
*[40]உறுதியாக யாரெல்லாம் எமது சான்றுகளைப் பொய்மைப்படுத்தி அவற்றைப் புறக்கணித்துச் செருக்குக் கொண்டார்களோ அவர்களுக்கு வானத்தின் கதவுகள் திறக்கப்படமாட்டா. ஊசித் துளையில் ஒட்டகம் நுழையும்வரை அவர்கள் சொர்க்கத்தில் நுழையமாட்டார்கள். இவ்வாறுதான் நாம் குற்றவாளிகளுக்குத் தண்டனை வழங்குகிறோம்.*
*[41]அவர்களுக்கு நெருப்பாலான விரிப்பும் போர்வையும் உண்டு. இவ்வாறே நாம் தீவினையாளர்களுக்குத் தண்டனை வழங்குகிறோம்.*
*[42]ஆனால் நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிவோர் எவர்மீதும் அவர் சக்திக்கு அதிகமாக(ப் பொறுப்பை) நாம் சுமத்தமாட்டோம். அ(த்தகைய)வர்கள்தாம் சொர்க்கவாசிகள். அதில் அவர்கள் நிலையாக தங்கிவிடுவர்.*
*[43]அவர்களின் உள்ளங்களில் இருந்த காழ்ப்புணர்வை நாம் நீக்கி விடுவோம். அவர்களுக்கு அருகில்*

ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். “எங்களுக்கு இதன்பால்
வழிகாட்டிய அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும். அல்லாஹ்
எங்களுக்கு நேர்வழிகாட்டியிராவிட்டால் நாங்கள் நேர்வழி
அடைந்திருக்கவே மாட்டோம். எங்கள் இறைவனின் தூதர்கள்
சத்தியத்தையே கொண்டு வந்தார்கள்” என்று அவர்கள் கூறுவர்.
(அப்போது) ‘நீங்கள் புரிந்த நற்செயல்களுக்குக் கூலியாக
உங்களுக்கு உரிமையாக்கப்பட்ட சொர்க்கம் இதுதான்’ என்று
அவர்களுக்குக் கூறப்படும். [44]சொர்க்கவாசிகள் நரகவாசிகளை
அழைத்து, “எங்கள் இறைவன் எங்களுக்கு அளித்த வாக்குறுதி
உண்மையானதே என்பதை நாங்கள் கண்டுகொண்டோம்.
நீங்களும் உங்கள் இறைவனின் வாக்குறுதியை உண்மையானதே
எனக் கண்டுகொண்டீர்களா?” என்று கேட்பர். அதற்கு அவர்கள்
‘ஆம்’ என்பார்கள். அவர்களிடையே அறிவிப்பாளர் ஒருவர்
“தீவினையாளர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்”
என்று அறிவிப்பார். [45]அவர்கள் இறைவழியிலிருந்து
மக்களைத்தடுத்து அதனைக் கோணலாக்க விரும்பியவர்கள்.
அவர்கள் மறுமையையும் மறுத்தவர்கள்.

[46](சொர்க்கவாசிகள், நரகவாசிகள் ஆகிய) அவ்விரு
பிரிவினரிடையே ஒரு தடுப்பு இருக்கும். அதன் சிகரங்களின்
மீது சில மனிதர்கள் இருப்பார்கள். அவர்கள் (சொர்க்க,
நரகவாசிகளில்) ஒவ்வொருவரையும் அவரவர் அடையாளங்களைக்
கொண்டு அறிந்துகொள்வார்கள். அவர்கள் சொர்க்கவாசிகளை
அழைத்து “உங்கள்மீது சாந்தி உண்டாகட்டும்” என்று
கூறுவர். அவர்கள் இன்னும் சொர்க்கத்தில் நுழைந்திருக்க
மாட்டார்கள். ஆயினும் (அதில் நுழைந்துவிடும்) ஆவலுடன்
இருப்பர். [47]அவர்களின் பார்வை (நரகவாசிகளின் பக்கம்)
திருப்பப்படும்போது இறைவனிடம் “எங்கள் இறைவா! இந்தத்
தீவினைபுரிந்த மக்களுடன் எங்களைச் சேர்த்து விடாதே” என்று
(இறைஞ்சிக்) கூறுவர். [48]சிகரங்களில் இருப்பவர்கள் (நரகத்தில்
இருக்கும்) சில மனிதர்களை அவர்களின் அடையாளங்களினால்

*அறிந்துகொண்டு “உங்கள் ஆள்பலமும் நீங்கள் கொண்டிருந்த செருக்கும் உங்களுக்குப் பயனளிக்கவில்லையே” என்று கூறுவர்.*
*[49]மேலும் (சொர்க்கவாசிகளை அவர்களுக்குச் சுட்டிக்காட்டி) “இவர்களைப் பற்றித்தானே நீங்கள் இவர்களுக்கு அல்லாஹ் அருள் புரியவேமாட்டான் என்று சத்தியம் செய்து கூறிக் கொண்டிருந்தீர்கள்?” என்று கேட்பர், (பிறகு அல்லாஹ் சிகரங்களில் இருப்போரை நோக்கி) “நீங்கள் சொர்க்கத்தில் நுழைந்து விடுங்கள்; இனி உங்களுக்கு எந்த அச்சமும் இல்லை; நீங்கள் துயரப்படவும் மாட்டீர்கள்” என்றும் கூறுவான்.*
*[50]நரகவாசிகள் சொர்க்கவாசிகளை அழைத்து “எங்கள் மீது சிறிது தண்ணீராவது ஊற்றுங்கள் அல்லது அல்லாஹ் உங்களுக்கு வழங்கியவற்றிலிருந்து (சிறிதளவாவது கொடுங்கள்)” என்று கேட்பர். (அதற்கு) அவர்கள், “அல்லாஹ் அவ்விரண்டையும் மறுப்பாளர்களுக்குத் தடை செய்துவிட்டான்” என்று கூறுவர். [51](மறுப்பாளரான) அவர்கள் தங்கள் மார்க்கத்தை வேடிக்கையாகவும் விளையாட்டாகவும் ஆக்கிக் கொண்டனர். உலகவாழ்வு அவர்களை மயக்கி ஏமாற்றிவிட்டது. அவர்கள் இந்தநாளின் சந்திப்பை மறந்து எமது வசனங்களை மறுத்துக் கொண்டிருந்ததைப் போன்று நாமும் இன்று அவர்களை மறந்துவிடுவோம்.*

*[52]நாம் அவர்களிடம் உறுதியாக ஒரு வேதத்தைக் கொண்டுவந்தோம். அதனை ஞானத்தின் அடிப்படையில் தெளிவாக விளக்கியுள்ளோம். அது நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு வழிகாட்டியாகவும் நல்லருளாகவும் இருக்கிறது.*
*[53]இவ்வேதம் எச்சரிக்கின்ற இறுதி முடிவைத் தவிர (வேறு எதனையும்) அவர்கள் எதிர்பார்த்திருக்கின்றனரா? அம்முடிவு வெளிப்பட்டுவிடும் (தீர்ப்பு) நாளில் அதை முன்னரே மறந்திருந்தவர்கள் “உறுதியாக எங்கள் இறைவனின் தூதர்கள் உண்மையையே கொண்டு வந்தனர். இப்போது எங்களுக்காகப் பரிந்து பேசுவதற்கு யாரேனும் இருக்கின்றனரா? அல்லது*

*நாங்கள் (முன்னர்ச்) செய்து கொண்டிருந்ததற்கு மாறாக (நற்) செயல் செய்வதற்காகத் திருப்பி அனுப்பப்படமாட்டோமா?” என்று புலம்புவர். அவர்கள் தமக்குத்தாமே இழப்பை ஏற்படுத்திக்கொண்டனர். அவர்கள் (தங்கள் தெய்வங்கள் எனக்) கற்பனையாகக் கூறிக் கொண்டிருந்தவை யாவும் அவர்களிடமிருந்து மறைந்துவிடும்.*

*[54]உறுதியாக உங்கள் இறைவன் அல்லாஹ்தான்.
அவன்தான் வானங்களையும் பூமியையும் ஆறு நாட்(காலக்கட்டங்)களில் படைத்தான். பின்னர் அவன் இறையிருக்கையின் மேல் உயர்ந்துவிட்டான். அவன் இரவைக் கொண்டு பகலை மூடுகிறான்; (ஒன்று மற்றொன்றை) விரைந்து பின்தொடர்கிறது. அவன் சூரியனையும் சந்திரனையும் நட்சத்திரங்களையும் படைத்தான். அனைத்தும் அவனது கட்டளைக்குக்கட்டுப்பட்டே இருக்கின்றன. அறிந்துகொள்ளுங்கள்! படைத்தலும் கட்டளையிடுதலும் அவனுக்கே உரியவையாகும். அனைத்துலகங்களுக்கும் இறைவனாகிய அல்லாஹ் பெரும் பேறுடையவன்.
[55](ஆகவே, மனிதர்களே!) பணிவாகவும் தனித்திருந்தும் உங்கள் இறைவனிடம் இறைஞ்சுங்கள்; உறுதியாக அவன் வரம்புமீறுவோரை நேசிக்க மாட்டான்.
[56](மனிதர்களே!) உலகில் சீர்திருத்தம் ஏற்பட்டபின் அதில் குழப்பம் உண்டாக்காதீர்கள். (இறைத் தண்டனை குறித்த) அச்சத்தோடும் ஆசையோடும் அவனிடமே இறைஞ்சுங்கள். உறுதியாக அல்லாஹ்வின் அருள் நன்மைசெய்வோருக்கு மிக அருகிலேயே உள்ளது.
[57]அவன்தான் (மழை என்னும்) தன் அருளுக்கு முன்னர் நற்செய்தியாகக் (குளிர்ந்த) காற்றுகளை அனுப்புகிறான். அவை கனமான மேகங்களைச் சுமந்து செல்லும்போது நாம் அவற்றை வறண்டு கிடக்கும் நிலத்தை நோக்கி ஓட்டிச் செல்கிறோம். அங்கு மழையைப் பொழிவித்து அதன்மூலம் எல்லா(வகை)க் கனிகளையும் நாம் விளைவிக்கின்றோம். நாம் இறந்தவர்களை (மண்ணறைகளிலிருந்து) உயிர்ப்பிப்பது இவ்வாறே ஆகும். நீங்கள் படிப்பினை பெறக்கூடும் (என்பதனால் இதைக் கூறுகிறோம்.)*

*[58]வளமிக்க நிலம் தன் இறைவனின் கட்டளைப்படி நல்ல விளைச்சலைத் தருகிறது. வளம் குன்றிய நிலத்தின் விளைச்சல் குறைவாகத்தான் இருக்கும். இவ்வாறு நன்றி செலுத்தும் மக்களுக்கு எமது சான்றுகளைப் பல்வேறு கோணங்களில் நாம் தெளிவுபடுத்துகிறோம்.*

*[59]நாம் நோவாவை அவரது சமூகத்தினரிடம் (எமது தூதராக) அனுப்பினோம். அவர் "என் சமூகத்தோரே! அல்லாஹ்வையே வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. (இதற்கு எதிராக நீங்கள் நடந்து கொண்டால்) உங்களுக்கு வரக்கூடிய மாபெரும் நாளின் வேதனை குறித்து நான் அஞ்சுகிறேன்" என்று கூறினார். [60]அவரது சமூகத்தின் தலைவர்கள் "நாங்கள் உம்மைத் தெளிவான கெடுவழியில் இருப்பதாகக் கருதுகிறோம்" என்று கூறினர். [61](அப்போது) அவர், "என் சமூகத்தோரே! நான் எத்தகைய கெடுவழியிலும் இல்லை. மாறாக நான் அனைத்துலகங்களின் இறைவனால் அனுப்பப்பட்ட தூதர் ஆவேன். [62]உங்களுக்கு என் இறைவனின் செய்திகளையே எடுத்துரைக்கிறேன். உங்களுக்கு (நலம்விரும்பி) அறிவுறுத்துபவனாகவும் இருக்கிறேன். நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்விடமிருந்து நான் அறிகிறேன்" என்றார். [63]"உங்களை எச்சரிப்பதற்காகவும் நீங்கள் இறைவனுக்கு அஞ்சி நடந்துகொள்ள வேண்டும் என்பதற்காகவும் உங்களுக்கு அருள் காட்டப்படுவதற்காகவும் உங்களிலுள்ள ஒருவரின் மூலமே இறைவனின் அறிவுரை வருவது குறித்து நீங்கள் வியப்படைகிறீர்களா?" என்று கேட்டார். [64]ஆயினும் அவர்கள் அவரை பொய்மைப்படுத்தி விட்டனர். எனவே நாம் அவரையும் அவருடன் கப்பலிலிருந்த அவரைச் சார்ந்தோரையும் காப்பாற்றினோம். எமது சான்றுகளைப் பொய்மைப்படுத்தியோரை(ப் பெருவெள்ளத்தில்) மூழ்கடித்து விட்டோம். உறுதியாக அவர்கள் குருட்டுச் சமூகத்தினராக இருந்தனர்.*

65‘ஆத்’ சமூகத்தினரிடம் அவர்களின் சகோதரர் ஹூதை (எமது
தூதராக) நாம் அனுப்பினோம். அவர், “என் சமூகத்தோரே!
அல்லாஹ்வையே வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு
இறைவன் இல்லை. நீங்கள் இறையச்சம் கொள்ளமாட்டீர்களா?”
என்று கேட்டார். 66அவருடைய சமூகத்தினரில் (இறைவனை)
மறுத்த தலைவர்கள், “உம்மை நாங்கள் மடமையில் இருப்பவராகக்
காண்கிறோம்; மேலும் உம்மைப் பொய்யர்களில் ஒருவர் என்றும்
கருதுகிறோம்” என்றனர். 67(அதற்கு) அவர், “என் சமூகத்தோரே!
மடமை என்னிடமில்லை. மாறாக நான் அனைத்துலகங்களின்
இறைவனால் அனுப்பப்பட்ட தூதர் ஆவேன்” என்றார்.
68“உங்களுக்கு என் இறைவனின் செய்திகளையே எடுத்துரைக்கிறேன்,
நான் உங்களுக்கு (நலம்விரும்பி) அறிவுறுத்துபவனாகவும்
நம்பிக்கைக்குரியவனாகவும் இருக்கிறேன்” (என்றார்). 69உங்களை
எச்சரிப்பதற்காக உங்கள் இறைவனின் அறிவுரை உங்களில் ஒருவர்
மூலமாகவே வருவது குறித்து நீங்கள் வியப்படைகிறீர்களா?
நோவாவின் சமூகத்தாருக்குப் பின்னர் அவன் உங்களை
அவர்களின் வழித்தோன்றல்களாகப் பரவச் செய்ததையும்,
படைப்பில் உங்களை வலுவானவர்களாக ஆக்கியதையும்
எண்ணிப் பாருங்கள். அல்லாஹ்வின் அருட்கொடைகளையும்
எண்ணிப் பாருங்கள்! இதன்மூலம் நீங்கள் வெற்றியடையலாம்”
என்றும் கூறினார். 70(அதற்கு) அவர்கள், “நாங்கள் அல்லாஹ்வை
மட்டும் வணங்க வேண்டும், எங்கள் முன்னோர்கள் வணங்கி
வந்தவற்றை விட்டுவிட வேண்டும் என்ப(தைச் சொல்வ)தற்காகத்தான்
நீர் எங்களிடம் வந்தீரா? எனவே நீர் உண்மையாளராக
இருந்தால் எதைக்கொண்டு எங்களை எச்சரிக்கிறீரோ அதனை
எங்களிடம் கொண்டு வாரும்” என்றனர். 71(அதற்கு) அவர்,
“உங்கள்மீது உங்கள் இறைவனின் வேதனையும் சினமும்
உறுதியாகிவிட்டன. நீங்களும் உங்கள் முன்னோர்களும் சூட்டிக்
கொண்ட (உங்கள் கற்பனைத் தெய்வங்களின்) பெயர்கள்
குறித்தா நீங்கள் என்னிடம் வாதம் புரிகிறீர்கள்? இறைவன்
அதற்கு எந்தச் சான்றையும் இறக்கிவைக்கவில்லையே! எனவே

நீங்கள் (இறைவனின் தண்டனையை) எதிர்பாருங்கள்; நானும் உங்களுடன் எதிர்பார்க்கிறேன்" என்று கூறினார்.
[72]இறுதியில் நாம் எமது அருளால் அவரையும் அவருடன் இருந்தவர்களையும் காப்பாற்றினோம். எமது சான்றுகளைப் பொய்மைப்படுத்தி நம்பிக்கை கொள்ளாமல் இருந்தவர்களை நாம் அடியோடு அழித்து விட்டோம்.

[73]'ஸமூத்' சமூகத்தினரிடம் அவர்களின் சகோதரர் 'சாலிஹை' (எமது தூதராக) நாம் அனுப்பினோம். அவர், "என் சமூகத்தோரே! அல்லாஹ்வையே வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு ஒரு தெளிவான சான்று வந்திருக்கிறது. இது உங்களுக்குச் சான்றாக அமைந்த அல்லாஹ்வின் பெண் ஒட்டகமாகும். எனவே இதை அல்லாஹ்வின் நிலத்தில் மேய விடுங்கள். இதற்கு எந்தத் தீங்கும் இழைக்காதீர்கள். அவ்வாறு செய்தால் துன்புறுத்தும் வேதனை உங்களைப் பற்றிக்கொள்ளும்" என்று கூறினார்.
[74]"ஆத் சமூகத்தினருக்குப் பின் இறைவன் உங்களை அடுத்த வழித்தோன்றல்களாக்கியதையும் (அவர்கள் வாழ்ந்த) பூமியில் உங்களை வாழச் செய்திருப்பதையும் எண்ணிப்பாருங்கள்! நீங்கள் அதன் சமவெளிகளில் மாளிகைகளைக் கட்டுகிறீர்கள்; மலைகளைக் குடைந்து வீடுகளை அமைக்கிறீர்கள். எனவே அல்லாஹ்வின் அருட்கொடைகளை நினைவுகூருங்கள்! உலகில் குழப்பம் செய்துகொண்டு திரியாதீர்கள்" (என்றும் கூறினார்)

[75]அவரது சமூகத்தினரில் செருக்குக் கொண்டிருந்த தலைவர்கள், வலுவற்றவர்கள் எனத் தாம் கருதிய (இறை) நம்பிக்கையாளர்களிடம், "சாலிஹ் தன்னுடைய இறைவனால் அனுப்பப்பட்ட தூதர் என்று நீங்கள் நம்புகிறீர்களா?" என்று கேட்டனர். அதற்கு அவர்கள், "உறுதியாக அவர் கொண்டுவந்துள்ள தூதை நாங்கள் நம்புகிறோம்" என்றனர்.
[76]அதற்கு அந்தச் செருக்குக்கொண்டோர் "நீங்கள் நம்புவதை நாங்கள் மறுக்கிறோம்" என்றனர்.
[77]பின்னர் அவர்கள் அந்தப் பெண் ஒட்டகத்தை அறுத்துத் தம் இறைவனின் கட்டளையை

*மீறினர். “சாலிஹே! நீர் (உண்மையாகவே இறைத்)தூதராக இருந்தால் நீர் எச்சரிப்பதை எங்களிடம் கொண்டு வாரும்” என்றும் கூறினர். [78]எனவே அவர்களை நிலநடுக்கம் பிடித்துக் கொண்டது. அவர்கள் தங்கள் வீடுகளில் முகங்குப்புற வீழ்ந்து (மாண்டு) கிடந்தனர். [79](அப்போது சாலிஹ்) “என் சமூகத்தோரே! நான் உங்களுக்கு என் இறைவனின் செய்தியை எடுத்துரைத்து உங்களுக்கு (நலம் விரும்பி) அறிவுறுத்துபவனாகவும் இருந்தேன்; ஆனால் நீங்களோ நல்லறிவு புகட்டுவோரை நேசிப்பவர்களாக இல்லை” என்று கூறிவிட்டு (மாண்டு கிடந்த) அவர்களை விட்டு விலகிச் சென்றார்.*

*[80]நாம் ‘லோத்தை’ (அவருடைய மக்களுக்கு எமது தூதராக) அனுப்பினோம். அவர் தம் சமூகத்தினரிடம் “உங்களுக்கு முன் உலகில் யாருமே செய்திராத மானக்கேடான செயலையா நீங்கள் செய்கிறீர்கள்? [81]நீங்கள் பெண்களை விடுத்து ஆண்களிடம் உங்கள் காமத்தைத் தணித்துக் கொள்ளச் செல்கிறீர்கள். உண்மையில் நீங்கள் வரம்புமீறும் மக்களாக இருக்கிறீர்கள்” என்று கூறினார். [82](அதற்கு) அவர்கள் (தங்கள் இனத்தாரிடம்) “இவர்களை (லோத்தையும் அவரைச் சார்ந்தோரையும்) ஊரிலிருந்து வெளியேற்றுங்கள். இவர்கள்தாம் மிகத் தூயவர்களாம்” என (ஏளனமாகக்) கூறினர். இதைத் தவிர அவருடைய சமூகத்தாரின் பதில் வேறு எதுவும் இல்லை. [83]எனவே நாம் லோத்தையும் அவரின் மனைவி நீங்கலான குடும்பத்தையும் காப்பாற்றினோம். அவள் பின்தங்கியவர்களோடு தங்கிவிட்டாள். [84]நாம் அவர்கள் மீது (கல்)மழையைப் பொழிவித்தோம். குற்றவாளிகளின் முடிவு என்னவாயிற்று என்பதை (நபியே!) நீர் கவனிப்பீராக!*

*[85]மத்யன் (நகர மக்கள்)பால் நாம் அவர்களின் சகோதரர் ஷுஐபை (த்தூதராக) அனுப்பினோம். அவர் “என் சமூகத்தோரே! அல்லாஹ்வையே வணங்குங்கள், அவனையன்றி உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்குத் தெளிவான சான்று வந்துவிட்டது. எனவே அளவையும்*

*எடையையும் (சரியாக அளந்தும் நிறுத்தும்) நிறைவாக்குங்கள். மக்களுக்கு அவர்களின் பொருள்களைக் குறைத்து விடாதீர்கள்; உலகில் சீர்திருத்தம் ஏற்பட்டபிறகு குழப்பம் உண்டாக்காதீர்கள்; நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருப்பின் இதுவே உங்களுக்கு நன்மை பயப்பதாகும்" என்று கூறினார்.*

*86(மேலும்) நீங்கள் ஒவ்வொரு பாதையிலும் அமர்ந்துகொண்டு மக்களை அச்சுறுத்தாதீர்கள்; அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டவர்களை அவனது வழியில் செல்லத் தடை செய்யாதீர்கள்; அதைக் கோணலாகக் காட்ட முயலாதீர்கள். நீங்கள் (எண்ணிக்கையில்) மிகவும் குறைவானவர்களாக இருந்தீர்கள். அவன்தான் உங்கள் எண்ணிக்கையை மிகுதிப்படுத்தினான் என்பதை எண்ணிப் பாருங்கள். குழப்பம் செய்தோரின் முடிவு என்னவாயிற்று என்பதையும் பாருங்கள்" (என்றார்).*

*87"நான் கொண்டுவந்துள்ள தூதின் மீது உங்களில் சிலர் நம்பிக்கை கொண்டும் சிலர் நம்பிக்கை கொள்ளாமலும் இருந்தால் அல்லாஹ் நமக்கிடையே தீர்ப்பளிக்கும்வரை பொறுமையுடன் காத்திருங்கள். அவன் தீர்ப்பளிப்பதில் மிகச் சிறந்தவன்" (என்றும் கூறினார்).*

*88அவரது சமூகத்தில் செருக்குக்கொண்ட தலைவர்கள் "ஷுஐபே! உம்மையும் உம்முடன் நம்பிக்கை கொண்டோரையும் எங்கள் ஊரிலிருந்து வெளியேற்றிவிடுவோம் அல்லது நீர் எங்கள் மார்க்கத்திற்குத் திரும்பிவிட வேண்டும்" என்றனர். அதற்கு அவர், "நாங்கள் (அதை) வெறுத்தாலுமா?" (என்று கேட்டார்.)*

*89(மேலும்) "அல்லாஹ் உங்கள் வழிமுறையிலிருந்து எங்களைக் காப்பாற்றிய பின்னர் அதற்குத் திரும்பினால் நாங்கள் அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனைந்தவர்கள் ஆகிவிடுவோம். எங்கள் இறைவனாகிய அல்லாஹ் அவ்வாறு விரும்பினாலன்றி நாங்கள் அதற்குத் திரும்பிவரவே முடியாது. எங்கள் இறைவன் தன் ஞானத்தால் அனைத்தையும் சூழ்ந்துள்ளான். நாங்கள் எங்கள் இறைவனையே சார்ந்துள்ளோம். எங்கள் இறைவா! எங்களுக்கும் எங்கள் சமூகத்துக்கும் இடையே சத்தியத்தைப்*

புலப்படுத்து(த் தீர்ப்பு வழங்கு)வாயாக! நீயே மிகச்சிறந்த முறையில்
தீர்ப்பளிப்பவன்” என்று கூறினார். 90அவருடைய கூட்டத்தில்
மறுப்பாளர்களான தலைவர்கள், (தம் சமூகத்தினரிடம்) “நீங்கள்
ஷுஐபைப் பின்பற்றினால் இழப்பிற்குள்ளாவீர்கள்” என்றனர்.
91எனவே அவர்களை நிலநடுக்கம் தாக்கியது. அவர்கள் தம்
வீடுகளில் முகங்குப்புற வீழ்ந்து (மாண்டு) கிடந்தனர். 92ஷுஐபைப்
பொய்யரெனக் கூறியவர்கள் (அதற்கு முன் எப்போதும்) அங்கு
வாழ்ந்திராதவர்களைப் போல ஆகி (மறைந்து) விட்டனர்.
ஷுஐபைப் பொய்யரெனக் கூறியவர்கள்தாம் இழப்பிற்குள்ளாகி
விட்டனர். 93அப்போது ஷுஐப், “என் சமூகத்தோரே! நான்
உங்களுக்கு என் இறைவனின் செய்தியை எடுத்துரைத்து
உங்களுக்கு (நலம் விரும்பி) அறிவுறுத்துபவனாகவும் இருந்தேன்.
இனி மறுப்பாளர்களுக்காக நான் எவ்வாறு கவலைப்படுவேன்?”
என்று கூறிவிட்டு முகம் திருப்பிச் சென்றுவிட்டார்.

94நாம் எந்த ஊருக்குத் தூதரை அனுப்பினாலும் அவ்வூர் மக்கள்
பணிய வேண்டும் என்பதற்காகவே அவர்களை (வறுமை, பிணி)த்
துன்பங்களுக்கு ஆளாக்கினோம். 95பின்னர் நாம் அத்தீங்குக்குப்
பதிலாக நன்மையை வழங்கினோம். (அதனால்) அவர்கள் பல்கிப்
பெருகினர். (அப்போது செருக்குற்ற) அவர்கள் (இத்தகைய)
துன்பமும் இன்பமும் எங்கள் முன்னோர்களுக்கும் ஏற்படத்தான்
செய்தன” என்று (அலட்சியமாகக்) கூறினர். எனவே அவர்கள்
உணராத வகையில் திடீரென அவர்களைப் பற்றிக்கொண்டோம்.
96அவ்வூரார் நம்பிக்கைகொண்டு இறையச்சத்துடன் நடந்து
கொண்டிருந்தால் நாம் அவர்களுக்காக வானம், பூமி
ஆகியவற்றின் அருட்கொடை(வாயில்)களைத் திறந்துவிட்டிருப்போம்
ஆனால் அவர்கள் (தூதர்களைப்) பொய்மைப்படுத்தினர்.
ஆகவே அவர்கள் ஈட்டிக்கொண்ட(பாவத்)தின் காரணமாக
நாம் அவர்களைப் பற்றிக்கொண்டோம். 97அவ்வூர்களின்
மக்கள் உறங்கிக் கொண்டிருக்கும்போது இரவில் எமது
வேதனை அவர்களை வந்தடையாது என அச்சமற்று
இருக்கின்றனரா? 98அல்லது அவ்வூர்களின் மக்கள் விளையாடிக்

*கொண்டிருக்கும்போது பகலில் எமது வேதனை அவர்களை வந்தடையாது என அச்சமற்றிருக்கிறார்களா?*
*[99]அவர்கள் அல்லாஹ்வின் திட்டங்கள்பற்றி அச்சமற்று இருக்கின்றனரா? (முற்றிலும்) இழப்பிற்குரியவர்களைத் தவிர வேறு எவரும் அல்லாஹ்வின் திட்டங்களைக் குறித்து அஞ்சாமல் இருக்கமாட்டார்கள்.*

*[100]உலகில் முன்பிருந்தவர்களுக்குப் பின் வழித்தோன்றல்களாக வந்த இவர்கள், நாம் விரும்பினால் இவர்களின் பாவங்கள் காரணமாக இவர்களைத் தண்டித்து விடுவோம் என்ற படிப்பினையைப் பெறவில்லையா? நாம் இவர்களின் உள்ளங்களின்மீது முத்திரையிட்டு விட்டோம். எனவே இவர்கள் (அறிவுரைகளைப்) புரிந்துகொள்ள மாட்டார்கள்.*
*[101](நபியே!) இந்த ஊர்களின் வரலாற்றை நாம் உமக்கு எடுத்துரைக்கிறோம். அவர்களிடம் எமது தூதர்கள் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்திருந்தனர். ஆயினும் அவர்கள் முன்பே (அவற்றைப்) பொய்யென மறுத்துக் கொண்டிருந்ததனால் அவற்றை ஏற்றுக் கொள்பவர்களாக இல்லை. இவ்வாறுதான் அல்லாஹ் மறுப்பாளரின் உள்ளங்களின் மீது முத்திரையிட்டு விடுகிறான்.*
*[102]அவர்களில் பெரும்பாலோரிடம் எந்த வாக்குறுதி(யை)யும் (நிறைவேற்றும் பண்பு) இருப்பதாக நாம் காணவில்லை. அவர்களில் பெரும்பாலோர் கீழ்ப்படிய மறுப்பவர்கள் எனவும் கண்டோம்.*

*[103](முந்தைய தூதர்களான) அவர்களுக்குப் பின் நாம் மோசேயை ஃபாரோவிடமும் அவனது சமூகத் தலைவர்களிடமும் எமது சான்றுகளுடன் (எமது தூதராக) அனுப்பி வைத்தோம். ஆனால் அவர்கள் அவற்றை(ப் பிடிவாதமாக) ஏற்க மறுத்தனர். குழப்பம் செய்தோரின் முடிவு என்னவாயிற்று என்பதை (நபியே! நீர்) கவனிப்பீராக!*
*[104]மோசே, “ஃபாரோவே! நான் அனைத்துலகங்களின் இறைவனால் அனுப்பப்பட்டுள்ள தூதர் ஆவேன்” என்றார்.*
*[105]அல்லாஹ்வைக் குறித்து உண்மையைத் தவிர*

(வேறு எதனையும்) கூறாதிருப்பதே எனக்கு ஏற்றதாகும். நான்
உங்கள் இறைவனிடமிருந்து தெளிவான சான்றுகளை உறுதியாக
உங்களிடம் கொண்டு வந்துள்ளேன். எனவே நீ இஸ்ராயீலின்
மக்களை என்னுடன் அனுப்பி விடு” (என்றும் கூறினார்.)
106(அதற்குப்) ஃபாரோ, “நீர் சான்றுடன் வந்திருந்தால், நீர்
உண்மையானவராக இருந்தால் அதனை (இப்போது) கொண்டு
வாரும்” என்றான். 107அப்போது (அவர்,) தம் கைத்தடியை
எறிந்தார். உடனே அது உண்மையிலேயே பாம்பாகிவிட்டது.
108மேலும் தம் கையை அவர் (சட்டைப் பையிலிருந்து) வெளியே
எடுத்தார். அது பார்ப்பபோருக்கு(ப் பளிச்சிடும்) வெண்மையாக
இருந்தது. 109இதனைக் கண்ட ஃபாரோவின் சமூகத் தலைவர்கள்,
“இவர் உறுதியாகத் திறமையான சூனியக்காரர்; 110இவர் உங்களை
உங்கள் பூமியிலிருந்து வெளியேற்றிவிட விரும்புகிறார்” என்றனர்.
அதற்கு “உங்கள் ஆலோசனை என்ன?” என்று ஃபாரோ
கேட்டான். 111அவர்கள், “மோசேவுக்கும் அவரது சகோதரருக்கும்
தவணை அளித்துவிட்டுப் பல்வேறு நகரங்களுக்கு ஆட்களை
அனுப்பி வையுங்கள். 112அவர்கள் உங்களிடம் திறமையான
சூனியக்காரர்கள் அனைவரையும் அழைத்து வருவர்” என்று
கூறினர்.

113சூனியக்காரர்கள் ஃபாரோவிடம் வந்து “நாங்கள்
வென்றுவிட்டால் எங்களுக்கு ஏதேனும் பரிசு உண்டா?” என்று
கேட்டனர். 114(அதற்கு) அவன் “ஆம், உறுதியாக நீங்கள் எனக்கு
நெருக்கமானவர்களாக ஆகிவிடுவீர்கள்” என்றான். 115(அப்போது)
அவர்கள் மோசேயை நோக்கி, “மோசே! (உமது கைத்தடியை)
முதலில் நீர் எறிகிறீரா அல்லது நாங்கள் எறியட்டுமா?” என்று
கேட்டனர். 116“நீங்களே (முதலில்) எறியுங்கள்” என்று அவர்
கூறினார். அவர்கள் (தம் கைத்தடிகளையும் கயிறுகளையும்)
எறிந்தபோது மக்களின் கண்களை மயக்கித் திடுக்கிடச்
செய்துவிட்டனர். மிகப் பெரும் சூனியத்தை அவர்கள்
செய்துகாட்டினர். 117(அப்போது) நாம் “உமது கைத்தடியை

*எறிவீராக!" என்று மோசேவுக்குக் கட்டளையிட்டோம். (அவர்
எறிந்த) உடனே அது (மிகப் பெரிய பாம்பாக மாறி) அவர்கள்
(சூனியத்தால்) உருவாக்கிய அனைத்தையும் விழுங்கிவிட்டது.
118அவர்கள் செய்துகொண்டிருந்த அனைத்தும் வீணாகிச்
சத்தியம் வெளிப்பட்டுவிட்டது. 119அங்கேயே அவர்கள் தோற்று
இழிவடைந்து விட்டனர். 120சூனியக்காரர்கள் தலைபணிந்து
121"அனைத்துலகங்களின் இறைவன் மீது நாங்கள் நம்பிக்கை
கொண்டோம் என்றனர். 122"(அவன்தான்) மோசே, ஆரோன்
ஆகியோர்களின் இறைவன் ஆவான்" (என்றும் கூறினர்.)*

*123அப்போது ஃபாரோ (சூனியக்காரர்களை நோக்கி), "நான்
உங்களுக்கு அனுமதியளிப்பதற்கு முன்பே நீங்கள் மோசேயின்மீது
நம்பிக்கைகொண்டு விட்டீர்களா? இது இந்நகரவாசிகளை
இங்கிருந்து வெளியேற்றுவதற்காக (மோசேயுடன் கலந்து)
நீங்கள் செய்த சூழ்ச்சியாகும். (இதன் பயனை) நீங்கள் மிக
விரைவில் அறிந்துகொள்வீர்கள்" என்றான். 124"நான் உங்கள்
மாறுகை, மாறுகால்களை வெட்டி விடுவேன். பின்னர் உங்கள்
அனைவரையும் சிலுவையில் அறைவேன்" (என்றும் கூறினான்)
125அதற்கு அவர்கள், "உறுதியாக எங்கள் இறைவனிடமே நாங்கள்
திரும்பிச் செல்பவர்கள் ஆவோம்" (என்றனர்). 126"எங்கள்
இறைவனின் சான்றுகள் எங்களிடம் வந்தபோது நாங்கள்
அவற்றின் மீது நம்பிக்கை கொண்டோம் என்பதற்காக நீ
எங்களைத் தண்டிக்க விரும்புகிறாயா?" என்று கூறினர். (பின்
அல்லாஹ்விடம்) "எங்கள் இறைவா! எங்கள் மீது பொறுமையைப்
பொழிவாயாக! உனக்கு முற்றிலும் கீழ்ப்படிந்தவர்களாக
எங்களை இறக்கச் செய்வாயாக!" (என்று அவர்கள் இறைஞ்சினர்.)
127ஃபாரோவின் சமூகத் தலைவர்கள் அவனிடம் "மோசேயும்
அவரின் சமூகத்தினரும் நாட்டில் குழப்பம் விளைவிக்கவும்
உங்களையும் உங்கள் தெய்வங்களையும் புறக்கணிக்கவும் நீங்கள்
விட்டுவிடுவீர்களா?" என்று கேட்டனர். அதற்குப் ஃபாரோ, "நாம்
அவர்களுடைய ஆண் மக்களைக் கொன்றுவிட்டு அவர்களுடைய*

*பெண் மக்களை உயிருடன் விட்டுவிடுவோம். நாம் அவர்களின் மீது முழுமையாக ஆதிக்கம் செலுத்துவோராக உள்ளோம்" என்று கூறினான்.*
*[128]மோசே தம் சமூகத்தினரிடம், "அல்லாஹ்விடம் உதவி தேடுங்கள்; பொறுமையை மேற்கொள்ளுங்கள்; பூமி அல்லாஹ்விற்கே உரியது. தன் அடியார்களில் தான் விரும்பியோருக்கு அதனை அவன் உரிமையாக்குகிறான். இறுதி வெற்றி இறையச்சமுடையோருக்கே!" என்று கூறினார்.*
*[129](அதற்கு அவர்கள்)"நீர் வருவதற்கு முன்பும் நாங்கள் துன்புறுத்தப்பட்டோம். நீர் வந்த பின்பும் (துன்புறுத்தப்படுகிறோம்)" என்றனர். அப்போது மோசே, "உங்கள் இறைவன் விரைவில் உங்கள் எதிரியை அழித்துவிட்டு அவர்களுக்குப் பதிலாக உங்களை இந்தப் பூமியின் பின்தோன்றல்களாக ஆக்கிவிடக் கூடும். (அப்போது) நீங்கள் எவ்வாறு செயல்படுகிறீர்கள் என்பதை அவன் பார்ப்பான்" என்று கூறினார்.*

*[130]ஃபாரோவைச் சார்ந்தவர்களை அவர்கள் படிப்பினை பெற வேண்டும் என்பதற்காக(ப் பல்லாண்டு) பஞ்சத்தினாலும் விளைச்சல் பற்றாக்குறையாலும் நாம் தண்டித்தோம்.*
*[131]அவர்களுக்கு ஏதேனும் நன்மை வந்தபோது "இது எங்களுக்கு உரியதுதான்" என்று கூறினர். ஆனால் அவர்களுக்கு ஏதேனும் துன்பம் வந்து விட்டால் அதனை மோசே மற்றும் அவரைச் சார்ந்தவர்களின் தீச்சகுனமாகக் கருதினர். அறிந்துகொள்ளுங்கள்! (உண்மையில்) அவர்களின் தீச்சகுனம் அல்லாஹ்விடமிருந்து வந்ததே ஆகும். ஆனால் அவர்களில் பெரும்பாலோர் (இதனை) அறிந்துகொள்வதில்லை.*
*[132]அவர்கள் மோசேயிடம் "நீர் எங்களை வசப்படுத்த என்ன (அற்புதச்) சான்றுகளைக் கொண்டு வந்தாலும் நாங்கள் உம்மை நம்பப்போவதில்லை" என்று கூறினர்.*
*[133]நாம் அவர்களின் மீது (கனமழையுடன் கூடிய) புயல்காற்று, வெட்டுக்கிளி, செடிப் பேன், தவளைகள், இரத்தம் ஆகியவற்றை(ஒன்றன்பின் ஒன்றாக எச்சரிக்கை)ச் சான்றுகளாக அனுப்பினோம். ஆயினும் அவர்கள் செருக்குக்கொண்டனர்,*

(மேலும் அவர்கள்) குற்றவாளிகளாகவே இருந்தனர்.
134தங்களுக்கு (இத்தகைய) வேதனை ஏற்பட்டபோதெல்லாம்
அவர்கள், “மோசே! உம் இறைவன் உமக்களித்த வாக்குறுதிப்படி
எங்களுக்காக அவனிடம் இறைஞ்சுவீராக! நீர் இந்த வேதனையை
எங்களிடமிருந்து நீக்கிவிட்டால் உறுதியாக நாங்கள் உம்மீது
நம்பிக்கைகொண்டு இஸ்ராயீலின் மக்களையும் உம்முடன்
அனுப்பி வைப்போம்” என்று கூறினர். 135(அவர்கள் தங்கள்
வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காக) ஒரு காலக்கெடு விதித்து
அவர்களிடமிருந்து தண்டனையை நீக்கும் ஒவ்வொரு முறையும்
(கெடு வந்ததும்) அவர்கள் (தங்கள் வாக்குறுதியை) மீறினர்.

136அவர்கள் எமது சான்றுகளைப் பொய்மைப்படுத்தி
அலட்சியமாக இருந்ததனால் நாம் அவர்களைத் தண்டித்துக்
கடலில் மூழ்கடித்து விட்டோம். 137(அவர்களால்)
வலுவற்றவர்கள் என்று கருதப்பட்டிருந்த(இஸ்ராயீல்
சமூகத்த)வர்களை நாம் பேரருள் செய்திருந்த பூமியின் கிழக்கிற்கும்
மேற்கிற்கும் உரிமையாளர்களாக்கினோம். இஸ்ராயீலின் மக்கள்
பொறுமையாக இருந்ததனால் அவர்களுக்கு உம் இறைவன்
அளித்த அழகிய வாக்குறுதி நிறைவேறிவிட்டது. ஃபாரோவும்
அவனது சமூகத்தினரும் உருவாக்கியவற்றையும் அவர்கள்
உயர்த்தி (எழுப்பி) இருந்த(மாட மாளிகை போன்ற)வற்றையும்
நாம் அழித்து விட்டோம்.

138நாம் இஸ்ராயீலின் மக்களைக் கடலைக் கடக்கச்
செய்தோம். பின்னர்ச் சிலைகளை வணங்கிக்கொண்டிருந்த
ஒரு சமூகத்தினரை அவர்கள் கடந்து சென்றபோது, “மோசே!
இவர்களுக்குச் சிலைகள் இருப்பதைப் போல எங்களுக்கும் ஒரு
சிலை உருவாக்கித் தருவீராக” என்று கேட்டனர். அதற்கு
மோசே, “நீங்கள் அறியாமைக் கூட்டமாக இருக்கிறீர்களே!”
என்று (கடிந்து) உரைத்தார். 139மேலும் “இவர்கள் எ(ந்த
மார்க்கத்)தில் இருக்கிறார்களோ அது அழிந்துவிடும். இவர்கள்

*செய்துகொண்டிருந்த அனைத்தும் வீணானவையே ஆகும்" (என்று கூறினார்.) [140](மேலும்) "அல்லாஹ் அல்லாததையா உங்களுக்குத் தெய்வமாக நான் தேடுவேன்? அவன்தானே உலகினர் அனைவரையும்விட உங்களை மேன்மைப்படுத்தியுள்ளான்!" என்றும் அவர் கூறினார். [141]ஃபாரோவுடைய கூட்டத்தாரிடமிருந்து நாம் உங்களைக் காப்பாற்றியதை எண்ணிப்பாருங்கள். அவர்கள் உங்களுக்குக் கொடிய வேதனை அளித்து வந்தனர். அவர்கள் உங்களுடைய ஆண்(மக்)களைக் கொலை செய்தனர்; பெண்(மக்)களை (மட்டும்) உயிருடன் விட்டுவைத்தனர். இவ்வகையில் உங்கள் இறைவனிடமிருந்து பெரும் சோதனை ஏற்பட்டிருந்தது.*

*[142]நாம் மோசேயிடம் (வேதத்தை அருள்வதற்காக) முப்பது இரவுகளை வாக்களித்தோம். பின்னர்ப் பத்தைச் சேர்த்து(நாற்பது இரவுகளாக)க் கால அளவை நிறைவு செய்தோம். மோசே தம் சகோதரர் ஆரோனிடம், "நீர் என் சமூகத்தினரிடம் என் சார்பாளராக இருந்து, சீர்திருத்தம் செய்துகொண்டிருப்பீராக! குழப்பம் விளைவிப்போரின் வழியைப் பின்பற்றாதீர்" என்று கூறினார். [143]நாம் (குறிப்பிட்டிருந்த இடத்திற்கு) குறிப்பிட்ட நேரத்தில் மோசே வந்தபோது அவருடைய இறைவன் அவருடன் பேசினான். அப்போது மோசே, "நான் உன்னை (என் கண்ணால்) பார்க்கும் வண்ணம் உன்னை எனக்குக் காட்டுவாயாக!" என்று கூறினார். (அதற்கு அவன்,) "நீர் என்னை ஒருபோதும் பார்க்கவே முடியாது. எனினும் இந்த மலையை நீர் நோக்குவீராக! அது தன் இடத்தில் நிலைத்திருந்தால் பின்னர் நீர் என்னைப் பார்க்கலாம்" என்று கூறினான். இறைவன் மலையின் மீது தன் பேரொளியைத் தோற்றுவித்தபோது அம்மலை தூள்தூளாகி விட்டது. மோசே மயக்கமுற்றுக் கீழே விழுந்துவிட்டார். அவர் மயக்கம் தெளிந்தபோது, "நீ மிகவும் தனித்துயர்ந்தவன்; நான் (உன்னிடம் பாவமன்னிப்பு வேண்டி) உன்னிடமே மீண்டு விட்டேன். நான் நம்பிக்கையாளர்களில் முதன்மையானவனாக இருக்கிறேன்" என்று கூறினார்.*

[144](அதற்கு அவன்) "மோசே, என் தூதுப்பணிக்கு என்னுடன்
உரையாடுவதற்காகவும் (உம் காலத்து) ஏனைய மக்களை விடவும்
உம்மையே தெரிந்தெடுத்துள்ளேன். எனவே நான் உமக்கு
வழங்கியதைப் பற்றிக்கொள்வீராக! நன்றி செலுத்துவோருள்
ஒருவராகத் திகழ்வீராக!" என்று கூறினான். [145]நாம் (கற்)
பலகைகளில் எல்லாவிதமான அறிவுரைகளையும் ஒவ்வொன்றின்
விளக்கத்தையும் எழுதி, "நீர் இவற்றை உறுதியாகப் பற்றிப்
பிடித்துக்கொள்வீராக! இவற்றில் (அவரவர்க்கு இயன்ற)
நல்லவற்றைச் சிறந்தமுறையில் பின்பற்றுமாறு உம் சமூகத்தினரை
ஏவுவீராக! பாவிகளின் (அழிந்து கிடக்கும்) இருப்பிடங்களை
நாம் உமக்கு மிக விரைவில் காட்டுவோம்" (என்று மோசேயிடம்
கூறினோம்).

[146]உலகில் நியாயமின்றிச் செருக்குக் கொள்வோரை என்
வசனங்களை (விளங்கிக் கொள்வதை) விட்டும் நான் திருப்பி
விடுவேன். அவர்கள் சான்றுகள் அனைத்தையும் கண்டாலும்
அவற்றை நம்பமாட்டார்கள். அவர்கள் நேர்வழியைக் கண்டாலும்
அதனை(த் தமக்குரிய) வழியாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள்.
ஆனால் தவறான வழியைக் கண்டால் அதனையே (தாங்கள்)
செல்லும் வழியாக எடுத்துக் கொள்வார்கள். இதற்குக் காரணம்,
அவர்கள் எமது வசனங்களைப் பொய்மைப்படுத்தி அலட்சியமாக
இருந்ததேயாகும். [147]எமது வசனங்களையும் மறுமையின்
சந்திப்பையும் பொய்மைப்படுத்துபவர்களின் (நற்)செயல்கள்
அனைத்தும் (மறுமைநாளில்) அழிந்துவிடும். அவர்கள் தாங்கள்
செய்துகொண்டிருந்த (தீ)வினைக்கான கூலியைத்தான் பெறுவர்.

[148]மோசேயின் சமூகத்தினர் (வேதத்தைப் பெற அவர் சென்ற)
பின்னர்த் தங்கள் நகைகளை உருக்கி ஒரு காளைக்கன்றை
வடித்துக் கொண்டனர். அந்தப் படிமத்துக்கு (மாட்டின்
ஓசை போன்ற) ஓர் ஓசை இருந்தது. அது அவர்களிடம்
பேசாது, அவர்களுக்கு எந்த வழியையும் காட்டாது என்பதை
அவர்கள் காணவில்லையா? (எனினும்) அதனை அவர்கள்

*கடவுளாக்கிக் கொண்டனர். அவர்கள் தீவினையாளர்களாகி
விட்டனர். [149]அவர்கள் வழிதவறிவிட்டோம் என்பதை உணர்ந்து
இரங்கியபோது "எங்கள் இறைவன் எங்கள்மீது இரக்கம் காட்டி,
எங்களை மன்னிக்கவில்லையென்றால் உறுதியாக நாங்கள்
இழப்பிற்குரியவர்கள் ஆகி விடுவோம்" என்று கூறினர். [150]மோசே
தம் சமூகத்தினரிடம் சினத்துடனும் கடும் வருத்தத்துடனும்
திரும்பி வந்தபோது, "நான் இல்லாத நேரத்தில் நீங்கள் செய்த
செயல் மிகவும் தீயதாகும். உங்கள் இறைவனின் (வேதனை குறித்த)
கட்டளைக்கு நீங்கள் அவசரப்படுகிறீர்களா?" என்று கேட்டார்.
(பின்னர் வேதப்) பலகைகளை எறிந்துவிட்டுத் தம் சகோதரரின்
தலையைப் பிடித்து(த் தன் பக்கம்) இழுத்தார். ஆரோன், "என்
தாயின் மகனே! மக்கள் என்னை பலவீனப்படுத்தி என்னைக்
கொல்லவும் முற்பட்டனர். எனவே, எதிரிகள் என்னைப்
பார்த்து(ஏளனமாக)ச் சிரிக்குமாறு செய்துவிடாதீர் "இந்தத்
தீவினைபுரியும் மக்களுடன் சேர்த்து விடாதீர்!" என்று கூறினார்.
[151]அப்போது மோசே (இறைவனை நோக்கி), "என் இறைவனே!
என்னையும் என் சகோதரரையும் மன்னித்து விடுவாயாக! உன்
அருளில் எங்களையும் நுழையச் செய்வாயாக! அன்பாளர்களில்
நீயே பேரன்பாளன்" என்று (இறைஞ்சிக்) கூறினார்.*

*[152]காளைக்கன்றைத் தெய்வமாக்கிக் கொண்டவர்களை
இறைவனின் சினமும் இழிவும் இவ்வுலக வாழ்விலேயே விரைவில்
வந்தடையும். பொய்யைப் புனைவோருக்கு நாம் இவ்வாறே
கூலியை வழங்குவோம். [153]ஆயினும் பாவங்கள்புரிந்தோர் பின்னர்
(மனம்திருந்தி) மன்னிப்புக்கோரி நம்பிக்கைகொண்டால் அதன்
பிறகு உறுதியாக உம் இறைவன் பெரும் மன்னிப்பாளனாகவும்
நிகரற்ற அன்பாளனாகவும் இருக்கிறான்.*

*[154]மோசேயின் சினம் தணிந்தபின்னர் அவர் பலகைகளை
எடுத்துக்கொண்டார். தங்கள் இறைவனுக்கு அஞ்சுவோருக்கு
அதில் வழிகாட்டுதலும் அருளும் எழுதப்பட்டிருந்தன. [155]நாம்
குறிப்பிட்டிருந்த நேரத்தில் (சினாய் மலைக்குத் தம்முடன்*

*வருவதற்காக) மோசே தம் சமூகத்தில் எழுபது ஆண்களை தெரிந்தெடுத்துக்கொண்டார். அவர்களை நிலநடுக்கம் பற்றிக்கொண்டபோது மோசே இறைவனிடம் “இறைவா! விரும்பியிருந்தால் இவர்களையும் என்னையும் முன்பே அழித்திருக்கலாமே! எங்களில் மூடர் சிலர் செய்த செயலுக்காக நீ எங்கள் அனைவரையும் அழிக்கின்றாயா? இவை யாவும் உன் சோதனையாகும். இதன்மூலம் நீ விரும்பியோரை வழிதவற விடுகிறாய்; நீ விரும்பியோரை நேர்வழியில் செலுத்துகிறாய். நீயே எங்களின் பொறுப்பாளன். எனவே நீ எங்களை மன்னித்து எங்கள்மீது இரக்கம் காட்டுவாயாக! நீயே மன்னிப்போர்களில் மிகச் சிறந்தவன் ஆவாய்” என்று கூறினார். [156]“மேலும் எங்களுக்கு இவ்வுலகிலும் மறுஉலகிலும் நன்மையை எழுதி விடுவாயாக! (பாவமன்னிப்புக் கோரி) நாங்கள் உன்னிடமே மீள்கிறோம்” என்றும் இறைஞ்சினார். (அதற்கு அல்லாஹ்) “நான் விரும்பியோருக்கு என் வேதனையை வழங்குவேன். ஆயினும் எனது அருள் அனைத்துப் பொருள்களையும் உள்ளடக்கிப் பரந்துள்ளது. இறையச்சத்துடன் கடமையாக்கப்பட்ட கொடையைக் கொடுத்து வருவோருக்கும் எமது சான்றுகளின் மீது நம்பிக்கை கொள்வோருக்கும் அதனை நான் எழுதுவேன்” என்று கூறினான்.*

*[157]அவர்கள் (எத்தகையவர் எனில்) எழுதப் படிக்கத் தெரியாத (முஹம்மது) நபியாகிய இத்தூதரைப் பின்பற்றுகிறவர்கள். அவரைக் குறித்துத் தங்களிடமுள்ள தவ்ராத்திலும் இன்ஜீலிலும் எழுதப்பட்டுள்ளதைக் காண்கின்றனர். அவர் அவர்களை நன்மை செய்யுமாறு ஏவுகிறார், தீமையிலிருந்து தடுக்கிறார்; தூயவற்றை அவர்களுக்கு அனுமதிக்கிறார்; தூய்மையற்ற பொருள்களை அவர்களுக்குத் தடைசெய்கிறார். அவர்களின் மீதுள்ள சுமைகளைக் களைந்து அவர்களைப் பிணைத்திருக்கும் விலங்குகளையும் நீக்குகிறார். எனவே யாரெல்லாம் அவர் மீது நம்பிக்கைகொண்டு அவரைக் கண்ணியப்படுத்தி அவருக்கு உதவிபுரிந்து அவருக்கு அருளப்பட்ட (வேத) ஒளியைப் பின்பற்றுகிறார்களோ*

அவர்கள்தாம் வெற்றியாளர்கள். [158]“மனிதர்களே! உறுதியாக நான்
உங்கள் அனைவரின்பாலும் அனுப்பப்பட்டுள்ள அல்லாஹ்வின்
தூதராவேன்” என்று (நபியே!) நீர் கூறுவீராக! வானங்களிலும்
பூமியிலும் இருப்பது அவனது ஆட்சியே! அவனைத் தவிர
வேறு இறைவன் இல்லை. அவன்தான் வாழ்வையும் சாவையும்
அளிக்கிறான். எனவே அல்லாஹ்வின் மீதும் எழுதப் படிக்கத்
தெரியாத அவனது இத்தூதரின் மீதும் நம்பிக்கை கொள்ளுங்கள்.
அவர் அல்லாஹ்வின் மீதும் அவனது வசனங்கள் மீதும் நம்பிக்கை
கொண்டுள்ளார். நீங்கள் நேர்வழியை அடைவதற்காக அவரையே
பின்பற்றுங்கள். [159]மோசேயின் சமூகத்தினரில் சத்தியத்தின்
அடிப்படையில் வழிகாட்டி அதன்படி நீதி செலுத்தும் ஒரு
பிரிவினரும் இருக்கின்றனர். [160]நாம் அவர்களைப் பன்னிரண்டு
பிரிவினர்களாகப் பிரித்துத் தனித்தனிக் கூட்டங்களாக்கினோம்.
மோசேயின் சமூகத்தினர் தண்ணீர் வேண்டியபோது, “உம்
தடியால் அப்பாறையில் அடிப்பீராக! என்று மோசேவுக்கு நாம்
அறிவித்தோம். (அவர் அடித்தபோது) அதிலிருந்து பன்னிரண்டு
நீரூற்றுகள் பொங்கி வழிந்தன. ஒவ்வொரு பிரிவினரும் தமது
நீர்த்துறையை அறிந்து கொண்டனர். நாம் அவர்களுக்காக
மேகங்களை நிழலிடச் செய்தோம். அவர்களுக்கு (மேன்மையான
உணவாக) ‘மன்னு’வையும் ‘ஸல்வா’வையும் இறக்கிவைத்தோம்.
“உங்களுக்கு நாம் வழங்கிய தூய்மையானவற்றை உண்ணுங்கள்”
(என்றோம்; எனினும் அவர்கள் மீறினர்; இதனால்) அவர்கள்
எமக்கொன்றும் தீங்கிழைக்கவில்லை. மாறாகத் தமக்குத்தாமே
தீங்கிழைத்துக் கொண்டனர். [161](நினைத்துப் பார்ப்பீராக!
அவர்களிடம்) “நீங்கள் இவ்வூரில் சென்று குடியிருங்கள்; இங்கு
நீங்கள் விரும்பிய இடங்களில் (சென்று) உண்ணுங்கள். ‘எங்களை
(பாவச்சுமை நீக்கி) மன்னிப்பாயாக!’ என்று இறைவனை
வேண்டுங்கள். தலைபணிந்தவர்களாக ஊரின் வாயிலில்
நுழையுங்கள். நாம் உங்கள் பாவங்களை மன்னித்து விடுவோம்.
நன்மைபுரிவோருக்கு நாம் (கூலியை) மிகுதிப்படுத்துவோம்”
என்று அவர்களிடம் கூறினோம். [162](அப்போது) அவர்களில்

*வரம்புமீறியோர் தங்களுக்குக் கூறப்பட்ட ('மன்னிப்பாயாக' என்ற) சொல்லை மாற்றி வேறொன்றைக் கூறினர். எனவே அவர்கள் செய்த தீவினையால் நாம் அவர்களின்மீது வானத்திலிருந்து வேதனையை அனுப்பினோம்.*
*[163](நபியே!) கடலோரத்திலிருந்த ஊர் (மக்களைப்) பற்றி அவர்களிடம் கேட்பீராக! சனிக்கிழமையில் (மீன் பிடிப்பது தடுக்கப்பட்டிருந்தும்) அவர்கள் வரம்பு மீறிக் கொண்டிருந்தனர். சனிக்கிழமையன்று மீன்கள் (தண்ணீருக்கு மேல்மட்டத்தில்) தலை நீட்டிக்கொண்டு வந்தன. சனிக்கிழமை அல்லாத வாரநாட்களில் அவை (இவ்வாறு) வருவதில்லை. அவர்கள் கீழ்ப்படியாமல் இருந்ததனால் நாம் அவர்களை இவ்வாறு சோதித்தோம்.*
*[164](நல்லோர் சிலர் அவர்களுக்கு அறிவுரை கூறியபோது) அவர்களில் ஒரு பிரிவினர், "அல்லாஹ் அழிக்கப்போகின்ற அல்லது கடும் வேதனைக்கு உட்படுத்தப் போகின்ற மக்களுக்கு நீங்கள் ஏன் அறிவுரை வழங்குகிறீர்கள்?" என்று கேட்டனர். (அதற்கு) அந்த நல்லோர் (மறுமையில்) உங்கள் இறைவனிடம் (நாங்கள் அவர்களுக்கு அறிவுரை கூறிவிட்டோம் என்று) கூறி(க் குற்றச்சாட்டிலிருந்து) தப்பித்துக்கொள்வதற்காகவும் இவர்கள் இறையச்சம் கொள்வதற்காகவும்தான்" என்று கூறினர்.*
*[165]அவர்களுக்கு நினைவூட்டப்பட்ட அறிவுரைகளைப் (பொருட்படுத்தாமல்) அவர்கள் மறந்து (மீண்டும் மீன் பிடித்தபோது) தீமையிலிருந்து (அவர்களைத்) தடுத்துக் கொண்டிருந்தவர்களை நாம் காப்பாற்றித் தமக்குத்தாமே அநீதியிழைத்துக் கொண்டிருந்தவர்களை அவர்களின் கீழ்ப்படியாமையால் கடுமையான வேதனையின் மூலம் பற்றிக்கொண்டோம்.*
*[166]அவர்கள் தடுக்கப்பட்ட செயலில் மும்முரமாக ஈடுபட்டபோது "நீங்கள் இழிவடைந்த குரங்குகள் (போல்) ஆகி விடுங்கள்" என்று நாம் அவர்களை(ச் சபித்துக்) கூறினோம்.*

*[167](நபியே!) அவன் மறுமை நாள்வரை அவர்களைக் கொடிய வேதனையில் ஆழ்த்தக் கூடியவர்களை அவர்களுக்கு எதிராக*

*அனுப்பிக் கொண்டே இருக்கப்போவதாக உம் இறைவன் பிரகடனம் செய்ததை (அவர்களுக்கு நீர் நினைவூட்டுவீராக!) உம் இறைவன் தண்டிப்பதில் விரைவானவன். ஆயினும் அவன் பெரும் மன்னிப்பாளனும் நிகரற்ற அன்பாளனும் ஆவான்.*
*168நாம் பூமியில் அவர்களைப் பல பிரிவினர்களாக்கி(ச் சிதறித் திரிய) விட்டோம். அவர்களில் நல்லவர்களும் இருக்கின்றனர். அல்லாதவர்களும் இருக்கின்றனர். அவர்கள் (நேர்வழிக்கு) மீள வேண்டும் என்பதற்காக நாம் அவர்களை நல்லவற்றின் மூலமும் தீயவற்றின் மூலமும் சோதித்தோம்.*

*169அவர்களுக்குப்பின் (அவர்களுடைய இடத்திற்குத்) தகுதியற்றவர்கள் வந்தனர்; (தவ்ராத்) வேதத்திற்கு அவர்கள் வாரிசானார்கள். அவர்கள் இவ்வுலகின் அற்ப ஊதியத்தைப் பெற்றுக்கொண்டு (வேத வசனங்களைப் புரட்டி) “நாம் மன்னிக்கப்பட்டு விடுவோம்” என்று கூறுகின்றனர். (பின்னரும் அத்தவற்றைச் செய்வதற்காக) அதேபோன்ற அற்ப ஊதியம் அவர்களிடம் மீண்டும் வந்தால் அதையும் அவர்கள் பெற்றுக்கொள்வர். அல்லாஹ்வின் மீது உண்மையைத்தவிர (வேறொன்றையும்) கூறக்கூடாது என்று வேதத்தில் அவர்களிடம் வாக்குறுதி பெறப்படவில்லையா? அதிலுள்ளதை அவர்கள் ஓதியும் உள்ளனர். இறையச்சமுடையோருக்கு மறுமையின் வீடே சிறந்தது. நீங்கள் (இதனைப்) புரிந்துகொள்ள மாட்டீர்களா?*
*170யாரெல்லாம் இறைவேதத்தை உறுதியாகப் பற்றிக்கொண்டு தொழுகையைக் கடைப்பிடித்து வருகிறார்களோ அத்தகைய நல்லோர்களின் கூலியை உறுதியாக நாம் வீணாக்கி*
*விடமாட்டோம். 171நாம் (ஸினாய்) மலையை அவர்களுக்கு மேல் ஒரு முகட்டைப்போல உயர்த்தியபோது அது தங்களின்மீது விழுந்துவிடுமோ என்று எண்ணினர். அப்போது, “உங்களுக்கு வழங்கியுள்ள(வேதத்)தை உறுதியுடன் பற்றிக்கொள்ளுங்கள். நீங்கள் அதிலுள்ளவற்றைக் கவனத்தில் கொள்ளுங்கள்;*

*(அதன்மூலம்) நீங்கள் இறையச்சமுடையோர் ஆகிவிடலாம்”*
*(என்று நாம் கூறினோம்)*

*172(நபியே!) உம் இறைவன் ஆதமுடைய மக்களின் முதுகுத்*
*தண்டிலிருந்து அவர்களின் வழித்தோன்றல்களை வெளியாக்கி*
*அவர்களுக்கு அவர்களையே சாட்சியாக்கி “நான் உங்கள்*
*இறைவன் அல்லவா?” என்று கேட்டான். அதற்கு அவர்கள், “ஆம்,*
*இதற்கு நாங்களே சாட்சியாக இருக்கிறோம்” என்றனர். மறுமை*
*நாளன்று “இதைப்பற்றி நாங்கள் எதுவும் அறிந்திருக்கவில்லையே”*
*என நீங்கள் கூறக் கூடாது என்பதற்காகவே (உங்கள்) முன்னோர்*
*அளித்த சாட்சியத்தை நாம் நினைவுபடுத்துகிறோம். 173அல்லது*
*“எங்கள் முன்னோர்கள்தாம் (எங்கள் காலத்திற்கு) முன்பே*
*இணைவைத்து வந்தனர்; அவர்களுக்குப்பின் நாங்கள் அவர்களின்*
*வழித்தோன்றல்களாகவே இருந்தோம்; தவறானவர்கள் செய்த*
*செயலுக்காக எங்களை நீ அழிக்கிறாயா? என்று நீங்கள்*
*கூறக்கூடாது என்பதுவும் (இதற்குக் காரணம்). 174இவ்வாறு*
*அவர்கள் (பாவங்களிலிருந்து) மீள்வதற்காக எமது சான்றுகளை*
*நாம் தெளிவாக எடுத்துரைக்கிறோம்.*

*175(நபியே!) அவர்களுக்கு (இஸ்ராயீல்களில்) ஒருவனைப்பற்றிய*
*செய்தியை எடுத்துரைப்பீராக! அவனுக்கு நாம் எம் சான்றுகளை*
*வழங்கியிருந்தோம். (ஆனால்) அவன் அவற்றினின்றும் நழுவி*
*விட்டான். எனவே சாத்தான் அவனைப் பின்தொடர்ந்தான்.*
*ஆகவே அவன் வழிபிறழ்ந்து விட்டான். 176நாம் விரும்பியிருந்தால்*
*அச்சான்றுகளின் மூலம் அவனை உயர்த்தியிருப்போம். ஆனால்*
*அவனோ இவ்வுலக(இன்ப)த்தில் மயங்கித் தன் மனவிருப்பங்களைப்*
*பின்பற்றினான். அவனது நிலை ஒரு நாயின் நிலையைப் போன்றது.*
*அதனை நீங்கள் துரத்தினாலும் நாக்கைத் தொங்கவிட்டுக்*
*கொண்டிருக்கும்; துரத்தாவிட்டாலும் நாக்கைத் தொங்கவிட்டுக்*
*கொண்டிருக்கும். இது எமது சான்றுகளைப் பொய்மைப்படுத்தும்*
*(மற்ற) மக்களுக்கும் உவமையாகும். அவர்கள் சிந்திக்கும் பொருட்டு*
*அவர்களுக்கு இந்நிகழ்ச்சிகளை (நபியே!) நீர் எடுத்துரைப்பீராக!*

[177]எமது சான்றுகளைப் பொய்மைப்படுத்தித் தமக்குத்தாமே
தீங்கிழைத்துக் கொண்டவர்களின் நிலை எவ்வளவு கேடானது!
[178]அல்லாஹ் யாரை நேர்வழியில் செலுத்துகிறானோ அவரே
நேர்வழி பெற்றவர். யாரை அவன் வழிதவற விட்டுவிடுகிறானோ
அவர்கள்தாம் இழப்பிற்குரியவர்கள்.

[179]ஜின்களிலும் மனிதர்களிலும் பெரும்பாலோரை
நாம் நரகத்திற்காகவே படைத்துள்ளோம். அவர்களுக்கு
இதயங்கள் இருக்கின்றன; ஆனால் அவற்றின்மூலம் அவர்கள்
(நல்லறிவுரைகளை) உணர்ந்து கொள்ளமாட்டார்கள்.
அவர்களுக்குக் கண்கள் இருக்கின்றன; ஆனால் அவற்றின் மூலம்
அவர்கள் (நல்லவற்றைப்) பார்க்கமாட்டார்கள். அவர்களுக்குச்
செவிகள் இருக்கின்றன; ஆனால் அவற்றின் மூலம் அவர்கள்
(நல்லவற்றைக்) கேட்கமாட்டார்கள். அவர்கள் விலங்குகளைப்
போன்றவர்கள்; ஏன், அவற்றை விடவும் வழிகெட்டவர்கள்.
அவர்கள் (எச்சரிக்கைகளை) அலட்சியம் செய்பவர்கள்.
[180]அல்லாஹ்வுக்கு மிக அழகிய பெயர்கள் உள்ளன. எனவே
அவற்றால் அவனை (இறைஞ்சி) அழையுங்கள். அவனது
பெயர்களைத் (தவறான பொருள் அமையத்) திரித்துக்
கூறுவோரை விட்டுவிடுங்கள். அவர்களின் செயல்களுக்கான
கூலியை அவர்கள் பெற்றே தீருவர். [181]நாம் படைத்தவர்களில்
சிலர் சத்தியத்தின்படி (மக்களுக்கு) வழிகாட்டிக் கொண்டும்
அதன்படி நீதி செலுத்திக் கொண்டும் இருக்கின்றனர்.
[182]எமது வசனங்களைப் பொய்மைப்படுத்துவோரை
அவர்களே உணர்ந்துகொள்ளாத விதத்தில் படிப்படியாக(க்
கீழிறக்கி) நாம் பற்றிக்கொள்வோம். [183]நான் அவர்களுக்குத்
தவணை அளிப்பேன். உறுதியாக எனது திட்டம் மிக வலுவானது.
[184](எம் தூதராகிய) அவர்களுடைய தோழருக்கு எந்த மனநோயும்
இல்லை; அவர் தெளிவாக (அச்சமூட்டி) எச்சரிக்கை செய்பவரே
அன்றி (வேறல்லர்). (இதை) அவர்கள் சிந்திக்கமாட்டார்களா?
[185]வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சியையும் அல்லாஹ்

படைத்துள்ள ஏனைய பொருள்களையும் அவர்கள் பார்க்கவில்லையா? (வாழ்வுத்) தவணை நெருங்கியிருக்கக் கூடும் என்பது குறித்தும் அவர்கள் (சிந்தித்துப்) பார்க்கவில்லையா? (குர்ஆன் ஆகிய) இதற்குப் பின்னர் எந்தச் செய்தியைத்தான்
அவர்கள் நம்பப் போகிறார்கள்? [186]அல்லாஹ் யாரை வழிதவற
விட்டுவிடுகிறானோ அவருக்கு நேர்வழி காட்டுபவர் யாருமில்லை. அவர்களைத் தம் வரம்புமீறலிலேயே தடுமாறித் திரியுமாறு அவன்
விட்டுவிடுகிறான். [187](நபியே!) அவர்கள் உம்மிடம் மறுமையைக்
குறித்து “அது எப்போது நிகழும்?” என்று கேட்கின்றனர். நீர் கூறும்: “அதைப்பற்றிய அறிவு என் இறைவனிடத்தில்தான் உள்ளது. அதற்குரிய நேரத்தை அவனையன்றி (வேறு யாரும்) வெளிப்படுத்த முடியாது; அது வானங்களிலும் பூமியிலும் கனத்துக் கொண்டிருக்கிறது; அது திடுமென்று உங்களை வந்தடையும்”. நீர் அதனை நன்கறிந்திருப்பதாகக் கருதி அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர். “அதைப்பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது” என்று நீர் கூறுவீராக! மனிதர்களில் பெரும்பாலோர் (இதனை)
அறிவதில்லை. [188]நீர் கூறும்: “அல்லாஹ் விரும்பியதையன்றி
நானே எனக்கு நன்மையோ தீமையோ செய்துகொள்ள எனக்கு ஆற்றல் இல்லை. நான் மறைவானவற்றை அறிந்திருந்தால் பல நன்மைகளை எனக்காகப் பெற்றிருப்பேன். எந்தத் தீங்கும் என்னைத் தொட்டிருக்காது. நான் நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு எச்சரிக்கை செய்பவனும் நற்செய்தி கூறுபவனும் (மட்டுமே) ஆவேன்.

[189]அவன்தான் உங்களை ஒரே ஆன்மாவிலிருந்து படைத்தான். அதிலிருந்தே அதற்கான இணையைப் படைத்தான், அதனிடம் (கூடி) மனஅமைதி பெறுவதற்காக. அவர் அவளுடன் கூடியபோது அவள் எளிய (சூல்கொண்டு முதலில்) எளிய சுமையைச் சுமந்து நடமாடிக் கொண்டிருந்தாள். பின்னர் அது கனமாகிவிட்டபோது இருவரும் சேர்ந்து தங்கள் இறைவனிடம், “நீ எங்களுக்கு(க் குறையற்ற) நலமான குழந்தையை வழங்கினால் நாங்கள் உனக்கு

*நன்றி செலுத்துவோராக இருப்போம்” என்று இறைஞ்சி*
*வேண்டினர். [190](ஆதமுடைய வழித்தோன்றல்களும் இவ்வாறே*
*இறைஞ்சினர்.) அல்லாஹ் அவர்களுக்கு நலமான குழந்தையை*
*அளிக்கும்போது (அவர்களில் இணைவைப்போர்) அதனை*
*அருளியதில் அவனோடு வேறு தெய்வங்களையும் (காரணமாக்கிக்)*
*கூட்டாளிகள் ஆக்கி விடுகின்றனர். ஆனால் அல்லாஹ் அவர்கள்*
*இணைவைப்பவற்றினின்றும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்.*
*[191]எந்த ஒரு பொருளையும் படைக்க முடியாதவற்றையா அவர்கள்*
*(அவனுக்கு) இணையாக்குகின்றனர். அவையே (அவனால்)*
*படைக்கப்பட்டவைதாமே? [192]அவை அவர்களுக்கு எத்தகைய*
*உதவியும் செய்ய முடியாது. ஏன், தமக்குத்தாமே கூட அவற்றால்*
*உதவிக் கொள்ள முடியாது. [193]நீங்கள் அவற்றை (இணைத்*
*தெய்வங்கள்) நேர்வழி காட்ட வருமாறு அழைத்தால் அவை*
*உங்களைப் பின்பற்றமாட்டா. அவற்றை நீங்கள் (இறைஞ்சி)*
*அழைப்பதும் அழைக்காமல் மௌனமாக இருப்பதும் சமமே.*
*[194]நீங்கள் அல்லாஹ்வையன்றி எவற்றை(த் தெய்வங்கள் என)*
*அழைக்கிறீர்களோ அவையும் உங்களைப் போல் (இறைவனின்)*
*அடிமைகள்தாம். எனவே நீங்கள் உண்மையாளராக இருந்தால்*
*அவற்றை இறைஞ்சிப் பாருங்கள்! அவை உங்களுக்குப்*
*பதிலளிக்கட்டும்!*

*[195]அவற்றிற்கு நடக்கக்கூடிய கால்கள் இருக்கின்றனவா?*
*பிடிக்கக்கூடிய கைகள் இருக்கின்றனவா? பார்க்கக்கூடிய*
*கண்கள் இருக்கின்றனவா? கேட்கக்கூடிய செவிகள்*
*இருக்கின்றனவா? (நபியே! இணைவைப்பவர்களிடம்) நீர் கூறும்:*
*“நீங்கள் உங்கள் இணைத் தெய்வங்களை அழைத்து எனக்கு*
*(தீங்கிழைக்க)ச் சூழ்ச்சி செய்துபாருங்கள் (இதில்) எனக்கு*
*தவணையும் தர வேண்டாம்” என்று கூறுவீராக! [196]“உறுதியாக*
*என் பாதுகாவலன் அல்லாஹ்தான். அவன்தான் (இவ்)வேதத்தை*
*அருளினான்; அவன்தான் நல்லடியார்களைப் பாதுகாக்கின்றான்”*
*(என்றும் கூறுவீராக!) [197]“அவனையன்றி எவற்றைத் (தெய்வங்கள்*

*என) அழைக்கிறீர்களோ அவை உங்களுக்கு உதவிசெய்யும் ஆற்றல் அற்றவை. ஏன், தமக்குத் தாமே கூட அவற்றால் உதவிக் கொள்ள முடியாது" (என்றும் கூறுவீராக!) [198](நபியே!) நீர் அவர்களை நேர்வழியை நோக்கி அழைத்தாலும் அவர்கள் உம் பேச்சைக் கேட்கமாட்டார்கள். அவர்கள் உம்மைப் பார்ப்பதைப்போலத் தோன்றும்; ஆனால் உம்மைப் பார்க்கமாட்டார்கள்.*

*[199](நபியே!) நீர் மன்னிப்பதைக் கடைப்பிடிப்பீராக! நன்மையை(க் கடைப்பிடிக்க மக்களை) ஏவுவீராக! மூடர்களிடமிருந்து விலகி விடுவீராக! [200.] சாத்தானிடமிருந்து உமக்கு ஏதேனும் ஊசலாட்டம் ஏற்பட்டால் நீர் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருவீராக! உறுதியாக அவன் செவிசாய்ப்பவன்; முற்றும் அறிந்தவன். [201]இறையச்சமுடையோருக்குச் சாத்தானிடமிருந்து ஏதேனும் தீய எண்ணம் ஏற்பட்டால் உடனே அவர்கள் எச்சரிக்கையாகிவிடுவர். அப்போதே அவர்களுக்கு விழிப்பு(நிலை) ஏற்பட்டுவிடும். [202]சாத்தான்கள் தம் (மானிடச்) சகோதரர்களைக் கெடுவழியில் இழுத்துச் செல்வர்; அதில் அவர்கள் எந்தக் குறையும் வைப்பதில்லை.*

*[203](நபியே!) அவர்களிடம் (அவர்களுக்கு விருப்பமான) ஏதேனும் ஒரு சான்றை நீர் கொண்டு வரவில்லையெனில் "நீர் (சுயமாக) ஒரு சான்றை ஏற்படுத்திக் கொண்டு வரக்கூடாதா?" என்று கேட்கின்றனர்; நீர் கூறும்: "என் இறைவனிடமிருந்து எனக்கு அறிவிக்கப்படுகின்றவற்றையே நான் பின்பற்றுகிறேன்" (குர்ஆன் ஆகிய) இது உங்கள் இறைவனிடமிருந்து வந்துள்ள தெளிவான அறிவூட்டலாகவும் நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு வழிகாட்டியாகவும் அருளாகவும் இருக்கிறது. [204]குர்ஆன் ஓதப்பட்டால் செவிசாய்த்துக் கேளுங்கள்; மௌனமாக இருங்கள்; உங்கள் மீது அருள் காட்டப்படலாம். [205](நபியே!) உமது உள்ளத்தில் பணிவுடனும் அச்சத்துடனும் கனிந்த குரலிலும் உம்முடைய இறைவனைக் காலையிலும் மாலையிலும் நினைவுகூர்வீராக.*

நீர் அலட்சியமாக இருப்போருள் ஒருவராக ஆகி விடாதீர்!
[206]உம் இறைவனிடம் நெருக்கமாக உள்ள(வான)வர்கள் அவனை
வணங்குவதைப் புறக்கணித்துச் செருக்குக் கொள்ளமாட்டார்கள்.
அவனைத் துதி செய்துகொண்டும் அவனுக்கே தலைபணிந்து
(வணங்கிக்) கொண்டும் இருக்கின்றனர்.

# 8. போரில் கிடைத்த பொருள்கள் (அல்அன்ஃபால்)

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...

[1](நபியே!) அவர்கள் போரில் கிடைத்த பொருள்கள் குறித்து
உம்மிடம் கேட்கிறார்கள். “போரில் கிடைத்த பொருள்கள் குறித்து
(முடிவு செய்யும் அதிகாரம்) அல்லாஹ்வுக்கும் தூதருக்கும்
உரியதாகும். எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்.
உங்களுக்கிடையே(யுள்ள) உறவுகளைச் சீர்படுத்திக் கொள்ளுங்கள்;
நீங்கள் நம்பிக்கையாளராக இருந்தால் அல்லாஹ்வுக்கும்
அவனது தூதருக்கும் கீழ்ப்படியுங்கள்” என்று நீர் கூறுவீராக!
[2]அல்லாஹ்(வின் பெயர் தங்கள் முன்) நினைவு கூரப்படும்போது
யாருடைய உள்ளங்கள் அஞ்சி நடுங்குமோ அவர்களே
உண்மையான நம்பிக்கையாளர்கள் ஆவர். அவர்களுக்கு
முன்னால் அவனது வசனங்கள் எடுத்துரைக்கப்படும்போது,
அது அவர்களின் நம்பிக்கையை இன்னும் மிகுதிப்படுத்தும்.
அவர்கள் தங்கள் இறைவனையே முற்றிலும் சார்ந்திருப்பர்.
[3](அவர்கள்) தொழுகையைக் கடைப்பிடிப்பர்; நாம் அவர்களுக்கு
வழங்கியவற்றிலிருந்து (அறச்)செலவும் செய்வர். [4]அவர்கள்தாம்
உண்மையான நம்பிக்கையாளர்கள். அவர்களுக்கு இறைவனிடம்
உயர் தகுதிகளும் (பாவ)மன்னிப்பும் கண்ணியமான
வாழ்வாதாரமும் உண்டு.

[5](நபியே!) இறைவன் உம்மைச் சத்தியத்திற்காக வீட்டிலிருந்து
வெளிக்கொணர்ந்த நேரத்தில் நம்பிக்கையாளர்களில் ஒரு
பிரிவினர் உம்முடன் (போருக்கு வர) விருப்பமில்லாதிருந்தனர்.

6(போர் இன்றியமையாதது எனும்) உண்மை தெளிவான பின்னரும் அது குறித்து அவர்கள் உம்மிடம் வாதம் செய்து கொண்டிருந்தனர். (கண்ணால்) பார்த்துக் கொண்டிருக்கும்போதே தங்களுடைய இறப்பை நோக்கி இழுத்துச் செல்லப்படுவதைப் போல (அவர்கள் பதற்றம் கொண்டு வாதிட்டனர்.)
7(நம்பிக்கையாளர்களே! எதிரிகளின்) “இரு கூட்டங்களில் ஒன்று உங்களுக்கு அகப்பட்டுவிடும்” என்று இறைவன் உங்களுக்கு வாக்களித்ததை (நினைத்துப் பாருங்கள்) நீங்கள் ஆயுத வலிமை இல்லாத (வணிகக்) கூட்டமே உங்களுக்கு(க் கிடைக்க) வேண்டும் என விரும்பினீர்கள். அல்லாஹ்வோ தன் வார்த்தைகளால் உண்மையை நிலைநாட்டவும் மறுப்பாளர்களின் வேரைத் துண்டிக்கவுமே விரும்பினான்.
8குற்றவாளிகள் வெறுத்தாலும் உண்மை உண்மையாகவும் பொய்மை பொய்மையாகவும் நிறுவப்பட வேண்டும் என்பதே இதற்கு காரணம்.

9(நினைத்துப் பாருங்கள்) நீங்கள் இறைவனிடம் உதவிகோரி முறையிட்டுக் கொண்டிருந்தபோது அவன், “தொடர்ச்சியாக (உங்களைப் பின்பற்றி வரும்) ஓராயிரம் வானவர்களை அனுப்பி உங்களுக்கு உதவுவேன்” எனப் பதிலளித்தான்.
10உங்களுக்கு நற்செய்தியாகவும் உங்கள் உள்ளங்கள் அதன்மூலம் அமைதியடைய வேண்டும் என்பதற்காகவுமே அல்லாஹ் இவ்வாறு செய்தான். உதவி அல்லாஹ்விடமிருந்தே அன்றி (வேறு எவரிடமிருந்தும்) கிடைப்பதில்லை. உறுதியாக அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.
11(நினைத்துப் பாருங்கள்) நீங்கள் அமைதியடைவதற்காகத் தன் அருளால் ஒரு சிற்றுறக்கம் உங்களைக் கவித்துக்கொள்ளச் செய்தான். உங்களைத் தூய்மைப்படுத்தவும் உங்களிடமிருந்து சாத்தானின் மாசுகளைப் போக்கிடவும் உங்கள் உள்ளங்களை வலுப்படுத்தவும் அதன்மூலம் உங்கள் பாதங்களை உறுதிப்படுத்தவும் அவன் வானிலிருந்து உங்கள்மீது மழையைப் பொழியச் செய்தான்.
12(நபியே!) உம்முடைய இறைவன் வானவர்களிடம் “நான்

உங்களுடன் இருக்கிறேன்; எனவே நீங்கள் நம்பிக்கையாளர்களை வலுப்படுத்துங்கள்” என்று கட்டளையிட்டு, நம்பிக்கையாளர்களிடம் நான் மறுப்பாளரின் உள்ளங்களில் அச்சத்தை ஏற்படுத்துவேன். அவர்களின் பிடரிகளில் தாக்குங்கள். அவர்களின் ஒவ்வொரு விரல்மூட்டுகளிலும் அடியுங்கள்” என்று அறிவித்ததை எண்ணிப்
பார்ப்பீராக.* 13ஏனெனில் அவர்கள் அல்லாஹ்வுக்கும் அவனது
தூதருக்கும் எதிராகச் செயல்பட்டனர். அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் எதிராகச் செயல்படுவோரைத் தண்டிப்பதில்
அல்லாஹ் மிகக் கடுமையானவன். 14“இப்போது (இம்மையில்)
இதுதான் உங்களுக்குரிய தண்டனை; இதைச் சுவையுங்கள். மறுப்பாளர்களுக்கு (மறுமையில்) நரக வேதனையுண்டு” என்று அவர்களுக்குக் கூறப்படும்.

15(ஓரிறை)நம்பிக்கையாளர்களே! போர்க்களத்தில் நீங்கள்
மறுப்பாளர்களைச் சந்திக்க நேர்ந்தால் புறங்காட்டி ஓடிவிடாதீர்கள்.
16போர்த் தந்திரத்திற்காகவோ நம்பிக்கையாளர்களின் மற்றொரு
அணியில் சேர்ந்து கொள்வதற்காகவோ அன்றிப் புறங்காட்டி ஓடிவிடுபவர் இறைச்சினத்திற்கு ஆளாகி விடுவார். அவரது இருப்பிடம் நரகமாகும். அது மிகவும் கெட்ட இருப்பிடம்.

17(நம்பிக்கையாளர்களே! பத்ருப் போரில்) அவர்களை நீங்கள்
கொல்லவில்லை; மாறாக அல்லாஹ்தான் கொன்றான். (நபியே!) நீர் (அவர்களின் மீது மண்ணை) எறிந்தபோது நீர் அதனை எறியவில்லை; மாறாக அல்லாஹ்தான் எறிந்தான். (இது) அல்லாஹ் தன்னிடமிருந்து நம்பிக்கையாளர்களுக்குச் சிறந்த கொடைகளை வழங்க வேண்டும் என்பதற்காகவே ஆகும். உறுதியாக
அல்லாஹ் செவிசாய்ப்பவன்; முற்றும் அறிந்தவன். 18இதுதான்
நிகழ்ந்தது. அல்லாஹ் மறுப்பாளரின் சூழ்ச்சிகள் அனைத்தையும்
உறுதியாக வலுவிழக்கச் செய்வான். 19(மக்காவாழ் ஓரிறை
மறுப்பாளர்களே!) நீங்கள் ஒரு முடிவைத் தேடினீர்களேயானால்,

---

*முன்னுரை காண்க : பக்கம் எண் XX

*இதோ (அம்)முடிவு உங்கள் முன் வந்துவிட்டது. நீங்கள் (போரிலிருந்து) விலகிக் கொண்டீர்களானால் அது உங்களுக்கு நல்லதாகும். நீங்கள் (போருக்கே) திரும்பினால் நாமும் (உங்களை வெல்லத்) திரும்புவோம். உங்கள் படை எவ்வளவுதான் அதிகமாக இருந்தாலும் அது உங்களுக்கு எப்பயனும் அளிக்காது. உறுதியாக அல்லாஹ் நம்பிக்கையாளர்களுடன் இருக்கின்றான் (என்பதை அறிந்துகொள்ளுங்கள்!)*

*[20](ஓரிறை)நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். எல்லாவற்றையும் செவிமடுத்தபின் அவரை விட்டு விலகிவிடாதீர்கள். [21](மனமாரச்) செவிமடுக்காமல் ‘நாங்கள் செவிமடுத்தோம்’ என்று (வாயளவில்) கூறியவரைப் போல ஆகிவிடாதீர்கள். [22]சிந்தித்துணராத செவிடர்களும் ஊமைகளும்தாம் அல்லாஹ்விடத்தில் மிக இழிந்த உயிர்ப்பொருள்கள் ஆவர். [23]அவர்களிடம் ஏதேனும் நன்மை இருப்பதாக அல்லாஹ் அறிந்திருந்தால் உறுதியாகச் செவியுறும் பேற்றை அவர்களுக்கு அளித்திருப்பான். (இப்போதிருக்கும் நிலையில்) அவர்களை அவன் செவியுறச் செய்தாலும் அவர்கள் புறக்கணித்து முகம் திருப்பிக்கொள்வர். [24]நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு வாழ்வளிக்கும் ஒன்றை நோக்கித் தூதர் அழைக்கும்போது அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் பதில் கூறுங்கள். (இல்லையெனில் குறிப்பிட்ட தவணைக்குப் பிறகு) மனிதனுக்கும் அவனது உள்ளத்திற்குமிடையே அல்லாஹ் வந்துவிடுகிறான் என்பதையும் அவனிடமே நீங்கள் ஒன்று திரட்டப்படுவீர்கள் என்பதையும் அறிந்துகொள்ளுங்கள்! [25](உங்களுக்குள் உள்ள முரண்களால் ஏற்படும்) வேதனை குறித்து அஞ்சுங்கள். அது தீவினையாளர்களை மட்டுமே தாக்காது (நல்லோரையும் தாக்கும்). அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன் என்பதை அறிந்து கொள்ளுங்கள். [26]நீங்கள் (மக்கா) மண்ணில் குறைந்த எண்ணிக்கையினராக இருந்ததையும் வலிமையற்றவர்களாகக் கருதப்பட்டதையும் சுற்றியிருந்தோர் திடீரென உங்களை வாரிச்சென்று*

விடுவார்களோ என்று நீங்கள் அஞ்சிக் கொண்டிருந்ததையும்
எண்ணிப்பாருங்கள்! நீங்கள் நன்றி செலுத்துபவர்களாகக்கூடும்
என்பதற்காக அவன்தான் (மதீனாவில்) உங்களுக்குப் புகலிடம்
அளித்துத் தனது உதவியினால் உங்களை வலுப்படுத்தினான்;
உங்களுக்குத் தூய வாழ்வாதரங்களையும் அளித்தான்.
[27]நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் மோசம்
செய்யாதீர்கள். (தவறு என) அறிந்துகொண்டே உங்களை நம்பி
ஒப்படைக்கப்பட்ட பொருள்களில் மோசடி செய்யாதீர்கள்.
[28]உங்களின் செல்வங்களும் பிள்ளைகளும் (உங்களுக்குச்)
சோதனையே என்பதையும் அல்லாஹ்விடமே மாபெரும் கூலி
இருக்கிறது என்பதையும் அறிந்துகொள்ளுங்கள்.

[29]நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி
நடந்து கொள்வீர்களானால் (சத்தியத்தையும் அசத்தியத்தையும்)
பிரித்தறியும் ஆற்றலை அவன் உங்களுக்கு வழங்குவான். உங்கள்
பாவங்களைப் போக்கி உங்களை மன்னித்து விடுவான். அல்லாஹ்
மாபெரும் அருளுடையவன். [30](நபியே!) மறுப்பாளர்கள்
உம்மைச் சிறைப்படுத்தவோ அல்லது கொலை செய்யவோ
(உம்மை) ஊரிலிருந்து வெளியேற்றிவிடவோ சூழ்ச்சி செய்து
கொண்டிருந்ததை எண்ணிப் பார்ப்பீராக! அவர்கள் திட்டம்
தீட்டிக்கொண்டிருந்தனர். (அவர்களுக்கு எதிராக) அல்லாஹ்வும்
திட்டம் திட்டிக்கொண்டிருந்தான். திட்டம் தீட்டுவதில்
அல்லாஹ்வே மிகச் சிறந்தவன்.

[31]அவர்களிடம் எமது வசனங்கள் எடுத்துரைக்கப்பட்டால்
“அவர்கள் முன்னரே (இவற்றைச்) செவியுற்றுள்ளோம். நாங்கள்
நினைத்தால் நாங்களும் இதுபோன்ற வசனங்களைக் கூறுவோம்.
இவை முன்னோர்களின் கட்டுக்கதைகளே அன்றி வேறில்லை”
என்கின்றனர். [32]“அல்லாஹ்வே! இது உன்னிடமிருந்து வந்துள்ள
உண்மையாக இருந்தால் எங்கள்மீது கல்மாரி பொழிந்துவிடு;
அல்லது துன்புறுத்தும் வேதனையை எங்களுக்குக் கொண்டுவா”
என்று அவர்கள் (எள்ளலாகக்) கூறியதை (நபியே!) நீர் எண்ணிப்

*பார்ப்பீராக. [33](நபியே!) நீர் அவர்களிடையே இருக்கும் நிலையில் அல்லாஹ் அவர்களைத் தண்டிக்கமாட்டான். அவர்கள் பாவமன்னிப்புக் கோரிக் கொண்டிருக்கும் வரையிலும் அல்லாஹ் அவர்களைத் தண்டிக்கமாட்டான்.*

*[34](இவ்விரு காரணங்களும் இல்லாதிருப்பின்) அவர்களை அல்லாஹ் தண்டிக்காதிருப்பதற்கு என்ன (புகல்) இருக்கிறது? அவர்கள் (கஅபா எனும்) இறையில்லத்தின் பொறுப்பாளர்களாக இல்லாதிருந்தும் அதற்குள் செல்லவிடாமல் மக்களைத் தடுக்கிறார்களே! இறையச்சமுடையோரைத் தவிர (வேறு யாரும்) அதன் பொறுப்பாளர்களாக உரிமையுடையோர் அல்லர். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் இதனை அறிந்துகொள்ளவதில்லை.*
*[35](கஅபா) இறையில்லத்தில் சீழ்க்கையொலி எழுப்புவதும் கைதட்டுவதுமே அவர்களின் தொழுகையாகும். எனவே, "நீங்கள் (ஓரிறையை) மறுத்துக்கொண்டிருந்ததனால் வேதனையைச் சுவையுங்கள்" (என்று மறுமையில் அவர்களிடம் கூறப்படும்.)*

*[36]மறுப்பாளர்கள் மக்களை இறைவழியிலிருந்து தடுப்பதற்காகத் தம் செல்வங்களைச் செலவு செய்கின்றனர். இனியும் செலவு செய்துகொண்டேயிருப்பர். இறுதியில் அதுவே அவர்களின் பெருந்துயருக்குக் காரணமாக அமைந்துவிடும். பின்னர் அவர்கள் தோற்கடிக்கப்படுவர். மறுப்பாளர்கள் (மறுமையில்) நரகத்தின்பால் ஒன்றுதிரட்டப்படுவர்.*
*[37]இது நல்லவர்களிடமிருந்து தீயவர்களை அல்லாஹ் பிரித்தெடுத்து அவர்களை ஒருவர்மீது ஒருவராக அடுக்கிக் குவித்து நரகத்தில் வீசுவதற்காகவே ஆகும். இவர்களே இழப்பிற்குரிவர்கள்.*

*[38]மறுப்பாளர்களிடம் "அவர்கள் (மறுப்பிலிருந்து) விலகிக் கொள்வார்களாயின் (முன்பு) நடந்தவற்றிற்காக மன்னிக்கப்படுவர். ஆனால் அவர்கள் மீண்டும் பாவத்திலேயே நீடித்தால் முன்னோர்களுக்கு நடந்தது அவர்களுக்கு முன்னுதாரணமாகும்" என்று (நபியே!) நீர் கூறுவீராக!*
*[39]நம்பிக்கையாளர்களே! ஒடுக்குமுறை நீங்கி (மக்கா மண்ணில்) மார்க்கம் முற்றிலும்*

அல்லாஹ்விற்காகவே உரியதாகும் வரை நீங்கள் அவர்களுடன் போரிடுங்கள். அவர்கள் விலகிக்கொண்டால் – அல்லாஹ் அவர்களின் செயல்களை உற்றுநோக்கிக் கொண்டிருக்கிறான்.*
40அவர்கள் புறக்கணித்தால் அல்லாஹ் உங்களுக்குப் பாதுகாவலனாக இருக்கிறான் என்பதை அறிந்துகொள்ளுங்கள். அவன் எத்துணைச் சிறந்த பாதுகாவலன்! எத்துணைச் சிறந்த உதவியாளன்!

41நீங்கள் அல்லாஹ்வின் மீதும் இரு படைகளும் சந்தித்துக் கொண்ட, தீர்ப்பளிக்கப்பட்ட (பத்ருப் போரின்) நாளில் எம் அடியார் (முஹம்மத்) மீது இறக்கி அருளப்பட்டவற்றின் மீதும் நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால் அறிந்துகொள்ளுங்கள்! போரில் உங்களுக்குக் கிடைத்த பொருள்களில் ஐந்தில் ஒரு பங்கு அல்லாஹ்வுக்கும் (அவனுடைய) தூதருக்கும், அவரின் உறவினர்களுக்கும் அநாதைகளுக்கும் ஏழைகளுக்கும் வழிப்போக்கர்களுக்கும் உரியதாகும். (எஞ்சிய நான்கு பங்கும் போரில் கலந்து கொண்டவர்களுக்கு உரியவை) அல்லாஹ் யாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.

42(நினைவு கூருங்கள்,) நீங்கள் (பத்ருப் போரின் போது மதீனாவுக்கு) அருகிலுள்ள பள்ளத்தாக்கின் நெருங்கிய பகுதியிலும் அவர்கள் தொலைவான பகுதியிலும் இருந்தனர்; வணிகக் கூட்டத்தார் உங்களுக்குக் கீழ்ப்பகுதியில் இருந்தனர். நீங்கள் அவர்களை(ப் போரில்) சந்திக்கும் நேரத்தை(யும் இடத்தையும் அவர்களுடன் பேசி) முன்பே முடிவு செய்திருந்தால் உறுதியாக உங்களுக்குள் கருத்துவேற்றுமை கொண்டு அதைச் செயல்படுத்தத் தவறியிருப்பீர்கள். ஆயினும் அல்லாஹ் செய்து முடிக்க வேண்டிய செயலை நிறைவேற்றிவிட வேண்டும் என்பதற்காக (எதிர்பாராத விதத்தில் உங்களை மோதச் செய்தான்). இது, அழிய வேண்டியவர் (சத்தியத்தின்) தெளிவான சான்றுடன்

---

*முன்னுரை காண்க : பக்கம் எண் XX

*அழிய வேண்டும்; உயிர் வாழ்பவர் தெளிவான சான்றுடன் உயிர்வாழ வேண்டும் என்பதற்காகத்தான்! உறுதியாக அல்லாஹ் நன்கு செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.*
*[43](நபியே!) அப்போது அல்லாஹ் உம் கனவில் அவர்களைக் குறைந்த எண்ணிக்கையினராகக் காட்டியதை நீர் எண்ணிப் பார்ப்பீராக! அவர்களை மிகுதியானவர்களாகக் காட்டியிருந்தால் (நம்பிக்கையாளர்களே!) நீங்கள் துணிவிழந்திருப்பீர்கள். (போர்புரியும்) முடிவில் ஒருவருக்கொருவர் பிணங்கியிருப்பீர்கள்; ஆனால் அல்லாஹ் உங்களைக் காத்தான். உறுதியாக அவன் உள்ளங்களில் உள்ளவற்றை முற்றும் அறிந்தவன்.*
*[44]போரில் நீங்கள் எதிரிகளைச் சந்தித்தபோது அல்லாஹ் உங்களின் கண்களுக்கு அவர்கள் எண்ணிக்கையைக் குறைத்தும் அவர்கள் கண்களுக்கு உங்கள் எண்ணிக்கையைக் குறைத்தும் காட்டியதை நினைத்துப் பாருங்கள். அது செய்து முடிக்கப்பட வேண்டிய செயலை அல்லாஹ் முடிப்பதற்காகவே ஆகும். விவகாரங்கள் அனைத்தும் அல்லாஹ்விடமே திரும்புகின்றன.*

*[45]நம்பிக்கையாளர்களே! (போரின் போது எதிரிகளின்) ஏதேனும் ஒரு கூட்டத்தை எதிர்கொண்டால் உறுதியாக (எதிர்த்து) நில்லுங்கள். அல்லாஹ்வை மிகுதியாக நினைவுகூருங்கள்; நீங்கள் வெற்றி அடைவீர்கள்.*
*[46]அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். ஒருவருக்கொருவர் பிணங்கிக்கொள்ளாதீர்கள். அவ்வாறு செய்தால் துணிவை இழப்பீர்கள்; உங்கள் வலிமை குன்றிப் போகும். ஆகவே பொறுமையைக் கடைப்பிடியுங்கள். உறுதியாக அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கிறான்.*
*[47]வீண் பெருமைக்காகவும் பிறருக்குக் காட்டிக் கொள்வதற்காகவும் தங்கள் வீடுகளிலிருந்து (உங்களுக்கு எதிராகப் போருக்குப்) புறப்பட்டவர்களைப் போல ஆகிவிடாதீர்கள். அவர்கள் இறைவழியிலிருந்து மக்களைத் தடுக்கின்றனர். உண்மையில் அல்லாஹ் அவர்கள் செய்கின்ற அனைத்தையும் சூழ்ந்தறிகிறான்.*

*[48](நினைத்துப்பாருங்கள்!) சாத்தான் அவர்களின் (தீய) செயல்களை அவர்களுக்கு அழகானவையாகத் தோன்றுமாறு*

*செய்தான். "இன்று மனிதர்களில் உங்களை வெல்பவர்கள் எவரும் இல்லை. நான் உங்களுடன் இருக்கிறேன்" என்று அவன் (அவர்களிடம்) கூறினான். ஆயினும், இரு படையினரும் நேருக்குநேர் மோதிக் கொண்டபோது "நான் உங்களைவிட்டு விலகிவிட்டேன்; நீங்கள் பார்க்கமுடியாத ஒன்றை நான் பார்க்கிறேன்; நான் அல்லாஹ்வுக்கு அஞ்சுகிறேன். அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன்" என்றுகூறிப் புறங்காட்டி ஓடிவிட்டான்.*
*49(இதனையும் நினைத்துப் பாருங்கள்) நயவஞ்சகர்களும் உள்ளங்களில் நோயுள்ளவர்களும் ("நம்பிக்கையாளர்களாகிய) இவர்களது மார்க்கம் இவர்களை ஏமாற்றிவிட்டது" என்று கூறிக் கொண்டிருந்தனர். அல்லாஹ்வின் மீது முழுமையான நம்பிக்கையுள்ளவர்கள் அறிந்துகொள்வர்: அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.*
*50(நபியே! இங்கு வீழ்த்தப்பட்ட) மறுப்பாளர்களின் உயிரை வானவர்கள் பறிக்கும்போது அவர்களின் முகங்களிலும் முதுகுகளிலும் அடித்தவாறு, "சுட்டெரிக்கும் வேதனையைச் சுவையுங்கள்" என்று கூறுவதை நீர் பார்க்க முடிந்தால்! (எப்படியிருக்கும்?)*
*51"இது உங்கள் கைகள் முன்னர்ச் செய்தனுப்பிய(தீய)வற்றின் விளைவாகும். தன் அடியார்களுக்கு ஒருசிறிதும் அல்லாஹ் அநீதியிழைக்கமாட்டான்" (என்று கூறப்படும்).*
*52(இவர்களின் நிலை) ஃபாரோவைச் சார்ந்தவர்கள் நிலையையும் அவர்களுக்கு முன்பிருந்தவர்களின் நிலையையும் போன்றதே ஆகும். அவர்கள் அல்லாஹ்வின் சான்றுகளை மறுத்தனர். எனவே அவர்களது பாவங்கள் காரணமாக அல்லாஹ் அவர்களைப் பற்றிக்கொண்டான். உறுதியாக அல்லாஹ் வல்லமை மிக்கவன்; தண்டிப்பதில் கடுமையானவன்.*
*53எந்தச் சமூகத்தினரும் தங்களிடம் உள்ள (நல்ல)வற்றை மாற்றிக் கொள்ளாதவரை அல்லாஹ் அவர்களுக்கு வழங்கிய அருட்கொடையை மாற்றுவதில்லை. உறுதியாக அல்லாஹ் செவிசாய்ப்பவன்; முற்றும் அறிந்தவன்.*
*54(இவர்களது நிலை) ஃபாரோவைச் சார்ந்தவர்கள் நிலையையும் அவர்களுக்கு முன்பிருந்தவர்களின் நிலையையும்*

போன்றதே ஆகும். அவர்கள் தம் இறைவனின் சான்றுகளைப் பொய்மைப்படுத்தினர். எனவே பாவங்கள் காரணமாக நாம் (ஃபாரோவுக்கு முன்பிருந்த) அவர்களை அழித்துவிட்டோம். ஃபாரோவைச் சார்ந்தவர்களையும் மூழ்கடித்துவிட்டோம். அவர்கள் அனைவரும் தீவினையாளர்களாகவே இருந்தனர்.

[55]உயிரினங்களிலேயே அல்லாஹ்விடம் மிகவும் தீய உயிரினம்
(ஆக இருப்போர் அவனை ஏற்க) மறுப்பவர்கள்தாம். அவர்கள்
நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். [56](நபியே!) அவர்களுடன்
நீர் உடன்படிக்கை செய்தீர். ஆனாலும் ஒவ்வொரு முறையும்
அவர்கள் தம் உடன்படிக்கையை முறித்துவிடுகின்றனர்.
அவர்கள் (இறைவனுக்கு) அஞ்சுவதில்லை. [57]எனவே நீர்
அவர்களைப் போர்க்களத்தில் எதிர்கொண்டால் அவர்களுக்குப்
பின்னால் இருப்பவர்களும் விலகிஓடும் அளவுக்கு அவர்களைத்
தண்டிப்பீராக! அதனால் அவர்கள் படிப்பினை பெறக்கூடும்.
[58](உம்முடன் உடன்படிக்கை செய்திருக்கும்) ஏதேனும் ஒரு
சமூகத்தினர் நம்பிக்கை மோசடி செய்வார்கள் என்று நீர்
அஞ்சினால் நீரும் அதற்கிணையாக (அவர்களின்
உடன்படிக்கையை) அவர்களிடமே எறிந்து விடுவீராக! உறுதியாக
அல்லாஹ் மோசடி செய்பவர்களை நேசிப்பதில்லை.

[59]தாம் தப்பித்துக்கொண்டதாக மறுப்பாளர்கள் ஒருபோதும்
எண்ணவேண்டாம். அவர்கள் (இறைவனைத்) தோற்கடிக்க
முடியாது. [60](இறை நம்பிக்கையாளர்களே!) அவர்களை
எதிர்ப்பதற்காக உங்களால் இயன்ற அளவு (படை)பலத்தையும்
பழக்கப்பட்ட (போர்க்) குதிரைகளையும் தயாராக வைத்துக்
கொள்ளுங்கள். அதன்மூலம் நீங்கள் அல்லாஹ்வின் எதிரியையும்
உங்களின் எதிரியையும் அச்சமடையச் செய்யலாம்; அவர்களன்றி
வேறு சில பகைவரையும் (நீங்கள் அச்சமடையச் செய்யலாம்.)
அவர்களை நீங்கள் அறிய மாட்டீர்கள்; அல்லாஹ்வே அவர்களை
அறிவான். நீங்கள் (அறப்போருக்காக) இறைவழியில் எதைச்
செலவு செய்தாலும் அது உங்களுக்கு நிறைவாக வழங்கப்படும்.
உங்களுக்கு அநீதி இழைக்கப்படமாட்டாது. [61](நபியே!) அவர்கள்

*சமாதானத்தின் பக்கம் சாய்ந்தால் நீரும் அதன்பக்கம் சாய்வீராக! நீர் அல்லாஹ்வையே சார்ந்திருப்பீராக! உறுதியாக அவன் செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன். [62]அவர்கள் உம்மை ஏமாற்ற முனைந்தால் அல்லாஹ் உமக்குப் போதுமானவன். அவன்தான் தனது உதவியின் மூலமாகவும் (ஓரிறை)நம்பிக்கையாளர்களின் மூலமாகவும் உம்மை வலுப்படுத்தினான். [63]அவன்தான் நம்பிக்கையாளர்களின் உள்ளங்களுக்கிடையே இணக்கத்தை உண்டாக்கினான். பூமியில் உள்ள அனைத்தையும் நீர் செலவு செய்தாலும் அவர்களின் உள்ளங்களுக்கிடையே உம்மால் இணக்கத்தை உண்டாக்க முடியாது. ஆயினும் அல்லாஹ்தான் அவர்களிடையே இணக்கத்தை உண்டாக்கினான். உறுதியாக அவன் யாவற்றினும் வல்லவனும் ஞானம் மிக்கவனும் ஆவான்.*

*[64]நபியே! உமக்கும் உம்மைப் பின்பற்றிய நம்பிக்கையாளர்களுக்கும் அல்லாஹ்வே போதுமானவன் [65]நபியே! (தற்காப்பிற்காகப்) போர்புரிவதில் நம்பிக்கையாளர்களுக்கு ஆர்வமூட்டுவீராக! உங்களில் உறுதிவாய்ந்த பொறுமையாளர்கள் இருபது பேர் இருந்தால் இருநூறு பேர்களை வென்றுவிடலாம்; உங்களில் நூறு பேர் இருந்தால் ஆயிரம் மறுப்பாளர்களை வென்றுவிடலாம். ஏனெனில் அவர்கள் புரிந்துகொள்ளாத மக்களாக இருக்கின்றனர்.* [66]உங்களிடம் பலவீனமுள்ளது என்பதை அல்லாஹ் அறிந்து கொண்டதனால் இப்போது அவன் உங்களுக்கு(ச் சுமையானதை) எளிதாக்கி விட்டான். எனவே உங்களில் உறுதிவாய்ந்த பொறுமையாளர்கள் நூறு பேர் இருந்தால் அவர்களில் இருநூறு பேர்களை வென்றுவிடலாம்; ஆயிரம் பேர் இருந்தால் இறைவனின் கட்டளையால் இரண்டாயிரம் பேர்களை வென்றுவிடலாம். அல்லாஹ் (உறுதிவாய்ந்த) பொறுமையாளர்களுடன் இருக்கிறான்.*

*[67](போர்க்)களத்தில் எதிரிகளை முற்றாக ஒழிக்காமல் அவர்களைக் கைதிகளாகப் பிடிப்பது எந்தத் தூதருக்கும்*

---

***முன்னுரை காண்க : பக்கம் எண் XX**

*ஏற்புடையதன்று. (நம்பிக்கையாளர்களே!) நீங்கள் (கைதிகளை விடுவித்துப் பெறும் பிணைத் தொகையாகிய) இவ்வுலகப் பொருள்களை விரும்புகிறீர்கள்; அல்லாஹ் (உங்களுக்காக) மறுமையை விரும்புகிறான். அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன். [68]அல்லாஹ்விடம் (உங்களுக்கு மன்னிப்பு) ஏற்கனவே உறுதி செய்யப்படாமலிருந்தால் நீங்கள் (பத்ருப் போரில் கைதிகளிடமிருந்து பிணைத் தொகை) பெற்றுக்கொண்டதன் காரணமாக உங்களைப் பெரும் வேதனை வந்தடைந்திருக்கும். [69]எனவே நீங்கள் (போரில்) கிடைத்த பொருள்களை அனுபவித்துக் கொள்ளுங்கள். அவை உங்களுக்கு அனுமதிக்கப்பட்டவை; தூய்மையானவை. அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

*[70]நபியே! உங்களிடம் இருக்கும் கைதிகளிடம், “அல்லாஹ் உங்கள் உள்ளங்களில் நன்மை இருப்பதைக் கண்டால் உங்களிடமிருந்து (பிணைத்தொகையாகப்) பெறப்பட்டதை விடச் சிறப்பானதை அவன் உங்களுக்கு வழங்குவான். உங்களை மன்னித்தும் விடுவான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனும் நிகரற்ற அன்பாளனும் ஆவான்” என்று கூறுவீராக! [71](ஆயினும்) அவர்கள் உமக்குத் துரோகம் செய்யக் கருதினால் – ஏற்கனவே அவர்கள் அல்லாஹ்வுக்குத் துரோகமிழைத்துள்ளனர். (அதனால்தான் அல்லாஹ்) அவர்கள் மீது உமக்கு அதிகாரம் அளித்தான். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்.*

*[72](ஓரிறை)நம்பிக்கைகொண்டு (தங்கள் சொந்த ஊர்களிலிருந்து) புலம் பெயர்ந்து, தம் செல்வங்களாலும் உயிர்களாலும் இறைவழியில் பாடுபட்டவர்களும் (அவர்களுக்குப்) புகலிடமளித்து உதவிபுரிந்தவர்களும் ஒருவருக்கொருவர் உற்ற தோழர்கள் ஆவர். ஆனால் யாரெல்லாம் நம்பிக்கைகொண்ட பின்பும் புலம்பெயரவில்லையோ அவர்கள் புலம்பெயரும்வரை அவர்களு(டைய பாதுகாப்பு)க்கு எவ்வகையிலும் நீங்கள் பொறுப்பாளர்கள் இல்லை. (ஆயினும்) மார்க்கம் தொடர்பாக*

*அவர்கள் உங்களிடம் உதவிகோரினால் (அவர்களுக்கு) உதவிபுரிவது உங்களுக்குரிய கடமையாகும். ஆனால் அது உங்களுடன் உடன்படிக்கை செய்துகொண்ட சமூகத்தினருக்கு எதிராக இருக்கக்கூடாது. நீங்கள் செய்பவற்றையெல்லாம் அல்லாஹ் உற்றுநோக்கிக் கொண்டிருக்கிறான். [73]மறுப்பாளர்கள் ஒருவருக்கொருவர் உற்ற நண்பர்களாக இருக்கின்றனர். நீங்கள் அவ்வாறு (ஒருவருக்கொருவர் உதவி) செய்யவில்லையெனில் உலகில் பெரும் சீர்குலைவும் குழப்பமும்தான் ஏற்படும்.*

*[74]நம்பிக்கைகொண்டு, புலம்பெயர்ந்து, இறைவழியில் பாடுபட்டவர்களும் அவர்களுக்குப் புகலிடமளித்து உதவிபுரிந்தவர்களும் உண்மையான நம்பிக்கையாளர்கள். அவர்களுக்கு(ப் பாவ)மன்னிப்பும் கண்ணியமான வாழ்வாதாரமும் உண்டு. [75]உங்களுக்குப் பின்னர் நம்பிக்கைகொண்டு புலம்பெயர்ந்து உங்களுடன் இணைந்து பாடுபட்டவர்களும் உங்களைச் சார்ந்தவர்களே. இறைவேதப்படி (அவர்களுக்குள்) இரத்தபந்த உறவினர்கள் ஒருவருக்கொருவர் அதிக உரிமை பெற்றவர்கள். உறுதியாக அல்லாஹ் எல்லாவற்றையும் முற்றும் அறிந்தவன்.*

## 9. பாவமீட்சி (அத்தவ்பா)

*[1](ஓரிறை நம்பிக்கையாளர்களே!) இது, நீங்கள் உடன்படிக்கை செய்துகொண்ட இணைவைப்பாளர்க(ள் அதனை மீறியதனால் அவர்க)ளிடமிருந்து அல்லாஹ்வும் அவனது தூதரும் விலகிக் கொண்டனர் என்பதற்கான அறிவிப்பாகும். [2]எனவே "(இணைவைப்பாளர்களே! இனி) நான்கு மாதங்கள் (மக்காவின்) பூமியில் நீங்கள் சுற்றித் திரியலாம். 'அல்லாஹ்வை உங்களால் ஒருபோதும் முறியடிக்க முடியாது' என்பதையும் 'அல்லாஹ் (ஓரிறை)மறுப்பாளர்களை இழிவுபடுத்தியே தீருவான்' என்பதையும் அறிந்துகொள்ளுங்கள்" (என்று நபியே! நீர் கூறுவீராக!) [3]இது இம்மாபெரும் ஹஜ்ஜுடைய நாளில் அல்லாஹ்விடமிருந்தும் அவனுடைய தூதரிடமிருந்தும்*

*மக்களுக்கு விடுக்கப்படும் பொது அறிவிப்பு. அல்லாஹ்வும் அவனது தூதரும் இணைவைப்பாளர்களிடம் (செய்திருந்த உடன்படிக்கையில்) இருந்து விலகிக்கொண்டனர். எனவே "(இணைவைப்போரே!) நீங்கள் பாவமன்னிப்புக் கோரினால் அது உங்களுக்குத்தான் நல்லது; புறக்கணிப்பீர்களாயின் நீங்கள் அல்லாஹ்வை வெல்லமுடியாது என்பதை அறிந்துகொள்ளுங்கள். மறுப்பாளர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு" எனும் 'நற்செய்தி'யை (நபியே! நீர்) கூறிவிடுவீராக! [4]ஆயினும் (நம்பிக்கையாளர்களே!) நீங்கள் உடன்படிக்கை செய்துகொண்ட இணைவைப்பாளர்களில் எவர் (உடன்படிக்கையில்) எவ்வகைக் குறையும் வைக்காமலும் உங்களுக்கு எதிராக யாருக்கும் உதவி செய்யாமலும் இருக்கிறார்களோ அவர்களுடனான உடன்படிக்கையை உரிய தவணைவரை நிறைவேற்றுங்கள். உறுதியாக அல்லாஹ் இறையச்சமுடையோரை நேசிக்கிறான்.*

*[5](போர்செய்வது தடைசெய்யப்பட்டப்) புனித மாதங்கள் கடந்து விட்டால் (உங்களுடன் போர் புரிந்துகொண்டிருக்கும்) இணைவைப்பாளர்களை எங்குக் கண்டாலும் கொல்லுங்கள். அவர்களை(ச் சிறை)ப் பிடியுங்கள்; முற்றுகையிடுங்கள்; அனைத்துப் பதுங்குமிடங்களிலும் அவர்களைக் குறிவைத்துக் காத்திருங்கள். ஆனால் அவர்கள் பாவமன்னிப்புக் கோரித் தொழுகையைக் கடைப்பிடித்துக் கடமையாக்கப்பட்ட கொடையை வழங்கிவந்தால் அவர்களை விட்டுவிடுங்கள். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.* [6](நபியே!) இணைவைப்பாளர்களில் யாரேனும் உம்மிடம் அடைக்கலம் கோரினால் அவர் இறைவாக்கைச் செவியுற வாய்ப்பாக அவருக்குப் பாதுகாப்பு அளிப்பீராக! பின்னர்ப் பாதுகாப்பான இடத்தில் அவரைச் சேர்த்து விடுவீராக! ஏனெனில் அவர்கள் அறியாத மக்களாக இருக்கிறார்கள்.*

---

***முன்னுரை காண்க : பக்கம் எண்** XX

[7](கஅபா எனும்) புனித இறையில்லத்தின் முன் நீங்கள் உடன்படிக்கை செய்து கொண்டவர்களைத் தவிர (ஏனைய இணைவைப்பாளர்களுடன்)அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் எவ்வாறு உடன்படிக்கை இருக்க முடியும்? உங்களுடன் அவர்கள் (தம் உடன்படிக்கையில்) நேர்மையாக நடந்து கொள்ளும்வரை நீங்களும் அவர்களுடன் நேர்மையாக நடந்து கொள்ளுங்கள். உறுதியாக அல்லாஹ் இறையச்சமுடையோரை நேசிக்கிறான்.
[8](அவர்களைத் தவிர மற்ற இணைவைப்பாளர்களுடன்) எவ்வாறு உடன்படிக்கை இருக்க முடியும்? அவர்கள் உங்களைவிட மேலோங்கிவிட்டால் உங்களுக்கிடையேயுள்ள உறவையோ உடன்படிக்கையையோ பொருட்படுத்தமாட்டார்கள். அவர்கள் தங்கள் வாய்(மொழி)களால் உங்களுக்கு மனநிறைவு தர முனைகிறார்கள். ஆனால் அவர்களின் உள்ளங்களோ (உங்களிடமிருந்து) விலகிக் கொள்கின்றன. அவர்களில் பெரும்பாலோர் (உடன்படிக்கைகளை) முறிப்போர் ஆவர்.
[9]அவர்கள் இறைவசனங்களை இழிந்த ஊதியத்திற்கு விற்றுவிட்டனர்; மக்களை அவனது பாதையில் செல்லவிடாமல் தடுத்தனர். அவர்கள் செய்து கொண்டிருப்பது எவ்வளவு கொடிய செயல்!
[10]அவர்கள் எந்த நம்பிக்கையாளர் தொடர்பாகவும் உறவுமுறையையோ உடன்படிக்கையையோ பொருட்படுத்துவதில்லை. அவர்கள்தாம் வரம்புமீறியவர்கள்.
[11]அவர்கள் (பாவ)மன்னிப்புக் கோரி, தொழுகையைக் கடைப்பிடித்துக், கடமையாக்கப்பட்ட கொடையை வழங்கியும் வருவார்களாயின் மார்க்கத்தில் அவர்கள் உங்கள் சகோதரர்கள்தாம். அறிந்து கொள்ளும் மக்களுக்கு நாம் (எமது) வசனங்களைத் தெளிவாக எடுத்துரைக்கிறோம்.
[12]உடன்படிக்கைக்குப் பின்னர் அவர்கள் தம் சத்தியங்களை முறித்துவிட்டு உங்கள் மார்க்கத்தைக் குறை கூறிக் கொண்டிருந்தால் (அத்தகைய) மறுப்பாளர்களின் தலைவர்களுடன் நீங்கள் போரிடுங்கள். ஏனெனில் அவர்களது சத்தியங்களுக்கு எந்த மதிப்புமில்லை. (இதன்மூலம்) அவர்கள் (தம் போக்கிலிருந்து) விலகிக் கொள்ளக்கூடும்.
[13]தங்கள் உடன்படிக்கைகளை முறித்து (எமது) தூதரை வெளியேற்றத் துணிந்தவர்களுடன் நீங்கள்

*போர்புரிய வேண்டாமா? அவர்கள்தாம் போரை முதலில்
தொடங்கினர். அவர்களுக்கு நீங்கள் அஞ்சுகிறீர்களா? நீங்கள்
நம்பிக்கையாளர்களாக இருந்தால் அல்லாஹ்வே நீங்கள்
அஞ்சுவதற்கு மிகத் தகுதியானவன். [14]அவர்களுடன் போரிடுங்கள்.
உங்கள் கைகளைக்கொண்டு அல்லாஹ் அவர்களைத்
தண்டிப்பான்; அவர்களை இழிவுபடுத்துவான்; அவர்களை
வென்றிட உங்களுக்கு உதவிபுரிவான். மேலும் நம்பிக்கைகொண்ட
மக்களின் உள்ளங்களுக்கு ஆறுதல் அளிப்பான். [15](அமைதி
ஏற்படும் நிலையில், ஒடுக்கப்பட்டிருந்த) நம்பிக்கையாளர்களின்
உள்ளங்களில் இருக்கும் கடுஞ்சினத்தைப் போக்கி விடுவான்.
(மறுப்பாளர்களிலும்) தான் விரும்பியவர்களின் (பாவ)மன்னிப்புக்
கோரிக்கையை ஏற்பான். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்;
ஞானம் மிக்கவன். [16]உங்களில் (இறைவழியில் மனமொப்பி)
பாடுபட்டவர்கள் யார் என்பதையும் அல்லாஹ்வையும் தூதரையும்
நம்பிக்கையாளர்களையும் தவிர மற்றவர்களை நண்பர்களாக்கி
கொள்ளாதவர்கள் யார் என்பதையும் அல்லாஹ் (சோதித்து)
அறிந்திடாத நிலையில் நீங்கள் அப்படியே விட்டுவிடப்படுவீர்கள்
என்று எண்ணிக் கொண்டீர்களா? நீங்கள் செய்பவற்றை
அல்லாஹ் நன்கு அறிகின்றவன்.*

*[17]தங்களின் (இறை) மறுப்பிற்குத் தாங்களே சாட்சி சொல்லிக்
கொண்டிருக்கும் இணைவைப்பாளர்களுக்கு இறையில்லங்களைப்
பேணும் உரிமை இல்லை; அவர்களின் (நற்)செயல்கள் அனைத்தும்
வீணாகிவிட்டன; அவர்கள் என்றென்றும் நரகத்தில் கிடப்பர்.
[18]அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கைகொண்டு
தொழுகையைக் கடைப்பிடித்து, கடமையாக்கப்பட்ட
கொடையை வழங்கி அல்லாஹ்வைத் தவிர வேறு யாருக்கும்
அஞ்சாமல் இருப்பவர்கள்தாம் இறையில்லங்களைப்
பேணுவதற்குத் தகுதியுடையவர்கள். இத்தகையவர்கள்தாம்
நேர்வழி பெற்றவர்களாக இருக்கக் கூடும். [19](நம்பிக்கையின்றி)
ஹஜ் செய்வோருக்குத் தண்ணீர் புகட்டுவோரையும் புனித*

இறையில்லத்தைப் பேணுவோரையும் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கைகொண்டு இறைவழியில் பாடுபடுவோருக்குச் சமமாக்கி விட்டீர்களா? இவ்விரு சாராரும் அல்லாஹ்விடம் சமமாகமாட்டார்கள். தீவினைபுரியும் மக்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவதில்லை.
[20]நம்பிக்கைகொண்டு புலம்பெயர்ந்து இறைவழியில் தம் செல்வங்களாலும் உயிர்களாலும் பாடுபடுவோர் அல்லாஹ்விடம் உயர்ந்த தகுதியைப் பெறுவர். அவர்கள்தாம் வெற்றியாளர்கள்.
[21]இறைவன் தன் அருளையும் உவப்பையும் அளித்து முடிவற்ற பேரின்பம் நிலவும் சொர்க்கச் சோலைகளைத் தருவதாக அவர்களுக்கு நற்செய்தி கூறுகின்றான்.
[22]அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பர். உறுதியாக அல்லாஹ்விடம்தான் மாபெரும் கூலி உண்டு.

[23]நம்பிக்கையாளர்களே! உங்கள் தந்தையர்களும் சகோதரர்களும் நம்பிக்கையைவிட மறுப்பை விரும்பக் கூடியவர்களாக இருந்தால் அவர்களைக் கூட்டாளிகளாகக் கொள்ளாதீர்கள். உங்களில் அவர்களைக் கூட்டாளிகளாக்கிக் கொள்பவர்கள் தீவினையாளர்களே ஆவர்.
[24](நபியே!) நீர் கூறும்: “உங்கள் தந்தையரும் பிள்ளைகளும் சகோதரர்களும் (வாழ்க்கைத்) துணைகளும் குடும்பத்தினரும், நீங்கள் ஈட்டிய பெருஞ்செல்வமும் இழப்பாகிவிடுமோ என்று நீங்கள் அஞ்சுகின்ற வணிகமும் நீங்கள் விரும்பும் உங்கள் வீடுகளும் அல்லாஹ்வை விடவும் அவனது தூதரைவிடவும் அவனது பாதையில் பாடுபடுவதைவிடவும் உங்களுக்கு விருப்பமானவையாக இருந்தால் இறைக்கட்டளை வரும்வரை எதிர்பார்த்திருங்கள். கீழ்ப்படியாத மக்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவதில்லை.

[25]அல்லாஹ் உங்களுக்குப் பல போர்க்களங்களில் உதவி புரிந்துள்ளான். ஹுனைன் போர் (நடைபெற்ற) நாளில் உங்களின் பெரும் எண்ணிக்கை உங்களை இறுமாப்பில் ஆழ்த்தியிருந்தது. ஆயினும் (அந்த எண்ணிக்கை) உங்களுக்கு எந்தப் பயனையும் அளிக்கவில்லை. பூமி விரிவானதாக இருந்தும் உங்களுக்குக்

குறுகிவிட்டிருந்தது. நீங்கள் புறங்காட்டி ஓடினீர்கள். 26பின்னர்த்
தன் தூதர்மீதும் நம்பிக்கையாளர்கள் மீதும் அல்லாஹ்
அமைதியை இறக்கி அருளினான். உங்கள் கண்ணுக்குத் தெரியாத
படைகளையும் இறக்கி மறுப்பாளர்களைத் தண்டித்தான்.
இதுவே மறுப்பாளர்களுக்கான கூலியாகும். 27அதன் பின்னரும்
தான் விரும்பியோருக்கு அவன் பாவமன்னிப்புப் பேற்றினை
அளிக்கின்றான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற
அன்பாளன். 28நம்பிக்கையாளர்களே! இணைவைப்பாளர்கள்
(கொள்கையால்) முற்றிலும் மாசுடையவர்கள். எனவே
அவர்கள் இந்த ஆண்டுக்குப் பிறகு புனித இறையில்லத்தின்
அருகில் வரக்கூடாது. (அவர்களால் கிடைத்துவந்த வணிக
வருவாய் நின்றுபோய்) வறுமை வந்துவிடுமோ என்று நீங்கள்
அஞ்சினால் அல்லாஹ் விரும்பியபடி தன் அருளால் உங்களைத்
தன்னிறைவுடையவர்கள் ஆக்குவான். அல்லாஹ் முற்றும்
அறிந்தவன்; ஞானம் மிக்கவன்.

29அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பாமலும்
அல்லாஹ்வும் அவனது தூதரும் விலக்கியவற்றை விலக்கிக்
கொள்ளாமலும் சத்திய மார்க்கத்தை ஏற்றுக்கொள்ளாமலும்
இருக்கும் வேதமுடையோர் கீழ்ப்படிந்து விருப்பத்துடன்
வரி செலுத்தும்வரை அவர்களுடன் போரிடுங்கள்* 30‘எஸ்ரா
இறைவனின் மைந்தர்’ என்று யூதர்கள் கூறுகின்றனர். ‘மஸீஹ்
இறைவனின் மைந்தர்’ என்று கிறிஸ்தவர்கள் கூறுகின்றனர்.
அவர்கள் தம் வாய்களால் கூறும் இ(ப்பொய்)க் கூற்றானது இதற்கு
முன்னிருந்த மறுப்பாளர்களின் கூற்றையே ஒத்திருக்கின்றது.
அல்லாஹ் அவர்களை அழிக்கட்டும்! அவர்கள் எங்கே
தடுமாறிச் செல்கிறார்கள்? 31அவர்கள் அல்லாஹ்வையன்றித்
தங்கள் மத குருக்களையும் துறவிகளையும் மர்யத்தின் மைந்தர்
மஸீஹையும் கடவுளாக்கிக் கொண்டனர். உண்மையில் அவர்கள்
ஒரே இறைவனையன்றி (வேறு தெய்வங்களை) வணங்கக்

---

*முன்னுரை காண்க : பக்கம் எண் XX

*கட்டளையிடப்படவில்லை. அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு இல்லை. அவர்கள் இணைவைப்பவற்றிலிருந்து அவன் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்.*

[32]*அல்லாஹ்வின் பேரொளியைத் தம் வாய்களைக்*
*கொண்டே (ஊதி) அணைத்துவிட அவர்கள் விரும்புகின்றனர்.*
*அல்லாஹ்வோ தனது ஒளியை முழு நிறைவாக்கியே தீர்வான்,*
*மறுப்பாளர்கள் வெறுத்தாலும் சரியே!* [33]*அவன்தான்*
*தனது தூதரை நேர்வழியுடனும் சத்தியத்துடனும் அனுப்பி*
*வைத்தான்; இணைவைப்பாளர்கள் வெறுத்தாலும் சரி, ஏனைய*
*அனைத்து மார்க்கங்களைவிடவும் (கோட்பாட்டளவில்)*
*அ(ம்மார்க்கத்)தை மேலோங்கச் செய்யவேண்டும் என்பதற்காக!*
[34]*நம்பிக்கையாளர்களே! (வேதமுடையோரில்) பெரும்பாலான*
*மதகுருக்களும் துறவிகளும் மக்களின் செல்வங்களைத் தவறான*
*முறையில் விழுங்குகிறார்கள். இறைவழியிலிருந்து (மக்களைத்)*
*தடுக்கின்றனர். (அவர்களுக்கும்) பொன்னையும் வெள்ளியையும்*
*சேர்த்து வைத்துக்கொண்டு இறைவழியில் செலவிடாமல்*
*இருப்பவர்களுக்கும் துன்புறுத்தும் வேதனையுண்டு எனும்*
*'நற்செய்தி'யை (நபியே! நீர்) கூறிவிடுவீராக!* [35]*(மறுமையாகிய)*
*அந்நாளில் அச்செல்வங்கள் நரகநெருப்பில் பழுக்கக் காய்ச்சப்பட்டு*
*அவற்றால் (அவர்களுடைய) நெற்றிகளிலும் விலாப்புறங்களிலும்*
*முதுகுகளிலும் சூடு போடப்படும். "இவைதாம் நீங்கள்*
*உங்களுக்காகச் சேமித்து வைத்தவை; எனவே நீங்கள் சேமித்து*
*வைத்தவற்றைச் சுவைத்துப் பாருங்கள்" (என்று அவர்களிடம்*
*கூறப்படும்.)*

[36]*அல்லாஹ்விடம் மாதங்களின் எண்ணிக்கை பன்னிரண்டாகும். வானங்களையும் பூமியையும் படைத்த நாளிலிருந்து இது அல்லாஹ்வின் பதிவேட்டில் உள்ளது. அவற்றில் நான்கு (மாதங்கள்) புனிதமானவை. இதுவே சீரிய மார்க்கம். எனவே அம்மாதங்களில் (போர் புரிவதன் மூலம்) உங்களுக்கு நீங்களே அநீதியிழைத்துக் கொள்ளாதீர்கள். (எனினும் அம்மாதங்களில்) இணைவைப்பாளர்கள் ஒன்றிணைந்து (உங்கள்மீது) போர்*

*தொடுத்தால் அதுபோலவே நீங்களும் ஒன்றிணைந்து அவர்களுடன் போர் புரியுங்கள். அறிந்து கொள்ளுங்கள்! உறுதியாக அல்லாஹ் இறையச்சமுடையோருடன் இருக்கின்றான்.** [37] *(புனித) மாதங்களை (அவர்கள் தமது விருப்பப்படி) தள்ளிப்போடுவது (இறை) மறுப்பை இன்னும் மிகுதிப்படுத்துவதாகும். இதன் மூலம் மறுப்பாளர்களே வழிகெடுகின்றனர். (இவ்வாறு தள்ளிப்போட்டுப் புனித மாதங்களான) அவற்றை ஓராண்டில் (போருக்கு) அனுமதிக்கப்பட்டவையாகவும் மற்றோர் ஆண்டில் தடை செய்யப்பட்டவையாகவும் அவர்கள் ஆக்கிக் கொள்கின்றனர். இ(ச்செயலான)து அல்லாஹ் புனிதப்படுத்தியுள்ள மாதங்களின் எண்ணிக்கையைச் சரிசெய்து காட்டுவதற்காகவும் தடுத்துள்ள மாதங்களை(த் தங்கள் விருப்பப்படி) போர் செய்ய அனுமதிக்கப்பட்டவை என மாற்றிக் கொள்வதற்காகவும்தான். அவர்களது தீயசெயல்கள் அவர்களுக்கு அழகியவையாகக் காட்டப்பட்டுள்ளன. அல்லாஹ் மறுப்பாளர்களுக்கு நேர்வழி காட்டுவதில்லை.*

[38]*நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு என்ன ஆயிற்று? இறைவழியில் (போரிடப்) புறப்படுங்கள் என்று உங்களிடம் கூறப்பட்டால் உலகத்தைப் பற்றிக்கொள்கிறீர்களே! மறுமையைவிட இவ்வுலக வாழ்வில் நிறைவடைந்து விட்டீர்களா? மறுமைக்குமுன் இவ்வுலக வாழ்வின் இன்பங்கள் அனைத்தும் மிகப் புன்மையானவையே.*
[39]*நீங்கள் புறப்படவில்லையெனில் அவன் உங்களுக்குத் துன்புறுத்தும் வேதனையை அளிப்பான். (உங்களை அகற்றிவிட்டு) உங்களுக்குப் பதிலாக வேறொரு சமூகத்தினரைக் கொண்டு வருவான். நீங்கள் அவனுக்கு எந்தவொரு தீங்கும் இழைக்க முடியாது. ஏனெனில் அல்லாஹ் யாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.* [40]*நீங்கள் தூதருக்கு உதவிபுரியவில்லையெனில் (அதனால் என்ன?) மறுப்பாளர்கள் அவரை (ஊரிலிருந்து) வெளியேற்றியபோது அல்லாஹ் அவருக்கு உதவி புரிந்துள்ளான். (மலைக்) குகையில்*

---

**முன்னுரை காண்க : பக்கம் எண் XX*

இருவரில் ஒருவராக இருந்தபோது தூதர் தம் தோழ(ராகிய அபூபக்)ரை நோக்கிக் "கவலைப்படாதீர்; அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்" என்று கூறினார். அப்போது அல்லாஹ் அவருக்கு மனஅமைதியை அருளினான்; பார்வைக்குப் புலப்படாத படைகளின்மூலம் அவருக்கு உதவி புரிந்தான். அல்லாஹ் மறுப்பாளர்களின் வாக்கைத் தாழ்த்தி விட்டான். அல்லாஹ்வின் வாக்கே உயர்வானது. அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.
[41](வளம், வலிமை, கருவிகள் போன்றவை) குறைவாக இருந்தாலும் நிறைவாக இருந்தாலும் புறப்படுங்கள். உங்களின் செல்வங்களாலும் உயிர்களாலும் இறைவழியில் பாடுபடுங்கள். நீங்கள் அறிந்துகொள்வதானால் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும்.
[42](நபியே!) உடனடிப் பயன் கிடைக்கும் என்றும் பயணம் எளிதானது என்றும் இருந்தால் உறுதியாக அவர்கள் உம்மைப் பின்தொடர்ந்து வந்திருப்பர். ஆனால் தொலைவான இப்பயணம் அவர்களுக்குச் சிரமமாகத் தோன்றியது. எங்களால் இயன்றிருப்பின் நாங்களும் உங்களுடன் வந்திருப்போம் என்று அவர்கள் சத்தியம் செய்து கூறுவர். அவர்கள் தம்மைத் தாமே அழிவுக்குள்ளாக்கிக் கொள்கின்றனர். அவர்கள் பொய்யர்கள் என்பதை அல்லாஹ் நன்கறிவான்.
[43](நபியே!) அல்லாஹ் உம்மை மன்னிக்கட்டும்! உண்மையாளர்கள் யார் என்பது உமக்குத் தெளிவாகிப் பொய்யர்களை நீர் அறிந்து கொள்வதற்கு முன்பே (போருக்கு வராதிருக்க) அவர்களுக்கு ஏன் அனுமதியளித்தீர்?
[44]அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்டவர்கள் தம் செல்வங்களாலும் உயிர்களாலும் இறைவழியில் பாடுபடாமலிருக்க அனுமதி கோரமாட்டார்கள். அல்லாஹ் இறையச்சமுடையோரை நன்கறிந்தவன்.
[45]உம்மிடம் அனுமதி வேண்டுபவர்கள் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொள்ளாதவர்கள்தாம். அவர்களுடைய உள்ளங்கள் ஐயத்திற்கு இரையாகிவிட்டன. தம் ஐயங்களிலேயே அவர்கள் தடுமாறிக் கொண்டிருக்கின்றனர்.
[46](நயவஞ்சகர்களாகிய) அவர்கள் (உண்மையாகவே) புறப்பட

விரும்பியிருந்தால் உறுதியாக அதற்கான முன்னேற்பாடுகளைச் செய்திருப்பார்கள். ஆனால் அல்லாஹ் அவர்கள் புறப்படுவதை விரும்பவில்லை. எனவே அவன் அவர்களைத் தடுத்துவிட்டான். “(ஊரில்) தங்கியிருப்போருடன் சேர்ந்து நீங்களும் தங்கியிருங்கள்” என்று (அவர்களுக்குக்) கூறப்பட்டுவிட்டது.

47அவர்கள் உங்களுடன் புறப்பட்டிருந்தாலும் ஒழுங்கீனத்தையன்றி (எந்த நன்மையையும்) மிகுதிப்படுத்தியிருக்க மாட்டார்கள். உங்களிடையே (அங்கும் இங்குமாக இயங்கிக்) குழப்பம் விளைவிக்கவே முயன்றிருப்பார்கள். அவர்களுக்குச் செவிசாய்க்கும் சிலரும் உங்களிடையே இருக்கின்றனர். அல்லாஹ் தீவினைசெய்வோரை நன்கறிந்தவன். 48(நபியே!) அவர்கள் இதற்கு முன்னரும் குழப்பம் விளைவிக்க முயன்றிருக்கின்றனர். உமது செயல்பாடுகளை(த் தலைகீழாக)ப் புரட்டிக்கொண்டிருந்தனர். இறுதியில் அவர்கள் வெறுத்தபோதிலும் உண்மைவெளிவந்தது. அல்லாஹ்வின் கட்டளையே வெற்றிபெற்றது.

49(நபியே!)அவர்களில்“(போருக்கு வராமல் தங்கியிருக்க)எனக்கு அனுமதி தருவீராக! என்னைச் சோதனைக்குள்ளாக்கி விடாதீர்” என்று கூறும் சிலரும் இருக்கின்றனர். அறிந்துகொள்ளுங்கள்! அவர்கள் ஏற்கனவே சோதனைக்குள் வீழ்ந்து விட்டனர். நரகம் (இத்தகைய ஓரிறை)மறுப்பாளர்களைச் சூழ்ந்து கொண்டுள்ளது.
50(நபியே!) உமக்கு ஏதேனும் நன்மை ஏற்பட்டால் அது அவர்களை வருத்தமுறச் செய்கிறது. உமக்கு ஏதேனும் தீங்கு ஏற்பட்டால் “நாங்கள் முன்கூட்டியே (எச்சரிக்கையாக) முடிவெடுத்து விட்டோம்” என்று கூறி மகிழ்ச்சியுடன் திரும்பிச் செல்கின்றனர். 51(நபியே! அவர்களிடம்) “அல்லாஹ் எங்களுக்கு விதித்தது தவிர (வேறு எதுவும்) எங்களுக்கு நேராது. அவன்தான் எங்களின் பாதுகாவலன். நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருக்க வேண்டும்” என்று கூறுவீராக! 52(நபியே!) நீர் கூறும்! “எங்களுக்கு (வெற்றி அல்லது உயிர்த்தியாகம் என்னும்) இரு நற்பயன்களில் ஒன்றைத் தவிர(த்

*தீங்காக) வேறு எதுவும் (நேரும் என) நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா? ஆனால் (உங்களுக்கு) நாங்கள் எதிர்பார்ப்பதெல்லாம் அல்லாஹ் தண்டனையை நேரடியாக உங்களுக்கு அனுப்புவதையோ அல்லது எங்கள் கைகள் மூலமாக உங்களைத் தண்டிப்பதையோதான். எனவே எதிர்பாருங்கள். நாங்களும் உங்களுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்".*

[53]*(நபியே! அவர்களிடம்) "நீங்கள் விரும்பியோ விரும்பாமலோ (அறச்)செலவு செய்யலாம்; ஆனால் உங்களிடமிருந்து ஒருபோதும் அது ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது; (ஏனெனில்) உறுதியாக நீங்கள் கீழ்ப்படியாத மக்களாக இருக்கின்றீர்கள்"
என்றும் (நீர்) கூறுவீராக!* [54]*அவர்களின் நன்கொடைகள் ஏற்றுக்கொள்ளப்படாததற்கான காரணம், அவர்கள் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் (ஏற்க) மறுப்பதும் ஈடுபாடின்றித் தொழுகைக்கு வருவதும் விருப்பமின்றியே (அறச்)செலவு செய்வதுமாகும்.*
[55]*(நபியே!) அவர்களின் செல்வங்களும் பிள்ளைகளும் உம்மை வியப்பில் ஆழ்த்திவிட வேண்டாம். அவற்றின் மூலம் அவர்களை இவ்வுலக வாழ்விலேயே தண்டிக்க அல்லாஹ் விரும்புகிறான். மேலும் மறுப்பு நிலையிலேயே அவர்களின் உயிர்கள் பிரிய வேண்டும் என்றும் அவன் விரும்புகிறான்.* [56]*"நாங்களும்
உங்களைச் சார்ந்தவர்கள்தான்" என்று அவர்கள் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூறுகின்றனர். ஆனால் அவர்கள் உங்களைச் சார்ந்தவர்கள் அல்லர். மாறாக அவர்கள் (தங்கள் உண்மை நிலையை வெளிப்படுத்த) அஞ்சுவோர் ஆவர்.* [57]*ஏதேனும்
புகலிடத்தையோ குகையையோ பதுங்குமிடத்தையோ கண்டால் அவர்கள் (உம்மைப் பிரிந்து) ஓடிஒளிந்து கொள்வார்கள்.*

[58]*(நபியே!) அவர்களில் சிலர் கொடைப்பொருளைப் பங்கீடு செய்யும் செயலில் உம்மைக் குறை கூறுகின்றனர். (அவர்கள் விருப்பப்படி) அவர்களுக்குக் கொடுக்கப்பட்டால் நிறைவடைகின்றனர். அவ்வாறு கொடுக்கப்படா விட்டால் சினம் கொள்கின்றனர்.* [59]*அல்லாஹ்வும் அவனது தூதரும் அவர்களுக்கு*

*வழங்கியவற்றில் அவர்கள் நிறைவடைந்து “அல்லாஹ்வே எங்களுக்குப் போதுமானவன். அல்லாஹ் தன் அருளிலிருந்து (இன்னும்) எங்களுக்கு வழங்குவான்; அவ்வாறே தூதரும் (வழங்குவார்). நாங்கள் நம்பிக்கையுடன் அல்லாஹ்வையே நோக்கித் திரும்புகிறோம்” என்று கூறி இருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்!*
60*கடமையாக்கப்பட்ட கொடைகள் உண்மையில் (ஏதுமற்ற) வறியவர்களுக்கும் (போதிய வசதியற்ற) ஏழைகளுக்கும் (கொடைகளை வசூலிக்கும்) பணியாளர்களுக்கும் (புதிதாக இஸ்லாத்தின்பால்) ஈர்க்கப்பட்டவர்களுக்கும் அடிமைகளின் விடுதலைக்காகவும் கடனாளிகளுக்கும் இறைவழியில் பாடுபடுவோருக்கும் (தேவையுள்ள) வழிப்போக்கர்களுக்கும் உரியனவாகும். இது அல்லாஹ்வினால் விதிக்கப்பட்ட கடமையாகும். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்.*

61*(எவர் எதைக் கூறினாலும் அதற்குச்) “செவிசாய்ப்பவராக அவர் இருக்கிறார்” என்று கூறித் தூதரைத் துன்புறுத்துபவர்களும் அவர்களில் சிலர் இருக்கின்றனர். அதற்கு, (நபியே!) நீர் கூறும்: “(அவ்வாறு அவர்) செவிசாய்ப்பதுதான் உங்களுக்கு நல்லது. அவர் அல்லாஹ்வை நம்புகிறார்; நம்பிக்கையாளர்களையும் நம்புகிறார். உங்களில் நம்பிக்கை கொண்டோருக்கு அருளாகவும் இருக்கிறார்” என்று நீர் கூறுவீராக! அல்லாஹ்வின் தூதருக்குத் தொல்லை அளிப்போருக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.*
62*(நம்பிக்கையாளர்களே!) உங்களுக்கு மனநிறைவு அளிப்பதற்காக அவர்கள் உங்கள் முன்பு அல்லாஹ்வின் மீது (பொய்ச்)சத்தியம் செய்கின்றனர். அவர்கள் (உண்மையான) நம்பிக்கையாளர்களாக இருந்தால் அவர்கள் மனநிறைவு அளிப்பதற்கு மிகத் தகுதியானவர்கள் அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே ஆவர்.*
63*எவன் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் எதிராக நடந்து கொள்கிறானோ அவனுக்கு நரகநெருப்புத்தான் உண்டு; அதில் அவன் என்றென்றும் கிடப்பான் என்பதை அவர்கள் அறியவில்லையா? இது மாபெரும் இழிவாகும்.*
64*தம் உள்ளங்களில் உள்ளவற்றை*

*(நம்பிக்கையாளர்களாகிய) அவர்களுக்கு புலப்படுத்தக்கூடிய ஏதேனும் ஓர் அத்தியாயம் அவர்களுக்கு அருளப்பட்டுவிடுமோ என்று இந்நயவஞ்சகர்கள் அஞ்சுகின்றனர். "நீங்கள் ஏளனம் செய்து கொண்டிருங்கள். நீங்கள் அஞ்சுவதை அல்லாஹ் வெளிப்படுத்தியே தீருவான்" என்று (நபியே!) நீர் கூறுவீராக.*
*65நீர் அவர்களைக் கேட்டால், "நாங்கள் வேடிக்கையாகவும் விளையாட்டாகவும்தான் பேசிக்கொண்டிருந்தோம்" என்று அவர்கள் கூறுவார்கள். (நபியே!) நீர் "அல்லாஹ்வையும் அவனது வசனங்களையும் அவனது தூதரையுமா நீங்கள் ஏளனம் செய்து கொண்டிருந்தீர்கள்?" என்று கேளும்!*
*66(நயவஞ்சகர்களே!) நீங்கள் (உங்கள் ஏளனத்திற்குச்) சாக்குப்போக்குகள் கூற வேண்டாம். நீங்கள் (இறை) நம்பிக்கைகொண்டபின் (ஏக இறையை) மறுத்துவிட்டீர்கள். உங்களில் ஒரு சாராரை நாம் மன்னித்தாலும் மற்றொரு சாராரை அவர்கள் குற்றம்புரிந்து கொண்டிருந்ததனால் தண்டித்தே தீருவோம்.*

*67நயவஞ்சகர்களான ஆண்கள், பெண்கள் அனைவரும் ஒரே விதமானவர்கள்தாம். அவர்கள் (மக்களைத்) தீமை செய்யத் தூண்டுகின்றனர்; நன்மையிலிருந்து தடுக்கின்றனர். (இறைவழியில் செலவு செய்யாமல்) தம் கைகளை மூடிக் கொள்கின்றனர். அவர்கள் அல்லாஹ்வை மறந்துவிட்டதனால் அல்லாஹ்வும் அவர்களை மறந்துவிட்டான். உறுதியாக நயவஞ்சகர்கள் கீழ்ப்படியாதவர்களே ஆவர்.*
*68நயவஞ்சக ஆண்களுக்கும் பெண்களுக்கும் மறுப்பாளர்களுக்கும் அல்லாஹ் நரக நெருப்பையே வாக்களித்துள்ளான். அதில் அவர்கள் என்றென்றும் கிடப்பர். அதுவே அவர்களுக்குப் பொருத்தமானதாகும். மேலும் அல்லாஹ் அவர்களைச் சபித்துள்ளான். அவர்களுக்கு நிலையான வேதனையும் உண்டு.*
*69(நயவஞ்சகர்களே!) உங்களுக்கு முன் இருந்தவர்களைப் போன்றுதான் நீங்களும் இருக்கிறீர்கள். அவர்கள் உங்களைவிட வலிமை மிக்கவர்களாகவும் மிகுந்த செல்வங்களையும் பிள்ளைகளையும் உடையவர்களாகவும்*

இருந்தனர். அவர்கள் (உலகில்) தம் பங்கினை அனுபவித்தனர்.
நீங்களும் உங்களுக்கு முன் இருந்தோர் தமது பங்கை அனுபவித்தது
போலவே நீங்களும் உங்கள் பங்கினை அனுபவித்தீர்கள்.
அவர்கள் வீண்விவாதங்களில் ஈடுபட்டதைப் போலவே
நீங்களும் வீண் விவாதங்களில் ஈடுபட்டீர்கள். அவர்களின்
(நற்செயல்கள்) இம்மையிலும் மறுமையிலும் நாசமாகி விட்டன.
அவர்கள் இழப்புக்கு ஆளானவர்களே ஆவர். 70இவர்களுக்கு
முன்சென்ற நோவாவின் சமூகத்தினர், ஆத், ஸமூத் சமூகத்தினர்,
ஆப்ரஹாமின் சமூகத்தினர், மத்யன்வாசிகள், தலைகீழாகப்
புரட்டப்பட்ட ஊர்களைச் சார்ந்தவர்கள் ஆகியோரைப் பற்றிய
வரலாறுகள் இவர்களிடம் வரவில்லையா? அவர்களது தூதர்கள்
அவர்களிடம் தெளிவான சான்றுகளைத்தான் கொண்டு வந்தனர்.
அல்லாஹ் அவர்களுக்கு அநீதியிழைக்கவில்லை. மாறாக அவர்கள்
தமக்குத்தாமே அநீதியிழைத்துக் கொண்டிருந்தனர்.

71(ஓரிறை)நம்பிக்கைகொண்ட ஆண்களும் பெண்களும்
ஒருவருக்கொருவர் உற்ற நண்பர்களாக இருக்கின்றனர்.
அவர்கள் (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித்
தூண்டித் தீமையிலிருந்து தடுக்கின்றனர். தொழுகையைக்
கடைப்பிடித்துக் கடமையாக்கப்பட்ட கொடையையும்
அளித்து அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்ப்படிந்து
நடக்கின்றனர். அவர்களுக்குத்தான் அல்லாஹ் அருள்புரிவான்.
அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம்மிக்கவன்.
72நம்பிக்கைகொண்ட ஆண்களுக்கும் பெண்களுக்கும் அல்லாஹ்
சொர்க்கச் சோலைகளை வாக்களித்துள்ளான். அவற்றில்
ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும்
தங்கியிருப்பர். நிலையான சொர்க்கச் சோலைகளில் மிகச் சிறந்த
வாழ்விடங்களும் உண்டு. ஆயினும் இவை அனைத்தைவிடவும்
இறைஉவப்பே மேலானது. அதுவே மாபெரும் வெற்றியாகும்.

73நபியே! மறுப்பாளர்களுக்கும் நயவஞ்சகர்களுக்கும் எதிராகக்
பாடுபடுவீராக! அவர்களைக் கண்டிப்பாக நடத்துவீராக!
அவர்களின் இருப்பிடம் நரகமாகும். அது மிகவும் கொடிய

*இருப்பிடமாகும். [74](நம்பிக்கையாளர்களே!) அந்த நயவஞ்சகர்கள் (இறை)மறுப்புச் சொல்லை உண்மையாகவே கூறியிருந்தும் தாம் கூறவில்லை என்று இறைவனின் மீது சத்தியம் செய்கின்றனர். இஸ்லாத்தை ஏற்ற பின்னர் மறுப்பாளர்களாகி விட்டனர். (தூதருக்குத் தீங்கிழைக்கச் சதிசெய்து) தங்களால் முடியாத ஒரு செயலைச் செய்ய முயன்றனர். அல்லாஹ்வும் அவனது தூதரும் அவன் அருளால் அவர்களைச் செல்வர்களாக ஆக்கியதற்காகவா அவர்கள் வெறுக்கின்றனர். அவர்கள் பாவமீட்சி பெறுவார்களாயின் அது அவர்களுக்குத்தான் நல்லது. அவர்கள் புறக்கணித்து விட்டால் இம்மையிலும் மறுமையிலும் துன்புறுத்தும் வேதனையால் அல்லாஹ் அவர்களைத் தண்டிப்பான். உலகில் அவர்களைப் பாதுகாப்பவரோ உதவுபவரோ இருக்க மாட்டார்கள்.*

*[75]அவர்களில் சிலர், "அல்லாஹ் தனது அருளிலிருந்து எங்களுக்கு வழங்கினால் உறுதியாக நாங்கள் ஈகை அறங்கள் செய்து நல்லோர்களாகி விடுவோம்" என்று அவனிடம் வாக்களித்தனர். [76]ஆனால் அவன் தனது அருளிலிருந்து அவர்களுக்கு வழங்கியபோது அவர்கள் கஞ்சத்தனம் செய்பவர்களாகி விட்டனர். (தங்கள் வாக்குறுதியைப்) புறக்கணித்துத் திரும்பிவிட்டனர். [77](ஆகவே) அல்லாஹ் அவர்கள் தன்னைச் சந்திக்கும் நாள்வரை அவர்களுடைய உள்ளங்களில் நயவஞ்சகத்தைப் பதியச் செய்துவிட்டான். அவர்கள் அல்லாஹ்விடம் செய்த வாக்குறுதிக்கு எதிராக நடந்து கொண்டிருந்ததும் பொய்யுரைத்துக் கொண்டிருந்ததுமே இதற்குக் காரணமாகும். [78]அல்லாஹ் அவர்களின் இரகசியத்தையும் மறைவான கலந்துரையாடலையும் அறிவான் என்பதையும் உறுதியாக அவன் மறைவானவற்றை நன்கறியக்கூடியவன் என்பதையும் அவர்கள் அறியவில்லையா? [79](நயவஞ்சகர்களான) அவர்கள் நம்பிக்கையாளரிலுள்ள(செல்)வர்கள் செய்யும் தாராள ஈகை அறத்தைக் குறை கூறுகின்றனர். தங்களது உழைப்பு (மூலம் கிடைக்கும் சிறு கூலியைத்) தவிர வேறொன்றும் இல்லாதவர்கள்*

செய்யும் (எளிய) ஈகையையும் ஏளனம் செய்கின்றனர். அல்லாஹ்
அவர்களை ஏளனம் செய்கின்றான். அவர்களுக்குத் துன்புறுத்தும்
வேதனையும் உண்டு. 80(நபியே!) நீர் அவர்களுக்காக மன்னிப்புக்
கோரினாலும் கோராவிட்டாலும் (இரண்டும் ஒன்றேயாகும்.) நீர்
அவர்களுக்காக எழுபதுமுறை (பாவ)மன்னிப்புக் கோரினாலும்
அல்லாஹ் ஒருபோதும் அவர்களை மன்னிக்கவேமாட்டான்.
அவர்கள் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் (ஏற்க) மறுத்ததே
இதற்குக் காரணம். பாவம் புரியும் மக்களுக்கு அல்லாஹ் நேர்வழி
காட்டுவதில்லை.

81அல்லாஹ்வின் தூதர் (தபூக் போருக்குப்) புறப்பட்டதற்குப்பின்
(போருக்குச் செல்லாமல்) பின்தங்கிவிட்டவர்கள் தாம் வீடுகளில்
தங்கிவிட்டதுபற்றி மகிழ்ச்சியடைந்தனர். தம் செல்வங்களாலும்
உயிர்களாலும் இறைவழியில் பாடுபடுவதை அவர்கள் வெறுத்தனர்.
“கடுமையான வெயிலில் நீங்கள் புறப்படாதீர்கள்” என்று அவர்கள்
பிறரிடமும் கூறினர். (நபியே!) நீர் அவர்களிடம் “நரகநெருப்பு
இதைவிடக் கடும் வெம்மையானது” என்று கூறுவீராக! (இதை)
அவர்கள் புரிந்துகொள்ள வேண்டுமே! 82எனவே அவர்கள்
கொஞ்சமாகவே சிரிக்கட்டும்; அவர்கள் ஈட்டிக்கொண்ட
(தீய)வற்றின் பயனாக (மறுமையில்) மிகுதியாக அழட்டும்.
83(நபியே! போர் வெற்றியுடன்) அவர்களில் ஒரு சாராரிடம்
அல்லாஹ் உம்மைத் திரும்பவரச் செய்தபோது (உங்கள்
வெற்றியைக் கண்ட) அவர்கள் (வேறு போருக்குப்) புறப்பட
உம்மிடம் அனுமதி வேண்டினால் அவர்களிடம், “நீங்கள்
என்னுடன் ஒருபோதும் புறப்பட மாட்டீர்கள்; என்னுடன்
சேர்ந்து எந்த எதிரியுடனும் போரிடப் போவதுமில்லை;
முன்பு (வீடுகளில்) தங்கிவிடுவதையே விரும்பினீர்கள், ஆகவே
(இப்போதும்) பின்தங்கி விடுவோருடன் நீங்களும் தங்கிவிடுங்கள்”
என்று கூறுவீராக! 84அவர்களில் யாரேனும் இறந்துவிட்டால்
அவருக்காக ஒருபோதும் நீர் தொழுகை நடத்தாதீர். அவரின்
மண்ணறை அருகே(அவருக்காகப் பாவமன்னிப்பு வேண்டி)யும்
நிற்காதீர்! ஏனெனில் அவர்கள் அல்லாஹ்வையும் அவனது

*தூதரையும் மறுத்ததுடன் கீழ்ப்படியாத பாவிகளாகவே இறந்தும் போயிருக்கின்றனர்.*

*[85]அவர்களின் செல்வங்களும் பிள்ளைகளும் (பெருகியிருப்பது) உமக்கு வியப்பளிக்க வேண்டாம். அவற்றின் மூலம் அல்லாஹ் அவர்களை இவ்வுலகில் தண்டிக்கவும் இறைமறுப்பு நிலையிலேயே அவர்களின் உயிர்கள் பிரிந்து விடுவதையும் விரும்புகிறான்.*
*[86](நபியே!) "அல்லாஹ்வின் மீது நம்பிக்கைகொண்டு அவனது தூதருடன் (இணைந்து) இறைவழியில் பாடுபடுங்கள்" என(க் கட்டளையிடும்) ஓர் அத்தியாயம் அருளப்பட்டால் அவர்களில் வசதி படைத்தோர் (போருக்கு வராதிருக்க) அனுமதி வேண்டுகின்றனர். உம்மிடம், "எங்களை விட்டுவிடுவீராக! (வீட்டில்) தங்கியிருப்போருடன் நாங்களும் தங்கிவிடுகிறோம்"*
*என்கின்றனர். [87](போரில் கலந்துகொள்ள முடியாத பெண்கள், முதியோர் ஆகிய வீட்டில்) தங்கியிருப்பவர்களுடன் தாமும் இருந்துவிடவே அவர்கள் விரும்புகின்றனர். அவர்களின் உள்ளங்களின் மீது முத்திரையிடப்பட்டு விட்டது. எனவே*
*அவர்கள் எதையும் புரிந்துகொள்ளமாட்டார்கள். [88]ஆனால்*
*தூதரும் அவருடன் நம்பிக்கைகொண்டவர்களும் தம் உடைமைகளாலும் உயிர்களாலும் இறைவழியில் பாடுபடுகின்றனர். நன்மைகள் (அனைத்தும்) அவர்களுக்கே உரியன; அவர்கள்தாம்*
*வெற்றியாளர்கள். [89]அல்லாஹ் அவர்களுக்காகச் சொர்க்கச் சோலைகளைத் தயார்செய்து வைத்துள்ளான். அவற்றிடையே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பர். இதுவே மாபெரும் வெற்றியாகும்.*

*[90](நபியே!) நாட்டுப்புற அரபியர்களில் சிலர் சாக்குப்போக்குகள் கூறிப் (போரில் கலந்து கொள்வதிலிருந்து) தங்களுக்கு விலக்களிப்பட வேண்டும் என்பதற்காக (உம்மிடம்) வந்தனர். அல்லாஹ்வையும் அவனது தூதரையும் பொய்மைப்படுத்தியோர் (நயவஞ்சகர்கள் அனுமதி வேண்டாமலே வீடுகளில்) இருந்துகொண்டனர். அவர்களில் மறுப்போரைத் துன்புறுத்தும்*

வேதனை விரைவில் வந்தடையும். [91]வலுவற்றவர்கள், நோயாளிகள்,
(அறப்போருக்காகச்) செலவு செய்வதற்குத் தங்களிடம் எதுவும்
இல்லாதவர்கள் ஆகியோர் அல்லாஹ்வுக்கும் அவனது
தூதருக்கும் உண்மையாளர்களாக இருப்பின் (போருக்குச்
செல்லாதிருப்பதில்) அவர்கள்மீது குற்றம் எதுவுமில்லை. நன்மை
புரிவோர்மீது குற்றம்சாட்ட வழி ஏதுமில்லை. அல்லாஹ் பெரும்
மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன். [92](நபியே!) தங்களுக்கு
வாகனம் வேண்டும் என்று உம்மிடம் வந்தவர்களிடம் “நீங்கள்
பயணம் செய்வதற்கு என்னிடம் (வாகனம்) எதுவும் இல்லையே”
என்று நீர் கூறினீர். (அறச்)செலவு செய்வதற்குத் தங்களிடம்
எதுவும் இல்லையே என்ற கவலையால் கண்ணீர் சிந்தியவாறு
அவர்கள் திரும்பிச் சென்றனர். இத்தகைய மக்கள்மீதும்
எக்குற்றமும் இல்லை. [93](மாறாக) வசதியானவர்களாக இருந்தும்
(போருக்கு வராமல் இருக்க) உம்மிடம் அனுமதி கோருபவர்கள்
குற்றச்சாட்டிற்குரியவர்களே. (முதியோர், பெண்கள் போல்
வீட்டில்) தங்கியிருப்பவர்களுடன் (பெண்களுடன்) இருந்து
விடுவதையே அவர்கள் விரும்பினர். அல்லாஹ் அவர்களின்
உள்ளங்களின் மீது முத்திரையிட்டு விட்டான். எனவே அவர்கள்
அறிந்துகொள்ளமாட்டார்கள்.

[94](நம்பிக்கையாளர்களே!) நீங்கள் (போர் முடிந்து) திரும்பி
வரும்போது (தாங்கள் போருக்கு வராததற்கு) உங்களிடம்
அவர்கள் சாக்குப்போக்குக் கூறுவர். (நபியே!) நீர் அவர்களிடம்
“சாக்குப்போக்குக் கூறாதீர்கள்; நாங்கள் உங்களை நம்பவே
மாட்டோம்; உங்களைப்பற்றி அல்லாஹ் எங்களுக்கு அறிவித்து
விட்டான். இனி அல்லாஹ்வும் தூதரும் உங்கள் நடவடிக்கைகளைக்
கவனிப்பார்கள். பின்னர் வெளிப்படையானவற்றையும்
மறைவானவற்றையும் அறிகின்றவனிடமே நீங்கள் திரும்பக்
கொண்டு வரப்படுவீர்கள். அப்போது அவன் நீங்கள் (இங்குச்)
செய்து கொண்டிருந்தவற்றைப்பற்றி உங்களுக்கு அறிவிப்பான்”
(என்று கூறுவீராக!) [95](நம்பிக்கையாளர்களே!) நீங்கள் (போர்
முடிந்து) திரும்பிவந்த பின்னர் அவர்களை நீங்கள் குறை கூறாமல்

*விட்டுவிட வேண்டும் என்பதற்காக உங்களிடம் அவர்கள் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து கூறுவார்கள். எனவே நீங்கள் அவர்களைப் பொருட்படுத்தாமல் விட்டுவிடுங்கள். உறுதியாக அவர்கள் தூய்மையற்றவர்கள்; அவர்கள் சேருமிடம் நரகம்தான்; (அதுவே) அவர்கள் ஈட்டிக் கொண்டிருந்த (தீய)வற்றுக்கான பயனாகும். [96]நீங்கள் (அவர்களைக் குறித்து) மனநிறைவு கொள்ளவேண்டும் என்பதற்காக அவர்கள் உங்களிடம் (பொய்ச்) சத்தியம் செய்கின்றனர். நீங்கள் மனநிறைவு கொண்டாலும் கீழ்ப்படியாத (அம்)மக்களைக் குறித்து உறுதியாக அல்லாஹ் நிறைவு கொள்ளவேமாட்டான்.*

*[97]நாட்டுப்புற அரபியர் மறுப்பிலும் நயவஞ்சகத்திலும் கடுமையானவர்கள். அல்லாஹ் தன் தூதருக்கு அருளியுள்ள (வேத) வரம்புகளை அறிவதற்கு அவர்கள் தகுதியற்றவர்கள். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன். [98]நாட்டுப்புற அரபியர்களில் சிலர் இறைவழியில் செய்யும் செலவை ஒறுப்புத்தொகையாகக் கருதுகிறார்கள். மேலும் உங்களுக்கு(க் காலச் சுழலின்) பேரிடர்கள் நேரவேண்டும் என எதிர்பார்த்திருக்கின்றனர். அவர்கள் மீதுதான் அச்சுழல் சுற்றிக் கொண்டிருக்கிறது. அல்லாஹ் செவிசாய்ப்பவன்; முற்றும் அறிந்தவன். [99]நாட்டுப்புற அரபியர்களில் சிலர் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கைகொள்கின்றனர். இறைவழியில் செலவிடுவதை இறைநெருக்கத்தைப் பெறுவதற்கும் தூதரின் இறைஞ்சுதலைப் பெறுவதற்குமான வழியாக எடுத்துக் கொள்கின்றனர். ஆம், உறுதியாக அது இறைநெருக்கத்தைப் பெற்றுத்தரும். தன் அருளில் அல்லாஹ் அவர்களை நுழையச் செய்வான். உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன். [100](மக்காவிலிருந்து மதீனாவுக்குப்) புலம் பெயர்ந்து வந்தோர், (மதீனாவில்) அவர்களுக்கு உதவி புரிந்தோர் ஆகியோரில் (ஓரிறை நம்பிக்கைகொள்வதில்) முந்திக் கொண்டோரிடமும் அவர்களைச் சிறந்தமுறையில் பின்பற்றியோரிடமும் அல்லாஹ்*

*உவப்புக் கொண்டான்; அவர்களும் அல்லாஹ்விடம் உவப்புக் கொண்டனர். அவன் அவர்களுக்காகச் சொர்க்கச் சோலைகளைத் தயார் செய்து வைத்துள்ளான். அவற்றிடையே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பர். இதுவே மாபெரும் வெற்றியாகும்.* [101]*உங்களைச் சுற்றியுள்ள நாட்டுப்புற அரபியர்களில் நயவஞ்சகர்கள் (சிலர்) இருக்கின்றனர்; மதீனாவாசிகளிலும் (சிலர்) அவ்வாறே உள்ளனர். அவர்கள் நயவஞ்சகத்தில் ஊறிப்போனவர்கள். (நபியே!) நீர் அவர்களை அறியமாட்டீர். நாம் அவர்களை அறிவோம். நாம் அவர்களை இருமுறை வேதனை செய்வோம். இறுதியில் அவர்கள் மிகக் கடுமையான வேதனையின்பால் செலுத்தப்படுவர்.*

[102]*(அவர்களில்) வேறு சிலர் (இருக்கின்றனர், அவர்கள்) தம் பாவச்செயல்களை ஒப்புக்கொண்டுள்ளனர்; நற்செயல்களோடு தீய செயல்களையும் கலந்து விட்டனர். அவர்களை அல்லாஹ் மன்னித்து விடக்கூடும். உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.* [103]*(நபியே) அவர்களின் செல்வங்களிலிருந்து (கடமையாக்கப்பட்ட) கொடையின் பங்கைப் பெற்று அதன்மூலம் அவர்களைத் தூய்மைப்படுத்துவீராக! அவர்களை மேம்படுத்துவீராக! அவர்களுக்காக நீர் அல்லாஹ்விடம் இறைஞ்சி வேண்டுவீராக! உறுதியாக உமது இறைஞ்சுதல் அவர்களின் நிம்மதிக்கு வழிவகுக்கும். அல்லாஹ் அனைத்தையும் செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.* [104]*அல்லாஹ் தன் அடியார்களின் பாவமன்னிப்பு வேண்டுதல்களை ஏற்றுக்கொள்கிறான் என்பதையும் அவன்தான் ஈகை அறங்களையும் ஏற்றுக்கொள்கிறான் என்பதையும் அவன் பெரும் மன்னிப்பாளன், நிகரற்ற அன்பாளன் என்பதையும் அவர்கள் அறிந்துகொள்ளவில்லையா?* [105]*(நபியே!) நீர் (அவர்களை நோக்கி) “நீங்கள் செய்பவற்றை செய்துச் கொண்டிருங்கள். அல்லாஹ்வும் அவனது தூதரும் நம்பிக்கையாளர்களும் உங்கள்*

செயல்பாடுகளைக் கவனிப்பார்கள். வெளிப்படையானதையும்
மறைவானதையும் அறிகின்றவனிடமே விரைவில் நீங்கள்
கொண்டு செல்லப்படுவீர்கள். அப்போது நீங்கள் செய்து
கொண்டிருந்தவற்றை அவன் உங்களுக்கு அறிவிப்பான்” என்று
கூறும். 106வேறு சிலர் இருக்கின்றனர்; இறைக்கட்டளைக்காக
அவர்களின் விவகாரம் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. அவர்களை
அவன் தண்டிக்கலாம்; அல்லது மன்னித்துவிடலாம். அல்லாஹ்
முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்.

107(நயவஞ்சகர்களில்) சிலர் (நம்பிக்கையாளர்களுக்குத்)
தீங்கிழைப்பதற்காகவும் (இறை)மறுப்புச் செயல்களுக்காகவும்
நம்பிக்கையாளர்களிடையே பிரிவினை ஏற்படுத்துவதற்காகவும்
அல்லாஹ்வுடனும் அவனது தூதருடனும் முன்னர்ப் போரிட்டுக்
கொண்டிருந்தவர்கள் பதுங்கும் இடமாக இருப்பதற்காகவும்
ஒரு பள்ளிவாசலை உருவாக்கினர். (“இதனை உருவாக்கியதன்
மூலம்) நாங்கள் நன்மையைத்தான் நாடியுள்ளோம்” என்று
அவர்கள் சத்தியம் செய்து கூறுகின்றனர். அவர்கள் பொய்யர்கள்
என்று அல்லாஹ் சாட்சி கூறுகின்றான். 108(நபியே!) நீர் அங்கு
ஒருபோதும் (தொழுகைக்காக) நிற்க வேண்டாம். தொடக்க
நாளிலேயே இறையச்சத்தின் அடிப்படையில் நிறுவப்பட்ட
பள்ளிவாசலே நீர் (தொழ) நிற்பதற்கு மிகத் தகுதியானதாகும்.
அங்குத் தூய்மையை விரும்பக்கூடிய மக்கள்தாம் இருக்கின்றனர்.
அல்லாஹ் தூய்மையாளர்களையே நேசிக்கிறான்.
109இறையச்சத்தையும் இறைஉவப்பையும் அடிப்படையாகக்
கொண்டு தமது கட்டடத்தை அமைத்தவர் சிறந்தவரா?
அல்லது (அரிக்கப்பட்டு) விழுந்துவிடும் ஓடைக்கரையில்
கட்டடத்தை அமைத்துப் பின்னர் அக்கட்டடத்துடன் (சேர்ந்து)
தாமும் நரக நெருப்பில் விழுந்தவர் சிறந்தவரா? அல்லாஹ்
தீவினையாளர்களுக்கு நேர்வழி காட்டுவதில்லை. 110அவர்களின்
உள்ளங்கள் துண்டு துண்டாகும் வரை அவர்கள் எழுப்பிய

*அக்கட்டடம் அவர்களின் உள்ளங்களில் ஐயத்தை ஏற்படுத்திக் கொண்டே இருக்கும். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்.*

[111]*உறுதியாக அல்லாஹ் நம்பிக்கையாளர்களின் உயிர்களையும்
செல்வங்களையும் சொர்க்கத்திற்கு விலையாக வாங்கிக்
கொண்டான். அவர்கள் இறைவழியில் போரிடுகின்றனர்;
கொல்கின்றனர்; கொல்லப்படுகின்றனர். இது தவ்ராத்திலும்
இன்ஜீலிலும் குர்ஆனிலும் அல்லாஹ் தன்மீது கடமையாக்கிக்
கொண்ட உண்மையான வாக்குறுதியாகும். அல்லாஹ்வைவிடத்
தன் வாக்குறுதியை முழுமையாக நிறைவேற்றுபவர் யார்? நீங்கள்
அல்லாஹ்விடம் செய்துகொண்ட இந்தக் கொடுக்கல் வாங்கல்
குறித்து மகிழ்ச்சியடையுங்கள். இதுவே மாபெரும் வெற்றியாகும்.**
[112]*இறைவனிடம் பாவமன்னிப்பு வேண்டுவோர், (அவனையே)
வணங்குவோர், அவனை(த் துதித்துப்) புகழ்வோர், (உயர்ந்த
நோக்கங்களுக்காக அவனது பாதையில்) பயணம் செய்வோர்,
அவன்முன் குனிந்து தலைவணங்குவோர், (மக்களை) நன்மைபுரியத்
தூண்டுவோர், தீமையிலிருந்து தடுப்போர், இறைவரம்புகளைப்
பேணுவோர் ஆகிய இத்தகைய நம்பிக்கையாளர்களுக்கு (நபியே!)
நற்செய்தி கூறிவிடுவீராக!*

[113]*நரகவாசிகள் என்று தெளிவாகிவிட்ட பின்னரும்
இணைவைப்பாளர்களுக்காக – அவர்கள் நெருங்கிய
உறவினர்களாக இருந்தாலும் சரி – தூதரும் நம்பிக்கையாளர்களும்
(பாவ)மன்னிப்புக் கோரி இறைஞ்சி வேண்டுவது தகாது.*
[114]*ஆப்ரஹாம் தம் தந்தைக்காக மன்னிப்புக்கோரியது
அவருக்குத் தாம் அளித்திருந்த வாக்குறுதியினால்தான். ஆனால்
அவரின் தந்தை அல்லாஹ்வின் பகைவர் என்று தெளிவான
பின்னர் அ(வருக்காக மன்னிப்புக் கோருவ)திலிருந்து அவர்
விலகிக் கொண்டார். உறுதியாக ஆப்ரஹாம் இளகிய மனம்
உடையவராகவும் சகிப்புத்தன்மை மிக்கவராகவும் இருந்தார்.*
[115]*அல்லாஹ் ஒரு சமூகத்தினரை நேர்வழியில் செலுத்தியபின்*

---

**முன்னுரை காண்க : பக்கம் எண் XX*

*அவர்கள் தவிர்த்துக்கொள்ள வேண்டியவற்றை அவர்களுக்குத் தெளிவுபடுத்தும்வரை அவர்களை வழிதவறும்படி அவன் (விட்டு)விட மாட்டான். உறுதியாக அல்லாஹ் யாவற்றையும் நன்கறிந்தவன். [116]வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அவன்தான் உயிர் கொடுக்கிறான்; சாவையும் கொடுக்கிறான். அல்லாஹ்வைத்தவிர உங்களுக்கு எந்தப் பாதுகாவலரும் உதவியாளரும் இல்லை.*

*[117]இந்தத் தூதருக்கும் நெருக்கடியான நேரத்தில் அவரைப் பின்பற்றிய புலம் பெயர்ந்தவர்களுக்கும் (அவர்களை ஏற்றுப் பேணிய) உதவியாளர்களுக்கும் அல்லாஹ் அருள் செய்தான். அவர்களில் ஒரு சாராருடைய உள்ளங்கள் தடுமாறத் தொடங்கிய நிலையிலும் அவர்களை மன்னித்(து அருள் புரிந்)தான். உறுதியாக அல்லாஹ் அவர்களின் மீது மிகுந்த பரிவுடையவனாகவும் நிகரற்ற அன்பாளனாகவும் இருக்கிறான்.*
*[118](போருக்குத் தகுதியான நிலையிலிருந்தும் தபூக் போருக்குச் செல்லாததால் சமூகவிலக்கம் செய்யப்பட்டுத்) தீர்ப்பு நிறுத்தி வைக்கப்பட்டிருந்த மூவரையும் அவன் மன்னித்து விட்டான். (தங்களின் குற்றவுணர்வால்) விரிந்துபரந்த பூமி அவர்களுக்குச் சுருங்கி விட்டதாகவும் அவர்களின் உள்ளங்களும் இறுக்கமாகி விட்டதாகவும் உணர்ந்தனர். அல்லாஹ்விடமிருந்து தப்புவதற்கு அவனைத் தவிர வேறு புகலிடம் இல்லை என்பதையும் அவர்கள் புரிந்து கொண்டனர். இத்தகைய நிலையில் தன்னிடம் அவர்கள் மீளவேண்டும் என்பதற்காக அல்லாஹ் அவர்களை மன்னித்து விட்டான். உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் நிகரற்ற அன்பாளனாகவும் இருக்கிறான்.*

*[119]நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்! உண்மையாளர்களுடன் இணைந்திருங்கள். [120]மதீனாவாசிகளுக்கும் அவர்களைச் சுற்றி வாழும் நாட்டுப்புற அரபியர்களுக்கும் இறைத்தூதரைவிட்டு(ப் பிரிந்து)ப் பின்தங்குவதும் அவரது உயிரைவிடத் தம் உயிர்களையே பெரிதாகக் கருதுவதும் தகுதியானவை அல்ல. ஏனெனில் இறைவழியில் அவர்களுக்கு*

ஏற்படும் தாகம், களைப்பு, பசி, மறுப்பாளர்களுக்குச் சினமூட்டுவதற்காக அவர்கள் எடுத்து வைக்கும் காலடிகள், எதிரிகளிடமிருந்து அடையும் துன்பங்கள் ஆகிய ஒவ்வொன்றுக்காகவும் அவர்கள் கணக்கில் ஒரு நன்மை எழுதப்பட்டு விடுகிறது. நன்மைபுரிவோரின் கூலியை அல்லாஹ் வீணாக்க மாட்டான். [121](இறைவழியில்) சிறியதாகவோ, பெரியதாகவோ அவர்கள் எந்தச் செலவு செய்தாலும், எந்த நிலப் பகுதியைக் கடந்து சென்றாலும் அவர்களுக்காக அவை ஒரு பதிவு செய்யப்படும், அவர்களின் நற்செயல்களுக்கு மிகச் சிறந்த கூலியை அல்லாஹ் வழங்குவதற்காக! [122](போர்க்காலத்தில்) நம்பிக்கையாளர்கள் அனைவரும் ஒட்டுமொத்தமாக(ப் போருக்கு)ப் புறப்பட்டுவிட வேண்டியதில்லை. அவர்களில், ஒவ்வொரு கூட்டத்திலும் ஒரு பிரிவினர் (தூதரிடம் வந்து) மார்க்க அறிவைப் பெற்றுத் தத்தம் சமூகத்தினரிடம் சென்று அவர்களுக்கு எச்சரிக்கையூட்ட வேண்டும்; இதன் மூலம் அ(ச்சமூகத்த)வர்கள் தம்மை(த் தீயவற்றிலிருந்து) காத்துக் கொள்ளலாம். [123]நம்பிக்கையாளர்களே! உங்கள் அருகிலுள்ள மறுப்பாளருடன் போரிடுங்கள்;* அவர்கள் உங்களிடம் உறுதிப்பாட்டை உணரட்டும். இறையச்சமுடையோருடன் அல்லாஹ் இருக்கிறான் என்பதை அறிந்துகொள்ளுங்கள்!

[124]ஏதேனும் ஒரு அத்தியாயம் அருளப்படும் போதெல்லாம் அவர்களில் சிலர், “இது உங்களில் யாருக்கு இறைநம்பிக்கையை மிகுதிப்படுத்தியது”? என்று (ஏளனமாகக்) கேட்கின்றனர். ஆயினும் நம்பிக்கையாளர்களுக்கு அது நம்பிக்கையை இன்னும் மிகுதிப்படுத்தியே விடுகிறது. (அதனால்) அவர்கள் மகிழ்ச்சியடைகின்றனர். [125]ஆனால் உள்ளங்களில் (ஐயம் எனும்) நோயுள்ளவர்களுக்கு அது மேன்மேலும் மாசின் மீது மாசையே மிகுதியாக்கும். அவர்கள் மறுப்பு நிலையிலேயே இறந்தும் போவார்கள். [126]ஒவ்வோர் ஆண்டும் அவர்கள் ஒருமுறையோ இருமுறையோ சோதனைக்கு உள்ளாக்கப்படுகின்றனர் என்பதை

*முன்னுரை காண்க : பக்கம் எண் XX

*அவர்கள் கவனிக்கவில்லையா? ஆயினும் அவர்கள் பாவமன்னிப்பு வேண்டுவதுமில்லை; படிப்பினை பெறுவதுமில்லை.*
127*ஏதேனும் ஓர் அத்தியாயம் அருளப்படும்போது அவர்கள் ஒருவரையொருவர் பார்த்து "உங்களை யாரும் பார்க்கவில்லையே?" என்று (கண் சாடையால் கேட்டுத்) திரும்பிச் சென்று விடுகின்றனர். அவர்கள் புரிந்துகொள்ளாத மக்களாக இருப்பதால் அல்லாஹ் அவர்களின் உள்ளங்களைத் திருப்பி விட்டான்.*
128*(நம்பிக்கையாளர்களே!) உங்களிலிருந்தே ஒரு தூதர் உங்களிடம் வந்துள்ளார். நீங்கள் துன்பப்படுவது அவருக்கு வேதனையாக இருக்கிறது. அவர் உங்கள் நன்மையைப் பெரிதும் விரும்புபவர்; (இறை) நம்பிக்கையாளர்களிடம் மிகுந்த பரிவும், அன்பும் உள்ளவர்.*
129*(நபியே!) இனியும் அவர்கள் புறக்கணித்தால் "அல்லாஹ்வே எனக்குப் போதுமானவன். அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை; அவனையே நான் முழுமையாகச் சார்ந்துள்ளேன். அவன்தான் மாபெரும் இறையிருக்கையின் உரிமையாளன்" என்று அவர்களிடம் கூறிவிடுவீராக!*

# 10. யோனா (யூனுஸ்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

1*அலிஃப் – லாம் – ரா.*

*இவை ஞானம் நிறைந்த வேதத்தின் வசனங்களாகும்.*
2*"நீர் மக்களுக்கு (அச்சமூட்டி) எச்சரிக்கை செய்வீராக! (ஓரிறை) நம்பிக்கையாளர்களுக்குத் தங்கள் இறைவனிடம் உயர் தகுதி உண்டு என நற்செய்தி கூறுவீராக!" என்று நாம் அம்மக்களுள் ஒருவருக்கு இறை அறிவிப்பு வழங்கியிருப்பது அவர்களுக்கு வியப்பாக இருக்கிறதா? (ஆயினும் ஓரிறை) மறுப்பாளர்கள் "இவர் வெளிப்படையான சூனியக்காரர்" என்று கூறுகின்றனர்.*

3*(மனிதர்களே!) உறுதியாக உங்கள் இறைவன் அல்லாஹ் ஆவான். அவன்தான் வானங்களையும் பூமியையும் ஆறு*

நாட்(காலக்கட்டங்)களில் படைத்தான். பின்னர் இறையிருக்கையின்
மேல் உயர்ந்து (அண்டங்களின்) அனைத்துச் செயல்பாடுகளையும்
ஆள்கிறான். அவனது அனுமதியின்றி (எவரும் எவருக்காகவும்)
பரிந்துரை செய்யமுடியாது. அத்தகைய அல்லாஹ்தான் உங்கள்
இறைவன். எனவே அவனை மட்டுமே வணங்குங்கள். (இவற்றை)
நீங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டாமா? [4](இறந்த பின்னர்)
நீங்கள் அனைவரும் அவனிடமே செல்ல வேண்டியிருக்கிறது.
அல்லாஹ்வுடைய இவ்வாக்குறுதி உண்மையானதே. உறுதியாக
அவன்தான் முதலில் படைப்பைத் தொடங்குகிறான்.
நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தோருக்கு நீதியுடன்
(நற்)கூலி வழங்குவதற்காக (இறந்தவர்களை) அவன்தான் மீண்டும்
உயிர்ப்பிப்பான். மறுப்பாளருக்கு அவர்களின் மறுப்பின்
காரணமாகக் கொதிக்கும் நீரும் துன்புறுத்தும் வேதனையும்
உண்டு.

[5]அவன்தான் சூரியனைப் பேரொளியுடையதாகவும் சந்திரனை
(அழகிய) ஒளியுடையதாகவும் ஆக்கினான். ஆண்டுகளின்
எண்ணிக்கையையும் (காலக்) கணக்கையும் நீங்கள்
அறிந்துகொள்ளும் பொருட்டுச் சந்திரனின் நிலைகளைத்
தீர்மானித்தான். இவற்றையெல்லாம் அல்லாஹ் தக்க
காரணமின்றிப் படைக்கவில்லை. அறிந்துகொள்ளும் மக்களுக்கு
அவன் தன் சான்றுகளைத் தெளிவுபடுத்துகிறான். [6]உறுதியாக
இரவுபகல் மாறிமாறி வருவதிலும் வானங்களிலும் பூமியிலும்
அல்லாஹ் படைத்திருப்பவற்றிலும் இறையச்சமுடையோருக்குச்
சான்றுகள் உள்ளன.*

[7](எவர் மறுமையில் நிகழவிருக்கும்) எமது சந்திப்பை நம்பாமல்
இவ்வுலக வாழ்வை விரும்பி அதிலேயே நிறைவடைகின்றனரோ

---

*வானத்திலும் பூமியிலும் இறைவனின் எண்ணற்ற சான்றுகள் உள்ளன. ஆனால் அவை இறையச்சம் கொண்டவர்களுக்கு மட்டுமே பாடங்களாகப் பயன்படும். அச்சமோ புரிந்துணர்வோதான் மனிதர்களைத் தீவிர கவனமுள்ளவர்களாக ஆக்குகிறது. தீவிர கவனம் இல்லாவிடில் மனிதர்கள் முக்கியத்துவம் அளிக்க வேண்டியவற்றிற்கு முக்கியத்துவம் அளித்து முழு ஈடுபாடு காட்ட மாட்டார்கள். அவை பற்றிய பல்வேறு தன்மைகளையும் புரிந்துகொள்ள மாட்டார்கள்.

*எவர் எமது வசனங்களை அலட்சியம் செய்கின்றனரோ*
*[8]அவர்கள் தாம் ஈட்டிய (தீய)வற்றின் விளைவாக அடையும்*
*உறைவிடம் (நரக) நெருப்புத்தான். [9]ஆனால் (ஓரிறை)*
*நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிபவர்களை இறைவன்*
*அவர்களுடைய நம்பிக்கையின் காரணமாக, அருட்கொடைகள்*
*நிறைந்த சொர்க்கச் சோலைகளில் சேர்த்துவிடுவான். அங்கே*
*ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். [10]"அல்லாஹ்வே! நீயே*
*மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்" என்பதே அங்கு*
*அவர்களின் இறைஞ்சுதலாக இருக்கும். "சாந்தி நிலவட்டும்"*
*என்பதே (ஒருவருக்கொருவர் கூறும்) முகமன் ஆக இருக்கும்.*
*"அனைத்துலகங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே*
*எல்லாப் புகழும்" என்பதே அவர்களுடைய இறைஞ்சுதலின்*
*முடிவாக இருக்கும். [11]அல்லாஹ் மக்களுக்கு அருள்புரிவதில்*
*வேகம் காட்டுவதைப் போன்றே அவர்களைத் தண்டிப்பதில்*
*வேகம் காட்டியிருந்தால் அவர்களின் வாழ்நாள் தவணை*
*முடிக்கப்பட்டிருக்கும். ஆயினும் (மறுமை நாளில்) எமது சந்திப்பை*
*நம்பாதவர்களை அவர்களின் வரம்புமீறலிலேயே தடுமாறித்*
*திரியுமாறு விட்டுவிடுகிறோம். [12]மனிதனுக்கு ஏதேனும் துன்பம்*
*ஏற்பட்டால், படுத்த நிலையிலோ அமர்ந்த நிலையிலோ நின்ற*
*நிலையிலோ எம்மை (இறைஞ்சி) அழைக்கின்றான். ஆனால்*
*அவனது துன்பத்தை நீக்கிவிட்டால், தன் துன்பத்தை நீக்க*
*எம்மை அழைத்திராதவனைப் போலத் தன் போக்கில் போகிறான்.*
*இவ்வாறு வரம்பு மீறும் மக்களுக்கு அவர்களின் (தீய)செயல்கள்*
*அழகானவையாகத் தோன்றுமாறு செய்யப்படுகின்றன.*

*[13](மனிதர்களே!) உங்களுக்கு முன்பிருந்த சமூகத்தினர்*
*(தொடர்ந்து) தீச்செயல்கள் புரிந்தபோது நாம் அவர்களை*
*அழித்திருக்கிறோம். தூதர்கள் அவர்களிடம் தெளிவான*
*சான்றுகளைக் கொண்டு வந்திருந்தனர். ஆயினும் அவர்கள்*
*நம்பிக்கை கொள்ளவில்லை. இவ்வாறே நாம் குற்றவாளிகளுக்குக்*
*கூலி வழங்குகிறோம். [14]பிறகு நீங்கள் எவ்வாறு செயல்படுகிறீர்கள்*

*என்பதைக் காண்பதற்காக அவர்களுக்குப் பின் பூமியில் வழித்தோன்றல்களாக உங்களை நாம் ஆக்கினோம்.*

[15]*அவர்களிடம் எமது தெளிவான வசனங்கள் எடுத்துரைக்கப்படும்போது (மறுமையில்) எமது சந்திப்பை நம்பாத அவர்கள், "இது அல்லாத வேறு குர்ஆனைக் கொண்டு வாருங்கள், அல்லது இதில் சில மாற்றங்களைச் செய்யுங்கள்" என்று கூறுகின்றனர். (நபியே! அவர்களிடம்) "நானாக இதனை மாற்றியமைப்பது என் பணியன்று. எனக்கு அறிவிக்கப்படுவதைத்தான் நான் பின்பற்றுகிறேன். நான் என் இறைவனுக்கு எதிராகச் செயல்பட்டால் மாபெரும் நாளின் வேதனைக்கு (ஆளாக வேண்டும் என்று) அஞ்சுகிறேன்" என்று கூறுவீராக!* [16]*நீர் கூறும்: "அல்லாஹ் (ஓதிக் காட்ட வேண்டாம் என) விரும்பியிருந்தால் இதனை உங்களுக்கு ஓதிக்காட்டியிருக்க மாட்டேன். அல்லாஹ்வும் இதனை உங்களுக்கு அறிவித்திருக்க மாட்டான். நான் இது அருளப்படுவதற்கு முன்னரும் உங்களிடையே நீண்டகாலம் வாழ்ந்துள்ளேன். நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?"*
[17]*அல்லாஹ்வின் மீது பொய்யைக் கற்பிப்பவனைவிட அல்லது அவனது வசனங்களைப் பொய்யென்று கூறுபவனைவிடப் பெரும் முறைகேடன் யார்? உறுதியாகக் குற்றவாளிகள் ஒருபோதும் வெற்றிபெறமாட்டார்கள்.* [18]*அவர்கள் அல்லாஹ்வை விட்டுவிட்டுத் தங்களுக்குத் தீங்கையோ பயனையோ அளிக்க இயலாதவற்றை வணங்குகின்றனர். "இவை அல்லாஹ்விடம் எங்களுக்காகப் பரிந்து பேசும்" என்றும் கூறுகின்றனர். (நபியே! அவர்களிடம்) "வானங்களிலும் பூமியிலும் அல்லாஹ் அறியாதவற்றையா நீங்கள் அவனுக்கு அறிவிக்கிறீர்கள்? அல்லாஹ் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். அவர்கள் இணைவைப்பவற்றிலிருந்து மிக உயர்ந்தவன்" என்று கூறுவீராக.* [19]*மனிதர்கள் ஒரே சமூகத்தினராகத்தான் இருந்தனர். பின்னர்க் கருத்து முரண்பாடு கொண்டு (பிரிந்து) விட்டனர். உம் இறைவனிடமிருந்து (மனிதர்களின் செயல்களுக்குரிய கூலி மறுமையில் முழுமையாக*

*வழங்கப்படும் என்ற) ஒரு வாக்கு முன்னரே வெளிப்படாதிருந்தால் அவர்கள் பிணங்கிக்கொண்டவை தொடர்பாக அவர்களிடையே (இதற்குள்) தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும்.*

*[20]"இறைவனிடமிருந்து ஏதேனும் ஒரு சான்று அவருக்கு
வழங்கப்பட்டிருக்கக் கூடாதா?" என்று அவர்கள் கேட்கின்றனர்.
(நபியே!) நீர் கூறும் : "மறைவானவற்றின் அறிவு அல்லாஹ்விடமே
உள்ளது. எனவே, நீங்கள் எதிர்பாருங்கள். நானும் உங்களுடன்
(உங்களுக்கு நேரப் போவது என்ன என்பதை) எதிர்பார்த்துக்
கொண்டிருக்கின்றேன்" [21]மக்களைத் தீண்டிய துன்பங்களுக்குப்
பிறகு நாம் அவர்களுக்கு (எமது) அருளை வழங்கி இன்புறச்
செய்யும்போது அவர்கள் எமது சான்றுகளில் (தவறு கற்பிக்கச்)
சூழ்ச்சி செய்யத் தொடங்கி விடுகின்றனர். (நபியே!) "சூழ்ச்சி
செய்வதில் அல்லாஹ்வே விரைவானவன்" என்று கூறுவீராக!
(மறுப்பாளர்களே!) எமது தூதர்(களான வானவர்)கள்
உங்கள் சூழ்ச்சிகளைப் பதிவு செய்து கொண்டிருக்கின்றனர்
[22]அவன்தான் நிலத்திலும் நீரிலும் உங்களைப் பயணம் செய்யச்
செய்கிறான். நீங்கள் கப்பலில் (ஏறிப்) பயணம் செய்கிறீர்கள்.
சாதகமான காற்று அதனை வழிநடத்திச் செல்லும்போது
அ(தில் பயணம் செய்ப)வர்கள் மகிழ்ச்சியடைகின்றனர்.
அப்போது திடீரென வீசும் புயல்காற்றால் அலைகள் அவர்களை
நாலாபுறமிருந்தும் தாக்குகின்றன. தாம் (ஆபத்தினால்) சூழ்ந்து
கொள்ளப்பட்டிருப்பதை அவர்கள் உணர்கின்றனர். அந்நிலையில்
அவர்கள் தங்கள் வணக்கத்தை அல்லாஹ்வுக்கு மட்டுமே
உரித்தாக்கி முழு மனத்துடன் "இறைவா! நீ எங்களை இதிலிருந்து
காப்பாற்றினால் உறுதியாக நாங்கள் நன்றியுள்ளவர்களாகி
விடுவோம்" என்று அவனிடம் இறைஞ்சுகின்றனர். [23]ஆனால்,
அல்லாஹ் அவர்களைக் காப்பாற்றியபின் பூமியில் முறையின்றி
வரம்பு மீறத் தொடங்கிவிடுகிறார்கள். மனிதர்களே! உங்களின்
வரம்புமீறல் உங்களுக்குத்தான் கேடாக அமையும். இவ்வுலக
வாழ்வை அனுபவித்துக் கொள்ளுங்கள். பின்னர் நீங்கள்*

*எம்மிடமே திரும்ப வேண்டும். அபோது நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை நாம் உங்களுக்கு அறிவிப்போம்.*

[24]*உலக வாழ்க்கைக்கு எடுத்துக்காட்டு: வானிலிருந்து நாம் மழை பொழியச் செய்கின்றோம். அதன்மூலம் மனிதர்களும் கால்நடைகளும் உண்ணக்கூடிய தாவரங்கள் செழித்து வளர்கின்றன. அவற்றால் பூமி செழிப்படைந்து தன்னை அணிசெய்து கொள்ளும்போது அதன் உரிமையாளர்கள் அதன் பயனை அடைவது தங்கள் கட்டுப்பாட்டில் இருக்கிறது என்று எண்ணிக் கொள்கின்றனர். அப்போது திடீரென இரவிலோ, பகலிலோ எமது கட்டளை வந்து விடுகிறது. நாம் நேற்றுவரை எதுவும் அங்கு இருந்திராததைப் போல் அதனை அழித்து விடுகிறோம். (இத்தகையதே உலக வாழ்க்கை) இவ்வாறு நாம் சிந்திக்கும் மக்களுக்குச் சான்றுகளைத் தெளிவுபடுத்துகிறோம்.*

[25]*அல்லாஹ் உங்களை அமைதி இல்லத்திற்கு அழைக்கின்றான். தான் விரும்பியோருக்கு அவன் நேர்வழி காட்டுகிறான்.* [26]*நன்மை செய்தோருக்கு (அதன் பயனாகிய) நன்மை கிடைக்கும்; அதைவிட மிகுதியான நன்மையும் கிடைக்கும். அவர்களுடைய முகங்களில் இருளோ இழிவோ படிந்திராது. அவர்கள் சொர்க்கவாசிகள்தாம். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பர்.* [27]*தீமைகளை ஈட்டிக் கொண்டோருக்கு அதன் அளவிலான தீமையே கூலியாகும். இழிவு அவர்களைச் சூழ்ந்திருக்கும். அவர்களை அல்லாஹ்விடமிருந்து காப்பாற்றுபவர் யாருமில்லை. அவர்களின் முகங்கள் இரவின் இருளால் மூடப்பட்டதைப் போலிருக்கும். அவர்கள் நரகவாசிகள்தாம். அவர்கள் அதில் என்றென்றும் கிடப்பர்.*

[28]*அனைவரையும் நாம் ஒன்றுதிரட்டும் அந்நாளில் இணைவைப்பவர்களிடம் “நீங்களும் உங்கள் இணைத்தெய்வங்களும் உங்கள் இடங்களிலேயே நில்லுங்கள்” என்று கூறி அவர்களிடையே நாம் பிரிவை ஏற்படுத்தி விடுவோம். அப்போது அவர்களின் இணைத்தெய்வங்கள் (இணைவைத்தவர்களை நோக்கி) “நீங்கள்*

*எங்களை வணங்கிக் கொண்டிருக்கவில்லை” என்று கூறுவர்.*
*[29]“எங்களுக்கும் உங்களுக்குமிடையே சாட்சி கூற அல்லாஹ்வே*
*போதுமானவன். (நீங்கள் எங்களை) வணங்கியதை நாங்கள்*
*அறவே அறியாதிருந்தோம்” என்றும் கூறுவர். [30]அவ்விடத்தில்*
*ஒவ்வோர் ஆன்மாவும் தான் செய்து அனுப்பிய வினைகளைச்*
*சோதித்து அறிந்துகொள்ளும். மக்கள் தங்கள் உண்மையான*
*உரிமையாளனாகிய அல்லாஹ்விடமே கொண்டு வரப்படுவர்.*
*அவர்கள் (தம் தெய்வங்கள் எனப்) புனைந்து கொண்டிருப்பவை*
*அவர்களிடமிருந்து மறைந்துவிடும்.*

*[31](நபியே! நீர்) அவர்களிடம், “வானிலிருந்தும் மண்ணிலிருந்தும்*
*உங்களுக்கு உணவளிப்பவன் யார்? உங்களின் கேள்விக்கும்*
*பார்வைக்கும் உரிமையாளன் யார்? உயிரற்றதிலிருந்து*
*உயிருள்ளதையும் உயிருள்ளதிலிருந்து உயிரற்றதையும்*
*வெளிப்படுத்துபவன் யார்? அனைத்தையும் இயக்குபவன் யார்?”*
*என்று கேட்பீராக! “அல்லாஹ்தான்” என்று அவர்கள் கூறுவர்.*
*“அவ்வாறாயின் நீங்கள் (அவனுக்கு) அஞ்ச மாட்டீர்களா?” என்று*
*கேட்பீராக! [32]எனவே “அல்லாஹ்தான் உங்கள் உண்மையான*
*இறைவன். இந்த உண்மைக்கு அப்பால் கெடுவழியைத்*
*தவிர வேறென்ன இருக்க முடியும்? நீங்கள் எவ்வாறு (திசை)*
*திருப்பப்படுகிறீர்கள்?” (என்றும் கேட்பீராக!) [33]இவ்வாறு*
*வரம்புமீறுபவர்களைப் பற்றி ‘அவர்கள் நம்பிக்கைகொள்ள*
*மாட்டார்கள்’ எனும் உமது இறைவனின் வாக்கு உண்மையாகி*
*விட்டது.*

*[34](நபியே!) “உங்கள் இணைத்தெய்வங்களில் முதலில்*
*(படைப்புகளைப்) படைத்து (அவை மாண்ட) பின்னர் மீண்டும்*
*அவற்றைப் படைப்பவர் யாராவது இருக்கிறார்களா?” என்று*
*நீர் கேளும் “அல்லாஹ்தான் முதலில் படைத்துப் பின்னர்*
*மீண்டும் படைக்கிறான். நீங்கள் (இந்த உண்மையிலிருந்து)*
*எங்கே வழிதவறிச் செல்கிறீர்கள்?” என்றும் நீர் கேட்பீராக!*
*[35](அன்றி) “உங்கள் இணைத் தெய்வங்களில் உண்மையின்பால்*

*வழிகாட்டுபவர் யாரேனும் இருக்கிறார்களா?" என்று நீர் கேளும். "அல்லாஹ்வே உண்மையின்பால் வழிகாட்டுகிறான். உண்மையின்பால் வழிகாட்டுபவன் பின்பற்றத் தகுந்தவனா, வழிகாட்டப்பட்டாலன்றித் தானாக வழியறிய முடியாதவன் பின்பற்றத் தகுந்தவனா? உங்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது? நீங்கள் எவ்வளவு (தவறாகத்) தீர்மானிக்கிறீர்கள்?" என்றும் நீர் கேளும்.*
*[36]அவர்களில் பெரும்பாலோர் வெறும் ஊகத்தைத்தான் பின்பற்றுகின்றார்கள். ஊகம் உண்மையை உணர ஒருசிறிதும் பயனளிக்காது. அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கிறான்.*

*[37]இந்தக் குர்ஆன் அல்லாஹ் (அருளியது) அன்றி வேறு எவராலும் புனைந்துரைக்கப்பட்டதன்று. மாறாக இது தனக்கு முன்புள்ள வேதங்க(ளின் முன்னறிவிப்பு)களை உண்மைப்படுத்தக்கூடியதாகவும் அந்த முன்னைய வேதங்களின் முழுமையான விளக்கங்களைத் தருவதாகவும் உள்ளது. ஆகவே இது ஐயத்திற்கிடமின்றி அனைத்துலகங்களின் இறைவனிடமிருந்து வந்துள்ளதே ஆகும்.*
*[38]"அவரே இதனைப் புனைந்து கொண்டார்" என்று அவர்கள் கூறுகிறார்களா? (நபியே!) நீர் அவர்களிடம் "நீங்கள் உண்மையாளர்களாயின் இதைப் போன்ற ஓர் அத்தியாயத்தையேனும் கொண்டு வாருங்கள். (இம்முயற்சியில்) அல்லாஹ் அல்லாத, நீங்கள் அழைக்க முடிந்தவர்களை எல்லாம் (துணைக்கு) அழைத்துக் கொள்ளுங்கள்" என்று கூறுவீராக!*
*[39]அவர்கள் தம் அறிவால் புரிந்து கொள்ளமுடியாத (வேதஞானத்)தைப் பொய்யென்று கூறுகின்றனர். அதன் தெளிவு அவர்களுக்குக் கிடைக்காத நிலையில் (அதனைப் பொய்யென்று கூறுகின்றனர்). இவ்வாறுதான் இவர்களுக்கு முன்பு இருந்தவர்களும் பொய்மைப்படுத்தினர். தீவினையாளர்களின் முடிவு என்னவாயிற்று என்பதை (நபியே! நீர்) கவனியும்.*

*[40]அவர்களில் இ(ந்த வேதத்)தை நம்புவோரும் உள்ளனர். இதனை நம்பாதோரும் உள்ளனர். குழப்பம் விளைவிப்போரை*

உம் இறைவன் நன்கறிவான். [41](நபியே!) அவர்கள் உம்மை
ஏற்கமறுத்தால், "என் செய்கை(யின் பயன்) எனக்குரியது; உங்கள்
செய்கை(யின் பயன்) உங்களுக்குரியது. நான் செய்பவற்றிற்கு
நீங்கள் பொறுப்பாளர் அல்லர்; நீங்கள் செய்பவற்றிற்கு நானும்
பொறுப்பாளன் அல்லன்" என்று நீர் கூறிவிடும். [42]அவர்களில்
சிலர் உமக்குச் செவி சாய்(ப்பது போல் நடி)க்கின்றனர். (எதையும்)
விளங்கிக் கொள்ளமுடியாத (அந்தச்) செவிடர்களை உம்மால்
செவியுறச் செய்ய முடியுமா? [43]அவர்களில் சிலர் உம்மைப்
பார்(ப்பது போல் நடி)க்கின்றனர். (நேர்வழியைப்) பார்க்க முடியாத
குருடர்களுக்கு உம்மால் வழிகாட்ட முடியுமா? [44]அல்லாஹ்
மனிதர்களுக்குச் சிறிதும் அநீதி இழைப்பதில்லை. ஆயினும்
அவர்கள் தமக்குத் தாமே அநீதி இழைத்துக்கொள்கின்றனர்.

[45]அல்லாஹ் அவர்களை ஒன்றுதிரட்டும் நாளில் ஒரு பகலின்
மிகச் சிறிது நேரமே உலகில் (தாம்) வாழ்ந்ததாக அவர்களுக்குத்
தோன்றும். அவர்கள் ஒருவரையொருவர் அறிந்தும் கொள்வர்.
அல்லாஹ்வின் சந்திப்பைப் பொய்மைப்படுத்தியோரும்
நேர்வழியை ஏற்றுக் கொள்ளாதவர்களும் பேரிழப்பிற்குள்ளாகி
விட்டனர் (என்பது அப்போது உறுதியாகிவிடும்). [46](நபியே!)
நாம் அவர்களுக்கு எச்சரித்த வேதனையின் ஒரு பகுதியை
(அவர்கள் அனுபவிப்பதை உம் வாழ்நாளிலேயே) உமக்குக்
காட்டினாலோ அல்லது (அதற்கு முன்னர்) உம்மை இறக்கச்
செய்தாலோ எவ்வாறாயினும் அவர்கள் எம்மிடமே திரும்ப
வேண்டியுள்ளது. அவர்கள் செய்பவற்றிற்கு அல்லாஹ்வே
சாட்சியாளன். [47]ஒவ்வொரு சமூகத்தினருக்கும் ஒரு தூதர்
இருக்கிறார். அவர்களுக்கான தூதர் (மறுமையில்) அவர்களிடம்
வரும்போது அவர்களிடையே நீதியுடன் தீர்ப்பளிக்கப்பட்டுவிடும்.
அவர்கள் அநீதி இழைக்கப்படமாட்டார்கள்.

[48]"நீங்கள் உண்மையாளர்களாயின் இந்த (எச்சரிக்கை)
வாக்கு எப்போது நிறைவேறும் என்று கூறுங்கள்" என
அவர்கள் கேட்கின்றனர். [49](நபியே!) நீர் கூறும்: "அல்லாஹ்

*விரும்பியதையன்றி எனக்குக் கூடத் தீங்கை(த் தடுத்து)க்
கொள்ளவோ நன்மையை அடைந்து கொள்ளவோ எனக்கு
ஆற்றல் இல்லை” ஒவ்வொரு சமூகத்தினருக்கும் ஒரு தவணை
உண்டு. அவர்களுக்கான தவணை (முன்பே) வந்துவிட்டால்
அவர்கள் சிறிது நேரம்கூடப் பிந்தவும் மாட்டார்கள், முந்தவும்
மாட்டார்கள்” 50(நபியே!) “இறைவேதனை இரவிலோ பகலிலோ
(திடீரென்று) உங்களை வந்தடைந்துவிட்டால் – (என்ன
செய்வீர்கள் என்று) கூறுங்கள்'' எனக் கேட்பீராக! (நபியே!)
எதற்காக குற்றவாளிகள் (வேதனைக்கு) அவசரப்படுகின்றனர்?
51“அது உங்களைத் தாக்கும்போதுதான் அதனை நம்புவீர்களா?
இதற்குத்தானே நீங்கள் அவசரப்பட்டுக் கொண்டிருந்தீர்கள்?”
(என்று அவர்களிடம் கேட்கப்படும்) 52பின்னர்த்
தீவினையாளர்களிடம் கூறப்படும்: “நிரந்தர வேதனையைச்
சுவையுங்கள். நீங்கள் ஈட்டிக்கொண்ட தீவினைக்குத் தகுதியான
கூலியே உங்களுக்குக் கொடுக்கப்படுகிறது.” 53(நபியே!) “அது
உண்மைதானா?” என்று அவர்கள் உம்மிடம் வினவுகின்றனர். நீர்
கூறும்: “ஆம், என் இறைவன்மீது ஆணையாக! அது முற்றிலும்
உண்மையே! உங்களால் அதைத் தடுத்து நிறுத்தமுடியாது”.
54தீவினைபுரிந்த ஒவ்வொருவரும் தம்மிடம் பூமியிலுள்ள பொருள்
அனைத்தும் இருந்தாலும் (வேதனையிலிருந்து தப்பித்துக்கொள்ள)
அவற்றை ஈடாகக் கொடுத்துவிடவே விரும்புவர். அவர்கள்
வேதனையைக் கண்கூடாகக் காணும்போது (நம்பிக்கை
கொள்ளாதிருந்ததற்காக) உள்ளூரப் பெரிதும் வருந்துவர்.
அவர்களிடையே முற்றிலும் நியாயமாகத் தீர்ப்பளிக்கப்படும்.
அவர்கள் அநீதி இழைக்கப்படமாட்டார்கள். 55(மனிதர்களே!)
அறிந்துகொள்ளுங்கள்! வானங்களிலும் பூமியிலும் உள்ளவை
யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. அறிந்துகொள்ளுங்கள்!
உறுதியாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. ஆயினும்
அவர்களில் பெரும்பாலோர் (இதனை) அறிந்து கொள்வதில்லை.
56அவன்தான் வாழ்வையும்! சாவையும் அளிக்கின்றான். நீங்கள்
அனைவரும் அவனிடமே திரும்பக் கொண்டுவரப்படுவீர்கள்.*

[57]மனிதர்களே! உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு
அறிவுரை (குர்ஆன்) வந்துள்ளது. இது உள்ளங்களில் உள்ளவற்றைக்
குணப்படுத்துவதாகவும்; (ஓரிறை)நம்பிக்கையாளர்களுக்கு
வழிகாட்டியாகவும் அருளாகவும் இருக்கின்றது. [58](நபியே!)
“இறைவனின் இந்த அருளிலும் அன்பிலும் அவர்கள்
மகிழ்ச்சியடையட்டும். இது அவர்கள் சேர்த்து வைக்கின்ற
(உலகச் செல்வம்) யாவற்றையும்விடச் சிறந்ததாகும்” என்று நீர்
கூறுவீராக!

[59](நபியே! அவர்களிடம்) “அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய
உணவுப் பொருள்களில் சிலவற்றைத் தடுக்கப்பட்டவை எனவும்
சிலவற்றை அனுமதிக்கப்பட்டவை எனவும் (நீங்களாகவே) ஆக்கிக்
கொண்டீர்களே, அது பற்றி(ச் சிந்தித்து)ப் பார்த்தீர்களா? அல்லாஹ்
உங்களுக்கு இவ்வாறு கட்டளை இட்டானா? அல்லது நீங்கள்
அல்லாஹ்வின் மீது (இதனைக்) கற்பிக்கின்றீர்களா?” என்றும்
கேட்பீராக! [60]அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனைபவர்கள்
மறுமை நாளைப்பற்றி (அதில் தங்களுக்கு நேரப்போவது பற்றி)
என்ன நினைக்கிறார்கள்? உறுதியாக அல்லாஹ் மனிதர்களின் மீது
பெரும் அருளுடையவன். ஆயினும், அவர்களில் பெரும்பாலோர்
நன்றி செலுத்துவதில்லை.

[61](நபியே!) நீர் எந்தச் செயலில் இருந்தாலும் குர்ஆனிலிருந்து
எ(ந்த வசனத்)தை ஓதிக் காட்டிக் கொண்டிருந்தாலும்,
(மக்களே!) நீங்கள் (அனைவரும்) எந்தச் செயலில் ஈடுபட்டுக்
கொண்டிருந்தாலும் உங்களை நாம் கண்காணிக்காமல்
இருப்பதில்லை. பூமியிலும் வானத்திலும் உள்ளவற்றில் ஒரு
மிகச் சிறு அளவுகூட (நபியே!) உம் இறைவனிடமிருந்து
மறைந்திருப்பதில்லை. அதைவிடச் சிறிதோ பெரிதோ அனைத்தும்
தெளிவான ஒரு ஏட்டில் பதியப்படாமல் இல்லை.

[62](நம்பிக்கையாளர்களே!) அறிந்துகொள்ளுங்கள்!
இறைநேசர்களுக்கு எந்த அச்சமும் இல்லை. அவர்கள்
கவலைப்படவும் மாட்டார்கள். [63]அவர்கள் நம்பிக்கைகொண்டு

*(இறைவனுக்கு) அஞ்சி நடப்பவர்கள் ஆவர்.*
*64அவர்களுக்கு இவ்வுலக வாழ்விலும் மறுமையிலும் நற்செய்தி உண்டு. இறைவாக்குகளில் எந்த மாற்றமும் இல்லை. இதுதான் மாபெரும் வெற்றியாகும்.*
*65(நபியே! மறுப்பாளராகிய) அவர்களின் (பொய்ப்பழிச்) சொற்கள் உம்மைக் கவலைக்குள்ளாக்கிவிட வேண்டாம். கண்ணியம் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியன. அவன் அனைத்தையும் செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.*

*66“அறிந்துகொள்ளுங்கள்! வானங்களிலும் பூமியிலும் உள்ளோர் அனைவரும் அல்லாஹ்வுக்கே உரியவர்கள். அல்லாஹ்வை அன்றி மற்றவைகளையும் தெய்வங்கள் என அழைப்பவர்கள் எதைப் பின்பற்றுகின்றனர்? அவர்கள் வெறும் ஊகங்களைத்தான் பின்பற்றுகின்றனர். அவர்கள் கற்பனை செய்கிறவர்களே அன்றி வேறல்லர்.*
*67நீங்கள் அமைதி பெறுவதற்காக இரவையும் (அனைத்தையும் தெளிவாகப்) பார்ப்பதற்காகப் பகலையும் அவன்தான் ஆக்கினான். உறுதியாக (அவனுடைய செய்தியைச்) செவிமடுக்கும் மக்களுக்கு இதில் பல சான்றுகள் உள்ளன.*

*68“அல்லாஹ் தனக்கு ஒரு மகனை ஏற்படுத்திக் கொண்டான்” என்று அவர்கள் கூறுகின்றனர். (அவர்கள் கூறுவதனின்றும்) அவன் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்; தேவைகள் அற்றவன். வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியவை. இ(வ்வாறு நீங்கள் சொல்வ)தற்கான சான்று எதுவும் உங்களிடம் இல்லை. நீங்கள் அறியாத ஒன்றை அல்லாஹ்வின் மீது கற்பித்துக் கூறுகிறீர்களா?*
*69(நபியே!) “அல்லாஹ்வின் மீது (இவ்வாறு) பொய்யைக் கற்பிப்போர் வெற்றி பெறமாட்டார்கள்” என்று நீர் கூறுவீராக!*
*70அவர்கள் இவ்வுலகில் அனுபவிப்பது குறுகியகாலச் சுகமே. ஆனால் எம்மிடமே அவர்கள் திரும்பி வரவேண்டியிருக்கிறது. பின்னர் அவர்களின் மறுப்பின் காரணமாகக் கடுமையான வேதனையை அவர்கள் சுவைக்கச் செய்வோம்.*

[71](நபியே!) அவர்களுக்கு நோவாவின் வரலாற்றைக் கூறுவீராக! அவர் தம் சமூகத்தினரிடம், “என் சமூகத்தோரே! நான் (உங்களிடையே) இருப்பதும் இறைவசனங்களின் மூலம் அறிவுறுத்துவதும் உங்களுக்குச் சுமையாக இருந்தால் (நான் அதைப் பொருட்படுத்தப்போவதில்லை. ஏனெனில்) நான் அல்லாஹ்வையே சார்ந்துள்ளேன். உங்கள் இணைத்தெய்வங்களுடன் சேர்ந்து ஒருமித்து (எனக்கெதிரான) உங்கள் செயல்திட்டத்தை வகுத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய திட்டத்தில் எந்தக் குறையும் (உங்களுக்கு) இருக்க வேண்டாம். பின்னர் எனக்கெதிராகச் செய்ய விரும்புவதைச் செய்துகொள்ளுங்கள். எனக்குக் காலநீட்டிப்பும் அளிக்க வேண்டாம்” என்று கூறியதை (நினைவு கூர்வீராக!) [72](மேலும் அவர்,) “நீங்கள் (என் அழைப்பைப்) புறக்கணித்தால் – (நினைவில் வையுங்கள்) நான் உங்களிடம் எந்தக் கூலியையும் கேட்கவில்லை. எனது கூலி அல்லாஹ்விடமே உள்ளது. நான் (முழுமையாகக்) கீழ்ப்படிந்தோரில் (ஒருவராக) இருக்க வேண்டும் என்றே கட்டளையிடப்பட்டுள்ளேன்” என்றும் கூறினார். [73]அவர்கள் அவரை ஏற்க மறுத்தனர். எனவே நாம் அவரையும் அவருடன் கப்பலில் இருந்தவர்களையும் காப்பாற்றி அவர்களை (முன்னோர்களுக்கு) வழித்தோன்றல்களாக்கினோம். எமது வசனங்களைப் பொய்யென்று மறுத்தோரை மூழ்கடித்து விட்டோம். எச்சரிக்கப்பட்டோரின் முடிவு என்ன ஆயிற்று என்பதை (நபியே! நீர்) கவனிப்பீராக!

[74]அவருக்குப் பின் பல தூதர்களை அவரவர் சமூகத்தினரிடம் நாம் அனுப்பி வைத்தோம். அவர்கள் தெளிவான சான்றுகளைத் தம் மக்களிடம் கொண்டு வந்தனர். ஆயினும் ஏற்கனவே (தங்களின் முன்னோர் அவற்றைப்) பொய்யென்று கூறியிருந்ததால் அவர்கள் அவற்றின்மீது நம்பிக்கைகொள்வோராக இல்லை. இவ்வாறே வரம்புமீறியோரின் உள்ளங்களின் மீது நாம் முத்திரையிட்டு விடுகிறோம்.

[75]அ(த்தூது)வர்களுக்குப்பின் மோசேயையும் ஆரோனையும்
ஃபாரோவிடமும் அவனுடைய (சமூகத்) தலைவர்களிடமும்
எமது சான்றுகளுடன் அனுப்பி வைத்தோம். ஆனால் அவர்கள்
செருக்குக்கொண்டனர்; குற்றவாளிகளாகவே இருந்தனர்.
[76]எம்மிடமிருந்து சத்தியம் அவர்களை வந்தடைந்தபோது "இது
தெளிவான சூனியமே" என்று கூறினர். [77](அதற்கு) மோசே,
"உங்களிடம் சத்தியமே வந்துள்ளபோது இவ்வாறு கூறுகிறீர்களா?
இது சூனியமாகுமா? உண்மையில் சூனியக்காரர்கள் வெற்றி
பெறமாட்டார்கள்" என்று கூறினார். [78](அதற்கு) அவர்கள்,
"எங்கள் முன்னோர்கள் பின்பற்றி வந்ததிலிருந்து எங்களைத்
திருப்பி விடவும் இந்த பூமியில் நீங்கள் இருவரும் பெருமை
அடையவும்தான் எங்களிடம் வந்துள்ளீர்களா? நாங்கள்
ஒருபோதும் உங்கள் இருவரையும் நம்ப மாட்டோம்" என்று
கூறினர்.

[79]பின்னர் ஃபாரோ, "திறமையான சூனியக்காரர்கள்
அனைவரையும் என்னிடம் கொண்டு வாருங்கள்" என்று (தன்
கூட்டத்தாருக்குக் கட்டளையிட்டுக்) கூறினான். [80]சூனியக்காரர்கள்
வந்தபோது மோசே அவர்களிடம், "(சூனியம் செய்ய) நீங்கள்
எறியக் கூடியதை எறியுங்கள்" என்றார். [81]அவர்கள் எறிந்த
போது மோசே, "நீங்கள் செய்துகாட்டியது வெறும் சூனியமே!
உறுதியாக அல்லாஹ் அதனை (விரைவில்) அழித்து விடுவான்.
அல்லாஹ் குழப்பவாதிகளின் செயலைச் சீராக்கமாட்டான்"
என்று கூறினார். [82]"பாவிகள் எவ்வளவு வெறுத்தாலும் அல்லாஹ்
தன் வார்த்தைகளால் சத்தியத்தை நிலைநாட்டியே தீருவான்"
என்றும் கூறினார். [83]ஃபாரோவும் அவன் சமூகத் தலைவர்களும்
தங்களைத் துன்புறுத்துவர் என்ற அச்சத்தால் மோசேயின்
சமூகத்தில் சில இளைஞர்களைத்தவிர வேறு யாரும் அவர்மீது
நம்பிக்கை கொள்ளவில்லை. உறுதியாக ஃபாரோ பூமியில் பெரும்
வல்லமை கொண்டிருந்தான்; வரம்பு மீறுபவனாகவும் இருந்தான்.
[84]"மோசே (தம் சமூகத்தோரை நோக்கி) என் சமூகத்தோரே!

நீங்கள் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டவர்களாக– அவனுக்கே கீழ்ப்படிந்தவர்களாக இருந்தால் அவனையே முற்றிலும் சார்ந்திருங்கள்" என்று கூறினார்.
85(அதற்கு) அவர்கள் "நாங்கள் அல்லாஹ்வையே சார்ந்துள்ளோம். எங்கள் இறைவா! தீவினைபுரியும் மக்களின் சோதனைக்கு (கொடுமைகளுக்கு) எங்களை உள்ளாக்கி விடாதே;
86(மேலும்) உன்னை மறுக்கும் கூட்டத்தாரிடமிருந்து உன் அருளால் எங்களைக் காப்பாற்றுவாயாக!" என்றும் இறைஞ்சினர்.

87மோசேவுக்கும் அவரின் சகோதரருக்கும், "உங்கள் சமூகத்திற்காக மிஸ்ரில் (எகிப்தில்) வீடுகளை அமைத்து அவ்வீடுகளையே தொழுமிடங்களாக ஆக்கிக்கொண்டு தவறாமல் தொழுகையைக் கடைப்பிடியுங்கள்; நம்பிக்கையாளர்களுக்கு நற்செய்தி கூறிவிடுங்கள்" என்று நாம் அறிவித்தோம்.

88"எங்கள் இறைவா! நீ ஃபாரோவுக்கும் அவனது (சமூகத்) தலைவர்களுக்கும் இவ்வுலக வாழ்வில் ஆடம்பர (அலங்கார)ங்களையும் செல்வங்களையும் வழங்கியுள்ளாய். எங்கள் இறைவா! உன் பாதையிலிருந்து மக்களை அவர்கள் வழிகெடுப்பதற்காகவா (அவற்றை வழங்கியுள்ளாய்?) எங்கள் இறைவா! அவர்களின் செல்வங்களை அழித்துவிடுவாயாக! அவர்கள் துன்புறுத்தும் வேதனையைக் காணும்வரை உன்மீது நம்பிக்கை கொள்ளமாட்டார்கள். (எனவே) அவர்களின் உள்ளங்களைக் கடினமாக்கி விடுவாயாக!" என்று மோசே இறைஞ்சினார்.
89(மோசே, ஆரோனே!) உங்கள் இருவரின் இறைஞ்சுதலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. எனவே நீங்கள் உறுதியாக இருங்கள். அறிவில்லாதவர்களின் வழியை ஒருபோதும் பின்பற்றிவிடாதீர்கள்" என்று அவன் கூறினான்.
90இஸ்ராயீலின் மக்களை நாம் கடல் கடக்கச் செய்தோம். ஃபாரோவும் அவனது படைகளும் வரம்பு கடந்து கொடுமை இழைக்க(க் கருதி) அவர்களைப் பின்தொடர்ந்தனர். இறுதியில் ஃபாரோ மூழ்கும்போது, "இஸ்ராயீலின் மக்கள் யார் மீது

நம்பிக்கை கொண்டனரோ அவனைத் தவிர வேறு இறைவன்
இல்லை என்று நானும் நம்பிக்கை கொண்டேன்; அவனுக்குக்
கீழ்ப்படிவோர்களில் நானும் ஒருவனாக இருக்கிறேன்" என்று
கூறினான். [91](அப்போது நாம் அவனிடம்) "இப்போதுதானா
(நம்பிக்கை கொள்கிறாய்?) சற்று முன்வரை நீ எதிராக நடந்து
குழப்பம் விளைவிப்போரில் (ஒருவனாக) இருந்தாயே! [92]எனவே
உனக்குப் பின்னால் வருவோருக்கு(ப் படிப்பினைதரும்) ஒரு
சான்றாவதற்காக (இன்று) உனது உடலை நாம் பாதுகாப்போம்"
(என்று கூறினோம்). உறுதியாக மக்களில் பெரும்பாலோர் எமது
சான்றுகள் குறித்து அலட்சியமாகவே இருக்கின்றனர்.

[93]இஸ்ராயீலின் மக்களை நாம் மிகச் சிறந்த இடத்தில் வாழச்
செய்தோம். அவர்களுக்குத் தூய்மையான உணவுகளை உண்ணக்
கொடுத்தோம். அவர்களிடம் உண்மையான (வேத) ஞானம்
வரும் வரையில் அவர்கள் கருத்து வேறுபாடு கொள்ளவில்லை.
(வேதம் வந்தபின்) எதில் அவர்கள் கருத்து வேறுபாடு
கொண்டனரோ அதில் அவர்களிடையே உம் இறைவன் மறுமை
நாளன்று தீர்ப்பளிப்பான். [94](நபியே!) நாம் உமக்கு அருளியுள்ள
(இவ்வேதத்)தைக் குறித்து உமக்கு ஐயம் இருந்தால் உமக்கு முன்னர்
(அருளப்பெற்ற) வேதங்களை ஓதிக் கொண்டிருப்போரிடம்
கேட்டுப்பாரும். உறுதியாக உமக்கு உமது இறைவனிடமிருந்து
சத்தியம் வந்துள்ளது. ஆகவே நீர் ஐயம் கொள்வோரில் ஒருவராகி
விடாதீர். [95]இறைவசனங்களைப் பொய்மைப்படுத்துவோருடன்
நீர் இணைந்துவிடாதீர். அவ்வாறாயின் பேரிழப்பிற்குரியவராகி
விடுவீர்.

[96]ஐயமின்றி எவர்மீது (அவர்கள் தீயவர்கள் என) உம்
இறைவனின் வாக்கு உறுதியாகி விட்டதோ அவர்கள் (இதனை)
நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். [97]அனைத்துச் சான்றுகளும்
அவர்களிடம் வந்தாலும் துன்புறுத்தும் வேதனையைக்
காணும்வரை (அவர்கள் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள்).
[98](வேதனை வரக்கூடிய இறுதி நேரத்தில்) நம்பிக்கைக்கொண்டு

*அதனால் பயனடைந்த ஊரார் யாருமில்லை; யோனாவின் மக்களைத் தவிர! (யோனாவின்) மக்கள் நம்பிக்கை கொண்டபோது இவ்வுலக வாழ்வில் இழிவுதரும் வேதனையை நாம் அவர்களிடமிருந்து நீக்கினோம். குறிப்பிட்ட காலம்வரை அவர்களைச் சுகம் அனுபவிக்கச் செய்தோம்.*

*99(நபியே!) உம் இறைவன் விரும்பியிருந்தால் உலகிலுள்ள அனைவரும் நம்பிக்கை கொண்டிருப்பார்கள். நீர் மக்களை நம்பிக்கைகொள்ளும்படி கட்டாயப்படுத்துவீரா என்ன?*
*100அல்லாஹ்வின் விருப்பமின்றி எவரும் நம்பிக்கைகொண்டு விடமுடியாது. அறிவைப் பயன்படுத்தாத மக்கள்மீது அல்லாஹ் (ஐயம் எனும்) மாசு படியச் செய்து விடுகின்றான்.*

*101(நபியே!) “வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றைக் கவனித்துப் பாருங்கள்” என்று நீர் கூறுவீராக! (எனினும்) நம்பிக்கைகொள்ளாத மக்களுக்குச் சான்றுகளும் எச்சரிக்கைகளும்*
*எந்தப் பயனும் அளிக்கமாட்டா. 102(நபியே!) இவர்களுக்கு முன்சென்றோர் அனுபவித்த (வேதனை) நாட்கள் போன்றவற்றை அன்றி (வேறு எதனையும்) இவர்கள் எதிர்பார்க்கின்றனரா? நீர் கூறும்: “எதிர்பாருங்கள்! நானும் உங்களுடன் எதிர்பார்த்துக்*
*கொண்டிருக்கிறேன்” 103பின்னர் (வேதனை வரும்போது) நாம் எமது தூதர்களையும் நம்பிக்கையாளர்களையும் பாதுகாத்துக் கொள்வோம். இவ்வாறு நம்பிக்கையாளர்களைக் காப்பது எமது கடமையாகும்.*

*104(நபியே! அவர்களிடம்) “மனிதர்களே! எனது மார்க்கத்தைக் குறித்து உங்களுக்கு ஏதேனும் ஐயம் இருந்தால் (அறிந்து கொள்ளுங்கள்) அல்லாஹ்வை அன்றி நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்க மாட்டேன். மாறாக உங்க(ள் உயிர்க)ளைக் கைப்பற்றுபவனான அல்லாஹ்வையே நான் வணங்குவேன். நம்பிக்கையாளர்களில் ஒருவராக இருக்க வேண்டும் என்றே நான்*
*கட்டளையிடப்பட்டுள்ளேன்” என்று கூறுவீராக! 105(நபியே!) முழு*

நம்பிக்கையுடன் உமது முகத்தை நேரான மார்க்கத்தின் பக்கமே
திருப்புவீராக! ஒருபோதும் இணைவைப்பாளர்களில் ஒருவராகி
விடாதீர்! 106அல்லாஹ்வையன்றி உமக்கு நற்பயனையோ
தீங்கையோ அளிக்க இயலாதவற்றை நீர் அழைக்காதீர்.
அவ்வாறு செய்தீரானால் தீவினையாளர்களில் ஒருவராகிவிடுவீர்.
107அல்லாஹ் ஏதேனும் ஒரு துன்பத்தை உமக்கு அளித்தால்
அவனைத் தவிர அதனை நீக்குபவர் யாருமில்லை. அவன்
உமக்கு ஏதேனும் நன்மையை அளிக்க விரும்பினால் அவனது
அருளைத் தடுப்பவர் யாருமில்லை. தன் அடியார்களில் தான்
விரும்பியோருக்கு அதனை அவன் வழங்குகின்றான். அவன்
பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.

108“மக்களே! உங்கள் இறைவனிடமிருந்து சத்தியம் உங்களிடம்
வந்துவிட்டது. ஆகவே நேர்வழியை ஏற்றுக் கொள்பவர் தமது
நன்மைக்காகவே அவ்வழியில் செல்கிறார். வழிதவறிச் செல்பவர்
தமது கேட்டிற்காகவே வழிதவறிச் செல்கிறார். நான் உங்களுக்குப்
பொறுப்பாளன் அல்லன்” என்று (நபியே!) நீர் கூறுவீராக!
109(நபியே!) உமக்கு அறிவிக்கப்படுவதைப் பின்பற்றுவீராக!
அல்லாஹ் தீர்ப்பளிக்கும்வரை பொறுமையுடன் இருப்பீராக!
அவன்தான் தீர்ப்பளிப்பவர்களில் மிகச் சிறந்தவன்.

## 11. ஹூத் (ஹூத்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

1அலிஃப் – லாம் – ரா.

இது வேதமாகும். இதன் வசனங்கள் அனைத்தையும் அறிந்த
ஞானம் மிக்கவனால் உறுதியாக்கப்பட்டுப் பின்னர்த் தெளிவாக
விளக்கவும் பெற்றுள்ளன. 2(நபியே! மனிதர்களிடம்) “நீங்கள்
அல்லாஹ்வைத்தவிர வேறு யாரையும் வணங்கக் கூடாது.
நான் அவனிடமிருந்து உங்களை எச்சரிக்கவும் உங்களுக்கு
நற்செய்தி கூறவும் உங்களிடம் அனுப்பப்பட்டிருக்கிறேன்” என்று

*கூறுவீராக! [3]“நீங்கள் உங்கள் இறைவனிடம் பாவமன்னிப்புக்கோரி அவன்பால் திரும்புங்கள். அவன் குறிப்பிட்ட காலம்வரை நல்லமுறையில் (வாழ்வாதாரங்களை வழங்கி) உங்களைச் சுகம் அனுபவிக்கச் செய்வான். தகுதியான ஒவ்வொருவருக்கும் (மறுமையில்) தன் பேரருளை வழங்குவான். நீங்கள் இதனைப் புறக்கணித்தால் பேரச்சமூட்டும் மாபெரும் நாளின் வேதனை உறுதியாக உங்களை வந்தடையும் என்று நான் அஞ்சுகிறேன்.*
*[4]நீங்கள் அனைவரும் அல்லாஹ்விடமே திரும்ப வேண்டியுள்ளது. அவன் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்” (என்றும் கூறுவீராக!)*

*[5](நபியே!) கவனியும். அவர்கள் (தீய எண்ணங்களை) அல்லாஹ்விடமிருந்து மறைத்துக் கொள்வதற்காக எப்படித் தங்கள் நெஞ்சங்களை மூடிக் கொள்கின்றனர்! அறிந்துகொள்ளும்: அவர்கள் (பேசிக் கொள்வது வெளித்தெரியாமலிருக்கத்) தங்கள் ஆடைகளால் மறைத்துக் கொண்டாலும் (பேச்சில்) அவர்கள் மறைப்பதையும் வெளிப்படுத்துவதையும் அல்லாஹ் நன்கறிவான். அவன் உள்ளங்களில் உள்ளவற்றை முற்றும் அறிந்தவன்.*

*[6]உணவளிப்பதற்கு அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொள்ளாத எந்த உயிரினமும் பூமியில் இல்லை. அவற்றின் வாழிடத்தையும் அவை அடங்கும் இடத்தையும் அவன் அறிவான். (இவை) அனைத்தும் ஒரு தெளிவான பதிவேட்டில் உள்ளன.*

*[7]அவன்தான் வானங்களையும் பூமியையும் ஆறு நாட்(காலக்கட்டங்)களில் படைத்தான். உங்களில் நற்செயல்புரிபவர் யார் என்பதைச் சோதிப்பதற்காக(வே அவற்றையும் உங்களையும்) படைத்தான். அவனது இறையிருக்கை (அப்போது) நீரின் மீதிருந்தது. (நபியே!) “இறந்த பின்னர் நீங்கள் எழுப்பப்படுவீர்கள்” என்று நீர் கூறினால், “இது தெளிவான சூனியமே” என்று மறுப்பாளர்கள் கூறுவர்.*
*[8]ஒரு குறிப்பிட்ட காலம்வரை நாம் அவர்களின் வேதனையைத் தாமதப்படுத்தினால் “அதனை வரவிடாமல் எது தடுத்துள்ளது?” என்று அவர்கள்*

*(ஏளனமாகக்) கேட்கின்றனர். அது (அவ்வேதனை) அவர்களை வந்தடையும் நாளில் அவர்களிடமிருந்து தடுக்கப்படமாட்டாது. எதனை அவர்கள் ஏளனம் செய்து கொண்டிருந்தனரோ அதுவே அவர்களைச் சூழ்ந்துகொள்ளும்.*

*[9]நாம் மனிதனுக்கு எம்மிடமிருந்து ஏதேனும் அருட்செல்வத்தை வழங்கிப் பின்னர் அதனை அவனிடமிருந்து பறித்துக் கொண்டால் அவன் நம்பிக்கை இழந்து, நன்றி கெட்டவனாகி
விடுகிறான். [10]அவனுக்கு நேர்ந்த துன்பத்திற்குப்பின் அவனுக்கு நாம் நற்பேற்றைச் சுவைக்கச் செய்தால் "எல்லாத் துன்பங்களும் என்னைவிட்டு நீங்கி விட்டன" என்று கூறுகிறான். (அப்போது) அவன் மகிழ்ச்சியில் திளைக்கிறான், செருக்குக்கொள்கிறான்.
[11]ஆயினும் (துன்பம் நேர்கையில்) பொறுமையை மேற்கொண்டு நற்செயல்கள் புரிகின்றவர்களுக்கு(ப் பாவ)மன்னிப்பும் பெரும் கூலியும் உண்டு.*

*[12](நபியே! எதிர்ப்பினால் மனம் தளர்ந்து) உமக்கு அறிவிக்கப் பெற்றவற்றில் சிலவற்றை நீர் (எடுத்துரைக்காது) விட்டு விடுவீரோ? (அன்று). "இவருக்கு ஒரு செல்வக் கருவூலம் அருளப்பட்டிருக்க வேண்டாமா? அல்லது இவருடன் ஒரு வானவர் வந்திருக்க வேண்டாமா?" என்று அவர்கள் கூறுவதனால் உமது மனம் சஞ்சலப்படக் கூடும். (அதுபற்றி வருந்தாதீர்!) நீர் எச்சரிக்கை செய்பவர்தாம். அல்லாஹ்வே அனைத்திற்கும் பொறுப்பாளன்.
[13]"(எமது தூதராகிய) அவர்தாம் (குர்ஆனாகிய) இதனைப் புனைந்து கொண்டார்" என்று அவர்கள் சொல்கின்றனரா? (நீர் அவர்களிடம்) "நீங்கள் உண்மையாளர்களாயின் இதுபோன்ற பத்து அத்தியாயங்களையேனும் புனைந்துகொண்டு வாருங்கள். (இம்முயற்சியில்) அல்லாஹ் அல்லாத, உங்களால் அழைக்க முடிந்தவர்களை எல்லாம் (துணைக்கு) அழைத்துக் கொள்ளுங்கள்"
என்று கூறுவீராக! [14]அவர்கள் உமக்குப் பதிலளிக்காவிட்டால் "இது அல்லாஹ்வின் அறிவைக் கொண்டே அருளப் பெற்றுள்ளது; அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை என்பதை*

*அறிந்துகொள்ளுங்கள். இனியாவது நீங்கள் கீழ்ப்படிவீர்களா?" என்று கேட்பீராக!*

[15]*இவ்வுலக வாழ்வையும் அதன் அலங்காரத்தையும் (மட்டும்) விரும்பியோருக்கு நாம் இவ்வுலகிலேயே அவர்களின் செயல்களுக்குரிய கூலியை முழுமையாக வழங்கிவிடுவோம். அதில் அவர்களுக்கு குறை எதுவும் வைக்கப்படமாட்டாது.*
[16]*ஆனால் மறுமையில் இத்தகையோருக்கு நரக நெருப்பைத்தவிர வேறொன்றும் இல்லை. இங்கு அவர்கள் செய்த (நல்ல)வை யாவும் அங்கு அடியோடு அழிந்துவிடும் (என்பதும்) இங்கு அவர்கள் செய்து கொண்டிருந்த (வெளித்தோற்ற நன்மைகள்) யாவும் வீணானவையே! (என்பதும் அங்கு அவர்களுக்குப் புரிந்துவிடும்)*

[17]*ஒருவர் (இயற்கையாகவே மனிதனுக்குள் அமைந்திருக்கும் ஓரிறைக் கொள்கை என்ற) தன் இறைவனின் தெளிவான சான்றை உணர்ந்திருக்கிறார்; அதைத் தொடர்ந்து அவனிடமிருந்து (அந்த இயற்கைச் சான்றை) உறுதிப்படுத்தும் (குர்ஆனாகிய) சாட்சியும் வந்துவிட்டது. இதற்கு முன்னர் மோசேயின் (தவ்ராத்) வேதம் வழிகாட்டியாகவும் அருளாகவும் இருந்துவந்தது. (இத்தகையவரோடு மறுப்பாளரை ஒப்பிட முடியுமா?) இத்தகைய மக்கள்தாம் இ(வ்வேதத்)தை நம்புகின்றனர். மனிதர்களில் இதனை மறுப்போருக்கு நரகமே வாக்களிக்கப்பட்ட இடமாகும். எனவே (நபியே!) இதுகுறித்து நீர் ஐயம் கொள்ளாதீர். இது உமது இறைவனிடமிருந்து வந்த சத்திய(வேத)மாகும். ஆயினும் மனிதர்களில் பெரும்பாலோர் இதன்மீது நம்பிக்கைகொள்வதில்லை.*

[18]*அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனைபவனைவிட மிகப்பெரிய முறைகேடன் யார்? அத்தகையவர்கள் (மறுமையில்) தம் இறைவனுக்கு முன்னால் நிறுத்தப்படுவர். அப்போது சாட்சியாளர்கள் "இவர்கள்தாம் தம் இறைவனின் மீது பொய்யுரைத்தவர்கள்" என்று கூறுவர். அறிந்துகொள்ளுங்கள்!*

*முறைகேடர்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகும்.*
*[19]அவர்கள் இறைவழியிலிருந்து மக்களைத் தடுத்து*
*அதைக் கோணலானது எனக்காட்ட விரும்புகின்றனர்.*
*மறுமையை மறுப்பவர்களும் அவர்களேயாவர். [20]அவர்களால்*
*(இப்)பூமியில் அல்லாஹ்விடமிருந்து தப்ப முடியாது.*
*அவனையன்றி அவர்களுக்கு வேறு உதவியாளர்களும் இல்லை.*
*அவர்களுக்கு (மறுமையில்) இரு மடங்கு வேதனையளிக்கப்படும்.*
*அவர்களால் (நல்லவற்றைச்) செவிமடுக்கவோ (நேர்வழியைக்)*
*காணவோ இயலாது. [21]அவர்கள்தாம் தம்மைத்தாமே*
*இழப்பிற்கு ஆளாக்கிக் கொண்டவர்கள். அவர்கள் புனைந்த*
*(இணைத்தெய்வங்கள்) யாவும் அவர்களிடமிருந்து மறைந்துவிடும்.*
*[22]உறுதியாக அவர்கள்தாம் மறுமையில் பேரிழப்பிற்குரியவர்கள்.*
*[23]நம்பிக்கைகொண்டு, நற்செயல்கள் புரிந்து தங்கள் இறைவனுக்குப்*
*பணிபவர்கள்தாம் சொர்க்கவாசிகள் ஆவர். அங்கு அவர்கள்*
*என்றென்றும் நிலைத்திருப்பர்.* [24]இவ்விரு பிரிவினரில் ஒரு*
*பிரிவினர் பார்வையற்றவரையும் காதுகேளாதவரையும்*
*போன்றவர்கள். மற்றொரு பிரிவினர் பார்வையுடையோரையும்*
*செவியுடையோரையும் போன்றவர்கள். இவ்விரு பிரிவினரும்*
*சமமாகி விட முடியுமா? நீங்கள் (இதிலிருந்து) படிப்பினை பெற*
*மாட்டீர்களா?*

*[25]நாம் நோவாவை அவரது சமூகத்தினரிடம் (எமது*
*தூதராக) அனுப்பினோம். அவர், (தம் சமூகத்தாரை நோக்கி)*
*“நான் உங்களை வெளிப்படையாக எச்சரிப்பவன். [26]நீங்கள்*
*அல்லாஹ்வையன்றி வேறு யாரையும் வணங்கக் கூடாது. நான்*
*உங்களுக்குத் துன்புறுத்தும் நாளின் வேதனை (வரும் என்பது)*
*பற்றி அஞ்சுகிறேன்” என்று கூறினார். [27]அவரது சமூகத்தினரில்*

---

***உண்மை, பணிவு, நற்செயல்கள் ஆகிய மூன்றும் ஒரே தன்மையுடையவே. உண்மை இறைநம்பிக்கை என்பது இறைவனை மனோரீதியாகக் கண்டடைவதாகும். பணிவுடைமை என்பது இறைவனைக் கண்டடைந்ததன் விளைவாக ஒருவரின் மனத்தில் உருவாவதாகும்.**

*(ஓரிறையை) மறுத்த தலைவர்கள், "நாங்கள் உம்மை எங்களைப் போன்ற ஒரு மனிதராகவே காண்கிறோம். எங்களில் சிந்திக்கத் தெரியாத கீழ்மக்களைத் தவிர வேறு யாரும் உம்மைப் பின்பற்றவில்லை. எங்களைவிட உமக்கு எந்தத் தனிச் சிறப்பும் இருப்பதாக எங்களுக்குத் தெரியவில்லை. மாறாக உங்களைப் பொய்யர்களாகவே நாங்கள் கருதுகிறோம்." என்றனர். [28](அதற்கு) அவர், "என் சமூகத்தோரே! நான் என் இறைவனிடமிருந்து வந்துள்ள தெளிவான சான்றைக் கொண்டிருக்கிறேன்; அவன் தன்னிடமிருந்து (இறைத்தூதர் என்னும்) ஒரு (பெரும்) அருளையும் எனக்கு வழங்கியிருக்கிறான். அது உங்களுக்குப் புலப்படுவதில்லை. அதை நீங்கள் விரும்பாமல் இருக்கும்போது அதை உங்கள்மீது திணிக்க முடியுமா என்று (சிந்தித்துப்) பார்த்தீர்களா?" என்றார்.*

*[29]என் சமூகத்தோரே! நான் இ(றைப்பணி செய்வ)தற்காக உங்களிடம் எந்தப் பொருளையும் (கூலியாகக்) கேட்கவில்லை. எனது கூலி அல்லாஹ்விடமே உள்ளது. (என்னைப் பின்பற்றும்) நம்பிக்கையாளர்களை நான் ஒருபோதும் துரத்தமாட்டேன். உறுதியாக அவர்கள் தங்கள் இறைவனைச் சந்திக்கக் கூடியவர்கள். ஆனால் உங்களைத்தான் அறிவற்ற மக்களாகக் காண்கிறேன்.*
*[30]என் சமூகத்தோரே! நான் (நம்பிக்கையுள்ள) அவர்களைத் துரத்திவிட்டால் இறைவனின் தண்டனையிலிருந்து என்னைக் காப்பாற்றுபவர் யார்? நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?"*
*என்று கூறினார். [31](மேலும்) என்னிடம் அல்லாஹ்வின் கருவூலங்கள் இருப்பதாகவோ மறைவானவற்றை நான் அறிவேன் என்றோ உங்களிடம் கூற மாட்டேன். என்னை ஒரு வானவர் என்றும் சொல்லிக் கொள்ள மாட்டேன். உங்கள் பார்வையில் கீழானவராகத் தோன்றுபவர்களுக்கு அல்லாஹ் ஒருபோதும் நன்மையை அளிக்கமாட்டான் என்றும் உங்களிடம் கூறமாட்டேன். அவர்களுடைய உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் நன்கறிவான். (இதற்கு மாறாக) நான் எதுவும் செய்தால் தீவினையாளர்களில் ஒருவனாகி விடுவேன்" என்றும் கூறினார்.*

[32](அதற்கு) அவர்கள், "நோவாவே! நீர் எங்களுடன் தர்க்கம் செய்துவிட்டீர்; அதிகமாகவே தர்க்கம் செய்துவிட்டீர். (எங்களுக்கு வேதனை வரும் எனக் கூறுவதில்) நீர் உண்மையாளராக இருந்தால் எங்களுக்கு எச்சரித்ததை எங்களிடம் கொண்டு வாரும்!" என்றனர். [33](அதற்கு) அவர், "அல்லாஹ் விரும்பினால் அவன்தான் உங்களிடம் கொண்டுவருவான். (அப்போது) நீங்கள் அதனைத் தடுத்துவிட முடியாது. [34]அல்லாஹ் உங்களைத் தீயவழியில் (செல்லுமாறு) விட்டுவிட விரும்பினால் நான் உங்களுக்கு அறிவுரை கூறவிரும்பினாலும் எனது அறிவுரை உங்களுக்குப் பயன்தராது. அவன்தான் உங்கள் இறைவன்; (மறுமையில்) அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்" என்று கூறினார்.

[35](நபியே!) "இவர்தான் இதனைப் புனைந்துள்ளார்" என்று அவர்கள் கூறுகின்றனரா? (நீர் அவர்களிடம்) "இதனை நான் புனைந்திருந்தால் என் குற்றம் என்னையே சாரும். நீங்கள் (கற்பனை) செய்யும் குற்றங்களிலிருந்து நான் விலகிக் கொண்டேன்" என்று கூறுவீராக!

[36]அன்றியும் நோவாவுக்கு, "(நோவாவே!) உமது சமூகத்தினரில் ஏற்கனவே நம்பிக்கை கொண்டவர்களைத் தவிர வேறு யாரும் இனி உறுதியாக நம்பிக்கை கொள்ளவே மாட்டார்கள். எனவே, அவர்களின் செயல்களுக்காக நீர் கவலைப்படாதீர்" என அறிவிக்கப்பட்டது [37]"எம்முடைய கண்காணிப்பில் எம் கட்டளைக்கேற்ப நீர் ஒரு கப்பலைக் கட்டுவீராக! முறைகேடர்களைக் குறித்து என்னிடம் பரிந்து பேசாதீர். உறுதியாக அவர்கள் மூழ்கடிக்கப்படுவர்" (என்றும் நோவாவிற்கு அறிவிக்கப்பட்டது). [38]அவர் கப்பலை அமைக்கத் தொடங்கினார். அவருடைய சமூகத்தைச் சார்ந்த தலைவர்கள் அவரைக் கடந்து செல்லும்போதெல்லாம் அவரை ஏளனம் செய்தனர். அவர் "நீங்கள் எங்களை ஏளனம் செய்கிறீர்கள் என்றால் நீங்கள் ஏளனம் செய்வதைப்போல நாங்களும் (ஒருநாள்) உங்களை ஏளனம்

*செய்வோம்” என்றார். [39](மேலும்) “இழிவுபடுத்தும் வேதனை யாரை வந்தடையும் என்பதையும் நிலையான வேதனை யார்மீது இறங்கும் என்பதையும் நீங்கள் விரைவில் அறிந்துகொள்வீர்கள்” (என்றும் கூறினார்.)*

*[40]இறுதியில் எமது கட்டளை வந்து வெள்ளம் பொங்கிய போது நாம் (நோவாவிடம்), “ஒவ்வோர் உயிரினத்திலிருந்தும் (ஆண் பெண் என) ஓர் இணையையும், யார்மீது எமது (தண்டனை பற்றிய) வாக்குப் பிறந்துவிட்டதோ அவர்களைத் தவிர ஏனைய உமது குடும்பத்தினரையும் (இன்னும் உள்ள) இறைநம்பிக்கையாளர்களையும் கப்பலில் ஏற்றிக்கொள்வீராக” என்று கூறினோம். குறைவான மக்களே அவரோடு சேர்ந்து நம்பிக்கை கொண்டிருந்தனர். [41]நோவா (தம்மைச் சார்ந்தோரிடம் “அல்லாஹ்வின் பெயர்கூறி) இதில் ஏறிக் கொள்ளுங்கள். இது செல்வதும் நிலைகொள்வதும் அல்லாஹ்வின் பெயர் கொண்டேயாகும். உறுதியாக என் இறைவன் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்” என்று கூறினார். [42]அது மலைகளைப் போன்ற அலைகளில் அவர்களைக் கொண்டு செல்லத் தொடங்கியது. அப்போது நோவா தம்மைவிட்டு விலகியிருந்த தம் மகனை நோக்கி, “என் மகனே! எங்களுடன் வந்து ஏறிக்கொள், மறுப்பாளர்களுடன் இருந்துவிடாதே!” என்று (உரக்க) அழைத்தார். [43](அதற்கு) அவன், “நான் ஏதேனும் ஒரு மலையின்பக்கம் ஒதுங்கிக் கொள்வேன். அது என்னை வெள்ளத்திலிருந்து பாதுகாக்கும்” என்றான். (அதற்கு) அவர், “இன்று அல்லாஹ்வின் அருள் பெற்றவர்களைத்தவிர அவனுடைய கட்டளையிலிருந்து தப்பித்துக்கொள்ள எவருக்கும் புகலிடம் இல்லை” என்று கூறிக்கொண்டிருக்கும்போதே இருவருக்கும் நடுவே அலையொன்று குறுக்கிட்டது. மூழ்கியவர்களில் அவனும் ஒருவனாகிவிட்டான். [44]“பூமியே, உனது நீரை நீ விழுங்கி விடு! வானமே, நீ பொழியாதே!” எனக் கட்டளை பிறந்தது. வெள்ளம் வடிந்தது. கட்டளை நிறைவேற்றப்பட்டது. கப்பல் ‘ஜூதி’ என்னும் மலையில் நிலைகொண்டது. “தீவினைபுரிந்த கூட்டத்தாருக்கு அழிவுதான்” என்றும் அறிவிக்கப்பட்டது.*

[45]*(அப்போது) நோவா தம் இறைவனிடம் இறைஞ்சி "என் இறைவனே! என் மகன் (நீ காப்பதாக வாக்களித்த) என் குடும்பத்திலுள்ளவன்தான். உறுதியாக உன் வாக்குறுதி உண்மையானது. நீ நீதியாளர்களிலெல்லாம் மேலான நீதியாளன்" என்று கூறினார். [46](அதற்கு) அவன், "நோவாவே! அவன் உம் குடும்பத்தைச் சார்ந்தவன் அல்லன். ஏனெனில் அவனது செயல் ஒழுங்கற்றது. எனவே நீர் அறியாததைப்பற்றி என்னிடம் கேட்காதீர். நீர் அறிவில்லாதோரில் ஒருவராகி விடவேண்டாம் என்று நான் உமக்கு அறிவுறுத்துகிறேன்" என்று கூறினான். [47](அதற்கு) அவர் "என் இறைவனே! எனக்குத் தெரியாதவற்றைப்பற்றி உன்னிடம் கேட்பதிலிருந்து நான் உன்னிடமே பாதுகாப்புத் தேடுகிறேன். நீ என்னை மன்னித்து இரக்கம் காட்டவில்லையென்றால் நான் இழப்பிற்குரியவன் ஆகிவிடுவேன்" என்று கூறினார்.*

[48]*(வெள்ளம் வடிந்து கப்பல் 'ஜூதி' என்னும் மலை மீது ஒதுங்கியபோது) "நோவாவே, எம்முடைய சாந்தியுடன் இறங்கி விடுவீராக! உம் மீதும் உம்முடனுள்ள மக்கள்மீதும் அவர்களின் வழித்தோன்றல்கள் சிலர்மீதும் பெரும்பேறுகள் உண்டாவதாக! (இனி வரவுள்ள அவ்வழித்தோன்றல்களில் மறுப்பாளர்களாகிவிடும்) சமூகத்தினருக்கு நாம் (சிறிதுகாலம்) வாழ்க்கைச் சுகங்களை வழங்குவோம். பின்னர் எம்மிடமிருந்து துன்புறுத்தும் வேதனை அவர்களைப் பிடித்துக் கொள்ளும்" என்று கூறப்பட்டது. [49](நபியே!) இவை மறைவான செய்திகளாகும். இவற்றை நாம் உமக்கு அறிவிக்கிறோம். இதற்கு முன்னர் நீரும் உம் சமூகத்தினரும் இவற்றை அறிந்திருக்கவில்லை. எனவே (நோவாவைப் போல நீரும்) பொறுமையை மேற்கொள்வீராக! உறுதியாக (நல்ல) முடிவு இறையச்சமுடையோருக்கே ஆகும்.*

[50]*'ஆத்' சமூகத்தினரிடம் அவர்களின் சகோதரர் ஹூதை (எமது தூதராக) அனுப்பினோம். அவர், "என் சமூகத்தோரே! அல்லாஹ்வையே வணங்குங்கள். அவனைத் தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. நீங்கள் பொய்யானவற்றையே*

(கடவுள்களாகப்) புனைந்து வைத்துள்ளீர்கள்” என்றார்.
51“என் சமூகத்தோரே! நான் இ(றைப்பணி செய்வ)தற்காக
உங்களிடம் எந்தக் கூலியையும் கேட்கவில்லை. எனது கூலி
என்னைப் படைத்தவனிடமே உள்ளது. நீங்கள் புரிந்துகொள்ள
மாட்டீர்களா”? எனவும் கேட்டார். 52“என் சமூகத்தோரே! உங்கள்
இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரி அவன்பால் திரும்புங்கள்.
அவன் உங்கள் மீது வானத்திலிருந்து நன்கு மழை பொழியச்
செய்வான். உங்கள் வலிமைக்கு மேலும் வலிமை சேர்ப்பான்.
ஆகவே நீங்கள் அவனைப் புறக்கணித்துக் குற்றம் இழைப்போர்
ஆகிவிடாதீர்கள்” என்றும் கூறினார்.

53(அதற்கு) அவர்கள், “ஹூதே, நீர் எங்களிடம் எந்தத் தெளிவான
சான்றையும் கொண்டுவரவில்லை. உமது பேச்சை நம்பி எங்கள்
தெய்வங்களை நாங்கள் விட்டுவிட மாட்டோம்; உம்மை நம்பவும்
மாட்டோம். 54எங்கள் தெய்வங்களில் ஏதோ ஒன்று உமக்குக்
கேடு விளைவித்து விட்டது என்பதைத் தவிர (வேறு எதனையும்)
சொல்ல மாட்டோம்” என்றனர். அதற்கு அவர், “அவனையன்றி
நீங்கள் இணைவைப்பவற்றிலிருந்து நான் விலகிவிட்டேன்
என்பதற்கு நான் அல்லாஹ்வைச் சாட்சியாக்குகிறேன். நீங்களும்
(இதற்குச்) சாட்சியாக இருங்கள்” என்றார். 55“எனவே, நீங்கள்
அனைவரும் சேர்ந்து எனக்கெதிராகத் திட்டம் தீட்டுங்கள்.
எனக்குக் காலநீட்டிப்பு அளிக்கவும் வேண்டாம்” (என்று கூறினார்)
56“என் இறைவனும் உங்கள் இறைவனுமான அல்லாஹ்வையே
நான் முற்றிலும் சார்ந்துள்ளேன். எந்த உயிரானாலும் அதன்
நெற்றிமுடி அவன் பிடியிலேயே உள்ளது. உறுதியாக என்
இறைவன் நேர்வழியில் இருக்கிறான்” என்றும் கூறினார். 57“நீங்கள்
(இதனைப்) புறக்கணித்தால் (எனக்குக் கவலையில்லை.) நான்
எந்தத் தூதுச் செய்தியுடன் உங்களிடம் அனுப்பப்பட்டேனோ
அதனை உங்களுக்கு எடுத்துரைத்து விட்டேன். என் இறைவன்
(உங்களை அழித்து) உங்களுக்குப் பதிலாக வேறொரு
சமூகத்தைக் கொண்டு வந்துவிடுவான். நீங்கள் அவனுக்கு எந்தத்
தீங்கையும் இழைத்துவிட முடியாது. உறுதியாக என் இறைவன்

எல்லாவற்றையும் பாதுகாப்பவன்” (என்றும் அவர் கூறினார்).
[58]எம்முடைய கட்டளை வந்தபோது எமது அருளால் ஹூதையும்
அவருடன் இருந்த நம்பிக்கையாளர்களையும் காப்பாற்றினோம்;
அவர்களைக் கடுமையான வேதனையிலிருந்து காத்தோம்.

[59](நபியே!) இத்தகையவர்கள் ஆத் சமூகத்தினர். அவர்கள்
தங்கள் இறைவனின் சான்றுகளை மறுத்து அவனது தூதர்களுக்கு
எதிராகச் செயல்பட்டனர்; (உண்மையின்) பகைவர்களாகிய
ஒவ்வொரு கொடுங்கோலனின் கட்டளையையும் அவர்கள்
பின்பற்றினர். [60]இவ்வுலகில் (இறைவனின்) சாபம் அவர்களைப்
பின்தொடர்ந்தது; (மறுமையிலும்) அது அவர்களைப்
பின்தொடரும். அறிந்து கொள்ளுங்கள், ஆத் சமூகத்தினர் தங்கள்
இறைவனை மறுத்துவிட்டனர். அறிந்துகொள்ளுங்கள், ஹூதின்
மக்களான, ‘ஆத்’ (இறையருளிலிருந்து) துரத்தப்பட்டோர் ஆவர்.

[61]ஸமூத் சமூகத்தினரிடம் (அவர்களுடைய) சகோதரர்
ஸாலிஹை எமது (தூதராக) அனுப்பினோம். அவர், “என்
சமூகத்தோரே! அல்லாஹ்வை வணங்குங்கள். அவனைத்தவிர
உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. அவன்தான் பூமியிலிருந்து
உங்களை உருவாக்கி அதிலேயே உங்களை வாழவும் செய்தான்.
எனவே நீங்கள் அவனிடம் (பாவ)மன்னிப்புக் கோருங்கள்;
அவன் பக்கமே திரும்புங்கள். உறுதியாக என் இறைவன் அருகில்
இருப்பவனும்; (இறைஞ்சுதலுக்குப்) பதிலளிப்பவனும் ஆவான்”
என்று கூறினார். [62]அதற்கு அவர்கள், “சாலிஹே! இதற்கு முன்
நாங்கள் உம்மீது பெரும் நம்பிக்கை வைத்திருந்தோம். (இப்போது)
எங்கள் முன்னோர்கள் வணங்கி வந்த தெய்வங்களை நாங்கள்
வணங்கக்கூடாதென நீர் தடுக்கிறீரா? நீர் எங்களை எதன்பால்
அழைக்கின்றீரோ அதைப்பற்றி நாங்கள் மிகப் பெரிய ஐயத்தில்
இருக்கிறோம்” என்று கூறினர். [63](அதற்கு) அவர், “என்
சமூகத்தோரே! நீங்களே கூறுங்கள். நான் என் இறைவனிடமிருந்து
தெளிவான சான்றைப் பெற்றுள்ளேன். அவன் எனக்கு (இறைத்
தூதுப்பணி எனும்) தன் அருளையும் வழங்கியிருக்கிறான்.

*(அவ்வாறிருக்க) நான் அவனுக்கு எதிராகச் செயல்பட்டால் என்னை அவனிடமிருந்து காப்பாற்றுபவர் யார்? உங்களால் இழப்பைத் தவிர வேறெதையும் எனக்கு மிகுதிப்படுத்த முடியாது" என்று கூறினார்.*
[64]*"என் சமூகத்தோரே! அல்லாஹ்வின் இந்தப் பெண் ஒட்டகம் உங்களுக்குச் சான்றாக (சோதனையாக) அமைந்ததாகும். எனவே இதனை அல்லாஹ்வுடைய பூமியில் மேய விட்டுவிடுங்கள். அதற்கு எந்தத் தீங்கும் இழைத்து விடாதீர்கள். அப்படிச் செய்தால் மிக விரைவில் உங்களை அல்லாஹ்வின் வேதனை பீடிக்கும்" (என்றும் கூறினார்.)*

[65]*ஆயினும் அவர்கள் அதன் குதிகால் நரம்பை வெட்டி(க் கொன்று) விட்டனர். அப்போது சாலிஹ், "மூன்று நாட்களுக்கு உங்கள் வீடுகளில் சுகம் அனுபவித்துக் கொள்ளுங்கள். இது பொய்க்காத வாக்காகும்" என்று கூறினார்.*
[66]*இறுதியில் எமது கட்டளை வந்தபோது நாம் எம் அருளால் சாலிஹையும் அவருடன் நம்பிக்கை கொண்டவர்களையும் அன்றைய நாளின் இழிவிலிருந்து காப்பாற்றினோம். (நபியே!) உறுதியாக உம் இறைவன் வலிமை மிக்கவன்; யாவற்றினும் வல்லவன்.*
[67]*தீவினையாளர்களை ஒரு பயங்கர இடிமுழக்கம் தாக்கியது. அவர்கள் தத்தம் வீடுகளில் குப்புற வீழ்ந்து இறந்து கிடக்கப் பொழுது விடிந்தது.*
[68]*அதற்கு முன்னர் அங்கு அவர்கள் வாழ்ந்திராதவர்கள் போல (எந்த அடையாளமுமின்றி) அழிந்து விட்டனர். அறிந்துகொள்ளுங்கள்! ஸமூத் சமூகத்தினர் தம் இறைவனை மறுத்தனர். அறிந்து கொள்ளுங்கள்! ஸமூத் சமூகத்தினர் மீது (அல்லாஹ்வின்) சாபம் விளைந்தது.*

[69]*ஆப்ரஹாமிடம் எமது வானவர்கள் நற்செய்தியுடன் வந்து "உங்கள் மீது சாந்தி நிலவட்டும்" என்று கூறினர். அதற்கு அவர் "உங்கள் மீதும் சாந்தி நிலவட்டும்" என்று கூறிச் சற்று நேரத்தில் வறுத்த கன்றின் இறைச்சியைக் கொண்டு வந்தார்.*
[70]*அவர்களின் கைகள் அதன்பால் செல்லாததைக் கண்டபோது அவர்களைப் புதிராகப் பார்த்தார். (அவர்களைக் குறித்து)*

*ஐயமும் அச்சமும் கொண்டார் "அஞ்ச வேண்டாம்; நாங்கள்
லோத்துடைய சமூகத்தினரிடம் அனுப்பப்பட்டுள்ளோம்" என்று
அவர்கள் கூறினர். 71(அப்போது) அவருடைய மனைவி நின்று
கொண்டிருந்தார். (லோத்தின் சமூகத்தாருக்கு நேரவிருக்கும்
அழிவைக் கேள்வியுற்றுச்) சிரித்தார். நாம் (அவ்வானவர்கள்
மூலம்) அவருடைய மனைவிக்கு (மகன்) ஈசாக் (பிறக்கப்போவது)
பற்றியும் ஈசாக்கிற்குப்பின் (பேரன்) ஜேக்கப் (பிறக்கப்போவது)
பற்றியும் நற்செய்தி கூறினோம். 72(அதற்கு) அவர், "அந்தோ
என் கேடே! நான் குழந்தை பெறுவேனா? நானோ கிழவியாகி
விட்டேன்; இதோ என் கணவரும் கிழவராக இருக்கிறார்.
இது ஒரு வியப்புக்குரிய செய்தியாக இருக்கிறதே!" என்றார்.
73வானவர்கள் அவரை நோக்கி "அல்லாஹ்வின் கட்டளையைக்
குறித்தா வியப்படைகிறீர்? ஆப்ரஹாமின் குடும்பத்தாரே! உங்கள்
மீது அல்லாஹ்வின் அருளும் பெரும் பேறுகளும் உண்டாகட்டும்.
உறுதியாக அவன் புகழுக்குரியவன்; மகத்துவமிக்கவன்" என்று
கூறினர்.*

*74ஆப்ரஹாமிடருந்த அச்சம் அகன்று (குழந்தைப் பேறு பற்றிய)
நற்செய்தியும் வந்தபோது (மகிழ்ச்சியடைந்த) அவர் எம்மு(டைய
வானவர்களு)டன் லோத்துடைய சமூகத்தினருக்காகப்
பரிந்துரைத்துவாதிடலானார். 75(ஏனெனில்)உறுதியாக ஆப்ரஹாம்
சகிப்புத்தன்மை மிக்கவராகவும் இளகிய மனம்கொண்டவராகவும்
(அனைத்திற்கும் எம் பக்கமே) திரும்புபவராகவும் இருந்தார்.
76(இறுதியில் வானவர்கள்) ஆப்ரஹாமே! நீர் இதைப் (பற்றி
வாதிடாமல்) புறக்கணித்துவிடும். உம் இறைவனின் கட்டளை
வந்துவிட்டது. அவர்களின் மீது தடுத்து நிறுத்தமுடியாத வேதனை
வந்தேதீரும்" என்று கூறினர்.*

*77எமது வானவர்கள் லோத்திடம் வந்தபோது அவர்
திடுக்கிட்டார். (அவர்களைத் தம் சமூகத்தினரிடமிருந்து
காப்பது எப்படி என) மன நெருக்கடிக்குள்ளானார். "இது*

*மிகவும் கடுமையான நாள்" என்றார். [78]அவரது சமூகத்தினர்
அவரிடம் விரைந்தோடி வந்தனர். அவர்கள் முன்பிருந்தே
தீச்செயல்களைத்தான் செய்து கொண்டிருந்தனர். அப்போது
அவர், "என் சமூகத்தோரே! (இதோ) இவர்கள் என் புதல்விகள்.
இவர்கள் (மணம் செய்துகொள்ள) உங்களுக்குத் தூயவர்கள்.
எனவே அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்துகொள்ளுங்கள். என்
விருந்தினர்களிடம் (தவறாக நடந்து) என்னை இழிவுபடுத்தி
விடாதீர்கள். உங்களில் நல்லறிவுடைய மனிதர் ஒருவர்கூட
இல்லையா?" என்று கேட்டார். [79](அதற்கு) அவர்கள், "உம்முடைய
புதல்வியரிடம் எங்களுக்கு எந்தத் தேவையும் இல்லை என்பதை
நீர் அறிவீர். நாங்கள் விரும்புவது எது என்பதையும் நீர் அறிவீர்"
என்று கூறினர்.*

*[80](அப்போது அவர்) "அந்தோ! உங்களைத் தடுக்க என்னிடம்
வலிமை இருந்திருக்கக் கூடாதா? அல்லது புகலடைவதற்கு
வலிமைமிக்க ஒரு துணையாவது எனக்குக் கிடைத்திருக்கக்
கூடாதா?" என்று (வருந்திக்) கூறினார். [81](லோத்தின்
விருந்தினர்கள் அவரை நோக்கி) "லோத்தே! நாங்கள் உம்
இறைவனின் (வானவத்) தூதர்கள். அவர்களால் உம்மை
ஒருபோதும் நெருங்கி வரமுடியாது. எனவே நீர் (இன்றைய)
இரவின் ஒரு பகுதி எஞ்சியிருக்கும்போதே உம் குடும்பத்தாருடன்
வெளியேறிவிடுங்கள்! உமது மனைவியைத் தவிர. உங்களில் எவரும்
திரும்பிப் பார்க்கக்கூடாது. அவர்களுக்கு நேரப் போவதுதான்
அவளுக்கும் நேரும். அவர்களுக்குக் குறிக்கப்பட்ட நேரம்
வைகறைப் பொழுதாகும். வைகறை நெருங்கி விட்டதல்லவா!"
என்றனர். [82]இறுதியில் எமது கட்டளை வந்தபோது அந்த
ஊரைத் தலைகீழாகப் புரட்டி விட்டோம்; அதன்மீது சுட்ட
செங்கற்களை அடுக்கடுக்காகத் தொடர்ந்து பொழியச் செய்தோம்.
[83]ஒவ்வொரு கல்லும் இறைவனால் அடையாளமிடப்பட்டிருந்தது.
தீவினையாளர்களுக்கான தண்டனை மிகத்தொலைவில்
இருக்கவில்லை.*

84மத்யன் (நகர மக்களின்)பால் அவர்களுடைய சகோதரர்
ஷுஐபை (எமது தூதராக) அனுப்பினோம். அவர் (அவர்களிடம்)
“என் சமூகத்தோரே! அல்லாஹ்வையே வணங்குங்கள்; அவனைத்
தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. அளவையிலும்
நிறுவையிலும் குறைவு செய்யாதீர்கள். நீங்கள் நல்ல நிலையில்
இருப்பதை நான் காண்கிறேன். ஆனால் உறுதியாக (உங்களைச்)
சூழ்ந்துகொள்ளும் ஒரு நாளின் வேதனையைக் குறித்து
அஞ்சுகிறேன். 85என் சமூகத்தோரே! அளவையும் நிறுவையும்
நேர்மையுடன் (கொடுத்து) நிறைவாக்குங்கள். மக்களுக்கு(க்
கொடுக்க வேண்டிய) அவர்களின் பொருள்களைக் குறைத்து
விடாதீர்கள். பூமியில் குழப்பம் செய்துகொண்டு திரியாதீர்கள்.
86நீங்கள் (உண்மையான இறை)நம்பிக்கையாளர்களாக இருந்தால்
அல்லாஹ் (உங்கள் தொழிலில்) மீதப்படுத்திக் கொடுப்பதே
உங்களுக்குச் சிறந்ததாகும். நான் உங்களைக் கண்காணிப்பவன்
அல்லன்” என்று கூறினார்.

87(அதற்கு) அவர்கள், “ஷுஐபே! எங்கள் முன்னோர் வணங்கி
வந்தவற்றை விட்டுவிட வேண்டும் என்றும் எங்கள் செல்வங்களில்
எங்கள் விருப்பம் போல் செயல்படுவதை விட்டுவிட வேண்டும்
என்றும் (நீர் எங்களுக்குக் கட்டளையிடுமாறு) உம் தொழுகை(நெறி)
உம்மை ஏவுகிறதா? நீர் மட்டும்தான் சகிப்புத்தன்மை வாய்ந்தவர்;
நன்னடத்தை கொண்டவர்!” என(ஏளனமாக)க் கூறினர்.

88ஷுஐப், “என் சமூகத்தோரே! சிந்தியுங்கள்! நான்
இறைவனிடமிருந்து தெளிவான சான்றைப் பெற்றிருக்கிறேன்;
அவன் எனக்குத் தன்னிடமிருந்து நல்ல உணவும்
வழங்கியிருக்கின்றான். நீங்கள் எவற்றைச் செய்யக்கூடாது எனத்
தடுக்கிறேனோ நானே அவற்றைச் செய்ய விரும்பமாட்டேன்.
என்னால் இயன்றவரை (உங்களைச்) சீர்திருத்துவதைத் தவிர
(வேறெதனையும்) நான் விரும்பவில்லை. அல்லாஹ்வின்
உதவியின்றி நான் (இதில்) வெற்றி பெற முடியாது; அவனிடமே
முழுமையான நம்பிக்கை கொண்டுள்ளேன்; அவன் பக்கமே
நான் திரும்புகிறேன். 89என் சமூகத்தோரே! என் மீதான

*(உங்கள்) பகைமை, நோவாவின் சமூகத்தாருக்கோ அல்லது ஹூதின் சமூகத்தாருக்கோ அல்லது சாலிஹின் சமூகத்தாருக்கோ ஏற்பட்ட துன்பத்தைப்போல் உங்களுக்கும் நேரும்படி செய்துவிட வேண்டாம். லோத்தின் சமூகத்தார் (காலத்தாலும் வாழ்ந்த இடத்தாலும்) உங்களுக்கு மிகுதொலைவில் இல்லை.*
*90உங்கள் இறைவனிடம் பாவமன்னிப்புக்கோரி அவனிடமே மீண்டு விடுங்கள். உறுதியாக என் இறைவன் நிகரற்ற அன்பாளனாகவும் நேசிப்பவனாகவும் இருக்கிறான்” என்று கூறினார்.*

*91அவர்கள், “ஷுஐபே! நீர் கூறும் பெரும்பாலானவை எங்களுக்குப் புரியவில்லை. உறுதியாக எங்களுக்கிடையே உம்மை வலுவற்றவராகவே காண்கிறோம். உமது குலத்தார் மட்டும் இல்லையெனில் உம்மைக் கல்லால் அடித்தே கொன்றிருப்போம். நீர் எங்கள் மதிப்பிற்குரியவரும் அல்லர்” என்றனர்.*
*92(ஷுஐப்) “என் மக்களே! அல்லாஹ்வைவிடவா என் குலத்தார் உங்களுக்கு மிகுந்த மதிப்பிற்குரியவர்களாகி விட்டனர்? நீங்கள் அவனை முதுகுக்குப் பின்னால் வீசிவிட்டீர்கள். உறுதியாக நீங்கள் செய்பவற்றை என் இறைவன் சூழ்ந்து அறிபவன் ஆவான்” என்றார்.*
*93(மேலும் அவர்) “என் சமூகத்தோரே! நீங்கள் உங்கள் வழியில் செயல்படுங்கள்; நானும் (என் வழியில்) செயல்பட்டுக் கொண்டிருப்பேன். இழிவுதரும் வேதனை யாரை வந்தடையும் என்பதையும் யார் பொய்யர் என்பதையும் விரைவில் நீங்கள் அறிந்துகொள்வீர்கள். எதிர்பாருங்கள்; நானும் உங்களுடன் எதிர்பார்க்கிறேன்” (என்றும் கூறினார்.)*

*94இறுதியில் எமது கட்டளை பிறந்தபோது, நாம் ஷுஐபையும் அவருடன் இருந்த நம்பிக்கையாளர்களையும் எமது அருளால் காப்பாற்றினோம். தீவினையாளர்களை இடி முழக்கம் தாக்கியது. காலையில் அவர்கள் தங்கள் வீடுகளில் முகங்கவிழ்ந்து இறந்து கிடந்தனர்.*
*95அங்கு அவர்கள் என்றுமே வாழ்ந்திராதவர்களைப் போல (சுவடே இன்றி அழிந்துவிட்டனர்).*

*அறிந்து கொள்ளுங்கள்! ஸமூத் சமூகத்தினர் சபிக்கப்பட்டதைப் போலவே மத்யன்வாசிகளும் சபிக்கப்பட்டனர்.*

[96-97]*நாம் மோசேயை ஃபாரோவிடமும் அவனது அரசு*
*தலைவர்களிடமும் எமது சான்றுகள், தெளிவான (அற்புதம் ஆகிய)*
*ஆதாரம் ஆகியவற்றுடன் அனுப்பினோம். (ஆனால்) அவர்கள்*
*ஃபாரோவின் கட்டளையைப் பின்பற்றிக் கொண்டிருந்தனர்.*
*ஃபாரோவின் கட்டளையோ நேர்மையானதாக இல்லை.*
[98]*மறுமை நாளில் அவன் தன் சமூகத்தை முன்னின்று வழிநடத்தி*
*அவர்களை நரகத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பான். அவர்கள்*
*போய்ச் சேருமிடம் எவ்வளவு கேடானது!* [99]*இவ்வுலகில்*
*இறைவனின் சாபம் அவர்களைப் பின்தொடர்ந்தது; மறுமையிலும்*
*அச்சாபம் அவர்களைத் தொடரும். வழங்கப்படும் பரிசுகளில்*
*எவ்வளவு இழிவானது இது!* [100]*(மேற்கூறிய) இவை சில*
*ஊர்களைப்பற்றிய செய்திகள். இவற்றை (நபியே!) நாம் உமக்கு*
*எடுத்துரைத்தோம். அவற்றில் சில இன்றும் இருக்கின்றன. சில*
*அழிந்துவிட்டன.* [101]*நாம் அவர்களுக்கு அநீதி இழைக்கவில்லை.*
*மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டனர்.*
*உம் இறைவனின் கட்டளை பிறந்தபோது அல்லாஹ்வையன்றி*
*அவர்கள் அழைத்துக் கொண்டிருந்த தெய்வங்கள் அவர்களுக்கு*
*எந்தப் பயனும் அளிக்கவில்லை; அவை அவர்களுக்கு*
*இழப்பைத்தவிர வேறு எதனையும் மிகுதிப்படுத்தவில்லை.*
[102]*(நபியே!) தீவினைபுரியும் ஊர்(மக்)களை உம் இறைவன்*
*பிடித்தால் அவனது பிடி இவ்வாறுதான் இருக்கும். உறுதியாக*
*அவனது பிடி வேதனைமிக்கது; கடுமையானது.*

[103]*மறுமையின் வேதனை குறித்து அஞ்சுவோருக்கு இதில்*
*உறுதியான படிப்பினையுள்ளது. அது (மறுமை நாள்) மனிதர்*
*அனைவரும் ஒன்றுகூட்டப்படும் நாளாகும். (அன்றி) அனைவரும்*
*(இறைவனின் முன்) நிறுத்தப்படும் நாளாகும்.* [104]*அதனை*
*நாம் குறிப்பிட்ட தவணைக்காகவே தாமதப்படுத்துகிறோம்.*

105அந்நாள் வரும்போது எந்த மனிதனும் அவனது
அனுமதியின்றிப் பேசமுடியாது. அவர்களில் சிலர் நற்பேறு
அற்றவர்களாகவும் சிலர் நற்பேறு பெற்றவர்களாகவும் இருப்பர்.
106நற்பேறு அற்றவர்கள் நரகத்தில் இருப்பர். அங்கு (அவர்களின்)
பெருமூச்சுகளும் தேம்பல்களுமன்றி (வேறொன்றும்) இராது.
107உம் இறைவன் விரும்பினாலன்றி (அவ்வுலகின்) வானங்களும்
பூமியும் நிலைத்திருக்கும்வரை அங்கே அவர்கள் நிலையாகக்
கிடப்பர். உறுதியாகத் தான் விரும்பியதை இறைவன்
செய்துவிடுகிறான். 108நற்பேறு பெற்றவர்கள் சொர்க்கம் செல்வர்.
உம் இறைவன் விரும்பும்வரை (அவ்வுலகின்) வானங்களும் பூமியும்
நிலைத்திருக்கும் காலமெல்லாம் அங்கே அவர்கள் தங்கியிருப்பர்.
அவர்களுக்கு இது என்றும் முடிவுறாத அருட்கொடையாக
இருக்கும்.

109(நபியே!) இவர்கள் வணங்குகின்ற தெய்வங்கள் (பொய்தான்
என்பது) குறித்து நீர் ஐயப்பட வேண்டாம். இதற்கு முன்
இவர்களின் முன்னோர்கள் வணங்கியதைப் போலவே இவர்களும்
வணங்குகின்றனர். நாம் இவர்களின் (தண்டனைப்) பங்கைக்
குறைவில்லாமல் நிறைவாகக் கொடுத்து விடுவோம்.

110நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். ஆனால் அது
குறித்தும் (அக்கால மக்களிடையே) கருத்து வேறுபாடுகள் எழுந்தன.
(அவர்களுக்குரிய தண்டனை) மறுமையில் வழங்கப்படும் என உம்
இறைவனின் வாக்கு முன்னரே (வந்துவிட்டது. அது) வராதிருந்தால்
(இம்மையிலேயே) அவர்களுக்குத் தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும்.
(மக்காவாசிகளாகிய) இவர்களும் (இந்தக் குர்ஆனைப்பற்றிக்
குழப்பமான) ஐயத்தில் இருக்கின்றனர். 111உறுதியாக இறைவன்
ஒவ்வொருவருக்கும் அவர்களின் செயல்களுக்கான கூலியை
முழுமையாக வழங்கிவிடுவான்; அவர்கள் செய்பவற்றை அவன்
நன்கறிந்தவன். 112(ஆகவே நபியே!) நீரும் பாவமீட்சி பெற்று மீண்டு

*உம்முடன் இருப்போரும் உமக்குக் கட்டளையிடப்பட்டவாறு உறுதியாக இருங்கள்; வரம்புமீறி விடாதீர்கள். உறுதியாக நீங்கள் செய்பவற்றை அவன் உற்று நோக்கிக் கொண்டிருக்கின்றான்.*
*113(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் அநீதி இழைப்போர் பக்கம் சாய்ந்து விடாதீர்கள். அவ்வாறு சாய்ந்தால் நரகநெருப்பு உங்களைப் பற்றிக்கொள்ளும்; அல்லாஹ்வைத் தவிர உங்களைக் காப்போர் யாருமில்லை; உங்களால் உதவி பெறவும் முடியாது.*
*114பகலின் இரு முனை(களாகிய காலை, மாலை)களிலும் இரவின் சில பகுதிகளிலும் தொழுகையைக் கடைப்பிடியுங்கள். உறுதியாக நன்மைகள் தீமைகளைப் போக்கிவிடும். (தம் இறைவனை) நினைவுகூர்வோருக்கு இது ஒரு நினைவூட்டலாகும். 115(நபியே!*
*எந்நிலையிலும்) பொறுமையை மேற்கொள்வீராக! நன்மை செய்வோரின் கூலியை அல்லாஹ் வீணாக்குவதில்லை.*

*116(மக்களே!) உங்களுக்கு முன்சென்ற சமூகங்களில், உலகில் குழப்பம் பரவாமல் தடுக்கக்கூடிய நல்லவர்கள் மிகுந்த அளவில் இருந்திருக்க வேண்டாமா? அ(த்தகைய)வர்கள் குறைந்த எண்ணிக்கையிலேயே இருந்தனர். நாம் (எமது தண்டனைகளிலிருந்து) அவர்களைத் (தனியே பிரித்துக்) காப்பாற்றினோம். பெரும்பான்மையினரான தீவினையாளர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட சுகவாழ்வில் திளைத்து அவர்கள் குற்றவாளிகளாக ஆகிவிட்டனர். 117(நபியே!) ஊர்களில் வசிக்கும்*
*மக்கள் சீர்திருத்துபவர்களாக இருக்கும் நிலையில் அவ்வூர்களை உம் இறைவன் நியாயமின்றி அழித்து விடுபவனல்லன். 118உம்*
*இறைவன் விரும்பியிருந்தால் மனித இனம் முழுவதையும் ஒரே சமூகத்தினராக ஆக்கியிருப்பான். (ஆனால் அனைவருக்கும் சுதந்திரம் வழங்கப்பட்டிருப்பதால்) அவர்கள் எப்போதும் முரண்பட்டுக் கொண்டேயிருப்பார்கள். 119ஆயினும் (நபியே!*
*அவர்களில்) உம் இறைவன் யாருக்கு அருள்புரிந்தானோ அவர்களைத் தவிர (ஏனையோரே முரண்படுவர்). இ(வ்வாறு முரண்படுவ)தற்காகவே அவன் அவர்களைப் படைத்துள்ளான்.*

*"(பாவம்புரிந்த) ஜின்கள், மனிதர்கள் ஆகிய அனைவரையும் கொண்டு நான் நரகத்தை நிரப்புவேன்" என்ற உமது இறைவனின் வாக்கு நிறைவேறியே தீரும். [120](நபியே!) நாம் இறைத்தூதர்களின் வரலாறுகளிலிருந்து ஒவ்வொன்றையும் உமக்கு எடுத்துக்கூறி அதன்மூலம் உமது உள்ளத்தை உறுதிப்படுத்துகிறோம். இவற்றில் உமக்குச் சத்தியம் வந்துள்ளது; (இவற்றில்) நம்பிக்கையாளர்களுக்கு அறிவுரையும் நினைவூட்டலும் உள்ளன. [121]நம்பிக்கைகொள்ளாதவர்களிடம் (நபியே!) நீர் கூறுவீராக! "நீங்கள் உங்கள் வழியில் செயல்படுங்கள்; நாங்களும் (எங்கள் வழியில்) செயல்படுகிறோம். [122](விளைவை) எதிர்பாருங்கள்; நாங்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்"*

*[123]வானங்களிலும் பூமியிலும் மறைந்துள்ள(வை குறித்த அறிவு) அல்லாஹ்வுக்கே உரியன. விவகாரங்கள் அனைத்தும் அவனிடமே திருப்பப்படுகின்றன. எனவே (நபியே!) நீர் அவனை வணங்கி அவனையே சார்ந்திருப்பீராக! உம்முடைய இறைவன் நீங்கள் செய்பவற்றைக் கவனிக்காமலில்லை.*

# 12. ஜோஸஃப் (யூஸுஃப்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]அலிஃப் – லாம் – ரா.*

*இவை தெளிவான வேதத்தின் வசனங்களாகும். [2](அரபிகளாகிய) நீங்கள் புரிந்துகொள்ளும் பொருட்டு அரபி மொழியில் குர்ஆனை அருளியுள்ளோம். [3](நபியே!) நாம் உமக்கு அருளியுள்ள இந்தக் குர்ஆனின் மூலம் மிக அழகிய வரலாற்றை உமக்கு எடுத்துரைக்கிறோம். இதற்கு முன்னர் நீர் இதனைப்பற்றி அறியாதவராக இருந்தீர்.*

*[4]ஜோஸஃப் தம் தந்தையிடம் (ஜேக்கப்பிடம்) "என் தந்தையே! நான் கனவில் பதினொரு நட்சத்திரங்களையும் சூரியனையும் சந்திரனையும் கண்டேன். அவை எனக்குத் தலைபணியவும்*

*கண்டேன்” என்று கூறினார். [5](அதற்கு) அவர், “என் அருமை
மகனே! உனது கனவை நீ உன் சகோதரர்களிடம் கூறிவிடாதே.
அவர்கள் உனக்கு(த் தீங்கிழைக்க)ச் சதி செய்வர். உறுதியாக
சாத்தான் மனிதனுக்கு வெளிப்படையான பகைவனாவான்”
என்று கூறினார். [6](மேலும், நீ கனவில் கண்ட) இவ்வாறே
இறைவன் உன்னைத் தேர்ந்தெடுத்து நிகழ்வுகளின்
உட்பொருளைப் புரிந்துகொள்ளும் முறையை உனக்குக் கற்றுக்
கொடுப்பான். இதற்கு முன்னர் உன்னுடைய முன்னோர்களான
ஆப்ரஹாம், ஈசாக் ஆகியோர்மீது தனது அருட்கொடையை
அவன் நிறைவாக்கியதைப் போல உன்மீதும், ஜேக்கபின்
குடும்பத்தினர்மீதும் நிறைவுபடுத்துவான். உறுதியாக உன்
இறைவன் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்” (என்றும்
ஜேக்கப் கூறினார்.)*

*[7]உறுதியாக ஜோஸஃப் மற்றும் அவரது சகோதரர்கள்
ஆகியோரின் வரலாற்றில் (உண்மையை அறிய) வினவுபவர்களுக்குப்
பெரும் சான்றுகள் உள்ளன. [8](சகோதரர்களாகிய)
அவர்கள் (தமக்குள்), “நாம் (வலிமைமிக்க) ஒரு குழுவாக
இருந்தும் நம் தந்தைக்கு ஜோஸஃபும் அவரது சகோதரரும்
(பெஞ்சமின்) நம்மைவிட மிக அன்பானவர்களாக இருக்கின்றனர்.
உறுதியாக நம் தந்தை வெளிப்படையாகத் தவறு செய்கிறார்.
[9](ஆகவே) ஜோஸஃபைக் கொன்றுவிடுங்கள் அல்லது எங்காவது
(தொலைவில்) அவரை(க் கொண்டுபோய்)ப் போட்டுவிடுங்கள்.
அப்போதுதான் உங்கள் தந்தையின் கவனம் உங்கள் பக்கம்
மட்டுமே திரும்பும். அதன் பின்னர் நீங்கள் நல்லவர்களாகிக்
கொள்ளலாம்” என்று பேசிக் கொண்டனர். [10]அவர்களில்
ஒருவர், “ஜோஸஃபைக் கொன்றுவிடாதீர்கள். நீங்கள் ஏதாவது
செய்வதாக இருந்தால் அவரை ஓர் ஆழ்கிணற்றில் தள்ளிவிடுங்கள்.
அவ்வழியே செல்லும் பயணிகளில் யாரேனும் அவரை எடுத்துக்
கொள்ளட்டும்” என்றார்.*

*[11](பின்னர் அவர்கள் தம் தந்தையிடம் சென்று,) “எங்கள்
தந்தையே! நீங்கள் ஜோஸஃப் தொடர்பாக ஏன் எங்களை*

*நம்புவதில்லை? உண்மையில் நாங்கள் அவரின் நலம்விரும்பிகளே,*
*[12]நாளை எங்களுடன் அவரை அனுப்பி வையுங்கள். அவர்*
*(காட்டில் உள்ள கனிகளை) உண்டு மகிழ்ந்து விளையாடிக்*
*கொண்டிருப்பார்; நாங்கள் அவரைப் பாதுகாத்துக் கொள்வோம்”*
*என்று கூறினர். [13]அவர் “நீங்கள் அவரை அழைத்துச் செல்வது*
*என்னைக் கவலைக்குள்ளாக்குகிறது. அவரைவிட்டு நீங்கள்*
*கவனக்குறைவாக இருக்கும்போது ஓநாய் அவரை (அடித்துத்)*
*தின்றுவிடுமோ என்று நான் அஞ்சுகிறேன்” என்றார். [14]“நாங்கள்*
*(வலிமையுள்ள) ஒரு கூட்டமாக இருக்கும்போது ஓநாய் அவரைத்*
*தின்றுவிடுமானால் உறுதியாக நாங்கள் கையாலாகாதவர்கள்*
*என்றல்லவா ஆகிவிடுவோம்” என்று அவர்கள் பதில் கூறினர்.*

*[15]அவர்கள் ஜோஸஃபை அழைத்துச் சென்றபோது ஒரு*
*ஆழ்கிணற்றில் அவரைத் தள்ளிவிட வேண்டுமென முடிவு*
*செய்தனர். அப்போது நாம் அவருக்கு (ஜோஸஃபுக்கு)*
*“அவர்களின் இச்செயலைக் குறித்து (ஒருநாள்) அவர்களுக்கு*
*நீர் அறிவிப்பீர். (அப்போது) அவர்கள் (நீர் யாரென்று)*
*அறிந்திருக்கமாட்டார்கள்” என அறிவித்தோம். [16]அவர்கள்*
*பொழுது சாய்ந்த நேரத்தில் அழுதுகொண்டே தங்கள் தந்தையிடம்*
*வந்தனர். [17] அவர்கள் “எங்கள் தந்தையே! ஜோஸஃபை எங்கள்*
*பொருள்களுக்கு அருகில் விட்டு நாங்கள் ஓடி (விளையாடிக்*
*கொண்டே மிகு தொலைவு) சென்றுவிட்டோம் அப்போது*
*அவரை ஓநாய் (அடித்துத்) தின்றுவிட்டது. நாங்கள் உண்மை*
*சொன்னபோதிலும் நீங்கள் எங்களை நம்பமாட்டீர்கள்” என்று*
*கூறினர். [18]அவர்கள் அவருடைய சட்டையில் பொய் இரத்தத்தைத்*
*தோய்த்துக் கொண்டு வந்திருந்தனர். (அப்போது ஜேக்கப்)*
*“இல்லை, உங்களது உள்ளங்கள் ஒரு (பாவச்)செயலை உங்களுக்கு*
*அழகானதாகக் காட்டிவிட்டன. இனி (எனக்குத் தகுந்தது) சிறந்த*
*பொறுமையை மேற்கொள்வதுதான். நீங்கள் புனைந்திருக்கும்*
*நிகழ்வில் அல்லாஹ்விடமே நான் உதவி கோருகிறேன்” என்று*
*கூறினார்.*

*[19]பின்னர் (அக்கிணற்றின் பக்கமாக) ஒரு பயணக்கூட்டம்
வந்தது. அவர்கள் தங்களுக்குத் தண்ணீர் கொண்டு வருபவரை
அனுப்பினர். அவர் தமது வாளியைக் கிணற்றில் இறக்கியதும்
(ஜோஸஃபை அங்கே பார்த்து) “நற்செய்தி! இதோ ஒரு
(அழகிய) சிறுவன்” என்று உரக்கக் கூவினார். அவர்கள்
அவரை ஒரு வணிகப் பொருளாக(ஆக்கிக் கொள்ள)க் கருதி
மறைத்து(வைத்து)க் கொண்டனர். அவர்கள் செயலை அல்லாஹ்
நன்கறிந்தவன் ஆவான். [20]அவர்கள் அவரை இழிந்த விலைக்கு –
சில வெள்ளிக் காசுகளுக்கு விற்றுவிட்டனர். அவர்கள் அவரை
மிகக்குறைவாகவே மதிப்பிட்டனர். [21]எகிப்தில் அவரை
வாங்கியவர் தம் மனைவியிடம், “இவரைக் கண்ணியமான
முறையில் கவனித்துக்கொள். இவர் நமக்குப் பயனுள்ளவராக
இருக்கக்கூடும்; அல்லது இவரை நாம் நம் (வளர்ப்பு) மகனாக்கிக்
கொள்ளலாம்” என்று கூறினார். (கனவு உள்ளிட்ட) நிகழ்வுகளின்
உட்பொருளைக் கற்றுக் கொடுப்பதற்காக இவ்வாறு நாம்
ஜோஸஃபை அந்தப் பூமியில் நிலைபெறச் செய்தோம். அல்லாஹ்
தன் செயல்களில் மேலோங்கியவன். ஆயினும் மக்களில்
பெரும்பாலோர் (இதனை) அறிந்துகொள்வதில்லை. [22]அவர் தம்
பருவ வயதை அடைந்ததும் நாம் அவருக்குத் தீர்மானிக்கும்
திறனையும் ஞானத்தையும் வழங்கினோம். நன்மை புரிவோருக்கு
நாம் இவ்வாறே கூலி வழங்குகிறோம்.*

*[23]ஜோஸஃப் வாழ்ந்து வந்த இல்லத்தின் தலைவி அவரைத் தன்
விருப்பத்திற்கு இணங்கச் செய்ய முயன்றாள்; (ஒருநாள்) அவள்
கதவுகளைத் தாழிட்டுவிட்டு (அவரை) ‘வா’ என்றழைத்தாள்.
அதற்கு அவர், “அல்லாஹ் (என்னைப்) பாதுகாப்பானாக!
எனது உரிமையாளர் என்னைக் கண்ணியமான முறையில்
வைத்திருக்கிறார். (இத்தகைய நல்லோருக்குத் துரோகம்
செய்யும்) தீவினையாளர்கள் ஒருபோதும் வெற்றியடைய
மாட்டார்கள்” என்றார். [24](எனினும்) அவள் அவரை அடைய
முனைந்தாள். அவரும் தம் இறைவனின் (எச்சரிக்கைச்) சான்றை*

*உணர்ந்திராவிட்டால் அவளுக்கு இணங்கியிருப்பார். தீமையையும் மானக்கேடானவற்றையும் அவரிடமிருந்து அகற்றி விடவே நாம் இவ்வாறு (எச்சரிக்கை) செய்தோம். உறுதியாக அவர் எம் தேர்ந்தெடுக்கப்பட்ட அடியார்களில் ஒருவர் ஆவார்.*

[25]*இருவரும் கதவை நோக்கி ஓடினர். அவள் அவரது சட்டையைப் பின்புறத்திலிருந்து (பிடித்து) இழுத்தபோது அது கிழிந்து விட்டது. (அப்போது) அவளது கணவர் கதவருகில் (இருப்பதை) இருவரும் கண்டனர். உடனே அவள் (அவரிடம்) "உங்கள் மனைவியுடன் தவறான முறையில் நடந்துகொள்ள விரும்பியவனுக்குச் சிறைத் தண்டனை அல்லது கடும்வேதனை தவிர வேறென்ன இருக்கமுடியும்?" என்று கேட்டாள்.*
[26]*(ஜோஸஃப் அதனை மறுத்து) "இவள்தான் என்னை அடைய முயன்றாள்" என்றார். அவளுடைய குடும்பத்தைச் சார்ந்த ஒருவர் "அவரது சட்டையின் முன்புறம் கிழிந்திருந்தால் இவள் சொல்வது உண்மை; அவர் பொய் கூறியவர் ஆவார்.* [27]*ஆனால் அவரது*
*சட்டையின் பின்புறம் கிழிந்திருந்தால் இவள் பொய் சொல்கிறாள்; அவர் உண்மை கூறுகிறார்" என்று சாட்சியம் கூறினார்.* [28]*அவரது*
*சட்டையின் பின்புறம் கிழிக்கப்பட்டிருப்பதைக் கண்ட அவளது கணவர், "உறுதியாக இது பெண்களாகிய உங்களின் சூழ்ச்சியாகும். உங்களின் சூழ்ச்சி மிகக் கடுமையானதாகும்.* [29]*"ஜோஸஃபே,*
*இதனைப் புறக்கணித்து விட்டுவிடும்" (என்று கூறிவிட்டுத் தம் மனைவியை நோக்கி) "நீ உன் பாவத்திற்காக மன்னிப்புக்கேள். உறுதியாக நீயே தவறிழைத்தவள்" என்று கூறினார்.*

[30]*அந்நகரத்திலுள்ள பெண்கள் பலரும் "அஸீஸின் (அரசு அதிகாரமுடைய பெரிய மனிதர்) மனைவி தன்னிடம் அடிமையாய் உள்ள இளைஞரைத் தன் விருப்பத்திற்கு இணங்க வற்புறுத்துகிறாள்; மோகம் அவளை மயக்கிவிட்டது; அவள் வெளிப்படையான கெடுவழியில் இருப்பதையே நாங்கள் காண்கிறோம்" என்று பேசிக் கொண்டனர்.* [31]*அந்தப் பெண்களின் பழிப்புரைகளை*
*அவள் கேள்விப்பட்டபோது அவர்களை அழைத்துவரச்*

*செய்தாள்; அவர்களுக்காக ஒரு விருந்தையும் ஏற்பாடு செய்தாள்.
அவர்களில் ஒவ்வொருவருக்கும் (கனி நறுக்க) ஒரு கத்தியைக்
கொடுத்தாள். ஜோஸஃபிடம் "இவர்களுக்கு முன்னால் செல்"
என்றாள். அப்பெண்கள் அவரைப் பார்த்தபோது (அழகில்)
மேலானவராகக் கண்டு (மெய்ம்மறந்து கனிகளை நறுக்குவதற்குப்
பதிலாகத்) தங்கள் கை(விரல்)களை வெட்டிக் கொண்டனர்.
"அல்லாஹ் எங்களைக் காப்பானாக! இவர் மனிதரே அல்லர்.
"இவர் கண்ணியத்திற்குரிய ஒரு வானவரே ஆவார்" என்று
அவர்கள் (வியந்து) கூறினர். 32(அஸீஸின் மனைவி அவர்களிடம்)
இவர் தொடர்பாகத்தான் நீங்கள் என்னைப் பழித்துப் பேசினீர்கள்.
என் விருப்பத்திற்கு இணங்குமாறு நான் அவரை அழைத்தேன்;
ஆனால் அவர் உறுதியாகத் தம்மைக் காத்துக் கொண்டார். நான்
சொல்வதை அவர் செய்யாவிட்டால் சிறையிலடைக்கப்படுவார்;
சிறுமை அடைந்தோரில் ஒருவர் ஆகிவிடுவார்" என்று கூறினாள்.
33(இதுபற்றிக் கேட்ட) அவர் (இறைவனிடம்) "என் இறைவனே!
இவர்கள் அழைக்கும் (இத்தீய)செயலைவிடச் சிறைச்சாலையே
எனக்கு விருப்பமானது. இவர்களின் சூழ்ச்சியிலிருந்து நீ
என்னைக் காக்கவில்லையென்றால் நான் இவர்களிடம் சிக்கி
அறிவற்றவனாகி விடுவேன்" என்று கூறினார். 34எனவே
இறைவன் அவரது இறைஞ்சுதலை ஏற்றுக்கொண்டு அவர்களின்
சூழ்ச்சியை அவரிடமிருந்து விலக்கிவிட்டான். உறுதியாக அவன்
செவி சாய்ப்பவனும் முற்றும் அறிந்தவனும் ஆவான்.*

*35(ஜோஸஃப் குற்றமற்றவர் என்பதற்கான) சான்றுகளை
அவர்கள் கண்டபின்னரும், ஒரு குறிப்பிட்ட காலம்வரை (அவர்
தலைமறைவாக இருக்க) அவரைச் சிறையிலடைக்க வேண்டும்
என்றே அவர்களுக்குத் தோன்றியது. 36(அச்சமயம்) அவருடன் இரு
இளைஞர்களும் (தாம் செய்த குற்றங்களுக்காகச்) சிறை புகுந்தனர்.
அவர்களில் ஒருவர் (ஒருநாள் ஜோஸஃபிடம்) "நான் கனவில்
திராட்சைச் சாறு பிழிந்து கொண்டிருப்பதாகக் கண்டேன்"
என்று கூறினார். மற்றொருவர், "நான் தலைமீது ரொட்டியைச்*

*சுமந்து சென்று கொண்டிருக்க, அவற்றைப் பறவைகள் (கொத்தித்) தின்பதாகக் கனவு கண்டேன்” என்று கூறினார். “இவற்றின் விளக்கத்தை நீர் எங்களுக்குக் கூறுவீராக. நாங்கள் உம்மை நன்மை புரிபவர்களில் ஒருவராகக் காண்கிறோம்” என்றனர்*

*[37]ஜோஸஃப், “(இன்று) உங்களுக்கு வழங்கப்படும் உணவு வருவதற்கு முன்பே, இவற்றின் விளக்கத்தை நான் உங்களுக்குக் கூறிவிடுவேன். இது என் இறைவன் எனக்குக் கற்றுத் தந்ததாகும். அல்லாஹ்வின் மீது நம்பிக்கைகொள்ளாமலும் மறுமையை மறுத்தும் வாழ்கின்ற மக்களின் நெறியை நான் விட்டுவிட்டேன்.*
*[38]நான் என் தந்தையரான ஆப்ரஹாம், ஈசாக், ஜேக்கப் ஆகியோருடைய நெறியைப் பின்பற்றுகிறேன். எப்பொருளையும் அல்லாஹ்வுக்கு இணைவைப்பது எங்களுக்குத் தகுந்ததன்று. இ(க்கொள்கையில் வாழ்வ)து எங்கள்மீதும் மனிதர் அனைவர் மீதும் அல்லாஹ் புரிந்துள்ள அருளாகும். ஆயினும் மனிதர்களில் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை. [39]என் சிறைத்*
*தோழர்களே! தம்முள் வேறுபடும் பல தெய்வங்கள் சிறந்தவையா? அல்லது (யாவற்றையும்) அடக்கியாளும் (ஓரிறையாகிய) அல்லாஹ் சிறந்தவனா? [40]அவனையன்றி நீங்கள் வணங்கிக்*
*கொண்டிருப்பவை அனைத்தும் நீங்களும் உங்கள் முன்னோர்களும் சூட்டிய (வெறும் கற்பனைப்) பெயர்கள்தாம். அவற்றுக்கு எந்த ஆதாரத்தையும் அல்லாஹ் இறக்கிவைக்கவில்லை. அதிகாரம் அல்லாஹ்வுக்கே அன்றி (மற்றெவருக்கும்) இல்லை. ‘நீங்கள் அவனைத்தவிர வேறு யாரையும் வணங்கக்கூடாது’ என்று அவன் கட்டளையிட்டுள்ளான். இதுவே நேரான மார்க்கமாகும். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் (இதனை) அறிந்துகொள்வதில்லை. [41]என்*
*சிறைத் தோழர்களே! உங்களில் ஒருவர் தனது உரிமையாளருக்கு மதுவைப் பரிமாறுவார். மற்றவர் தூக்கிலிடப்படுவார். அவரது தலையைப் பறவைகள் கொத்தித் தின்னும். நீங்கள் எது குறித்து*

*என்னிடம் விளக்கம் கேட்டீர்களோ அது (இறைவனால்) முடிவு செய்யப்பட்டு விட்டது" என்று கூறினார்.*

42*அவ்விருவரில் யார் விடுதலையடைவார் என்று அவர் கருதினாரோ அவரிடம், "என்னைப்பற்றி உம் உரிமையாளரிடம் குறிப்பிடும்" என கேட்டுக் கொண்டார். ஆனால் சாத்தான் அவரைத் தம் உரிமையாளரிடம் (ஜோஸஃபைப் பற்றி) கூறவிடாமல் மறக்கடித்து விட்டான். எனவே (ஜோஸஃப்) சிறையில் (மேலும்) சில ஆண்டுகள் தங்கினார்.*

43*(இந்நிலையில் ஒருநாள் எகிப்து) அரசர் "நான் (கனவில்) ஏழு கொழுத்த பசுக்களை ஏழு மெலிந்த பசுக்கள் தின்றுகொண்டிருந்ததையும் ஏழு பசுமையான கதிர்களையும் ஏழு காய்ந்த கதிர்களையும் கண்டேன். என் அவையோரே! நீங்கள் கனவுக்கு விளக்கம் கூறக்கூடியவர்களாக இருந்தால் என் கனவுக்குரிய விளக்கத்தைக் கூறுங்கள்" என்று கேட்டார்.*
44*(அதற்கு) அவர்கள், "இவை குழப்பமான கனவுகளாகும். இவ்வகையான கனவுகளுக்கு நாங்கள் விளக்கம் அறிந்தவர்கள் அல்லர்" என்று கூறினர்.*

45*(ஜோஸஃபுடன் சிறையிலிருந்த) இரு கைதிகளில் விடுதலையடைந்தவருக்கு நீண்ட காலத்திற்குப்பின் (ஜோஸஃபின்) நினைவு வந்தது. (அவர் அவையோரிடம்) "இதன் விளக்கத்தை உங்களுக்கு நான் கூறுகிறேன் என்னை (சிறையிலுள்ள ஜோஸஃபிடம்) அனுப்பி வையுங்கள்" என்றார்.*
46*(சிறைக்கு வந்தவர்) "ஜோஸஃபே! உண்மையாளரே! ஏழு கொழுத்த பசுக்களை ஏழு மெலிந்த பசுக்கள் தின்று கொண்டிருப்பதையும் ஏழு பசுமையான கதிர்களையும் ஏழு காய்ந்த கதிர்களையும் கனவில் கண்டால் அதன் விளக்கம் என்ன என்பதை எங்களுக்குக் கூறுவீராக! (என்னை அனுப்பிய அம்) மக்கள் அறிந்து கொள்வதற்காக நான் அவர்களிடம் திரும்ப வேண்டியிருக்கிறது" என்றார்.*
47*(அதற்கு ஜோஸஃப்,) "நீங்கள் தொடர்ந்து ஏழு ஆண்டுகள்வரை (வழக்கம்போல் நல்லவிதமாக)*

பயிரிடுவீர்கள்; அறுவடை செய்யும்போது, நீங்கள் உண்பதற்கு வேண்டிய சிறிய அளவைத் தவிர எஞ்சியவற்றை அவற்றின் கதிர்களிலேயே (பாதுகாத்து) விட்டுவையுங்கள்.
48அதன் பின்னர்க் கடினமான (வறட்சியுடைய) ஏழு ஆண்டுகள் வரும். அப்போது அக்காலத்திற்காக நீங்கள் முன்பே பாதுகாத்து வைத்தவற்றில் சிறிதளவைத் தவிர அனைத்தையும் அவை (வறட்சிக்காலங்கள்) தின்றுவிடும்.
49அதன் பின்னர் வரக்கூடிய ஓர் ஆண்டில் மக்கள் நல்ல மழையைப் பெறுவர்; பழரசம் பிழி(ந்து அருந்தி மகிழ்)வர்" என்று (கனவுகளின் விளக்கத்தை ஜோஸஃப்) கூறினார்.
50(இவ்விளக்கத்தைக் கேட்டறிந்த அரசர்) "அவரை என்னிடம் அழைத்து வாருங்கள்" என்றார். (அரசரின்) தூதர் (ஜோஸஃபிடம்) வந்தபோது, "நீர் உம் உரிமையாளரிடம் திரும்பிச்சென்று, தம் கை(விரல்)களை அறுத்துக்கொண்ட அந்தப் பெண்கள் (பற்றிய உண்மை) நிலை என்ன? என்று அவரிடம் கேட்பீராக"! என்று கூறி, "உறுதியாக என் இறைவன் அவர்களின் சூழ்ச்சியை முற்றும் அறிந்தவன்" என்றும் கூறி(அனுப்பி)னார்.
51அரசர் (அப்பெண்களை வரவழைத்து) "நீங்கள் ஜோஸஃபைக் கவர முயன்றபோது உங்களுக்கு நேர்ந்ததென்ன?" என்று விசாரித்தார். (அதற்கு) அவர்கள், "அல்லாஹ் எங்களைக் காப்பானாக! நாங்கள் அவரிடம் எந்தத் தீய இயல்பையும் காணவில்லை" என்றனர். (அப்போது) அஸீஸின் மனைவி, "இப்போது உண்மை வெளிப்பட்டு விட்டது. நான்தான் அவரைக் கவர முயன்றேன். உறுதியாக அவர் உண்மையாளரே" என்றாள்.

52(அரசவையில் நிகழ்ந்தவற்றைக் கேட்டறிந்த ஜோஸஃப் "இவ்வாறு விசாரணை செய்யுமாறு நான் வேண்டியது) நான் அவருக்கு(அஸீஸுக்கு) மறைவில் துரோகம் இழைக்கவில்லை என்பதை அவர் அறிந்து கொள்வதற்காகவும் துரோகிகளின் சூழ்ச்சிக்கு அல்லாஹ் உறுதியாக வழிகாட்டமாட்டான் என்(பதை அறிவிப்)பதற்காகவும்தான்" என்று கூறினார்.
53"(மேலும்) "நான் என் மனம் தூய்மையானது என்று கூறிக்கொள்ள மாட்டேன்.

*உறுதியாக இறைவன் அருள்புரிந்தால் அன்றி மனித மனம் தீமையைத்தான் தூண்டும். உறுதியாக என் இறைவன் பெரும் மன்னிப்பாளனாகவும் நிகரற்ற அன்பாளனாகவும் இருக்கிறான்" (என்றும் ஜோஸஃப் கூறினார்)*

[54]*(ஜோஸஃபின் ஞானத்தை அறிந்த) அரசர் அவரை என்னிடம் அழைத்து வாருங்கள். அவரை நான் எனது தனிப்பட்ட சேவைக்காக வைத்துக்கொள்வேன்" என்றார். ஜோஸஃப் அவரிடம் (வந்து) உரையாடினார். (அப்போது அரசர்) "இன்று முதல் நீர் எங்கள் மதிப்பிற்குரியவராகவும் நம்பிக்கைக்குரியவராகவும் ஆகிவிட்டீர்" என்று கூறினார். [55]ஜோஸஃப் "என்னை நாட்டின் கருவூலங்களுக்குப் பொறுப்பாளராக்குங்கள். நான் (அவற்றைப்) பாதுகாக்க நன்கறிந்தவன்" என்றார். [56]இவ்வாறு நாம் ஜோஸஃபை (அந்)நாட்டில் அதிகாரமுடையவர் ஆக்கினோம். அவர் அங்கு எந்த இடத்தில் வேண்டுமானாலும் தங்கலாம் (இவ்வாறே) நாம் விரும்பியோர் மீது எம் அருளைப் பொழிகிறோம். நன்மைசெய்வோரின் கூலியை நாம் வீணாக்குவதில்லை.
[57](எனினும்) நம்பிக்கைகொண்டு இறையச்சத்துடன் வாழ்பவர்களுக்கு மறுமையின் கூலியே மிகச்சிறந்ததாகும்.*

[58]*(பின்னர் வறட்சி வந்தபோது உணவு தானியங்கள் பெறுவதற்காக) ஜோஸஃபின் சகோதரர்கள் (எகிப்துக்கு) வந்து அவர்முன் சென்றனர். அவர் அவர்களை அறிந்துகொண்டார்; ஆனால் அவர்கள் அவரை அறிந்துகொள்ளவில்லை. [59]அவர் அவர்களுக்கான (உணவுப்) பொருள்களை வழங்க ஏற்பாடு செய்துவிட்டு, "(உங்கள் தந்தைக்கு இன்னொரு மனைவியின் மூலம் பிறந்த) உங்கள் சகோதரனையும் என்னிடம் அழைத்து வாருங்கள். நான் (தானியங்களை) முழுமையாக அளந்து தருபவனாகவும் சிறந்தமுறையில் விருந்தோம்புபவனாகவும் இருக்கிறேன் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? [60]அவரை நீங்கள் என்னிடம் அழைத்து வராவிட்டால் என்னிடமிருந்து உங்களுக்கு(த் தானியமும்) கிடைக்காது; நீங்கள் என்னை*

*நெருங்கவும் முடியாது” என்று கூறினார். [61]“நாங்கள் அவர்*
*குறித்துத் தந்தையை இணங்கவைக்க முயல்வோம். உறுதியாக*
*நாங்கள் இதனைச் செய்வோம்” என்று அவர்கள் பதில் கூறினர்.*

*[62]அவர் தம் பணியாளர்களிடம், “அவர்கள் (தானியம்*
*வாங்கப் பண்டமாற்றாகக் கொண்டுவந்த) பொருள்களை*
*அவர்களின் பொதிகளிலேயே வைத்துவிடுங்கள். அவர்கள் தம்*
*குடும்பத்தாரைச் சென்றடைந்ததும் அதனை அறிந்துகொண்டு*
*(அவற்றைத் திருப்பிக் கொடுப்பதற்காக) மீண்டும் வரக்கூடும்”*
*என்று கூறினார். [63]அவர்கள் தம் தந்தையிடம் திரும்பிச்*
*சென்றதும், “தந்தையே! (இனிமேல் எங்கள் சகோதரரை –*
*பெஞ்சமின் – அழைத்துச்சென்றால் அன்றி) எங்களுக்குத் தானியம்*
*வழங்குவது தடுக்கப்பட்டு விடும். எனவே எங்கள் சகோதரரை*
*எங்களுடன் அனுப்பி வையுங்கள்; நாங்கள் தானியங்களை வாங்கி*
*வருகிறோம்; நாங்கள் அவரை உறுதியாகப் பாதுகாப்போம்”*
*என்றனர். [64](அதற்கு) ஜேக்கப், “இதற்கு முன்னர் இவரது சகோதரர்*
*(ஜோஸஃப்) விஷயத்தில் உங்களை நம்பியதைப் போல இவர்*
*விஷயத்திலும் உங்களை நான் நம்ப வேண்டுமா? (முடியாது)*
*அல்லாஹ்வே சிறந்த பாதுகாவலன்; அவன் அருளாளர்களில்*
*எல்லாம் மிகச் சிறந்த அருளாளன்” என்று கூறினார்.*

*[65](பின்னர்) அவர்கள் தம் பொதிகளைத் திறந்து பார்த்தபோது*
*(விலையாகக் கொடுத்த) தங்களின் பொருள்கள் தங்களிடமே*
*திருப்பித் தரப்பட்டுள்ளதைக் கண்டு “எங்கள் தந்தையே,*
*நமக்கு வேறென்ன வேண்டும்? இதோ நமது பொருள்கள்*
*எம்மிடமே திருப்பித் தரப்பட்டுள்ளன. நாங்கள் சென்று நம்*
*குடும்பத்தினருக்குத் தேவையான உணவுப் பொருள்களை வாங்கி*
*வருவோம். எங்கள் சகோதரரையும் பாதுகாத்துக் கொள்வோம்.*
*(அவர் பங்குக்கு) ஓர் ஒட்டகச் சுமையளவு தானியம் கூடுதலாகவும்*
*கொண்டு வருவோம். இது மிகக் குறைவானதுதான்” என்று*
*கூறினர். [66](அதற்கு) ஜேக்கப், “நீங்கள் அனைவரும் (ஏதேனும்)*
*ஆபத்தில்) சிக்கிக் கொண்டால் அன்றி அவரை உறுதியாக*

*என்னிடம் திரும்பக்கொண்டு வருவீர்கள் என்று அல்லாஹ்வின் பெயரால் உறுதிமொழி அளிக்காதவரை நான் அவரை உங்களுடன் அனுப்பமாட்டேன்" என்று கூறினார். அவ்வாறே அவர்கள் அவரிடம் தங்கள் உறுதிமொழியை அளித்தபோது "நாம் பேசிக்கொண்ட அனைத்திற்கும் அல்லாஹ்வே காவலனாக இருக்கிறான்" என்று அவர் கூறினார்.*

[67]*"என் மக்களே! (எகிப்தின் நகருக்குள்) நீங்கள் அனைவரும் ஒரே வாசல் வழியாக நுழையாதீர்கள்; வெவ்வேறு வாசல்களின் வழியாக நுழையுங்கள். எனினும் அல்லாஹ்வின் கட்டளையிலிருந்து சிறிதளவும் நான் உங்களைக் காப்பாற்றிவிட முடியாது. அதிகாரம் அல்லாஹ்வுக்கே உரியது. நான் அவனையே சார்ந்துள்ளேன். நம்பிக்கையாளர்கள் அவனையே சார்ந்திருக்க வேண்டும்" என்றும் அவர் கூறினார்.* [68]*தந்தையின் கட்டளைப்படியே அவர்கள் (வெவ்வேறு வாயில்கள் வழியாகச்) சென்று சேர்ந்தனர். ஜேக்கப்புடைய மனத்திலுள்ள ஒரு விருப்பத்தை நிறைவேற்றியதைத் தவிர அது அல்லாஹ்வின் திட்டத்திற்கு எதிராக அவர்களுக்குச் சிறிதளவும் பயன் தரவில்லை உறுதியாக நாம் கற்றுக் கொடுத்ததால் ஜேக்கப் அறிவுடையவராகவே இருந்தார். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை.*

[69]*அவர்கள் ஜோஸஃபிடம் போய்ச் சேர்ந்தபோது அவர் தம் சகோதரரை(பெஞ்சமினை)த் தனியே அழைத்துத் தம்முடன் வைத்துக் கொண்டார். (அவரிடம்) மறைவுரையாக "நான் உமது சகோதரன்தான். எனவே அவர்கள் செய்து கொண்டிருப்பவற்றைப் பற்றிக் கவலைப்படாதீர்" என்று கூறினார்.* [70]*அவர்களுக்குத் தேவையான (உணவுப்) பொருள்களைத் தயார் செய்தபோது தம் சகோதரரின் பொதியினுள் குடிநீர்க் குவளையை (மறைத்து) வைத்து விட்டார். பிறகு ஓர் அறிவிப்பாளர், "பயணக் கூட்டத்தினரே! நீங்கள் திருடர்கள்" என்று உரக்கக் கூவினார்.*
[71]*அவர்கள் அறிவிப்பாளரை நோக்கித் திரும்பி வந்து "எதை நீங்கள் இழந்து விட்டீர்கள்?" என்று கேட்டனர்.* [72]*(அதற்கு)*

*அவர்கள், "அரசரின் அளவுக் குவளையைக் காணவில்லை"
என்றனர். "அதனைக்கொண்டு வருபவருக்கு ஓர் ஒட்டகச் சுமை(த்
தானியம்) கிடைக்கும். அதற்கு நானே பொறுப்பாவேன்" என்று
அவர்களில் ஒருவர் கூறினார். [73](பயணியர்) "அல்லாஹ்வின்மீது
ஆணையாக! நாங்கள் இந்த நாட்டில் குழப்பம் விளைவிக்க
வரவில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள்! நாங்கள் திருடர்களும்
அல்லர்" என்று கூறினர். [74](எகிப்தியர்கள்) "நீங்கள் பொய்யர்கள்
எனக் கண்டறியப்பட்டால் அதற்குரிய தண்டனை என்ன?"
என்று வினவினர். [75](அதற்கு அவர்கள்) யாருடைய பொதியில்
அது கண்டெடுக்கப்படுகிறதோ அவர் பிடித்து வைத்துக்
கொள்ளப்படுவதுதான் அதற்குரிய தண்டனை. இவ்வாறுதான்
நாங்கள் குற்றமிழைத்தவர்களைத் தண்டிக்கிறோம்" என்று
கூறினர். [76]எனவே அவர் (ஜோஸஃப்) தமது இளைய சகோதரரின்
பொதிக்கு முன்னதாக மற்றவர்களின் பொதிகளைச் சோதிக்கத்
தொடங்கி, இறுதியில் தமது சகோதரனின் பொதியிலிருந்து
அதனை (குடிநீர்க் குவளை) வெளியே எடுத்தார். இவ்வாறு
நாம் ஜோஸஃபுக்குத் திட்டம் தீட்டிக் கொடுத்தோம். அல்லாஹ்
விரும்பினாலன்றி (எகிப்து) அரசரின் சட்டப்படி அவர்
தம் சகோதரனைத் தடுத்து வைத்துக்கொள்ள (வேறு)வழி
இல்லாதிருந்தது. நாம் விரும்பியோரின் (அறிவுத்) தகுதிகளை
உயர்த்தி விடுகிறோம். ஆனால் அறிவாளிகளுக்கெல்லாம் மேலான
அறிவாளியாக (முற்றறிவாளன்) ஒருவன் இருக்கின்றான்.*

*[77]"இவர் திருடியிருந்தால் – இதற்குமுன் இவரது ஒரு
சகோதரரும் திருடியிருக்கிறார்" என்று (பிற சகோதரர்கள்)
கூறினர். ஆனால் ஜோஸஃப் தம் இரகசியத்தை மறைத்துக்
கொண்டார். அவர்களிடம் எதையும் வெளிப்படுத்தவில்லை.
'நீங்கள்தான் தீயவர்கள். நீங்கள் கூறுவதை அல்லாஹ் நன்கறிவான்'
என்று (தம் மனத்திற்குள்ளாகவே) கூறிக்கொண்டார். [78]அவர்கள்
(ஜோஸஃபை நோக்கி) "மேலானவரே! இவருக்கு வயது முதிர்ந்த
தந்தை இருக்கிறார். ஆகவே இவருக்குப் பதிலாக எங்களில்
யாரேனும் ஒருவரைப் பிடித்துக் கொள்ளுங்கள். நாங்கள் உங்களை*

*மிக நல்லவராக அறிகிறோம்” என்றனர். [79](அதற்கு) அவர், “எமது பொருளை எவரிடம் கண்டெடுத்தோமோ அவரைத்தவிர மற்றவரைப் பிடிப்பதிலிருந்து அல்லாஹ் எம்மைக் காப்பானாக! நாங்கள் அவ்வாறு செய்தால் தீவினையாளர்களாகி விடுவோம்” என்றார்.*

*[80]அவரிடமிருந்து தம் சகோதரரை விடுவிப்பதில் நம்பிக்கை இழந்த அவர்கள் தனியாகச் சென்று தங்களுக்குள் கலந்து பேசினர். அவர்களில் மூத்தவர், “உங்களின் தந்தை அல்லாஹ்வின் பெயரால் உங்களிடம் உறுதிமொழி பெற்றுள்ளார் என்பதை நீங்கள் அறியவில்லையா? ஜோஸஃபின் விஷயத்திலும் நீங்கள் வரம்பு மீறினீர்கள். ஆகவே என் தந்தை எனக்கு அனுமதியளிக்கும்வரை அல்லது அல்லாஹ் எனக்கு ஏதேனும் தீர்ப்பளிக்கும்வரை நான் இந்த நாட்டைவிட்டு அகலவே மாட்டேன். தீர்ப்பளிப்பதில் அவன்தான் மிகச் சிறந்தவன்” என்று கூறினார். [81]“நீங்கள் உங்கள் தந்தையிடம் சென்று, “எங்கள் தந்தையே! உங்கள் புதல்வர் (பெஞ்சமின்) திருடிவிட்டார். நாங்கள் அறிந்ததைத்தான் கூறுகிறோம். மறைவாக நடந்ததிலிருந்து (அவரைப்) பாதுகாக்க எங்களால் முடியவில்லை. [82]நாங்கள் தங்கியிருந்த ஊரின் மக்களிடமும் எங்களுடன் வந்த பயணக் கூட்டத்தாரிடமும் கேட்டுப் பாருங்கள். உறுதியாக நாங்கள் உண்மையைத்தான் கூறுகிறோம்’ என்று சொல்லுங்கள்” என்றும் கூறினார்.*

*[83](ஊர் திரும்பிய சகோதரர்கள் கூறியதைக் கேட்ட ஜேக்கப்) “இல்லை, உங்களின் உள்ளங்கள் ஒரு (தீச்)செயலை அழகாக்கிக் காட்டிவிட்டன. ஆகவே (எனக்கு) அழகிய பொறுமையே நன்று. அல்லாஹ் அவர்கள் அனைவரையும் என்னிடம் கொண்டு வரக்கூடும். அவன் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்” என்று கூறினார். [84](பிறகு) அவர்களை விட்டுவிலகி “அந்தோ! ஜோஸஃபே!” என்று அவர் அழத் தொடங்கி விட்டார். கவலையால் அவரின் கண்கள் வெளுத்து விட்டன. அவர் துயரத்தை அடக்கிக் கொண்டிருந்தார்.*

*[85]“(அவர்கள் தந்தையே!) அல்லாஹ்வின் மீது ஆணையாக!
நீங்கள் ஜோஸஃபின் நினைவிலேயே (உருகி) இளைத்துப்
போகும் வரை அல்லது இறந்துவிடும் வரை (அவரின் நினைவை)
விடமாட்டீர்கள் (போலும்)” என்று கூறினர். [86](அதற்கு) அவர்,
“என் மனத்தவிப்பையும் துயரத்தையும் நான் அல்லாஹ்விடமே
முறையிடுகிறேன். நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்விடமிருந்து
நான் அறிகிறேன்” என்று கூறினார். [87]“என் மக்களே! நீங்கள்
சென்று ஜோஸஃபையும் அவரது சகோதரரையும் தேடுங்கள்.
அல்லாஹ்வின் அருளில் நம்பிக்கையிழந்து விடாதீர்கள்.
மறுப்பாளர்களைத் தவிர (வேறு எவரும்) அல்லாஹ்வின் அருளில்
நம்பிக்கையிழந்து விட மாட்டார்கள்” (என்றும் அவர் கூறினார்).*

*[88]அவர்கள் (எகிப்துக்கு வந்து) ஜோஸஃபிடம் சென்று,
“மேலானவரே! எங்களையும் எங்கள் குடும்பத்தாரையும்
(வறட்சியின்) பெருந்துன்பம் பீடித்துள்ளது. நாங்கள் சிறிதளவு
பொருளையே (விலையாகக்) கொண்டு வந்துள்ளோம்.
(இருப்பினும்) எங்களுக்குத் தானியத்தை நிறைவாக
வழங்குவீராக! (மேற்கொண்டு) ஈகையாகவும் கொடுப்பீராக!
உறுதியாக அல்லாஹ் ஈகை புரிவோருக்கு அதற்குரிய கூலி
வழங்குவான்” என்று கூறினர். [89]அப்போது அவர், “நீங்கள்
அறியாமையால் ஜோஸஃபுக்கும் அவரது சகோதரருக்கும் என்ன
செய்தீர்கள் என்று தெரியுமா?” எனக் கேட்டார். [90]அவர்கள்
(திடுக்கிட்டு) “உண்மையில் நீர்தான் ஜோஸஃபா?” என்று
கேட்டனர். “ஆம், நான்தான் ஜோஸஃப்; இவர் என் சகோதரர்.
அல்லாஹ் எங்களுக்கு அருள்புரிந்துள்ளான். இறைவனுக்கு
அஞ்சி பொறுமையை மேற்கொண்டு நற்செயல்புரிவோரின்
கூலியை அல்லாஹ் ஒருபோதும் வீணாக்கமாட்டான்” என்று
அவர் கூறினார்.*

*[91](சகோதரர்கள்) “அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்லாஹ்
எங்களைவிட உம்மை மேன்மையாக்கியுள்ளான். உறுதியாக
நாங்கள் தவறிழைத்தவர்களே” என்று கூறினர். [92](அதற்கு) ஜோஸஃப்,*

*“இன்று உங்கள்மீது எந்தப் பழிச்சுமத்தலும் இல்லை. அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக! அவன் அன்பாளர்களிலெல்லாம் பெரும் அன்பாளன். [93]நீங்கள் எனது இந்தச் சட்டையைக் கொண்டுசென்று என் தந்தையின் முகத்தின் மீது இடுங்கள்; அவர் இழந்த பார்வையை மீண்டும் பெற்றுவிடுவார். பின்னர் நீங்கள் உங்கள் குடும்பத்தார் அனைவரையும் என்னிடம் அழைத்து வாருங்கள்” என்று கூறினார்.*

*[94]பயணக் கூட்டம் (எகிப்திலிருந்து) புறப்பட்ட நேரத்தில் (கன்ஆன் எனும் ஊரிலிருந்த) அவர்களின் தந்தை, “நான் ஜோஸஃபின் வாசனையை உணர்கிறேன். (முதுமையினால்) எனக்கு அறிவு மயங்கிவிட்டதாக நீங்கள் எண்ணிவிடக் கூடாதே” என்று கூறினார். [95]அவ(ருடன் இருந்த குடும்பத்தவ)ர்கள் “அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீங்கள் பழைய தவறான எண்ணத்திலேயே இருக்கிறீர்கள்” என்றனர். [96]அப்போது நற்செய்தி கூறுபவர் வந்து, ஜோஸஃபுடைய சட்டையை ஜேக்கபுடைய முகத்தில் இட்டார். உடனே அவர் (இழந்த) பார்வையைத் திரும்பப் பெற்றார். அப்போது அவர், “நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்விடமிருந்து நான் அறிவேன் என்று உங்களிடம் (முன்னர்க்) கூறவில்லையா?” என்று கேட்டார். [97](எகிப்திலிருந்து திரும்பிய அவருடைய மற்ற புதல்வர்கள்) “எங்கள் தந்தையே, எங்கள் பாவங்களுக்காக மன்னிப்புக் கோரி (இறைவனிடம்) இறைஞ்சுங்கள். உறுதியாக நாங்கள் தவறிழைப்பவர்களாக இருந்தோம்” என்று கூறினர். [98](அதற்கு) அவர், “நான் உங்களுக்காக என் இறைவனிடம் மன்னிப்புக் கோருவேன். உறுதியாக அவன் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்” என்று கூறினார்.*

*[99]அவர்கள் (அனைவரும்) ஜோஸஃபிடம் வந்தபோது அவர் தம் பெற்றோரைத் தம்மிடம் அழைத்துக் கொண்டார். தம் குடும்பத்தாரை நோக்கி அல்லாஹ் விரும்பினால் எகிப்தில் நீங்கள் அச்சமின்றி அமைதியாக வாழ்வீர்கள்” என்று கூறினார். [100]அவர் தம் பெற்றோரை ஒரு சிறப்பணையின் மீது அமரவைத்தார்.*

*அனைவரும் அவருக்குத் தலைபணிந்தனர். “என் தந்தையே! இதுதான் நான் முன்னர்க் கண்ட கனவின் விளக்கம். என் இறைவன் அதனை உண்மையாக்கி விட்டான். சிறையிலிருந்து என்னை விடுவித்தான்; எனக்கும் என் சகோதரர்களுக்குமிடையே சாத்தான் ஏற்படுத்திய குழப்பத்தின் பின்னரும் அவன் உங்கள் அனைவரையும் பாலைவனத்திலிருந்து இங்குக் கொண்டுவந்து சேர்த்துள்ளான்; இவ்வாறு எனக்குப் பேருதவி புரிந்துள்ளான். என் இறைவன் தான் விரும்பியவற்றையெல்லாம் மிகச்சிறப்பாகத் திட்டமிட்டுச் செய்பவன். அவன் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்” (என்று கூறினார்).*

101*(மேலும் இறைவனிடம்) “என் இறைவா! நீ எனக்கு அதிகாரத்தை வழங்கினாய்; கனவுகளின் விளக்கத்தையும் கற்றுக் கொடுத்தாய். வானங்களையும் பூமியையும் படைத்தவனே! நீயே எனக்கு இவ்வுலகிலும் மறுவுலகிலும் பாதுகாவலன். உனக்கு முற்றிலும் கீழ்ப்படிந்த நிலையிலேயே என்னை இறக்கச் செய்வாயாக! நல்லோர்களுடன் என்னைச் சேர்த்தருள்வாயாக!” என்று இறைஞ்சினார்.*

102*(நபியே!) இவை மறைவான செய்திகளாகும். இவற்றை நாமே உமக்கு அறிவிக்கிறோம். (ஜோஸஃபின் சகோதரர்களாகிய) அவர்கள் சூழ்ச்சி செய்து ஒருமனதாக முடிவு செய்தபோது நீர் அவர்களுடன் இருக்கவில்லையே!*
103*நீர் எவ்வளவுதான் விரும்பினாலும் மக்களில் பெரும்பாலோர் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள்.*
104*நீர் இதற்காக அவர்களிடம் எந்தக் கூலியையும் கேட்பதில்லை. இது (குர்ஆன்) உலக மக்கள் அனைவருக்கும் ஓர் அறிவுரையே அன்றி வேறில்லை.*

105*வானங்களிலும் பூமியிலும் எத்தனையோ சான்றுகள் இருக்கின்றன. ஆனால் மக்கள் (அன்றாடம்) அவற்றின்முன் செல்கின்றனர். (எனினும்) அவற்றைப் புறக்கணித்தே விடுகின்றனர்.*
106*அவர்களில் பெரும்பாலோர் அல்லாஹ்வை ஏற்றுக்*

*கொள்கின்றனர்; ஆயினும் அவர்கள் இணைவைக்கின்றனர்.*
*107(அனைத்தையும்) சூழ்ந்து கொள்ளும் அல்லாஹ்வின் வேதனை*
*அவர்களை வந்தடையாதென்றோ அவர்கள் அறியாதிருக்கும்*
*நிலையில் திடீரென அவர்களிடம் (முடிவுக்) காலம் வந்து*
*விடாதென்றோ அவர்கள் நிம்மதியாக இருக்கின்றனரா?*

*108(நபியே!) "இதுதான் என் வழி; நான் (உங்களைத்) தெளிவான*
*அறிவுடன் அல்லாஹ்வின்பால் அழைக்கிறேன்; நானும் என்னைப்*
*பின்பற்றுவோரும் (தெளிவான அறிவுடன் இருக்கிறோம்.)*
*அல்லாஹ் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்; ஆகவே*
*அவனுக்கு இணைவைப்போரில் ஒருவனாக நான் இல்லை"*
*என்று (அவர்களிடம்) கூறுவீராக!.*

*109(நபியே!) உமக்கு முன்னர் நாம் அனுப்பிய தூதர் அனைவரும்*
*மனித இனத்தவரே! அவர்கள் வாயிலாக நாம் இறைச்செய்தி*
*அனுப்பினோம்; அந்தந்த நகர மக்களிடையே இருந்து தெரிவு*
*செய்யப்பட்ட ஆண்களே அவர்கள். (உம்மை மறுக்கும்) இவர்கள்*
*பூமியில் பயணம் செய்து இவர்களுக்கு முன்பு இருந்தவர்களின்*
*முடிவு என்னவாயிற்று என்பதைக் கவனிக்கவில்லையா?*
*(மக்களே!) இறையச்சமுடையோருக்கு மறுமையின் (சொர்க்க)*
*வீடே சிறந்தது. நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா? 110(இனி*
*மக்கள் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள் எனத்) தூதர்கள்*
*நம்பிக்கை இழந்து (இறைவேதனை குறித்த எச்சரிக்கை*
*தொடர்பாகத்) தாம் (மக்களால்) பொய்மைப்படுத்தப்பட்டு*
*விட்டோமே என எண்ணும் நிலைக்கு வந்தபோது எமது உதவி*
*அவர்களுக்கு வந்தது. நாம் விரும்பியோர் காப்பாற்றப்பட்டனர்.*
*குற்றம் புரியும் மக்களிடமிருந்து எம் வேதனை அகற்றப்படாது.*

*111(இறைத்தூதர்களான) அவர்களின் வரலாறுகளில்*
*புரிந்துகொள்ளும் மக்களுக்குப் பெரும் படிப்பினை இருக்கிறது.*
*இக்குர்ஆன் புனைந்துரைக்கப்பட்ட கதையன்று. மாறாக இது*
*தனக்கு முன்புள்ள(வேதத்)தை உண்மைப்படுத்தக் கூடியதாகவும்*

ஒவ்வொரு பொருளின் விரிவுரையாகவும் நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு வழிகாட்டியாகவும் அருளாகவும் இருக்கிறது.

# 13. இடி (அர்ரஃது)

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...

[1]அலீஃப் – லாம் – மீம் – ரா.

இவை வேதத்தின் வசனங்களாகும். (நபியே!) உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பெறும் இது சத்தியமானதாகும். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் (இதன்மீது) நம்பிக்கை கொள்வதில்லை.
[2](மக்களே!) தூண்களின்றி அல்லாஹ்வே வானங்களை உயர்த்தினான். அதனை நீங்கள் காண்கிறீர்கள். பின்னர் அவன் இறையிருக்கையின் மீது நிலைகொண்டான். அவன் சூரியனையும் சந்திரனையும் ஒரு நியதிக்குட்படுத்தியுள்ளான். ஒவ்வொன்றும் ஒரு வரையறுக்கப்பட்ட நேரத்திட்டப்படி இயங்கிக் கொண்டிருக்கின்றன. அவன்தான் அனைத்தையும் நிர்வகிக்கின்றான். இறைவனை நீங்கள் சந்திக்கவிருப்பதை உறுதியாக நம்பும்பொருட்டு அவன் சான்றுகளை (இவ்வாறு) தெளிவுபடுத்துகிறான்.

[3]அவன்தான் பூமியை விரித்து அதில் மலைகளையும் ஆறுகளையும் அமைத்தான். ஒவ்வொரு கனி(மர)வகையிலும் இணைகளை உருவாக்கினான். அவன்தான் இரவால் பகலை மூடுகிறான். சிந்திக்கும் மக்களுக்கு உறுதியாக இவற்றில் பல சான்றுகள் உள்ளன.

[4]பூமியில் அருகருகே பல்வேறுபட்ட நிலப்பகுதிகள் உள்ளன. திராட்சைத் தோட்டங்களும் தானிய விளைநிலங்களும் ஒற்றையாகவும் இரட்டையாகவும் இருக்கின்ற பேரீச்சைகளும் உள்ளன. அனைத்திற்கும் ஒரே தண்ணீர்தான் பாய்ச்சப்படுகிறது. ஆனாலும் நாம் அவற்றில் சிலவற்றை ஏனையவற்றைவிடச் சுவையில் சிறப்பித்துள்ளோம். சிந்திக்கும் மக்களுக்கு உறுதியாக இவற்றிலும் பல்வேறு சான்றுகள் உள்ளன.

[5](நபியே!) நீர் (எதைப்பற்றியேனும்) வியப்புற்றால் அதைவிட வியப்புக்குரியது "நாங்கள் மண்ணோடு மண்ணாகி விட்டாலும் மீண்டும் புதிதாகப் படைக்கப்படுவோமா?" என்று அவர்கள் கேட்பதுதான். அவர்கள் தம் இறைவனை மறுப்பவர்கள். அவர்களின் கழுத்துகளில் விலங்குகள் மாட்டப்பட்டுள்ளன. அவர்கள்தாம் நரகவாசிகள். அதில் அவர்கள் என்றென்றும் கிடப்பார்கள்.

[6](நபியே!) அவர்கள் நன்மைக்கு முன்னதாகத் தீமையைக் கொண்டுவரும்படி உம்மை அவசரப்படுத்துகிறார்கள். ஆயினும் அவர்களின் காலத்திற்கு முன் நடந்து முடிந்த பல முன்னுதாரணங்கள் இருக்கின்றன. மனிதர்கள் தவறிழைக்கும்போது இறைவன் அவர்களை மன்னிக்கக் கூடியவன்தான். ஆயினும் அவன் தண்டிப்பதிலும் கடுமையானவன்.

[7]"அவருக்கு அவரின் இறைவனிடமிருந்து ஏதேனும் ஒரு சான்று அருளப்பட்டிருக்க வேண்டாமா?" என்று மறுப்பாளர்கள் கேட்கிறார்கள். நீர் எச்சரிக்கை செய்பவர்தாம். ஒவ்வொரு சமூகத்திற்கும் ஒரு வழிகாட்டி இருக்கிறார்.

[8]ஒவ்வொரு பெண்ணும் (கருவறையில்) சுமந்திருப்பதையும் கருவறைகள் சுருங்கி விரிவதையும் அல்லாஹ் நன்கறிகிறான். ஒவ்வொரு பொருளுக்கும் வரையறுக்கப்பட்ட காலஅளவு
உண்டு. [9]அவன் மறைவானதையும் வெளிப்படையானதையும்
அறிபவன்; மிகப்பெரியவன்; மிகவும் உயர்ந்தவன். [10](மக்களே!)
உங்களில் மறைவுரை பேசுபவரும் உரக்கப்பேசுபவரும் இரவில் மறைந்திருப்பவரும் பகலில் நடந்து திரிபவரும் அவனுக்குச் சமமானவர்களே.

[11]ஒவ்வொரு மனிதருக்கு முன்னும் பின்னும் பாதுகாவலர்கள் (வானவர்கள்) இருக்கின்றனர். அவர்கள் இறைக்கட்டளைப்படி அவரைப் பாதுகாக்கின்றனர். உறுதியாக எந்தச் சமூகமும் தம் உள்ளங்களில் உள்ளவற்றை மாற்றாதவரை அல்லாஹ்வும்

*அதன் நிலையை மாற்றுவதில்லை. ஆனால் அல்லாஹ் ஒரு சமூகத்தினர்க்கு ஏதேனும் துன்பத்தை நாடிவிட்டால் அதனை யாராலும் தடுக்க முடியாது. அவனைத்தவிர அவர்களுக்கு உதவியாளர்கள் யாருமில்லை.*

[12]*அவன்தான் அச்சத்தையும் எதிர்பார்ப்பையும் ஏற்படுத்தக்கூடிய மின்னலை உங்களுக்குக் காட்டுகிறான். அவன்தான் (நீர் நிறைந்த) கனமான மேகத்தையும் உருவாக்குகிறான்.*
[13]*இடி, அவனைத் துதித்துப் புகழ்கிறது. வானவர்களும் அவன் மீதுள்ள பேரச்சத்தால் (அவனைப் புகழ்கின்றனர்.) அவன்தான் இடிகளை அனுப்பித் தான் (தண்டிக்க) விரும்பியோரை அவற்றால் தாக்குகிறான். அவர்களோ இறைவனைப்பற்றி விவாதித்துக் கொண்டிருக்கின்றனர். அவனோ ஆற்றல் மிக்கவன்.*

[14]*உண்மையில் இறைஞ்சி வேண்டுதல் (என்பது) அவனுக்கே உரியது. அவனைத்தவிர மக்கள் இறைஞ்சி வேண்டும் மற்றவையெல்லாம் அவர்களுக்கு எந்தவொரு மறுமொழியும் அளிக்கமாட்டா. அவர்கள் தண்ணீர் தன் வாய்க்குள் செல்லவேண்டும் என்பதற்காக அதனை நோக்கித் தன் இரு கைகளையும் விரித்து வைத்திருப்பவனைப் போன்றவர்கள் ஆவர். அது அவனது வாயினுள் (தானாகச்) சென்றுவிடாது. மறுப்பாளர்களின் இறைஞ்சுதல் யாவும் வீணானவையே.*

[15]*வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் விரும்பியோ விரும்பாமலோ இறைவனுக்குத் தலைவணங்குகின்றன. காலையிலும் மாலையிலும் அவற்றின் நிழல்களும் (தலைவணங்குகின்றன.)*
[16]*(நபியே!) "வானங்கள், பூமி ஆகியவற்றின் இறைவன் யார்?" என்று அவர்களிடம் கேட்பீராக! (நீரே அவர்களை நோக்கி) "அல்லாஹ்தான்" என்றும் கூறுவீராக! "அவ்வாறிருக்க அவனைவிடுத்துத் தமக்கே எந்த நன்மையோ தீமையோ செய்ய இயலாதவற்றையா உங்கள் பாதுகாவலர்களாக ஆக்கிக் கொண்டீர்கள்?" என்று கேட்பீராக. "பார்வையற்றவரும்*

பார்வையுள்ளவரும் சமமாவார்களா? இருளும் ஒளியும் சமமாகிவிட முடியுமா?" என்று கேட்பீராக! அல்லது அவர்களின் இணைத்தெய்வங்கள் அல்லாஹ் படைத்துள்ளதைப் போன்று ஏதேனும் படைத்திருந்து அதன் காரணமாகப் படைப்புப்பற்றி அவர்கள் குழப்பத்திற்குள்ளாகி விட்டனரா? "அல்லாஹ்தான் அனைத்தையும் படைத்தவன்; அவன் தனித்தவன்; அடக்கியாள்பவன்." என்று நீரே கூறுவீராக!

17அவன்தான் வானத்திலிருந்து மழையைப் பொழியச் செய்கிறான். ஆறுகள் அதனதன் அளவுக்கேற்ப நிரம்பி வழிகின்றன. வெள்ளம்வந்து மேலெழும் நுரையைச் சுமந்து செல்கிறது. நகைகள் அல்லது வேறு கருவிகளைச் செய்வதற்காக மக்கள் நெருப்பில் (உலோகங்களை) உருக்கும்போது இதே போன்றுதான் நுரை மேலெழுகிறது. அல்லாஹ் உண்மைக்கும் பொய்மைக்கும் இதனை உதாரணமாகக் கூறுகிறான். (பயனற்ற) நுரையோ காய்ந்து காணாமல் போய் விடுகிறது. மக்களுக்குப் பயனளிப்பது மட்டுமே பூமியில் தங்கி விடுகிறது. இவ்வாறே அல்லாஹ் உவமைகள் கூறுகிறான்.

18தம் இறைவனின் அழைப்பை ஏற்றுக்கொண்டோருக்கு நன்மைகள் உண்டு. அவனது அழைப்பை ஏற்றுக்கொள்ளாதோர் பூமியிலுள்ள அனைத்தையும் அது போன்ற இன்னொரு மடங்கையும் பெற்றிருந்தாலும் (இறுதித் தீர்ப்புநாளின் தண்டனையிலிருந்து தப்பிக்க) அவற்றை ஈடாகக் கொடுத்துவிடவே விரும்புவர். அவர்களுக்கு விசாரணை மிகக்கடுமையானதாக இருக்கும். அவர்களின் உறைவிடம் நரகமாகும். அது மிகவும் கேடான உறைவிடமாகும்.

19(நபியே!) "இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பட்டது சத்தியமானது" என்பதை அறிந்துள்ளவர் பார்வையற்றவரைப் போலாவாரா? அறிவுடையோர்தாம் அறிவுரையை ஏற்றுக்கொள்வர்.

[20]அவர்கள் அல்லாஹ்வுடன் செய்துகொண்ட வாக்குறுதியை நிறைவேற்றுவர். அவனது உடன்படிக்கையை முறித்துவிடமாட்டார்கள். [21]இணைத்துக் கொள்ளும்படி அல்லாஹ் கட்டளையிட்டவற்றை (உறவுகளை) இணைத்துக் கொள்வார்கள்; தங்கள் இறைவனுக்கு அஞ்சுவர்; கடுமையான விசாரணையைப் பற்றியும் அஞ்சிக் கொண்டிருப்பர். [22]இன்னும் அவர்கள் தங்கள் இறைவனின் உவப்பை விரும்பிப் பொறுமையை மேற்கொள்வர்; தொழுகையைக் கடைப்பிடித்து நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் நல்வழியில் செலவு செய்வர். நன்மையின் மூலம் தீமையைத் தடுப்பர். இ(த்தகைய)வர்களுக்குத்தான் மறுமையின் வீடு உண்டு. [23]நிலையான சொர்க்கங்களில் அவர்களும் அவர்களின் மூதாதையர்கள், மனைவியர், குழந்தைகள் ஆகியோரில் நல்லவர்களும் நுழைவர். வானவர்கள் ஒவ்வொரு வாசல் வழியாகவும் அவர்களிடம் வருவர். [24]“நீங்கள் பொறுமையை மேற்கொண்டதால் உங்கள்மீது சாந்தி நிலவட்டும். மறுமையின் வீடு உங்களுக்கு எவ்வளவு சிறப்பானது!” (என்று கூறுவர்).

[25](முன்னர்) அல்லாஹ்விடம் செய்துகொண்ட உடன்படிக்கையை உறுதிப்படுத்தியபின் முறித்துவிடுபவர்களும், அல்லாஹ் இணைத்துக் கொள்ளும்படி கட்டளையிட்டவற்றை (உறவு முறைகளைத்) துண்டித்து விடுபவர்களும் உலகில் குழப்பம் விளைவிப்பவர்களும் (இறைவனின்) சாபத்திற்குத்தான் தகுதியானவர்கள். அவர்களுக்கு மறுமையில் கேடான உறைவிடம்தான் உண்டு. [26]தான் விரும்பியோருக்கு அல்லாஹ் தாராளமாக வாழ்வாதாரத்தை வழங்குகிறான். தான் விரும்பியோருக்குச் சுருக்கியும் விடுகிறான். அவர்கள் இவ்வுலக வாழ்வில் மகிழ்ச்சியடைகிறார்கள். மறுமைக்கு முன்னால் இவ்வுலக வாழ்வு அற்ப இன்பமேயாகும்.

[27]“இவருடைய இறைவனிடமிருந்து ஒரு சான்று இவருக்கு அருளப்பட்டிருக்க வேண்டாமா?’ என்று மறுப்பாளர்கள் கேட்கின்றனர். (நபியே!) நீர் கூறுவீராக: “தான் விரும்பியோரை

*அல்லாஹ் வழிதவறச் விட்டுவிடுகிறான். (திருந்தித்) தன்னிடம் திரும்புவோருக்கு அவன் நேர்வழியைக் காட்டுகிறான்”*
*[28]அவர்கள்தாம் நம்பிக்கை கொண்டவர்கள். அவர்களின் உள்ளங்கள் அல்லாஹ்வின் நினைவால் அமைதி பெறுகின்றன. அறிந்துகொள்ளுங்கள்! அல்லாஹ்வின் நினைவால்தான் உள்ளங்கள் அமைதி பெறுகின்றன.*
*[29]நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிபவர்களுக்கு நற்செய்தியும் அழகிய உறைவிடமும் உண்டு.*

*[30](நபியே! இதற்கு முன்னர்த் தூதர்களை அனுப்பிய) இவ்வாறே நாம் உம்மை ஒரு சமூகத்தினரிடம் தூதராக அனுப்பியுள்ளோம். நாம் உமக்கு அறிவிப்பதை நீர் இவர்களுக்கு எடுத்துரைப்பதற்காக(வே உம்மை அனுப்பினோம்.) இவர்களுக்கு முன்னரும் பல சமூகங்கள் கடந்துவிட்டன. (ஆனால்) இவர்கள் அளவற்ற அருளாளனை மறுத்துக் கொண்டிருக்கின்றனர். நீர் கூறுவீராக: “அவன்தான் என் இறைவன். அவனைத்தவிர வணக்கத்திற்குரிய வேறு இறைவன் இல்லை. அவனையே நான் சார்ந்துள்ளேன். அவனிடமே நான் மீள்வேன்.”*

*[31](இதைப் போன்ற)ஒரு குர்ஆனின்மூலம் மலைகள் நகர்த்திச் செல்லப்பட்டாலும் பூமி துண்டு துண்டாக்கப்பட்டாலும் இறந்தவர்களைப்பேசிடச்செய்தாலும்(இவர்கள்நம்பிக்கைகொள்ள மாட்டார்கள்). ஆயினும் அனைத்துச்செயல்களும் அல்லாஹ்வுக்கே உரியவை. அல்லாஹ் விரும்பியிருந்தால் மனித இனம் முழுமைக்கும் நல்வழிகாட்டியிருப்பான் என்பதை நம்பிக்கையாளர் அறியமாட்டார்களா? மறுப்பாளருக்கு அவர்களின் செயல்களால் ஏதேனும் ஒரு திடுக்கீடு வந்து கொண்டே இருக்கும்; அல்லது அவர்களின் வீடுகளுக்கருகில் எங்காவது (அத்திடுக்கீடு) இறங்கிக் கொண்டே இருக்கும். அல்லாஹ்வின் வாக்குறுதி வரும்வரை இவ்வாறு நிகழ்ந்து கொண்டேயிருக்கும். உறுதியாக அல்லாஹ் தன் வாக்குறுதியை மீறமாட்டான்.*
*[32](நபியே!) உமக்கு முன்னரும் தூதர்கள் எள்ளப்பட்டனர். ஆயினும் நான் மறுப்பாளர்களுக்குக் காலநீட்டிப்பு அளித்து இறுதியில் அவர்களைப் பிடித்துக்*

கொண்டோன். எனது தண்டனை எவ்வாறு இருந்தது (என்பதை
எண்ணிப் பார்ப்பீராக!)

33ஒவ்வோர் ஆன்மாவையும் அது செய்கின்ற அனைத்துச்
செயல்களையும் கண்காணிப்பவனுக்கு (எந்த ஆற்றலும் இல்லாத
பொய்த் தெய்வங்கள்) சமமாகுமா? ஆனாலும் அவர்கள்
அல்லாஹ்வுக்கு இணைத்தெய்வங்களை ஏற்படுத்திக் கொண்டனர்.
(நபியே!) நீர் அவர்களிடம் “நீங்கள் அவற்றின் பெயர்களைக்
கூறுங்கள்; அல்லது பூமியில் அல்லாஹ் அறியாதவற்றையா நீங்கள்
அவனுக்கு அறிவிக்கிறீர்களா? அல்லது (நீங்கள் சொல்பவை)
வெற்று வார்த்தைகள்தாமா?” என்று கேட்பீராக! உண்மையில்
(ஓரிறை)மறுப்பாளர்களுக்கு அவர்களது சூழ்ச்சி அழகானதாகக்
காட்டப்பட்டுள்ளது. நேர்வழியிலிருந்து அவர்கள் தடுக்கப்பட்டு
விட்டனர். அல்லாஹ் யாரை வழிதவற விட்டுவிடுகிறானோ
அவருக்கு வழிகாட்டுபவர் யாருமில்லை. 34இவ்வுலக வாழ்வில்
அவர்களுக்கு வேதனை உண்டு. மறுமையின் வேதனையோ
மிகக் கடுமையானதாகும். அவர்களை அல்லாஹ்விடமிருந்து
காப்பாற்றுபவர் யாருமில்லை.

35இறையச்சமுடையோருக்கு வாக்களிக்கப்பட்ட சொர்க்கத்தின்
தன்மை – அதில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும்; அதன் கனிகளும்
நிழலும் நிலையானவை. இதுதான் இறையச்சமுடையோரின்
முடிவாகும். மறுப்பாளர்களின் முடிவோ நரகமேயாகும்.

36(நபியே! முன்னர்) நாம் யாருக்கு வேதத்தை வழங்கினோமோ
அவர்கள் உமக்கு அருளப்பட்ட இ(வ்வேதத்)தைக் குறித்து
மகிழ்ச்சியடைகின்றனர். அக்கூட்டத்தாரில் சிலர் இ(வ்வேதத்)தில்
சிலவற்றை மறுக்கின்றனர். நீர் அவர்களிடம் “நான்
அல்லாஹ்வை மட்டுமே வணங்க வேண்டும் என்றும் அவனுக்கு
இணைவைக்கக்கூடாது என்றும் கட்டளையிடப்பட்டுள்ளேன்.
அவனிடமே நான் (மக்களை) அழைக்கிறேன். அவனிடமே நான்
திரும்ப வேண்டும்” என்று கூறுவீராக! 37இவ்வாறே நாம் இதனை

*ஒரு கட்டளையாக அரபி மொழியில் அருளினோம். (நபியே!) உம்மிடம் அறிவு வந்துவிட்ட பின்னரும் அவர்களின் (மன) விருப்பங்களை நீர் பின்பற்றினால் அல்லாஹ்வுக்கு எதிராக உமக்கு உதவி புரிபவரோ காப்பாற்றுபவரோ இருக்கமாட்டார்கள்.*

[38]*(நபியே!) உமக்கு முன்னால் பல தூதர்களை அனுப்பியுள்ளோம். அவர்களுக்கு மனைவி மக்களையும் வழங்கியிருந்தோம். அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்தத் தூதரும் எந்தவொரு சான்றையும் கொண்டுவர முடியாது. ஒவ்வொரு காலத்திற்கும் (இறைவனால் அருளப்பட்ட) ஒரு வேதம்*
*இருக்கிறது.* [39]*(அதில்) தான் விரும்பியதை அல்லாஹ் அழித்து*
*விடுகிறான்; தான் விரும்பியதை நிலைத்திருக்கச் செய்கிறான். அவனிடம்தான் மூலப்பதிவேடு உள்ளது.*

[40]*(நபியே!) அவர்களுக்கு நாம் வாக்களித்த (தண்டனைகளில்) சிலவற்றை உமக்குக் காட்டினாலும் அல்லது (அதற்கு முன்னரே) உமது உயிரைக் கைப்பற்றிவிட்டாலும் எடுத்துரைப்பது மட்டுமே உமது கடமையாகும். விசாரணை செய்வது எமது பொறுப்பாகும்.*
[41]*நாம் பூமியை அதன் ஓரங்களிலிருந்து குறைத்துக் கொண்டே வருவதை அவர்கள் பார்க்கவில்லையா? அல்லாஹ்வே தீர்ப்பளிக்கிறான்; அவனது தீர்ப்பை நீக்குபவர் யாருமில்லை.*
*அவன் விசாரணை செய்வதில் விரைவானவன்.* [42]*இவர்களுக்கு*
*முன்பிருந்தவர்களும் திட்டங்கள் தீட்டினர். ஆனால் திட்டங்கள் அனைத்தும் அல்லாஹ்வின் கட்டுப்பாட்டில்தான் உள்ளன. ஒவ்வொருவரும் என்னென்ன செய்து கொண்டிருக்கின்றனர் என்பதை அவன் அறிவான். மறுமையின் வீடு யாருக்கு உரியது என்பதை மறுப்பாளர்கள் விரைவில் அறிந்துகொள்வார்கள்.*

[43]*(நபியே) "நீர் இறைவனால் அனுப்பப்பட்டவர் அல்லர்" என்று மறுப்பாளர்கள் கூறுகின்றனர். "எனக்கும் உங்களுக்குமிடையே சாட்சியாக இருக்க அல்லாஹ்வும் வேத அறிவுடையவர்களும் போதுமானவர்கள்" என்று நீர் கூறுவீராக!*

# 14. ஆப்ரஹாம் (இப்ராஹீம்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

*1அலிஃப் – லாம் – ரா.*

*(நபியே!) இது நாம் உமக்கு அருளியுள்ள வேதமாகும். நீர்
மக்களை இறைவனின் கட்டளைப்படி இருளிலிருந்து வெளியேற்றி
ஒளியின்பால் கொண்டு வருவதற்காக! புகழுக்குரியவனும்
வல்லமை மிக்கவனுமாகிய அல்லாஹ்வுடைய பாதையின்
பக்கம் அவர்களைக் கொண்டு வருவதற்காக! (இதனை உமக்கு
அருளினோம்) 2வானங்களிலும் பூமியிலுமுள்ளவை யாவும்
அவனுக்கே உரியன. மறுப்பாளர்களுக்குக் கடுமையான
வேதனையால் கேடுதான் உண்டாகும். 3அவர்கள் மறுமையைவிட
இவ்வுலக வாழ்வை விரும்புகின்றனர். மக்களை இறைவழியிலிருந்து
தடுத்து அதனைக் கோணலானதாகச் சித்திரிக்கின்றனர். இவர்கள்
வழிகெட்டு மிகுதொலைவு சென்று விட்டனர்.*

*4ஒவ்வொரு தூதரும் தம் சமூகத்தாருக்குத் தூதுச் செய்தியைத்
தெளிவாக எடுத்துரைக்க வேண்டும் என்பதற்காக அவர்களுடைய
மொழி பேசுபவராகவே நாம் அவரை அனுப்பிவைத்தோம்.
ஆயினும் தான் விரும்பியோரை அல்லாஹ் வழிதவற
விட்டுவிடுகிறான்; தான் விரும்பியோருக்கு நேர்வழி காட்டுகிறான்.
அவன் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.*

*5நாம் மோசேயை எமது சான்றுகளுடன் அனுப்பினோம்.
“உம் சமூகத்தை இருளிலிருந்து வெளியேற்றி ஒளியின்பால்
கொண்டுவருவீராக! அவர்களுக்கு அல்லாஹ்வின்
(தண்டனை ஏற்பட்ட) நாட்களை நினைவூட்டுவீராக!”
(என்று கட்டளையிட்டோம்). உறுதியாகப் பொறுமையும்
நன்றியுணர்வுமுள்ள ஒவ்வொருவருக்கும் இதில் பெரும் சான்றுகள்
உள்ளன.*

[6]மோசே தம் சமூகத்தினரிடம், “அல்லாஹ் உங்களுக்கு
வழங்கிய அருட்கொடையை எண்ணிப்பாருங்கள். உங்களைக்
கொடிய வேதனையில் ஆழ்த்தி வைத்திருந்த ஃபாரோவுடைய
கூட்டத்தாரிடமிருந்து அவன் காப்பாற்றினான். அவர்கள்
உங்கள் ஆண்மக்களை (வெட்டி)க் கொன்றனர். பெண்மக்களை
(மட்டும்) உயிருடன் விட்டு வந்தனர். இவ்வகையில் உங்கள்
இறைவனிடமிருந்து பெரும் சோதனை ஏற்பட்டிருந்தது”
என்று கூறினார். [7]“நீங்கள் நன்றி செலுத்தினால் உறுதியாக
நான் உங்களுக்கு (என் அருளை) மேலதிகமாக வழங்குவேன்.
நீங்கள் நன்றி செலுத்தாதிருந்தால் உறுதியாக என் தண்டனை
மிகக் கடுமையானதாக இருக்கும் என்று உங்கள் இறைவன்
அறிவித்ததையும் எண்ணிப்பாருங்கள்” என்றார். [8]“நீங்களும்
பூமியிலுள்ளவர்கள் அனைவரும் மறுத்துவிட்டாலும் அல்லாஹ்
தேவை எதுவுமற்றவன்; புகழுக்குரியவன்” என்று பின்னும் மோசே
கூறினார்.

[9](மறுப்பாளர்களே!) உங்களுக்கு முன்சென்ற நோவா, ஆத்
மற்றும் ஸமூத் சமூகத்தினரின் செய்தியும் அவர்களுக்குப்பின்
வந்தவர்களின் செய்தியும் உங்களுக்குக் கிடைக்கவில்லையா?
அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அவர்களை
அறியமாட்டார்கள். தூதர்கள் அவர்களிடம் தெளிவான
சான்றுகளைக் கொண்டு வந்தனர். ஆனால் அவர்கள் தம்
கைகளை வாய்களில் வைத்துக்கொண்டு, “உறுதியாக நீங்கள்
கொண்டு வந்திருப்பதை நாங்கள் மறுக்கிறோம். நீங்கள் எதன்பால்
எங்களை அழைக்கிறீர்களோ அதுபற்றி நாங்கள் கடும் ஐயத்தில்
இருக்கிறோம்” என்று கூறினர்.

[10]அவர்களின் தூதர்கள், “வானவர்களையும் பூமியையும்
படைத்த இறைவனைப் பற்றியா (உங்களுக்கு) ஐயம்? உங்கள்
பாவங்களை மன்னித்துவிடவும் உங்களுக்கு ஒரு குறிப்பிட்ட

*காலம்வரை நீட்டிப்பு அளிக்கவும் அவன் உங்களை அழைக்கின்றான்” என்று கூறினர். (அதற்கு) அம்மக்கள், “நீங்கள் எங்களைப்போன்ற ஒரு மனிதர்தான். எங்கள் முன்னோர்கள் வணங்கி வந்ததை நாங்கள் வணங்குவதிலிருந்து தடுக்கவா நீங்கள் விரும்புகிறீர்கள்? அப்படியானால் எங்களிடம் தெளிவான சான்றைக் கொண்டு வாருங்கள்” என்று கூறினர்.*

11*தூதர்கள், “நாங்கள் உங்களைப் போன்ற மனிதர்கள்தாம். ஆயினும் அல்லாஹ் தன் அடியார்களில் தான் விரும்பியவர்கள் மீது அருள்புரிகிறான். அல்லாஹ்வின் அனுமதியின்றி எங்களால் எந்தச் சான்றையும் கொண்டுவர இயலாது. நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருக்க வேண்டும்.*
12*அல்லாஹ்வை நாங்கள் சாராமல் இருக்க எங்களுக்கு என்ன நேர்ந்தது? அவன்தானே எங்களுக்கு வழிகாட்டியிருக்கிறான். நீங்கள் கொடுக்கும் துன்பங்களை நாங்கள் சகித்துக்கொள்வோம். நம்பிக்கையாளர் அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருக்க வேண்டும்” என்று கூறினர்.*

13*மறுப்பாளர் தூதர்களிடம், “நீங்கள் எங்கள் வழிமுறைக்குத் திரும்பிவிட வேண்டும். இல்லையெனில் எங்களுடைய ஊரிலிருந்து உங்களை வெளியேற்றி விடுவோம்” என்றனர். இறைவன் அ(த்தூது)வர்களிடம், “தீவினையாளர்களை உறுதியாக நாம் அழித்துவிடுவோம்.*
*14அவர்களுக்குப் பின் நாம் உங்களை (அந்தப்) பூமியில் குடியமர்த்துவோம். இது (இறுதித் தீர்ப்புநாளில்) என் முன்னால் நிற்க வேண்டியிருப்பதையும் என் எச்சரிக்கையையும் எண்ணி அஞ்சி நடப்போருக்கு உரியதாகும்” என்று அறிவித்தான்.*

15*தூதர்கள் (இறைவனிடம்) தீர்ப்பை வேண்டினர். பிடிவாதம்கொண்ட ஒவ்வொரு செருக்குக்கொண்டவனும் இழப்பிற்குள்ளாகிவிட்டான்.*
*16அவனுக்கு முன்னால் நரகம்தான் இருக்கிறது. அங்கு அவனுக்குச் சீழ்நீர் புகட்டப்படும்.*

[17]அவன் அதனைக் கொஞ்சம் கொஞ்சமாக விழுங்க முயல்வான். ஆயினும் அவனால் சிரமத்துடனேயல்லாது அதனை விழுங்க முடியாது. எல்லாத் திசைகளிலிருந்தும் சாவு அவனைச் சூழும். ஆயினும், அவன் இறக்கமாட்டான். அதற்குப் பின்னரும் கொடிய வேதனையும் (அவனுக்கு) உண்டு.

[18]தங்கள் இறைவனை மறுத்தோரின் (நற்)செயல்கள் புயல்வீசும் நாளில் காற்றில் அடித்துச் செல்லப்படும் சாம்பலைப் போன்றவையாகும். தாங்கள் ஈட்டியவற்றிலிருந்து எப்பயனையும் அவர்கள் பெறமுடியாது. இது கெடுவழியில் மிகத் தொலைவு
சென்றுவிடுவதாகும். [19]வானங்களையும் பூமியையும் அல்லாஹ்
(ஒரு நோக்கத்துக்காக) படைத்துள்ளான் என்பதை (மனிதனே) நீ கவனிக்கவில்லையா? அவன் விரும்பினால் உங்களைப் போக்கிவிட்டு (உங்கள் இடத்தில்) ஒரு புதிய படைப்பைக்
கொண்டுவருவான். [20]இ(வ்வாறு செய்வ)து அல்லாஹ்வுக்குக்
கடினமானதன்று.

[21](இறுதித் தீர்ப்பு நாளில்) அவர்கள் அனைவரும் இறைவனின் முன்னால் நிற்பார்கள். அப்போது (இவ்வுலகின்) வலுவற்றவர்கள் பெருமையடித்துக் கொண்டிருந்தவர்களை நோக்கி "நாங்கள் உங்களையே பின்பற்றி நடந்தோம். எனவே இறைவேதனையிலிருந்து எங்களைக் காப்பாற்றுவீர்களா?" என்று கேட்பர். அப்போது அவர்கள், "அல்லாஹ் எங்களுக்கு வழிகாட்டியிருந்தால் நாங்கள் உங்களுக்கு வழிகாட்டியிருப்போம். இப்போது நாம் பதறினாலும் பொறுமையாக இருந்தாலும் இரண்டும் நமக்குச் சமமே. நாம் தப்புவதற்கு எந்த வழியுமில்லை" என்று (மறுமொழி) கூறுவர்.

[22]தீர்ப்பு வழங்கப்பட்டதும் சாத்தான், (தன்னைப் பின்பற்றியவர்களிடம்) "அல்லாஹ் உங்களுக்கு உண்மையான வாக்குறுதியை அளித்தான். நானும் உங்களுக்கு வாக்குறுதி அளித்தேன். ஆனால் நான் உங்களை ஏமாற்றிவிட்டேன். உங்கள்மீது எனக்கு எந்த அதிகாரமும் இல்லை. (ஆயினும்)

*நான் உங்களை அழைத்தபோது நீங்கள் என் அழைப்பை ஏற்றுப் பின்பற்றினீர்கள். எனவே நீங்கள் என்மீது பழிபோடாதீர்கள். நீங்கள் உங்களையே பழித்துக் கொள்ளுங்கள். நான் உங்களுக்கு உதவிசெய்ய முடியாது. நீங்களும் எனக்கு உதவமுடியாது. இதற்குமுன் நீங்கள் என்னை (இறைவனுக்கு) இணையாக ஆக்கியதை நான் ஏற்க மறுத்துவிட்டேன்" என்று கூறுவான். உறுதியாகத் தீவினையாளர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.*

[23]*(ஓரிறை)நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர்கள் சொர்க்கச் சோலைகளில் அனுமதிக்கப்படுவர். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். தங்களது இறைவனின் அனுமதியின்பேரில் என்றென்றும் அங்குத் தங்கியிருப்பர். அவர்கள் ஒருவரையொருவர் 'சாந்தி நிலவட்டும்' என்று கூறியே வாழ்த்துவர்.*

[24]*(நபியே!) தூய சொல்லுக்கு அல்லாஹ் எவ்வாறு உவமை கூறியுள்ளான் என்பதை நீர் கவனிக்கவில்லையா? அது ஒரு நல்ல மரத்தைப் போன்றதாகும். அதனுடைய வேர் பூமியினுள் ஆழப் பதிந்துள்ளது. அதன் கிளைகளோ வானளாவ உயர்ந்து*
*நிற்கின்றன. [25]அது தன் இறைவனின் கட்டளைப்படி எப்போதும் கனிகளை அளித்துக் கொண்டிருக்கிறது. மக்கள் படிப்பினை பெறும்பொருட்டு அல்லாஹ் இத்தகைய உவமைகளைக்*
*கூறுகிறான். [26]தீய சொல்லுக்கு உவமை ஒரு தீய மரம். அது பூமியின் மேற்பரப்பிலிருந்து வேர் பிடுங்கப்பட்ட உறுதியற்ற மரம்.*

[27]*அல்லாஹ் நம்பிக்கையாளர்களை இவ்வுலக வாழ்விலும் மறுமையிலும் உறுதியான சொல்லைக்கொண்டு நிலைப்படுத்துகிறான்; தீவினையாளர்களை வழிதவறும்படி விட்டுவிடுகிறான். தான் விரும்பியதை அல்லாஹ் செய்கிறான்.*

[28]*(நபியே!) அல்லாஹ்வின் அருட்கொடையை மறுப்பின்மூலம் மாற்றித் தம் சமூகத்தை அழிவின் வீடான நரகத்தில்*

*தள்ளியவர்களை நீர் பார்க்கவில்லையா? [29]அதில் அவர்கள்
நுழைவர். அது எவ்வளவு கேடான உறைவிடம்! [30]மக்களை
இறைவழியிலிருந்து பிறழச் செய்வதற்காக அவர்கள் அவனுக்கு
இணைத் தெய்வங்களை ஏற்படுத்தினர். (நபியே!) அவர்களிடம்,
"(சிறிது காலம் இன்பம்) அனுபவித்துக் கொள்ளுங்கள். இறுதியில்
உங்கள் உறைவிடம் நரகம்தான்" என்று கூறுவீராக!*

*[31](நபியே!) நம்பிக்கைகொண்ட என் அடியார்களிடம்
"எந்தக் கொடுக்கல் வாங்கலோ, நட்போ பயன்தராத அந்தநாள்
வருவதற்கு முன்பே அவர்கள் தொழுகையைக் கடைப்பிடிக்க
வேண்டும் என்றும் நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து
வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் ஈகைபுரிய வேண்டும்"
என்றும் கூறுவீராக!*

*[32]அல்லாஹ்தான் வானங்களையும் பூமியையும் படைத்தான்.
அவன்தான் வானத்திலிருந்து மழையைப் பொழியச்செய்து
அதன்மூலம் உங்களுக்கு உணவாகப் பல்வேறு கனிகளை விளையச்
செய்தான். கப்பலை அவன்தான் உங்களுக்குப் பயனளிக்கும்படி
ஆக்கித்தந்தான். அது அவனது கட்டளைப்படி கடலில் செல்கிறது.
உங்களுக்காக ஆறுகளையும் பயனளிக்கக்கூடியவையாக
ஆக்கினான். [33]சூரியனையும் சந்திரனையும் அவை ஒழுங்காக
இயங்கும் வண்ணம் உங்களுக்கு அமைத்திருக்கிறான். அவன்தான்
இரவையும் பகலையும் உங்கள் பயன்பாட்டிற்காக ஆக்கினான்.
[34]நீங்கள் அவனிடம் கேட்டவை அனைத்தையும் அவன்
உங்களுக்கு வழங்கினான். அல்லாஹ்வின் அருட்கொடைகளை
நீங்கள் கணக்கிடுவீர்களாயின் உங்களால் எண்ணி முடிக்கவே
முடியாது. உறுதியாக மனிதன் தீவினையாளனாகவும்
நன்றிகெட்டவனாகவும் இருக்கிறான்.*

*[35]ஆப்ரஹாம், "என் இறைவா! (மக்காவாகிய) இந்நகரத்தை
அமைதி அளிக்கக்கூடியதாக ஆக்குவாயாக. என்னையும் என்
மக்களையும் சிலைகளை வணங்குவதிலிருந்து விலக்கிவைப்பாயாக!"*

*என்று இறைஞ்சி வேண்டியதை (நபியே!) நீர் நினைவு கூரும்.*
*36“என் இறைவா! இச்சிலைகள் ஏராளமான மக்களை வழிகெடுத்து விட்டன. யார் என்னைப் பின்பற்றினாரோ அவர் என்னைச் சார்ந்தவர் ஆவார். யார் எனக்கு எதிராகச் செயல்பட்டாரோ (அவரைக் குறித்து நீயே அறிவாய்). உறுதியாக நீ பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்” என்றும் கூறினார்.*

*37“எங்கள் இறைவா! நான் என் வழித்தோன்றல்களில் சிலரைப் புனிதமான உன் இல்லத்திற்கு அருகில் குடியமர்த்தியுள்ளேன். அது விவசாயம் இல்லாத ஒரு பள்ளத்தாக்கு. அவர்கள் தொழுகையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்காக (இவ்வாறு செய்தேன்). ஆகவே நீ மக்களின் உள்ளங்கள் அவர்களின் பால் விருப்பம் கொள்ளுமாறுச் செய்வாயாக! கனி வகைகளிலிருந்து அவர்களுக்கு உணவளிப்பாயாக! அவர்கள் (உனக்கு) நன்றி செலுத்துவர்” என்று ஆப்ரஹாம் இறைஞ்சி வேண்டினார்.*

*38“எங்கள் இறைவா! நாங்கள் மறைப்பதையும் வெளிப்படுத்துவதையும் உறுதியாக நீ நன்கறிவாய். வானத்திலோ பூமியிலோ எப்பொருளும் அல்லாஹ்வுக்கு மறைவானதாக*
*இல்லை. 39“முதுமையில் எனக்கு இஸ்மவேலையும் ஈசாக்கையும் வழங்கிய அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும்! உறுதியாக*
*என் இறைவன் இறைஞ்சுதலைச் செவியேற்பவன்” 40“இறைவா! என்னையும் என் வழித்தோன்றல்களையும் தொழுகையைக் கடைப்பிடிப்போராக ஆக்குவாயாக! என் இறைவா! (இந்த)*
*என் இறைஞ்சுதலை ஏற்றுக்கொள்வாயாக! 41எங்கள் இறைவா! எனக்கும் என் பெற்றோருக்கும் (இறை)நம்பிக்கையாளர்களுக்கும் விசாரணை நடைபெறும் நாளில் (பாவ)மன்னிப்பு வழங்குவாயாக” (என்று ஆப்ரஹாம் இறைஞ்சி வேண்டினார்.)*

*42தீவினையாளர்கள் செய்துகொண்டிருப்பதை அல்லாஹ் கவனிக்காமல் இருக்கிறான் என்று ஒருபோதும் நீர்*

*எண்ணிவிடாதீர். பார்வைகள் நிலைகுத்திவிடும் ஒரு நாளுக்காக அவன் அவர்களை விட்டு வைத்திருக்கிறான்.* 43*(மறுமையாகிய அந்நாளில்) அவர்கள் தம் தலைகளை உயர்த்தியபடியே ஓடுவர். அவர்களின் (நிலைகுத்திய) பார்வை (பழைய நிலைக்குத்) திரும்பாது. அவர்களது உள்ளங்கள் வெறுமையாகிவிடும்.*

44*(நபியே!) வேதனைவரும் நாளைப்பற்றி மக்களுக்கு எச்சரிக்கை செய்வீராக! அந்நாளில் வரம்பு மீறியவர்கள் "எங்கள் இறைவா! சிறிது காலம்வரை எங்களுக்குக் காலநீட்டிப்பு அளிப்பாயாக! (இனி) நாங்கள் உன் அழைப்பை ஏற்று (உன்) தூதர்களைப் பின்பற்றி நடப்போம்" என்று கூறுவர். (அதற்கு அல்லாஹ்) "இதற்கு முன் நீங்கள்தானே உங்களுக்கு அழிவே வராது என்று சத்தியம் செய்து கொண்டிருந்தீர்கள்?* 45*தமக்குத் தாமே தீங்கு இழைத்துக் கொண்டிருந்தவர்கள் வாழ்ந்த இடத்தில்தான் நீங்கள் வாழ்ந்து வந்தீர்கள். நாம் அவர்களை என்னவாறு (வேதனை) செய்தோம் என்பது உங்களுக்குத் தெளிவாகத் தெரிந்தே இருந்தது. நாம் உங்களுக்குப் பல உதாரணங்களைக் கூறியுள்ளோம்" என்று பதில் கூறுவான்.* 46*(இணை கற்பித்துக் கொண்டிருந்த) அவர்கள் அனைத்துச் சூழ்ச்சிகளையும் செய்தனர். அவர்களின் சூழ்ச்சிகள் மலைகளையே பெயர்த்து விடக்கூடியவையாக இருந்தாலும்கூட அவை அல்லாஹ்வின் கட்டுப்பாட்டில்தான் இருந்தன.*

47*(நபியே!) அல்லாஹ் தன் தூதர்களுக்கு அளித்த வாக்குறுதியை மீறுவான் என்று ஒருபோதும் எண்ணிவிடாதீர். உறுதியாக அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; தக்க தண்டனை அளிப்பவன்.* 48*இந்தப் பூமி வேறு பூமியாகவும் வானங்களும் (வேறு வானங்களாகவும்) மாற்றப்படும் இறுதித் தீர்ப்புநாளை (அவர்களுக்கு) நினைவூட்டுவீராக! அடக்கியாளும் ஏகனாகிய அல்லாஹ்வுக்கு முன்னால் அவர்கள் அனைவரும் வந்து நிற்பர்.* 49*(நபியே! மறுமையாகிய) அந்நாளில் குற்றவாளிகள் சங்கிலியால் பிணைக்கப்பட்டிருப்பதை நீர் காண்பீர்.* 50*அவர்களின் ஆடைகள் (நெருப்பில் உருகும்) ஒரு*

*பொருளால் ஆனவையாக இருக்கும். அவர்களின் முகங்களை நெருப்பு மூடியிருக்கும். [51]ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் செய்தவற்றுக்கான கூலியை அல்லாஹ் வழங்குவான். உறுதியாக அல்லாஹ் விசாரணைசெய்வதில் விரைவானவன். [52]இது (குர்ஆன்) மனிதகுலத்திற்கான ஓர் அறிவிப்பாகும். அவர்கள் எச்சரிக்கப்படுவதற்காகவும் அவன் ஒருவனே இறைவன் என்பதை அவர்கள் அறிந்துகொள்வதற்காகவும் அறிவுடையோர் படிப்பினையைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்காகவும் (அருளப்பட்டதாகும்.)*

## 15. பாறைப்பகுதி (அல்ஹிஜ்ர்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]அலிஃப் – லாம் – ரா.*

*இவை வேதமாகிய தெளிவான குர்ஆனின் வசனங்களாகும்.*
*[2]தாங்களும் (இறைவனுக்குக்) கீழ்ப்படிந்தவர்களாக இருந்திருக்கக் கூடாதா என மறுப்பாளர்கள் ஏங்கும் நேரம் உறுதியாக*
*வரும். [3](நபியே!) நீர் அவர்களை விட்டுவிடுவீராக! அவர்கள் உண்ணட்டும்; இன்பம் அனுபவிக்கட்டும்; வீண் ஆசைகள் அவர்களை மறதியில் ஆழ்த்தட்டும். (அதன் பயனை) விரைவில்*
*அவர்கள் அறிந்துகொள்வார்கள். [4]நாம் எந்த ஊரையும் அதற்கென (முன்னரே) குறிக்கப்பட்ட நேரத்தில்தான் அழித்துள்ளோம்.*
*[5]எந்தச் சமூகமும் அதற்கெனக் குறிக்கப்பட்ட நேரத்தை முந்தவும் செய்யாது; பிந்தவும் செய்யாது.*

*[6](நபியே! உம்மிடம்) அவர்கள் “அறிவுரை (குர்ஆன்) அருளப்பட்டவரே! உறுதியாக நீர் பைத்தியக்காரர்தான். [7]நீர் உண்மையாளராயின் எங்களிடம் வானவர்களை அழைத்து வந்திருக்க வேண்டாமா?” என்று கேட்கின்றனர். [8]நாம் வானவர்களைத் தீர்ப்பிற்காகத்தான் இறக்குகிறோம். அப்போது மறுப்பாளர்களுக்குக் காலநீட்டிப்பு அளிக்கப்படமாட்டாது.*

9இந்தக் குர்ஆனை நாமே அருளினோம். உறுதியாக நாமே
இதனைப் பாதுகாப்போம்.

10உமக்கு முன்சென்ற சமூகங்களுக்கு நாம் தூதர்களை
அனுப்பியிருந்தோம். 11ஆயினும் அவர்களிடம் எந்தத் தூதர்
வந்தாலும் அவரை அவர்கள் ஏளனம் செய்யாமல் இருந்ததில்லை.
12இவ்வாறே நாம் இதனை(ஏளனம் இறைமறுப்பு ஆகியவற்றை
உம்மை எதிர்க்கும் இ)க் குற்றவாளிகளின் உள்ளத்தில் புகுத்தி
விடுகிறோம். 13அவர்கள் இந்தக் குர்ஆனின் மீது நம்பிக்கை
கொள்ளமாட்டார்கள். (தண்டனைக்குள்ளான) முன்னோர்களின்
முன்னுதாரணம் இருந்தும்கூட (நம்பமாட்டார்கள்). 14நாம்
அவர்களுக்காக வானத்தின் ஒரு கதவைத் திறந்து அவர்கள்
அதன் வழியே ஏறிச் செல்லத் தொடங்கினாலும் 15“எங்களின்
பார்வைகள் மயக்கப்பட்டு விட்டன. எங்கள் மீது சூனியம்
செய்யப்பட்டுள்ளது” என்றே கூறுவர்.

16நாம் வானத்தில் விண்மீன்களை அமைத்து,
பார்ப்பவர்களுக்காக அவற்றை அழகுபடுத்தியுள்ளோம்.
17விரட்டப்பட்ட ஒவ்வொரு சாத்தானிடமிருந்தும் அவற்றைப்
பாதுகாத்துள்ளோம். 18ஆனால் (சாத்தான்) யாரேனும்
(வானவர்களின் உரையாடலைத்) திருட்டுத்தனமாக ஒட்டுக்கேட்டால்
ஒளிரும் தீச்சுவாலை அவனைப் பின்தொடரும்.

19நாம் பூமியை விரித்து அதில் மலைகளை நிறுத்தினோம்.
ஒவ்வொரு தாவரத்தையும் பொருத்தமான முறையில்
முளைக்கச்செய்தோம். 20அதில் உங்களுக்காகவும் நீங்கள்
உணவளிக்காத உயிரினங்களுக்காகவும் வாழ்வாதாரங்களை
ஏற்படுத்தினோம்.

21எந்தப் பொருளாயினும் அதன் கருவூலங்கள் எம்மிடமே
உள்ளன. நாம் அவற்றை ஒரு குறிப்பிட்ட அளவில்தான் இறக்கி
வைக்கிறோம். 22மேகம் கருவுயிர்க்கும்படியான காற்றுகளை

*நாமே அனுப்பி வானத்திலிருந்து மழை பொழிவித்து அதிலிருந்து நீங்கள் நீர் அருந்தச்செய்கிறோம். (மேகங்களில் மழைநீரை) நீங்கள் சேமித்து வைக்கவில்லை. (நாமே சேகரிக்கிறோம்.)*

*[23]உறுதியாக நாமே உயிர் கொடுக்கிறோம்; நாமே சாவையும் அளிக்கிறோம். (அனைத்துப் பொருள்களுக்கும் வாரிசாக)
நாம் மட்டுமே நிலைத்திருப்போம். [24]உங்களுக்கு முன் வாழ்ந்து
சென்றவர்களையும் உங்களுக்குப்பின் வரப்போகிறவர்களையும்
நாம் அறிவோம் [25]உமது இறைவன்தான் (மறுமையில்) அவர்கள்
அனைவரையும் ஒன்றுசேர்ப்பான். அவன் ஞானம் மிக்கவன்;
முற்றும் அறிந்தவன். [26]காய்ந்தபின் (சுண்டினால்) ஓசை தரக்கூடிய
பிசுபிசுப்பான கரிய களிமண்ணால் நாம் (முதல்) மனிதரைப்
படைத்தோம். [27]அதற்கு முன்னர் ஜின்களைக் கடும் வெப்பமுள்ள
நெருப்பிலிருந்து படைத்தோம்.*

*[28](நபியே!) உம் இறைவன் வானவர்களிடம் “காய்ந்தால்
ஓசைதரக்கூடிய பிசுபிசுப்பான களிமண்ணால் நான் (முதல்)
மனிதரைப் படைக்கப் போகிறேன். [29]நான் அவரை வடிவமைத்து
அவருக்குள் என் ஆன்மாவை ஊதியதும் நீங்கள் அவருக்குத்
தலைபணிய வேண்டும்” என்று கூறியதை நினைவு கூர்வீராக!
[30]எனவே வானவர்கள் அனைவரும் தலைபணிந்தனர், [31]இப்லீஸைத்
தவிர! அவன் தலைபணிந்தவர்களுடன் சேர மறுத்து விட்டான்.
[32]அப்போது இறைவன் “இப்லீஸே, உனக்கு என்ன நேர்ந்தது?
நீ தலைபணிந்தவர்களுடன் சேராமலிருப்பது ஏன்? எனக்
கேட்டான். [33]அதற்கு இப்லீஸ், “நீ (காய்ந்தால்) ஓசைதரக்கூடிய
பிசுபிசுப்பான களிமண்ணால் படைத்த மனிதனுக்கு நான்
தலைபணிவதற்கில்லை” என்றான்.*

*[34]அப்போது இறைவன், “நீ இங்கிருந்து வெளியேறிவிடு.
ஏனெனில் நீ உறுதியாக விரட்டப்பட்டு விட்டாய். [35]தீர்ப்புநாள்
வரை உன்மீது சாபம் உண்டு” என்று கூறினான் [36]அதற்கு அவன்,
“என் இறைவனே! மக்கள் எழுப்பப்படும் நாள்வரை எனக்குக்*

*காலநீட்டிப்பு அளிப்பாயாக!” என்று கேட்டான். [37]இறைவன்,*
*“உனக்குக் காலநீட்டிப்பு அளிக்கப்பட்டு விட்டது, [38]குறிப்பிட்ட*
*அந்தநாள் வரை!” என்று கூறினான்.*

*[39]அப்போது இப்லீஸ், “என் இறைவனே! நீ என்னை*
*வழிதவறச் செய்தால் நானும் மக்களுக்குப் பூமியிலுள்ள*
*தீயவற்றை அழகானவையாகக் காட்டி அவர்கள் அனைவரையும்*
*வழிகெடுப்பேன், [40]ஆயினும் (உன்னால்) தேர்ந்தெடுக்கப்பட்ட*
*உன் அடியார்களைத் தவிர” என்று கூறினான்.*

*[41]இறைவன் இப்லீஸிடம் “அதுதான் என்னை வந்தடையும்*
*நேரான பாதை. [42]உறுதியாக எம் அடியார்கள் மீது உனக்கு*
*எந்த அதிகாரமும் இல்லை, உன்னைப் பின்பற்றி வழிகெட்டுப்*
*போகக்கூடியவர்களைத் தவிர. [43]அவர்கள் அனைவருக்கும்*
*நரகம்தான் வாக்களிக்கப்பட்ட இடமாகும். [44]அதற்கு ஏழு*
*வாயில்கள் உள்ளன. ஒவ்வொரு வாயிலுக்கும் அவர்களில்*
*குறிப்பிட்ட அளவினர் ஒதுக்கப்படுவர்” எனக் கூறினான்.*

*[45]உறுதியாக,இறையச்சமுடையோர் சொர்க்கச் சோலைகளிலும்*
*நீருற்றுகளிலும் இருப்பார்கள். [46]“இவற்றினுள் அமைதியுடனும்*
*அச்சமற்றும் நுழைந்து விடுங்கள்” (என்று அவர்களுக்கு கூறப்படும்)*
*[47]அவர்களின் உள்ளங்களில் உள்ள வெறுப்புணர்ச்சிகளை நாம்*
*நீக்கிவிடுவோம். அவர்கள் அனைவரும் சகோதரர்களாகக்*
*கட்டில்களின் மீது ஒருவரையொருவர் முன்னோக்கியவாறு*
*அமர்ந்திருப்பார்கள். [48]அங்கே அவர்களுக்கு எந்தச் சிரமமும்*
*ஏற்படாது. அங்கிருந்து அவர்கள் வெளியேற்றப்படவும்*
*மாட்டார்கள். [49](நபியே!) “நான் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற*
*அன்பாளன்” என்று என் அடியார்களுக்கு அறிவித்து விடுவீராக!*
*[50]“ஆயினும் நான் அளிக்கும் வேதனைதான் துன்புறுத்தும்*
*வேதனையாகும்” என்றும் அறிவிப்பீராக!*

*[51](நபியே!) அவர்களுக்கு ஆப்ரஹாமின் விருந்தாளிகளைப்*
*பற்றி எடுத்துரைப்பீராக! [52]அவர்கள் அவரிடம் வந்து (‘உங்களுக்கு*

*சாந்தி உண்டாகுக!' என்று) முகமன் கூறியபோது, "நாங்கள்
உங்களைக் கண்டு அஞ்சுகிறோம்" என்றார். [53]அதற்கு அவர்கள்,
"நீர் அஞ்சவேண்டாம், நாம் உமக்கு அறிவுமிக்க ஓர் ஆண் குழந்தை
(பிறக்கப் போவது) பற்றிய நற்செய்தியைக் கூறுகிறோம்" என்று
கூறினர். [54]அதற்கு அவர், "இந்த முதுமையிலா நீங்கள் எனக்கு
நற்செய்தி கூறுகிறீர்கள்? நீங்கள் எப்படிப்பட்ட நற்செய்தியைக்
கூறுகிறீர்கள்?" என்றார். [55]அவர்கள், "நாங்கள் உமக்குச்
சத்தியத்துடன்தான் நற்செய்தியைக் கூறுகிறோம். எனவே நீர்
நம்பிக்கை இழந்து விடாதீர்" என்று கூறினர். [56]அதற்கு அவர்
வழிகெட்டவர்கள்தாம் தம் இறைவனின் அருளைக் குறித்து
நம்பிக்கை இழப்பர்" என்று கூறினார்.*

*[57]அதன்பின் அவர் "(இறைவனால்) அனுப்பப்பட்ட
(வானவ) தூதர்களே! உங்கள் பணி என்ன?" என்று கேட்டார்.
[58]அவர்கள், "நாங்கள் (மிகப்பெரும்) குற்றம் புரியும் சமூகத்தாரிடம்
(அவர்களை அழித்துவிட) அனுப்பப்பட்டுள்ளோம். [59]லோத்தின்
குடும்பத்தினர் அனைவரையும் நாங்கள் (அழிவிலிருந்து)
காப்பாற்றி விடுவோம், [60]ஆனால் அவரின் மனைவியைத் தவிர!
அவள் குற்றவாளிகளுடன் தங்கிவிடுவாள் என்று நாம் விதித்து
விட்டோம்" என்று (இறைவன் கூறியதாகக்) கூறினர்.*

*[61](இறைவனால்) அனுப்பப்பட்ட(வான)வர்கள் லோத்தின்
குடும்பத்தினரிடம் வந்தபோது, [62]"நீங்கள் அந்நியராகத்
தெரிகிறீர்களே!" என்று லோத் கூறினார். [63]அதற்கு அவர்கள்,
"இல்லை (உம்முடைய கூட்டத்தாராகிய) இவர்கள் எதை
(இறைத்தண்டனை)க் குறித்து ஐயம் கொண்டிருக்கிறார்களோ அது
குறித்த செய்தியையே நாம் உம்மிடம் கொண்டு வந்துள்ளோம்.
[64]நாங்கள் உம்மிடம் சத்தியத்துடன் வந்துள்ளோம். நாங்கள்
உண்மையாளர்களே. [65]எனவே இரவின் ஒரு பகுதியில் உமது
குடும்பத்துடன் நீர் வெளியேறி விடுவீராக! அவர்களைப்
பின்தொடர்ந்து செல்வீராக! உங்களில் எவரும் திரும்பிப்
பார்க்க வேண்டாம். உங்களுக்குக் கட்டளையிடப்பட்ட*

இடத்திற்கே சென்று விடுங்கள்” என்று கூறினர். 66‘குற்றவாளிகள் விடிகாலையில் அடியோடு அழிக்கப்பட்டுவிடுவர்’ என்ற நமது முடிவை நாம் அவருக்கு அறிவித்து விட்டோம்.

67(இதற்கிடையில்) அந்நகரவாசிகள் மகிழ்ச்சியுடன் லோத்தின் வீட்டிற்கு வந்தனர். 68(அவர்) “இவர்கள் என் விருந்தாளிகள். என்னை அவமதிக்காதீர்கள். 69அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். என்னை இழிவுபடுத்தி விடாதீர்கள்” என்று தம் கூட்டத்தாரிடம் கூறினார். 70அவர்கள், “உலகத்தாருக்கெல்லாம் பரிந்துபேச வேண்டாம் என்று நாங்கள் உம்மைத் தடுக்கவில்லையா?” என்று கேட்டனர். 71அதற்கு அவர், “நீங்கள் ஏதேனும் செய்வதாக இருந்தால் இதோ இவர்கள் எனது பெண் மக்கள், (இவர்களை மணமுடித்துக் கொள்ளுங்கள்)” என்று கூறினார்.

72(நபியே!) உம் வாழ்நாள்மீது சத்தியமாக! அவர்கள் தம் மதி மயக்கத்தில் உணர்விழந்து கிடந்தனர். 73எனவே பொழுது விடியும்போது இடிமுழக்கம் அவர்களைத் தாக்கியது. 74நாம் அந்த ஊரைத் தலைகீழாகப் புரட்டிவிட்டோம். அவர்களின் மீது சுட்ட செங்கற்களைப் பொழியச்செய்தோம். 75உறுதியாக உண்மையறியும் நாட்டம் உள்ளோருக்கு இதில் சான்றுகள் உள்ளன. 76அந்த ஊர் (நீங்கள் பயணம் சென்று திரும்பும்) நெடுஞ்சாலையில்தான் அமைந்துள்ளது. 77உறுதியாக இதில் நம்பிக்கையாளர்களுக்குத் தெளிவான சான்று இருக்கிறது.

78(ஷுஐபுடைய மக்களான) ‘அய்கா’வாசிகளும் (தோப்புக்காரர்கள்) தீவினையாளர்களாகத்தான் இருந்தனர். 79எனவே நாம் அவர்களைத் தண்டித்தோம். இவ்விரு ஊர்களின் (பாழடைந்த) பகுதிகள் நீங்கள் அறிந்த நெடுஞ்சாலையில்தான் உள்ளன. 80ஹிஜ்ர்வாசிகளும் (சாலிஹ் அவர்களின் சமூகத்தினரான ஸமூத் மக்கள்) தூதர்களைப் பொய்யர்கள் என்றனர். 81நாம் அவர்களுக்குச் சான்றுகளை வழங்கியிருந்தோம். ஆனால் அவர்கள் அதனைப் புறக்கணித்தனர். 82பாதுகாப்புடன்

*வாழ்வதற்காக அவர்கள் மலைகளைக் குடைந்து வீடுகளை அமைத்(திருந்)தனர். [83]விடிகாலையில் அவர்களைப் பயங்கர ஓசை தாக்கியது. [84]அப்போது அவர்கள் (தங்களைக் காத்துக்கொள்ளச்) செய்திருந்தவை அவர்களுக்குப் பயனளிக்கவில்லை.*

*[85]நாம் வானங்களையும் பூமியையும் அவற்றிற்கிடையில் உள்ளவற்றையும் சத்தியத்தின் அடிப்படையிலன்றி (வீணாகப்) படைக்கவில்லை. ஐயமின்றி மறுமை நாள் வரத்தான் போகிறது. எனவே (நபியே!) நீர் கண்ணியமான முறையில் (இவர்களுடைய துன்புறுத்தலைப்) புறக்கணித்துவிடும். [86]உறுதியாக உமது இறைவன்தான் அனைத்தையும் படைத்தவன்; முற்றும் அறிந்தவன்.*

*[87]திரும்பத் திரும்ப ஓதக்கூடிய ஏழு வசனங்களையும் மகத்துவமிக்கக் குர்ஆனையும் நாம் உமக்கு அருளினோம்.*
*[88](நபியே!) அவர்களில் பல பிரிவினர்க்கு நாம் வழங்கியுள்ள உலக இன்பங்களை நீர் ஏறெடுத்தும் பார்க்காதீர். அவர்களுக்காகக் கவலையும் கொள்ளாதீர். நம்பிக்கையாளர்களுக்காக(த் தாய்ப் பறவைபோல) உமது அன்பெனும் சிறகைத் தாழ்த்துவீராக!*
*[89](நபியே!) “நான் வெளிப்படையாக எச்சரிப்பவன்தான்” என்று கூறிவிடுவீராக! [90](நபியே! முன்னுள்ள வேதங்களைப்) பலவாறாகப் பிரித்தோர்மீது (வேதனையை) இறக்கியவாறே [91]இந்தக் குர்ஆனைப் பலவாறாகப் பிரிப்போர்மீதும் (வேதனையை இறக்கி வைப்போம்)*
*[92]உம் இறைவனின் மீது ஆணையாக! அவர்கள் அனைவரிடமும்*
*[93]அவர்கள் செய்து கொண்டிருந்ததைப்பற்றி உறுதியாக நாம் விசாரிப்போம்.*

*[94]எனவே உமக்குக் கட்டளையிடப்படுவதைத் தெளிவாக எடுத்துரைத்துவிடுவீராக! இணைவைப்பாளர்களைத் தவிர்த்துவிடுவீராக! [95]ஏளனம் செய்வோரிடமிருந்து உம்மைப் பாதுகாக்க நாமே போதுமானவராக இருக்கிறோம்.*

*[96](அவர்கள்) அல்லாஹ்வுடன் வேறு தெய்வங்களை
இணையாக்கிக் கொள்கின்றனர். (அதன் விளைவை) விரைவில்
அவர்கள் அறிந்துகொள்வர். [97](உம்மைக் குறித்து) அவர்கள்
பேசும் பேச்சுகளினால் உம் உள்ளம் பெரிதும் கலங்குவதை
நாம் அறிவோம். [98]ஆனால் நீர் உம் இறைவனைப் புகழ்ந்து
துதிப்பீராக! அவனுக்குத் தலைவணங்குவோரில் ஒருவராகி
விடுவீராக! [99]மரணம் உம்மை வந்தடையும்வரை இறைவனை
வணங்கிக் கொண்டிருப்பீராக!*

# 16. தேனீ (அந்நஹ்ல்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]இறைக்கட்டளை வந்துவிட்டது. எனவே அதற்காக
நீங்கள் அவசரப்படாதீர்கள். அவன் மிகவும் (அப்பாற்பட்டுத்)
தனித்துயர்ந்தவன்; அவர்கள் இணைவைப்பவற்றிலிருந்து மிக
உயர்ந்தவன். [2]தன் அடியார்களில் தான் விரும்பியவர்களிடம்
வானவர்களைத் தனது கட்டளையெனும் வஹீ
(இறைச்செய்தி)யுடன் அனுப்பி 'என்னைத் தவிர வேறு
இறைவன் இல்லை. எனவே எனக்கே அஞ்சுங்கள்' என்று
(மக்களுக்கு) எச்சரிக்கை செய்யுமாறு கட்டளையிட்டுள்ளான்.
[3]அவன் வானங்களையும் பூமியையும் தக்க காரணத்துடன்
படைத்துள்ளான். அவன் அவர்கள் கற்பிக்கும் இணைகளுக்கு
அப்பாற்பட்டு மிக மேலானவன்.*

*[4]அவன் மனிதனை விந்தின் ஒரு துளியிலிருந்து
படைத்தான். அவ்வாறிருந்தும் மனிதன் (இறைவனுக்கு எதிராக)
வெளிப்படையாகத் தர்க்கம் செய்கிறான். [5](மனிதர்களே!) அவன்
கால்நடைகளையும் படைத்துள்ளான். அவற்றில் உங்களுக்குக்
கதகதப்பான உடையும் பிற பல பயன்களும் உள்ளன. அவற்றில்
(சிலவற்றை) நீங்கள் உண்ணவும் செய்கிறீர்கள். [6]அவற்றை நீங்கள்
(மேய்த்து) மாலையில் ஓட்டி வரும்போதும் (மேய்ச்சலுக்காகக்)
காலையில் ஓட்டிச் செல்லும்போதும் அவை உங்களுக்கு எவ்வளவு*

*அழகாகத் தோன்றுகின்றன! 7கடுமையாகச் சிரமப்பட்டாலன்றி
உங்களால் சென்றடைய முடியாத இடத்திற்கெல்லாம் அவை
(உங்களின்) சுமைகளைக் கொண்டு சேர்க்கின்றன. உறுதியாக
இறைவன் மிகுந்த பரிவுடையவன்; அளவற்ற அருளாளன்.
8குதிரைகள், கோவேறு கழுதைகள், கழுதைகள் ஆகியவற்றை
நீங்கள் பயணம் செய்வதற்காகவும் அழகுக்காகவும் அவன்
படைத்துள்ளான். நீங்கள் அறியாதவற்றையும் அவன்
படைக்கிறான்.*

*9நேரான வழி(யே) அல்லாஹ்வைச் சென்றடையும். சில
கோணலான வழிகளும் உள்ளன. அவன் விரும்பியிருந்தால்
உங்கள் அனைவருக்கும் நேர்வழியைக் காட்டியிருப்பான்.*

*10அவன்தான் உங்களுக்காக வானத்திலிருந்து மழையைப்
பொழியச் செய்தான். அதில் நீங்கள் அருந்தும் நீருள்ளது. அதைக்
கொண்டே உங்கள் கால்நடைகள் மேய்வதற்கான தாவரங்களும்
வளர்கின்றன. 11அதன்மூலம் உங்களுக்குப் பயிர்களையும் ஆலிவ்
மரத்தையும் பேரீச்சை, திராட்சை மற்றும் எல்லாவகையான
கனி(தரும் மரங்)களையும் அவன் முளைக்கச் செய்கிறான்.
உறுதியாக, சிந்திக்கும் மக்களுக்கு இதில் சான்று இருக்கிறது.*

*12அவன்தான் இரவையும் பகலையும் சூரியனையும்
சந்திரனையும் உங்களுக்குப் பயன்படும்படி அமைத்துத்
தந்துள்ளான். நட்சத்திரங்களும் அவனது கட்டளைக்கு
உட்பட்டவையாக இருக்கின்றன. புரிந்துகொள்ளும் மக்களுக்கு
இதில் பல சான்றுகள் உள்ளன. 13பூமியில் உங்களுக்காக அவன்
பல்வேறு வண்ணங்கள் (தன்மைகள்) கொண்ட பொருள்களைப்
படைத்துள்ளான். உறுதியாக இதில் படிப்பினை பெறும்
மக்களுக்குச் சான்று இருக்கிறது.*

*14நீங்கள் புத்தம்புதிய (கடல்) இறைச்சியை உண்பதற்காகவும்
நகையாக அணியக்கூடிய பொருள்களை எடுத்துக்
கொள்வதற்காகவும் அவன்தான் கடலை (உங்களுக்கு)*

*வசப்படுத்தித் தந்துள்ளான். அதில் நீரைப் பிளந்துகொண்டு செல்லும் கப்பல்களைக் காண்கிறீர்கள். அது நீங்கள் (பயணம் செய்து வணிகத்தின் மூலம்) அவனது அருளைத் தேடுவதற்காகவும் நன்றி செலுத்துவதற்காகவும்தான்.*

*[15]உங்களோடு பூமி சாய்ந்து விடாதிருக்க அவன் மலைகளை ஊன்றியுள்ளான். நீங்கள் (போக்குவரத்து) வழிகளை அறிந்து கொள்வதற்காக ஆறுகளையும் பாதைகளையும் ஏற்படுத்தியுள்ளான்.*
*[16](இன்னும் வழி அறிய) வேறு பல அடையாளங்களும் உள்ளன. (இரவில்) நட்சத்திரங்களின் மூலமாகவும் மக்கள் வழியை அறிந்துகொள்கின்றனர்.*

*[17](இணைவைப்போரே! இவை யாவற்றையும்) படைத்தவனும் எதையுமே படைக்க முடியாதவைகளும் சமமாகி விட*
*முடியுமா? நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா? [18]அல்லாஹ்வின்*
*அருட்கொடைகளை நீங்கள் கணக்கிட முயன்றால் அவற்றை உங்களால் எண்ணி முடிக்க முடியாது. உறுதியாக அல்லாஹ் பெரும்*
*மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன். [19]நீங்கள் மறைப்பதையும்*
*வெளிப்படுத்துவதையும் அல்லாஹ் நன்கறிவான்.*

*[20]அல்லாஹ்வையன்றி அவர்கள் யாரை(த் தெய்வங்களாக) அழைக்கிறார்களோ அவர்களால் எதையும் படைக்க முடியாது.*
*(மாறாக) அவர்களே படைக்கப்பட்டவர்கள்தாம். [21]அவர்கள்*
*உயிரற்ற வெற்றுடல்கள். அவர்கள் (விசாரணைக்காக) எப்போது எழுப்பப்படுவார்கள் என்பதையும் அறியமாட்டார்கள்.*
*[22]உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான். ஆயினும் மறுமையை நம்பாதோரின் உள்ளங்கள் (இந்த உண்மையை) மறுக்கின்றன.*
*அவர்கள் செருக்குக் கொள்கின்றனர். [23]அவர்கள் மறைப்பதையும்*
*வெளிப்படுத்துவதையும் உறுதியாக அல்லாஹ் நன்கறிவான். அவன் செருக்குக் கொள்வோரை ஒருபோதும் நேசிப்பதில்லை.*

*[24]“உங்கள் இறைவன் (வேதத்தில்) எதனை இறக்கி அருளியுள்ளான்?” என்று அவர்களிடம் கேட்டால் “அவை*

*முன்னோர்களின் கட்டுக்கதைகள்” என்று கூறுகின்றனர்.*
*[25]இதனால் அவர்கள் மறுமைநாளில் தங்கள் (பாவச்) சுமைகளை முழுமையாகச் சுமப்பதுடன் அறிவில்லாமல் யாரை அவர்கள் வழிகெடுத்தார்களோ அவர்களின் சுமைகளையும் சுமப்பர். அவர்கள் சுமந்து கொண்டிருப்பது எவ்வளவு கேடானது!*

*[26]இவர்களுக்கு முன் சென்றவர்களும் (இறைவனுக்கும் தூதர்களுக்கும் எதிராகச்) சூழ்ச்சி செய்தனர். ஆனால் அல்லாஹ் அவர்களின் (சூழ்ச்சிக்) கட்டடத்தை அடியோடு தகர்த்து அவர்களின் தலைமீதே அதன் முகடு விழும்படி செய்தான். அவர்கள் அறியாதவிதமாக வேதனை அவர்களை வந்தடைந்தது.*
*[27]பின்னர் மறுமை நாளில் அவன் அவர்களை இழிவுபடுத்துவான். அவர்களிடம், “எனக்கு இணையாக்கப்பட்டவர்கள் எங்கே? அவர்கள் விஷயத்தில்தானே நீங்கள் (இறைத்தூதர்களுடன்) வாதிட்டுக் கொண்டிருந்தீர்கள்” என்று அவன் கேட்பான். (அப்போது) அறிவு வழங்கப்பட்டவர்கள், “இன்று இழிவும் வேதனையும் மறுப்பாளருக்குத்தான்” என்று கூறுவார்கள்.*

*[28](அவர்கள்) தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டிருக்கும் நிலையில் (அவர்களின்) உயிர்களை வானவர்கள் கைப்பற்றும்போது, ‘நாங்கள் எந்தத் தீயசெயல்களையும் செய்து கொண்டிருக்கவில்லையே’ என்று சரணடைந்து விடுவார்கள். “ஆம், நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன்; முற்றும் அறிந்தவன்” (என்று வானவர்கள் கூறுவர்).*
*[29]“எனவே “நரகவாயில்களில் நுழைந்துவிடுங்கள், அங்கு நிலையாக இருங்கள்” (என்றும் அவர்களுக்குக் கூறப்படும்). செருக்குக் கொண்டோரின் உறைவிடம் எவ்வளவு கேடானது!*

*[30]இறையச்சமுடையோரிடம் “உங்கள் இறைவன் எதனை அருளியுள்ளான்?” என்று கேட்டால் “நல்லவற்றையே (அருளினான்)” என்று கூறுவர். நற்செயல்புரிந்தோருக்கு இவ்வுலகிலும் நன்மை உண்டு. மறுமையின் (சொர்க்க) வீடு (அவர்களுக்கு) மிகச்*

*சிறந்ததாகும். இறையச்சமுடையோரின் வீடு எவ்வளவு சிறப்பு
வாய்ந்தது! [31]நிலையான சொர்க்கச் சோலைகளில் அவர்கள்
நுழைவர். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அவர்கள்
விரும்புவதெல்லாம் அங்கு அவர்களுக்குக் கிடைக்கும். இவ்வாறே
அல்லாஹ் இறையச்சமுடையோருக்குக் கூலி வழங்குகிறான்.
[32]அவர்கள் தூய்மையாக இருக்கும் நிலையில் வானவர்கள்
அவர்களின் உயிர்களைக் கைப்பற்றுவர். "உங்கள்மீது சாந்தி
உண்டாகட்டும்! உங்களது (நற்)செயல்களின் காரணமாக நீங்கள்
சொர்க்கத்தில் நுழைந்து விடுங்கள்" என்று அவர்கள் கூறுவர்.*

*[33](நபியே! மறுப்பாளர்கள் தம் உயிரைக் கைப்பற்ற)
வானவர்கள் வருவதையோ அல்லது உமது இறைவனின்
(தண்டனை) கட்டளை வருவதையோ அன்றி வேறெதனை
எதிர்பார்க்கின்றனர். இவ்வாறுதான் இவர்களுக்கு முன்
சென்றவர்களும் செயல்பட்டனர். அவர்களுக்கு அல்லாஹ்
அநீதி இழைக்கவில்லை; மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி
இழைத்துக் கொண்டனர். [34]எனவே அவர்களது தீய செயல்களின்
விளைவுகள் அவர்களை வந்தடைந்தன. அவர்கள் எதனை
ஏளனம் செய்து கொண்டிருந்தனரோ அதுவே அவர்களைச்
சூழ்ந்து கொண்டது.*

*[35]இணைவைப்பாளர்கள், "அல்லாஹ் விரும்பியிருந்தால்
நாங்களும் எங்கள் முன்னோர்களும் அவனைத்தவிர வேறு
எதையும் வணங்கியிருக்க மாட்டோம்" என்று கூறுகின்றனர்.
இவ்வாறுதான் இவர்களுக்கு முன்பிருந்தவர்களும் செய்து
கொண்டிருந்தனர். தெளிவாக எடுத்துரைப்பதைத் தவிர எமது
தூதர்களுக்கு வேறு (பொறுப்பு) எதுவும் உண்டா?*

*[36]நாம் ஒவ்வொரு சமுதாயத்தாருக்கும் தூதரை அனுப்பினோம்.
"அல்லாஹ்வையே வணங்குங்கள்; சாத்தான்களிடமிருந்து
விலகியிருங்கள்" என்றுதான் அவர்கள் இறைக் கட்டளையைத்
தெரிவித்தனர். அம்மக்களில் அல்லாஹ்வினால் நேர்வழி*

*அடைந்தோரும் உண்டு; கெடுவழி விதிக்கப்பட்டோரும் உண்டு. எனவே பூமியில் பயணம் செய்து (தூதர்களை) மறுத்தோரின் முடிவு என்னவாயிற்று என்பதைப் பாருங்கள்.*
*37(நபியே!) நீர் 'அவர்கள் நேர்வழி அடையவேண்டும்' என்று பேராார்வம் கொண்டிருந்தாலும் அல்லாஹ் யாரை வழிதவற விட்டுவிட்டானோ அவர்களுக்கு நேர்வழி காட்டமாட்டான். அவர்களுக்கு உதவுபவர்கள் யாருமில்லை.*

*38(நபியே!) "இறந்து போனவர்களை அல்லாஹ் (மீண்டும் உயிர் கொடுத்து) எழுப்பமாட்டான்" என்று அவர்கள் அல்லாஹ்வின் மீது உறுதியான சத்தியங்கள் செய்கின்றனர். அவ்வாறில்லை, இது அவன் தன்மீது கடமையாக்கிக் கொண்ட உண்மையான வாக்குறுதியாகும். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் (இதை) அறிந்துகொள்வதில்லை.*
*39அவர்கள் முரண்பட்டுக் கொண்டிருந்தவற்றில் உண்மை எதுவென அவர்களுக்குத் தெளிவுபடுத்துவதற்காகவும் மறுப்பாளர் "தாங்கள்தாம் பொய்யர்கள்" என்பதை அறிந்து கொள்வதற்காகவும் (இறந்தோரை மீண்டும் அவன் எழுப்புவான்).*
*40நாம் ஏதேனும் ஒன்றை (உருவாக்க) விரும்பினால் 'ஆகு' என்றுதான் கூறுவோம்; அது ஆகிவிடும்.*

*41(நம்பிக்கையாளர்களே! எதிரிகளால்) துன்புறுத்தப்பட்டு பின்னர் அல்லாஹ்வுக்காகப் புலம் பெயர்ந்தவர்களுக்கு இவ்வுலகில் நாம் நல்ல வாழிடத்தை வழங்குவோம். ஆயினும் மறுமையின் கூலி (இதைவிட) மிகப் பெரியது. (இதனை) அவர்கள் அறிந்துகொள்ள வேண்டுமே!*
*42அவர்கள் பொறுமையைக் கடைப்பிடித்துத் தங்கள் இறைவனையே முற்றிலும் சார்ந்திருப்பார்கள்.*

*43(நபியே!) உமக்கு முன்னரும் நாம் மனித இனத்தவரையே தூதர்களாக்கி அவர்களுக்கு (இறைச்செய்தி) அறிவித்தோம். ஆகவே இம்மக்களிடம் "நீங்கள் இதனை அறியாதவர்களாக இருந்தால் (முந்தைய வேதங்களைக்) கற்றறிந்தோரிடம்*

*கேட்டு அறிந்துகொள்ளுங்கள்" (என்று கூறுவீராக!) [44]நாம்
அவர்களைத் தெளிவான சான்றுகளுடனும் வேதங்களுடனும்
அனுப்பி இருந்தோம். (நபியே!) நாம் உமக்கு இந்தக்
குர்ஆனாகிய நினைவூட்டலை அருளியுள்ளோம். மக்களுக்காக
அருளப்பட்டதை நீர் அவர்களுக்குத் தெளிவுபடுத்துவதற்காகவும்
இதன்மூலம் அவர்கள் சிந்தித்துணர வேண்டும் என்பதற்காகவும்
(அருளினோம்.)*

*[45]தீய திட்டங்களைத் தீட்டிக் கொண்டிருப்போர் அல்லாஹ்
அவர்களைப் பூமியில் புதையச் செய்யமாட்டான் என்றோ
அவர்கள் அறியாத புறத்திலிருந்து வேதனை அவர்களை
வந்தடையாது என்றோ அச்சமற்று இருக்கின்றனரா? [46]அல்லது
அவர்கள் நடமாடிக் கொண்டிருக்கும்போதே பிடித்துக்
கொள்ளமாட்டான் என்றும் அச்சமற்றிருக்கிறார்களா? அவர்கள்
இறைவனிடமிருந்து தப்பிவிட முடியாது. [47]அல்லது அவர்களுக்கு
ஓர் அச்சத்தைக் கொடுத்து அந்த நிலையிலேயே அவர்களை
அவன் தண்டிக்கமாட்டான் (என்று நிம்மதியாக இருக்கிறார்களா?)
எனினும் உறுதியாக உங்கள் இறைவன் மிகுந்த பரிவுடையவன்;
நிகரற்ற அன்பாளன்.*

*[48]அல்லாஹ் படைத்துள்ள பொருள்களை அவர்கள்
கவனிக்கவில்லையா? அவற்றின் நிழல்கள் வலப்புறமும்,
இடப்புறமும் சாய்ந்து (மிகுந்த தாழ்மையுடன்) அல்லாஹ்வுக்குச்
தலைபணிகின்றன. [49]வானங்களிலும் பூமியிலுமுள்ள எல்லா
உயிரினங்களும் அல்லாஹ்வுக்கே தலைபணிகின்றன.
வானவர்களும் அல்லாஹ்வுக்கே தலைபணிகின்றனர். அவர்கள்
செருக்குக் கொள்வதில்லை. [50]அவர்கள் தமக்கு மேலேயுள்ள
இறைவனுக்கு அஞ்சித் தங்களுக்கு இடப்படும் கட்டளைக்கேற்பச்
செயல்படுகின்றனர்.*

*[51]"மனிதர்களே! (ஒன்றுக்குப் பதிலாக) இரு தெய்வங்களை
நீங்களே ஏற்படுத்திக் கொள்ளாதீர்கள். அவன் ஒரே*

*இறைவன்தான். எனவே நீங்கள் (ஒரே இறைவனான) எனக்கே அஞ்சுங்கள்" என்று அல்லாஹ் கூறுகிறான்.*
*[52]வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியவை. வழிபாடு என்றென்றும் அவனுக்கே உரியது. அல்லாஹ்வைத் தவிர மற்றவர்களுக்கா நீங்கள் அஞ்சுகிறீர்கள்?*

*[53]உங்களிடம் இருக்கும் அருட்கொடைகள் யாவும் அல்லாஹ்விடமிருந்தே வந்தவையாகும். உங்களுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டால் அவனிடமே நீங்கள் முறையிடுகிறீர்கள்.*
*[54]பின்னர் அத்துன்பத்தை உங்களிடமிருந்து அவன் அகற்றிவிட்டால் உங்களில் ஒரு சாரார் தம் இறைவனுக்கு இணைவைக்கின்றனர்.*
*[55]நாம் அவர்களுக்கு வழங்கியவற்றுக்காக நன்றிகாட்ட மறுக்கின்றனர். "எனவே (இவ்வுலகில்) சிறிதுகாலம் விரும்பியதை அனுபவித்துக் கொள்ளுங்கள்; (இதன் விளைவை) விரைவில் நீங்கள் அறிந்து கொள்வீர்கள்" என்று நபியே! நீர் கூறுவீராக.*
*[56]நாம் அவர்களுக்கு அளித்தவற்றிலிருந்து ஒரு பங்கைத் தாங்கள் அறிந்திராதவை(யான பொய்த் தெய்வங்)களுக்கு ஒதுக்குகிறார்கள். அல்லாஹ்வின்மீது சத்தியமாக நீங்கள் புனைந்து கொண்டிருந்தவற்றைப் பற்றி உறுதியாக விசாரிக்கப்படுவீர்கள்.*

*[57](நபியே!) அவர்கள் அல்லாஹ்வுக்குப் புதல்வியர் உண்டெனக் கற்பிக்கின்றனர். அவன் (அவர்களின் கற்பனையிலிருந்து) மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். ஆனால் அவர்கள் தமக்காக(ப் புதல்வர்களையே) விரும்புகிறார்கள்.*
*[58]அவர்களில் யாருக்காவது பெண் குழந்தை பிறந்த நற்செய்தி கூறப்பட்டால் அவனது முகம் கறுத்து விடுகிறது. துக்கத்தால் அவனது தொண்டை அடைத்துக் கொள்கிறது.*
*[59]அவனுக்குக் கூறப்பட்ட 'நற்செய்தி'யின் அவலத்தால் மக்களிடமிருந்து மறைந்து திரிகிறான். அவமானத்துடன் அதனை வைத்துக்கொள்வதா அல்லது மண்ணில் புதைத்து விடுவதா? என்று எண்ணுகிறான். அவர்கள் செய்யும் முடிவு எவ்வளவு கேடானது!*
*[60]தீய உதாரணங்களுக்கு உரியவர்கள் மறுமையின் மீது நம்பிக்கைகொள்ளாதவர்களே*

ஆவர். உயர்ந்த உதாரணங்கள் அல்லாஹ்வுக்கே உரியன. அவன் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.

61மனிதர்கள் இழைக்கும் அநீதியினால் அல்லாஹ் அவர்களை (உடனுக்குடன்) தண்டிப்பதாக இருந்தால் பூமியில் எந்த உயிரினத்தையும் விட்டு வைத்திருக்கமாட்டான். ஆயினும் அவன் ஒரு குறிப்பிட்ட தவணைவரை அவர்களுக்குக் காலநீட்டிப்பு அளிக்கிறான். அவர்களின் தவணை வந்துவிட்டால் அவர்கள் ஒரு நொடியும் பிந்தவும் மாட்டார்கள்; முந்தவும் மாட்டார்கள்.

62தாம் வெறுப்பதை (பெண் குழந்தை) அவர்கள் அல்லாஹ்வுக்குக் கற்பித்துக் கூறுகின்றனர். தங்களுக்கு நன்மையே விளையும் என்று அவர்களின் நாவுகள் பொய்யுரைக்கின்றன. உறுதியாக அவர்களுக்கு நரகம்தான். (அதில்) அவர்கள் முதலாவதாகக் கொண்டு சேர்க்கப்படுவர்.

63(நபியே!) அல்லாஹ்வின் மீது ஆணையாக! உமக்கு முன்னரும் நாம் பல்வேறு சமூகத்தினரிடம் தூதர்களை அனுப்பியுள்ளோம். ஆயினும் சாத்தான் அம்மக்களின் (தீய)செயல்களை அழகானவையாகக் காட்டினான். இன்று அவர்களின் நண்பனாக இருக்கிறான். இவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.
64(நபியே!) இவர்கள் கருத்து முரண்பாடு கொண்டவற்றில் இவர்களுக்கு நீர் தெளிவு தருவதற்காகத்தான் நாம் உமக்கு இவ்வேதத்தை அருளியுள்ளோம். நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு இது வழிகாட்டியாகவும் அருளாகவும் இருக்கிறது.

65அல்லாஹ்தான் வானத்திலிருந்து மழையைப் பொழியச் செய்து அதன் மூலம் இறந்த பூமியை உயிர்ப்பிக்கிறான். உறுதியாகச் செவி சாய்க்கும் மக்களுக்கு இதில் சான்று உள்ளது.

66கால்நடைகளிலும் உங்களுக்குப் படிப்பினை இருக்கிறது. நாம் அவற்றின் வயிறுகளிலுள்ள சாணத்திற்கும் இரத்தத்திற்கும் இடையிலிருந்து தூய இனிமையான பாலை உங்களுக்கு அருந்த

*அளிக்கிறோம். [67]பேரீச்சை மற்றும் திராட்சைப் பழங்களிலிருந்து நீங்கள் மதுவையும் நல்ல உணவுப் பொருள்களையும் தயாரிக்கிறீர்கள். உறுதியாகப் புரிந்துகொள்ளும் மக்களுக்கு இதில் ஒரு சான்று உள்ளது.*

*[68](நபியே!) உம்முடைய இறைவன் தேனீக்களுக்கு உள்ளுணர்வை உண்டாக்கினான். "மலைகளிலும் மரங்களிலும் மக்கள் கட்டும் மூங்கில் கொடிகளிலும் கூடுகளை அமைத்துக்கொள்! [69]பின்னர்*
*எல்லாவகையான கனி(களின் மலர்)களிலிருந்தும் சாற்றை உறிஞ்சிக் கொள்! உன் இறைவன் அமைத்துத் தந்த எளிதான பாதைகளில் செல்!" (என்பதே அவ்வுள்ளுணர்வாகும்). அதன் வயிற்றிலிருந்து பல்வேறு நிறங்களுடைய பானம் வெளிப்படுகிறது. அதில் மக்களுக்கு நோய் நிவாரணமுள்ளது. உறுதியாக இதில் சிந்திக்கக்கூடிய மக்களுக்குச் சான்று இருக்கிறது.*

*[70](மனிதர்களே!) உங்களை அல்லாஹ்வே படைத்தான். பின்னர் அவன்தான் உங்களை இறக்கச் செய்கிறான். அறிவைப் பெற்றிருந்தும் எதையும் அறியாதவராக ஆகிவிடக்கூடிய முதுமைவரை தள்ளப்படுபவரும் உங்களில் உண்டு. உறுதியாக அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; பேராற்றல் உடையவன்.*

*[71]அல்லாஹ்வே உங்களில் சிலரைவிடச் சிலரைச் செல்வத்தில் சிறப்பித்துள்ளான். சிறப்பிக்கப்பட்டவர்கள் தம் செல்வத்தைத் தம் அடிமைகளுக்கு வழங்கி அவர்களும் அதில் சமமாவதை விரும்புவதில்லை. அல்லாஹ்வின் அருட்கொடையை அவர்கள் மறுக்கிறார்களா?*

*[72]உங்களுக்காக உங்களிலிருந்தே அல்லாஹ் உங்களுக்கு மனைவியரைப் படைத்துள்ளான். உங்கள் மனைவியரிலிருந்து குழந்தைகளையும் பேரக் குழந்தைகளையும் படைத்துள்ளான். நல்லவற்றிலிருந்து உங்களுக்கு உணவும் வழங்கியுள்ளான். இவ்வாறிருந்தும் அவர்கள் பொய்யானவற்றின் மீது நம்பிக்கைகொண்டு அல்லாஹ்வின் அருட்கொடைகளுக்கு நன்றி*

*மறக்கிறார்களா?* [73]*அல்லாஹ்வை விடுத்து அவர்கள் வணங்குபவை வானங்களிலிருந்தோ பூமியிலிருந்தோ அவர்களுக்குச் சிறிதும் உணவளிக்கும் அதிகாரமோ ஆற்றலோ அற்றவை.* [74]*எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு (அவற்றை) உவமைகளாக்காதீர்கள். அல்லாஹ்வே நன்கறிவான்; நீங்கள் அறியமாட்டீர்கள்.*

[75]*அல்லாஹ் ஒரு எடுத்துக்காட்டுக் கூறுகிறான்: ஒருவர் எதையும் (சுதந்திரமாகச்) செய்ய முடியாத பிறருக்கு உடைமையான அடிமையாக இருக்கிறார். மற்றொருவருக்கு நாம் நல்ல செல்வத்தை வழங்கியுள்ளோம். அவர் அதிலிருந்து மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் (அறச்)செலவு செய்துவருகிறார். இவ்விருவரும் சமமாவார்களா? அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே! ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை.*

[76]*அல்லாஹ் இன்னும் ஓர் எடுத்துக்காட்டையும் கூறுகிறான்: இரு மனிதர்கள் இருக்கிறார்கள். ஒருவன் எதையும் செய்ய இயலாத ஊமையாக, தன் உரிமையாளனுக்குச் சுமையாக இருக்கிறான். உரிமையாளன் அவனை எங்கே அனுப்பினாலும் அவன் எச்செயலையும் ஒழுங்காகச் செய்வதில்லை. மற்றொருவர் நீதியை ஏவி நேர்வழியின் மீது நிலைத்திருக்கிறார். இருவரும் சமமாவார்களா?*

[77]*வானங்களிலும் பூமியிலுமுள்ள மறைவான விஷயங்கள் குறித்த அறிவு அல்லாஹ்வுக்கே உரியவையாகும். மறுமை நாளின் நிகழ்வு கண் இமைப்பொழுது அல்லது அதைவிடவும் விரைவானது. உறுதியாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.*

[78]*அல்லாஹ்தான் நீங்கள் எதையும் அறியாதவர்களாக இருந்த நிலையில் உங்கள் அன்னையரின் வயிற்றிலிருந்து உங்களை வெளிப்படுத்தினான். (மேலும்) நீங்கள் நன்றி செலுத்தும்பொருட்டு உங்களுக்குக் கேள்விப்புலனையும் பார்வைப்புலனையும் உள்ளங்களையும் உருவாக்கினான்.*

[79]வான்வெளியில் கட்டுப்படுத்தப்பட்டு(ப் பறந்து) செல்லும் பறவைகளை மக்கள் பார்க்கவில்லையா? அல்லாஹ்தான் அவற்றை விழாமல் தாங்குகிறான். நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு இதில் பல்வேறு சான்றுகள் உள்ளன. [80]அல்லாஹ் உங்கள் வீடுகளை உங்களுக்கு அமைதியளிக்கக்கூடிய இடமாக ஆக்கியுள்ளான். கால்நடைகளின் தோல்களைக் கூடாரங்களாக நீங்கள் ஆக்கிக் கொள்ளும்படி படைத்துள்ளான். பயணத்தின்போதும் நீங்கள் ஊரில் தங்கியிருக்கும்போதும் எளிதாகக் கையாளும்படி அவற்றை அவன் படைத்துள்ளான். செம்மறியாடு, ஒட்டகம், வெள்ளாடு ஆகியவற்றின் உரோமங்களிலிருந்து வீட்டு அழகுப் பொருள்களும் பயனுள்ள பொருள்களும் (ஆகிக்)குறிப்பிட்ட காலம்வரை உங்களுக்குப் பயன்படும்படி படைத்துள்ளான்.

[81]தான் படைத்தவற்றிலிருந்து உங்களுக்காக நிழல்களையும் ஏற்படுத்தியுள்ளான். மலைகளில் தங்குமிடங்களை ஆக்கியுள்ளான். வெப்பத்திலிருந்து உங்களைக் காக்கக்கூடிய ஆடைகளையும் போரில் உங்களைக் காக்கக்கூடிய (கவச) ஆடைகளையும் அவன் உங்களுக்கு ஏற்படுத்தியுள்ளான். இவ்வாறு நீங்கள் கீழ்ப்படிந்து வாழும்பொருட்டுத் தன் அருட்கொடைகளை உங்களுக்கு நிறைவுபடுத்துகிறான்.

[82]எனவே (நபியே! இனியும்) அவர்கள் புறக்கணித்தால் (புறக்கணிக்கட்டும்) தெளிவாக எடுத்துரைப்பதுதான் உமக்குக் கடமையாகும். [83]அவர்கள் இறைவனின் அருட்கொடைகளை அறிந்துகொண்ட பின்னரும் அதனை மறுக்கின்றனர். அவர்களில் பெரும்பாலோர் நன்றி கெட்டவர்களாகத்தான் இருக்கின்றனர்.

[84]ஒவ்வொரு சமூகத்திலிருந்தும் ஒரு சாட்சியை நாம் எழுப்பும் (நாளை, நபியே! அவர்களுக்கு நினைவூட்டுவீராக! அந்)நாளில் மறுப்பாளர்கள் எதுவும் பேச அனுமதிக்கப்படமாட்டார்கள். இறைவனிடமிருந்து நன்மை எதுவும் கோரவும் இடம் கொடுக்கப்படமாட்டார்கள். [85]தீவினையாளர்கள் வேதனையைக்

*காணும்போது அவர்களுக்கு அது தளர்த்தப்படமாட்டாது. அவர்களுக்குக் காலநீட்டிப்பும் அளிக்கப்படமாட்டாது.*

[86]*இணைவைப்பாளர்கள் தங்கள் இணைத்தெய்வங்களைக்*
*காணும்போது "எங்கள் இறைவனே! உன்னை விடுத்து நாங்கள்*
*இறைஞ்சி அழைத்துக்கொண்டிருந்த இணைத்தெய்வங்கள்*
*இவைதாம்" என்று கூறுவர். அப்போது அவை "நீங்கள்தாம்*
*பொய்யர்கள் (நாங்கள் தெய்வங்கள் அல்ல)" என்று கூறி*
*அவர்கள் மீதே பழிபோட்டுவிடும்.* [87]*அன்றைய நாளில் அவர்கள்*
*அல்லாஹ்வுக்கு முற்றிலும் சரணடைந்துவிடுவர். அவர்கள்*
*கற்பனையாக உருவாக்கியவை யாவும் அவர்களிடமிருந்து*
*மறைந்துவிடும்.* [88]*எவர் (எம்மை) மறுத்து இறைவழியிலிருந்து*
*மக்களைத் தடுத்துக் கொண்டிருந்தனரோ அவர்களுக்கும்*
*அவர்கள் செய்து கொண்டிருந்த குழப்பங்கள் காரணமாக நாம்*
*வேதனைக்கு மேல் வேதனையை மிகுதிப்படுத்துவோம்.*

[89]*(நபியே!) ஒவ்வொரு சமூகத்தினருக்கும் அவர்களிலிருந்தே (வந்த ஒரு தூதரை) அவர்களுக்கெதிரான சாட்சியாக எழுப்பும்நாளில் உம்மை இவர்களின் மீது சாட்சியாகக் கொண்டுவருவோம். யாவற்றையும் தெளிவுபடுத்தக்கூடிய வேதத்தை நாம் உமக்கு அருளியுள்ளோம். இது (அனைவருக்கும்) நல்வழிகாட்டியாகவும் அருளாகவும் முற்றிலும் கீழ்ப்படிந்து நடப்பவர்களுக்கு நற்செய்தியாகவும் இருக்கிறது.*

[90]*(நம்பிக்கையாளர்களே!) உறுதியாக அல்லாஹ் நீதி செலுத்துமாறும் நன்மை செய்யுமாறும் உறவினர்களுக்கு உதவி புரியுமாறும் கட்டளையிட்டுள்ளான். மானக்கேடான செயல்கள், பாவங்கள், வரம்பு மீறுதல் ஆகியவற்றுக்குத் தடை விதிக்கிறான். நீங்கள் படிப்பினை பெறும்பொருட்டு உங்களுக்கு அறிவுரை வழங்குகிறான்.*

[91]*நீங்கள் உங்களுக்குள் அல்லாஹ்வின் (பெயரால் செய்த அந்த) உடன்படிக்கை செய்துகொண்டால் உடன்படிக்கையை*

நிறைவேற்றுங்கள். சத்தியங்களை உறுதிப்படுத்தியபின் முறித்து விடாதீர்கள். நீங்கள் அல்லாஹ்வை உங்களுக்குப் பொறுப்பாளனாக ஆக்கியுள்ளீர்கள். உறுதியாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிகிறான். [92]தானே முயன்று முறுக்கேற நூற்ற நூலைத் துண்டு துண்டாக்கிவிட்ட பெண்ணைப் போன்று (உடன்படிக்கையை உறுதி செய்தபின் அதை முறிப்பவராக) ஆகிவிடாதீர்கள். ஒரு சமூகம் மற்றொரு சமூகத்தைவிடப் பெருகிவிட வேண்டும் என்பதற்காக மட்டுமே உங்கள் சத்தியங்களை ஒருவரையொருவர் ஏமாற்றுவதற்கான காரணமாக்கிக் கொள்ளாதீர்கள். இதன்மூலம் அல்லாஹ் உங்களைச் சோதிக்கிறான். நீங்கள் முரண்பட்டுக் கொண்டிருந்த விஷயங்களைக் குறித்து மறுமைநாளில் அவன் உங்களுக்குத் தெளிவுபடுத்தி விடுவான்.

[93]அல்லாஹ் விரும்பியிருந்தால் உங்கள் அனைவரையும் ஒரே சமூகத்தினராக ஆக்கியிருப்பான். ஆயினும் தான் விரும்பியோரை அவன் வழிதவற விட்டுவிடுகிறான்; தான் விரும்பியோருக்கு நேர்வழி காட்டுகிறான். உங்கள் செயல்களைக் குறித்து உறுதியாக நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள்.

[94]உங்கள் சத்தியங்களை ஒருவரையொருவர் ஏமாற்றுவதற்குக் காரணமாக்கிக் கொள்ளாதீர்கள். (அவ்வாறு செய்தால் நிலத்தில்) உறுதியாகப் பதிந்த உங்கள் பாதம் பின்னர்ச் சறுக்கிவிடும்; நீங்கள் இறைவழியிலிருந்து மக்களைத் தடுத்ததால் தண்டனையை அனுபவிப்பீர்கள். உங்களுக்குக் கடுமையான வேதனையும் உண்டு.
[95]அல்லாஹ்வுடன் செய்த வாக்குறுதியை அற்ப ஊதியத்திற்கு விற்று விடாதீர்கள். நீங்கள் அறிவுடையோராக இருப்பின் அல்லாஹ்விடம் உள்ளவையே உங்களுக்குச் சிறந்தவையாகும்.

[96]உங்களிடம் உள்ளவை யாவும் தீர்ந்துவிடும். அல்லாஹ்விடம் உள்ளவை (என்றென்றும்) நிலைத்திருக்கும். பொறுமையாளர்களுக்கு அவர்கள் செய்து கொண்டிருந்த நற்செயல்களுக்கான கூலியை உறுதியாக நாம் வழங்கிவிடுவோம். [97]ஆணாயினும் பெண்ணாயினும் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிபவராக

*இருந்தால் நாம் அவரை (இம்மையில்) நல்வாழ்வு வாழச் செய்வோம். அவர்கள் செய்துகொண்டிருந்த நற்செயல்களுக்கான கூலியை மறுமையில் உறுதியாக நாம் வழங்கிவிடுவோம்.*

[98]*(நபியே!) நீர் குர்ஆனை ஓதுவீராயின் அல்லாஹ்விடம் விரட்டப்பட்ட சாத்தானிடமிருந்து பாதுகாப்புக் கோருவீராக!*
[99]*நம்பிக்கைகொண்டு தம் இறைவனையே சார்ந்திருப்பவர்களிடம்*
*அவனது அதிகாரம் செல்லுபடியாகாது.* [100]*யாரெல்லாம் அவனுடன்*
*தோழமைகொண்டு அல்லாஹ்வுக்கு இணைவைக்கிறார்களோ அவர்களிடம்தான் அவனது அதிகாரம் செல்லுபடியாகும்.*

[101]*நாம் ஒரு வசனத்தை மற்றொரு வசனத்தைக் கொண்டு மாற்றினால் அவர்கள் உம்மை நோக்கி "நீர் புனைந்துரைப்பவரே" என்கின்றனர். ஆனால் எதை அருள்வது என்பதை அல்லாஹ் நன்கறிவான். மாறாக அவர்களில் பெரும்பாலோர்*
*அறியமாட்டார்கள்.* [102]*(நபியே!) நீர் கூறுவீராக! "உண்மை*
*அடங்கிய (வேதமாகிய) இதனைப் பரிசுத்த ஆன்மா (கேப்ரியேல்) உமது இறைவனிடமிருந்து சத்தியத்துடன் இறக்கியுள்ளார்". அது நம்பிக்கையாளர்களை உறுதிப்படுத்திட வேண்டும்; கீழ்ப்படிந்து வாழும் மக்களுக்கு வழிகாட்டியாகவும் நற்செய்தியாகவும் அமையவேண்டும் என்பதற்காகத்தான்.*

[103]*(நபியே!) "ஒரு மனிதர்தான் இவருக்கு இ(வ்வேதத்)தைக் கற்றுக் கொடுக்கிறார்" என்று அவர்கள் கூறுவதை நாம் அறிவோம். ஆனால் அவர்கள் குறிப்பிடும் மனிதரின் மொழி வேற்று மொழியாகும். இதுவோ தெளிவான அரபி மொழியாகும்.*
[104]*அல்லாஹ்வின் வசனங்களை நம்பாதவர்களுக்கு அல்லாஹ்*
*ஒருபோதும் நேர்வழி காட்டமாட்டான். அவர்களுக்குத்*
*துன்புறுத்தும் வேதனையுண்டு.* [105]*அல்லாஹ்வின் வசனங்களை*
*நம்பாதவர்கள்தாம் பொய்யைப் புனைபவர்கள். அவர்கள்தாம் பொய்யர்கள் (நீர் அல்லர்).*

[106]எவரேனும் அல்லாஹ்வின் மீது நம்பிக்கைகொண்ட பின்னர், அவரது உள்ளம் நம்பிக்கையைக்கொண்டு நிறைவுடனிருக்கும் நிலையில் கட்டாயத்திற்குள்ளாகி அவனை மறுத்தாரானால் அவர்மீது எந்தக் குற்றமுமில்லை. ஆயினும் எவர் முழு மனதோடு இறைமறுப்பை ஏற்றுக் கொள்கிறாரோ அவர்மீது இறைச்சினம் உண்டாகும். இத்தகையவர்களுக்குக் கடுமையான வேதனையும் உண்டு.
[107]ஏனெனில் அவர்கள் மறுமையை விட இவ்வுலக வாழ்வையே விரும்பினர். உறுதியாகத் தன்னை மறுக்கும் மக்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டமாட்டான்.
[108]அவர்களுடைய உள்ளங்களின் மீதும் கேள்விப் புலன்களின் மீதும் பார்வைப் புலன்களின் மீதும் அல்லாஹ் முத்திரையிட்டு விட்டான். அவர்கள்தாம் அலட்சியமாக இருப்பவர்கள்.
[109]உறுதியாக அவர்கள்தாம் மறுமையில் இழப்பிற்கு ஆளாகக்கூடியவர்கள்.

[110](நபியே!) யாரெல்லாம் துன்புறுத்தப்பட்டுப் புலம்பெயர்ந்து இறைவழியில் கடுமையாகப் பாடுபட்டுப் பொறுமையாக இருந்தனரோ அவர்களுக்கு உறுதியாக உமது இறைவன் (ஆதரவாக) இருக்கிறான். உமது இறைவன் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.
[111]ஒவ்வொரு மனிதனும் தனக்காக மட்டுமே வாதிட வரும் (மறுமை நாளை நபியே! நீர் அவர்களுக்கு நினைவூட்டுவீராக! மறுமையாகிய) அந்நாளில் ஒவ்வொருவருக்கும் அவரவர் செய்தவற்றுக்கான கூலி முழுமையாக வழங்கப்படும். அவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள்.

[112]அல்லாஹ் ஓர் ஊர் மக்களை எடுத்துக்காட்டாகக் கூறுகிறான். அவர்கள் அமைதியாகவும் நிம்மதியாகவும் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கான வாழ்வாதாரப் பொருள்கள் அனைத்து இடங்களிலிருந்தும் தாராளமாகக் கிடைத்துக் கொண்டிருந்தன. ஆனால் அவர்கள் அல்லாஹ்வின் அருட்கொடைகளுக்கு நன்றி கெட்டவிதத்தில் நடந்துகொண்டனர். ஆகவே அவர்களுடைய (தீய)செயல்களினால் அல்லாஹ் பசியையும் அச்சத்தையும் அவர்கள் அனுபவிக்கும்படிச் செய்தான்.
[113]அவர்களிலிருந்தே

ஒரு தூதர் அவர்களிடம் வந்தார். ஆனால் அவர்கள் அவரை ஏற்க மறுத்துப் பொய்யர் எனக் கூறிவிட்டனர். எனவே அவர்கள் தீவினையாளர்களாக இருக்கும் நிலையிலேயே வேதனை அவர்களைப் பிடித்துக்கொண்டது.

114எனவே (நம்பிக்கையாளர்களே!) அல்லாஹ் வழங்கியுள்ள தூய்மையான அனுமதிக்கப்பட்ட உணவுகளை உண்ணுங்கள். நீங்கள் அல்லாஹ்வையே வணங்குபவர்களாக இருந்தால் அவனுடைய அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துங்கள்.
115தானாகச் செத்தது, இரத்தம், பன்றியின் இறைச்சி மற்றும் அல்லாஹ் அல்லாதவற்றின் பெயர்கூறிப் பலியிடப்பட்டவை ஆகியவற்றைத்தான் அவன் உங்களுக்குத் தடை செய்துள்ளான். விரும்பாமலும் (அடிப்படைத் தேவை) வரம்பை மீறாமலும் யாரேனும் கட்டாயப்படுத்தப்பட்டு (இவற்றை) உண்டுவிட்டால் அவர்களுக்கு உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் அளவற்ற அருளாளனாகவும் உள்ளான்.

116உங்கள் நாவுகளால் இட்டுக்கட்டப்பட்ட பொய்யின் அடிப்படையில் 'இது அனுமதிக்கப்பட்டது', 'இது தடுக்கப்பட்டது' என்று அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனையாதீர்கள். அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைவோர் ஒருபோதும் வெற்றி பெறமாட்டார்கள்.
117இத்தகையோர் இவ்வுலகில் அனுபவிப்பது அற்பமான இன்பமே. (மறுமையில்) அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.

118(நபியே!) முன்னர் நாம் உமக்கு எடுத்துக் கூறியவற்றை யூதர்களுக்குத் தடை செய்திருந்தோம். நாம் அவர்களுக்கு அநீதி இழைக்கவில்லை. மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டனர்.

119(நபியே!) யாரெல்லாம் தங்கள் அறியாமையால் பாவங்கள் புரிந்துவிட்டு, அறிந்தபின்னர் மன்னிப்புக் கோரித் தம்மைச் சீர்படுத்திக் கொண்டார்களோ அவர்களுக்கு உமது

இறைவன் (ஆதரவாக) இருக்கிறான். உறுதியாக அவன் பெரும்
மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.

120 உறுதியாக ஆப்ரஹாம் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்தவராக,
அவனிடமே முழுநம்பிக்கை கொண்டவராக ஒரு தனித்த
சமூகமாக விளங்கினார். அவர் இணைவைப்பவராக
இருக்கவில்லை. 121 அவனுடைய அருட்கொடைகளுக்கு நன்றி
செலுத்துபவராக இருந்தார். அவன் அவரைத் தேர்ந்தெடுத்து
நேர்வழியையும் காட்டினான். 122 இவ்வுலகில் நாம் அவருக்கு
நன்மையை வழங்கினோம். மறுமையிலும் அவர் நல்லோர்களில்
ஒருவராகவே இருப்பார். 123 (ஆகவே நபியே!) உண்மை வழியில்
நின்ற ஆப்ரஹாமின் மார்க்கத்தைப் பின்பற்றுமாறு நாம் உமக்கு(த்
தூதுச் செய்தி) அறிவித்தோம். அவர் இணைவைப்பவராக
இருக்கவில்லை.

124 சனிக்கிழமை (வழிபாட்டு) நாள் ஆக்கப்பட்டது, அது
தொடர்பாகக் கருத்து வேறுபாடு கொண்டவர்களால்தான்.
(நபியே!) உறுதியாக உம் இறைவன் மறுமைநாளில் அவர்கள்
கருத்து வேறுபாடு கொண்டிருந்தவற்றில் அவர்களிடையே
தீர்ப்பளிப்பான்.

125 விவேகத்துடனும் அழகிய அறிவுரையுடனும் உம்
இறைவனின் பாதையின்பால் (மக்களை) அழைப்பீராக!
அவர்களுடன் அழகிய முறையில் வாதம் புரிவீராக! உறுதியாக
உம் இறைவன் தன் பாதையிலிருந்து விலகி விட்டவர்களையும்
நேர்வழியில் செல்பவர்களையும் நன்கறிவான்.

126 (நம்பிக்கையாளர்களே! உங்களைத் துன்புறுத்தியவர்களைப்)
பழிவாங்குவதாயின் நீங்கள் துன்புறுத்தப்பட்ட அளவுக்கே
பழிவாங்குங்கள். ஆயினும் பொறுமையைக் கடைப்பிடித்தால்
அதுவே பொறுமையாளர்களுக்கு மிகச் சிறந்ததாகும். 127 (நபியே!)
நீர் பொறுமையைக் கடைப்பிடிப்பீராக! உமது பொறுமை இறை
உதவியால்தான் கிடைக்கிறது. அவர்களுக்காக நீர் கவலைப்பட
வேண்டாம். அவர்கள் தீட்டும் திட்டங்களினால் நீர் (மன)

*நெருக்கடிக்குள்ளாகிவிட வேண்டாம். 128உறுதியாக, தன்னை*
*அஞ்சி நடப்போருடனும் நற்செயல் புரிவோருடனும் அல்லாஹ்*
*இருக்கிறான்.*

# 17. இஸ்ராயீலின் மக்கள் (பனீ இஸ்ராயீல்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*1தன் அடியாரை (முஹம்மதை மக்காவின் கஅபா)*
*இறையில்லத்திலிருந்து மிகு தொலைவில் இருக்கும்*
*(ஜெருசலத்தின்) இறையில்லம் வரை ஓர் இரவில் அழைத்துச்*
*சென்றவன் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். நாம்*
*அதன் சுற்றுப்புறங்களைப் பேறு பெற்றவையாக ஆக்கியுள்ளோம்.*
*எம் சான்றுகளை அவருக்குக் காட்டுவதற்காகவே (அழைத்துச்*
*சென்றோம்) உறுதியாக அவன் அனைத்தையும் செவியுறுபவன்;*
*உற்றுநோக்குபவன். 2நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம்.*
*அதனை இஸ்ராயீலின் மக்களுக்கு வழிகாட்டியாக ஆக்கி*
*“என்னைத் தவிர வேறு யாரையும் உங்களுக்குப் பொறுப்பாளராக*
*ஆக்கிக்கொள்ளக்கூடாது” என்று கட்டளையிட்டோம். 3நீங்கள்*
*நோவாவுடன் நாம் (கப்பலில்) சுமந்து சென்ற மக்களின்*
*வழித்தோன்றல்களே. உறுதியாக அவர் நன்றியுள்ள அடியாராக*
*இருந்தார்.*

*4இஸ்ராயீலின் மக்களுக்கு நாம், “நீங்கள் (சிரியா) நாட்டில்*
*இருமுறை குழப்பம் செய்வீர்கள். பெரும் அட்டூழியம் புரிவீர்கள்”*
*என்று வேதத்தில் எச்சரித்திருந்தோம். 5அவ்விரண்டில் முதலாவது*
*வாக்கு நிறைவேறும் நேரம் வந்தபோது நாம் உங்களுக்கெதிராக*
*மிகவும் பலம்வாய்ந்த எமது அடியார்களை அனுப்பினோம்.*
*அவர்கள் (உங்களுடைய) வீடுகளுக்குள் புகுந்(து அழிவுகள்*
*செய்)தனர். முதல் வாக்கு (இவ்வாறு) நிறைவேறி விட்டது.*
*6பின்னர் அவர்களுக்கெதிராக உங்களுக்கு நாம் வெற்றியளித்துச்*
*செல்வங்களாலும் புதல்வர்களாலும் உங்களுக்கு உதவிபுரிந்து*
*உங்களைப் பெரும் கூட்டத்தினராக்கினோம்.*

*[7]"நீங்கள் நன்மைசெய்தால் அது உங்களுக்குத்தான் நல்லது. நீங்கள் தீமைசெய்தால் அது உங்களுக்கே கேடாக அமையும் (என அறிவித்தோம்) பின்னர் இரண்டாவது வாக்கு (நிறைவேறும் நேரம்) வந்தபோது உங்கள் முகங்களைக் கோரப்படுத்தி விடவும், முன்பு நுழைந்தது போலவே (ஜெருசலேத்திலுள்ள) பள்ளிவாசலில் நுழைந்து தங்கள் கைகளுக்குக் கிடைத்த எல்லாவற்றையும் அழித்துவிடவும் மேற்கொண்டு எமது அடியார்களை அனுப்பினோம். [8]இனியும் இறைவன் உங்கள்மீது அருள்புரியக்கூடும். ஆனால் நீங்கள் மீண்டும் அதையே செய்தீர்களானால் நாமும் உங்களுக்கு அதையே செய்வோம். (ஓரிறை)மறுப்பாளர்களுக்கு நாம் நரகத்தைச் சிறைச்சாலையாக ஆக்கியுள்ளோம்.*

*[9]உறுதியாக இந்தக் குர்ஆன் மிகவும் நேர்வழியைக் காட்டுகிறது. நற்செயல்புரியும் நம்பிக்கையாளர்களுக்குப் பெரும்கூலி உண்டென நற்செய்தியும் கூறுகிறது. [10]மறுமையை நம்பாதோருக்கு நாம் துன்புறுத்தும் வேதனையைத் தயார் செய்து வைத்துள்ளோம் (என்றும் இது எச்சரிக்கின்றது.)*

*[11]நன்மையை வேண்டி இறைஞ்சுவதுபோல மனிதன் (அறியாமையால்) தீமையை வேண்டியும் இறைஞ்சுகிறான்; மனிதன் மிகவும் அவசரக்காரனாக இருக்கிறான்.* [12]நாம் இரவையும் பகலையும் இரு சான்றுகளாக்கியுள்ளோம். (ஒளியற்ற) இரவெனும்*

---

***மரணத்திற்குப் பிந்தைய மறுமை வாழ்க்கைப் பயணத்திற்கான நேரான வழியை மனிதன் தேர்ந்தெடுக்கும் வகையில் இவ்வுலக வாழ்வில் உடனடியாகக் கிடைக்கக் கூடிய அற்ப வசதிகளைப் பெறுவதற்காகப் பேராசையுடன் செயல்படாமல் அவன் பொறுமையாக இருக்க வேண்டும் என இறைவன் விரும்புகிறான். ஆனால் மனிதனோ, நிலையற்ற அற்பமான இந்த உலகியல் வசதிகளைப்பெற அவசரகதியில் செயல்படுகிறான். ஆனால் அதுவோ அவனது முன்னேற்றத்திற்கான பயணத்திற்கு மாபெரும் தடையாக இருக்கிறது. உடனடியான பயன்களைப் பெறத் துடிக்கும் மனிதனின் இச்சை மறுமை வாழ்க்கையின் பெரும் வெகுமதிகளைப் பெறுவதிலிருந்து அவனைத் தூரமாக்குகிறது.***

*சான்றை நீக்கிப் பகலெனும் சான்றை ஒளிரச் செய்துள்ளோம். அது நீங்கள் (பகலில் பல இடங்களுக்கும் சென்று) உங்கள் இறைவனின் அருளைத் தேடிக் கொள்வதற்காகவும் ஆண்டுகளின் எண்ணிக்கையையும் (மாதங்களின்) கணக்கையும் அறிந்து கொள்வதற்காகவும்தான். நாம் ஒவ்வொன்றையும் தெளிவாக விவரித்து விட்டோம்.*

*[13]ஒவ்வொரு மனிதனின் விதியையும் நாம் அவனது கழுத்தில் மாட்டியுள்ளோம். மறுமைநாளன்று நாம் (அவனது செயல்கள் அடங்கிய) ஒரு புத்தகத்தை வெளிப்படுத்துவோம். அது விரித்து வைக்கப்பட்டிருப்பதை அவன் காண்பான். [14]“உன் புத்தகத்தைப் படித்துப் பார். இன்றைய நாளில் உன் கணக்கைப் பார்க்க நீயே போதுமானவன்” (என்று கூறப்படும்) [15]நேர்வழியில் செல்பவர் தமது நன்மைக்காகவே நேர்வழியில் செல்கிறார்; வழிதவறிச் செல்பவர் தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொள்கிறார். தன் (பாவச்)சுமையைச் சுமந்து கொண்டிருக்கும் எவரும் மற்றவரின் (பாவச்)சுமையைச் சுமக்கமாட்டார். நாம் (அச்சமூட்டி எச்சரிக்கை செய்கின்ற) ஒருதூதரை அனுப்பாதவரை ஒருபோதும் (மக்களைத்) தண்டிப்பதில்லை.*

*[16]நாம் (அவ்வூராரின் தீச்செயல்கள் காரணமாக) ஓர் ஊரை அழிக்க விரும்பினால் அங்கு ஆடம்பரமாக வாழ்பவர்களுக்குக் கட்டளையிடுவோம். ஆனால் (அக்கட்டளைக்கு) அவர்கள் எதிராகச் செயல்படுவர். அப்போது அவர்களின்மீது வாக்கு உறுதியாகிவிடும். எனவே அவ்வூரை நாம் அடியோடு அழித்து விடுவோம். [17]நோவாவுக்குப் பின்னர் (வாழ்ந்த) எத்தனையோ சமூகத்தினரை நாம் அழித்துள்ளோம். தன் அடியார்களின் பாவங்களை அறிந்துகொள்வதற்கும் பார்ப்பதற்கும் (நபியே!) உமது இறைவனே போதுமானவன்.*

*[18]எவர் விரைவில் கிடைக்கக்கூடியவற்றை (இவ்வுலகப் பயன்களை) விரும்புகிறாரோ அவருக்கு நாம் கொடுக்க*

*விரும்பியதை, நாம் விரும்புவோருக்கு (விரைவில் இங்கேயே)
கொடுத்து விடுவோம். (மறுமையில்) அவருக்காக நரகத்தை
ஏற்படுத்தியுள்ளோம். இழிவுக்குள்ளாகி இறையருளுக்குத்
தொலைவானவராக அவர் அதில் நுழைவார். [19]எவர் நம்பிக்கை
கொண்டவராக இருந்து மறுமையை விரும்பி அதற்குரிய கடும்
முயற்சி செய்கிறாரோ அத்தகையவரின் முயற்சி ஏற்கப்படும்.*

*[20] (நபியே!) நாம் (இம்மையை விரும்பும்) அவர்களுக்கும்
(மறுமையை விரும்பும்) இவர்களுக்கும் ஆக ஒவ்வொருவருக்கும்
உம் இறைவனின் கொடையிலிருந்து (இவ்வுலகில்) கொடுத்து
வருகிறோம். உம் இறைவனின் கொடை (இவ்விருவரில்) எவருக்கும்
தடை செய்யப்பட்டதன்று. [21]நாம் அவர்களில் சிலரைவிட வேறு
சிலரை (இவ்வுலகில்) எவ்வாறு சிறப்பித்துள்ளோம் என்பதை
(நபியே! நீர்) பார்ப்பீராக! மறுமையே மிகப் பெரும் தகுதிகளையும்
சிறப்புகளையும் கொண்டதாகும்.*

*[22]எனவே நீர் அல்லாஹ்வுடன் வேறொருவரை இறைவனாகக்
கற்பித்து விடாதீர். அவ்வாறுசெய்தால் நிந்திக்கப்பட்டு
இழிவடைந்து உதவியற்றவராகி விடுவீர். [23]உம் இறைவன்
கட்டளையிட்டுள்ளான்: நீங்கள் அவனைத்தவிர வேறு
யாரையும் வணங்கக்கூடாது. தாய் தந்தையருடன் நல்லமுறையில்
நடந்துகொள்ள வேண்டும். அவர்களில் ஒருவரோ அல்லது
இருவருமோ உங்களிடம் (இருக்கும் நிலையில்) முதுமையை
அடைந்துவிட்டால் 'சீ' என்று சலித்துக் கொள்ளவோ
அவர்களைக் கடிந்து கொள்ளவோ வேண்டாம். அவர்களிடம்
கண்ணியமாகப் பேசுங்கள். [24]அவர்களுக்கு முன்னால்
பரிவுடன் பணிவென்னும் சிறகைத் தாழ்த்துங்கள். "இறைவா!
சிறு பருவத்தில் அவர்கள் என்னைப் பராமரித்ததைப் போல
நீ அவ்விருவரின் மீதும் அருள்புரிவாயாக!" என்று இறைஞ்சி
வேண்டுங்கள். [25]உங்கள் உள்ளங்களில் உள்ளவற்றை உங்கள்
இறைவன்தான் நன்கறிவான். நீங்கள் நல்லவர்களாக இருந்தால்*

(உங்களில்) பாவமன்னிப்புக் கோருபவர்களை அவன் மன்னித்து விடுபவனாகவே இருக்கிறான்.

[26]உறவினர்களுக்கும் ஏழைகளுக்கும் வழிப்போக்கர்களுக்கும் அவரவரின் உரிமையை வழங்குங்கள். ஆனால் வீண்செலவு
செய்ய வேண்டாம். [27]உறுதியாக வீண்செலவு செய்பவர்கள்
சாத்தானின் சகோதரர்களாவர். சாத்தானோ தன் இறைவனுக்கு
நன்றி செலுத்தாதவன். [28](உங்களிடம் பொருள் இல்லாமல்)
நீங்கள் இறைவனின் அருளை எதிர்பார்த்து காத்திருக்கும் நேரத்தில் (எதுவும் கொடுக்க இயலாமல்) அவர்களை நீங்கள் தவிர்க்க நேர்ந்தால் மென்மையாகப் பேசுங்கள்.

[29]உங்களது (பொருளைச் செலவு செய்யாமல்) கையைக் கழுத்துடன் கட்டிக்கொள்ள வேண்டாம். (அன்றி எல்லாவற்றையும் கொடுத்து) கையை முழுவதும் விரித்து விடவும் வேண்டாம். அவ்வாறு செய்தால் நீங்கள் தூற்றப்பட்டவராக
முடக்கப்பட்டவராக ஆகிவிடுவீர்கள். [30]உறுதியாகத் தான்
விரும்பியோருக்கு உங்கள் இறைவன் வாழ்வாதாரத்தைத் தாராளமாக வழங்குகிறான். தான் விரும்பியோருக்கு அதனைச் சுருக்கியும் விடுகிறான். தன் அடியார்களை அவன் நன்கறிந்தவன்; உற்றுநோக்குபவன்.

[31](மனிதர்களே!) வறுமைக்கு அஞ்சி உங்கள் குழந்தைகளைக் கொன்று விடாதீர்கள். அவர்களுக்கும் உங்களுக்கும் நாமே உணவளிக்கிறோம். உறுதியாக அவர்களைக் கொல்வது மாபெரும்
குற்றமாகும். [32](இறைநம்பிக்கையாளர்களே!) விபச்சாரத்தின்
அருகில்கூடச் செல்லாதீர்கள். அது மானக்கேடானதாவும் தீய வழியாகவும் இருக்கிறது.*

---

*இறைவன் முழுமையாக வேரறுக்க விரும்பும் தீமைகளில் ஒன்றாக விபச்சாரம் இருக்கிறது. அதாவது விபச்சாரம் என்பது மாபெரும் பாவமாகவும் வெட்கக்கேடான தன்மையின் வெளிப்பாடாகவும் இருக்கிறது. மனிதன் அதிலிருந்து விலகி இருக்க வேண்டும். இங்கே அந்தப் பாவத்தைப் பற்றி அடிப்படையான கட்டளை மட்டுமே அளிக்கப்பட்டுள்ளது.

[33]அல்லாஹ் கண்ணியப்படுத்தியுள்ள உயிரை நியாயமின்றிக்
கொலை செய்து விடாதீர்கள். யாரேனும் நியாயமின்றி கொலை
செய்யப்பட்டுவிட்டால் (சட்டபூர்வமாகப் பழிவாங்க) அவருடைய
வாரிசுக்கு நாம் அதிகாரம் அளித்துள்ளோம். ஆனால், அவர்
(கொலையாளியைப்) பழிவாங்குவதில் வரம்புமீறிவிட வேண்டாம்.
உறுதியாக அவர் (சட்டபூர்வமாக) உதவி செய்யப்படுவார்.

[34]அநாதைக் குழந்தைகள் பக்குவ வயதை அடையும்வரை
அவர்களின் சொத்தை நியாயமான முறையிலன்றி நெருங்காதீர்கள்.
வாக்குறுதியை நிறைவேற்றுங்கள். (ஏனென்றால் மறுமையில்)
உறுதியாக வாக்குறுதி குறித்து விசாரிக்கப்படும். [35]அளந்து
கொடுக்கும்போது முழுமையாக அளந்து கொடுங்கள். சரியான
தராசைக்கொண்டு எடை போடுங்கள். இது சிறந்த முறையாகும்;
நல்ல முடிவாகும்.

[36]உங்களுக்குச் சரியாகத் தெரியாததைக் கூறவேண்டாம்.
உறுதியாகச் செவிப்புலன், பார்வை, உள்ளம் ஆகிய
ஒவ்வொன்றுக்காகவும் மனிதன் விசாரிக்கப்படுவான். [37]பூமியில்
செருக்குக்கொண்டு திரியவேண்டாம். உங்களால் பூமியைப் பிளந்து
விடவும் முடியாது. மலைகளின் அளவுக்கு உயர்ந்து விடவும்
முடியாது. [38]இவையனைத்தும் இறைவனிடம் வெறுக்கத்தக்க தீய
செயல்களாகும்.

[39](நபியே!) இவையனைத்தும் இறைவன் உமக்கு அறிவித்துள்ள
ஞானத்தின் ஒரு பகுதியாகும். அல்லாஹ்வுடன் வேறு எவரையும்
இறைவனாக்கிக் கொள்ளாதீர். அவ்வாறு செய்தால் நீர்
தூற்றப்பட்டவராகவும் (இறையருளிலிருந்து) விலக்கப்பட்டவராகவும்
நரகத்தில் எறியப்படுவீர்.

[40](மனிதர்களே!) இறைவன் உங்களுக்கு ஆண் மக்களைத்
தேர்ந்தெடுத்து (வழங்கி)விட்டுத் தனக்காக வானவர்களிலிருந்து
பெண் மக்களை எடுத்துக்கொண்டானா? உறுதியாக நீங்கள்

*மிகக்கொடும் (பொய்) வார்த்தைகளைக் கூறுகிறீர்கள்.*
41*அவர்கள் படிப்பினை பெறும்பொருட்டு நாம் இந்தக் குர்ஆனில் பல்வேறு வகைகளில் (சத்தியத்தை) விளக்கியும் அது அவர்களின் வெறுப்பைத்தான் அதிகரிக்கிறது.*
42*ஆகவே (நபியே! நீர்) "இவர்கள் கூறுவதைப் போல அவனன்றி வேறு தெய்வங்களும் இருந்திருந்தால் அவை இறையிருக்கையின் முழு உரிமையாளனாகிய இறைவனிடம் செல்லக்கூடிய வழியைத்தேடி முயன்றிருக்கும் என்று கூறுவீராக!*
43*அவர்கள் கூறுவதிலிருந்து அல்லாஹ் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்.*
44*ஏழு வானங்களும் பூமியும் அவற்றிற்கிடையேயுள்ள அனைத்தும் அவனது தூய்மையைத் துதித்துப் போற்றுகின்றன. அவற்றில் ஒன்றுகூட அவனது தூய்மையைத் துதித்துப் போற்றாமல் இருப்பதில்லை. ஆனால் அவை துதிப்பதை நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்கள். அவன் சகிப்புத்தன்மை உடையவன்; பெரும் மன்னிப்பாளன்.*

45*(நபியே!) நீர் குர்ஆனை ஓதும்போது உமக்கும் மறுமையை நம்பாதோருக்கும் இடையில் (கண்ணுக்குப் புலப்படாத) மறைவான ஒரு திரையை நாம் ஏற்படுத்தி விடுகிறோம்.*
46*அவர்கள் (குர்ஆனைப்) புரிந்துகொள்ள முடியாதவாறு அவர்களின் உள்ளங்கள் மீது திரையையிட்டு அவர்களின் காதுகளையும் செவிடாக்கி விடுகிறோம். மேலும் நீர் குர்ஆனிலிருந்து உம்முடைய ஏக இறைவனைப்பற்றி மட்டுமே கூறுவதால் அவர்கள் வெறுப்போடு புறங்காட்டிச் சென்று விடுகின்றனர்.*

47*(நபியே!) அவர்கள் உம்மிடம் செவிசாய்த்துக் கேட்கும்போது அவர்கள் எதற்காகக் கேட்கிறார்கள் என்பதை நாம் நன்கறிவோம். அவர்கள் (தங்களுக்குள்) மறைவாகப் பேசிக் கொள்ளும்போது என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதையும் நாம் நன்கறிவோம். அத்தீவினையாளர்கள், "சூனியம் செய்யப்பட்ட ஒரு மனிதரையே நீங்கள் பின்பற்றுகிறீர்கள்" என(த் தம்முடைய ஆட்களிலேயே) சிலரிடம் உம்மைப்பற்றிப் பேசுகிறார்கள்.*
48*இவர்கள்*

*எப்படியெல்லாம் உமக்குப் பட்டம் சூட்டுகின்றனர் என்பதைப் பாரும். அவர்கள் வழிபிறழ்ந்து விட்டனர். நேர்வழியை அவர்களால் அடையமுடியாது.*

[49]*நாம் எலும்புகளாக (மட்கி) மண்ணோடு மண்ணாக
ஆகிவிட்டபின்பும் மீண்டும் புதிய படைப்பாக
எழுப்பப்படுவோமா?" என்று அவர்கள் கேட்கின்றனர்.*
[50]*(நபியே!) நீர் "நீங்கள் கல்லாகவோ இரும்பாகவோகூட
ஆகிவிடுங்கள்.* [51]*அல்லது உயிர்பெறச் செய்யவே முடியாது என
நீங்கள் கருதுகின்ற ஏதாவது ஒரு பொருளாகக்கூட ஆகிவிடுங்கள்
(அப்போதும் நீங்கள் எழுப்பப்படுவீர்கள்)" என்று கூறுவீராக!
அப்போதும் அவர்கள், "எங்களை மீண்டும் படைப்பவன் யார்?"
என்று கேட்பர். "முதல்முறை யார் உங்களைப் படைத்தானோ
அவன்தான்!" என்று நீர் கூறுவீராக! அப்போது அவர்கள் தம்
தலைகளை உம் பக்கம் சாய்த்துக்கொண்டு "அது எப்போது
நிகழும்?" என்று கேட்பர். நீர் கூறும் "அது மிக விரைவில்
வந்துவிடக்கூடும்;* [52]*அவன் உங்களை அழைக்கின்ற நாளில்
நீங்கள் அவனைத் துதித்துப் புகழ்ந்தவாறு அவனிடம் வருவீர்கள்.
அப்போது மிகக் குறைந்த காலமே (உலகில்) தங்கியிருந்ததாக
நீங்கள் எண்ணுவீர்கள்."*

[53]*(நபியே!) என் அடியார்களிடம், அவர்கள் (எவரிடம் பேசினாலும்) நல்லவற்றையே பேச வேண்டும் எனக் கூறுவீராக! (ஏனெனில்) சாத்தான் அவர்களிடையே பிளவை ஏற்படுத்துவான். உறுதியாக சாத்தான் மனிதனின் வெளிப்படையான பகைவன் ஆவான்.*

[54]*(மனிதர்களே!) உங்கள் இறைவன் உங்களைப்பற்றி
நன்கறிவான். அவன் விரும்பினால் உங்களுக்கு அருள் புரிவான்.
அவன் விரும்பினால் உங்களைத் தண்டித்து விடுவான். (நபியே!)
நாம் உம்மை அவர்களுக்குப் பொறுப்பாளராக அனுப்பவில்லை.*
[55]*வானங்களிலும் பூமியிலும் உள்ளவர்களை உம் இறைவன்
நன்கறிவான். நாம் தூதர்களில் சிலரைவிடச் சிலரைச்*

*சிறப்பித்துள்ளோம். நாம் தாவீதுக்கு ஸபூர் வேதத்தையும் வழங்கினோம்.*

*[56](நபியே!) நீர் (இணைவைப்பாளர்களை நோக்கி) “அவனைத்தவிர நீங்கள் கடவுளாகக் கருதிக் கொண்டிருப்பவர்களை அழைத்துப் பாருங்கள். அவர்கள் உங்கள் துன்பத்தை நீக்கவோ (நீங்கள் விரும்பும்) மாற்றம் எதையும் செய்யவோ வலிமையற்றவர்கள்” என்று கூறுவீராக!*
*[57]இவர்கள் யாரை அழைக்கிறார்களோ அவர்கள்கூடத் தங்களில் யார் இறைவனிடம் மிக நெருங்கியவர்களாகலாம் என அதற்கான வழிவகையைத் தேடுகின்றனர்; அவனது அருளை எதிர்பார்க்கின்றனர்; அவனது தண்டனைக்கு அஞ்சுகின்றனர். உறுதியாக உம் இறைவனின் வேதனை அஞ்சத்தக்கதே ஆகும்.*

*[58](தீவினையாளர்கள் வாழும்) எந்த ஊரையும் நாம் மறுமை நாளுக்கு முன்பே அழிக்காமல் அல்லது கடுமையாக வேதனை செய்யாமல் விடுவதில்லை. இது (நமது) பதிவேட்டில் (ஏற்கனவே) எழுதப்பட்டுள்ளது.*

*[59](நாம் அனுப்பிய) சான்றுகளை (இவர்களது) முன்னோர்கள் பொய்யெனக் கூறினர் என்பதைத் தவிர (இப்போது இவர்கள் வேண்டும்) சான்றுகளை அனுப்புவதற்கு வேறு எதுவும் எமக்குத் தடையாகவில்லை. நாம் ஸமூத் சமூகத்தினருக்கு ஒரு பெண் ஒட்டகத்தைத் தெளிவான சான்றாக வழங்கியிருந்தோம். ஆயினும் அவர்கள் அதற்குத் தீங்கிழைத்தனர். அச்சுறுத்துவதற்காகவே நாம் சான்றுகளை அனுப்புகிறோம்.*

*[60](நபியே!) உமது இறைவன் மனிதர்களைச் சூழ்ந்து அறிந்து கொண்டுள்ளான் என்று நாம் உம்மிடம் கூறினோம். நாம் உமக்குக் காண்பித்த (விண்ணுலகக்) காட்சியையும் குர்ஆனில் சபிக்கப்பட்டுள்ள அந்த மரத்தையும் (இந்த) மக்களுக்கு ஒரு சோதனையாகவே ஆக்கியுள்ளோம். நாம் அவர்களை அச்சுறுத்துகிறோம். ஆனால் அது அவர்களின் அட்டூழியத்தையே மிகுதியாக்குகிறது.*

61“ஆதமுக்குத் தலைபணியுங்கள்” என்று நாம் வானவர்களிடம்
கூறியபோது இப்லீஸைத் தவிர அவர்கள் அனைவரும்
தலைபணிந்தனர். அவன், “நீ களிமண்ணால் படைத்த ஒருவருக்கு
நான் தலைவணங்குவதா?” என்று கேட்டான். 62மேலும் அவன்
“என்னைவிட நீ கண்ணியப்படுத்திய இவரைப் பார்த்தாயா? நீ
எனக்கு மறுமை நாள்வரை காலநீட்டிப்பு வழங்கினால் இவரது
வழித்தோன்றல்களில் சிலரைத் தவிர அனைவரையும் நான்
வழிகெடுத்து விடுவேன்” என்று கூறினான்.

63அதற்கு இறைவன், “செல், அவர்களில் யார் உன்னைப்
பின்பற்றினாலும் உறுதியாக உங்கள் அனைவருக்கும் நரகமே
நிறைவான கூலியாகும். 64அவர்களில் உன்னால் இயன்றவர்களை
உன் பசப்பு வார்த்தைகள் மூலம் வழிகெடுத்துக்கொள்.
அவர்களின்மீது உன் குதிரைப்படையையும் காலாட்படையையும்
ஏவிவிடு. அவர்களின் செல்வங்களிலும் பிள்ளைகளிலும்
அவர்களுடன் கூட்டுச் சேர்ந்துகொள். அவர்களுக்கு
வாக்குறுதியளி” என்று கூறினான். சாத்தானின் வாக்குறுதி
ஏமாற்றமேயன்றி வேறில்லை. 65மேலும் உறுதியாக உண்மையான
என் அடியார்கள்மீது உனக்கு எந்த அதிகாரமும் இல்லை”
என்றும் அல்லாஹ் கூறினான். ஆகவே (நபியே!) அவர்களுக்குப்
பொறுப்பேற்றுக் காக்க உமது இறைவனே போதுமானவன்.

66(மனிதர்களே!) உங்கள் இறைவன்தான் உங்களுக்காகக்
கடலில் கப்பலைச் செலுத்துகிறான். அதன்மூலம் நீங்கள்
அவனது அருட்கொடையைத் தேடிக் கொள்கிறீர்கள். அவன்
உங்கள்மீது நிகரற்ற அன்பாளனாக இருக்கிறான். 67கடலில்
உங்களுக்கு ஏதேனும் தீங்கு ஏற்பட்டால் அவனைத் தவிர
நீங்கள் வணங்கிவந்த மற்ற தெய்வங்கள் அனைத்தும் (உங்கள்
நினைவுக்கு வராமலே) மறைந்துவிடுகின்றன. நீங்கள் அவனை
மட்டுமே அழைக்கிறீர்கள். அவன் உங்களைக் காப்பாற்றிக் கரை
சேர்த்ததும் நீங்கள் புறக்கணித்து விடுகிறீர்கள். மனிதன் நன்றி
கெட்டவனாக இருக்கிறான்.

[68](கரை சேர்ந்த) உங்களை நிலத்தில் அவன் புதையச்
செய்யமாட்டான் என்றோ உங்கள்மீது கல்மழை பொழியச்
செய்யமாட்டான் என்றோ நீங்கள் அச்சமற்று இருக்கிறீர்களா?
(அவ்வாறு நிகழ்ந்தால்) உங்களைப் பாதுகாக்க எவரையும் நீங்கள்
காணமாட்டீர்கள். [69]அல்லது அவனை நீங்கள் மறுத்ததன்
காரணமாக அவன் உங்களை மீண்டும் கடலுக்குக்கொண்டு
சென்று கடும் புயல்காற்றை உங்கள்மீது வீசச் செய்து உங்களை
மூழ்கடித்துவிடமாட்டான் என நீங்கள் அச்சமற்று இருக்கிறீர்களா?
பின்னர் எமக்கெதிராக உங்களுக்கு(ப் பரிந்து) பேசுவோர் எவரும்
இருக்கமாட்டார்கள்.

[70]நாம் ஆதமுடைய மக்களை (மனிதர்களை)க்
கண்ணியப்படுத்தியுள்ளோம். தரையிலும் கடலிலும் நாமே
அவர்களைச் சுமந்து செல்(லுமாறு செய்)கிறோம். அவர்களுக்குத்
தூயபொருள்களிலிருந்து உணவு வழங்குகிறோம். நாம்
படைத்துள்ள படைப்பினங்கள் பலவற்றைவிடவும் நாம்
அவர்களைச் சிறப்பித்துளோம். [71]ஒவ்வொரு சமூகத்தினரையும்
அவரவர் வழிகாட்டிகளோடு நாம் அழைக்கும் நாளில்
வலக்கையில் தம் வினைப் பதிவேடு கொடுக்கப்படுபவர்கள்
(மிக்க மகிழ்ச்சியுடன்) தம் பதிவேட்டைப் படிப்பர். அவர்களுக்கு
அணுவளவும் அநீதி இழைக்கப்படாது. [72]யார் இவ்வுலகில்
(நேர்வழி காணாத) குருடராக இருந்தாரோ அவர் மறுமையிலும்
குருடராகவே இருப்பார். அவரே மிகவும் வழிதவறியவர்.

[73](நபியே!) நாம் உமக்கு அறிவித்ததை விடுத்து வேறொன்றை
நீர் எம்மீது புனைந்து கூறும்படி அவர்கள் உம்மைத் திசை
திருப்பிவிட முயன்றார்கள். நீர் அவ்வாறு செய்திருந்தால் உம்மை
அவர்கள் நெருங்கிய நண்பராக்கிக் கொண்டிருப்பார்கள். [74]நாம்
உம்மை உறுதிப்படுத்தியிராவிட்டால் நீர் அவர்களின் பக்கம்
சிறிதளவேனும் சாய்ந்திருப்பீர். [75]நீர் அவ்வாறு செய்திருந்தால்
இவ்வுலகிலும் இறந்தபின்பும் இரு மடங்கு வேதனையைச்

*சுவைக்கச் செய்திருப்போம். பின்னர் எமக்கெதிராக உமக்கு உதவிபுரிபவர் எவரையும் நீர் காணமாட்டீர்.*

76*(நபியே!) இம்மண்ணிலிருந்து உம்மை அடிபெயரச் செய்து வெளியேற்றிவிட அவர்கள் முயன்று கொண்டிருக்கின்றனர். அவ்வாறு செய்திருந்தால் உமக்குப் பின்னர் அவர்கள் சிறிதுகாலமே அங்குத் தங்கியிருந்திருப்பார்கள்.* 77*உமக்கு முன்னர் நாம் அனுப்பிய தூதர்களின் விஷயத்திலும் இதுதான் நமது வழிமுறையாக இருந்தது. நமது வழிமுறையில் எந்த மாற்றத்தையும் நீர் காண மாட்டீர்.*

78*(நபியே!) சூரியன் (நடுவானைவிட்டுச்) சாய்ந்ததிலிருந்து இரவின் இருள் சூழும்வரை தொழுகையைக் கடைப்பிடிப்பீராக! வைகறை(த் தொழுகை)யில் குர்ஆன் ஓதுவதையும் கடைப்பிடிப்பீராக! உறுதியாக வைகறையில் குர்ஆன் ஓதுவது சாட்சி கூறக்கூடியதாக இருக்கிறது.*

79*(நபியே!) இரவின் ஒரு பகுதியில் எழுந்து (குர்ஆன் ஆகிய) இதனைக்கொண்டு தொழுவீராக! அது உமக்குக் கூடுதல் தொழுகையாக அமையும். (மறுமை நாளில்) புகழப்படும் இடத்தில் இறைவன் உம்மை உயர்த்தக் கூடும்.*

80*(நபியே!) “என் இறைவனே! நல்லவிதமாக என்னை (மதீனாவில்) நுழையச் செய்வாயாக! நல்லவிதமாக என்னை (மக்காவிலிருந்து) வெளியேறச் செய்வாயாக! உன்னிடமிருந்து எனக்கு உதவும் ஆற்றலை வழங்குவாயாக!” என்று நீர் இறைஞ்சி வேண்டுவீராக!* 81*“சத்தியம் வந்து விட்டது. அசத்தியம் அழிந்து விட்டது. உறுதியாக அசத்தியம் அழிந்தே தீரும்” என்றும் கூறுவீராக!*

82*நம்பிக்கையாளர்களின் (அக, புறப் பிணிகளின்) நோய்நீக்கியாகவும் அருளாகவும் உள்ளவற்றையே நாம் குர்ஆனில் அருளுகிறோம். ஆயினும் தீவினையாளர்களுக்கு (அவர்கள் அதை மறுப்பதன் காரணமாக) அது இழப்பைத்தான் மிகுதிப்படுத்தும்.*

[83]மனிதனுக்கு நாம் அருள்புரிந்தால் (எமக்கு நன்றி செலுத்துவதற்குப் பதிலாக எம்மைப்) புறக்கணித்துச் செருக்குக் கொள்கிறான். அவனுக்குத் துன்பம் ஏற்பட்டுவிட்டால் நம்பிக்கையிழந்து விடுகிறான். [84](நபியே!) நீர் கூறும்: "ஒவ்வொருவரும் தத்தமது வழிமுறைப்படியே செயல்படுகின்றனர். நேர்வழியில் இருப்பவர் யார் என்பதை உங்கள் இறைவனே நன்கறிவான்".

[85]அவர்கள் ஆன்மாவைப்பற்றி உம்மிடம் கேட்கின்றனர். (நபியே!) "ஆன்மா என் இறைவனின் கட்டளைப்படி இருப்பதாகும். அது குறித்துச் சிறிதளவு அறிவே உங்களுக்கு வழங்கப்பட்டுள்ளது" என்று கூறுவீராக!

[86](நபியே!) நாம் விரும்பினால் உமக்கு நாம் அறிவித்த(வேதம்) அனைத்தையும் உம்மிடமிருந்து பறித்துவிடுவோம். அதுதொடர்பாக எமக்கு எதிராக எந்தப் பாதுகாவலரும் உமக்குக் கிடைக்கமாட்டார். [87]ஆயினும் உம் இறைவனின் அருளால் (அவ்வாறு நிகழவில்லை.) உம்மீதுள்ள அவனது அருள் மிகப் பெரிதாகும். [88](நபியே!) நீர் கூறும்: "இதைப் போன்ற ஒரு குர்ஆனைக்கொண்டு வருவதற்காக மனிதர்கள் ஜின்கள் அனைவரும் ஒன்று திரண்டாலும் அவர்களால் இதைப் போன்ற ஒன்றைக் கொண்டுவர முடியாது – அவர்கள் ஒருவருக்கொருவர் உதவியாளர்களாக இருந்தாலும் சரியே!

[89]நாம் இந்தக் குர்ஆனில் மக்களுக்காகப் பல்வேறு வகையான எடுத்துக்காட்டுகளையும் கூறியுள்ளோம். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் (ஓரிறை)மறுப்பிலேயே நிலைத்திருக்கின்றனர். [90]அவர்கள் உம்மிடம் "(முஹம்மதே!) நீர் இந்நிலத்திலிருந்து எங்களுக்காக ஒரு நீரூற்றைப் பீறிட்டு ஓடச் செய்யும்வரை நாங்கள் ஒருபோதும் உம்மை நம்பமாட்டோம். [91]அல்லது உமக்குப் பேரீச்சை மரங்களும் திராட்சையுமுள்ள தோட்டம் ஒன்று இருந்து நீர் அதற்கிடையே ஆறுகளை ஓடச் செய்ய வேண்டும்.

[92]அல்லது நீர் கூறுவதைப் போல் வானம் துண்டுதுண்டாகி
எங்கள்மீது விழுமாறு செய்யவேண்டும் அல்லது அல்லாஹ்வையும்
வானவர்களையும் எங்கள்முன் கொண்டுவந்து நிறுத்தவேண்டும்.
[93]அல்லது உமக்கு ஏதேனும் ஒரு தங்க மாளிகை இருக்க
வேண்டும். அல்லது நீர் வானத்தின் மீது ஏறிச் செல்ல வேண்டும்.
அங்கிருந்து நாங்கள் படிக்கத்தக்க ஒரு (வேத) நூலை எங்களிடம்
கொண்டு வந்தாலன்றி நீர் விண்ணேறிச் சென்றதை ஒருபோதும்
நாங்கள் நம்பமாட்டோம்" என்று கூறுகின்றனர். (நபியே) "என்
இறைவன் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்! நானோ
அவனால் தூதராக அனுப்பப்பட்ட மனிதனே ஆவேன்" என்று
கூறுவீராக!

[94]மக்களிடம் நேர்வழி வந்த சமயத்தில், "அல்லாஹ் ஒரு
மனிதரையா தூதராக்கி அனுப்பியுள்ளான்?" என்ற அவர்களின்
கூற்றுதான் அவர்களை நம்பிக்கை கொள்ளவிடாமல் தடுத்தது.
[95]"மண்ணுலகில் வானவர்கள் வசித்திருந்து அவர்கள் இயல்பாக
நடமாடிக் கொண்டிருந்திருந்தால் உறுதியாக நாம் வானத்திலிருந்து
ஒரு வானவரையே அவர்களுக்குத் தூதராக அனுப்பியிருப்போம்"
என (நாம் கூறியதாக) அவர்களுக்குக் கூறுவீராக! [96](நபியே!)
"எனக்கும் உங்களுக்கும் இடையில் சாட்சியாக இருக்க
அல்லாஹ்வே போதுமானவன். உறுதியாகத் தன் அடியார்களை
அவன் நன்கறிந்தவன்; உற்றுநோக்குபவன்" என்று அவர்களுக்குக்
கூறுவீராக!

[97]அல்லாஹ் யாரை நேர்வழியில் செலுத்துகிறானோ அவரே
நேர்வழி பெற்றவர் ஆவார். அவன் யாரை வழிகெடும்படி
விட்டுவிடுகிறானோ அவர்களுக்கு அவனை அன்றி (வேறு)
உதவியாளர் எவரையும் நீர் காணமாட்டீர். மறுமை நாளில்
நாம் அவர்களைக் குருடர்களாகவும் ஊமையர்களாகவும்
செவிடர்களாகவும் தம் முகங்களால் நடக்கும் நிலையில்
ஒன்றுதிரட்டுவோம். அவர்களின் உறைவிடம் நரகமாகும்.
அதன் நெருப்பு தணியும்போதெல்லாம் அதனை இன்னும்

*கொழுந்துவிட்டு எரியச் செய்வோம்* [98]*அவர்கள் எம் சான்றுகளை மறுத்ததற்கும் "நாம் எலும்புகளாகி (மட்கி) மண்ணோடு மண்ணாகி விட்டபின்பும் மீண்டும் புதிய படைப்பாக எழுப்பப்படுவோமா?" என்று கேட்டதற்கும் அவர்களுக்குரிய கூலி இதுவேயாகும்.*

[99]*வானங்களையும் பூமியையும் படைத்த அல்லாஹ் மீண்டும் அவர்களைப் போன்றே படைக்கும் ஆற்றலுடையவன் என்பதை அவர்கள் அறியமாட்டார்களா? அவன் அவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட காலநீட்டிப்பை ஏற்படுத்தியுள்ளான். அதில் எத்தகைய ஐயமுமில்லை. ஆயினும் அத்தீவினையாளர்கள் மறுப்பைத் தவிர (வேறொன்றையும்) ஏற்பதில்லை.*

[100]*(நபியே!) நீர் கூறும்: "என் இறைவனின் அருட் களஞ்சியங்களுக்கு நீங்கள் உரிமையாளர்களாக இருந்திருந்தால் அது செலவாகிவிடுமோ என்று அஞ்சி (எவருக்கும் கொடுக்காமல்) உங்களிடமே தடுத்துவைத்துக் கொண்டிருப்பீர்கள். மனிதன் பெரும் கஞ்சனாக இருக்கிறான்.*

[101]*நாம் மோசேவுக்குத் தெளிவான ஒன்பது சான்றுகளை
வழங்கியிருந்தோம். (நபியே!) இஸ்ராயீலின் மக்களிடம் அவர் வந்த
வேளை(யில் நடந்தது) பற்றி அவர்களிடமே கேட்டுப்பார்ப்பீராக!
அப்போது ஃபாரோ "மோசே! யாரோ உமக்குச் சூனியம்
செய்துள்ளனர் என்றே நான் எண்ணுகிறேன்" என்றான்.*
[102]*அவனிடம் மோசே, "வானங்கள், பூமி ஆகியவற்றின் இறைவனே
இவற்றைத் தெளிவான சான்றுகளாக அருளியுள்ளான் என்பதை
நீ நன்கறிவாய். ஃபாரோவே! உன்னை அழிவுக்குள்ளாகும்
மனிதனாகவே நான் கருதுகிறேன்" என்று கூறினார்.* [103]*அவரையும்
அவருடைய மக்களையும் தன் நாட்டிலிருந்து அடியோடு
அகற்றிவிட வேண்டும் என்று ஃபாரோ முடிவு செய்தான்.
எனவே நாம் அவனையும் அவனோடு இருந்த அனைவரையும்
(கடலில்) மூழ்கடித்து விட்டோம்.* [104]*அதற்குப் பின் இஸ்ராயீலின்
மக்களிடம் "நீங்கள் இந்த நிலத்தில் வாழுங்கள். மறுமையின்*

*வாக்குறுதி (செயல்பட) வரும்போது உங்கள் அனைவரையும் ஒன்றாகக் கொண்டு வருவோம்" என்று நாம் கூறினோம்.*

*[105](நபியே!) நாம் (குர்ஆன் ஆகிய) இதனைச் சத்தியத்துடனே அருளியுள்ளோம். அதுவும் சத்தியத்துடன்தான் இறங்கியுள்ளது. உம்மை நற்செய்தியாளராகவும் எச்சரிக்கையாளராகவுமே அனுப்பியுள்ளோம். [106]நீர் மனிதர்களுக்கு நிறுத்தி நிதானமாக வாசித்துக் காண்பிக்க வேண்டும் என்பதற்காகவே குர்ஆனைச் சிறுகச் சிறுக அருளினோம். மேலும் இதனைப் படிப்படியாக இறக்கிவைத்தோம்.*

*[107](நபியே!) நீர் கூறுவீராக! "இதனை நீங்கள் நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி. இதற்கு முன்னர் (வேத)அறிவு வழங்கப்பட்டோரிடம் இது ஓதிக் காட்டப்பட்டால் அவர்கள் முகங்குப்புறத் தலைபணிந்து விழுவர். [108]"எங்கள் இறைவன் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். எங்கள் இறைவனின் வாக்குறுதி நிறைவேறியே தீரும்" என்று அவர்கள் கூறுவர். [109]அவர்கள் அழுதவாறே முகங்குப்புற விழுகின்றனர். (குர்ஆன்) அவர்களின் பணிவை மேலும் மிகுதிப்படுத்தி விடுகிறது.*

*[110](நபியே!) "நீங்கள் (அவனை) 'அல்லாஹ்' என்று அழையுங்கள். அல்லது 'அர்ரஹ்மான்' (அளவற்ற அருளாளன்) என்று அழையுங்கள். நீங்கள் எந்தப் பெயரைக்கொண்டு அழைத்தாலும் அவனுக்கு அழகிய பெயர்கள் இருக்கின்றன" என்று கூறுவீராக! (நபியே!) நீர் தொழுகையில் குரலை மிகவும் உயர்த்தவும் வேண்டாம்; மிகவும் தாழ்த்தவும் வேண்டாம்! இரண்டிற்குமிடையே நடுநிலையான வழியைக் கடைப்பிடிப்பீராக!*
*[111](நபியே!) "தனக்கென ஒரு மகனை ஒருபோதும் உண்டாக்கிக் கொள்ளாத இறைவனுக்கே அனைத்துப் புகழும். ஆட்சியில் அவனுக்கு யாரும் கூட்டாளி இல்லை. உதவி தேவைப்படும் அளவுக்கு அவன் இயலாதவனும் அல்லன்" என்று கூறுவீராக! அவனது மகத்துவத்தை மிகுதியும் எடுத்துரைப்பீராக!*

# 18. குகை (அல்கஹ்ஃப்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

*[1]அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவன்தான் தன்
அடியார் மீது (நேரான) எத்தகைய குறைபாடும் இல்லாத
வேதத்தை அருளினான். [2]இறைவனுடைய கடும் வேதனையைப்
பற்றி (ஓரிறைமறுப்பாளர்களுக்கு) எச்சரிக்கை செய்வதற்காகவும்
நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிவோருக்கு நற்கூலி உண்டு
எனும் நற்செய்தியைக் கூறுவதற்காகவும் (மிக உறுதியானதாக
இவ்வேதத்தை அருளினான்.) [3]அங்கு அவர்கள் என்றென்றும்
தங்கியிருப்பர் (எனும் நற்செய்தியைத் தெரிவிப்பதற்காகவும்)
[4]‘அல்லாஹ் தனக்கு ஒரு மகனை உண்டாக்கிக் கொண்டான்’
என்று கூறுவோரை எச்சரிப்பதற்காகவும் (இம்மறையை அவன்
அருளினான்.) [5]இது குறித்து அவர்களுக்கோ அவர்களின்
முன்னோர்களுக்கோ எந்த அறிவும் இல்லை. அவர்களின்
வாயிலிருந்து வெளிப்படுவது மாபெரும் (பாவமான) சொல்லாகும்
அவர்கள் பொய்யைத்தான் கூறுகின்றனர்.*

*[6]அவர்கள் இதன்மீது நம்பிக்கை கொள்ளவில்லையென்றால்
அவர்களுக்காகக் கவலைப்பட்டு உம்மை நீரே அழித்துக்
கொள்வீர் போலும்! [7]மக்களில் நற்செயல்புரிந்தோர் யார்
என்பதைச் சோதிப்பதற்காகவே நாம் பூமியிலுள்ளவற்றை
(பூமிக்கு) அலங்காரமாக ஆக்கியுள்ளோம். [8]ஆயினும் ஒரு நாள்
அதிலுள்ள அனைத்தையும் அழித்து அதனை வெட்டவெளியாக்கி
விடுவோம்.*

*[9](நபியே!) அந்தக் குகைவாசிகளும் கல்வெட்டு
சாசனக்காரர்களும் எமது வியக்கத்தக்க சான்றுகள் என
நீர் எண்ணுகிறீரா? [10]அந்த இளைஞர்கள் குகையில்
தஞ்சமடைந்தபோது, “எங்கள் இறைவா! எங்களுக்கு உன்
சிறப்புமிகு அருளை வழங்குவாயாக! எங்கள் செயல்களைச்
சீராக்கித் தருவாயாக!” என்று வேண்டினர். [11]எனவே நாம்*

அக்குகையில் அவர்கள்மீது பல்லாண்டுக் காலத்திற்கும்
(உறக்கத்தின் திரையைப்) போட்டுவிட்டோம். [12](அவர்களிலிருந்த)
இரு சாராரில் தாம் (அக்குகையில்) தங்கியிருந்த காலத்தை யார்
சரியாகக் கணக்கிடுகிறார்கள் என்பதை வெளிப்படுத்துவதற்காக
நாம் அவர்களை எழுப்பினோம்.

[13](நபியே!) அவர்களின் உண்மையான வரலாற்றை நாம்
உமக்கு எடுத்துரைக்கிறோம். அவர்கள் தங்கள் இறைவனின்மீது
நம்பிக்கைகொண்ட இளைஞர்கள் ஆவர். நாம் அவர்களை
நேர்வழியில் மேலும் முன்னேறச் செய்தோம். [14]அவர்கள்
(அடக்குமுறை அரசன் முன்னர்) எழுந்து நின்று “வானங்களுக்கும்
பூமிக்கும் யார் இறைவனோ அவன்தான் எங்கள் இறைவன்.
நாங்கள் அவனைத்தவிர வேறு யாரையும் இறைவன் என
அழைக்க மாட்டோம். அவ்வாறு அழைத்தால் நாங்கள் வரம்பு
மீறிப் பேசியவர்களாவோம்” என்று கூறியபோது நாம் அவர்களின்
உள்ளங்களை வலுப்படுத்தினோம். [15]“எங்களது இந்தச்
சமூகத்தினர் அவனையன்றி வேறு கடவுள்களை ஏற்படுத்திக்
கொண்டனர். தமது செயலுக்காக இவர்கள் தெளிவான
சான்றைத் தர வேண்டாமா? அல்லாஹ்வின்மீது பொய்யைப்
புனைபவனைவிட மிகப்பெரும் முறைகேடன் யார்?” (என்றும்
அவர்கள் கூறினர்).

[16]மேலும் (அந்த இளைஞர்கள் தமக்கிடையே பேசிக்
கொண்டனர்): “நீங்கள் இவர்களையும் அல்லாஹ்வையுமன்றி
இவர்கள் வணங்குகின்ற தெய்வங்களிலிருந்து விலகிக் கொள்ள
இக்குகைக்குள் சென்று தஞ்சமடையுங்கள். இறைவன் உங்கள்மீது
தன் அருளைப் பொழிந்து உங்கள் செயல்களை எளிதாக்கித்
தருவான்”.

[17](நபியே!) சூரியன் உதிக்கும்போது அது அவர்களின்
குகைக்கு வலப்பக்கமாகச் சாய்வதையும் மறையும்போது
அதன் இடப்பக்கமாகக் கடப்பதையும் நீர் காண்பீர். அவர்கள்
குகையினுள் ஒரு விரிவான இடத்தில் இருந்தனர். இது

*அல்லாஹ்வின் சான்றுகளில் ஒன்றாகும். அல்லாஹ் எவரை நேர்வழியில் செலுத்துகிறானோ அவரே நேர்வழி பெற்றவர் ஆவார். யாரை அவன் வழிதவற விட்டுவிடுகின்றானோ அவருக்கு உதவிபுரிந்து வழிகாட்டுபவர் எவரையும் நீர் காணமுடியாது.*

18*நீர் அவர்களைப் பார்த்தால் விழித்திருக்கிறார்கள் என்றே கருதுவீர். ஆனால் அவர்களோ உறங்கிக் கொண்டிருந்தனர். நாம் அவர்களை வலப்பக்கமும் இடப்பக்கமுமாகப் புரட்டிக்கொண்டே இருந்தோம். அவர்களின் நாய் குகைவாசலில் தனது இரு முன்னங்கால்களையும் விரித்து வைத்து உட்கார்ந்திருந்தது. நீர் அவர்களை எட்டிப் பார்த்திருந்தால் திடுக்குற்று அவர்களைவிட்டு வெருண்டோடி இருப்பீர்.*

19*அவர்கள் ஒருவருக்கொருவர் விசாரித்துக் கொள்வதற்காக அவர்களை நாம் எழுப்பினோம். அவர்களில் ஒருவர், “நீங்கள் எவ்வளவு நேரம் இங்குத் தங்கியிருந்தீர்கள்?” என்று கேட்டார். அதற்குச் சிலர், “நாம் ஒருநாள் அல்லது ஒருநாளின் சிறுபகுதியளவே தங்கியிருந்தோம்” என்று கூறினர். ஆனால் மற்றவர்கள், “நீங்கள் எவ்வளவு நேரம் தங்கியிருந்தீர்கள் என்பதை அல்லாஹ்வே நன்கறிவான். உங்களில் யாரேனும் ஒருவர் இந்த வெள்ளி நாணயத்துடன் ஊருக்குச் செல்லட்டும். தூய்மையான உணவைத் தேடிப் பார்த்து அதிலிருந்து (சிறிதளவு) அவர் வாங்கி வரட்டும். அவர் உங்களைப்பற்றி யாருக்கும் உணர்த்திவிடாமல் எச்சரிக்கையாகவே நடந்து கொள்ளட்டும்” என்று கூறி*
20*“அவர்கள் உங்களை அறிந்துகொண்டால் உங்களைக் கல்லால் அடித்துக் கொன்றுவிடுவர். அல்லது வலுக்கட்டாயமாக உங்களைத் தங்கள் வழிமுறைக்குத் திருப்பிவிடுவர். அவ்வாறு நடந்துவிட்டால் ஒருபோதும் நீங்கள் வெற்றி பெற மாட்டீர்கள்” என்றும் கூறினர்.*

21*இவ்வாறு (உணவு தேடி ஊருக்குள் ஒருவரைச் செல்லச்செய்து) நாம் அவர்களின் நிலைமையை மக்களுக்கு*

*அறிவித்து விட்டோம். (மீண்டும் உயிர்ப்பிப்போம் என்ற) அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது என்பதையும் மறுமை நாள் வருவதில் எத்தகைய ஐயமும் இல்லை என்பதையும் மக்கள் அறிந்து கொள்வதற்காகத்தான் இவ்வாறு செய்தோம். ஆயினும் மக்கள் குகைவாசிகள் தொடர்பாகத் தமக்குள் பிணங்கிக் கொண்டனர். சிலர் "அவர்கள் இருந்த குகையின்மீது ஒரு கட்டடத்தை (நினைவுச் சின்னமாக) எழுப்புங்கள். அவர்களின் இறைவனே அவர்களைப்பற்றி நன்கறிவான்" என்று கூறினர். அவர்கள் தொடர்பான விவாதத்தில் வெற்றி பெற்றவர்கள் "அவர்கள் இருந்த குகையின் மீது நாம் ஒரு வணங்குமிடத்தை அமைப்போம்" என்று கூறினர்.*

[22]*சிலர் 'அவர்கள் மூன்று பேர், நான்காவது அவர்களின் நாய்' என்று கூறுவர். வேறு சிலர் 'அவர்கள் ஐந்து பேர், ஆறாவது அவர்களின் நாய்' என்று கூறுவர். இவர்கள் எதையும் ஆராயாமல் ஊகமாகக் கூறுகின்றனர். இன்னும் சிலர் 'அவர்கள் ஏழு பேர், எட்டாவது அவர்களின் நாய்' என்று கூறுவர். (நபியே) நீர் கூறும்: "அவர்களின் எண்ணிக்கையை என் இறைவனே நன்கறிவான். மிகச் சிலரே அவர்களை அறிவர்" ஆகவே அவர்களின் விஷயத்தில் வெளிப்படையாகத் தெரிந்ததைத் தவிர (வேறு எது பற்றியும்) மக்களிடம் நீர் வாதம் புரிய வேண்டாம். அவர்களைக் குறித்து எவரிடமும் நீர் கேட்கவும் வேண்டாம்.*

[23]*(நபியே!) நீர் எதைக் குறித்தும் "உறுதியாக நான் நாளைக்கு இதனைச் செய்துவிடுவேன்" என்று கூறாதீர்.* [24]*ஆயினும் "அல்லாஹ் விரும்பினால் (நாளை செய்வேன்" என்று கூறுவீராக!) இதனை நீர் மறந்து விட்டீரானால் உம் இறைவனை நினைவுகூர்வீராக! "என் இறைவன் எனக்கு இதைவிட நெருக்கமான நல்வழியைக் காட்டக்கூடும்" என்று கூறுவீராக!*

[25]*அவர்கள் தங்கள் குகையில் முந்நூறு ஆண்டுகள் தங்கியிருந்தனர் என்று (சிலர்) கூறுகின்றனர். (வேறு சிலர்) அதற்கு*

*மேலாக ஒன்பது ஆண்டுகள் இருந்தனர் (என்று கூறுகின்றனர்)*
*26(நபியே) “அவர்கள் தங்கியிருந்த காலத்தை அல்லாஹ்வே நன்கறிந்தவன். வானங்களிலும் பூமியிலும் உள்ள மறைவானவை பற்றிய அறிவு அவனுக்கே உரியது. அவன் எவ்வளவு நன்றாகப் பார்ப்பவன்! எவ்வளவு நன்றாகச் செவியுறுபவன்! அவனைத் தவிர அவர்களுக்கு வேறு உதவியாளன் இல்லை. தன் அதிகாரத்தில் அவன் எவரையும் கூட்டுச் சேர்த்துக் கொள்வதும் இல்லை” என்று நீர் கூறுவீராக!*

*27(நபியே!) உமக்கு அறிவிக்கப்படுகின்ற உம் இறைவனின் வேதத்தை நீர் எடுத்துரைப்பீராக! அவனது வார்த்தைகளை எவராலும் மாற்றிவிட முடியாது. அவனைத் தவிர எந்தப் புகலிடத்தையும் நீர் காணமாட்டீர்.*
*28தம் இறைவனின் உவப்பை நாடிக் காலையிலும் மாலையிலும் அவனை அழைத்துக் கொண்டிருக்கின்ற(எளிய)வர்களுடன் நீரும் உம்மை(ப் பொறுமையுடன்) இணைத்துக் கொள்ளும். இவ்வுலகக் கவர்ச்சியை விரும்பி உம் பார்வை அ(ந்த நல்ல)வர்களிடமிருந்து விலகிவிடக் கூடாது. எவனது உள்ளத்தை எம்மை நினைவுகூர்வதிலிருந்து திருப்பி விட்டோமோ அத்தகைய மனிதனுக்குப் பணியாதீர். அவன் தன் மனவிருப்பப்படி நடப்பவன். அவனது செயல் வரம்பு மீறியதாக உள்ளது.*

*29(நபியே! மக்களிடம்) “இது உங்கள் இறைவனிடமிருந்து வந்துள்ள சத்தியமாகும். எனவே விரும்பியவர் நம்பிக்கைகொள்ளட்டும்; விரும்பாதவர் மறுக்கட்டும்” என்று கூறுவீராக! (இதை மறுக்கும்) தீவினையாளர்களுக்காக நாம் நரகத்தைத் தயார்செய்து வைத்துள்ளோம். அதன் சுவர்கள் அவர்களைச் சூழ்ந்து கொள்ளும். அங்கு அவர்கள் தண்ணீர் வேண்டி இறைஞ்சினால் முகங்களைப் பொசுக்கக்கூடிய உருக்கப்பட்ட ஈயத்தைப் போன்ற கொதிநீர் வழங்கப்படும். அது எவ்வளவு கேடான பானம்! அது எவ்வளவு கேடான உறைவிடம்!*

*30உறுதியாக நம்பிக்கை கொண்டு நற்செயல்புரிவோரின் அத்தகைய அழகிய செயலின் கூலியை நாம் ஒருபோதும்*

*வீணாக்கிவிட மாட்டோம். [31]அவர்களுக்கு நிலையான சொர்க்கச் சோலைகள் உண்டு. அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்களுக்குத் தங்கக்காப்புகள் அணிவிக்கப்படும். அவர்கள் (விரும்பும்) மெல்லிய மற்றும் அழுத்தமான பச்சைப் பட்டாடைகளை அணிந்து உயர்ந்த மஞ்சங்களில் சாய்ந்திருப்பர். என்னவோர் அருமையான கூலி! என்னவோர் அருமையான உறைவிடம்!*

*[32](நபியே!) இரு மனிதர்களை எடுத்துக்காட்டாகக் கூறுவீராக! அவர்களில் ஒருவனுக்கு நாம் இரு திராட்சைத் தோட்டங்களை வழங்கியிருந்தோம்; அவற்றைச் சுற்றிலும் பேரீச்சை மரங்களை அமைத்திருந்தோம். அவ்விரண்டிற்கும் இடையே வயல்களையும் ஏற்படுத்தியிருந்தோம். [33]இரு தோட்டங்களும் எந்தக் குறைவுமின்றி நிறைவாகக் கனிகளை வழங்கின. இரண்டிற்கும் இடையே ஒரு நதியையும் ஓடச் செய்தோம். [34]அவனுக்கு (இவைகளன்றி) வேறு பல கனிமரங்களும் இருந்தன. (ஒருநாள்) அவன் தன் தோழனிடம் உரையாடிக் கொண்டிருந்தபோது (செருக்கோடு) “நான் உன்னைவிட அதிகச் செல்வமுடையவன்; ஆள்பலம் மிக்கவன்” என்று கூறினான். [35]அவன் (செருக்குக்கொண்டு) தனக்குத்தானே அநீதி இழைத்தவனாகத் தன் தோட்டத்தினுள் நுழைந்தான். “இது எந்தக் காலத்திலும் அழிந்துவிடும் என்று நான் கருதவில்லை,
[36]மறுமை நாள் என்றாவது வரும் என்றும் நான் நம்பவில்லை. ஒருவேளை நான் என் இறைவனிடம் திரும்பக்கொண்டு செல்லப்பட்டால் இதைவிடச் சிறந்த இடத்தையே பெறுவேன்” என்றும் கூறினான்.*

*[37]அவனுடன் உரையாடிக் கொண்டிருந்த அவனது தோழர் கூறினார். “உன்னை மண்ணிலிருந்தும் பின்னர் விந்தின் ஒரு துளியிலிருந்தும் படைத்து முழு மனிதனாக்கியவனையா நீ (நம்ப) மறுக்கிறாய்? [38](உறுதியாக) அந்த அல்லாஹ்தான் என் இறைவன். நான் என் இறைவனுக்கு எவரையும் இணையாக்கமாட்டேன். [39]நீ உன் தோட்டத்தில் நுழைந்தபோது, “அல்லாஹ் விரும்பியவையே*

நடக்கும். அல்லாஹ்வையன்றி எவரிடத்திலும் எந்த ஆற்றலும் இல்லை" என்று ஏன் கூறவில்லை? நான் செல்வங்களிலும் பிள்ளைகளிலும் உம்மைவிடக் குறைந்தவன் என நீ கருதினால்,
[40]என் இறைவன் உன் தோட்டத்தைவிடச் சிறந்த ஒன்றை எனக்கு வழங்கிவிடலாம்; வானத்திலிருந்து பேரிடிகளுடன் கூடிய மழையை அனுப்பித் தோட்டத்தை (வழுக்கலான) வெட்டவெளியாக்கி விடலாம் அல்லது [41]அதன் தண்ணீர் உன்னால் திரும்பப் பெறமுடியாதபடி பூமிக்குள் உறிஞ்சப்பட்டுவிடலாம்" என்று கூறினார்.

[42]அவனது விளைச்சல் அனைத்தும் அழிந்துவிட்டன. அதற்காகத் தான் செலவிட்டதை எண்ணி அவன் கைகளைப் பிசைந்து நின்றான். அத்தோட்டம் அடியோடு வீழ்ந்து கிடந்தது. "அந்தோ நான் என் இறைவனுக்கு இணைவைக்காமல் இருந்திருக்கக் கூடாதா?" என்று அவன் புலம்பினான். [43]அல்லாஹ்வுக்கு எதிராக அவனுக்கு உதவிபுரியும் கூட்டத்தார் எவருமில்லை. தானாகவே அந்த ஆபத்திலிருந்து தற்காத்துக் கொள்ளவும் அவனால் இயலவில்லை. [44]இத்தகைய நிலையில் உதவும் அதிகாரம் அனைத்தும் உண்மையாளனாகிய அல்லாஹ்வுக்கே உரியன. கூலி வழங்குவதிலும் சிறப்பான முடிவை வழங்குவதிலும் அவன்தான் மேலானவன்.

[45](நபியே!) அவர்களிடம் உலக வாழ்விற்கு ஓர் உவமையைக் கூறுவீராக! உலக வாழ்வு நாம் வானத்திலிருந்து நீரை இறக்கி அதனால் பூமியின் தாவரங்கள் செழித்து வளர்ந்து பின்னர் அவை காற்றால் அடித்துச் செல்லப்படும் காய்ந்த சருகுகளாகிவிடுவதைப் போன்றதாகும். அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன். [46]செல்வங்களும் பிள்ளைகளும் உலக வாழ்வின் அணிகள்தாம். (எனினும் அவை நிலையானவையல்ல). நிலையான நல்லறங்களே உம் இறைவனிடம் நற்கூலி பெறுவதற்கும் எதிர்பார்த்திருப்பதற்கும் மிக ஏற்றவையாகும்.

47(நபியே!) நாம் மலைகளைப் பெயர்க்கும் (மறுமையாகிய)
அந்நாளில் பூமியை முற்றிலும் வெட்டவெளியாகக் காண்பீர்.
(அந்நாளில்) நாம் மனிதகுலம் அனைத்தையும் ஒன்று சேர்ப்போம்.
அவர்களில் ஒருவரையும் விட்டுவிட மாட்டோம். 48அனைவரும்
உம் இறைவனுக்கு முன்னால் அணியணியாக நிறுத்தப்படுவர்.
“தொடக்கத்தில் நாம் உங்களைப் படைத்ததைப் போன்றே
(இன்று) நீங்கள் எம்மிடம் வந்து விட்டீர்கள். ஆயினும் உங்களுக்கு
வாக்களிக்கப்பட்ட நேரத்தை நாம் ஏற்படுத்த மாட்டோம் என்றே
நீங்கள் எண்ணியிருந்தீர்கள்” என அவர்களிடம் கூறப்படும்.

49அவர்களுக்கு முன்னால் அவர்களின் (வினைப்) பதிவேடு
வைக்கப்படும். குற்றவாளிகள் அதில் (பதிவாகி) உள்ளவற்றைக்
கண்டு பேரச்சம் கொள்வதை நீர் காண்பீர். “அந்தோ எங்கள்
கேடே! இதுவென்ன பதிவேடு? சிறியதோ, பெரியதோ எதையுமே
இப்பதிவேடு பதிவு செய்யாமல் விட்டு வைக்கவில்லையே!” என்று
புலம்புவதை நீர் காண்பீர். தாங்கள் செய்தவை அனைத்தும்
தங்களுக்கு முன்னால் இருப்பதை அவர்கள் காண்பார்கள். உமது
இறைவன் எவருக்கும் அநீதி இழைக்கமாட்டான்.

50“ஆதமுக்குத் தலைபணியுங்கள் என்று நாம் வானவர்களிடம்
கூறியபோது இப்லீஸைத் தவிர அவர்கள் அனைவரும்
தலைபணிந்தனர் (என்பதை நினைத்துப்பாரும்). அவன் ஜின்
இனத்தைச் சேர்ந்தவன். தன் இறைவனின் கட்டளைக்கு அவன்
எதிராகச் செயல்பட்டான் (மனிதர்களே!) நீங்கள் எம்மை
அல்லாமல் அவனையும் அவனது வழித்தோன்றல்களையும்
உங்களுக்குப் பாதுகாவலர்களாகக் கொள்கிறீர்களா? அவர்கள்
உங்கள் எதிரிகள். தீவினையாளர்களின் இச்செயல் எவ்வளவு
பாவமானது!

51வானங்களையும் பூமியையும் படைத்தபோது நான்
(சாத்தான்களாகிய) அவர்களை (உதவிக்கு) அழைக்கவில்லை. ஏன்,
அவர்களைப் படைத்தபோதுகூட அவர்களை அழைக்கவில்லை.

வழிகெடுப்போரை நான் உதவியாளராக ஆக்கிக் கொள்பவன் அல்லன்.

[52](மறுமையாகிய) அந்நாளில் இறைவன் (மக்களிடம்) "யாரை நீங்கள் எனக்கு இணையானவர்கள் எனக் கருதினீர்களோ அவர்களை அழையுங்கள்" என்று கூறுவான். அப்போது இவர்கள் அவர்களை அழைப்பார்கள். ஆனால் அவர்கள் இவர்களுக்குப் பதில் கூறமாட்டார்கள். நாம் அவர்களுக்கு நடுவே (பகையின்) தடுப்பை ஏற்படுத்தி விடுவோம். [53]குற்றவாளிகள் நரகத்தைக் காணும்போது தாம் அதில் விழப்போகிறோம் என்பதைப் புரிந்து கொள்வார்கள். அதிலிருந்து தப்புவதற்கு எந்த வழியையும் அவர்கள் காணமாட்டார்கள்.

[54]இந்தக் குர்ஆனில் நாம் மனிதகுல நன்மைக்காக எல்லா வகையான எடுத்துக்காட்டுகளையும் (கூறி) விளக்கியுள்ளோம். ஆனால் மனிதனோ பெருமளவில் வீண்வாதம் செய்பவனாகவே இருக்கிறான். [55]மக்களிடம் நேர்வழி வந்தபின்னர் அவர்கள் அதன்மீது நம்பிக்கை கொள்வதற்கும் தங்கள் இறைவனிடம் (பாவ)மன்னிப்பு வேண்டுவதற்கும் தடையாக இருந்ததெல்லாம் தங்களின் முன்னோர்களுக்கு நேர்ந்த நிலை தமக்கும் நேரவேண்டும் அல்லது (இறைத்)தண்டனை தங்கள் கண்ணெதிரே வர வேண்டும் என்பதற்காகத்தான்.

[56]நாம் தூதர்களை நற்செய்தி கூறுவோராகவும் எச்சரிக்கை செய்வோராகவுமே அனுப்பி வைக்கிறோம். மறுப்பாளர்கள் அசத்தியத்தைக்கொண்டு சத்தியத்தை வீழ்த்திவிடப் பொய்யான வாதம்புரிகின்றனர். எமது சான்றுகளையும் அவர்களுக்கு எச்சரிக்கைப்பட்டதையும் (தண்டனை) நகைப்புக்குரியவையாக எடுத்துக்கொள்கின்றனர். [57]இறைவனுடைய வசனங்களின் மூலம் அறிவுரை கூறப்பட்டபோது அவற்றைப் புறக்கணித்துத் தன் கைகள் செய்த தீச்செயல்களை மறந்துவிட்டவனைவிடப் பெரிய முறைகேடன் யார்? அதனை (எம் வசனங்களை) அவர்கள்

*புரிந்துகொள்ள முடியாதவாறு அவர்களின் உள்ளங்களில் திரையை ஏற்படுத்திச் செவிகளைக் கேட்க முடியாதவாறு செய்து விடுகிறோம். (நபியே!) நீர் அவர்களை நேர்வழிக்கு அழைத்தாலும் அவர்கள் ஒருபோதும் நேர்வழிக்கு வரப் போவதில்லை.*

*[58](நபியே!) உம் இறைவன் பெரும் மன்னிப்பாளன்; அருளுடையவன். அவர்கள் செய்தவற்றுக்காக (அவர்களை உடனுக்குடன்) அவன் தண்டிப்பதாக இருந்தால் அவர்களுக்கு விரைவில் வேதனையை வழங்கியிருப்பான். ஆயினும் அவர்களுக்கென வாக்களிக்கப்பட்ட நேரம் ஒன்றுள்ளது. அதற்குப் பின் அவர்கள் எங்கும் தப்ப முடியாது. [59](அழிவுக்குள்ளான) இந்த ஊர்களிலிருந்த மக்கள் அநியாயம் செய்தபோது நாம் அவர்களை அழித்துவிட்டோம். எனினும் அவர்களை அழிப்பதற்கும் ஒரு குறிப்பிட்ட தவணையை அறுதியிட்டிருந்தோம்.*

*[60](நபியே!) மோசே தம் சீடரிடம், “இரு கடல்கள் சங்கமிக்கும் இடத்தை அடையும்வரை பல்லாண்டுகளானாலும் நடந்துகொண்டே இருப்பேன்” என்று கூறியதை (அவர்களுக்கு) நினைவூட்டுவீராக! [61]அவையிரண்டும் சங்கமிக்கும் இடத்தை அவர்கள் அடைந்தபோது (உணவுக்காகக் கொண்டுவந்த) தங்களது மீனை அவர்கள் மறந்துவிட்டனர். அது கடலில் தன் வழியை அமைத்து(ச் சென்று)விட்டது. [62]அவ்விருவரும் முன்னேறிச் சென்றபோது மோசே தம் சீடரிடம், “நமது உணவைக்கொண்டு வாரும். நமது இந்தப் பயணத்தில் மிகவும் களைப்படைந்து விட்டோம்” என்று கூறினார்.*

*[63]அப்போது சீடர், “பார்த்தீர்களா! நாம் அந்தப் பாறையின் அருகில் தங்கியிருந்தபோது நான் மீனை மறந்துவிட்டேன். அதனை (உங்களுக்கு)த் தெரிவிப்பதிலிருந்து சாத்தான்தான் என்னை மறதியில் ஆழ்த்தி விட்டான். அது கடலுக்குள் வியப்புக்குரிய வகையில் தன் வழியை அமைத்துக் கொண்டது” என்று கூறினார். [64]“நாம் அந்த வாய்ப்பைத்தானே தேடிக் கொண்டிருந்தோம்”*

*என்று மோசே கூறினார். எனவே இருவரும் தம் காலடித் தடங்களைப் பார்த்தவாறு வந்தவழியே திரும்பிச் சென்றனர்.*
*65அங்கு அவர்கள் எமது அடியார்களில் ஒருவரைக் கண்டனர். நாம் அவருக்கு எம் அருளை வழங்கியிருந்தோம். எம்மிடமிருந்து ஒரு கல்வி அறிவையும் அவருக்குக் கொடுத்திருந்தோம்.*

*66மோசே அவரிடம், "உமக்கு வழங்கப்பட்ட கல்வியறிவை நீர் எனக்குக் கற்றுக் கொடுக்கும் பொருட்டு நான் உம்முடன் வரலாமா? என்று கேட்டார்.*
*67அதற்கு அவர், "உம்மால் என்னுடன் பொறுமையாக இருக்க முடியாது!*
*68உம்முடைய அறிவை மீறியதாக இருக்கும் விஷயங்களில் எவ்வாறு உம்மால் பொறுமையாக இருக்க முடியும்?" என்று கேட்டார்.*
*69"அல்லாஹ் விரும்பினால் நீர் என்னைப் பொறுமையாளராகக் காண்பீர். நான் உமக்கு எதிலும் எதிராகச் செயல்பட மாட்டேன்" என்றார் மோசே.*
*70அவர், "நீர் என்னுடன் வருவதாக இருந்தால் நானாக உம்மிடம் கூறும்வரை எதைப்பற்றியும் நீர் என்னிடம் கேட்கக் கூடாது" என்று கூறினார்.*

*71இருவரும் (கடலோரமாக) நடந்து ஒரு கப்பலில் ஏறியபோது அந்த அடியார் அதில் துளையிட்டுவிட்டார். அப்போது மோசே, "கப்பலில் உள்ளவர்களை மூழ்கடித்து விடவா நீர் அதில் துளையிட்டீர்? நீர் அபாயகரமான செயலைச் செய்துவிட்டீர்" என்று கூறினார்.*
*72அப்போது அடியார், "உம்மால் என்னுடன் பொறுமையாக இருக்கமுடியாது என்று நான் (முன்பே) உமக்குக் கூறவில்லையா?" என்று கேட்டார்.*
*73மோசே, "நான் (உமது நிபந்தனையை) மறந்து விட்டதற்காக என்னைக் குற்றங்கூறாதீர். என் விஷயத்தில் கடுமையாக நடந்துகொள்ளாதீர்" என்று கூறினார்.*

*74பின்னர் இருவரும் (கப்பலிலிருந்து இறங்கித்) தம் பயணத்தைத் தொடர்ந்தனர். வழியில் ஒரு சிறுவனைக் கண்டபோது அவர் (அடியார்) அவனைக் கொன்று விட்டார்.*

*“ஒரு பாவமும் அறியாத சிறுவனைக் கொன்றுவிட்டீரே! அவன் யாரையும் கொலை செய்திருக்கவில்லையே! நீர் தீயசெயலைச் செய்துவிட்டீர்” என்று மோசே கூறினார்.*

*75அவர், உம்மால் என்னுடன் பொறுமையாக இருக்க முடியாது என்று நான் உமக்கு (முன்னரே) கூறவில்லையா?”*
*என்று கேட்டார். 76அப்போது மோசே, “இதன் பின்னரும் நான் உம்மிடம் எதைப் பற்றியாவது கேட்டால் என்னை உம்முடன் வைத்துக்கொள்ள வேண்டாம். நீர் என்னிடமிருந்து போதுமான மன்னிப்புக் கோருதலைப் பெற்று விட்டீர்” என்று*
*கூறினார். 77இருவரும் தம் பயணத்தைத் தொடர்ந்தனர். ஓர் ஊரில் இருந்தவர்களிடம் அவர்கள் உணவு கேட்டபோது அவ்வூர்வாசிகள் விருந்தோம்ப மறுத்து விட்டனர். அங்கு இடிந்து விழும் நிலையில் இருந்த ஒரு சுவரை இருவரும் கண்டனர். (அந்த) அடியார் அதனை நிமிர்த்தினார். “நீர் நினைத்திருந்தால் இதற்காக ஏதேனும் கூலியைப் பெற்றிருக்கலாமே?” என்று மோசே*
*கேட்டார். 78அப்போது அவர், “இதுவே உமக்கும் எனக்கும் இடையே பிரிவு (நேர வேண்டிய தருணம்) ஆகும். உம்மால் பொறுமையாக இருக்க முடியாத விஷயங்கள் குறித்த உண்மை நிலையை நான் உமக்கு இப்போது தெரிவிக்கிறேன்.*

*79“அந்தக் கப்பல், கடலில் வேலை செய்துகொண்டிருந்த ஏழைகள் சிலருக்குரியது. அக்கப்பல் செல்லும் வழியில் அவர்களுக்குப் பின்னால் இருந்த ஓர் அரசன் (பழுதில்லா) ஒவ்வொரு கப்பலையும் வலுக்கட்டாயமாகக் கைப்பற்றிக் கொண்டிருந்தான். எனவேதான் அதனைப் பழுதாக்கிட விரும்பினேன்”*

*80(அந்தச்)“சிறுவனின் பெற்றோர் நம்பிக்கையாளர்களாகஇருந்தனர். அவன் வளர்ந்து தனது வரம்பு மீறலாலும் (ஓரிறை)மறுப்பினாலும் அவர்களைத் துன்பத்திற்குள்ளாக்குவானோ என நாம்*
*அஞ்சினோம். 81ஆகவே அவர்களின் இறைவன் அவர்களுக்கு அவனுக்குப் பதிலாக அவனைவிடத் தூய்மையில் சிறந்த,*

*பெற்றோரிடம் அன்பு பொழிகின்ற ஒரு மகனை வழங்கிடவேண்டும் என நாம் விரும்பினோம்.*

[82]*அந்தச் சுவர் அந்நகரிலுள்ள இரு அநாதைச் சிறுவர்களுக்கு உரியதாகும். அதன் அடியில் அவர்களுக்குரிய ஒரு புதையல் இருக்கிறது. அவர்களின் தந்தை நல்ல மனிதராக இருந்தார். ஆகவே அவர்கள் இருவரும் தம் பருவ வயதை அடைந்து தங்களுக்குரிய புதையலை எடுத்துக் கொள்ளவேண்டும் என்று உம் இறைவன் விரும்பினான். இவை உம் இறைவனின் அருளால் நிகழ்ந்தவையாகும். நான் என் விருப்பப்படி எதையும் செய்யவில்லை. இவைதாம் நீர் பொறுமையாக இருக்க முடியாதிருந்த நிகழ்வுகளின் உண்மை நிலையாகும்" என்று (அடியார்) விவரித்தார்.*

[83]*(நபியே!) அவர்கள் துல்கர்னைனைப் பற்றி உம்மிடம் கேட்கின்றனர். "அவரைப்பற்றிய சில விவரங்களை நான் உங்களுக்கு எடுத்துரைப்பேன்" என்று நீர் கூறுவீராக!* [84]*நாம் அவருக்குப் பூமியில் ஆட்சியை வழங்கியிருந்தோம். அனைத்துப் பொருள்களையும் அடைவதற்கான வழியையும் அவருக்குக் (கற்றுக்) கொடுத்திருந்தோம்.*

[85]*அவர் ஒரு குறிப்பிட்ட வழியில் சென்றார்.* [86]*சூரியன் மறையும் இடத்தை அடைந்தபோது அது சேற்றுநீரில் மறைவதைக் கண்டார். அங்கு ஒரு சமூகத்தினரைக் கண்டார். அப்போது நாம் "துல்கர்னைனே! நீர் விரும்பினால் இவர்களைத் தண்டிக்கலாம். விரும்பினால் இவர்களுடன் நல்லமுறையில் நடந்துகொள்ளலாம்" என்று கூறினோம்.* [87]*அவர், "அநீதி இழைத்தவரைத் தண்டிப்போம். பின்னர்த் தம் இறைவனிடம் அவர் கொண்டு செல்லப்படுவார். அவன் அவருக்குக் கடுந்தண்டனை அளிப்பான்" என்று கூறினார்.* [88]*"ஆனால் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிபவருக்கு அழகிய கூலி உண்டு. நாம் எமது கட்டளையில் எளிதானதையே அவருக்குக் கூறுவோம்" என்றும் அவர் கூறினார்.*

*[89]பின்னர் அவர் வேறொரு வழியில் சென்றார். [90]அவர் சூரியன் உதிக்கும் இடத்தை அடைந்தபோது அது ஒரு சமூகத்தினர் மீது உதிப்பதைக் கண்டார். நாம் சூரிய ஒளியிலிருந்து அவர்களுக்குத் தடுப்பையும் (கட்டடங்கள், மரநிழல்) ஏற்படுத்தியிருக்கவில்லை.*
*[91](அச்சமூகத்தினர் நிலை) இவ்வாறிருந்தது. (அவர்களை அவ்வாறே அவர் விட்டுவிட்டார்) துல்கர்னைனிடம் இருந்தவை (அவருடைய அதிகாரத்திற்கும் கட்டளைக்கும் உட்பட்டவை) அனைத்தையும் நாம் அறிந்திருந்தோம்.*

*[92]அதன்பின்னர் அவர் மற்றொரு வழியில் சென்றார்.*
*[93]இரு மலைகளுக்கிடையே உள்ள ஓரிடத்தை அடைந்தபோது அங்கே ஒரு சமூகத்தினரைக் கண்டார். அவர் பேசிய எந்தச் சொல்லையும் அவர்கள் விளங்கிக் கொள்ளவில்லை. [94]அவர்கள்,*
*"துல்கர்ணைனே! யஃஜூஜ், மஃஜூஜ் (கோக், மகோக்) கூட்டத்தினர் நாட்டில் குழப்பம் விளைவிக்கின்றனர். எனவே எங்களுக்கும் அவர்களுக்கும் இடையே ஏதேனும் தடுப்பை ஏற்படுத்த நாங்கள் உமக்கு ஒரு தொகையைத் திரட்டித் தரலாமா?" என்று (சைகைகள் மூலம்) கேட்டனர்.*

*[95]அவர், "எனக்கு என் இறைவன் அளித்திருப்பவையே மேலானவையாகும். எனவே நீங்கள் உழைப்பால் எனக்கு உதவுங்கள். நான் உங்களுக்கும் அவர்களுக்கும் இடையே ஒரு தடுப்புச் சுவரை எழுப்பி விடுகிறேன்" என்று கூறி,*
*[96]"நீங்கள் என்னிடம் இரும்புப் பாளங்களைக் கொண்டு வாருங்கள்" என்றனர். (அவற்றைக்கொண்டு) இரு மலைகளின் இடைவெளியை நிரப்பினார். (பின்னர் "உலைக்களம் அமைத்து) நெருப்பை ஊதுங்கள்" என்றார். (பின்னர்ச் செம்பை உருக்கி) என்னிடம் கொண்டு வாருங்கள் (அந்த) உருக்கிய செம்பை அதன் மீது ஊற்றுகிறேன்" என்றார். [97]"அவர்களால் (யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரால்) அதன்மீது ஏறவும் முடியாது; அதில் துளையிடவும் முடியாது" என்றார். [98]மேலும் அவர், "இது என் இறைவனின் அருளாகும். (எனினும்) என் இறைவனின்*

வாக்குறுதி(யாகிய இறுதிநாள்) வந்துவிட்டால் இதனை அவன் தூள்தூளாகத் தகர்த்து விடுவான். என் இறைவனின் வாக்குறுதி உண்மையானது" என்று கூறினார்.

[99](மறுமையாகிய) அந்நாளில் அலைகளைப் போல் சிலருடன் சிலர் மோதும்படி விட்டுவிடுவோம். (பின்னர்) எக்காளம் ஊதப்படும். நாம் அனைவரையும் ஒன்றாகத் திரட்டுவோம்.
[100]மறுப்பாளர்களுக்கு அந்நாளில் நரகத்தைக் காட்டுவோம்.
[101]எம்மை நினைவு கூர முடியாதபடி அவர்களின் அகக்கண்கள் திரையிடப்பட்டிருந்தன. (நல்லறிவுரைகளைச்) செவியுற இயலாதவர்களாகவும் அவர்கள் இருந்தனர்.

[102]மறுப்பாளர்கள் என்னை விடுத்து என் அடியார்களைப் பொறுப்பாளர்களாக ஆக்கிக் கொள்ளலாம் என்று எண்ணிக் கொண்டனரா? மறுப்பாளர்களைப் போற்றி வரவேற்க நாம் நரகத்தைத் தயார்செய்து வைத்துள்ளோம்.

[103](நபியே!) "தங்கள் செயல்களால் மிக அதிக இழப்பிற்குரியவர்கள் யார் என்பதை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?" என்று கேட்பீராக! [104]அவர்கள் எத்தகையோர் எனில் இவ்வுலக வாழ்வில் அவர்களின் முயற்சிகள் வீணாகிவிட்ட நிலையிலும் தாங்கள் நன்மை செய்து கொண்டிருப்பதாகவே கருதிக் கொண்டிருப்பவர்கள். [105]அவர்கள்தாம் தங்கள் இறைவனின் சான்றுகளையும் அவனைச் சந்திப்போம் என்பதையும் மறுத்தவர்கள். எனவே அவர்களின் (நற்)செயல்கள் அனைத்தும் அழிந்துவிட்டன. மறுமை நாளில் நாம் அவர்களுக்கு எந்த மதிப்பையும் அளிக்க மாட்டோம். [106]அவர்கள் (என்னை) மறுத்ததாலும் என் சான்றுகளையும் என் தூதர்களையும் ஏளனமாக எடுத்துக்கொண்டதாலும் நரகம்தான் அவர்களுக்குரிய கூலியாகும்.

[107]ஆனால் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்களுக்கு சொர்க்கச் சோலைகளில் உபசரிப்பு உண்டு. [108]அங்கு அவர்கள்

*என்றென்றும் தங்கியிருப்பர். அங்கிருந்து ஒருபோதும் வெளியேற விரும்பமாட்டார்கள்.*

[109]*(நபியே!) "என் இறைவனின் வார்த்தைகளை எழுதுவதற்கு கடலே மையாகி விட்டாலும் அது தீர்ந்துவிடுமேயல்லாது என் இறைவனின் வார்த்தைகள் தீர்ந்துபோகா. அத்துடன் அதனைப் போல் இன்னொரு கடலைச் சேர்த்துக் கொண்டாலும் சரியே!" என்று நீர் கூறுவீராக!*

[110]*(நபியே!) நீர் கூறும்: "நான் உங்களைப்போன்ற ஒரு மனிதன்தான். உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான் என்று எனக்கு அறிவிக்கப்படுகிறது. எனவே யார் தம் இறைவனின் சந்திப்பை எதிர்பார்க்கிறாரோ அவர் நற்செயல்புரியட்டும்; தம் இறைவனை வணங்குவதில் எவரையும் இணைவைக்காமல் இருக்கட்டும்".*

# 19. மர்யம் (மர்யம்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]*காஃப் – ஹா – யா – ஐன் – ஸாத்.*

[2]*(நபியே!) இது உம் இறைவன் தன் அடியாரான ஸகரிய்யாவின்*
*மீது பொழிந்த அருளைப்பற்றிய செய்தியாகும். [3]தம் இறைவனை*
*அவர் தாழ்ந்த குரலில் அழைத்தார் [4]"என் இறைவனே! எனது*
*எலும்புகள் வலுவிழந்து விட்டன; எனது தலையும் நரையால்*
*வெளுத்து விட்டது. ஆயினும் உன்னிடம் இறைஞ்சி வேண்டி*
*ஒருபோதும் நான் ஏமாற்றம் அடைந்ததில்லை. [5]எனக்குப்பின்*
*என் உறவினர்கள் (நிலை) குறித்து நான் அஞ்சுகிறேன். என்*
*மனைவியோ மலடியாக இருக்கிறாள். எனவே உன் தனிப்பட்ட*
*அருளால் எனக்கு ஒரு வாரிசை வழங்குவாயாக! [6]அவர்*
*எனக்கும் ஜேக்கபின் குடும்பத்தினருக்கும் (தூதுத்துவ) வாரிசாக*
*இருக்கட்டும். என் இறைவனே! அவரை உன் அன்பிற்குரியவராக*
*ஆக்கி வைப்பாயாக!" என்று வேண்டினார்.*

*[7]ஸகரிய்யா! “நாம் உமக்கு ஓர் ஆண் குழந்தை பிறக்கும் என்று நற்செய்தி கூறுகிறோம். அவரின் பெயர் ஜான் (யஹ்யா) ஆகும். நாம் இதற்கு முன் இப்பெயருடைய எவரையும் படைக்கவில்லை” (என்று இறைவன் கூறினான்). [8]“என் இறைவனே, எனக்கு எவ்வாறு மகன் பிறப்பான்? என் மனைவியோ மலடி. நானோ முதுமையின் எல்லையை அடைந்துவிட்டேனே!” என்று அவர் கூறினார்.*

*[9](அதற்கு) “அவ்வாறே நடக்கும்” என்ற பதில் கிடைத்தது. “இது எனக்கு எளிதானது. இதற்கு முன்னர் நீர் எதுவாகவும் இல்லாதிருந்த நிலையில் உம்மைப் படைத்திருக்கிறேனே” என்று உம் இறைவன் கூறினான். [10]அதற்கு ஸகரிய்யா, “என் இறைவனே! எனக்கு ஏதேனும் ஒரு அடையாளத்தை ஏற்படுத்துவாயாக!” என்று கேட்டார். அதற்கு அல்லாஹ் “உடல்நலத்துடன் இருந்தும் உம்மால் மூன்று நாட்களுக்கு மக்களுடன் பேச முடியாது. இதுவே உமக்கு அடையாளமாகும்” என்று கூறினான். [11]அவர் தொழுகை மாடத்திலிருந்து வெளியேறித் தம் மக்களிடம் வந்தார். (வாய் திறந்து பேச முடியாத நிலையில்) நீங்கள் காலையிலும் மாலையிலும் இறைவனைத் துதியுங்கள்” என்று சைகையால் அறிவித்தார்.*

*[12](அவ்வாறே ஸகரிய்யாவுக்கு ஜான் (யஹ்யா) பிறந்த பின்னர் நாம் அவரிடம்) “ஜான்! இவ்வேதத்தை (தவ்ராத்) உறுதியாகப் பிடித்துக்கொள்ளும்” என்று கூறினோம். இளஞ்சிறுவராக இருந்தபோதே அவருக்கு நாம் ஞானத்தை வழங்கினோம். [13]நாம் அவருக்கு இளகிய மனத்தையும் தூய்மைத்தன்மையையும் வழங்கினோம். அவர் இறையச்சமுடையவராகவும் [14]தம் பெற்றோருக்கு நன்மை செய்பவராகவும் விளங்கினார். செருக்குடையவராகவோ கீழ்ப்படியாதவராகவோ அவர் இருக்கவில்லை. [15]அவர் பிறந்த நாளிலும் அவர் இறக்கும் நாளிலும் (மறுமையில்) அவர் எழுப்பப்படும் நாளிலும் அவர் மீது சாந்தி உண்டாகட்டும்.*

[16](நபியே! இவ்)வேதத்தில் (குர்ஆன்) மர்யம் பற்றி(க்
கூறப்பட்டிருப்பதை மக்களுக்கு) நினைவூட்டுவீராக! அவர் தம்
சமூக மக்களைவிட்டுத் தனித்துக் கிழக்கேயுள்ள ஓரிடத்திற்குச்
சென்றுவிட்டார். [17]அவர்களிடமிருந்து அவர் தன்னைத்தானே
திரையிட்டு மறைத்துக் கொண்டார். எனவே நாம் ஒரு
வானவரை அவரிடம் அனுப்பினோம். அவர் அவருக்கு
முன்னால் ஒரு முழு மனிதராக வெளிப்பட்டார். [18](அவரைக்
கண்ட மர்யம்) "உம்மிடமிருந்து என்னைப் பாதுகாக்குமாறு
அளவற்ற அருளாளனிடம் நான் வேண்டுகிறேன், நீர்
இறையச்சமுடையோராயின் (அகன்றுவிடும்)" என்றார். [19]அதற்கு
அவர், "நான் ஒரு தூய்மையான ஆண் குழந்தை உமக்கு
அளி(க்கப்படும் என்பதை அறிவி)ப்பதற்காக இறைவனால்
அனுப்பப்பட்டுள்ள வானவராவேன்" என்று கூறினார். [20]அவர்
"எனக்குக் குழந்தை எவ்வாறு பிறக்கும்? என்னை எந்த மனிதனும்
தீண்டியதில்லையே! நான் கெட்ட நடத்தையுள்ளவளும்
அல்லவே!" என்றார். [21]அப்போது வானவர், "அவ்வாறுதான்
நிகழும்" என்றார். "உம் இறைவன், 'இவ்வாறு செய்வது எனக்கு
மிகவும் எளிதானது. நாம் அவரை மனிதர்களுக்கு ஒரு சான்றாகவும்
எம்மிடமிருந்து வரும் ஓர் அருளாகவும் ஆக்குவோம். இது
(முன்பே) வரையறுக்கப்பட்ட விஷயமாகும்' எனக் கூறுகிறான்"
என்றும் கூறினார்.

[22]பின்னர் அவர் கருவுற்றார். அதனோடு அவர்
தொலைவான ஓரிடத்திற்குச் சென்று விட்டார். [23]பிரசவ வலி
அவரை ஒரு பேரீச்சை மரத்தின் அருகில் கொண்டு சேர்த்தது.
அப்போது அவர் "அந்தோ! நான் இதற்கு முன்னரே இறந்து,
முற்றிலும் மறக்கப்பட்டவளாகி விட்டிருக்கக் கூடாதா!" என்று
புலம்பினார்.

[24]அப்போது வானவர் பேரீச்சை மரத்தின் அடிப்புறமிருந்து
மர்யத்தை அழைத்து "நீர் கவலைப்படாதீர்! இறைவன் உமக்கு
அருகில் ஒரு நீரோடையை ஏற்படுத்தியுள்ளான். [25]பேரீச்சை

மரத்தின் அடிப்பகுதியைப் பிடித்து நீர் உம் பக்கமாக உலுக்குவீராக!
அது உம்மீது கனிந்த பேரீச்சைகளை உதிர்க்கும். [26]எனவே
உண்டும் பருகியும் கண் குளிர்ச்சி பெறுவீராக! மனிதர்களில்
யாரையாவது நீர் கண்டால், 'நான் அளவற்ற அருளாளனுக்காக
நோன்பு நோற்றுள்ளேன். ஆதலால் இன்று யாரிடமும் நான்
பேச மாட்டேன்' என்று கூறுவீராக!" என்றார்.

[27]பின்னர் அவர் தம் குழந்தையைத் தூக்கிக்கொண்டு தம்
சமூக மக்களிடம் திரும்பி வந்தார். அவர்கள், "மர்யமே! நீ பெரும்
பாவச்செயலைச் செய்துவிட்டாயே! [28]ஆரோனின் சகோதரியே!
உன் தந்தை தீய மனிதராக இருக்கவில்லை. உன் தாயும் நடத்தை
கெட்டவராக இருக்கவில்லை" என்று கூறினர்.

[29]மர்யம் அக்குழந்தையைச் சுட்டிக் காட்டினார். அதற்கு
அவர்கள், "தொட்டிலில் இருக்கும் குழந்தையிடம் நாங்கள்
எவ்வாறு பேசுவது?" என்று கேட்டனர். [30]உடனே அக்குழந்தை,
"நான் அல்லாஹ்வின் அடியான், அவன் எனக்கு வேதத்தை
வழங்கி என்னைத் தூதராகவும் ஆக்கியுள்ளான்; [31]நான்
எங்கிருந்தபோதிலும் அவன் என்னைப் பெரும் பேறுள்ளவனாக
ஆக்கியுள்ளான். நான் உயிரோடு இருக்கும் காலம்வரை
தொழுகையையும் கடமையாக்கப்பட்ட கொடையையும் எனக்கு
வலியுறுத்தியுள்ளான். [32]தாய்க்குப் பணிவிடை செய்பவனாகவும்
என்னை ஆக்கியுள்ளான். வரம்பு மீறுபவனாகவும்
நற்பேறற்றவனாகவும் அவன் என்னை ஆக்கவில்லை. [33]நான் பிறந்த
நாளிலும் நான் இறக்கும் நாளிலும் நான் மீண்டும் எழுப்பப்படும்
நாளிலும் என் மீது சாந்தி உண்டாகும்" என்று கூறியது.

[34]இவர்தான் மர்யத்தின் மைந்தர் இயேசு. இவர் கூறியதே
முழுமையான உண்மை. இது குறித்துத்தான் முரண்பட்டுக்
கொண்டிருக்கிறார்கள். [35]அல்லாஹ் தனக்குக் குழந்தையை
உண்டாக்கிக் கொண்டான் என்பது அவனது மேன்மைக்குப்
பொருந்தாது. அவன் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்.

*ஒன்றை அவன் அறுதியிட்டுவிட்டால் 'ஆகு' என்றுதான் கூறுவான். அது ஆகிவிடும்.*

[36]*"உறுதியாக, அல்லாஹ்தான் என் இறைவனும் உங்கள் இறைவனும் ஆவான். எனவே அவனையே நீங்கள் வணங்குங்கள்.*
*இதுவே நேர்வழியாகும்" என்றும் அவர் கூறினார்.* [37]*ஆயினும்*
*பல்வேறு பிரிவினர் தங்களுக்குள் முரண்பட்டுக் கொண்டனர். எனவே அந்த மாபெரும் நாள் வரும்போது மறுப்பாளர்களுக்குக்*
*கேடுதான் நேரும்.* [38]*அவர்கள் அனைவரும் எம்மிடம் வரும்நாளில்*
*அவர்கள் நன்றாகச் செவிசாய்ப்பார்கள்; பார்ப்பார்கள். ஆயினும் இன்றோ அத்தீவினையாளர்கள் தெளிவான கெடுவழியிலேயே இருக்கின்றனர்.*

[39]*(நபியே!) அனைத்து விவகாரங்களுக்கும்*
*தீர்ப்பளிக்கப்பட்டுவிடும் துயர்மிகு நாளைப்பற்றி எச்சரிக்கை செய்வீராக! இன்று அவர்கள் அலட்சியமாகவும்*
*நம்பிக்கைகொள்ளாமலும் இருக்கின்றனர்.* [40]*பூமிக்கும்*
*அதிலுள்ளவர்களுக்கும் நாமே உரிமையாளராவோம். அவர்கள் எம்மிடமே திரும்பக் கொண்டு வரப்படுவர்.*

[41]*(நபியே!) இவ்வேதத்தில் ஆப்ரஹாம் பற்றி(க்*
*கூறப்பட்டிருப்பதை மக்களுக்கு) நினைவூட்டுவீராக! உறுதியாக*
*அவர் உண்மையாளராகவும் இறைத்தூதராகவும் இருந்தார்.*
[42]*அவர் தம் தந்தையிடம், "தந்தையே! எதையும் கேட்கவோ*
*பார்க்கவோ இயலாத எந்தப் பயனையும் அளிக்க இயலாத ஒன்றை*
*நீங்கள் ஏன் வணங்குகிறீர்கள்?* [43]*என் தந்தையே! உங்களுக்குக்*
*கிடைக்காத அறிவு எனக்குக் கிடைத்துள்ளது. எனவே என்னைப்*
*பின்பற்றுங்கள். நான் உங்களுக்கு நேர்வழியைக் காட்டுகிறேன்.*
[44]*என் தந்தையே! சாத்தானை வணங்காதீர்கள். உறுதியாக*
*சாத்தான் அளவற்ற அருளாளனுக்கு எதிராகச் செயல்படுபவன்.*
[45]*என் தந்தையே! அளவற்ற அருளாள(னாகிய இறைவ)னிடமிருந்து*
*வரும் வேதனை உங்களைப்பற்றிக் கொள்ளும் என நான்*

*அஞ்சுகிறேன். அப்போது நீங்கள் சாத்தானுக்கு உற்ற நண்பராகி விடுவீர்கள்” என்று கூறினார்.*

46*(ஆப்ரஹாமின் தந்தை) “ஆப்ரஹாமே! நீ என் தெய்வங்களைப் புறக்கணித்து விட்டாயா? நீ இதிலிருந்து விலகிக் கொள்ளவில்லையென்றால் நான் உன்னைக் கல்லெறிந்து கொன்று விடுவேன். நீ என்னைவிட்டு நிரந்தரமாக விலகிவிடு” என்றார்.*
47*ஆப்ரஹாம், “உங்களுக்குச் சாந்தி உண்டாகட்டும்! நான் உங்களுக்காக என் இறைவனிடம் பாவமன்னிப்புக் கோருவேன். உறுதியாக அவன் என்மீது இரக்கம் மிக்கவன்.*
48*உங்களிடமிருந்தும் அல்லாஹ்வையன்றி நீங்கள் அழைக்கின்ற தெய்வங்களிடமிருந்தும் நான் விலகிக் கொள்கிறேன். என் இறைவனையே நான் வணங்குவேன். என் இறைவனை (வணங்கி) அழைப்பதால் நான் நற்பேறற்றவன் ஆகாமல் இருப்பேன்” என்று கூறினார்.*

49*அவர் அம்மக்களிடமிருந்து அல்லாஹ்வையன்றி அவர்கள் வணங்கிக்கொண்டிருந்த தெய்வங்களிடமிருந்தும் விலகிக் கொண்டபோது நாம் அவருக்கு ஈசாக்கையும் ஜேக்கபையும் வழங்கினோம். அவர்கள் ஒவ்வொருவரையும் தூதராக ஆக்கினோம்.*
50*அவர்களுக்கு எம் அருளை வழங்கினோம். உயர்ந்த உண்மையான புகழையும் வழங்கினோம்.*

51*(நபியே!) இவ்வேதத்தில் மோசேயைப்பற்றி(க் கூறப்பட்டிருப்பதையும் மக்களுக்கு) நினைவூட்டுவீராக! அவர் தேர்ந்தெடுக்கப்பட்டவராக இருந்தார். தூதராகவும் நபியாகவும் விளங்கினார்.*
52*(ஸினாய்) மலையின் வலப் பக்கத்திலிருந்து நாம் அவரை அழைத்தோம். உரையாடுவதற்காக அவரை நெருங்கி வரச்செய்தோம்.*
53*எம் அருளிலிருந்து அவரின் சகோதரர் ஆரோனையும் தூதராக்கி (அவருக்குத் துணையாகத்) தந்தோம்.*

54*இவ்வேதத்திலிருந்து இஸ்மவேலையும் நினைவுபடுத்துவீராக! அவர் வாக்குறுதியைப் பேணுபவராகவும் தூதராகவும்*

*நபியாகவும் இருந்தார். [55]அவர் தொழுகையையும்*
*கடமையாக்கப்பட்ட கொடையையும் நிறைவேற்றுமாறு*
*தம் மக்களை ஏவுபவராகவும் இருந்தார். தம் இறைவனின்*
*விருப்பத்திற்குரியவராகவும் விளங்கினார். [56]இவ்வேதத்திலிருந்து*
*இத்ரீஸையும் நினைவுபடுத்துவீராக! உறுதியாக அவர்*
*உண்மையாளராகவும் தூதராகவும் இருந்தார். [57]நாம் அவரை*
*மேலான இடத்திற்கு உயர்த்தினோம். [58]இவர்கள் (அனைவரும்)*
*அல்லாஹ் அருள்புரிந்த தூதர்களாவர். இவர்கள் ஆதமுடைய*
*வழித்தோன்றல்களிலிருந்தும் நோவாவுடன் கப்பலில் நாம்*
*ஏற்றிவிட்டவர்களிலிருந்தும் ஆப்ரஹாம் மற்றும் இஸ்ராயீலுடைய*
*வழித்தோன்றல்களிலிருந்தும் (மேலும்) நாம் நேர்வழிகாட்டித்*
*தேர்ந்தெடுத்தவர்களிலிருந்தும் வந்தவர்கள் ஆவர். அவர்களிடம்*
*அளவற்ற அருளாளனின் வசனங்கள் ஓதிக் காட்டப்பட்டால்*
*அவர்கள் தலைபணிந்தவாறும் அழுதவாறும் விழுந்துவிடுவர்.*

*[59]அவர்களின்பின் வந்த தலைமுறையினர் தொழுகையை*
*வீணாக்கினர்; மன விருப்பங்களைப் பின்பற்றினர். அவர்கள்*
*விரைவில் அழிவைச் சந்திப்பார்கள், [60](ஆயினும்)*
*பாவமன்னிப்புக்கோரி நம்பிக்கைகொண்டு நற்செயல்*
*புரிவோரைத்தவிர. இத்தகையோர் சொர்க்கத்தில் நுழைவார்கள்.*
*சிறிதளவும் இவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள்.*

*[61]அளவற்ற அருளாளன் தன் அடியார்களுக்கு மறைவாகவுள்ள*
*நிலையான சொர்க்கங்களை வாக்களித்துள்ளான். அவனது*
*வாக்குறுதி நிறைவேற்றப்பட்டே தீரும். [62]அங்கு 'சாந்தி' என்பதைத்*
*தவிர வீண்பேச்சு எதையும் அவர்கள் செவியுறமாட்டார்கள்.*
*காலையிலும் மாலையிலும் அவர்களுக்குரிய உணவு*
*கிடைத்துக் கொண்டே இருக்கும். [63]இத்தகைய சொர்க்கத்திற்கு*
*எம் அடியார்களில் இறையச்சமுடையோரை நாம்*
*வாரிசுகளாக்குவோம்.*

*[64](நபியே!) நாங்கள் (வானவர்கள்) உம் இறைவனின்*
*கட்டளையின்றி இறங்குவதில்லை. எங்களுக்கு முன்னால்*

*இருப்பவை, பின்னால் இருப்பவை அவையிரண்டுக்கும் இடையே இருப்பவை அனைத்தும் அவனுக்கே உரியன. உம் இறைவன் (எதனையும்) மறந்து விடுபவனல்லன்.* [65]*வானங்கள், பூமி மற்றும் அவற்றிற்கிடையேயுள்ள அனைத்திற்கும் அவன்தான் இறைவன். எனவே அவனையே நீர் வணங்குவீராக! அவனது வழிபாட்டில் நிலைத்த பொறுமையுடன் இருப்பீராக! அவனுக்கு நிகரான எவரையும் நீர் அறிவீரா?*

[66]*"நான் இறந்து விட்டால் மீண்டும் உயிர் கொடுக்கப்பட்டு எழுப்பப்படுவேனா?" என்று மனிதன் கேட்கிறான்.* [67]*இதற்கு முன்னர் எப்பொருளாகவும் இல்லாதிருந்த(அ)வனை நாம்தான் படைத்தோம் என்பதை அவன் எண்ணிப் பார்க்கவில்லையா?*
[68]*எனவே (நபியே) உம் இறைவன்மீது சத்தியமாக! நாம் அவர்களையும் சாத்தான்களையும் ஒன்றுதிரட்டுவோம். நரகத்தைச் சுற்றிலும் மண்டியிட்டவர்களாக அவர்களை நிறுத்துவோம்.*

[69]*பின்னர் ஒவ்வொரு கூட்டத்தாரிலிருந்தும் அளவற்ற அருளாள(னான இறைவ)னுக்கு எதிராகச் செயல்படுவதில் தீவிரமாக இருந்தவர்களைத் தனிமைப்படுத்தி விடுவோம்.*
[70]*நரகத்தில் நுழைவதற்கு மிகவும் தகுதியுடையவர்களை நாம் நன்கறிவோம்.* [71]*உங்களில் எவரும் அதனைக் கடக்காமல் இருக்க முடியாது. இதனை நிறைவேற்றுவது உம் இறைவன்மீதுள்ள கடமையாகும்.* [72]*இறையச்சமுடையோரை நாம் காப்பாற்றுவோம்; தீவினையாளர்களை மண்டியிட்டவர்களாக அதிலேயே விட்டுவிடுவோம்.*

[73]*எம் தெளிவான வசனங்கள் மறுப்பாளர்களிடம் எடுத்துரைக்கப்பட்டால் "நம் இரு பிரிவினரில் யார் நல்லநிலையில் இருக்கிறார்கள்? யாருடைய கூட்டம் மிகச் சிறந்ததாக இருக்கிறது?" என்று மறுப்பாளர்கள் நம்பிக்கையாளர்களிடம் கேட்கின்றனர்.* [74]*இவர்களுக்கு முன்னர் இவர்களைவிட அதிக வசதிகளை உடையவர்களாகவும் தோற்றத்தில் சிறப்புடையவர்களாகவும் விளங்கிய எத்தனையோ சமூகத்தினரை நாம் அழித்திருக்கின்றோம்.*

75(நபியே!) “கெடுவழியில் இருப்பவருக்கு அளவற்ற
அருளாளன் காலநீட்டிப்பை அளிக்கிறான். இறுதியில் அவர்கள்
வாக்களிக்கப்பட்ட வேதனையை அல்லது மறுமை நாளைக்
காணும்போது யாருடைய நிலை கேடானது, யாருடைய கூட்டம்
பலம் குன்றியது என்பதை அவர்கள் அறிந்துகொள்வார்கள்”
என்று நீர் கூறுவீராக!

76நேர்வழியைப் பின்பற்றுவோருக்கு அல்லாஹ் நேர்வழியில்
மேலும் முன்னேற்றம் அளிக்கிறான். நிலைத்திருக்கும்
நற்செயல்கள்தாம் உம் இறைவனிடம் நற்கூலி மற்றும் நல்ல முடிவு
என்ற வகையில் சிறந்தனவாகும்.

77(நபியே!) எமது குர்ஆனின் வசனங்களை ஏற்கமறுத்தவனைப்
பார்த்தீரா? தனக்குச் செல்வமும் குழந்தைகளும் கிடைத்தே தீரும்
என்று அவன் கூறுகிறான். 78அவன் மறைவான விஷயங்களைக்
கண்டு கொண்டானா? அல்லது அளவற்ற அருளாளனிடம்
ஏதேனும் வாக்குறுதி பெற்றுள்ளானா? 79ஒருபோதும் இல்லை.
அவன் கூறுவதை எல்லாம் நாம் பதிவு செய்துகொள்வோம்.
அவனது வேதனையை மேலும் அதிகமாக்குவோம்.
80(தன்னுடையவை என்று பெருமையாக) அவன் சொந்தம்
கொண்டாடும் யாவற்றுக்கும் நாமே உரிமையாளராவோம்.
அவன் எம்மிடம் தனியாகவே வருவான்.

81தங்களுக்கு உதவுபவர்கள் என்று (இணைவைப்பாளர்களாகிய)
அவர்கள் அல்லாஹ்வை விடுத்து வேறு தெய்வங்களை ஏற்படுத்திக்
கொண்டனர். 82ஒருபோதும் இல்லை. அவர்களின் வழிபாட்டை
(அத்தெய்வங்கள்) மறுத்து அவர்களுக்கு எதிரானவர்களாகி
விடுவர்.

83(நபியே!) மறுப்பாளர்களின் மீது நாம் சாத்தான்களை
ஏவி விட்டுள்ளதை நீர் கவனிக்கவில்லையா? அவர்கள்
மேன்மேலும் இவர்களை(ப் பாவம் புரியுமாறு) தூண்டிக்

கொண்டே இருக்கிறார்கள். 84எனவே இவர்களுக்கெதிராக
நீர் அவசரப்பட வேண்டாம். நாம் இவர்களின் நாட்களைக்
கணக்கிட்டுக் கொண்டிருக்கிறோம். 85அன்றைய நாள் நாம்
இறையச்சமுடையோரை அளவற்ற அருளாளன் (ஆன எம்)
இடம் விருந்தாளிகளாக்கி ஒன்று சேர்ப்போம். 86குற்றவாளிகளைத்
தாகமுள்ளவர்களாக நரகத்தை நோக்கி விரட்டிச் செல்வோம்.
87அளவற்ற அருளாளனிடம் அனுமதி பெற்றவர்களைதவிர வேறு
எவரும் (எவருக்கும் அவனிடம்) பரிந்துரை செய்யும் அதிகாரம்
பெற்றிருக்கமாட்டார்கள்.

88 'அளவற்ற அருளாளன் (தனக்கு) மகனாக ஒருவரை
உண்டாக்கிக் கொண்டான்' என்று அவர்கள் கூறுகிறார்கள்.
89நீங்கள் மிகப்பெரிய பழிச்சொல்லைக் கூறியுள்ளீர்கள். 90இதனால்
வானங்கள் வெடித்துப் பூமி துண்டுதுண்டாகி மலைகள் இடிந்து
விழக்கூடும். 91ஏனெனில் அவர்கள் அளவற்ற அருளாளனுக்கு
மகன் இருப்பதாகக் கூறுகிறார்கள். 92மகனை உண்டாக்கிக்
கொள்வது அளவற்ற அருளாளனுக்கு உகந்ததன்று.

93வானங்களிலும் பூமியிலும் உள்ள அனைவரும் அளவற்ற
அருளாளனிடம் அடிமைகளாகவே வருவார்கள். 94அவர்களை
அவன் நன்கு கணக்கிட்டு வைத்துள்ளான். அவர்களின்
எண்ணிக்கை அவனிடமே இருக்கிறது. 95மறுமை நாளில்
அவர்கள் அனைவரும் அவனிடம் தனித்தனியாகவே வருவார்கள்.
96அளவற்ற அருளாளன் நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர்கள்
மீது அனைவரையும் அன்புகொள்ளச் செய்வான்.

97(நபியே!) இந்தக் குர்ஆனை உமது மொழியில்
எளிதாக்கியுள்ளோம். அது இதன்மூலம் நீர்
இறையச்சமுடையோருக்கு நற்செய்தி கூறுவதற்காகவும் பிடிவாதம்
கொண்ட மக்களை எச்சரிப்பதற்காகவும்தான். 98அவர்களுக்கு
முன் எத்தனையோ சமூகத்தினரை நாம் அழித்துள்ளோம்.
அவர்களில் யாரையேனும் நீர் (இப்போது) காண்கிறீரா? அல்லது
அவர்களின் ஓசையையேனும் நீர் செவியுறுகிறீரா?

# 20. தா-ஹா ( தாஹா )

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]தா – ஹா*

*[2](நபியே!) உம்மைத் துன்பப்படுத்துவதற்காக நாம் இந்தக் குர்ஆனை உமக்கு அருளவில்லை; [3](எமக்கு) அஞ்சுவோருக்கு அறிவுரையாகவே அருளினோம். [4]இது பூமியையும் உயர்ந்த வானங்களையும் படைத்தவனால் அருளப்பட்டதாகும் [5]அளவற்ற அருளாளன் இறையிருக்கையின் மேல் உயர்ந்துவிட்டான். [6]வானங்களிலும் பூமியிலும் அவற்றிற்கிடையிலும் பூமிக்கடியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியவை.*

*[7](நபியே!) நீர் உரத்துப் பேசினாலும் (தாழ்ந்த குரலில் பேசினாலும் இரண்டும் அவனுக்குச் சமமே) அவன் இரகசியத்தையும் ஏன் அதைவிட மறைவானதையும் நன்கறிகிறான். [8](அவன்தான்) அல்லாஹ்! அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவனுக்கு அழகிய பெயர்கள் இருக்கின்றன.*

*[9](நபியே!) மோசேயின் செய்தி உமக்கு எட்டியதா? [10]அவர் ஒரு நெருப்பைக் கண்டபோது தம் குடும்பத்தாரிடம், "இங்கேயே இருங்கள். நான் ஒரு நெருப்பைக் காண்கிறேன். அதிலிருந்து ஓர் எரி கொள்ளியை உங்களிடம் நான் கொண்டு வரக்கூடும், அல்லது அந்த நெருப்பின் அருகில் (எனக்கு) ஏதேனும் வழிகாட்டுதல் கிடைக்கலாம்" என்று கூறினார்.*

*[11]அவர் அங்குச் சென்றபோது "மோசே!" என்று அழைக்கப்பட்டார். [12]"நான்தான் உம் இறைவன். உம் காலணிகளைக் கழற்றிவிடும். ஏனெனில் நீர் 'துவா' எனும் புனிதப் பள்ளத்தாக்கில் இருக்கிறீர். [13]நான் உம்மை(என் தூதராக)த் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். எனவே உமக்கு அறிவிக்கப்படுவதைச் செவிசாய்த்துக் கேளும். [14]நான்தான்*

*அல்லாஹ், என்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. எனவே என்னையே வணங்குவீராக! என்னை நினைவுகூர்வதற்காகத் தொழுகையைக் கடைப்பிடிப்பீராக!* [15]*மறுமை வந்தே தீரும். நான் அ(து எப்போது வரும் என்ப)தை மறைத்துவைக்க விரும்புகிறேன். ஒவ்வொருவரும் அவரவர் செய்தவற்றுக்கான கூலியைப் பெற வேண்டும் என்பதற்காக!* [16]*அதனை நம்பாமல் தன் மன விருப்பப்படி நடப்பவன், நீர் அழிவிற்குள்ளாகிவிட வேண்டும் என்பதற்காக (மறுமையாகிய) அந்நாள் பற்றிய கவனத்திலிருந்து உம்மைத் திருப்பிவிட வேண்டாம்" (என இறைவன் கூறினான்.)*

[17]*(பின்னர்) "மோசே! உம் வலது கையில் இருப்பது என்ன?" (என்று அவன் கேட்டான்.)* [18]*அதற்கு அவர், "இது என் கைத்தடி. இதனை நான் ஊன்றிக் கொள்வேன். இதன்மூலம் என் ஆடுகளுக்கு இலைகளைப் பறிப்பேன். இன்னும் எனக்கு வேறு பல பயன்களும் இருக்கின்றன" என்றார்.* [19]*அதற்கு அவன், "மோசே! அதனைக் கீழே போடும்" என்றான்.* [20]*அவர் அதனைக் கீழே போட்டார். திடீரென அது நெளிந்து ஓடுகின்ற பாம்பாக மாறிவிட்டது.* [21]*அப்போது அவன் "அதனைப் பிடியும். பயப்படாதீர். நாம் அதனை முந்தைய நிலைக்கே மாற்றிவிடுவோம்" என்று கூறினான்.*

[22]*"நீர் உம் கையை அக்குளில் வைத்துக் கொள்ளும். அது மாசற்ற (ஒளிரும்) வெண்ணிறமாக வெளிப்படும், இது மற்றொரு சான்றாகும்.** [23]*எம் பெரிய சான்றுகளில் சிலவற்றை நாம் உமக்குக் காட்டுகிறோம்.* [24]*நீர் ஃபாரோவிடம் செல்வீராக. உறுதியாக அவன் வரம்பு மீறிவிட்டான்" (என்று கூறினான்).*

---

***விதை முளைத்து வெளிப்படுவதாகட்டும் ஒரு கைத்தடி பாம்பு போல மாறுவதாகட்டும் எந்த நிகழ்வாக இருந்தாலும் இந்த உலகில் உள்ள அனைத்தும் இறைவனின் அற்புதங்களே. இறைத்தூதர்கள் மூலமாக இறைவன் காட்டும் அசாதாரண அற்புதச் செயல்கள் எல்லாம் இவ்வுலகில் தினசரி நிகழும் செயல்களின் அற்புதங்களை மனிதனின் கவனத்திற்கு இறைவன் கொண்டு வருவதற்கானவையேயாகும்.**

[25]மோசே (பின்வருமாறு இறைஞ்சி வேண்டினார் : “என்
இறைவா! என் உள்ளத்தை விரிவாக்குவாயாக! [26]என் பணியை
எனக்கு எளிதாக்குவாயாக! [27]என் நாவிலுள்ள முடிச்சை
அவிழ்த்து விடுவாயாக! [28]அப்போதுதான் மக்கள் என்
பேச்சைப் புரிந்து கொள்வார்கள். [29]என் குடும்பத்திலிருந்து
ஒருவரை எனக்கு உதவியாளராக ஆக்குவாயாக! [30]அது
என் சகோதரர் ஆரோனாக (இருக்கட்டும்). [31]அவர்மூலம்
என்னை வலுப்படுத்துவாயாக! [32]எனது பணியில் அவரையும்
கூட்டாக்குவாயாக! [33]அதனால் நாங்கள் மேன்மேலும் உனது
தனித்துயர் தன்மையைத் துதித்துப் போற்ற வேண்டும்; [34]உன்னை
மேலதிகமாக நினைவுகூர வேண்டும். [35]உறுதியாக நீ எங்களை
உற்றுநோக்கிக் கொண்டிருக்கிறாய்”. [36]இறைவன் “மோசே! நீர்
கேட்டவை யாவும் உமக்கு வழங்கப்பட்டு விட்டன” என்றான்.

[37]“நாம் உமக்கு முன்பொரு முறையும் அருள் புரிந்துள்ளோம்.
[38]உம்(மைப் பற்றி உம்முடைய) தாய்க்கு அறிவிக்கப்பட
வேண்டியவற்றைப் பின்வருமாறு நாம் அறிவித்தோம். [39](நீர்)
அவரை (குழந்தை மோசேயை) ஒரு பெட்டியில் வைத்து
அதனை ஆற்றில் விட்டுவிடும். ஆறு அவரைக் கரையில்
சேர்த்துவிடும். அதனை எனக்கும் அவருக்கும் பகைவனான
ஒருவன் எடுத்துக்கொள்வான்”. நான் உம்மீது அன்பைப்
பொழிந்(து உம்மைக் காண்போர் விரும்புமாறு செய்)தேன். நீர்
என் கண்காணிப்பில் வளர வேண்டும் என்பதற்காக (இவ்வாறு
செய்தேன்.) [40]கவனியும்: உம் சகோதரி (உம்மைத் தேடி) நடந்து
(உம்மை எடுத்தவர்களிடம்) “இக்குழந்தையை நல்லமுறையில்
(பாலூட்டி) வளர்க்கக்கூடிய ஒருவரை உங்களுக்கு நான்
தெரிவிக்கட்டுமா?” என்று கேட்டாள். இவ்வாறு உம் தாயின்
கண் குளிரவும் அவள் கவலைப்படாமல் இருக்கவும் நாம் உம்மை
அவளிடமே கொண்டு சேர்த்தோம். நீர் (வளர்ந்து ஆளானபோது)
ஒருவரைக் கொன்று விட்டீர். அக்கவலையிலிருந்தும் நாம்
உம்மைக் காப்பாற்றினோம். மேலும் உம்மைப் பலவழிகளிலும்

*சோதித்தோம். மத்யன்வாசிகளுடன் பல ஆண்டுகள்வரை நீர் தங்கியிருந்தீர். (பின்னர்) மோசே! நீர் எமது திட்டத்தின்படி (இங்கு) வந்து விட்டீர்.*

*41நான் எனக்காக உம்மைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன்.*
*42நீரும் உம் சகோதரரும் என் சான்றுகளுடன் செல்லுங்கள்.*
*என்னை நினைவுகூர்வதில் சோர்வடைந்து விடாதீர்கள். 43நீங்கள்*
*இருவரும் ஃபாரோவிடம் செல்லுங்கள். அவன் வரம்புமீறி*
*விட்டான். 44அவனுடன் மென்மையாகப் பேசுங்கள். அவன்*
*அறிவுரையை ஏற்கக்கூடும் அல்லது அஞ்சி நடக்கக்கூடும் (என்று இறைவன் கூறினான்.)*

*45இருவரும், “இறைவா! அவன் எங்களிடம் நியாயமின்றியோ,*
*வரம்புமீறியோ நடந்து கொள்வான் என நாங்கள் அஞ்சுகிறோம்”*
*என்று கூறினர். 46அவன் கூறினான்: “அஞ்சாதீர்கள். நான்*
*உங்களுடன் இருந்து (எல்லாவற்றையும்) கேட்டுக் கொண்டும்,*
*பார்த்துக் கொண்டும் இருப்பேன். 47நீங்கள் அவனிடம் சென்று,*
*“நாங்கள் இருவரும் உன் இறைவனின் தூதர்களாவோம். எனவே நீ இஸ்ராயீலின் மக்களை எங்களுடன் அனுப்பி விடு. அவர்களைத் துன்புறுத்தாதே. நாங்கள் உன் இறைவனிடமிருந்து ஒரு சான்றையும் கொண்டு வந்துள்ளோம். நேர்வழியை பின்பற்றியவன் மீது சாந்தி*
*உண்டாகும். 48சத்தியத்தைப் பொய்யெனக் கூறி மறுப்போருக்கு*
*வேதனை உண்டு என்று எங்களுக்கு அறிவிக்கப்பட்டுள்ளது” என்று கூறுங்கள்.*

*49(அவ்வாறே அவர்கள் அவனிடம் சென்று கூற) “மோசே!*
*உங்கள் இருவருடைய இறைவன் யார்?” என்று ஃபாரோ*
*கேட்டான். 50அதற்கு அவர், “ஒவ்வொரு பொருளுக்கும் அதற்குரிய*
*வடிவத்தைக் கொடுத்துப் பின்னர் வழிகாட்டியவன்தான் எங்கள்*
*இறைவன்” என்று கூறினார். 51“முன்சென்ற சமூகங்களின்*
*நிலைமை என்ன?” என்று ஃபாரோ கேட்டான். 52அதற்கு அவர்,*
*“அதைப்பற்றிய அறிவு இறைவனின் ஒரு பதிவேட்டிலுள்ளது. என்*

*இறைவன் (எதனையும்) தவறவிடவும் மாட்டான், மறந்துவிடவும் மாட்டான்" என்று கூறினார்.*

*[53]அவன்தான் உங்களுக்காகப் பூமியை விரிப்பாக அமைத்து அதில் பாதைகளை ஏற்படுத்தினான். வானத்திலிருந்து மழைபொழியச் செய்தான். (அதனைக் கொண்டு) பல்வேறு வகையான தாவரங்களையும் நாம் வெளிப்படுத்தினோம்.*
*[54]உண்ணுங்கள், உங்கள் கால்நடைகளையும் மேயவிடுங்கள். அறிவுடையோருக்கு இதில் பல சான்றுகள் உள்ளன.*
*[55]பூமியிலிருந்துதான் நாம் உங்களைப் படைத்தோம். அதிலேயே நாம் உங்களைச் சேர்த்துவிடுவோம். அதிலிருந்தே மீண்டும் உங்களை வெளிப்படுத்துவோம்."* (என்று இறைவன் கூறினான்).*

*[56]இவ்வாறு ஃபாரோவுக்கு எம் சான்றுகள் அனைத்தையும் காட்டினோம். ஆயினும் அவன் (அவற்றைப்) பொய்யெனக் கூறிப் புறக்கணித்து விட்டான். [57]அவன், "மோசே! உமது*
*சூனியத்தின்மூலம் எங்கள் நாட்டிலிருந்து எங்களை வெளியேற்றவா இங்கு வந்துள்ளீர்? [58]நாங்களும் உமக்கெதிராக அதைப்போன்ற*
*சூனியத்தைக் கொண்டு வருவோம். எனவே, உமக்கும் எங்களுக்கும் மத்தியில் ஒரு நாளைக் குறித்துக் கொள்ளும். நாங்களும் அதை மீற மாட்டோம்; நீரும் அதனை மீறக்கூடாது. அப்போட்டி ஒரு திறந்தவெளியில் நடக்க வேண்டும்" என்று கூறினான்.*

*[59](அதற்கு அவர்), "பண்டிகை நாளே உங்களுக்குக் குறிக்கப்பட்ட நாளாகும். முற்பகலில் மக்கள் ஒன்றுதிரட்டப்பட வேண்டும்" என்று கூறினார். [60]ஃபாரோ அங்கிருந்து விலகிச் சென்று*
*தனது சூழ்ச்சி(க்கான சூனியக்காரர்)களைத் திரட்டிக்கொண்டு (குறித்த நாளில் குறிப்பிட்ட இடத்திற்கு) வந்தான். [61]மோசே*
*(சூனியக்காரர்களான) அவர்களிடம், "உங்களுக்குக் கேடுதான்.*

***பூமியின் படைப்பு, மழை பொழிவது, பச்சைப்பசும் தாவரங்கள் முளைப்பது, உயிரினங்கள் இவ்வுலகில் வாழ்வதற்கேற்ற சூழலுடனான இயற்கைச் செயல்பாடுகள் போன்றவை எல்லாம் திகைப்பை ஏற்படுத்தும் நிகழ்வுகளேயாகும்.**

அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனையாதீர்கள். அவன் வேதனையைக் கொண்டு உங்களை அழித்துவிடுவான். பொய் புனைவோர் உறுதியாகத் தோல்வியடைவர்" என்று கூறினார்.

[62]அதனால் அவர்கள் தங்களுக்குள் தமது நிலை குறித்துக் கருத்து வேறுபாடு கொண்டு மறைமுகமாக ஆலோசித்தனர். [63](அவர்கள் மக்களிடம்) "உறுதியாக இவ்விருவரும் சூனியக்காரர்கள்தாம். தங்கள் சூனியத்தின்மூலம் உங்கள் நாட்டைவிட்டே உங்களை வெளியேற்றிவிடவும் உங்கள் உயர்வான வழிமுறைகளை அழித்துவிடவும் விரும்புகின்றனர்" என்று கூறினர். [64]"எனவே நீங்கள் உங்களின் திட்டங்களை எல்லாம் சேர்த்துக்கொண்டு ஒன்று திரண்டு வாருங்கள். இன்று மேலோங்கி நிற்பவர்கள்தாம் வெற்றி பெற்றவராவார்" என்றும் அவர்கள் கூறினர்.

[65]"மோசே! நீர் எறிகிறீரா அல்லது நாங்கள் முதலில் எறியவா?" என்று சூனியக்கார்கள் கேட்டனர். [66]அதற்கு அவர், "நீங்களே முதலில் எறியுங்கள்" என்றார். (அவர்கள் எறிந்தபோது) அவர்களின் கயிறுகளும் கைத்தடிகளும் சூனியத்தின் வலிமையால் நெளிந்து ஓடுவதுபோல் அவருக்குத் தோன்றின. [67]மோசே தம் மனத்திற்குள் அச்சத்தை உணர்ந்தார். [68]நாம் (மோசேயிடம்) "அஞ்சாதீர். நீர்தான் மேலோங்கி நிற்பீர்" (என்றோம்). [69] "உம் வலதுகையில் உள்ளதை எறியும். அது அவர்கள் உருவாக்கியவை அனைத்தையும் விழுங்கிவிடும். அவர்கள் உருவாக்கியவை அனைத்தும் சூனியக்காரர்களின் வித்தைதான். சூனியக்காரன் எங்குச் சென்றாலும் வெற்றி பெறவேமாட்டான் (என்று கூறினோம்). [70]அந்தச் சூனியக்காரர்கள் தலைபணிந்தவர்களாக "நாங்கள் ஆரோன் மற்றும் மோசேயின் இறைவன்மீது நம்பிக்கை கொண்டோம்" என்று கூறினர்.

[71](அப்போது ஃபாரோ), நான் உங்களுக்கு அனுமதியளிப்பதற்கு முன்பே நீங்கள் அவரை ஏற்றுக்கொண்டு விட்டீர்களா? அவர்தான் உங்களுக்குச் சூனியத்தைக் கற்றுக்கொடுத்த

*குரு (எனத் தோன்றுகிறது). ஆகவே நான் உங்கள் மாறுகை, மாறுகால்களை வெட்டிவிடுவேன். பேரீச்சை மரங்களில் உங்களைத் தூக்கிலேற்றுவேன். யாருடைய வேதனை மிகக் கடுமையானது; அதிகநேரம் நீடித்து நிற்கக்கூடியது என்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள்" என்று கூறினான்.*

*72ஃபாரோவிடம் சூனியக்காரர்கள், "எங்களிடம் வந்துள்ள தெளிவான சான்றுகளையும் எங்களைப் படைத்தவனையும் விட்டுவிட்டு ஒருபோதும் நாங்கள் உன்னை முதன்மைப்படுத்த மாட்டோம். எனவே நீ செய்ய விரும்பியதைச் செய்துகொள். உன்னால் செய்ய முடிந்ததெல்லாம் இவ்வுலக வாழ்வில்தான்.*
*73நாங்கள் எங்கள் இறைவன்மீது நம்பிக்கை கொண்டோம், எங்கள் பாவங்களையும் எங்களைக் கட்டாயப்படுத்தி நீ செய்வித்த சூனிய(க் குற்ற)ங்களையும் அவன் மன்னித்துவிட வேண்டும் என்பதற்காக. அல்லாஹ்வே மிகச் சிறந்தவன்; நிலைத்திருப்பவன்" என்று கூறினர்.*

*74தன் இறைவனிடம் குற்றவாளியாக வருபவனுக்கு நரகம்தான் உண்டு. அதில் அவன் சாகவும் மாட்டான், வாழவும்*
*மாட்டான். 75எவர் நற்செயல்கள் புரிந்து நம்பிக்கையாளராகத் தம் இறைவனிடம் வருவாரோ அத்தகையவர்களுக்குத்தான்*
*உயர்ந்த படிநிலைகள் இருக்கின்றன. 76அவர்களுக்கு நிலையான சொர்க்கங்கள் உண்டு. அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பர். இது தூய வாழ்க்கையை மேற்கொள்பவர்களுக்குரிய கூலியாகும்.*

*77"(மோசே!) இரவோடு இரவாக என் அடியார்களை அழைத்துச் செல்வீராக! அவர்களுக்காகக் கடலில் (உமது தடியால் அடித்து) உலர்ந்த பாதையை அமைத்துக் கொள்வீராக! (எதிரிகளால்) பின்தொடரப்படுவதைப் பற்றி அஞ்சவேண்டாம். வேறு எதைக்குறித்தும் நீர் அச்சம் கொள்ளாதீர்" என்று நாம்*
*மோசேவுக்கு அறிவித்தோம். 78ஃபாரோ தனது படைகளுடன்*

*அவர்களைப் பின்தொடர்ந்தான். மூழ்கடிக்க விதிக்கப்பட்ட முறையில் கடல் அவர்களை மூழ்கடித்து விட்டது. [79]ஃபாரோ தன் சமூகத்தினரை வழிகெடுத்துவிட்டான். அவர்களுக்குச் சரியான வழியை அவன் காட்டவில்லை.*

*[80]இஸ்ராயீலின் மக்களே! பகைவனிடமிருந்து நாம் உங்களைக் காப்பாற்றினோம். (ஸினாய் என்னும்) மலையின் வலப்புறத்தை நாம் (தவ்ராத் வேதத்தை வழங்கும் இடமாக) உங்களுக்கு வாக்களித்தோம். உங்களுக்காக மன்னு, ஸல்வா(என்னும் உண)வையும் அருளினோம். [81]நாம் உங்களுக்கு வழங்கியவற்றில் தூய்மையான உணவை உண்ணுங்கள். அதில் வரம்புமீறி விடாதீர்கள். அவ்வாறாயின் என் சினம் உங்களைத் தாக்கிவிடும். எவரை என் சினம் தாக்கியதோ அவர் (உறுதியாக) அழிந்துவிட்டார். [82]ஆயினும் எவர் (பாவ)மன்னிப்புக் கோரி, (ஓரிறை)நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்து நேர்வழியிலும் செல்கிறாரோ அவருக்கு நான் பெரும் மன்னிப்பாளன் ஆவேன்.*

*[83](மோசே மலைக்கு வந்தபோது இறைவன்) "மோசே! உம் சமூகத்தினரைவிட்டு (நீர் மட்டும் வர) உம்மை விரைவுபடுத்தியது எது?" என்று கேட்டான். [84]"அவர்களும் என்னைப் பின்தொடர்ந்தே வருகின்றனர். என் இறைவா, உன் உவப்பைப் பெறுவதற்காகவே உன்னிடம் விரைந்து வந்தேன்" என்று அவர் கூறினார். [85]அவன், "நீர் அங்கிருந்து வந்தபிறகு உம் சமூகத்தினரை நாம் சோதனைக்குள்ளாக்கி விட்டோம். அவர்களை ஸாமிரி (என்பவன்) வழிகெடுத்து விட்டான்.*

*[86]மோசே சினத்துடனும் வருத்தத்துடனும் தம் சமூகத்தினரிடம் திரும்பிவந்து, "என் சமூகத்தோரே! உங்கள் இறைவன் உங்களுக்கு அழகிய வாக்குறுதியை அளிக்கவில்லையா? (நான் உங்களைவிட்டுச் சென்று) உங்களுக்கு நீண்டகாலம் கடந்துவிட்டதா? அல்லது உங்கள் இறைவனின் சினம் உங்கள்மீது இறங்க வேண்டும் என விரும்பி என் வாக்குறுதிக்கு எதிராகச் செயல்பட்டு விட்டீர்களா?" என்று கேட்டார்.*

[87]அவர்கள், "நாங்கள் உங்களுக்கு அளித்த வாக்குறுதிக்கு
மனமொப்பி எதிராகச் செயல்படவில்லை. மாறாக ஃபாரோவின்
சமூகத்தாருடைய நகைகள் சில எங்களிடம் சுமையாக இருந்தன.
நாங்கள் அதனை (நெருப்பில்) எறிந்துவிட்டோம். அவ்வாறே
ஸாமிரியும் (தன்னிடமிருந்தவற்றை) எறிந்தான்" என்று கூறினர்.
[88]அவர்களுக்கு ஸாமிரி ஒரு காளைக்கன்றின் சிலையை வடித்துக்
கொடுத்தான். அதிலிருந்து காளைக் கன்றின் கனைப்பு ஓசை
வெளிப்பட்டது. அப்போது அவர்கள், "இதுதான் உங்கள்
இறைவனும் மோசேயின் இறைவனும் ஆகும். அவர் இதனை
மறந்து விட்டார்" என்று கூறினர். [89]அது அவர்களின் எந்த
அழைப்பிற்கும் பதிலளிக்காது என்பதையும் அவர்களுக்குத்
தீங்கிழைக்கவோ பயனளிக்கவோ அதற்கு ஆற்றல் இல்லை
என்பதையும் அவர்கள் கவனிக்கவில்லையா?

[90]முன்னரே ஆரோன் அவர்களிடம் "என் சமூகத்தோரே! இந்தக்
காளைக் கன்றின் மூலம் நீங்கள் சோதிக்கப்பட்டிருக்கிறீர்கள்.
அளவற்ற அருளாளன்தான் உங்கள் இறைவன். எனவே
என்னையே பின்பற்றுங்கள். என் சொல்லுக்குக் கட்டுப்படுங்கள்"
என்று கூறியிருந்தார். [91]அவர்கள், "மோசே எங்களிடம் திரும்பி
வரும்வரை நாங்கள் இதனைத்தான் வணங்கிக் கொண்டிருப்போம்"
என்றனர்.

[92](மோசே திரும்பி வந்ததும்) "ஆரோனே! அவர்கள்
வழிகெட்டு விட்டனர் என்பதைக் கண்டபோது [93]என்னை நீர்
பின்பற்றுவதிலிருந்து உம்மைத் தடுத்தது எது? என் கட்டளைக்கு
எதிராகச் செயல்பட்டு விட்டீரா?" என்று கேட்டார். [94]அப்போது
ஆரோன், "என் தாயின் மகனே! நீர் என் தாடியையோ
தலையையோ பிடித்து இழுக்காதீர். (நான் அவர்களை
விட்டுவிலகியிருந்தால்) 'இஸ்ராயீலின் மக்களிடையே நீர்
பிரிவினையை ஏற்படுத்தி விட்டீர்' என்றும் 'என் வார்த்தைகளை
நீர் மதிக்கவில்லை' என்றும் கூறுவீரோ என்று நான்
அஞ்சினேன்" என்றார்.

[95](பின்னர் ஸாமிரியிடம் மோசே) “ஸாமிரியே! உன் விவகாரம்
என்ன?” என்று கேட்டார். [96]அதற்கு அவன், “அவர்கள் காணாத
ஒன்றை நான் கண்டேன். எனவே நான் தூதரின் காலடியிலிருந்து
ஒரு பிடி மண்ணை எடுத்து அதன் (நெருப்பு) மீது எறிந்து
விட்டேன். இவ்வாறு (செய்யும்படி) என் மனம் என்னைத்
தூண்டியது” என்று கூறினான். [97]அதற்கு மோசே “சென்றுவிடு.
இனி வாழ்நாள் முழுவதும் (உன்னைப் பார்ப்பவர்களிடமெல்லாம்)
‘என்னைத் தீண்டாதே’ என்றுதான் நீ கூறித் திரிய வேண்டும்.
இதுதான் இவ்வுலகில் உனக்குத் தண்டனை. உனக்காக
இன்னொரு வாக்களிக்கப்பட்ட வேதனை உண்டு. அதிலிருந்து நீ
தப்பமுடியாது. நீ வணங்கிக் கொண்டிருந்த தெய்வத்தைப் பார்.
நாம் அதனை எரித்துப் பின்னர் கடலில் வீசி விடுவோம்” என்று
(ஸாமிரியிடம்) கூறினார். [98](பிறகு தம் சமூகத்தாரை நோக்கி,
“மக்களே!) உங்கள் இறைவன் அல்லாஹ்தான். அவனைத் தவிர
வேறு இறைவன் இல்லை. அவனது அறிவு அனைத்தையும்
உள்ளடக்கியுள்ளது” (என்றும் கூறினார்).

[99]இவ்வாறே முன் சென்றவர்களுடைய வரலாற்றை நாம்
உமக்கு எடுத்துரைக்கிறோம். எம்மிடமிருந்து (குர்ஆனாகிய)
ஒரு நல்லறிவுரையையும் உமக்கு வழங்கியுள்ளோம். [100]அதனைப்
புறக்கணிப்பவர் மறுமை நாளில் பெரும் (பாவச்)சுமையைச்
சுமப்பார். [101]அந்நிலையிலேயே அத்தகையோர் நிலையாகக்
கிடப்பர். மறுமை நாளில் அது அவர்களுக்கு மிகவும் கடுமையான
சுமையாக இருக்கும். [102]எக்காளம் ஊதப்படும் (மறுமையாகிய)
அந்நாளில் குற்றவாளிகளை நாம் ஒன்று திரட்டுவோம். அப்போது
அவர்களின் கண்கள் அச்சத்தினால் நீலம் பூத்திருக்கும். [103]“நீங்கள்
வெறும் பத்து நாட்கள்தான் (உலகில்) இருந்திருப்பீர்கள்” என்று
அவர்கள் தங்களுக்குள் மெதுவாகப் பேசிக் கொள்வார்கள்.
[104]அவர்கள் பேசிக் கொள்வதை நாம் நன்கறிவோம். அவர்களில்
அதிக அறிவுடையவர் “நீங்கள் ஒரு நாள்தான் (உலகில்)
தங்கியிருந்திருப்பீர்கள்” என்று கூறுவார்.

105(நபியே!) மலைகள் (அந்நாளில் என்னவாகும் என்பது)
பற்றி மக்கள் உம்மிடம் கேட்கின்றனர். “என் இறைவன் அவற்றைத்
தூள் தூளாக்கி(ப் பரப்பி) விடுவான்” என்று நீர் கூறுவீராக!
106பிறகு பூமியை வெட்ட வெளியாக்கி விடுவான். 107அதில்
எந்த மேடு பள்ளத்தையும் நீர் காண மாட்டீர் 108அந்நாளில்
அனைவரும் அழைப்பாளரின் அழைப்போசையைப் பின்பற்றிச்
செல்வர். அதிலிருந்து எந்தப் பிறழ்வும் இராது. அளவற்ற
அருளாளனுக்கு முன்னால் எல்லா ஓசைகளும் ஒடுங்கிவிடும்.
சிறு சலசலப்பைத்தவிர வேறு எதையும் நீர் செவியுற முடியாது.

109அந்நாளில் அளவற்ற அருளாளன் எவருக்கு அனுமதி
அளித்து அவரது பேச்சைக் கேட்க விரும்புவானோ அவரைத்
தவிர வேறு எவரது பரிந்துரையும் பயனளிக்காது. 110அவர்களுக்கு
முன்னுள்ளவற்றையும் பின்னுள்ளவற்றையும் அவன் நன்கறிகிறான்.
ஆனால் அவர்கள் தங்களுடைய அறிவால் அவனைச் சூழ்ந்தறிய
முடியாது. 111என்றும் நிலைத்திருக்கும் நிலையானவனின்
முன்னால் யாவருடைய முகங்களும் கவிழ்ந்திருக்கும்.
அநியாயத்தைச் சுமந்தவன் (அந்நாளில்) தோல்வியடைந்து
விட்டான். 112ஆயினும் (ஓரிறை)நம்பிக்கைகொண்ட நிலையில்
நற்செயல்புரிந்தவர் (தமக்குத்) தீங்கிழைக்கப்படுமென்றோ
தமக்குரிய நற்கூலி குறைக்கப்படுமென்றோ அஞ்சமாட்டார்.

113இவ்வாறே நாம் இந்தக் குர்ஆனை அரபி மொழியில்
அருளியுள்ளோம். அவர்கள் (இறைவனுக்கு) அஞ்சுவதற்காகவும்
நல்லுணர்ச்சி பெறுவதற்காகவும் இதில் எல்லாவகையான
எச்சரிக்கைகளையும் நாம் விவரித்துள்ளோம். 114எனவே
உண்மையான அரசனாகிய அல்லாஹ் மிக உயர்ந்தவன். (நபியே!)
அவன் உமக்கு அறிவிப்பவை நிறைவடைவதற்கு முன்பே நீர்
குர்ஆனை ஓத அவசரப்பட வேண்டாம். “என் இறைவா! என்
அறிவை (மேலும்) அதிகப்படுத்துவாயாக!” என்று நீர் கூறும்.

115இதற்கு (நெடுங்காலத்திற்கு) முன்னர் நாம் ஆதமிடம்
உறுதிமொழி வாங்கியிருந்தோம். ஆனால் அவர் அதனை மறந்து

*விட்டார். அவரிடம் நாம் (மன)உறுதியைக் காணவில்லை.*
*116“ஆதமுக்குத் தலைபணியுங்கள்” என்று நாம் வானவர்களிடம்*
*கூறியபோது இப்லீஸைத் தவிர அவர்கள் அனைவரும்*
*தலைபணிந்தனர், அவன் மறுத்து விட்டான். 117நாம் கூறினோம்:*
*“ஆதமே! இவன் உமக்கும் உம் மனைவிக்கும் பகைவனானான்.*
*ஆகவே இவன் உங்கள் இருவரையும் சொர்க்கத்திலிருந்து*
*வெளியேற்றி விட இடமளிக்க வேண்டாம். இல்லையானால்*
*இன்னலுக்கு ஆளாகி விடுவீர்கள். 118இங்கே (நீங்கள் உண்ண,*
*உடுத்த, பருக வளமாகக் கிடைப்பதால்) உங்களுக்குப் பசி இராது;*
*நீங்கள் நிர்வாணமாகவும் மாட்டீர்கள். 119இங்கே உங்களுக்கு*
*நீர்வேட்கை ஏற்படாது; வெயிலும் உங்களை வாட்டாது.*

*120ஆயினும் சாத்தான் அவர்களை வழிகெடுத்து விட்டான்.*
*“ஆதமே! நிலையான (வாழ்வுக்கான) மரத்தையும் அழிவில்லா*
*அரசாட்சியையும் நான் உமக்கு அறிவிக்கட்டுமா? என்று அவன்*
*கேட்டான். 121அவர்கள் இருவரும் (தடுக்கப்பட்ட) அம்மரத்தின்*
*கனியை உண்டு விட்டனர். உடனே அவ்விருவருக்கும் தம்முடைய*
*மறைவுறுப்புகளைப் பற்றித் தெரிந்துகொண்டனர். (ஆகவே)*
*இருவரும் சொர்க்கத்தின் இலைகளைக் கொண்டு தங்களை*
*மறைக்க முனைந்தனர். தன் இறைவனின் கட்டளைக்கு எதிராகச்*
*செயல்பட்டதனால் ஆதம் வழிதவறி விட்டார். 122பின்னர்*
*இறைவன் அவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான். அவரின்*
*பாவமன்னிப்பை ஏற்று அவருக்கு நேர்வழியும் காட்டினான்.*

*123இறைவன் கூறினான்: “நீங்கள் இருவரும் இங்கிருந்து இறங்கி*
*விடுங்கள். உங்களில் சிலர் சிலருக்குப் பகைவர்களாக இருப்பீர்கள்.*
*என்னிடமிருந்து உங்களுக்கு வழிகாட்டுதல் வரும்போது*
*என் வழிகாட்டலைப் பின்பற்றுபவர் வழிதவறவும்மாட்டார்;*
*ஏமாறவும்மாட்டார். 124என் நினைவூட்டலைப் புறக்கணிப்பவனுக்கு*
*நெருக்கடியான வாழ்வுதான் உண்டு. மறுமை நாளில்*

நாம் அவனைக் குருடனாகத்தான் எழுப்புவோம்” [125]“என்
இறைவனே, நீ என்னை ஏன் குருடனாக எழுப்பினாய்? நானோ
பார்வையுள்ளவனாக இருந்தேனே?” என்று அவன் கேட்பான்.
[126]அதற்கு இறைவன், “எமது சான்றுகள் உன்னிடம் வந்தபோது
அவற்றை நீ பொருட்படுத்தவில்லை. அவ்வாறே நீயும் இன்று
பொருட்படுத்தப்படமாட்டாய்” என்று கூறுவான். [127]வரம்புமீறி
எமது சான்றுகளை நம்பாதோருக்கு இவ்வாறுதான் நாம் கூலி
வழங்குகிறோம். மறுமையின் வேதனையோ மிகக் கடுமையானது;
நீடித்து நிற்கக்கூடியது.

[128]இவர்களுக்கு முன்னர் எத்தனையோ சமூகத்தினரை நாம்
அழித்திருக்கின்றோம் என்பதிலிருந்து இவர்கள் படிப்பினை
பெறவில்லையா? அவர்கள் குடியிருந்த பகுதிகளில்தானே (இன்று)
இவர்கள் நடக்கின்றனர். உறுதியாக இதில் அறிவுடையோருக்குப்
பெரும் சான்றுகள் உள்ளன. [129](நபியே! அவர்களின்
தண்டனைக்காலம் மறுமைதான் என்று) உம் இறைவனிடமிருந்து
முன்னரே ஒரு வாக்கு பிறவாமலும் குறிப்பிட்ட தவணை
வரையறுக்கப்படாமலும் இருந்திருந்தால் உடனடியாக அவர்களின்
தண்டனை நடந்தேறியிருக்கும். [130]எனவே அவர்கள் கூறுவதைப்
பொறுத்துக் கொள்வீராக! சூரியன் உதிப்பதற்கு முன்பும் அது
மறைவதற்கு முன்பும் உம் இறைவனைப் போற்றிப் புகழ்வீராக!
இரவு நேரங்களிலும் பகலின் ஓரங்களிலும் அவனைத் துதிப்பீராக!
அதனால் நீர் நிறைவடையலாம்.

[131](நபியே!) அவர்களைச் சோதிக்கும் பொருட்டு அவர்களில்
சிலருக்கு நாம் வழங்கியிருக்கும் உலகியல் வசதிகளை ஏறெடுத்தும்
பார்க்காதீர். இறைவன் (உமக்கு) வழங்கியிருப்பதுதான்
மேலானது; என்றும் நிலையானது. [132]தொழுகையைப்
பேணுமாறு உம் குடும்பத்தாரை ஏவுவீராக! அதன்மீது நீரும்
உறுதியாக இருப்பீராக! நாம் உம்மிடம் எதையும் கேட்கவில்லை.
நாமே உமக்கு அனைத்தையும் அளிக்கிறோம். சிறந்த முடிவு
இறையச்சத்திற்கு உரியது.

[133]அவர் தம் இறைவனிடமிருந்து ஏதேனும் ஒரு சான்றை ஏன் கொண்டு வரவில்லை என்று அவர்கள் கேட்கிறார்கள். முந்தைய வேதங்களில் உள்ள போதிய சான்று ஏதும் அவர்களிடம் வரவில்லையா? [134]நாம் முன்னரே அவர்களை ஏதேனும் ஒரு வேதனையால் அழித்திருந்தால் "எங்கள் இறைவா! எங்களிடம் ஒரு தூதரை அனுப்பியிருக்கக் கூடாதா? நாங்கள் இழிவுக்கும் அவமானத்திற்கும் ஆளாவதற்கு முன்பே உன் சான்றுகளைப் பின்பற்றி இருப்போமே!" என்று கூறுவர். [135](நபியே!) நீர் கூறும்: "ஒவ்வொருவரும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். எனவே நீங்களும் எதிர்பாருங்கள். நேர்வழியில் இருப்பவர் யார்? நேர்வழியை அடைந்துவிட்டவர் யார் என்பதை விரைவில் அறிந்து கொள்வீர்கள்"

# 21. இறைத்தூதர்கள் (அல்அன்பியா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]மனிதர்களுக்கு விசாரணைக்கான நேரம் நெருங்கி விட்டது. ஆயினும் அவர்கள் கவனமற்றுப் புறக்கணித்துக் கொண்டிருக்கின்றனர். [2]இறைவனிடமிருந்து புதிதாக எந்தவொரு அறிவுரை வந்தாலும் அதனை விளையாட்டாகச் செவி மடுக்கின்றனர். [3]அவர்களுடைய உள்ளங்கள் வேறு சிந்தனைகளில் கிடக்கின்றன. இந்தத் தீவினையாளர்கள் தங்களிடையே மறைமுகமாக "இவர் உங்களைப்போன்ற ஒரு மனிதர்தானே. நீங்கள் (கண்ணால்) பார்த்தும்கூட ஏன் சூனியத்தில் சிக்கி விடுகிறீர்கள்? என்று பேசிக் கொள்கின்றனர். [4]"வானத்திலும் பூமியிலும் பேசப்படும் அனைத்தையும் என் இறைவன் நன்கறிவான். அவன் (யாவற்றையும்) செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்" என்று (எம்) தூதர் கூறினார்.

[5]"இவை குழப்பமான கனவுகள்;" "இல்லை, இவரே இதனைப் புனைந்துள்ளார்;" "இவர் ஒரு கவிஞர்" என்றெல்லாம் கூறி

*“முற்காலத் தூதர்கள் சான்றுகளுடன் அனுப்பப்பட்டவாறு
இவரும் எம்மிடம் ஒரு சான்றைக் கொண்டு வரட்டும்”
என்று அவர்கள் கூறுகின்றனர். [6]இவர்களுக்கு முன்னர்
நாம் அழித்துவிட்ட ஊர்களிலிருந்த மக்களில் எவரும்
நம்பிக்கை கொண்டதில்லை. (அவ்வாறிருக்கையில்) இவர்கள்
நம்பிக்கைகொள்ளப் போகிறார்களா என்ன?*

*[7](நபியே!) உமக்கு முன்னரும் நாம் (மனிதர்களில்)
ஆண்களையே தூதர்களாக்கி அவர்களுக்கு இறைச்செய்தியை
அறிவித்தோம். ஆகவே (இம்மக்களிடம்) “நீங்கள் இதனை
அறியாதவர்களாக இருந்தால் வேதமுடையோரிடம் கேட்டு
அறிந்துகொள்ளுங்கள்” என்று கூறுவீராக! [8]நாம் அவர்களுக்கு
உணவு தேவைப்படாத உடலை அளிக்கவில்லை. அவர்கள்
(பூமியில்) நிலையானவர்களாகவும் இருக்கவில்லை. [9]பின்னர் நாம்
அவர்களுக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றினோம். எனவே
அவர்களையும் நாம் விரும்பியோரையும் காப்பாற்றினோம்.
வரம்பு மீறியோரை நாம் அழித்துவிட்டோம்.*

*[10](மக்களே!) உறுதியாக உங்களுக்கு ஒரு வேதத்தை
அருளியுள்ளோம். அதில் உங்களுக்கு நல்லுபதேசம் இருக்கிறது.
நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா? [11]தீவினை புரிந்து
வந்த எத்தனையோ ஊர் மக்களை நாம் அழித்துவிட்டோம்.
அவர்களுக்குப் பின் வேறு சமூகத்தினரை உருவாக்கினோம்.
[12]எம் வேதனை வருவதை அவர்கள் உணர்ந்தபோது அங்கிருந்து
ஓடத் தொடங்கினர். [13]“ஓடாதீர்கள், உங்கள் ஆடம்பர
வாழ்க்கையின் பக்கமும் நீங்கள் வசித்த இல்லங்களின் பக்கமும்
செல்லுங்கள். நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள்” (என்று கூறினோம்)
[14]அவர்கள், “அந்தோ, எங்கள் கேடே! உறுதியாக நாங்கள்
தீவினையாளர்களாக இருந்தோம்” என்று கூக்குரலிட்டனர்.
[15]நாம் அவர்களை அறுவடை செய்யப்பட்டு எரிக்கப்பட்ட
வயலைப் போல ஆக்கும்வரை அவ்வாறே அவர்கள் கூப்பாடு
போட்டுக்கொண்டிருந்தனர்.*

*[16]நாம் வானத்தையும் பூமியையும் அவற்றிற்கிடையே
உள்ளவற்றையும் விளையாட்டாகப் படைக்கவில்லை. [17]நாம்
ஒரு வேடிக்கை விளையாட்டை உண்டாக்க விரும்பியிருந்தால்
எம்மிடமிருந்தே அதை ஏற்படுத்திக் கொண்டிருப்போம்.
[18]மாறாக நாம் சத்தியத்தை அசத்தியத்தின் மீது எறிகிறோம்.
அது அசத்தியத்தின் தலையை நொறுக்கி விடுகிறது; அசத்தியம்
அழிந்து விடுகிறது. நீங்கள் (இறைவனைப்பற்றி பொய்யாகக்)
கூறுபவற்றால் உங்களுக்குக் கேடுதான்!*

*[19]வானங்களிலும் பூமியிலும் உள்ளவை அவனுக்கே உரியன.
அவனோடு உள்ள(வான)வர்கள் அவனை வணங்காமல்
செருக்குக் கொள்வதுமில்லை; களைத்துப் போவதுமில்லை.
[20]அவர்கள் இரவும் பகலும் சோர்வடையாமல் அவனைப்
புகழ்ந்து கொண்டே இருக்கின்றனர்.*

*[21](இணைவைப்பாளர்களாகிய) இவர்கள் பூமியிலிருந்து
உருவாக்கிக் கொண்ட தெய்வங்களால் (இறந்தோர்)
யாரையேனும் உயிர்கொடுத்து எழுப்ப முடியுமா? [22](வானம்,
பூமி ஆகிய) இரண்டிலும் அல்லாஹ்வைத்தவிர வேறு
தெய்வங்கள் இருந்திருந்தால் அந்த இரண்டும் அழிந்தே
போயிருக்கும். அவர்களின் (பொய்யான) வர்ணனைகளிலிருந்து
இறையிருக்கையின் உரிமையாளனாகிய அல்லாஹ் மிகவும்
(அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். [23]அவனது செயல்கள்
குறித்து அவனை எவரும் கேட்கமுடியாது; ஆனால் அவர்கள்தான்
(அவனால்) விசாரிக்கப்படுவர்.*

*[24]அவர்கள் அவனை அல்லாமல் வேறு தெய்வங்களை
ஏற்படுத்திக் கொண்டனரா? (நபியே!) "என்னோடிருப்பவர்களுக்கு
அறிவுரையாக இந்த வேதம் (குர்ஆன்) உள்ளது. எனக்கு
முன்னிருந்தவர்களுக்கு அறிவுரை வழங்கிய வேதங்களும்
உள்ளன. (அல்லாஹ் அல்லாதவற்றை நீங்கள் வணங்குவதற்குரிய)
உங்கள் சான்றுகளைக் கொண்டு வாருங்கள்" என்று நீர்
கேட்பீராக! எனினும் அவர்களில் பெரும்பாலோர் உண்மையை*

*அறியமாட்டார்கள். அதனால் அவர்கள் புறக்கணித்துக்
கொண்டிருக்கின்றனர். [25]உமக்கு முன் நாம் அனுப்பி வைத்த
அனைத்துத் தூதர்களுக்கும் "என்னைத் தவிர வேறு இறைவன்
இல்லை. என்னையே வணங்குங்கள்" என்றே (இறைச்செய்தி)
அறிவித்திருந்தோம்.*

*[26](அவ்வாறிருந்தும்) "அளவற்ற அருளாளன் (வானவர்களைத்
தனக்குப்) பிள்ளைகளாக உண்டாக்கிக் கொண்டான்"
என்று அவர்கள் கூறுகிறார்கள். அதிலிருந்து அவன் மிகவும்
(அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். அ(வ்வான)வர்களோ
கண்ணியமிக்க அடியார்களாவர். [27]அவனை மீறி அவர்கள்
பேசமாட்டார்கள். அவனது கட்டளைப்படியே செயல்படுவார்கள்.
[28]அவர்களுக்கு முன்னுள்ளவற்றையும் பின்னுள்ளவற்றையும்
அவன் நன்கறிவான். அவனது விருப்பமின்றி யாருக்கும்
அவர்கள் பரிந்து பேசமாட்டார்கள். அவன்மீதுள்ள அச்சத்தால்
அவர்கள் நடுங்கிக் கொண்டிருப்பார்கள். [29]அவர்களில் யாராவது
"அவனன்றி நான்தான் இறைவன்" என்று கூறினால் நரகத்தையே
நாம் அவனுக்குத் தண்டனையாக அளிப்போம். இவ்வாறே நாம்
தீவினையாளர்களைத் தண்டிக்கிறோம்.*

*[30]வானங்களும் பூமியும் இணைந்திருந்தன. நாம்தான்
அவற்றைப் பிரித்தோம் என்பதையும் உயிருள்ள ஒவ்வொரு
பொருளையும் நீரிலிருந்தே நாம் உருவாக்கினோம் என்பதையும்
(ஓரிறை)மறுப்பாளர்கள் கவனிக்கவில்லையா? அவர்கள்
நம்பிக்கைகொள்ள மாட்டார்கள்.*

*[31]பூமி அவர்களுடன் சாய்ந்து விடாதிருக்க நாம் அதில்
மலைகளை நாட்டினோம். மக்கள் அறிந்துகொள்ளும்
பொருட்டு அதில் அகலமான பாதைகளையும் ஏற்படுத்தினோம்.
[32]வானத்தைப் பாதுகாப்பான கூரையாக்கினோம். ஆயினும்
அவர்கள் அவற்றிலுள்ள சான்றுகளைப் புறக்கணிக்கின்றனர்.
[33]அவன்தான் இரவையும் பகலையும் சூரியனையும் சந்திரனையும்*

*படைத்தான். ஒவ்வொன்றும் அதனதன் வட்டப்பாதையில் நீந்திக் கொண்டிருக்கின்றன.*

[34]*(நபியே!) உமக்கு முன்னர் எந்த மனிதனுக்கும் நிலையான வாழ்வை நாம் அளிக்கவில்லை. நீர் இறந்துவிட்டால் அவர்கள் மட்டும் நிலையாக இருப்பார்களா என்ன?* [35]*ஒவ்வோர் உயிரும் சாவைச் சுவைத்தே தீரும். சோதனைக்காக நல்ல, கெட்ட சூழல்களைக் கொடுத்து நாம் உங்களைச் சோதிக்கிறோம். நீங்கள் அனைவரும் எம்மிடமே கொண்டு வரப்படுவீர்கள்.*

[36]*(நபியே ஓரிறை)மறுப்பாளர்கள் உம்மைக் காணும்போது ஏளனம் செய்யாமலிருப்பதில்லை. "உங்கள் தெய்வங்களைப்பற்றிக் (குறை) கூறுபவர் இவர்தானா?" என்று (தமக்குள்) பேசிக் கொள்கின்றனர். இவர்களோ அளவற்ற அருளாளனின் பெயர் கூறப்படுவதையும் வெறுக்கின்றனர்.*

[37]*மனிதன் அவசரக்காரனாகப் படைக்கப்பட்டுள்ளான். விரைவில் எமது சான்றுகளை உங்களுக்குக் காண்பிப்பேன். எனவே என்னிடம் அவசரப்படாதீர்கள்.* [38] *(மறுப்பாளர்கள் நம்பிக்கையாளர்களை நோக்கி) "நீங்கள் உண்மையாளர்களாயின் இந்த எச்சரிக்கை எப்போது (நிறைவேறும்)? என்று கூறுங்கள் எனக் கேட்கின்றனர்.* [39]*அந்தோ! மறுப்பாளர்கள் தங்கள் முகங்களையும் முதுகுகளையும் நெருப்பிலிருந்து காத்துக்கொள்ள முடியாத அந்த நேரத்தை அறிந்துகொள்ள வேண்டுமே! அப்போது அவர்களுக்கு எங்கிருந்தும் உதவி கிடைக்காது.* [40]*மாறாக அது திடீரென அவர்களிடம் வந்து அவர்களைத் திகைக்கச் செய்துவிடும். அதனை அவர்களால் தடுக்கவும் முடியாது. அவர்களுக்குச் சிறிதும் காலநீட்டிப்பு வழங்கப்படமாட்டாது.* [41]*(நபியே!) உமக்கு முன் வந்த தூதர்களையும் எள்ளினார்கள். ஆயினும் அவர்கள் எதைக் குறித்து ஏளனம் செய்தார்களோ அந்த வேதனையே அவர்களைச் சூழ்ந்து கொண்டது.*

[42](நபியே!) "இரவிலும் பகலிலும் அளவற்ற அருளாளனின் தண்டனையிலிருந்து உங்களைப் பாதுகாப்பவன் யார்?" என்று நீர் கேளும். எனினும் தம் இறைவனை நினைப்பதையே அவர்கள் புறக்கணிக்கின்றனர். [43]எம்முடைய வேதனையிலிருந்து அவர்களைப் பாதுகாக்கும் வேறு தெய்வங்கள் அவர்களுக்கு இருக்கின்றனவா? அவற்றால் தமக்குத் தாமேகூட உதவிட முடியாது; எமக்கெதிராக உதவி பெறவும் முடியாது.

[44]அவர்களுக்கும் அவர்களின் முன்னோர்களுக்கும் நாம் உலகியல் வசதிகளை (நீண்டகாலம்) வழங்கினோம். அதே நிலையில் அவர்களின் ஆயுளும் நீண்டுவிட்டது. ஆயினும் நாம் பூமியை அதன் ஓரங்களிலிருந்து குறைத்துக் கொண்டே வருகிறோம் என்பதை அவர்கள் கவனிக்கவில்லையா? இவர்களா (எம்மை) வெற்றி பெறக்கூடியவர்கள்?

[45](நபியே!) "இறைச்செய்தியைக் கொண்டுதான் நான் உங்களை எச்சரிக்கிறேன்" என்று கூறுவீராக! ஆயினும், காது கேளாதோர் எச்சரிக்கப்படும்போது அவ்வழைப்பை (அவர்களால்) செவியுறமுடியாது. [46](நபியே!) உம் இறைவனுடைய வேதனையில் சிறிதளவு அவர்களைத் தீண்டிவிட்டால்கூட "அந்தோ! எங்கள் கேடே! உறுதியாக நாங்கள் தீவினையாளர்களாக இருந்தோம்" என்று கூறுவார்கள்.

[47]மறுமை நாளில் நாம் நீதித் தராசை நிறுவுவோம். எனவே எந்த உயிருக்கும் அநீதி இழைக்கப்படாது. கடுகு வித்தளவு (நன்மையோ தீமையோ) ஒருவர் புரிந்திருந்தாலும் அதையும் நாம் கொண்டு வருவோம். கணக்கெடுக்க நாமே போதுமானவர்களாவோம்.

[48]நாம் மோசேவுக்கும் ஆரோனுக்கும் (சத்தியத்தையும் அசத்தியத்தையும்) பிரித்தறியக்கூடிய (வேதத்)தையும் வழங்கினோம். அது ஒளியாகவும் இறையச்சமுடையோருக்கு நல்லறிவுரையாகவும் இருந்தது. [49](இறையச்சமுடையோர்களாகிய) அவர்கள்

*(பிறரிடமிருந்து) மறைவாயிருக்கும்போதும் தம் இறைவனுக்கு அஞ்சுகின்றனர். மறுமையை குறித்தும் அச்சம் கொள்கின்றனர்.*
*[50]மகத்துவம் நிறைந்த இந்த(க் குர்ஆனாகிய) அறிவுரையை நாமே அருளியுள்ளோம். நீங்கள் இதனை (இக்குர்ஆனை) மறுக்கிறீர்களா?*

*[51]இதற்கு முன்னர் ஆப்ரஹாமுக்கு அவருக்கான வழிகாட்டுதலை வழங்கியிருந்தோம். அவருடைய தகுதியை நாம் நன்கு அறிந்திருந்தோம். [52]அவர் தம் தந்தையிடமும் சமூகத்தினரிடமும் "நீங்கள் (மிகுந்த ஆர்வத்துடன்) வணங்கிவரும் இச்சிலைகள் என்ன?" என்று கேட்டபோது [53]அவர்கள், "எங்கள் முன்னோர்கள் இவற்றை வணங்கிக் கொண்டிருக்கக் கண்டோம்" என்றனர். [54] அவர், "உறுதியாக நீங்களும் உங்கள் முன்னோர்களும் தெளிவான கெடுவழியில்தான் இருந்திருக்கிறீர்கள்" என்று கூறினார்.*

*[55]அவர்கள், "நீர் எங்களிடம் உண்மையைத்தான் கொண்டு வந்துள்ளீரா அல்லது ஏளனம் செய்கிறீரா?" என்று கேட்டார்கள.*
*[56]அவர், "அவ்வாறல்ல. வானங்கள், பூமி ஆகியவற்றின் இறைவன்தான் உங்கள் இறைவன். அவன்தான் அவற்றைப் படைத்தான். அதற்குச் சாட்சி கூறுவோரில் நானும் ஒருவன்.*
*[57]அல்லாஹ்வின்மீது ஆணையாக! நீங்கள் திரும்பிச் சென்றபின் உங்கள் சிலைகளுக்கெதிராக நான் ஒரு திட்டம் தீட்டுவேன்"*
*என்றார். [58]அவர்கள் பெரிய சிலையின் பக்கம் திரும்பி வரக்கூடும் என்பதனால் அதனைத்தவிர மற்ற சிலைகள் அனைத்தையும் அவர் (உடைத்துத்) துண்டு துண்டாக்கி விட்டார்.*

*[59]"நம் தெய்வங்களை இப்படிச் செய்தது யார்? உறுதியாக அவன் தீவினையாளன்" என்று அவர்கள் கூறினர். [60]அவர்களில் சிலர், "ஓர் இளைஞர் இவற்றைக் குறித்துப் பேசுவதை நாங்கள் கேட்டிருக்கிறோம். அவர் ஆப்ரஹாம் என்று அழைக்கப்படுகிறார்" என்றனர். [61]"அவரை மக்களின் முன்னிலையில் கொண்டு*

*வாருங்கள்; அவர்கள் சாட்சிகளாக இருக்கட்டும்” என்று அவர்கள் கூறினர். [62](அவரைக் கொண்டு வந்தபின்) “ஆப்ரஹாமே! எங்கள் தெய்வங்களை நீரா இவ்வாறு செய்தீர்?” என்று கேட்டனர். [63]அதற்கு அவர், “இல்லை. அவற்றில் இந்தப் பெரிய சிலைதான் இவ்வாறு செய்திருக்கக் கூடும் (உடைபட்ட) இவை பேசக்கூடியவையாக இருந்தால் இவற்றிடமே கேட்டுப் பாருங்கள்” என்று கூறினார்.*

*[64]அவர்கள் தாமே சிந்தித்து (இவற்றை வணங்கியதன் மூலம்) ‘நீங்கள்தான் தீவினையாளர்கள்’ என்று (தங்களையே) கூறிக் கொண்டார்கள். [65]பின்னர் (மனம் பிறழ்ந்து) தலைகுனிந்து, “ஆப்ரஹாமே! இவை பேசமாட்டா என்பதை நீர் அறிவீரே!” என்றனர். [66]அதற்கு அவர், “அல்லாஹ்வை விடுத்து உங்களுக்கு எந்தப் பயனையோ தீங்கையோ அளிக்க இயலாத(இ)வற்றையா நீங்கள் வணங்குகிறீர்கள்? [67]உங்களுக்கும் அல்லாஹ்வையன்றி நீங்கள் வணங்குகின்ற தெய்வங்களுக்கும் இழிவுதான். அந்தோ! நீங்கள் புரிந்து கொள்ள மாட்டீர்களா?” என்று கேட்டார்.*

*[68]அவர்கள் (தங்களுக்குள்) “நீங்கள் ஏதேனும் செய்வதாக இருந்தால் இவரை நெருப்பிலிட்டு எரித்து உங்கள் தெய்வங்களுக்கு உதவி புரியுங்கள்” என்று கூறினர். [69]நாம் “நெருப்பே! நீ ஆப்ரஹாமுக்குக் குளிர்ச்சியாகவும் பாதுகாப்பாகவும் ஆகிவிடு” என்று கூறினோம். [70]அவருக்குத் தீங்கிழைக்க அவர்கள் விரும்பினர். ஆனால் நாம் அவர்களையே இழப்பிற்குள்ளாக்கி விட்டோம்.*

*[71]நாம் அவரையும் லோத்தையும் காப்பாற்றி உலக மக்கள் அனைவருக்கும் நற்பேறாக நாம் ஆக்கிய பூமிக்குக் கொண்டு சேர்த்தோம். [72](மேலும்) நாம் அவருக்கு ஈசாக்கையும் கூடுதலாக ஜேக்கப்பையும் வழங்கினோம். அவர்கள் அனைவரையும் நல்லோர்களாகவும் ஆக்கினோம். [73]நாம் அவர்களைத் தலைவர்களாக்கினோம். அவர்கள் எமது கட்டளைப்படி*

*மக்களுக்கு வழிகாட்டிக் கொண்டிருந்தனர். நாம் அவர்களுக்கு நற்செயல்கள் புரியுமாறும், தொழுகையைக் கடைப்பிடிக்குமாறும் கடமையாக்கப்பட்ட கொடையை வழங்குமாறும் அறிவித்தோம். அவர்கள் எம்மையே வணங்குவோராக இருந்தனர்.*

74லோத்திற்கு ஞானத்தையும் அறிவையும் வழங்கினோம். அருவருப்பான செயல்களில் ஈடுபட்ட ஊரைச் சார்ந்த மக்களிடமிருந்து அவரைக் காப்பாற்றினோம். உறுதியாக அவர்கள் மிகவும் தீயவர்களாகவும் பாவிகளாகவும் இருந்தனர்.
75நாம் அவரை எமது அருளில் நுழையச் செய்தோம். உறுதியாக அவர் நல்லோரில் ஒருவராக இருந்தார்.

76அதற்கு முன்னர் (எம் தூதரான) நோவா அழைத்தபோது நாம் அவரின் இறைஞ்சுதலை ஏற்று அவரையும் அவரது குடும்பத்தினரையும் பெரும் துன்பத்திலிருந்து காப்பாற்றினோம்.
77எம் சான்றுகளைப் பொய்யெனக் கூறியவர்களுக்கெதிராக நாம் அவருக்கு உதவி புரிந்தோம். உறுதியாக அவர்கள் மிகவும் தீயவர்களாக இருந்தனர். எனவே நாம் அவர்கள் அனைவரையும் மூழ்கடித்து விட்டோம்.

78(எம் தூதர்களாகிய) தாவீதும் சாலமனும் சிலருடைய ஆடுகள் (பிறரின்) வயலில் இரவில் புகுந்து மேய்ந்த வயலைக் குறித்து (வெவ்வேறு) தீர்ப்பளித்த போது நாம் அவர்களின் தீர்ப்பைக் கவனித்துக் கொண்டிருந்தோம். 79நாம் சாலமனுக்கு
அதைப்பற்றிய சரியான புரிதலைக் கொடுத்தோம். மேலும், நாம் இருவருக்கும் ஞானத்தையும் அறிவையும் வழங்கியிருந்தோம். நாம் தாவீதுக்கு மலைகளையும் பறவைகளையும் வசப்படுத்தித் தந்தோம். அவருடன் சேர்ந்து அவை (எம்மைத்) துதித்துப் பாடிக் கொண்டிருந்தன. இவற்றையெல்லாம் நாமே செய்தோம்.
80போரில் (காயப்படாமல்) உங்களைப் பாதுகாக்கும் கவச ஆடை செய்யும் கலையை அவருக்குக் கற்றுக் கொடுத்தோம். நீங்கள் நன்றி செலுத்தக் கூடியவர்களா?

[81]நாம் சாலமனுக்கு வேகமான காற்றை வசப்படுத்தித்
தந்தோம். அது அவரின் கட்டளைப்படி நாம் நற்பேறுகளை
வைத்திருந்த பூமியில் வீசிக் கொண்டிருந்தது. நாமே ஒவ்வொரு
பொருளையும் அறிந்திருக்கிறோம் [82]சாத்தான்களில் சிலவற்றையும்
நாம் அவருக்கு வசப்படுத்தித் தந்தோம். அவை அவருக்காக
முத்துக் குளிப்பவையாகவும் வேறு பல செயல்களைச் செய்யக்
கூடியவையாகவும் இருந்தன. நாம் அவைகளைக் கண்காணித்து
வந்தோம்.

[83](எம் தூதர்) யோபையும் நினைவுகூரும்: அவர் தம்
இறைவனிடம் “நோய் என்னைப் பீடித்து விட்டது. நீயே
அருளாளர்களில் எல்லாம் மாபெரும் அருளாளன்” என்று
இறைஞ்சி வேண்டினார். [84]நாம் அவரது இறைஞ்சுதலை
ஏற்று அவரது (நோய்த்) துன்பத்தைப் போக்கி விட்டோம்;
அவருக்கு அவரது குடும்பத்தைத் திரும்ப வழங்கினோம். எம்
அருளால் அவர்களை இரட்டிப்பாக்கியும் விட்டோம். இது
எம்மிடமிருந்துள்ள அருளாகவும் எம்மை வழிபடுவோருக்கு
நல்லுபதேசமாகவும் இருக்கிறது. [85](எம் தூதர்களாகிய)
இஸ்மவேலையும் இத்ரீஸையும் துல்கிஃப்லையும் நினைவுகூரும்!
அவர்கள் அனைவரும் பொறுமையாளர்களாக இருந்தனர்.
[86]நாம் அவர்களை எம் அருளில் நுழையச் செய்தோம். அவர்கள்
அனைவரும் நல்லோர்களாக இருந்தனர்.

[87]மீன் வயிற்றில் இருந்தவர் (எம் தூதர் யோனா) தம்
சமூகத்தார் மீது சினம் கொண்டு சென்றபோது நாம் அவரைத்
தண்டிக்க மாட்டோம் என எண்ணிக்கொண்டார். (அவரை ஒரு
மீன் விழுங்கும்படி செய்தோம். மீன் வயிற்று) இருளில் சிக்கிக்
கொண்ட அவர், “உன்னைத் தவிர வேறு இறைவனில்லை. நீ
மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்; உறுதியாக நான்
தீவினையாளன்” என்று இறைஞ்சி வேண்டினார். [88]நாம் அவரின்
இறைஞ்சுதலை ஏற்று அத்துன்பத்திலிருந்து அவரை விடுவித்தோம்.
இவ்வாறே நாம் நம்பிக்கையாளர்களைக் காப்பாற்றுகிறோம்.

89(எம் தூதர்) ஸகரிய்யா தம் இறைவனிடம் “என் இறைவா!
என்னைத் தனியாக (வழித்தோன்றல்கள் அற்றவனாக)
விட்டுவிடாதே. நீயே மிகச் சிறந்த வாரிசாவாய்” என்று
இறைஞ்சி வேண்டினார். 90நாம் அவரது இறைஞ்சுதலை
ஏற்று அவரது மனைவியை(க் குழந்தைப் பேற்றுக்கு)த்
தகுதியுடையவராக்கி அவருக்கு ஜானை (யஹ்யா) அளித்தோம்.
இவர்கள் நன்மையின்பால் விரைபவர்களாகவும் ஆர்வத்துடனும்
அச்சத்துடனும் எம்மை அழைப்பவர்களாகவும் இருந்தனர். எம்
முன்னால் பணிபவர்களாகவும் இருந்தனர்.

91தம் கற்பைப் பாதுகாத்துக் கொண்ட
அப்பெண்மணியையும்(மர்யம்) நினைவுகூர்வீராக! நாம்
அவருக்குள் எம் ஆன்மாவை ஊதினோம். அவரையும் அவருடைய
மகனையும் உலக மக்களுக்கு ஒரு சான்றாக ஆக்கினோம்.

92(மக்களே!) உங்களது இந்தச் சமூகம் ஒரே சமூகம்தான்.
நானே உங்கள் இறைவன். என்னையே வணங்குங்கள். 93ஆனால்
(இம்மக்களோ) தங்கள் மார்க்கத்தைத் தமக்கிடையே துண்டு
துண்டாக்கி(ப் பிளவுபட்ட)னர். அனைவரும் எம்மிடம் திரும்பி
வரக்கூடியவர்களே. 94எவர் நம்பிக்கைகொண்டு நற்செயல்கள்
புரிகிறாரோ அவரது முயற்சி ஒருபோதும் வீண் போகாது.
அவற்றை நாம் பதிவுசெய்து வருகிறோம்.

95நாம் அழித்த ஊர்களிலிருந்த மக்கள் (இவ்வுலகில்)
மீண்டெழுவது தடுக்கப்பட்டு விட்டது. 96(எதுவரையெனில்)
யஃஜூஜ் (காக்) மஃஜூஜ் (மகோக்) கூட்டத்தார் திறந்து
விடப்படும்போது அவர்கள் ஒவ்வொரு உயரமான
இடங்களிலிருந்தும் (நீர் போல வழிந்து) பரவி விடும்வரை. 97சத்திய
வாக்குறுதி நிறைவேறும் வேளைவரை. அது நெருங்கிவிட்டால்
(ஓரிறை)மறுப்பாளர்களின் பார்வைகள் அப்படியே நிலைகுத்தி
நின்றுவிடும். “எங்கள் கேடே, நாங்கள் அலட்சியமாக இருந்து

*விட்டோமே! நாங்கள் தீவினையாளர்களாக இருந்து விட்டோமே!" என்று (அப்போது) புலம்புவர்.*

*[98]உறுதியாக நீங்களும் அல்லாஹ்வையன்றி நீங்கள் வணங்கிக் கொண்டிருந்தவையும் நரகத்தின் எரிபொருள்களாவீர்கள். "நீங்கள் யாவரும் அங்குத்தான் செல்லவேண்டும்" (என்று கூறப்படும்) [99]உண்மையில் அவை தெய்வங்களாக இருந்தால் அதில் விழுந்திருக்கமாட்டா. (மறுப்பாளர்கள் மற்றும் பொய்த் தெய்வங்கள்) அனைவரும் அங்கு என்றென்றும் கிடப்பர். [100]அங்கு அவர்கள் கதறுவர். (வேறு ஓசை) எதையும் அவர்களால் செவியுற முடியாது. [101]ஆயினும் எம்மிடமிருந்து முன்னரே நன்மை உண்டு என வாக்களிக்கப்பட்டவர்கள் நரகத்திலிருந்து மிகத் தொலைவில் இருத்தப்படுவர். [102]அவர்கள் அதன் சிறு அளவு ஓசையைக்கூட கேட்கமாட்டார்கள். தம் மனம் விரும்பும் பேரின்பநிலையில் என்றென்றும் நிலைத்திருப்பர். [103]மறுமையில் ஏற்படும் பேரதிர்ச்சி அவர்களைக் கவலையில் ஆழ்த்தாது. வானவர்கள் அவர்களை "உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட நாள் இதுதான்" என்று கூறி வரவேற்பார்கள்.*

*[104](மறுமையாகிய) அந்நாளில் எழுதப்பட்ட ஏடுகளைச் சுருட்டுவதைப் போல நாம் வானத்தைச் சுருட்டிவிடுவோம். மனிதர்களை முதலில் படைத்தவாறே மீண்டும் படைப்போம். இது நாம் எம்மீது கடமையாக்கிக் கொண்ட வாக்குறுதியாகும். இதனை நாம் நிறைவேற்றியே தீருவோம் [105]நாம் ஸபூர் வேதத்தில் அறிவுரைக்குப் பின், "எனது நல்லடியார்கள்தாம் பூமியின் வாரிசுகளாவர்" (என்று) எழுதிவிட்டோம். [106](இறைவனையே) வழிபாடு செய்யும் மக்களுக்கு இதில் (குர்ஆனில்) நற்செய்தியுள்ளது.*

*[107](நபியே!) நாம் உம்மை உலகத்தாருக்கு ஓர் அருட்கொடையாகவே அனுப்பியுள்ளோம். [108](நபியே!) நீர் கூறும்: "உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான் என்று*

*எனக்கு (இறைச்செய்தி) அறிவிக்கப்பட்டுள்ளது. நீங்கள் (அவனுக்குக்) கீழ்ப்படியும் மக்களாக இருப்பீர்களா?”* 109*அவர்கள் புறக்கணித்துவிட்டால் நீர் கூறிவிடும் : “நான் உங்கள் யாவருக்கும் சமமாக அறிவித்து விட்டேன். உங்களுக்கு எச்சரிக்கப்படுகின்ற (வேதனை) அருகில் இருக்கிறதா அல்லது தொலைவில் இருக்கிறதா என்பதை நான் அறியேன்.* 110*உறுதியாக (நீங்கள்) உரக்கக் கூறுவதையும் மறைக்கிறவற்றையும் அவன் அறிகிறான்.* 111*இந்தக் கால நீட்டிப்பு உங்களுக்குச் சோதனையாகவும் குறிப்பிட்ட தவணைவரை அனுபவிப்பதற்காகவும் இருக்கலாம், எனக்குத் தெரியாது”* 112*(இறைத்தூதர் இறைஞ்சினார்) “என் இறைவனே! (எனக்கும் இவர்களுக்குமிடையே) நீ சத்தியத் தீர்ப்பு வழங்குவாயாக!” (மேலும் கூறினார்:) எங்கள் இறைவன் அளவற்ற அருளாளன். உங்களுடைய (பொய்மைக்) கூற்றுகளுக்கெதிராக அவனிடமே உதவி தேடுகிறோம்.”*

# 22. ஹஜ் பயணம் (அல்ஹஜ்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

1*மனிதர்களே! உங்கள் இறைவனுக்கு அஞ்சுங்கள்! உறுதியாக மறுமையின் அதிர்ச்சி மிகக் கடுமையானதாகும்.* 2*(மறுமை நிலைபெற்றுவிடும்) அந்நாளில் பாலூட்டுகின்ற ஒவ்வொரு தாயும் தான் பாலூட்டுகின்ற குழந்தையை மறந்து விடுவாள். கருவுற்றிருக்கும் ஒவ்வொரு பெண்ணுக்கும் அவளது கருச்சுமை சிதைந்துவிடும். (நபியே! அன்று) மக்கள் போதையுற்றவர்களாக உமக்குத் தோன்றுவர். உண்மையில் அவர்கள் போதையில் இருக்கமாட்டார்கள். இறைவேதனை மிகக் கடுமையானது.* 3*மக்களில் சிலர் அறிவில்லாமல் அல்லாஹ்வைப்பற்றி வாதம் புரிகின்றனர். மூர்க்கத்தனமான ஒவ்வொரு சாத்தானையும் பின்பற்றுகிறார்கள்.* 4*எவன் சாத்தானுடன் நட்புக் கொள்கிறானோ அவனை வழிகெடுத்து நரகவேதனையின்பால் அவன் இட்டுச் செல்வான் என்பது விதிக்கப்பட்டு விட்டது.*

[5]மனிதர்களே! ‘மீண்டும் எழுப்பப்படுவது’ குறித்து நீங்கள் ஐயத்தில் இருந்தால் (உங்களை முதலில் எவ்வாறு படைத்தோம் என்பதை) அறிந்துகொள்ளுங்கள். நாம் உங்களை (முதல் மனிதரை) மண்ணிலிருந்தும் பின்னர் (அவர் வழித்தோன்றல்களை) விந்துத்துளியிலிருந்தும் பின்னர் இரத்தக் கட்டியிலிருந்தும் பின்னர் வடிவமைக்கப்பட்டதும் வடிவமைக்கப்படாததுமான தசைப் பிண்டத்திலிருந்தும் படைத்தோம். (எம் ஆற்றலை) உங்களுக்குத் தெளிவுபடுத்துவதற்காகத்தான் இவற்றை நாம் எடுத்துரைக்கிறோம். நாம் விரும்பியபடி ஒரு குறிப்பிட்ட காலம்வரை கருவறையில் தங்கவைக்கிறோம். பின்னர் உங்களைக் குழந்தையாக வெளிப்படுத்துகிறோம். பின்னர் நீங்கள் பருவம் அடைகிறீர்கள். உங்களில் சிலர் முன்னர் இறந்து விடுகின்றனர். சிலர் (நீடித்திருந்து) பலவற்றை அறிந்தபின்னர் எதுவும் அறியாமல் ஆகிவிடக்கூடிய தள்ளாத வயதுவரை விட்டுவைக்கப்படுகின்றனர். வறண்ட பூமியைக் காண்கிறீர்கள். அதன்மீது நாம் மழையைப் பொழியச் செய்தவுடன் அது செழித்து வளர்ந்து விதவிதமான அழகிய தாவரங்களை முளைக்கச் செய்கிறது. [6]அல்லாஹ்தான் உண்மையானவன். அவன்தான் இறந்தவர்களை உயிர்ப்பிக்கிறான். அவன் அனைத்துப் பொருள்கள்மீதும் பேராற்றலுடையவன் என்பதே இதற்கான காரணமாகும். [7]‘அந்தநேரம்’ வந்தே தீரும். அதில் எத்தகைய ஐயமும் இல்லை. உறுதியாக அல்லாஹ் சவக்குழிகளில் உள்ளவர்களை எழுப்புவான்.

[8]மனிதர்களில் சிலர் அறிவில்லாமலும் வழிகாட்டுதல் இல்லாமலும் அறிவொளியூட்டும் வேத(ஆதார)ம் இல்லாமலும் அல்லாஹ்வைப்பற்றி வாதம் புரிகின்றனர். [9]செருக்குக் கொண்டவர்களாக, மக்களை இறைவழியிலிருந்து தடுக்கும் பொருட்டு இவ்வாறு செய்கின்றனர். இத்தகையவர்களுக்கு இவ்வுலகில் இழிவுதான் உண்டு. மறுமை நாளிலோ நாம்

*அவர்களை நெருப்பின் வேதனையைச் சுவைக்கச் செய்வோம்.*
*[10]"இது உங்கள் கைகள் முன்னர் செய்தனுப்பிய (தீய)வற்றின்*
*விளைவாகும்" (என்று கூறப்படும்). தன் அடியார்கள் மீது*
*அல்லாஹ் அநீதி இழைப்பவன் அல்லன்.*

*[11]மனிதர்களில் சிலர் (நம்பிக்கை உறுதியின்றி) ஐயத்தின்*
*விளிம்பில் நின்று வணங்குகின்றனர். அவர்களுக்கு ஏதேனும்*
*நன்மை ஏற்பட்டால் அதனால் நிறைவடைகின்றனர். ஆனால்*
*அவர்களுக்கு ஏதேனும் சோதனை ஏற்பட்டுவிட்டால் தமது*
*பழைய நிலைக்குத் திரும்பி விடுகின்றனர். அவர்கள் இம்மையையும்*
*மறுமையையும் இழந்து விட்டனர். இதுதான் தெளிவான பெரும்*
*இழப்பாகும்.*

*[12]அவர்கள் அல்லாஹ்வை விட்டுத் தங்களுக்கு எந்தத்*
*தீங்கையோ பயனையோ அளிக்க இயலாதவற்றை அழைக்கின்றனர்.*
*இதுவே மாபெரும் கெடுவழியாகும். [13]நன்மையைவிடத்*
*தீமையை விரைந்து செய்வோரையே அவர்கள் (தங்கள்*
*பாதுகாவலர்களென) அழைக்கின்றனர். எவ்வளவு கேடான*
*பாதுகாவலர்கள்; (அவர்களைச் சார்ந்து நிற்போர்) எவ்வளவு*
*கேடான தோழர்கள்! [14](இறை) நம்பிக்கைகொண்டு நற்செயல்*
*புரிகின்றவர்களை உறுதியாக அல்லாஹ் சொர்க்கச் சோலைகளில்*
*நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும்.*
*தான் விரும்பியதையே அல்லாஹ் செய்கிறான்.*

*[15](எம் தூதர்மீது பொறாமை கொண்டு) இம்மையிலும்*
*மறுமையிலும் அல்லாஹ் அவருக்கு உதவமாட்டான் என்று*
*எண்ணுகிறவன் வானைநோக்கி ஒரு கயிற்றை வீசிட்டும்; பின்னர்*
*அதைத் துண்டித்துவிடட்டும். அவனது திட்டம் அவனது*
*சினத்தைத் தணித்து விடுகிறதா என்பதைப் பார்க்கட்டும்.*
*[16]இவ்வாறே இந்தக் குர்ஆனைத் தெளிவான சான்றுகளுடன்*
*நாம் அருளியுள்ளோம். உறுதியாகத் தான் விரும்பியோருக்கு*
*அல்லாஹ் வழிகாட்டுகிறான்.*

*[17](ஓரிறை)நம்பிக்கையாளர்கள், யூதர்கள், சாபியீன்கள், கிறிஸ்தவர்கள், (நெருப்பை வணங்கும்) மஜூஸிகள், இணைவைப்பாளர்கள் ஆகிய அனைவருக்குமிடையே அல்லாஹ் மறுமை நாளில் தீர்ப்பளிப்பான். உறுதியாக அல்லாஹ் (இவர்கள் செயல்கள்) அனைத்தையும் கவனித்துக்கொண்டிருக்கிறான்.*

*[18](நபியே!) வானங்களில் உள்ளவர்களும் பூமியில் உள்ளவர்களும் சூரியனும் சந்திரனும் நட்சத்திரங்களும் மலைகளும் மரங்களும் கால்நடைகளும் மனிதர்களில் பலரும் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிகின்றனர் என்பதை நீர் பார்க்கவில்லையா? ஆயினும் பெரும்பாலோர்மீது வேதனை உறுதியாகிவிட்டது. அல்லாஹ் யாரை இழிவுபடுத்துகிறானோ அவரை யாராலும் கண்ணியப்படுத்த முடியாது. உறுதியாகத் தான் விரும்பியதையே அல்லாஹ் செய்கிறான்.*

*[19](நம்பிக்கையாளர்கள், மறுப்பாளர்கள் ஆகிய) இவ்விரு பிரிவினரும் தம் இறைவனைக் குறித்து வாதிட்டுக் கொண்டிருக்கின்றனர். மறுப்பாளர்களுக்கு நெருப்பாலான ஆடைகள் தயார்செய்து வைக்கப்பட்டுள்ளன. அவர்களுடைய தலைகளின்மீது கொதிநீர் ஊற்றப்படும். [20]அதனால் அவர்களின் வயிற்றில் உள்ளவைகளும் தோல்களும் உருகிவிடும். [21]இரும்புச் சம்மட்டி அடிகளும் அவர்களுக்கு உண்டு. [22]துன்பத்தினால் அங்கிருந்து அவர்கள் வெளியேற முயலும்போதெல்லாம் மீண்டும் அதிலேயே தள்ளப்படுவர். "சுட்டெரிக்கும் வேதனையைச் சுவைத்துக் கொண்டே இருங்கள்" (என்று அவர்களுக்குக் கூறப்படும்.)*

*[23](இறை)நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிகின்றவர்களை உறுதியாக அல்லாஹ் சொர்க்கச் சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றிடையே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்களுக்குப் பொற்கடகம், முத்துக்கள் ஆகியவை அணிவிக்கப்படும். அங்கே அவர்களின் ஆடை பட்டாக இருக்கும்.*

[24](ஏனெனில் இம்மையில்) அவர்கள் தூய சொல்லின்பால் வழிகாட்டப்பட்டனர். புகழுக்குரிய இறைவனின் பாதையிலும் செலுத்தப்பட்டனர்.

[25]சத்தியத்தை மறுத்து, மக்கள் இறைவழியில் செல்வதையும் (மக்காவாகிய) அங்கு வாழ்வோருக்கும் அதற்கு வெளியிலிருந்து வருவோருக்கும் சம உரிமையுடையதாக நாம் ஏற்படுத்தியுள்ள புனித (கஅபா) இறையில்லத்திற்குச் செல்வதைத் தடைசெய்கிறவர்களையும் நேர்வழியிலிருந்து விலகி அநீதி இழைக்க விரும்புபவர்களையும் நாம் துன்புறுத்தும் வேதனையைச் சுவைக்குமாறு செய்வோம்

[26](நபியே!) நாம் ஆப்ரஹாமிற்கு இறையில்லத்திற்கான இடத்தை அறுதியிட்டு இவ்வாறு கூறினோம்: "நீர் என்னுடன் எப்பொருளையும் இணையாக்காதீர்! எனது வீட்டை இடஞ்சுற்றி வரக்கூடியவர்களுக்காகவும் (தொழுகைக்காக) நிற்பவர்களுக்காகவும் குனிபவர்களுக்காகவும் தலைவணங்குபவர்களுக்காகவும் தூய்மையாக வைத்திருப்பீராக!

[27]"புனித (ஹஜ்ஜு)ப் பயணம் வருமாறு நீர் மக்களுக்கு அறிவிப்புச் செய்வீராக! அவர்கள் நடந்தும் தொலைவான இடங்களிலிருந்து மெலிந்த ஒட்டகங்களின்மீது அமர்ந்தும் உம்மிடம் வருவார்கள்.
[28]தங்களின் (இம்மை, மறுமைப்) பயன்களை அடைவதற்காகவும் அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியுள்ள கால்நடைகளைக் குறிப்பிட்ட நாட்களில் அவனது பெயர்கூறி அறுப்பதற்காகவும் அவர்கள் அங்கு வருவார்கள். எனவே அதிலிருந்து நீங்களும் உண்ணுங்கள்; துன்பப்படும் ஏழைகளுக்கும் உணவளியுங்கள்.
[29]அவர்கள் தங்கள் அழுக்குகளை அகற்றி, தங்கள் நேர்ச்சைகளை நிறைவேற்றிப் பழமையான இந்த இறையில்லத்தையும் இடஞ்சுற்றி வரட்டும்"

[30]இதுதான் இறைக்கட்டளை. எவர் அல்லாஹ் ஏற்படுத்திய புனிதக் கடமைகளைக் கண்ணியப்படுத்துவாரோ – அவரது

*இறைவனிடம் அவருக்கே அது சிறந்ததாகும். உங்களுக்கு(க் கூடாதென்று) முன்பு அறிவிக்கப்பட்டவற்றைத் தவிர ஏனைய கால்நடைகள் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. சிலை (வழிபாடு)களின் அசுத்தத்திலிருந்து விலகி விடுங்கள்; பொய்ப் பேச்சிலிருந்தும் விலகி விடுங்கள்.*

*31அல்லாஹ்வின் மீது முழு நம்பிக்கை கொண்டவர்களாக இருங்கள். அவனுடன் யாரையும் இணையாக்காதீர்கள். அல்லாஹ்விற்கு இணைவைப்பவன் வானத்திலிருந்து விழுந்து பறவைகளால் கொத்திக்கொண்டு செல்லப்பட்டவன் போலவோ காற்றினால் அடித்துக்கொண்டு செல்லப்பட்டவன் போலவோ ஆகிவிடுவான்.*

*32இதுதான் இறைக்கட்டளை. அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களைக் கண்ணியப்படுத்துவோர் செயல், அவர்களுடைய
உள்ளங்களிலுள்ள இறையச்சத்தின் வெளிப்பாடாகும். 33நீங்கள்
பலிப்பிராணிகள்மூலம் ஒரு குறிப்பிட்ட காலம்வரை பயனடையலாம். பின்னர் அவற்றைப் பலியிடுவதற்காகப் பழமையான இறையில்லத்தின்பால் கொண்டு செல்ல வேண்டும்.*

*34நாம் ஒவ்வொரு சமூகத்தினருக்கும் பலியிடுதலைக் கடமையாக்கியுள்ளோம். அது அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியுள்ள கால்நடைகளின் மீது அவனது பெயரை உச்சரிக்க வேண்டும் என்பதற்காகவே ஆகும். (மக்களே!) உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான். எனவே அவனுக்கே முற்றிலும் கீழ்ப்படியுங்கள். பணிந்து நடப்போருக்கு (நபியே நீர்) நற்செய்தி
கூறிவிடும். 35அல்லாஹ்வைப்பற்றி அவர்களிடம் கூறப்பட்டால்
அவர்களின் உள்ளங்கள் நடுநடுங்கி விடுகின்றன. அவர்கள் தமக்கு ஏற்பட்ட துன்பத்தைச் சகித்துக்கொள்பவர்களாகவும்*

*தொழுகையைக் கடைப்பிடிப்பவர்களாகவும் நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து (அறச்)செலவு செய்பவர்களாகவும் இருப்பர்.*

*[36]பலியிடப்படும் ஒட்டகங்களை நாம் உங்களுக்காக அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களாக ஆக்கியுள்ளோம். அவற்றில் உங்களுக்கு நன்மையுள்ளது. எனவே (அறுப்பதற்காக) அவற்றை நிற்கவைத்து அவற்றின்மீது அல்லாஹ்வின் பெயரை உச்சரியுங்கள். பின்னர் அவை விலாப்புறமாக(ச் சரிந்து) விழுந்துவிட்டால் அவற்றிலிருந்து நீங்களும் உண்ணுங்கள்; (தேவையிருந்தும்) கேட்டுப் பெறாதவருக்கும் கேட்டுப் பெறுவோருக்கும், உண்ணக்கொடுங்கள். இவ்வாறே நீங்கள் (இறைவனுக்கு) நன்றி செலுத்தும்பொருட்டு அவற்றை நாம் உங்களுக்கு வசப்படுத்தித் தந்தோம்.*
*[37]அவற்றின் இறைச்சியோ, இரத்தமோ அல்லாஹ்வை அடைவதில்லை. மாறாக உங்களின் இறையச்சமே அவனை அடைகிறது. அல்லாஹ் உங்களுக்கு நேர்வழியைக் காட்டியதற்காக நீங்கள் (பலி கொடுத்து) அவனைப் பெருமைப்படுத்தும் பொருட்டு அவற்றை அவன் உங்களுக்கு வசப்படுத்தித் தந்துள்ளான். (நபியே!) நன்மை செய்வோருக்கு நற்செய்தி கூறுவீராக!*

*[38]உறுதியாக அல்லாஹ் நம்பிக்கையாளர்களை (மறுப்பாளர்களின் தீங்குகளிலிருந்து) காப்பாற்றுகிறான். அல்லாஹ் துரோகம் செய்பவர்களையும் நன்றிகெட்டவர்களையும் விரும்புவதில்லை.*
*[39]போர் தொடுக்கப்பட்டோருக்கு அவர்கள் அநீதி இழைக்கப்பட்டிருப்பதனால் எதிர்த்துப் போரிட அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. உறுதியாக அல்லாஹ் அவர்களுக்கு உதவிபுரிய ஆற்றலுடையவன்.*
*[40]“அல்லாஹ்தான் எங்கள் இறைவன்” என்று கூறியதற்காகவே அவர்கள் நியாயமின்றித் தங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றப்பட்டனர். மக்களில் (தீவினைபுரியும்) சிலரை வேறு சிலரைக் கொண்டு அல்லாஹ் தடுத்திருக்காவிட்டால் மடாலயங்களும் கிறிஸ்தவ ஆலயங்களும்*

*யூத வழிபாட்டுத்தலங்களும் அல்லாஹ்வின் பெயர் அதிகமாகக்
கூறப்படும் பள்ளிவாசல்களும் இடிக்கப்பட்டிருக்கும். அல்லாஹ்
தன(து மார்க்கத்து)க்கு உதவி புரிபவருக்கு உறுதியாக
உதவிபுரிவான். உறுதியாக அல்லாஹ் வலிமை மிக்கவன்;
யாவற்றினும் வல்லவன்.*

*41(இறைவனுக்கு உதவி செய்யும்) அவர்கள் எத்தகையோர்
என்றால் உலகத்தில் நாம் அவர்களுக்கு வாய்ப்பை வழங்கினால்
தொழுகையைக் கடைப்பிடிப்பர்; கடமையாக்கப்பட்ட
கொடையை வழங்குவர்; நன்மையை ஏவித் தீமையைத் தடுப்பர்.
எல்லாச் செயல்களின் முடிவும் அல்லாஹ்விடமே உள்ளது.*

*42(நபியே!) இவர்கள் உம்மைப் பொய்யரெனக் கருதினால்,
அறிந்துகொள்ளும்! இவர்களுக்கு முன்னர் நோவாவுடைய
சமூகத்தினரும், ஆத், ஸமூத் மக்களும் (தங்கள் தூதர்களைப்)
பொய்மைப்படுத்தினர். 43ஆப்ரஹாமின் சமூகத்தினர்
(ஆப்ரஹாமையும்), லோத்துடைய சமூகத்தினர் (லோத்தையும்)
பொய்யாக்கினர் 44மத்யன்வாசிகளும் (தம் தூதரைப்)
பொய்யரென மறுத்தனர். மோசேவும் மறுக்கப்பட்டார்.
நான் மறுப்பாளர்களுக்குக் கால நீட்டிப்பளித்துப் பின்னர்
அவர்களைப் பிடித்துக் கொண்டேன். எனது தண்டனை
எவ்வளவு கடுமையாயிருந்தது (என்பதை கவனித்தீரா?)*

*45தீவினையாளர்கள் வாழ்ந்திருந்த எத்தனையோ ஊர்களை
நாம் அழித்துவிட்டோம். அவை தலைகீழாக முகடுகளின்
மீது (வீழ்ந்து) கிடக்கின்றன. எத்தனையோ கிணறுகள்
பாழடைந்தும் உறுதிவாய்ந்த கோட்டைகள் அழிந்தும்
கிடக்கின்றன. 46இவர்கள் பூமியில் பயணம் செய்து (இவற்றைப்)
பார்க்கவில்லையா? அவ்வாறாயின் இவர்களின் உள்ளங்கள்
(உண்மையை) விளங்கிக்கொள்ளக் கூடியவையாகவும் காதுகள்
(நல்லறிவுரைகளைக்) கேட்கக் கூடியவையாகவும் ஆகியிருக்குமே!
உண்மையில் கண்கள் குருடாவதில்லை; மாறாக நெஞ்சுக்குள்
இருக்கும் இதயங்கள்தான் குருடாகி விடுகின்றன.*

[47](நபியே!) அவர்கள் உம்மிடம் வேதனைக்காக அவசரப்படுகின்றனர். அல்லாஹ் ஒருபோதும் தன் வாக்குறுதிக்கு எதிராகச் செயல்படமாட்டான். இறைவனிடம் ஒருநாள் என்பது உங்களின் ஆயிரம் ஆண்டுகளுக்குச் சமமாகும்.
[48]தீவினைபுரிந்த ஊரின் எத்தனையோ மக்களுக்கு நான் கால நீட்டிப்பளித்தேன். பின்னர் அவர்களைப் பிடித்துக் கொண்டேன். அவர்கள் என்னிடமே திரும்ப வேண்டும்.

[49](நபியே!) நீர் கூறும்: "மக்களே! நான் உங்களுக்குத் தெளிவாக எச்சரிக்கை செய்பவன்தான்.
[50]எனவே நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர்களுக்கு(ப் பாவ)மன்னிப்பும் கண்ணியமான உணவும் உண்டு"
[51]எமது வசனங்களைத் தோற்கடிக்க முனைபவர்கள் நரகவாசிகளே.

[52]நாம் உமக்கு முன்னர் அனுப்பிய எந்தத் தூதரானாலும் நபியானாலும் அவர் ஓதும்போது சாத்தான் குழப்பத்தை ஏற்படுத்தி விடுகிறான். ஆயினும் சாத்தான் (மக்களிடம்) ஏற்படுத்திய குழப்பத்தை அல்லாஹ் நீக்கிப் பின்னர்த் தன் வசனங்களை உறுதிப்படுத்துகிறான். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்.
[53]சாத்தான் ஏற்படுத்திய குழப்பத்தை இதயங்களில் (ஐயம், நயவஞ்சகம் போன்ற) நோயுள்ளவர்களுக்கும் இறுகிய இதயமுள்ளவர்களுக்கும் சோதனையாக ஆக்கிவிட வேண்டும் என்பதற்காகவும்தான் அல்லாஹ் இவ்வாறு செய்கிறான். தீவினையாளர்கள் எதிர்ப்பில் மிகுதொலைவு சென்றுவிட்டனர்.
[54]அறிவு வழங்கப்பட்டவர்கள் உறுதியாக இது (குர்ஆன்) இறைவனிடமிருந்து வந்துள்ள உண்மை என்பதை அறிந்து இதன்மீது நம்பிக்கைகொள்ள வேண்டும். அவர்களின் உள்ளங்கள் அவனுக்குப் பணிய வேண்டும் என்பதற்காகவும் (இவ்வாறு செய்கிறான். இறை) நம்பிக்கையாளர்களுக்கு அல்லாஹ் உறுதியாக நேர்வழியைக் காட்டிவிடுகிறான்.

[55]மறுப்பாளர்கள் தங்களிடம் திடீரென மறுமை நாள் வந்துவிடும்வரை அல்லது கடினமான ஒருநாளின் வேதனை

வந்துவிடும்வரை இதுக்குறித்த ஐயத்திலேயே கிடப்பார்கள்.
56(மறுமையாகிய) அந்நாளில் அனைத்து அதிகாரமும்
அல்லாஹ்விடமே இருக்கும். அவர்களிடையே அவன்
தீர்ப்பளிப்பான். ஆகவே நம்பிக்கைகொண்டு நற்செயல்
புரிந்தவர்கள் பேரின்பச் சொர்க்கங்களில் இருப்பர். 57மறுத்து
எமது வசனங்களைப் பொய்யெனக் கூறியவர்களுக்கு இழிவுமிக்க
வேதனையுண்டு.

58யாரெல்லாம் இறைவழியில் புலம்பெயர்ந்து பின்னர்க்
கொல்லப்பட்டார்களோ அல்லது இறந்து விட்டார்களோ
அவர்களுக்கு அல்லாஹ் அழகிய (முறையில்) உணவை
வழங்குவான். உறுதியாக உணவளிப்பதில் அல்லாஹ்வே மிகச்
சிறந்தவன். 59அவர்கள் விரும்பும் இடத்தில் அவர்களை அவன்
சேர்ப்பித்து விடுவான். உறுதியாக அல்லாஹ் முற்றும் அறிந்தவன்;
பொறுமை மிக்கவன்.

60இவ்வாறே நிகழும்! ஒருவர் தாம் துன்புறுத்தப்பட்ட அளவு
துல்லியமாக(த் துன்புறுத்தியவரைப்) பழிவாங்கிய பின்னர்,
அவருக்கு மீண்டும் அநீதி இழைக்கப்பட்டால் உறுதியாக
அல்லாஹ் அவருக்கு உதவி செய்வான். உறுதியாக அல்லாஹ்
பிழை பொறுப்பவன்; பெரும் மன்னிப்பாளன்.

61இது (இறையுதவி) எதற்காகவெனில் அல்லாஹ்தான்
இரவைப் பகலில் நுழையச் செய்கிறான்; பகலை இரவில் நுழையச்
செய்கிறான். அல்லாஹ் செவியுறுபவன்; உற்றுநோக்குபவன்.
62அல்லாஹ்தான் உண்மையானவன்; அல்லாஹ்வையன்றி
அவர்கள் அழைக்கின்றவை யாவும் பொய்யானவை. உறுதியாக
அல்லாஹ் மிக உயர்ந்தவன்; மிகப் பெரியவன்.

63(நபியே!) அல்லாஹ்வே வானத்திலிருந்து மழையைப்
பொழிவிக்கிறான். அதனால் பூமி பசுமையாகி விடுகிறது என்பதை
நீர் பார்க்கவில்லையா? உறுதியாக அல்லாஹ் நுட்பமானவன்;
நன்கறிந்தவன். 64வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும்

*அவனுக்கே உரியன. உறுதியாக அல்லாஹ் தேவை எதுவுமற்றவன்; புகழுக்குரியவன்.*

65*(நபியே!) நீர் பார்க்கவில்லையா? பூமியிலுள்ள அனைத்தையும் அல்லாஹ்வே உங்களுக்கு வசப்படுத்தித் தந்துள்ளான். கப்பல் அவனது கட்டளைப்படி கடலில் செல்கிறது. தன் அனுமதியின்றி வானம் பூமியின் மீது விழாதவாறு அவன் தடுத்துக் கொண்டிருக்கின்றான். உறுதியாக அல்லாஹ் மனிதர்களின் மீது மிகுந்த பரிவுடையவன்; நிகரற்ற அன்பாளன்.*
66*அவன்தான் உங்களுக்கு உயிரளித்தான். பின்னர் அவன்தான் உங்களை இறக்கச் செய்வான். பின்னும் அவன்தான் மீண்டும் உங்களை (மறுமை நாளில்) உயிர்ப்பிப்பான். உறுதியாக மனிதன் நன்றி கெட்டவனாக இருக்கிறான்.*

67*(நபியே!) நாம் ஒவ்வொரு சமூகத்தினருக்கும் ஒரு வழிபாட்டுமுறையை ஏற்படுத்தினோம். அவர்கள் அதனைப் பின்பற்றிக் கொண்டிருக்கின்றனர். எனவே இது குறித்து அவர்கள் உம்முடன் வாதிட வேண்டாம். உம் இறைவனின்பால் (அவர்களை) அழைப்பீராக! உறுதியாக நீர் நேரான வழியில் இருக்கின்றீர்.*
68*(நபியே!) அவர்கள் உம்முடன் வாதம் புரிந்தால் "நீங்கள் செய்பவற்றை எல்லாம் அல்லாஹ் நன்கறிவான்" என்றும் கூறிவிடும்.*
69*"நீங்கள் முரண்பட்டுள்ள விஷயங்களில் மறுமை நாளில் அல்லாஹ் உங்களிடையே தீர்ப்பளிப்பான்" (என்றும் கூறுவீராக!)*
70*(நபியே!) வானத்திலும் பூமியிலும் உள்ள அனைத்தையும் அல்லாஹ் நன்கறிவான் என்பதை நீர் அறியமாட்டீரா? இவையாவும் ஓர் ஏட்டில் பதியப்பட்டுள்ளன. இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானதே ஆகும்.*

71*(நபியே!) எனினும் அவர்கள் அல்லாஹ்வையன்றி மற்றவற்றை வழிபடுகிறார்கள். அல்லாஹ் அவற்றுக்கு எந்தச் சான்றையும் இறக்கி வைக்கவில்லை. அவற்றைக் குறித்து எந்த அறிவும் அவர்களிடம் இல்லை. தீவினையாளருக்கு உதவுபவர்கள்*

*யாரும் இல்லை. [72]எம்முடைய தெளிவான வசனங்கள் அவர்களிடம் எடுத்துரைக்கப்பட்டால் நீர் மறுப்பாளர்களின் முகங்களில் வெறுப்பைக் காண்பீர். அவர்கள் எமது வசனங்களை எடுத்துரைப்பவர்களைத் தாக்கி விடுவார்கள் போலும். (நபியே!) நீர் கூறும்: "இதைவிடக் கொடிய ஒன்றை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? அதுதான் நரகம். மறுப்பாளர்களுக்கு அல்லாஹ் அதைத்தான் வாக்களித்துள்ளான். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்".*

*[73]மனிதர்களே! உங்களுக்கு ஓர் எடுத்துக்காட்டுக் கூறப்படுகிறது. அதனைக் கவனமாகக் கேளுங்கள். அல்லாஹ்வையன்றி நீங்கள் அழைக்கும் தெய்வங்களால் ஓர் ஈயைக்கூடப் படைக்க முடியாது. அதற்காக அவையனைத்தும் ஒன்று சேர்ந்தாலும் சரியே! ஏன், ஓர் ஈ அவற்றிடமிருந்து எதையேனும் பிடுங்கிக் கொண்டாலும் அதைக்கூட அவைகளால் மீட்க முடியாது. (அவற்றிடம்) உதவி தேடுபவர்களும் வலுவற்றவர்களே; உதவி தேடப்படுபவையும் வலுவற்றவையே! [74]அவர்கள் அல்லாஹ்வைக் கண்ணியப்படுத்த வேண்டிய முறைப்படி கண்ணியப்படுத்தவில்லை. அல்லாஹ் வலிமை மிக்கவன்; யாவற்றினும் வல்லவன்.*

*[75]அல்லாஹ் வானவர்களிலிருந்தும் மனிதர்களிலிருந்தும் தூதர்களைத் தேர்ந்தெடுக்கிறான். உறுதியாக அல்லாஹ் (அனைத்தையும்) செவியுறுபவன்; உற்றுநோக்குபவன்.
[76]அவர்களுக்கு முன்பு (சென்றவற்றையும்) பின்பு (வர இருப்பவற்றையும்) அவன் அறிகிறான். அனைத்து விவகாரங்களும் அல்லாஹ்விடமே திரும்புகின்றன.*

*[77]நம்பிக்கையாளர்களே! (தொழுகைக்காகக்) குனியுங்கள்; தலைபணியுங்கள்; உங்கள் இறைவனையே வணங்குங்கள்; நன்மையான செயல்களைச் செய்யுங்கள். அதனால் நீங்கள் வெற்றி பெறலாம். [78]இறைவழியில் முயற்சி செய்ய வேண்டியவாறு முயற்சி செய்யுங்கள். அவன் உங்களைத் தேர்ந்தெடுத்துள்ளான்.*

*மார்க்கத்தில் உங்களுக்கு எந்தச் சிரமத்தையும் அவன் ஏற்படுத்தவில்லை. இது உங்களுடைய தந்தையான ஆப்ரஹாமின் வழிமுறையாகும். இதற்கு முன்பும் இந்தக் குர்ஆனிலும் உங்களுக்கு 'முஸ்லிம்கள்' என்று அவன்தான் பெயர் சூட்டினான். அது தூதர் உங்கள்மீது சாட்சியாளராக இருப்பதற்காகவும் நீங்கள் (மற்ற) மக்களுக்குச் சாட்சியாளராக இருப்பதற்காகவுமே ஆகும். எனவே தொழுகையைக் கடைப்பிடியுங்கள். கடமையாக்கப்பட்ட கொடையையும் கொடுத்து வாருங்கள்; அல்லாஹ்வை உறுதியாகப் பற்றிக்கொள்ளுங்கள். அவன்தான் உங்கள் பாதுகாவலன். அவன் மிகச் சிறந்த பாதுகாவலன்; உதவி புரிவதில் மிகச் சிறந்தவன்.*

# 23. நம்பிக்கையாளர்கள் (அல்முஃமினூன்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]உறுதியாக நம்பிக்கையாளர்கள் வெற்றியடைந்து விட்டனர்.
[2]அவர்கள் தம் தொழுகையில் பணிபவர்கள். [3]வீணான
செயல்களிலிருந்து விலகியிருப்பவர்கள். [4]கடமையாக்கப்பட்ட
கொடையையும் வழங்குபவர்கள். [5]தங்கள் கற்புகளைப்
பாதுகாப்பவர்கள். [6]அவர்கள் தங்கள் மனைவியரிடமோ
தாம் உரிமையாக்கிக் கொண்ட அடிமைப் பெண்களிடமோ
தவிர (யாரையும் நெருங்க மாட்டார்கள்.) அதற்காக
அவர்கள் பழிக்கப்படமாட்டார்கள். [7](இவ்வரையறைக்கு)
அப்பால் (வேறுவழி) தேடுவோர் வரம்பு மீறியவர்கள்
ஆவர். [8](நம்பிக்கையாளர்களாகிய) அவர்கள் தங்களை
நம்பி ஒப்படைக்கப்பட்ட அடைக்கலப் பொருள்களையும்
தங்களுடைய வாக்குறுதிகளையும் காப்பவர்கள். [9]தங்கள்
தொழுகைகளை முறையாகக் கடைப்பிடிப்பவர்கள்.
[10]இ(த்தகைய)வர்கள்தாம் உரிமையாளர்கள் ஆவர்; [11]ஃபிர்தவ்ஸ்
என்னும் சொர்க்கத்தின் உரிமையைப் பெறுபவர்கள்; அங்கு
என்றென்றும் தங்கியிருப்பார்கள்.*

*[12]நாம் மனிதனைக் களிமண் சத்திலிருந்து படைத்தோம்.
[13]பின்னர் அவனை விந்துத் துளியாக்கி ஒரு பாதுகாப்பான*

*இடத்தில் (கருவறையில்) வைத்தோம். [14]பின்னர் விந்துத்துளியை(க்*
*கருவறைச் சுவரில்) ஒட்டிக்கொள்ளக் கூடியதாக்கினோம்.*
*பின்னர் அதைச் சதைப் பிண்டமாக்கினோம்; சதைப்பிண்டத்தில்*
*எலும்புகளை உருவாக்கினோம். எலும்புகளைத் தசையால்*
*போர்த்தினோம்; அதனைப் புதிய படைப்பாக ஆக்கினோம்.*
*பேறுகள் எல்லாமுடைய அல்லாஹ் மிகச் சிறந்த படைப்பாளன்.*
*[15](மனிதர்களே!) அதற்குப்பின் உறுதியாக நீங்கள் இறக்கக்*
*கூடியவர்களே. [16]பின்னர் மறுமை நாளில் நீங்கள்*
*எழுப்பப்படுவீர்கள்.*

*[17]நாம் உங்களுக்கு மேலே ஏழு வழிகளை அமைத்துள்ளோம்.*
*எம்முடைய படைப்புகளைவிட்டு நாம் கவனமற்றவர்களாக*
*இல்லை. [18]நாம் வானத்திலிருந்து உரிய ஓர் அளவில் மழையைப்*
*பொழிவித்து அதனைப் பூமியில் தேக்கி வைத்துள்ளோம்.*
*அதனை (மீண்டும்) எடுத்துக்கொள்ளவும் நாம் ஆற்றலுடையோம்.*
*[19]அதன்மூலம் உங்களுக்குப் பேரீச்சை மற்றும் திராட்சைத்*
*தோட்டங்களை உருவாக்கினோம். அவற்றில் உங்களுக்கு*
*ஏராளமான கனிகள் உள்ளன. அவற்றை நீங்கள் உண்கிறீர்கள்.*
*[20]ஸினாய் மலையில் விளையும் (ஒலிவ) மரத்தையும் நாம்*
*படைத்தோம். அது எண்ணெயையும் உண்போருக்குத்*
*தொட்டுச் சாப்பிடும் பொருளையும் தருகிறது. [21]கால்நடைகளில்*
*உங்களுக்குப் படிப்பினை இருக்கிறது. அவற்றின் வயிற்றிலிருந்து*
*நாம் உங்களுக்குப் (பாலைப்) பருகத் தருகிறோம். அவற்றில்*
*உங்களுக்குப் பல்வேறு பயன்களும் உள்ளன. அவற்றை நீங்கள்*
*உண்ணவும் செய்கிறீர்கள். [22]அவற்றின் மீதும் கப்பல்களின் மீதும்*
*நீங்கள் பயணமும் செய்கிறீர்கள்.*

*[23]நாம் நோவாவை அவரது சமூகத்தினரிடம் (எம் தூதராக)*
*அனுப்பினோம். அவர், “என் சமூகத்தோரே! நீங்கள்*
*அல்லாஹ்வையே வணங்குகள்; அவனைத்தவிர உங்களுக்கு வேறு*
*இறைவன் இல்லை. (அவனுக்கு) நீங்கள் அஞ்சமாட்டீர்களா?”*
*என்று கேட்டார். [24](உண்மையை) மறுத்த அவரது சமூகத்*

*தலைவர்கள், “இவர் உங்களைப் போன்ற ஒரு மனிதர்தான். உங்களைவிட உயர்வடைய வேண்டும் என்று விரும்புகிறார். அல்லாஹ் (தூதனுப்ப) விரும்பியிருந்தால் வானவர்களை அனுப்பியிருப்பான். எங்கள் முன்னோர்களிடம் இச்செய்தியை*
*நாங்கள் கேள்விப்பட்டதேயில்லை. [25]இவர் பைத்தியம் பிடித்த*
*ஒரு மனிதரைத் தவிர வேறல்லர். (இவரைப் பொறுத்தவரை) சிறிது காலம் பொறுத்திருந்து பாருங்கள்” என்று கூறினர்.*

*[26]அவர், “என் இறைவா! இவர்கள் என்னைப் பொய்யரெனக் கருதிவிட்டதனால் எனக்கு நீ உதவி புரிவாயாக!” என்று இறைஞ்சி*
*வேண்டினார். [27]நாம் அவரிடம் “எம்முடைய கண்காணிப்பில் எமது கட்டளைக்கேற்ப ஒரு கப்பலைக் கட்டுவீராக! எமது கட்டளை வந்து தண்ணீர் பொங்கத் தொடங்கும்போது ஒவ்வோர் உயிரினத்திலிருந்தும் (ஆண் பெண் என) ஓர் இணையையும் யார் மீது எமது (தண்டனை பற்றிய) வாக்குப் பிறந்துவிட்டதோ அவர்களைத் தவிர ஏனைய உமது குடும்பத்தினரையும் ஏற்றிக் கொள்வீராக! முறைகேடர்களைக் குறித்து இனி என்னிடம் (பரிந்து) பேசாதீர். உறுதியாக அவர்கள் மூழ்கடிக்கப்படுவார்கள்” என்று அறிவித்தோம்.*

*[28]நீரும் உம்முடன் உள்ளவர்களும் கப்பலில் அமர்ந்து கொண்டபின் “தீவினையாளரிடமிருந்து எங்களைக் காப்பாற்றிய*
*அல்லாஹ்வுக்கே நன்றி” என்று கூறுவீராக! [29]‘என் இறைவா!*
*அருள் வளம்மிக்க இடத்தில் என்னை இறக்கி வைப்பாயாக! நீயே மிகச்சிறந்த இடத்தை வழங்கக்கூடியவன்’ என்றும் கூறுவீராக”*
*(என்றும் கூறினோம்). [30]உறுதியாக இதில் சான்றுகள் உள்ளன.*
*உறுதியாக நாம் மக்களைச் சோதித்துக்கொண்டே இருக்கிறோம்.*

*[31]அவர்களுக்குப் பின் (ஆத் என்னும்) வேறொரு சமூகத்தை*
*உருவாக்கினோம். [32]அவர்களிடம் அவர்களிலிருந்தே ஒரு தூதரை*
*அனுப்பினோம். “நீங்கள் அல்லாஹ்வையே வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. (அவனுக்கு)*
*நீங்கள் அஞ்சவில்லையா?” என்று அவர் கேட்டார். [33]உண்மையை*

மறுத்து மறுமையின் சந்திப்பைப் பொய்மைப்படுத்திய அச்சமூகத் தலைவர்கள், இவ்வுலகில் வசதியான வாழ்க்கையை அவர்களுக்கு நாம் வழங்கியிருந்தும் (தம் மக்களிடம்) "இவர் உங்களைப் போன்ற ஒரு மனிதர்தான். நீங்கள் உண்பதையே இவரும் உண்கிறார்; நீங்கள் பருகுவதையே இவரும் பருகுகிறார்.
34ஆகவே நீங்கள் உங்களைப்போன்ற ஒரு மனிதருக்குக் கீழ்ப்படிந்தீர்களானால் பெரும் இழப்பிற்குள்ளாகி விடுவீர்கள்" என்று கூறினர்.

35"நீங்கள் இறந்து மண்ணாகவும் எலும்புகளாகவும் ஆகிவிட்ட பின்னர் மீண்டும் (உயிர்ப்பிக்கப்பட்டு மண்ணறைகளிலிருந்து) வெளியாக்கப்படுவீர்கள் என்று இவர் உங்களிடம் வாக்களிக்கிறாரா?
36நீங்கள், எச்சரிக்கப்படும் இவ்விஷயம் உண்மைக்கு மிகமிகத் தொலைவானது.
37வாழ்க்கை என்பது இவ்வுலக வாழ்க்கை மட்டும்தான். இங்குத்தான் நாம் இறக்கிறோம்; (ஒருமுறை மட்டும்) உயிர் வாழ்கிறோம். நாம் ஒருபோதும் மீண்டும் எழுப்பப்படமாட்டோம்.
38இவர் அல்லாஹ்வின்மீதே பொய்யுரைக்கும் மனிதராக இருக்கிறார். நாங்கள் இவரை நம்ப மாட்டோம்" என்றும் கூறினர்.

39"என் இறைவா! இவர்கள் என்னைப் பொய்யரெனக் கருதிவிட்டதால் எனக்கு நீ உதவிபுரிவாயாக" என்று தூதர் இறைஞ்சி வேண்டினார்.
40அதற்கு இறைவன், "மிக விரைவில் இவர்கள் (தாம் செய்தது பற்றி) வருத்தப்படத்தான் போகின்றனர்" என்று கூறினான்.
41ஆகவே உண்மையாகவே ஒரு பேரோசை அவர்களைப் பற்றிக்கொண்டது. நாம் அவர்களை (வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படும்) குப்பைக் கூளங்களாக்கி விட்டோம். "அழிந்து போகட்டும் அந்தக் கொடிய சமூகம்" (என்று அவர்கள் சபிக்கப்பட்டனர்.)

42அவர்களுக்குப் பின் நாம் வேறுபல சமூகங்களை உருவாக்கினோம்.
43எந்தச் சமூகமும் தனது தவணைக்கு முந்தவும் செய்யாது, பிந்தவும் செய்யாது.
44பின்னரும் நாம்

தொடர்ந்து எமது தூதர்களை அனுப்பிக் கொண்டிருந்தோம். எந்த ஒரு சமூகத்திடமும் அதனுடைய தூதர் வந்தபோது அவரை அவர்கள் பொய்மைப்படுத்திக் கொண்டுதான் இருந்தனர். எனவே நாம் அச்சமூகங்களை ஒன்றன்பின் ஒன்றாக அழித்துக் கொண்டே வந்தோம். அவர்களைப் (பின்வந்தோர் பேசக்கூடிய) பழங்கதைகளாக்கி விட்டோம். நம்பிக்கை கொள்ளாத மக்களுக்கு (இறையருள்) தொலைவாகட்டும்.

[45]பின்னர் நாம் மோசேயையும் அவரது சகோதரர் ஆரோனையும்
எமது சான்றுகளையும் தெளிவான ஆதாரங்களையும் கொடுத்து
[46]ஃபாரோவிடமும் அவன் அவையிலிருந்த தலைவர்களிடமும்
அனுப்பி வைத்தோம். ஆனால் அவர்கள் செருக்குடன் நடந்து
கொண்டனர்; அவர்கள் செருக்குக்கொண்ட மக்களாகவே
இருந்தனர். [47]“நம்மைப் போன்ற இரு மனிதர்களின் மீது நாம்
நம்பிக்கைகொள்வதா? அவர்களின் சமூகத்தினரோ நமக்கு
அடிமைகளாக இருக்கின்றனர்” என்று அவர்கள் கூறினர். [48]ஆக,
அவ்விருவரையும் அவர்கள் பொய்யர்கள் என்றனர். எனவே
அவர்கள் அழிக்கப்பட்டு விட்டனர். [49]அவர்கள் நேர்வழியடைய
வேண்டும் என்பதற்காக நாம் மோசேவுக்கு வேதத்தை
வழங்கினோம்.

[50]மேலும் நாம் மர்யத்தின் மைந்தரையும் மர்யத்தையும் சான்றாக ஆக்கினோம். நீரூற்றுள்ள, உயரமான, அமைதி நிறைந்த ஓரிடத்தில் அவர்களைத் தங்கச் செய்தோம்.

[51](நாம் அனுப்பிய தூதர்களை நோக்கி) “தூதர்களே!
தூய்மையானவற்றை உண்ணுங்கள்; நற்செயல் புரியுங்கள்; நீங்கள்
செய்பவற்றை நான் நன்கறிவேன். [52]உங்களது இந்தச் சமூகம்
ஒரே சமூகம்தான். நானே உங்கள் இறைவன். எனவே எனக்கு
அஞ்சுங்கள்” என்று கட்டளையிட்டிருந்தோம்.

[53]எனினும் (பின்னர் அத்தூதர்களின்) மக்கள் தங்களின் மார்க்கத்தில் பிளவுபட்டனர். ஒவ்வொரு கூட்டத்தாரும்

*தன்னிடம் இருப்பதைக் கொண்டு பூரிப்படைகின்றனர். [54]எனவே (நபியே!) குறிப்பிட்ட காலம்வரை அவர்களின் மயக்கத்திலேயே அவர்களை விட்டுவிடும். [55]நாம் அவர்களுக்குச் செல்வத்தையும் பிள்ளைகளையும் அளித்து வருவதுபற்றி அவர்கள் நினைத்துக் கொள்வதெல்லாம் [56](அவற்றைக் கொண்டு) நாம் அவர்களுக்கு நன்மைசெய்ய விரைந்து கொண்டிருக்கிறோம் என்பதே. (உறுதியாக இல்லை). ஆயினும் (உண்மை நிலையை) அவர்கள் புரிந்துகொள்வதில்லை.*

*[57]தம் இறைவனின் (வேதனை குறித்த) அச்சத்தால் நடுங்கிக் கொண்டிருப்போரும், [58]தம் இறைவனின் வசனங்களை நம்புவோரும் [59]தம் இறைவனுக்கு இணைவைக்காதோரும், [60]தங்களுக்கு வழங்கப்பட்டதிலிருந்து ஈகைபுரிவோரும், (உறுதியாக) தங்கள் இறைவனிடம் திரும்பிச்செல்வோம் என்ற எண்ணத்தால் உள்ளம் நடுநடுங்கிக் கொண்டிருப்போரும் [61](ஆகிய) இத்தகைய மக்கள்தாம் நற்செயல்களில் விரைந்து செல்பவர்கள்; இவர்கள்தாம் (அவற்றின் நற்பயனைப் பெறுவதிலும்) முந்திச் செல்பவர்கள். [62]நாம் யாரையும் அவரின் சக்திக்குமேல் சிரமப்படுத்துவதில்லை. (ஒவ்வொருவரைப் பற்றியும்)மிகச்சரியாகப் பேசக்கூடிய ஒரு புத்தகம் எம்மிடமுள்ளது. எவரும் அநீதி இழைக்கப்படமாட்டார்கள்.*

*[63]ஆயினும் (இறைமறுப்பாளர்களாகிய) அவர்களுடைய உள்ளங்கள் (குர்ஆனாகிய) இதனைப்பற்றி அறியாமையில் குழம்பிக் கிடக்கின்றன. அவர்களிடம் அது அல்லாத வேறு பல (தீய)செயல்களும் உள்ளன. அவற்றை அவர்கள் செய்து கொண்டிருப்பார்கள். [64]இறுதியில் அவர்களில் ஆடம்பரமாக வாழ்வோரை வேதனையால் நாம் தண்டிக்கும்போது (தங்களைக் காக்குமாறு) அபயக்குரல் எழுப்புவார்கள். [65]"இன்று நீங்கள் அபயக்குரல் எழுப்பாதீர்கள்; இனி எம்மிடமிருந்து உங்களுக்கு எந்த உதவியும் கிடைக்காது. [66]எமது வசனங்கள் ஓதிக்காட்டப்பட்ட போது நீங்கள் பின்வாங்கி ஓடிக் கொண்டிருந்தீர்கள்"*

*[67]செருக்குக்கொண்டு ஏதோ (இராக்) கதை சொல்பவனைவிட்டுச்
செல்வதைப் போல" (என்று கூறப்படும்.)*

*[68]அவர்கள் இந்த (இறை)வாக்கை ஆராய்ந்து பார்க்க
வேண்டாமா? அல்லது அவர்களின் முன்னோர்களிடம் வராத
ஒன்று அவர்களிடம் வந்துவிட்டதா? [69]அல்லது அவர்கள் தம்
தூதரை அறிந்திருக்கவில்லையா? (அறியவில்லை எனக் கூறி)
மறுக்கிறார்களா? [70]அல்லது அவருக்குப் பைத்தியம் பிடித்துள்ளது
என்று கூறுகின்றனரா? மாறாக, அவர்களிடம் அவர்
சத்தியத்தையே கொண்டு வந்துள்ளார். ஆயினும் அவர்களில்
பெரும்பாலோர் சத்தியத்தை வெறுக்கின்றனர். [71](அந்தச்)சத்தியம்
அவர்களின் (தவறான) விருப்பங்களைப் பின்பற்றியிருந்தால்
வானங்கள், பூமி அவற்றிலுள்ளவை அனைத்தும் அழிந்து
போயிருக்கும். மாறாக, நாம் அவர்களுக்குரிய அறிவுரையையே
வழங்கியுள்ளோம். ஆயினும் அவர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட
அறிவுரையைப் புறக்கணித்துக் கொண்டிருக்கின்றனர்.*

*[72]அல்லது (நபியே!) நீர் அவர்களிடம் ஏதேனும் கூலி
கேட்கிறீரா? உம் இறைவனுடைய கூலியே (உமக்கு) மிகச்
சிறந்ததாகும். அவன்தான் கொடையாளர்களிலெல்லாம் மிகச்
சிறந்தவன். [73]உறுதியாக நீர் அவர்களை நேர்வழிக்கே அழைக்கிறீர்.
[74]ஆயினும் மறுமையை நம்பாதவர்கள்தாம் அவ்வழியிலிருந்து
விலகிச் செல்கின்றனர்.*

*[75]நாம் அவர்கள்மீது அருள்புரிந்து அவர்களுக்கு ஏற்பட்ட
துன்பத்தை நீக்கிவிட்டாலும் தங்கள் வரம்புமீறலிலேயே அவர்கள்
தடுமாறித் திரிவார்கள். [76]நாம் அவர்களை வேதனையால்
பற்றினாலும் அவர்கள் தங்கள் இறைவனுக்குப் பணிவதில்லை;
அவனிடம் மன்றாடுவதும் இல்லை. [77]இறுதியில் அவர்கள்மீது
கடும் வேதனையின் வாயிலை நாம் திறந்து விட்டால் அவர்கள்
முற்றிலும் நம்பிக்கையிழந்துவிடுவர்.*

[78]அவன்தான் உங்களுக்கு செவியையும் கண்களையும் உள்ளங்களையும் கொடுத்தவன். ஆயினும் நீங்கள் மிக அரிதாகவே (அவனுக்கு) நன்றி செலுத்துகிறீர்கள்.* [79]அவன்தான் உங்களைப் பூமியில் பரவச்செய்கிறான். அவனிடமே நீங்கள் ஒன்றுதிரட்டப்படுவீர்கள். [80]அவன்தான் வாழ்வையும் சாவையும் அளிக்கிறான். இரவு பகல் மாறிமாறி வருவதும் அவனது கட்டுப்பாட்டில்தான் உள்ளது. நீங்கள் புரிந்துகொள்ள வேண்டாமா?

[81]ஆயினும் முன்னோர்கள் கூறியதைப் போன்றே இவர்களும் கூறுகின்றனர். [82]"நாங்கள் இறந்து மண்ணாகவும் எலும்புகளாகவும் ஆகிவிட்ட பின்னர் மீண்டும் எழுப்பப்படுவோமா?" என்று கேட்கின்றனர். [83]"நாங்களும் இதற்கு முன்னர் எங்கள் முன்னோர்களும் இவ்வாறுதான் வாக்களிக்கப்பட்டு வந்திருக்கிறோம். இது முன்னோர்களின் கட்டுக்கதையேயாகும்" (என்றும் கூறுகின்றனர்.)

[84](நபியே!) நீர் கேளும்: "பூமியும் அதிலுள்ளவர்களும் யாருக்குரியவர்கள்? நீங்கள் அறிந்திருந்தால் கூறுங்கள்" [85]அவர்கள் "அல்லாஹ்வுக்கே (உரியவர்கள்)" என்று கூறுவர். நீர் கேளும்: "பிறகு நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?" [86]நீர் கேளும்: "ஏழு வானங்களுக்கும் மகத்தான இறையிருக்கைக்கும் உரிமையாளன்

---

*இந்தப் பிரபஞ்சத்தில் சிந்திக்கும் ஆற்றல், செவிப்புலன், பார்வை போன்ற தனித்துவமான சக்திகளுடன் படைக்கப்பட்டுள்ள மனிதன் ஒரு சிறப்பான படைப்பாவான். இவை அனைத்தும் வாழ்க்கையின் உண்மைத்தன்மையை மனிதன் அறிந்துகொள்ள வேண்டும் என்ற நோக்கத்திற்காகவே அளிக்கப்பட்டுள்ளன. அவன் தன் செவிப்புலனைக்கொண்டு சத்தியத்தின் குரலைக் கேட்க இறைவனின் சான்றுகளை அவன் தன் இரு கண்களைக் கொண்டு காண வேண்டும். இவை அனைத்திலும் உள்ளுறைந்திருப்பவற்றை அவன் தன் சிந்திக்கும் ஆற்றலைக்கொண்டு கண்டறிய வேண்டும். உண்மையில் இது காதுகள், கண்கள் மற்றும் உள்ளத்தைக்கொண்டு நன்றி செலுத்துவதாகும். இந்த நன்றியறிதலைச் செய்யாதவர் மறுமை வாழ்க்கையின் வெகுமதிகளை இழக்கும் ஆபத்தான நிலைக்கு ஆளாவர்.

*யார்?" [87]அவர்கள் "அல்லாஹ்தான்!" என்று கூறுவர். நீர் கேளும்: "பிறகு நீங்கள் ஏன் (அவனுக்கு) அஞ்சுவதில்லை?" [88]நீர் கேளும்: "யாருடைய கையில் அனைத்து அதிகாரமும் உள்ளன? அவன் பாதுகாப்பளிப்பவன்; பாதுகாப்புத் தேவையற்றவன். நீங்கள் அறிந்திருந்தால் கூறுங்கள்" [89]அவர்கள் "எல்லாம் அல்லாஹ்வுக்கே உரியன" என்று கூறுவர். நீர் கேளும்: "பிறகு எவ்வாறு நீங்கள் மதி மயக்கப்படுகிறீர்கள்?"*

*[90]நாம் அவர்களிடம் சத்தியத்தையே கொண்டு வந்துள்ளோம். ஆயினும் (அதனை மறுக்கும்) அவர்கள் பொய்யர்களே.*
*[91]அல்லாஹ் எந்த மகனையும் தனக்கென உண்டாக்கிக் கொள்ளவில்லை; அவனுடன் வேறு எந்த இறைவனும் இல்லை. அவ்வாறு இருந்திருந்தால் ஒவ்வொரு இறைவனும் தான் படைத்தவற்றைச் சேர்த்துக் கொண்டு ஒருவருக்கொருவர் தாக்குதல் நடத்தியிருப்பார்கள். அவர்கள் கூறுவதிலிருந்து அல்லாஹ் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்.*
*[92]அவன் வெளிப்படையானவற்றையும் மறைவானவற்றையும் அறியக்கூடியவன்; அவர்கள் இணைவைப்பவற்றைவிட அவன் மிக உயர்ந்தவன்.*

*[93]"என் இறைவா! அவர்களுக்கு எச்சரிக்கப்படுவதை நீ எனக்குக் காண்பிப்பதாயின் (அந்த நேரத்தில்) [94]என்*
*இறைவா! தீவினையாளர்களுடன் என்னைச் சேர்த்து விடாதே" என்று (நபியே!) நீர் இறைஞ்சி வேண்டுவீராக! [95]உறுதியாக*
*அவர்களுக்கு எச்சரிப்பதை உமக்குக் காட்டுவதற்காக நாம் ஆற்றல் பெற்றுள்ளோம்.*

*[96](நபியே!) மிகச்சிறந்ததைக் கொண்டு தீமையைத் தடுப்பீராக! அவர்கள் (உம்மைப்பற்றிக்) கூறுவதை நாம் நன்கறிவோம்.*
*[97](நபியே!) "என் இறைவா! சாத்தான்களின் தூண்டுதல்களிலிருந்து நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். [98]என் இறைவா!*

*அவர்கள் என்னிடம் வருவதிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்" என்று வேண்டுவீராக!*

*[99]இறுதியில் (ஓரிறை)மறுப்பாளர்களில் யாருக்கேனும்
மரணம் வந்துவிடுமானால் "என் இறைவா! என்னைத்
திருப்பி அனுப்பு; [100](இனி) நான் விட்டுவந்த(உலகத்)தில்
நற்செயல்கள் செய்துகொண்டிருப்பேன்" என்பான். ஒருபோதும்
இல்லை. அவன் கூறுவது வெற்று வார்த்தையே அன்றி
வேறில்லை. இத்தகையவர்கள் எழுப்பப்படும் நாள்வரை
அவர்களுக்கு முன்னால் ஒரு திரை இருக்கிறது. [101]எக்காளம்
ஊதப்பட்டுவிட்டால் அந்நாளில் அவர்களிடையே எந்த உறவும்
இராது. யாரும் யாரையும் விசாரித்துக்கொள்ளவும் மாட்டார்கள்.
[102]அப்போது எவருடைய (நன்மையின்) எடைத்தட்டு கனமாக
இருக்குமோ அவர்கள்தாம் வெற்றியாளர்கள். [103]எவருடைய
எடைத்தட்டு இலேசாக இருக்குமோ அவர்கள்தாம் தமக்குத்தாமே
இழப்பை ஏற்படுத்திக்கொண்டவர்கள். அவர்கள் நரகத்தில்
என்றென்றும் கிடப்பர். [104]அவர்களின் முகங்களை நரகநெருப்புப்
பொசுக்கிவிடும். அங்கு (உதடுகள் வெந்து சுருண்டு) அவர்களின்
முகங்கள் விகாரமானவையாக இருக்கும்.*

*[105]"என் வசனங்கள் உங்களுக்கு எடுத்துரைக்கப்பட்ட போது
நீங்கள் அவற்றைப் பொய்யென்று கூறினீர்கள் அல்லவா?"
(என்று கேட்கப்படும்) [106]அதற்கு அவர்கள் கூறுவார்கள், "எங்கள்
இறைவா, எங்களுடைய தீப்பேறு எங்களை மீறிவிட்டது. நாங்கள்
வழிகெட்ட மக்களாக இருந்தோம், [107]இறைவா! எங்களை இ(ந்த
நரகத்)திலிருந்து வெளியேற்றிவிடு. நாங்கள் மீண்டும் இவ்வாறு
செயல்பட்டால் உறுதியாக நாங்கள் தீவினையாளர்களாவோம்"
என்பர். [108]அதற்கு இறைவன் கூறுவான், "இதிலேயே வீழ்ந்து
விடுங்கள்; என்னுடன் பேசாதீர்கள்". [109](உலகில்) என்
அடியார்களில் ஒரு சாரார், 'இறைவா! நாங்கள் நம்பிக்கை
கொண்டோம். எனவே எங்களை மன்னித்து அருள்புரிவாயாக!
நீயே மிகச் சிறந்த அருள்புரிபவன்' என்றும் இறைஞ்சி வேண்டிக்*

கொண்டிருந்தனர். [110]நீங்கள் அவர்களை ஏளனப் பொருளாகக் கருதினீர்கள். அது என்னை நினைப்பதிலிருந்து உங்களை மறக்கச் செய்துவிடும் அளவுக்கு இருந்தது. நீங்கள் அவர்களைக் கண்டு சிரித்துக் கொண்டிருந்தீர்கள். [111]இன்று நான் அவர்களின் பொறுமைக்குப் பரிசளித்தேன். அவர்கள்தாம் வெற்றியாளர்கள்" என்றும் கூறுவான்.

[112]"பூமியில் எத்தனை ஆண்டுகள் நீங்கள் வாழ்ந்தீர்கள்?" என்று அவன் கேட்பான். [113]அவர்கள், "நாங்கள் ஒருநாள் அல்லது அதைவிடக் குறைவாகத் தங்கியிருந்திருப்போம். கணக்கிடுவோரிடம் கேட்டுக் கொள்வாயாக!" என்பர். [114]அவன் "நீங்கள் சிறிது காலமே தங்கி இருந்தீர்கள். நீங்கள் அறிந்திருக்க வேண்டாமா?" என்று கூறுவான்.

[115]"உங்களை நாம் நோக்கமின்றியே படைத்தோம் என்றும் நீங்கள் எம்மிடம் திரும்பக் கொண்டு வரப்பட மாட்டீர்கள் என்றும் எண்ணிக் கொண்டீர்களா?" என்று (இறைவன் கேட்பான்) [116]உண்மையான அரசன் அல்லாஹ், மிக உயர்ந்தவன். அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் மகத்தான இறையிருக்கையின் உரிமையாளன். [117]எவன் அல்லாஹ்வுடன் வேறு இறைவனை அழைத்து. அது குறித்து எந்தச் சான்றும் அவனிடம் இல்லையெனில் அவன் இறைவனால் விசாரிக்கப்படுவான். உறுதியாக மறுப்பாளர்கள் வெற்றி பெறமாட்டார்கள். [118](நபியே!) நீர் கூறும்: "என் இறைவா! என்னை மன்னித்து என்மீது அருள்புரிவாயாக! நீயே மிகச் சிறந்த அருளாளன்.

## 24. ஒளி ( அந்நூர் )

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...

[1]இது நாம் அருளியுள்ள ஓர் அத்தியாயமாகும். (இதிலுள்ள கட்டளைகளை) நாம் விதியாக்கியுள்ளோம். நீங்கள் படிப்பினை பெறும் பொருட்டு இதில் தெளிவான வசனங்களை அருளியுள்ளோம். [2](மணமாகாத) ஒழுக்கம்தவறிய பெண்,

*ஒழுக்கம்தவறிய ஆண் ஆகிய இருவருக்கும் நூறு கசையடி
வழங்குங்கள். நீங்கள் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின்
மீதும் நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால் அல்லாஹ்வின்
மார்க்க விவகாரத்தில் அவர்களுக்காக இரக்கம் காட்ட
வேண்டாம். அவ்விருவருக்கும் தண்டனை அளிக்கப்படும்போது
நம்பிக்கையாளர்களில் ஒரு பிரிவினர் அங்கிருக்கட்டும். [3]ஒழுக்கம்
தவறிய ஆண், ஒழுக்கம்தவறிய பெண்ணையோ இணைவைக்கும்
பெண்ணையோ தவிர வேறு யாரையும் மணக்கமாட்டான்.
ஒழுக்கம்தவறிய பெண், ஒழுக்கம்தவறிய ஆணையோ
அல்லது இணைவைக்கும் ஆணையோதவிர வேறு யாரையும்
மணக்கமாட்டாள். இ(த்தகையோரை மணந்துகொள்வ)து
நம்பிக்கையாளர்களுக்குத் தடை செய்யப்பட்டுள்ளது.*

*[4]கற்புள்ள பெண்கள்மீது (ஒழுக்கம் தவறியதாகப்) பழிசுமத்தி
(அதற்கான) நான்கு சாட்சிகளைக் கொண்டு வராதவர்கள்
எண்பது கசையடிகளைத் தண்டனையாக அளியுங்கள். (பின்னர்)
அவர்களின் சாட்சியத்தை ஒருபோதும் ஏற்றுக்கொள்ளாதீர்கள்.
அவர்கள்தாம் பாவிகளாவர். [5]ஆயினும் (பாவ)மன்னிப்புக் கோரித்
தம்மைச் சீர்ப்படுத்திக்கொண்டவர்களைத் தவிர. உறுதியாக
அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

*[6]தம்மைத் தவிர வேறு சாட்சிகளில்லாத நிலையில் தம்
மனைவியர்மீது (ஒழுக்கக்கேட்டுக்) குற்றம் சுமத்துபவர்களில்
ஒவ்வொருவரும் தான் உண்மையாளன் என்று நான்கு முறை
அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து கூறவேண்டும். [7]ஐந்தாவது
முறை “தான் பொய்யனாக இருந்தால் தன்மீது அல்லாஹ்வின்
சாபம் உண்டாகட்டும்” என்று அவன் கூற வேண்டும். [8]அவன்
மனைவி “அவன் பொய்யானவன்” என்று அல்லாஹ்வின்
மீது நான்கு முறை சத்தியமிட்டு, [9]ஐந்தாவது முறை “அவன்
உண்மையாளனாக இருந்தால் என்மீது அல்லாஹ்வின் சினம்
உண்டாகட்டும்” என்று கூறினால் அவள் மீதான தண்டனை
நீக்கப்படும். [10]உங்கள்மீது அல்லாஹ்வின் கொடையும் அவனது*

*அருளும் இல்லாதிருக்குமானால் (நீங்கள் வேதனைக்கு ஆளாகியிருப்பீர்கள்) அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; ஞானம் மிக்கவன்.*

[11]*நம்பிக்கையாளர்களே! உறுதியாக (நபியின் மனைவியான ஆயிஷா மீது) பழிச்சொல் கூறியவர்கள் உங்களில் ஒரு குழுவினர்தாம். இந்த நிகழ்ச்சியை உங்களுக்குத் தீங்காக எண்ணவேண்டாம். மாறாக, இது உங்களுக்கு நன்மையானதாகும். அ(வதூறு சொன்ன)வர்களில் ஒவ்வொருவருக்கும் அவரவர் ஈட்டிக்கொண்ட பாவத்தின் அளவுக்குத் தக்க தண்டனை உண்டு. அவர்களில் பெரும்பங்கு வகித்தவனுக்குக் கடும் வேதனையுண்டு.*

[12]*நம்பிக்கைகொண்ட ஆண்களும் பெண்களுமாகிய நீங்கள் இதனைச் செவியுற்றபோது, தங்களை(ப் போன்ற நம்பிக்கையாளர்களை)க் குறித்து நல்லெண்ணம்கொண்டு இது 'வெளிப்படையான பழிக்கூற்று' என்று கூறியிருக்க வேண்டாமா?* [13]*(வெளிப்படையாகப் பழிச்சொல் கூறிய) அவர்கள் அதற்காக நான்கு சாட்சிகளைக் கொண்டு வந்திருக்க வேண்டாமா? அவர்கள் சாட்சிகளைக் கொண்டு வராவிட்டால் அவர்கள்தாம் அல்லாஹ்விடத்தில் பொய்யர்கள்.*

[14]*உங்கள்மீது இம்மையிலும் மறுமையிலும் அல்லாஹ்வின் கொடையும் அவனது அருளும் இல்லாதிருந்திருக்குமானால் நீங்கள் ஈடுபட்டிருந்த செயலால் கடும் வேதனை உங்களைத் தாக்கியிருக்கும்.* [15]*இதனை உங்கள் நாவுகளால் பரப்பிக் கொண்டிருந்தீர்கள். நீங்கள் அறியாத விஷயத்தை உங்கள் வாய்களால் கூறிக்கொண்டிருந்தீர்கள். நீங்கள் அதனை(உங்கள் செயலை)ச் சாதாரணமாக எண்ணி விட்டீர்கள். ஆனால் அல்லாஹ்விடத்திலோ அது மிகக் கடுங்குற்றமாகும்.* [16]*நீங்கள் இதனைக் கேள்விப்பட்டபோது "இது குறித்துப் பேசுவது எங்களுக்கு உகந்ததல்ல. (இறைவனே) நீ தனித்துயர்ந்தவன். இது*

*மிகப்பெரும் பழிக்கூற்றாகும்" என்று கூறியிருக்க வேண்டாமா?*
*17நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் இனி ஒருபோதும்*
*இவ்வாறு செய்யக்கூடாது என்று அல்லாஹ் உங்களுக்கு*
*அறிவுறுத்துகிறான். 18அல்லாஹ் உங்களுக்குக் கட்டளைகளைத்*
*தெளிவாக வழங்குகிறான். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்;*
*ஞானம் மிக்கவன்.*

*19(ஓரிறை)நம்பிக்கையாளர்களிடையே மானக்கேடானவை பரவ*
*வேண்டும் என்று விரும்பியோருக்கு இம்மையிலும் மறுமையிலும்*
*துன்புறுத்தும் வேதனையுண்டு. அல்லாஹ்வே நன்கறிவான், நீங்கள்*
*அறிய மாட்டீர்கள். 20உங்கள்மீது அல்லாஹ்வின் கொடையும்*
*அவனது அருளும் இல்லாதிருக்குமானால் (நீங்கள் வேதனைக்கு*
*ஆளாகியிருப்பீர்கள்). உறுதியாக அல்லாஹ் பரிவுடையவன்;*
*நிகரற்ற அன்பாளன்.*

*21நம்பிக்கையாளர்களே! சாத்தானின் அடிச்சுவட்டைப்*
*பின்பற்றாதீர்கள். எவர் சாத்தானின் அடிச்சுவட்டைப்*
*பின்பற்றுகிறாரோ அவரை அவன் மானக்கேடானவற்றையும்*
*தீயவற்றையும் செய்யத் தூண்டுவான். உங்கள்மீது அல்லாஹ்வின்*
*கொடையும் அவனது அருளும் இல்லாதிருக்குமானால் உங்களில்*
*எவரும் ஒருபோதும் தூய்மையாக இருக்கமுடியாது. ஆயினும்*
*தான் விரும்பியோரை அல்லாஹ் தூய்மைப்படுத்துகிறான். அவன்*
*செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.*

*22உங்களில் உதவும் பண்பும் வசதியும் உடையவர்கள்*
*'உறவினர்கள், ஏழைகள் மற்றும் இறைவழியில்*
*புலம்பெயர்ந்தோருக்குக் கொடுக்கமாட்டோம்' என்று சத்தியம்*
*செய்ய வேண்டாம். (அவர்கள் செய்த தவறுகளை) மன்னித்துப்*
*பொருட்படுத்தாது விட்டுவிடட்டும். அல்லாஹ் உங்களை*
*மன்னிக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புவதில்லையா?*
*அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

[23]கற்புள்ள, கள்ளங்கபடமற்ற, (இறை)நம்பிக்கைகொண்ட
பெண்கள்மீது பழிச்சொல் கூறுபவர்கள் இம்மையிலும் மறுமையிலும்
சபிக்கப்பட்டு விட்டனர். அவர்களுக்குக் கடுமையான வேதனை
காத்திருக்கிறது. [24](மறுமையாகிய) அந்நாளில் அவர்களின்
நாவுகளும் கைகளும் கால்களும் அவர்கள் செய்து கொண்டிருந்த
செயல்களைக் குறித்து அவர்களுக்கெதிராகச் சாட்சி கூறும்.
[25]அந்நாளில் அவர்களுக்குரிய உண்மையான கூலியை அல்லாஹ்
நிறைவாகவே வழங்குவான். அல்லாஹ்வே அனைத்தையும்
வெளிப்படுத்தக்கூடிய உண்மையாளன் என்பதை அவர்கள்
அறிந்துகொள்வார்கள்.

[26]ஒழுக்கம்கெட்ட பெண்கள் ஒழுக்கம்கெட்ட ஆண்களுக்கும்
ஒழுக்கம்கெட்ட ஆண்கள் ஒழுக்கம்கெட்ட பெண்களுக்கும்
உரியவர்களாவர். தூயபெண்கள் தூயஆண்களுக்கும் தூயஆண்கள்
தூயபெண்களுக்கும் தகுதியானோராவர். கெட்டவர்கள் கூறும்
பழிக்கூற்றிலிருந்து நல்லவர்கள் தூய்மையானவர்கள். இவர்களுக்கு
மன்னிப்பும் கண்ணியமான உணவும் உண்டு.

[27]நம்பிக்கையாளர்களே! உங்கள் வீடுகளைத்தவிர மற்றவர்களின்
வீடுகளில் அவர்களின் அனுமதி பெறாமலும் அவர்களுக்கு
முகமன் கூறாமலும் நுழையாதீர்கள். இதுவே உங்களுக்குச்
சிறந்தது; நீங்கள் கவனமுள்ளவர்களாகலாம். [28]அங்கு யாரையும்
நீங்கள் காணாவிட்டால் உங்களுக்கு அனுமதியளிக்கப்படும்வரை
அதில் நுழையாதீர்கள். (அவ்வீட்டிலுள்ளவர்களால்)
'திரும்பிச் செல்லுங்கள்' என்று உங்களிடம் கூறப்பட்டால்
திரும்பிவிடுங்கள். இதுவே உங்களுக்கு மிகத் தூய்மையானதாகும்.
நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் முற்றும் அறிந்தவன். [29]யாரும்
குடியிருக்காத, உங்களுக்குப் பயன் தரும் பொருள்கள் இருக்கின்ற
வீடுகளில் நீங்கள் நுழைவது உங்கள்மீது குற்றமாகாது.
நீங்கள் வெளிப்படுத்துவதையும் மறைப்பதையும் அல்லாஹ்
நன்கறிவான்.

30(நபியே!) நம்பிக்கைகொண்ட ஆண்களிடம் அவர்கள் தங்கள் பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளுமாறும் தங்கள் கற்பைப் பாதுகாத்துக் கொள்ளுமாறும் கூறுவீராக! அதுவே அவர்களுக்குத் தூய்மையானது. அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன்.

31(நபியே!) நம்பிக்கைகொண்ட பெண்களிடம், அவர்களும் தங்கள் பார்வைகளைத் தாழ்த்திக்கொள்ளுமாறும் தங்கள் கற்பைப் பாதுகாத்துக்கொள்ளுமாறும் கூறுவீராக! அலங்காரத்தில் சாதாரணமாக வெளியே தெரிகின்றவை தவிர வேறு எதையும் அவர்கள் வெளிக்காட்ட வேண்டாம். தங்கள் மார்புகளின் மீது முந்தானைகளைப் போட்டுக்கொள்ளட்டும். தங்கள் கணவன்மார்கள், தந்தையர், கணவன்மார்களின் தந்தையர், புதல்வர்கள், தம் கணவன்மார்களின் புதல்வர்கள், தம் சகோதரர்கள், சகோதரர்களின் புதல்வர்கள், தம் சகோதரிகளின் புதல்வர்கள், தம்முடைய பெண்கள், அடிமைகள், பெண்களின் மீது நாட்டமில்லாத வேட்கையற்ற ஆண்(பணியாளர்)கள், பெண்களின் மறைவுறுப்புகள் பற்றி இன்னும் அறிந்துகொள்ளாத சிறுவர்கள் ஆகியோரைத் தவிர, மற்றவர்களிடம் தங்கள் மறைவான அலங்காரத்தை வெளிப்படுத்துவதற்காகத் தங்கள் கால்களைப் பூமியில் அடித்துக்கொண்டு நடக்கவேண்டாம். நம்பிக்கையாளர்களே! வெற்றிபெறும் பொருட்டு நீங்கள் அனைவரும் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரித் திரும்பி விடுங்கள்.

32உங்களில் திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் செய்துவையுங்கள். அவ்வாறே உங்கள் அடிமைகளில் திருமணம் செய்யத்தகுந்த ஆண்களுக்கும் பெண்களுக்கும் (மணமுடித்து வையுங்கள்). அவர்கள் ஏழைகளாக இருந்தால் அல்லாஹ் தன் அருளால் அவர்களைத் தன்னிறைவாக்குவான்.
அல்லாஹ் விரிவானவன்; முற்றும் அறிந்தவன். 33 திருமணம்
செய்துகொள்ள வசதி இல்லாதவர்கள், அல்லாஹ் தன் அருளால் அவர்களைத் தன்னிறைவு பெற்றோராக்கும்வரை கற்பொழுக்கம் பேணட்டும். உங்கள் அடிமைகளில் யாரேனும்

*விடுதலைப் பத்திரம் எழுதித்தரும்படி கோரி, அவர்களிடம் நீங்கள் அதற்கான தகுதியைக் கண்டால் அவர்களுக்கு விடுதலைப் பத்திரம் எழுதிக் கொடுத்துவிடுங்கள். அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய செல்வத்திலிருந்து அவர்களுக்கும் வழங்குங்கள். உங்கள் அடிமைப் பெண்கள் ஒழுக்கத்தை விரும்பும் நிலையில் அவர்களை உலகத்தின் அற்ப ஊதியத்திற்காக ஒழுக்கக்கேட்டில் தள்ளிவிடாதீர்கள். அவர்களை யாரேனும் கட்டாயப்படுத்தினால் கட்டாயப்படுத்தப்பட்ட அப்பெண்களை அல்லாஹ் மன்னிப்பவனும் நிகரற்ற அன்பாளனும் ஆவான்.*
*[34]உறுதியாக நாம் உங்களுக்குத் தெளிவான வசனங்களையும் உங்களுக்கு முன்சென்றவர்களின் எடுத்துக்காட்டுகளையும் இறையச்சமுடையோருக்கு அறிவுரையையும் அருளியுள்ளோம்.*

*[35]அல்லாஹ் வானங்கள், பூமி ஆகியவற்றின் ஒளியாக இருக்கிறான்.* அவனது ஒளிக்கு உவமை ஒரு விளக்கு மாடமாகும். அவ்விளக்கு ஒரு கண்ணாடிக் கூண்டினுள் உள்ளது. அக்கண்ணாடிக் கூண்டு ஒளிரும் நட்சத்திரங்களைப் போன்றது. அவ்விளக்கு வளம்மிக்க ஒலிவ மரத்தின் எண்ணெயைக்கொண்டு எரிக்கப்படுகிறது. அம்மரம் கிழக்கைச் சேர்ந்ததுமில்லை; மேற்கைச் சேர்ந்ததுமில்லை. அதன் எண்ணெய் நெருப்புப்படாமலேயே தானாக ஒளிரக்கூடியது. அது ஒளிக்குமேல் ஒளி(யாக இருக்கிறது). தான் விரும்பியோருக்குத் தன் ஒளியின்பால் அல்லாஹ் வழிகாட்டுகிறான். அல்லாஹ் மக்களுக்கு இத்தகைய உவமைகளைக் கூறுகிறான். அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவன்.*

*[36](அத்தகைய ஒளிவீசும் இறை) இல்லங்கள் உயர்த்தப்படுவதற்கும் (அவற்றில்) தனது பெயர் போற்றப்படுவதற்கும் அல்லாஹ்*

---

***பல பொருள்களைத் தரக்கூடிய உருவகமிது. 'ஒளி' என்பது எல்லாம்வல்ல இறைவனின் வழிகாட்டுதலைக் குறிப்பதாகும். இங்கு மாடம் மனித இதயத்தைக் குறிப்பது.; விளக்கு இறைநம்பிக்கையைக் குறிப்பது; ஒளிரும் நட்சத்திரம் போன்ற கண்ணாடிக் கூண்டும், தானாக ஒளிரும் ஆலிவ் எண்ணெயும் 'ஒளி' என்னும் படிமத்தை விரிவாக்குபவை.***

கட்டளையிட்டுள்ளான். அவற்றில் (நம்பிக்கையாளர்கள்)
காலையிலும் மாலையிலும் அவனை நினைவு கூர்கின்றனர்.
[37](இப்படிப்பட்ட) மனிதர்களின் வணிகக் கொடுக்கல் வாங்கல்
ஆகியவை அவர்களை இறைநினைவிலிருந்தும் தொழுகையைக்
கடைப்பிடிப்பதிலிருந்தும் கடமையாக்கப்பட்ட கொடையை
வழங்குவதிலிருந்தும் அவர்களைத் திருப்பிவிடாது. உள்ளங்களும்
பார்வைகளும் தடுமாறும் (அந்த) நாளைக் குறித்து அவர்கள்
அஞ்சிக் கொண்டிருப்பர். [38]அவர்களின் நற்செயல்களுக்கான
சிறந்த கூலியை அல்லாஹ் வழங்குவான். அவர்களுக்குத்
தனது அருளை இன்னும் மிகுதிப்படுத்தி விடுவான். தான்
விரும்பியோருக்கு அல்லாஹ் கணக்கின்றி வழங்குகின்றான்.

[39]மறுப்பாளர்களின் செயல்கள் பாலைவனத்தில் தென்படும்
கானல்நீரைப் போன்றவை. தாகம் கொண்டவன் அதனைத்
தண்ணீர் என்றே எண்ணுகிறான். அதன் அருகில் வரும்போது
எதையும் காணமாட்டான். அங்கு அவன் அல்லாஹ் இருக்கக்
காண்பான். எனவே அல்லாஹ் அவனது கணக்கைத்
தீர்த்துவிடுவான். கணக்குத் தீர்ப்பதில் அல்லாஹ் விரைவானவன்.
[40]அல்லது (மறுப்பாளர்களின் செயல்கள்) கடல் ஆழத்தில்
இருக்கும் இருளைப் போன்றவை ஆகும். அங்கு அலைகளுக்கு
மேல் அலைகள் எழும்பி அதை மூடிக் கொண்டிருக்கின்றன.
அதற்கு மேல் மேகங்கள் சூழ்ந்துள்ளன. ஒன்றன்மீது ஒன்றாகக்
கவிந்துள்ள இருள்கள். மூடியுள்ள (அந்நிலையில்) ஒருவன் நீட்டிய
தன் கையைக்கூடப் பார்க்கமுடியாது. யாருக்கு அல்லாஹ்
ஒளியைத் தரவில்லையோ அவனுக்கு எந்த ஒளியும் இல்லை.

[41](நபியே!) வானங்களிலிருப்பவைகளும் பூமியிலிருப்பவைகளும்
இறக்கைகளை விரித்த(வாறு பறக்கும்)பறவைகளும் அல்லாஹ்வைத்
துதிசெய்து கொண்டிருப்பதை நீர் கவனிக்கவில்லையா?
ஒவ்வொன்றும் தன் தொழுகையையும் துதித்திடும் முறையையும்
அறிந்தேயுள்ளன. அவர்கள் செய்பவற்றை அல்லாஹ்
முற்றும் அறிந்தவன். [42]வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி

*அல்லாஹ்வுக்கே உரியது. அவனிடமே அனைவரும் திரும்பிச் செல்லவேண்டியுள்ளது.*

*43(நபியே!) நீர் கவனிக்கவில்லையா? அல்லாஹ் மேகங்களை நகர்த்தி வருகிறான். அவற்றை ஒன்றோடொன்று சேர்க்கிறான்; பின்னர் அவற்றை அடுக்கடுக்காக (அடர்த்தியாக) ஆக்குகிறான். அதற்கிடையிலிருந்து மழை வெளிப்படுவதை நீர் காண்கிறீர். அவன் வானத்திலுள்ள (மேக)மலைகளிலிருந்து ஆலங்கட்டிகளைப் பொழிகிறான். தான் விரும்பியோர் மீது அவற்றை விழச் செய்கிறான்; தான் விரும்பியோரிடமிருந்து அதனைத் திருப்பி விடுகிறான். அதனுடைய மின்னல் ஒளி பார்வைகளைப் பறிக்கப் பார்க்கிறது.*
*44அல்லாஹ் இரவையும் பகலையும் மாறிமாறி வரச்செய்கிறான். உறுதியாக இதில் அறிவுடையோருக்குப் படிப்பினை இருக்கிறது.*

*45அல்லாஹ் ஒவ்வோர் உயிரினத்தையும் நீரால் படைத்துள்ளான். அவற்றில் சில தம் வயிற்றால் ஊர்ந்து செல்கின்றன; சில இரு கால்களால் நடந்து செல்கின்றன; இன்னும் சில நான்கு கால்களால் நடந்து செல்கின்றன. தான் விரும்பியதை அல்லாஹ் படைக்கிறான். உறுதியாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.*
*46(மனிதர்களே!) சத்தியத்தைத் தெளிவாக எடுத்துரைக்கும் வசனங்களை நாம் அருளியுள்ளோம். தான் விரும்பியோருக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுகிறான்.*

*47(நபியே!) "நாங்கள் அல்லாஹ்வின் மீதும் தூதரின் மீதும் நம்பிக்கைகொண்டு அவர்களுக்குக் கீழ்ப்படிந்துள்ளோம்" என்று அவர்கள் கூறுகின்றனர். ஆயினும் அவர்களில் ஒரு சாரார் அதன் பின்னரும் புறக்கணித்து விடுகின்றனர். இவர்கள் (உண்மையில்) நம்பிக்கையாளர்கள் அல்லர்.*
*48தங்களிடையே (எழும் விவகாரங்களில்) தீர்ப்புப்பெற அல்லாஹ்விடமும் தூதரிடமும் வருமாறு அழைக்கப்பட்டால் அவர்களில் ஒரு பிரிவினர்*

(அதைப்) புறக்கணித்து விடுகின்றனர். [49]உண்மை தங்களுக்குச் சாதகமாக இருந்தால் கீழ்ப்படிந்து அவரிடம் வருகின்றனர். [50]அவர்களின் உள்ளங்களில் நோயுள்ளதா? அல்லது அவர்கள் (அவரை) ஐயுறுகிறார்களா? அல்லது அல்லாஹ்வும் அவனது தூதரும் தங்களுக்கு அநீதி இழைத்து விடுவார்கள் என்று அஞ்சுகிறார்களா? மாறாக அவர்கள்தாம் தீவினையாளர்கள்.

[51](ஆனால் உண்மையான)நம்பிக்கையாளர்கள் தமக்கிடையே (எழும் விவகாரங்களில்) தீர்ப்புப் பெறுவதற்காக அல்லாஹ்விடமும் அவனது தூதரிடமும் அழைக்கப்பட்டால் "கேட்டோம், கீழ்ப்படிந்தோம்" என்பதுதான் அவர்களின் மறுமொழியாக அமையும். இத்தகையவர்கள்தாம் வெற்றியாளர்கள். [52]அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்ப்படிந்து அல்லாஹ்வுக்கு அஞ்சி அவனுக்கு எதிராகச் செயல்படுவதிலிருந்து தவிர்ந்து கொள்பவர்கள்தாம் வெற்றியாளர்கள்.

[53](நபியே!) நீர் அவர்களுக்குக் கட்டளையிட்டால் (அறவழியில்) புறப்படுவதாக அல்லாஹ்வின் மீது உறுதியாகச் சத்தியமிட்டுக் கூறுகின்றனர். நீர் கூறும்: "சத்தியம் செய்யாதீர்கள். முறையான கீழ்ப்படிதலே தேவை. நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கிறான். [54](மேலும்) நீர் கூறும்: "அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். நீங்கள் புறக்கணித்துவிட்டால் – தூதர் மீது சுமத்தப்பட்டுள்ள கடமைக்குத்தான் அவர் பொறுப்பாவார். உங்கள்மீது சுமத்தப்பட்டுள்ள கடமைக்கு நீங்கள்தான் பொறுப்பு. நீங்கள் அவருக்குக் கட்டுப்பட்டால் நேர்வழி பெறுவீர்கள். (இறைச்செய்தியைத்) தெளிவாக எடுத்துரைப்பதுதான் தூதர் மீதுள்ள கடமையாகும்"

[55](மனிதர்களே!) உங்களில் நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தோருக்கு அவர்களுக்கு முன்பு இருந்தவர்களுக்கு அதிகாரம் வழங்கியதைப் போன்று இவர்களுக்கும் பூமியில் அதிகாரம்

வழங்குவதாகவும் தான் விரும்பும் மார்க்கத்தை இவர்களுக்காக மேலோங்கச் செய்வதாகவும் இவர்களுக்கு வந்த அச்சத்தை அமைதியைக் கொண்டு உறுதியாக மாற்றிவிடுவதாகவும் அல்லாஹ் வாக்களித்துள்ளான். (ஆகவே) அவர்கள் என்னை மட்டுமே வணங்கட்டும். எனக்கு எதையும் இணையாக்காதிருக்கட்டும். இதன்பின்னரும் மறுப்பவர்கள்தாம் கீழ்ப்படியாதவர்கள்.

[56](நம்பிக்கையாளர்களே!) தொழுகையைக் கடைப்பிடித்து, கடமையாக்கப்பட்ட கொடையை வழங்குங்கள். தூதருக்கும் கட்டுப்படுங்கள். இதனால் நீங்கள் அருள் காட்டப்படுவீர்கள்.
[57](நபியே!)மறுப்பாளர்கள் பூமியில் இறைவனை வென்று விடுவார்கள் என்று நீர் எண்ணவேண்டாம். அவர்களின் உறைவிடம் நரகம்தான். அது மிகவும் கெட்ட உறைவிடமாகும்.

[58]நம்பிக்கையாளர்களே! உங்கள் அடிமைகளும் உங்களில் பருவ வயதை அடையாத சிறுவர்களும் மூன்று நேரங்களில் (வீட்டுக்குள் நுழைவதற்கு) உங்களிடம் அனுமதி பெற வேண்டும். அவை வைகறைத் தொழுகைக்கு முன்னரும் நீங்கள் உங்கள் (கூடுதலான) ஆடைகளைக் களைந்திருக்கும் நண்பகலிலும் இரவுநேரத் தொழுகைக்குப் பின்னரும் ஆகும். இந்த மூன்று நேரமும் உங்களுக்குத் திரைமறைவு நேரங்களாகும். இவை அல்லாத மற்ற நேரங்களில் (அனுமதி பெறாது நுழைவதில்) உங்களின்மீதோ, அவர்களின் மீதோ எந்தக் குற்றமுமில்லை. ஏனெனில் நீங்கள் ஒருவர் மற்றவரிடம் அடிக்கடி வந்து போய்க் கொண்டிருப்பவர்கள். இவ்வாறு அல்லாஹ் உங்களுக்குத் தன் வசனங்களைத் தெளிவுபடுத்துகிறான். அல்லாஹ் முற்றும்
அறிந்தவன்; ஞானம் மிக்கவன். [59]உங்கள் குழந்தைகள்
பருவ வயதை அடைந்துவிட்டால் தங்களுக்கு மூத்தோர்கள் (எல்லாநேரமும்) அனுமதி பெறுவதைப்போலவே அவர்களும் அனுமதி பெற வேண்டும். இவ்வாறு தன் வசனங்களை அல்லாஹ் உங்களுக்குத் தெளிவுபடுத்துகிறான். அல்லாஹ்
முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன். [60]திருமண ஆர்வத்தைக்

*கடந்துவிட்ட மூதாட்டிகள் தங்கள் அழகை வெளிக்காட்டிக் கொள்ளாமல் தங்கள் (கூடுதலான) மேலாடைகளைக் களைந்து வைப்பது குற்றமாகாது. இதனையும் தவிர்த்துக் கொள்வதே அவர்களுக்கு மிகச் சிறந்ததாகும். அல்லாஹ் செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.*

61*(நம்பிக்கையாளர்களே!) உங்களுடன் சேர்ந்து உணவருந்துவதில் பார்வையற்றவர்மீதும், ஊனமுற்றவர்மீதும், நோயாளியின் மீதும் எந்தக் குற்றமும் இல்லை. நீங்கள் உங்கள் வீடுகளிலோ, உங்கள் தந்தையர், அன்னையர், சகோதரர்கள், சகோதரிகள், தந்தையின் சகோதரர்கள், தந்தையின் சகோதரிகள், அன்னையரின் சகோதரர்கள், அன்னையரின் சகோதரிகள் ஆகியோரின் வீடுகளிலோ எந்த வீடுகளின் திறவுகோல்கள் உங்கள் பொறுப்பில் உள்ளனவோ அந்த வீடுகளிலோ உங்கள் நண்பர்களின் வீடுகளிலோ உணவருந்துவதில் குற்றம் இல்லை. நீங்கள் ஒன்றுசேர்ந்தோ, தனித்தனியாகவோ உணவருந்துவதும் உங்கள்மீது குற்றமாகாது. நீங்கள் வீடுகளில் நுழையும்போது உங்களைச் சார்ந்தவர்களுக்கு முகமன் கூறுங்கள். அது அல்லாஹ்விடமிருந்து வந்த அருள்வளம்மிக்க, தூய, பேறுள்ள வாக்கியம் (உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும்) ஆகும். இவ்வாறே நீங்கள் புரிந்துகொள்ளும் பொருட்டு அல்லாஹ் உங்களுக்கு வசனங்களைத் தெளிவுபடுத்துகிறான்.*

62*அல்லாஹ்வின் மீதும் அவனது தூதரின் மீதும் நம்பிக்கை கொண்டவர்கள்தாம் உண்மையான நம்பிக்கையாளர்கள். அவர்கள் ஏதேனும் பொதுப்பணி காரணமாகத் தூதருடன் கூடியிருந்தால் அவரிடம் அனுமதி பெறாமல் அங்கிருந்து வெளியேறமாட்டார்கள். (நபியே!) உறுதியாக உம்மிடம் அனுமதி வேண்டிப் பெற்றுச் செல்பவர்கள்தாம் அல்லாஹ்வின் மீதும் அவனது தூதரின் மீதும் (உண்மையான) நம்பிக்கை கொண்டவர்கள். எனவே அவர்கள் தங்களின் பணிகளுக்காக உம்மிடம் அனுமதி வேண்டினால் அவர்களில் நீர் விரும்பியவருக்கு*

*அனுமதியளிப்பீராக! அவர்களுக்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருவீராக! உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

*[63]நீங்கள் ஒருவரையொருவர் அழைப்பதைப் போன்று தூதரின் அழைப்பையும் கருதி விடாதீர்கள். (தூதரின் அவையிலிருந்து) உங்களில் மறைவாக மெல்ல நழுவிசென்று விடுபவர்களை அல்லாஹ் நன்கறிவான். எனவே அவரின் கட்டளைக்கு எதிராகச் செயல்படுபவர்கள் தமக்கு இன்னலோ கடும் வேதனையோ வரும் என்று அஞ்ச வேண்டும். [64]அறிந்து கொள்ளுங்கள்! வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. நீங்கள் எந்த நிலையில் இருக்கிறீர்கள் என்பதை அல்லாஹ் அறிகிறான். மக்கள் அவனிடம் திரும்பக் கொண்டு வரப்படும் நாளில் அவர்கள் செய்தவற்றை அவன் அவர்களுக்கு அறிவிப்பான். அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவன்.*

# 25. பிரித்தறிவிப்பது (அல்ஃபுர்கான்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]உலகத்தார் அனைவரையும் எச்சரிக்கை செய்வதற்காகத் தன் அடியார்மீது (உண்மையையும் பொய்மையையும்) பிரித்தறிவிக்கக்கூடிய வேதத்தை அருளியவன் பெரும் பேறுடையவன். [2]வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி அவனுக்கே உரியது. அவன் தனக்கு யாரையும் மகனாக ஆக்கிக்கொள்ளவில்லை. அவனது ஆட்சியில் யாருக்கும் பங்கில்லை. அவன்தான் ஒவ்வொன்றையும் படைத்து அவ்வவற்றுக்குரிய இயல்புகளையும் முடிவு செய்தான். [3]ஆயினும் அவர்கள் அவனை விட்டுவிட்டு வேறு தெய்வங்களை ஏற்படுத்திக் கொண்டனர். அவை எதனையும் படைக்கமாட்டா. மாறாக அவையே படைக்கப்பட்டவைதாம். அவை தமக்குக்கூட எந்தத் தீங்கையோ நன்மையையோ செய்துகொள்ள ஆற்றல் பெறாதவை.*

*சாகச் செய்வதோ வாழச்செய்வதோ மீண்டும் உயிர் கொடுத்து எழச்செய்வதோ அவற்றின் அதிகாரத்தில் இல்லை.*

*[4]“(திருக்குர்ஆனாகிய) இது அவரே புனைந்துகொண்ட ஒரு பொய்தான். இதில் அவருக்கு வேறு சிலரும் உதவியாக இருக்கிறார்கள்” என்று மறுப்பாளர்கள் கூறுகின்றனர். (இதன்மூலம்) அவர்கள் அநீதியையும் பொய்யையும் கூறுகின்றனர்.*
*[5]“இவை முன்னோர்களின் கட்டுக்கதைகளாகும். இவற்றை அவர் எழுதச் செய்துகொள்கிறார். இது காலையிலும் மாலையிலும் அவருக்குப் படித்துக் காட்டப்படுகிறது” என்றும் அவர்கள் கூறுகின்றனர். [6](நபியே!) “வானங்கள் பூமி ஆகியவற்றின் இரகசியங்களை அறிந்தவன்தான் இதனை அருளினான். அவன் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்” என்று நீர் கூறும்.*

*[7]அவர்கள், “இத்தூதருக்கு என்னவாயிற்று? (இவர் நம்மைப்போல்) உண்ணவும் செய்கிறார்! கடைவீதிகளில் உலவவும் செய்கிறார்! எச்சரிக்கை செய்வதற்காக ஒரு வானவர் இவருடன் (பூமியில்) இறக்கப்பட்டிருக்கக் கூடாதா? [8]அல்லது இவருக்கு ஒரு புதையல் வழங்கப்பட்டிருக்கக் கூடாதா? அல்லது உணவு பெறுவதற்காக ஒரு தோட்டம் இவருக்கு இருந்திருக்கக் கூடாதா?” என்று கேட்கின்றனர். அந்தத் தீவினையாளர்கள் (பிறரிடம்) “நீங்கள் சூனியம் செய்யப்பட்ட ஒரு மனிதரைத்தான் பின்பற்றுகிறீர்கள்” என்றும் கூறுகின்றனர். [9](நபியே!) அவர்கள் எவ்வாறெல்லாம் உம்மை வர்ணிக்கிறார்கள் என்பதைப் பாரும். அவர்கள் வழிகெட்டுவிட்டனர். இனி அவர்களால் நேர்வழியை அடையமுடியாது.*

*[10]அவன் பெரும் பேறுடையவன். அவன் விரும்பினால் இதை (அவர்கள் கூறும்) இதனைவிடச் சிறந்தவற்றை உமக்கு வழங்குவான். ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும் சொர்க்கங்களையும் மாடமாளிகைகளையும் உமக்காக அவன் ஏற்படுத்தித் தருவான்.*
*[11]அவர்கள் தீர்ப்புநாளைப் பொய்யென்று கூறினர். அந்நாளைப்*

*பொய்யென்று கூறியவர்களுக்கு நாம் நரக வேதனையைத்
தயார்செய்து வைத்துள்ளோம். 12நரகம் இவர்களைத்
தொலைவிலிருந்து காணும்போதே அதன் கொந்தளிப்பையும்
இரைச்சலையும் இவர்கள் செவியுறுவர். 13அங்கு அவர்கள்
நெருக்கடியான இடத்தில் விலங்கிடப்பட்டவர்களாகத்
தள்ளப்படும்போது (அழிவு தரும்) சாவை அழைப்பார்கள்.
14அப்போது அவர்களுக்கு “இன்று நீங்கள் ஒரு சாவை
அழைக்காதீர்கள். பல சாவுகளை அழையுங்கள்” என்று
கூறப்படும். 15“இது சிறந்ததா? அல்லது இறையச்சமுடையோருக்கு
வாக்களிக்கப்பட்ட நிலையான சொர்க்கம் சிறந்ததா?” என்று
நபியே! நீர் கேளும். அது அவர்களுக்குக் கூலியாகவும் இறுதியாகச்
சேரும் உறைவிடமாகவும் அமையும். 16அங்கு அவர்கள்
விரும்பியதெல்லாம் கிடைக்கும். அங்கு அவர்கள் என்றென்றும்
தங்கியிருப்பர். இது உமது இறைவன் (தன்மீது) கடமையாக்கிக்
கொண்ட வாக்குறுதியாகும்.*

*17அவன் (மறுப்பாளர்களான) அவர்களையும் அல்லாஹ்வை
விடுத்து அவர்கள் வணங்குகின்ற தெய்வங்களையும் ஒன்றுதிரட்டும்
நாளில் “நீங்களா எனது இந்த அடியார்களை வழிகெடுத்தீர்கள்
அல்லது அவர்கள் தாமாகவே வழிகெட்டு விட்டார்களா?”
என்று (அத்தெய்வங்களிடம்) கேட்பான். 18அவர்கள் “நீ
மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்; உன்னைத்தவிர
வேறு எவரையும் எங்களுடைய பாதுகாவலர்களாக ஆக்கிக்
கொள்வது எங்களுக்குத் தகுதியுமன்று. நீ அவர்களுக்கும்
அவர்களின் முன்னோர்களுக்கும் வாழ்க்கை வசதிகளை
அளித்தாய். எனவே அவர்கள் உன் நினைவூட்டலை மறந்து
அழிவுக்குள்ளாகும் மக்களாகி விட்டார்கள்” என்று கூறுவர்.
19“ஆகவே (மறுப்பாளர்களை நோக்கி) இறைவன் அவர்கள்
உங்களின் கூற்றைப் பொய்யெனக் கூறி விட்டனர். எனவே நீங்கள்
உங்களைத் தற்காத்துக் கொள்ளவும் முடியாது, எந்த உதவியையும்
பெறவும் முடியாது. உங்களில் தீவினை புரிந்தோரை நாம் கடும்
வேதனைக்கு உட்படுத்துவோம்” (என்பான்).*

[20](நபியே!) நாம் உமக்கு முன்னர் அனுப்பிய தூதர்கள் அனைவரும் (உம்மைப்போல) உணவு உண்பவர்களாகவும் கடைவீதிகளுக்குச் செல்பவர்களாகவும்தான் இருந்தனர். (நம்பிக்கையாளர்களே!) நாம் உங்களில் சிலரை வேறு சிலருக்குச் சோதனையாக்கியுள்ளோம். நீங்கள் பொறுமையைக் கடைப்பிடிப்பீர்களா? (ஏனெனில், நபியே!) உமது இறைவன் அனைத்தையும் பார்த்துக்கொண்டிருப்பவன்.

[21]எம் (மறுமைச்) சந்திப்பை நம்பாதவர்கள், “எங்களிடம் (நேரடியாக) ஏன் வானவர்கள் அனுப்பப்படவில்லை? அல்லது எங்களின் இறைவனை நாங்கள் காண வேண்டாமா?” என்று கேட்கின்றனர். அவர்கள் தங்களைத் தாங்களே பெரிதாக எண்ணிச் செருக்குக் கொண்டுவிட்டனர்; மிகவும் வரம்புமீறி
விட்டனர். [22]அவர்கள் வானவர்களைக் காணும் அந்த நாளில் குற்றவாளிகளுக்கு எந்த நற்செய்தியும் இராது. ‘தஞ்சம் தஞ்சம்’
என்று அவர்கள் கதறுவார்கள். [23]அவர்கள் செய்த செயல்கள் அனைத்தையும் நாம் பறக்கும் புழுதியைப் போலாக்கி விடுவோம்.
[24](மறுமையாகிய) அந்நாளில் சொர்க்கவாசிகள் சிறந்த உறைவிடத்தையும் அழகிய ஓய்விடத்தையும் பெற்றிருப்பர்.

[25]அந்நாளில் வானம் மேகத்தால் பிளந்துவிடும்; வானவர்கள்
அணியணியாக இறக்கப்படுவர். [26](மறுமையாகிய) அந்நாளில் உண்மையான ஆட்சி அளவற்ற அருளாளனுக்கு உரியது. அந்நாள் மறுப்பாளர்களுக்கு மிகக் கடுமையானதாக இருக்கும்.
[27](மறுமையாகிய) அந்நாளில் தீவினையாளன் தன் கைகளைக் கடித்தவாறு “அந்தோ! நான் தூதருடன் இணைந்து நேர்வழியைப்
பின்பற்றியிருக்கக்கூடாதா” என்று கூறுவான். [28]”அந்தோ என் கேடே! நான் (என்னை வழிகெடுத்த) இன்னானை உற்ற நண்பனாக்காமல்
இருந்திருக்கக் கூடாதா! [29]அறிவுரை வந்தபின்னரும் அதிலிருந்து என்னை அவன் வழிகெடுத்து விட்டான்” என்றும் கூறுவான்.
சாத்தான் மனிதனை ஏமாற்றக்கூடியவன். [30](மறுமையாகிய)
அந்நாளில் (எம்) தூதர் “இறைவா, என் சமூகத்தினர் குர்ஆனை

*முற்றிலும் புறக்கணித்து விட்டனர்" என்று கூறுவார். [31]இவ்வாறே
ஒவ்வொரு தூதருக்கும் குற்றவாளிகளைப் பகைவர்களாக்கினோம்
(நபியே! உமக்கு) வழிகாட்டுவதற்கும் உதவி செய்வதற்கும் உம்
இறைவனே போதுமானவன்.*

*[32]"இந்தக் குர்ஆன் அவருக்கு ஒட்டுமொத்தமாக (ஒரே
வெளிப்பாட்டில்) அருளப்பட்டிருக்க வேண்டாமா?" என்று
மறுப்பாளர்கள் கேட்கின்றனர். (நபியே!) இதன்மூலம் உமது
உள்ளத்தை உறுதிப்படுத்துவதற்காகத்தான் நாம் இதனைப் பகுதி
பகுதியாக அருளுகிறோம். [33]அவர்கள் எத்தகைய விநோதமான
மறுப்புகளை எழுப்பினாலும் அதற்குரிய சரியான பதிலையும்
தெளிவான விளக்கத்தையும் நாம் வழங்கிவிடுவோம். [34]அவர்கள்
நரகத்தின் பக்கம் தலைகுப்புற இழுத்துச் செல்லப்படுவர்.
அவர்களின் உறைவிடம் மிகவும் கேடானது அவர்கள்தாம்
வழிபிறழ்ந்தவர்கள்.*

*[35]நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். அவரின்
சகோதரர் ஆரோனை அவருக்கு உதவியாளராகவும் ஆக்கினோம்.
[36]"நீங்கள் இருவரும் எமது சான்றுகளைப் பொய்யென்று கூறிக்
கொண்டிருந்தவர்களிடம் செல்லுங்கள்" என்று நாம் கூறினோம்.
(அவ்வாறு சென்ற) பின்னரும் ஏற்க மறுத்த அவர்களை நாம்
அடியோடு அழித்துவிட்டோம். [37]நோவாவின் சமூகத்தார்
தூதர்களைப் பொய்யர்களென்று கூறியபோது நாம் அவர்களை
(வெள்ளத்தில்) மூழ்கடித்து விட்டோம். அவர்களை (மற்ற)
மக்களுக்கு ஒரு சான்றாக ஆக்கினோம். தீவினையாளர்களுக்கு
நாம் துன்புறுத்தும் வேதனையைத் தயார் செய்து வைத்துள்ளோம்.
[38]ஆத், ஸமூத் மக்களையும் ரஸ் (எனும் ஊர்)வாசிகளையும்
அவர்களுக்கிடையே இன்னும் பல சமூகத்தார்களையும் (நாம்
அழித்துள்ளோம்.) [39]அவர்களில் ஒவ்வொருவருக்கும் நாம்
உதாரணங்களைக் கூறினோம். அவர்கள் (மறுத்ததனால்)
அனைவரையும் அடியோடு அழித்துவிட்டோம். [40]தீய (கல்)மழை
பொழிந்த அந்த ஊரைத்தான் (மறுப்பாளர்களான) இவர்கள்*

கடந்து செல்கின்றனர். இவர்கள் அதனைப் பார்க்கவில்லையா? ஆயினும் இவர்கள் (மறுமையில்) மீண்டும் எழுப்பப்படுவதை நம்பவேயில்லை.

41(நபியே!) அவர்கள் உம்மைக் கண்டால் "இவரைத்தான் அல்லாஹ் தூதராக அனுப்பியுள்ளானா?" என்று உம்மை ஏளனம் செய்கின்றனர். 42"நாம் நம் தெய்வங்களின்மீது (நம்பிக்கையில்) உறுதியாக இல்லையென்றால் அவற்றைவிட்டு நம்மை (இவர்) வழிகெடுத்திருப்பார்" (என்றும் கூறுகின்றனர், மறுமையில்) வேதனையைக் காணும்போது வழிகெட்டவர்கள் யார் என்பதை விரைவில் அவர்கள் அறிந்துகொள்வர்.

43(நபியே!)தன் மன விருப்பத்தைக் கடவுளாக்கிக் கொண்டவனை நீர் பார்த்தீரா? அவனுக்கு நீர் பொறுப்பாளியாவீரா? 44அல்லது அவர்களில் பெரும்பாலோர் (நீர் கூறுவதை) செவியுறுகின்றனர் அல்லது புரிந்து கொள்கின்றனர் என்று (நீர் எண்ணுகிறீரா? அவர்கள் விலங்குகளைப் போன்றவர்கள், ஏன் அவற்றை விடவும் வழிகெட்டவர்கள்.

45(நபியே!) உம் இறைவன் நிழலை எவ்வாறு நீளச்செய்கிறான் என்பதை நீர் காணவில்லையா? அவன் விரும்பினால் அதனை ஒரே நிலையில் வைத்திருக்க முடியும். நாம் நிழலுக்குச் சூரியனை வழிகாட்டியாக ஆக்கினோம். 46பின்னர் அந்நிழலைச் சிறுகச்சிறுக எம் பக்கம் இழுத்துக் கொள்கிறோம். 47அவன்தான் உங்களுக்காக இரவைப் போர்வையாகவும் உறக்கத்தை ஓய்வாகவும் பகலை இயங்கும் நேரமாகவும் ஆக்கியுள்ளான். 48அவன்தான் (மழை என்னும்) தன் அருளுக்கு முன்னர்க் (குளிர்ந்த) காற்றுகளை நற்செய்தியாக அனுப்புகிறான். (மனிதர்களே!) வானத்திலிருந்து நாம் தூய்மையான நீரைப் பொழியச் செய்கிறோம். 49அதன்மூலம் நாம் உயிரற்ற பூமியை உயிர்ப்பிக்கிறோம். அதிலிருந்து நாம் படைத்த கால்நடைகளுக்கும் ஏராளமான மனிதர்களுக்கும் குடிநீர் புகட்டுகின்றோம்.

[50]*(மழையாகிய இவ்வருளைக் கொண்டு) அவர்கள்*
*சிந்தித்துணரும் பொருட்டு நாம் அவர்களிடையே பல்வேறு*
*விதமாக தெளிவுபடுத்துகிறோம். ஆயினும் மக்களில்*
*பெரும்பாலோர் நன்றி கெட்டவர்களாகத்தான் இருக்கின்றனர்.*
[51]*(நபியே!) நாம் விரும்பியிருந்தால் ஒவ்வொரு ஊருக்கும்*
*ஓர் எச்சரிக்கையாளரை அனுப்பியிருப்போம்.* [52]*எனவே நீர்*
*(ஓரிறை)மறுப்பாளர்களுக்குக் கீழ்ப்படியாதீர். (குர்ஆனாகிய)*
*இதன் மூலம் அவர்களிடம் (இறைச் செய்தியைக் கொண்டு*
*சேர்ப்பதற்காகக்) கடும்முயற்சி மேற்கொள்வீராக!*

[53]*அவன்தான் இரு கடல்களையும் ஒன்றிணைத்துள்ளான்.*
*ஒன்று சுவையான தாகம் தீர்க்கக்கூடிய குடிநீர். மற்றொன்று*
*உப்பும் கசப்பும் வாய்ந்த தண்ணீர். அவ்விரண்டுக்கும் இடையே*
*மீறமுடியாத ஒரு தடுப்பை ஏற்படுத்தியுள்ளான்* [54]*அவன்தான்*
*மனிதனை நீரிலிருந்து படைத்தான். அவனுக்கு இரத்த*
*உறவுகளையும் திருமண உறவுகளையும் ஏற்படுத்தினான். (நபியே!)*
*உமது இறைவன் பேராற்றலுடையவன்.*

[55]*(எனினும்) அவர்கள் அல்லாஹ்வை விடுத்து தமக்கே எந்தப்*
*பயனையோ தீங்கையோ அளித்துக்கொள்ள இயலாதவற்றை*
*வணங்குகின்றனர். மறுப்பாளன் தன் இறைவனுக்கு எதிரான*
*தீயசக்திகளுக்குத் துணைபுரிபவனாக இருக்கிறான்.* [56]*(நபியே!)*
*உம்மை நற்செய்தியாளராகவும் எச்சரிக்கையாளராகவுமே நாம்*
*அனுப்பியுள்ளோம்.* [57]*“விரும்பியோர் தம் இறைவனின் பாதையைப்*
*பற்றிக் கொள்ளவேண்டும் என்பதைத் தவிர அதற்காக நான்*
*உங்களிடம் எந்தக் கூலியும் கேட்கவில்லை” எனக் கூறுவீராக!*

[58]*(நபியே!) என்றும் நிலைத்திருப்பவனும், இறப்பே*
*இல்லாதவனுமாகிய இறைவனையே முழுமையாகச்*
*சார்ந்திருப்பீராக! அவனைப் புகழ்ந்து போற்றுவீராக! தன்*
*அடியார்களின் பாவங்களை நன்கறிந்துகொள்ள அவன்*
*போதுமானவன்.* [59]*அவன் வானங்களையும் பூமியையும் அவற்றிற்கு*

*இடையிலுள்ளவற்றையும் ஆறு நாட்(காலக்கட்டங்)களில் படைத்தான். பின்னர் இறையிருக்கையின் மேல் உயர்ந்துவிட்டான்* அவன் அளவற்ற அருளாளன். இதனைப்பற்றி அறிந்தவர்களிடம் கேளும். [60]"அளவற்ற அருளாளனுக்குத் தலைவணங்குங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால் அவர்களின் வெறுப்பு இன்னும் அதிகமாகி "அளவற்ற அருளாளன்" என்றால் யார்? நீர் கூறுபவருக்கெல்லாம் நாங்கள் தலைவணங்கவேண்டுமா?" என்று கேட்கின்றனர்.*

*[61]அவன் பெரும் பேறுடையவன். அவன்தான் வானத்தில் கோள்களை அமைத்து அதில் (சூரிய) விளக்கையும் ஒளிரும் சந்திரனையும் அமைத்தான். [62]அவன்தான் இரவையும் பகலையும் மாறிமாறி வரும்படி அமைத்துள்ளான். இது படிப்பினை பெற விரும்பியோருக்காகவும் நன்றி செலுத்துவோருக்காகவும்தான்.*

*[63]அளவற்ற அருளாளனின் அடியார்கள் பூமியில் பணிவுடன் நடப்பார்கள்; அறிவீனர்கள் அவர்களுடன் (முறைகேடாக) உரையாடினால் "(உங்களுக்கு) சாந்தி உண்டாகட்டும்" என்று கூறி விலகிவிடுவர். [64]அவர்கள் தங்கள் இறைவனுக்குத் தலைவணங்கியும் நின்றும் வணங்கியவாறு இரவுகளைக் கழிப்பார்கள். [65]அவர்கள், "எங்கள் இறைவா! நரகவேதனையை எங்களைவிட்டுத் தடுத்திடுவாயாக! உறுதியாக அதனுடைய வேதனை நிலையான அழிவைத் தரக்கூடியதாகும்" (என்று இறைஞ்சி வேண்டுவர்.) [66]"உறுதியாக அது கெட்ட இருப்பிடமாகும்; கேடான உறைவிடமாகும்" (என்றும் கூறுவர்.) [67]அவர்கள் (தன் செல்வத்தைச்) செலவு செய்யும்போது வீண்விரயம் செய்யமாட்டார்கள். கஞ்சத்தனமும் செய்யமாட்டார்கள். அவற்றிற்கிடையே நடுநிலையைப் பேணுவர்.*

---

***இங்கே குறிப்பிடப்பட்டுள்ள 'ஆறு நாட்கள்' என்பது இறைவனின் ஆறுநாட்களாகும். மனிதர்கள் பயன்படுத்தும் மொழியில் கூறுவதென்றால் 'ஆறு காலக்கட்டங்கள்' அல்லது 'ஆறு நிலைகள்' என்பதாகும்.***

[68]அவர்கள் அல்லாஹ்வுடன் வேறு எந்த இறைவனையும் அழைக்கமாட்டார்கள். அல்லாஹ் (கொலை செய்யக்கூடாதெனத்) தடைசெய்த எந்த உயிரையும் நியாயமின்றி கொல்லமாட்டார்கள். ஒழுக்கக் கேட்டிலும் ஈடுபடமாட்டார்கள். இவ்வகையான செயல்களைச் செய்பவன் அதற்குரிய தண்டனையைப் பெற்றே தீர்வான். [69]மறுமை நாளில் அவனுக்கு வேதனை மிகுதியாக்கிக் கொண்டேயிருக்கும். அங்கு இழிவடைந்தவனாக அவன் என்றென்றும் கிடப்பான்;

[70]ஆயினும் மன்னிப்புக்கோரி நம்பிக்கைகொண்டு நற்செயல்களில் ஈடுபடுகின்றவர்களைத் தவிர! அல்லாஹ் இத்தகைய மக்களின் தீமைகளை (மன்னிப்பதுடன்) நன்மைகளாகவும் மாற்றிவிடுவான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன். [71](பாவ)மன்னிப்புக் கோரி நற்செயல்புரிபவர் உண்மையில் அல்லாஹ்வின்பால் திரும்பிவிடுகின்றார்.

[72]அவர்கள் பொய்சாட்சி கூறமாட்டார்கள். வீணானவற்றைக் கடந்து செல்ல நேர்ந்தால் கண்ணியமான முறையில் கடந்து சென்றுவிடுவார்கள். [73]அவர்களிடம் தங்கள் இறைவனின் வசனங்கள் நினைவூட்டப்பட்டால் (சிந்தித்துச் செயல்படுவார்களே அன்றி) செவிடர்களாகவும் குருடர்களாகவும் அவற்றின் மீது விழமாட்டார்கள். [74]“எங்கள் இறைவா! எங்கள் மனைவியரிடமிருந்தும் குழந்தைகளிடமிருந்தும் எங்களுக்குக் கண்குளிர்ச்சியை (மகிழ்ச்சியை) அளிப்பாயாக! எங்களை இறையச்சமுடையோருக்கு வழிகாட்டியாகவும் ஆக்கிவைப்பாயாக!” என்றும் இறைஞ்சி வேண்டுவர்.

[75]இத்தகைய மக்கள் பொறுமையைக் கடைப்பிடித்ததன் பயனாக (சொர்க்கத்தில்) மாடமாளிகைகளைப் பெறுவர். அங்கு வாழ்த்துக்களுடனும் (‘சாந்தி நிலவட்டும்’ என்ற) முகமனுடனும் அவர்கள் வரவேற்கப்படுவர். [76]அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பர். அது வாழ்வதற்கும் ஓய்வெடுப்பதற்கும் சிறந்த

இடமாகும். 77(நபியே!) நீர் (மறுப்பாளர்களிடம்) “நீங்கள்
இறைஞ்சி வேண்டாவிட்டாலும் என் இறைவன் உங்களைப்
பொருட்படுத்தப் போவதில்லை. நீங்கள் மறுத்துவிட்டீர்கள்.
அதன் வேதனை உங்களைப் பிடித்தே தீரும்” என்று கூறுவீராக!

## 26. கவிஞர்கள் (அஷ்ஷுஅரா)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

1தா – ஸீம் – மீம்.

2இவை தெளிவான வேதத்தின் வசனங்களாகும். 3(நபியே!)
அவர்கள் நம்பிக்கை கொள்ளவில்லை என்பதற்காக உம்மை நீரே
மாய்த்துக்கொள்வீர் போலும். 4நாம் விரும்பினால் அவர்கள்
தலைகுனிந்து பணியும்படியான ஒரு சான்றை வானத்திலிருந்து
அவர்கள் மீது இறக்கிவிடுவோம். 5அளவற்ற அருளாளனிடமிருந்து
எந்த ஒரு புதிய அறிவுரை அவர்களிடம் வந்தாலும் அதனை
அவர்கள் புறக்கணித்து விடுகின்றனர். 6எனவே அவர்கள்
(இவ்வேதத்தைப்) பொய்யெனக் கூறிவிட்டனர். அவர்கள்
எதனை ஏளனம் செய்து கொண்டிருந்தார்களோ அதனைப்பற்றிய
உண்மைநிலை அவர்களுக்கு விரைவில் தெரிந்துவிடும்.

7அவர்கள் பூமியைப் பார்க்கவில்லையா? எத்தனை
வகைவகையான உயர்ந்த தாவரங்களை அதில் நாம் முளைக்கச்
செய்துள்ளோம்! 8உறுதியாக அதில் சான்று இருக்கிறது. ஆயினும்,
அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள்.
9(நபியே!) உறுதியாக உம் இறைவன் யாவற்றினும் வல்லவன்;
நிகரற்ற அன்பாளன்.

10-11(நபியே! நினைத்துப் பாரும்) உம் இறைவன் மோசேயை
அழைத்து “நீர் தீவினைபுரியும் ஃபாரோவுடைய சமூகத்தாரிடம்
செல்வீராக! அவர்கள் (எனக்கு) அஞ்சமாட்டார்களா?”
என்று கேட்டான். 12“என் இறைவா, அவர்கள் என்னைப்

*பொய்மைப்படுத்தி மறுத்துவிடுவர் என நான் அஞ்சுகிறேன்.*
*[13]என் நெஞ்சம் நெருக்கடிக்குள்ளாகிவிடும்; என் நாவைக்கொண்டு*
*(சரியாகப்) பேசமுடியாமல் ஆகிவிடும். எனவே நீ ஆரோனையும்*
*(என்னுடன்) அனுப்புவாயாக! [14](மேலும்) அவர்களுக்கு*
*என்மீது ஒரு குற்றச்சாட்டுள்ளது. எனவே அவர்கள் என்னைக்*
*கொன்றுவிடுவார்களோ என்றும் நான் அஞ்சுகிறேன்" என்று*
*மோசே கூறினார்.*

*[15]அதற்கு அவன், "அவ்வாறன்று. நீங்கள் இருவரும் எமது*
*சான்றுகளுடன் செல்லுங்கள். நாமும் உங்களுடன் செவியுற்றுக்*
*கொண்டிருப்போம். [16]எனவே நீங்கள் இருவரும் ஃபாரோவிடம்*
*சென்று 'நாங்கள் அனைத்துலகங்களின் இறைவனால்*
*அனுப்பப்பட்டவர்களாவோம். [17]இஸ்ராயீலின் மக்களை நீ*
*எங்களுடன் அனுப்பிவிடு, எனக் கூறுங்கள்" என்று கூறினான்.*
*[18](அவ்வாறே அவர்கள் ஃபாரோவிடம் சென்று கூறியபோது) "நீர்*
*குழந்தையாக இருந்தபோது நாங்கள் உம்மை வளர்க்கவில்லையா?*
*உம் வாழ்நாளின் பல ஆண்டுகளை எங்களுடன் நீர் கழித்துள்ளீர்*
*[19](பின்னர்) நீர் அந்தச் செயலைச் செய்தீர்; நன்றிகெட்டவரானீர்"*
*என்று கூறினான்.*

*[20]"நான் நல்வழி தெரியாதவனாக இருந்தபோது அவ்வாறு*
*செய்துவிட்டேன். [21](பின்) உங்களுக்கு அஞ்சி ஓடிவிட்டேன்.*
*எனினும் என் இறைவன் எனக்கு ஞானத்தை வழங்கி என்னைத்*
*(தன்) தூதர்களில் ஒருவராகவும் ஆக்கினான். [22]நீ (என்*
*இனத்தவராகிய) இஸ்ராயீலின் மக்களை அடிமைப்படுத்தி*
*வைத்துவிட்டு எனக்குச் செய்த நன்மைகளைச் சொல்லிக்*
*காட்டுகிறாயா?" என்று மோசே கேட்டார்.*

*[23]"அனைத்துலகங்களின் இறைவன்" என்றால் என்ன? என்று*
*ஃபாரோ கேட்டான். [24]மோசே, "வானங்கள், பூமி மற்றும்*
*அவற்றிற்கிடையிலுள்ள அனைத்திற்கும் இறைவனே அவன்.*
*நீங்கள் உறுதியாக நம்புவோராக இருந்தால் (அவனையே*

*நம்புங்கள்)” என்றார். [25](அப்போது) பாரோ தன்னைச் சுற்றி
இருந்தவர்களிடம் “(இவர் சொல்வதை) நீங்கள் செவியுறுகிறீர்கள்
அல்லவா?” என்று கேட்டான். [26]மோசே, “அவன்தான்
உங்கள் இறைவன்; (மட்டுமல்ல) உங்களுக்கு முன்சென்ற
உங்கள் மூதாதையர்களுக்கும் இறைவன் அவன்தான்”
என்று கூறினார். [27]அதற்கு ஃபாரோ (அங்கிருந்தவர்களிடம்)
“உங்களிடம் அனுப்பப்பட்டுள்ள உங்கள் தூதர் பைத்தியக்காரர்”
என்றான். [28](அப்போது) மோசே, “கிழக்கிற்கும் மேற்கிற்கும்
அவற்றிற்கிடையிலுள்ள அனைத்திற்கும் அவன்தான் இறைவன்,
நீங்கள் விளங்கிக் கொள்வோராயின்” என்றார். [29]ஃபாரோ, “நீர்
என்னைத்தவிர வேறு இறைவனை ஏற்படுத்திக்கொண்டால்
உம்மைச் சிறையிலடைத்து விடுவேன்” என்றான். [30](அப்போது)
“தெளிவான ஒரு சான்றை நான் உன்னிடம் கொண்டு
வந்தாலுமா?” என்று மோசே கேட்டார். [31]அதற்கு ஃபாரோ,
“நீர் உண்மையாளராயின் அதனை என்னிடம் கொண்டு வாரும்”
என்றான். [32]எனவே மோசே தம் கைத்தடியைக் கீழே எறிந்தார்.
உடனே அது உண்மையான பாம்பைப் போலாகிவிட்டது
[33](மேலும்) அவர் தம் கையை(ச் சட்டைப்பையிலிட்டு)
வெளியே எடுத்தார். உடனே பார்ப்போருக்கு(ப் பிரகாசமான)
வெண்மையாகத் தோன்றியது. [34]ஃபாரோ தன்னைச் சுற்றியிருந்த
அவையினரிடம் “உறுதியாக இவர் கைதேர்ந்த சூனியக்காரர்தான்”
என்றான். [35]“தம் சூனியத்தின்மூலம் உங்களை நாட்டிலிருந்து
வெளியேற்ற இவர் விரும்புகிறார். எனவே இதற்கு நீங்கள் என்ன
சொல்கிறீர்கள்?” (என்றும் கேட்டான்).*

*[36]அதற்கு அவர்கள், “இவருக்கும் இவரது சகோதரருக்கும்
தவணை அளியுங்கள். (சூனியக்காரர்களை) ஒன்றுதிரட்டும்
பறைசாற்றுவோரை நகரங்களுக்குள் அனுப்புங்கள். [37]அவர்கள்
கைதேர்ந்த சூனியக்காரர்கள் அனைவரையும் உங்களிடம் கொண்டு
வருவார்கள்” என்று கூறினர். [38]அவ்வாறே சூனியக்காரர்கள்
ஒருநாள் குறிப்பிட்ட நேரத்தில் ஒன்றுதிரட்டப்பட்டனர். [39]“நீங்கள்*

*ஒன்றுகூடுவீர்களா?" என்று (முன்னதாகவே) மக்களிடமும்*
*கேட்கப்பட்டது. [40]"சூனியக்காரர்கள் வெற்றிபெற்றுவிட்டால் நாம்*
*அவர்களையே பின்பற்றலாம்" (எனவும் பறைசாற்றப்பட்டது).*
*[41]சூனியக்காரர்கள் வந்தபோது அவர்கள் ஃபாரோவிடம்,*
*"நாங்கள் வெற்றிபெற்றால் எங்களுக்குப் பரிசு உண்டல்லவா?"*
*என்று கேட்டனர். [42]அதற்கு அவன், "ஆம், உறுதியாக. அப்போது*
*நீங்கள் எனக்கு நெருக்கமானவர்களாகி விடுவீர்கள்" என்றான்.*

*[43]மோசே அவர்களிடம், "நீங்கள் எறியவிருப்பதை (முதலில்)*
*எறியுங்கள்" என்று கூறினார். [44]எனவே அவர்கள் தம்*
*கயிறுகளையும் கைத்தடிகளையும் எறிந்தனர். "ஃபாரோவுடைய*
*கண்ணியத்தின்மீது ஆணையாக நாங்கள்தான் வெல்வோம்"*
*என்று கூறினர். [45](பின்னர்) மோசே தம் கைத்தடியை எறிந்தார்.*
*உடனே அது (பெரிய பாம்பாக உருமாறி) அவர்கள் உருவாக்கிய*
*அத்தனை வித்தைகளையும் விழுங்கிவிட்டது. [46]எனவே*
*சூனியக்காரர்கள் தலைபணிந்து [47]"அனைத்துலகங்களின்*
*இறைவன்மீது நாங்கள் நம்பிக்கை கொண்டோம். [48]அவன்தான்*
*மோசே மற்றும் ஆரோனின் இறைவன்" என்று கூறினர்.*

*[49](அப்போது) ஃபாரோ உங்களுக்கு நான் அனுமதியளிப்பதற்கு*
*முன்பே நீங்கள் அவரை ஏற்றுக்கொண்டீர்களா? உறுதியாக*
*அவர்தான் சூனியத்தைக் கற்றுக் கொடுத்த உங்கள் குரு. எனவே,*
*நீங்கள் விரைவில் (இதன் விளைவை) அறிந்து கொள்வீர்கள்.*
*நான் உங்கள் மாறுகை மாறுகால்களைத் துண்டித்து உங்களைச்*
*சிலுவையில் அறைவேன்" என்று கூறினான். [50]அதற்கு அவர்கள்,*
*"எந்தக் கேடும் இல்லை; நாங்கள் எங்கள் இறைவனிடம் திரும்பி*
*விடுவோம். [51]நாங்கள் முன்னதாக நம்பிக்கை கொண்டுவிட்டதனால்*
*எங்கள் இறைவன் எங்கள் பாவங்களை மன்னித்து விடுவான்*
*என்றும் எதிர்பார்க்கிறோம்" என்று கூறினர்.*

*[52](பின்னர்) நாம் மோசேவுக்கு, "நீர் இரவோடு இரவாக என்*
*அடியார்களை அழைத்துக் கொண்டு வெளியேறி விடுவீராக!*
*உறுதியாக நீங்கள் (உங்கள் எதிரிகளால்) பின்தொடரப்படுவீர்கள்"*

என்று அறிவித்தோம். [53]ஃபாரோ படை திரட்டக்கூடியவர்களை
பல நகரங்களுக்கும் அனுப்பினான். [54]“அவர்கள் மிகச்சிறிய
கூட்டம்தான். [55]ஆயினும் அவர்கள் நம்மைச் சினத்திற்குள்ளாக்கி
விட்டனர். [56]நாம் மிகவும் எச்சரிக்கையான கூட்டமாக
இருக்கிறோம்” (என்று ஃபாரோ கூறினான்). [57](இவ்வாறு
அவர்கள் பின்தொடர்ந்த போது) நாம் (அவர்களுடைய)
தோட்டங்கள், நீரூற்றுகள் [58]கருவூலங்கள், மதிப்புவாய்ந்த
இடங்கள் ஆகியவற்றிலிருந்து அவர்களை வெளியேற்றி
விட்டோம். [59]இவ்வாறே இஸ்ராயீலின் மக்களை அவற்றுக்கு
வாரிசாக்கினோம்.

[60]சூரியன் உதித்தபோது ஃபாரோவும் அவனது படையும்
இவர்களைப் பின்தொடர்ந்தனர். [61]இரு கூட்டமும்
ஒருவரையொருவர் கண்டுகொண்டபோது மோசேயின் தோழர்கள்
“நாம் பிடிபடப் போகிறோம்” என்றனர். [62]மோசே, “ஒருபோதும்
இல்லை. உறுதியாக என் இறைவன் என்னுடன் இருக்கிறான்.
அவன் எனக்கு வழிகாட்டுவான்” என்று கூறினார். [63]நாம்
மோசேவுக்கு, “உம் கைத்தடியினால் கடலை அடியும்” என்று
அறிவித்தோம். (அவர் அவ்வாறு அடித்தபோது) அது பிளந்து
விட்டது. ஒவ்வொரு பிளவும் ஒரு பெரிய மலையைப் போலாகி
விட்டது. [64]அச்சமயத்தில் (பின்தொடர்ந்த) கூட்டத்தையும்
நெருங்கி வரச்செய்தோம். [65]மோசேயையும் அவருடன் இருந்த
அனைவரையும் நாம் பாதுகாத்துக் கொண்டோம். [66](அவர்களைப்
பின்தொடர்ந்து வந்த) மற்றவர்களை மூழ்கடித்து விட்டோம்.
[67]உறுதியாக இதில் சான்று இருக்கிறது. (இருப்பினும்) அவர்களில்
பெரும்பாலோர் நம்பிக்கைகொள்ளவில்லை. [68](நபியே!) உம்
இறைவன் யாவற்றினும் வல்லவன்; நிகரற்ற அன்பாளன்.

[69](நபியே!)இவர்களுக்கு ஆப்ரஹாமின் வரலாற்றைக் கூறுவீராக!
[70]ஆப்ரஹாம் தம் தந்தையிடமும் சமூகத்தினரிடமும் “நீங்கள்
எவற்றை வணங்கிக் கொண்டிருக்கிறீர்கள்?” என்று கேட்டபோது
[71]“நாங்கள் இச்சிலைகளை வணங்கிக் கொண்டிருக்கிறோம்,

*அவற்றை வழிபடுவதிலேயே நிலைத்திருப்போம்" என்று அவர்கள்*
*கூறினர். [72]"நீங்கள் அழைக்கும்போது உங்கள் அழைப்பை அவை*
*செவியுறுகின்றனவா? [73]அல்லது உங்களுக்குப் பயனையோ*
*தீங்கையோ அளிக்கின்றனவா?" என்று அவர் கேட்டார்.*
*[74]அவர்கள், "எங்கள் முன்னோர்கள் இவ்வாறு (வழிபாடு)*
*செய்துகொண்டிருக்கக் கண்டோம்" என்றனர்.*

*[75]ஆப்ரஹாம் "நீங்கள் எதனை வணங்கிக் கொண்டிருக்கிறீர்கள்*
*என்று கவனித்தீர்களா? [76]நீங்களும் உங்கள் முன்னோர்களும்*
*(எதை வணங்கினீர்கள் என்று கவனித்தீர்களா?) என்று கேட்டார்.*
*[77]அனைத்துலகங்களின் இறைவனைத் தவிர இவையனைத்தும்*
*எனக்குப் பகையானவையே. [78]அவன்தான் என்னைப் படைத்தான்;*
*அவன்தான் எனக்கு வழிகாட்டுகிறான்; [79]எனக்கு உண்ணவும்*
*பருகவும் தருகிறான். [80]நான் நோயுற்றால் அவன்தான் எனக்குக்*
*குணமளிக்கிறான். [81]அவன்தான் என்னை இறக்கச் செய்வான்.*
*பின்னர் அவன்தான் என்னை உயிர்ப்பிப்பான். [82]தீர்ப்பளிக்கப்படும்*
*நாளில் அவன் என் பாவங்களை மன்னித்துவிடுவான் என நான்*
*நம்பிக்கை வைக்கிறேன்" என்று கூறினார்.*

*[83](ஆப்ரஹாம் இறைவனிடம்) "என் இறைவா! எனக்கு*
*ஞானத்தை வழங்குவாயாக! என்னை நல்லோர்களுடன் சேர்த்து*
*வைப்பாயாக! [84]பிற்காலத் தலைமுறையினரிடையே எனக்கு*
*நற்பெயரை ஏற்படுத்துவாயாக! [85]என்னை அருட்கொடைகள்*
*நிரம்பிய சொர்க்கத்தின் வாரிசுகளில் ஒருவராக ஆக்குவாயாக!*
*[86]என் தந்தையை மன்னித்து விடுவாயாக! உறுதியாக அவர்*
*வழிகெட்டவர்களில் ஒருவராக இருக்கிறார். [87](மனிதர்கள்*
*அனைவரும்) உயிர் கொடுத்து எழுப்பப்படும் நாளில் என்னை*
*இழிவுபடுத்தி விடாதே!" என்று இறைஞ்சி வேண்டினார்.*
*[88](மறுமையாகிய) அந்நாளில் செல்வமோ பிள்ளைகளோ*
*பயனளிக்கமாட்டா. [89]தூய்மையான உள்ளத்தோடு அல்லாஹ்விடம்*
*வருபவரைத் தவிர (மற்றவர்கள் பயனடையமாட்டார்கள்.)*

[90]இறையச்சமுடையோருக்குச் சொர்க்கம் அருகில்
கொண்டுவரப்படும். [91]வழிகெட்டவர்களுக்கு நரகம்
வெளிப்படுத்தப்படும். [92]“அல்லாஹ்வை விடுத்து நீங்கள் வணங்கி
வந்த தெய்வங்களெல்லாம் எங்கே?” என்று அவர்களிடம்
கேட்கப்படும் [93]“அவை உங்களுக்கு உதவுமா அல்லது
தங்களையாவது காத்துக்கொள்ளுமா?” என்றும் கேட்கப்படும்.
[94–95]பின்னர் அவைகளும் வழிகெட்டுப் போனவர்களும்
(சாத்தானாகிய) இப்லீஸுடைய படையினர் அனைவரும் அதில்
முகங்குப்புறத் தள்ளப்படுவார்கள். [96]அங்கு அவர்கள் தங்களுக்குள்
சண்டையிட்டுக் கொண்டே, [97]“இறைவன் மீது ஆணையாக!
நாங்கள் வெளிப்படையான கெடுவழியில்தான் இருந்தோம்.
[98]நாங்கள் உங்களை அனைத்துலகங்களின் இறைவனுக்குச்
சமமாக்கி இருந்தோம்; [99]குற்றவாளிகள்தாம் எங்களை
வழிகெடுத்துவிட்டனர். [100]எனவே இப்போது எங்களுக்காகப்
பரிந்து பேசுபவரோ [101]உற்ற நண்பரோ யாருமில்லை. [102]அந்தோ,
நாங்கள் மீண்டும் ஒருமுறை (உலகிற்குத்) திரும்ப முடிந்தால்
நம்பிக்கையாளர்களாக ஆகிவிடுவோமே!” என்று புலம்புவர்,
[103]உறுதியாக இதில் சான்று இருக்கிறது. (இருப்பினும்) இவர்களில்
பெரும்பாலோர் நம்பிக்கை கொள்ளவில்லை. [104](நபியே!)
உறுதியாக உம் இறைவன் யாவற்றினும் வல்லவன்; நிகரற்ற
அன்பாளன்.

[105]நோவாவின் சமூகத்தினர் (எம்) தூதர்களைப் பொய்யர்கள்
எனக்கூறினார். [106]அவர்களின் சகோதரர் நோவா, அவர்களிடம்
“நீங்கள் (இறைவனுக்கு) அஞ்சமாட்டீர்களா? [107]நான் உங்களுக்கு
(இறைவனால் அனுப்பப்பட்ட) நம்பிக்கைக்குரிய தூதராவேன்.
[108]எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; எனக்குக்
கட்டுப்படுங்கள். [109]இதற்காக நான் உங்களிடம் எந்தக் கூலியையும்
கேட்கவில்லை. எனது கூலியோ அனைத்துலகங்களின்
இறைவனிடமே அன்றி (வேறு எவரிடமும்) இல்லை. [110]நீங்கள்
அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; எனக்குக் கட்டுப்படுங்கள்” என்று

*கூறினார். [111]அவர்கள், "நாங்கள் உம்மை ஏற்றுக்கொள்வதா? மிகவும் தாழ்ந்த (நிலையிலுள்ள) மக்கள்தாமே உம்மைப் பின்பற்றிக் கொண்டிருக்கின்றனர்" என்று கூறினர். [112]அவர், "அவர்கள் செய்து கொண்டிருக்கும் பணி குறித்து எதனையும் நான் அறியமாட்டேன். [113]அவர்களை விசாரிப்பது என் இறைவன் மீதுள்ள பொறுப்பாகும், நீங்கள் புரிந்துகொள்ளமாட்டீர்களா? [114]நான் நம்பிக்கையாளர்களைத் துரத்துபவன் அல்லன். [115]நானோ வெளிப்படையாக எச்சரிப்பவனே அன்றி வேறில்லை" என்று கூறினார்.*

*[116]அவர்கள் "நோவாவே! நீர் இதிலிருந்தும் விலகிக் கொள்ளாவிடில் உறுதியாக கல்லெறிந்து கொல்லப்படுவீர்" என்றனர். அவர்கள் கூறினர். [117](அவர் இறைவனிடம்) "என் இறைவனே! என் சமூகத்தினர் என்னைப் பொய்யரென்று கூறிவிட்டனர். [118]எனவே நீ எனக்கும் அவர்களுக்குமிடையே தெளிவான தீர்ப்பை வழங்கிவிடுவாயாக! என்னையும் என்னுடன் இருக்கும் நம்பிக்கையாளர்களையும் காப்பாற்றுவாயாக!" என்று இறைஞ்சி வேண்டினார். [119]எனவே அவரையும் அவருடைய தோழர்களையும் நாம் (பிற உயிர்ப்பொருள்களால்) நிரம்பியிருந்த கப்பலில் (ஏற்றி) பாதுகாத்துக் கொண்டோம். [120]பின்னர் எஞ்சியிருந்த மறுப்பாளர்களை மூழ்கடித்து விட்டோம். [121]உறுதியாக இதில் சான்று இருக்கிறது. இவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்பவர்களாக இருக்கவில்லை. [122]உறுதியாக (நபியே!) உம் இறைவன் யாவற்றினும் வல்லவன்; நிகரற்ற அன்பாளன்.*

*[123]'ஆத்' சமூகத்தினர் (எம்) தூதர்களைப் பொய்யர்கள் எனக் கூறினர். [124]அவர்களின் சகோதரர் ஹூத் அவர்களிடம் "நீங்கள் (அல்லாஹ்வுக்கு) அஞ்சமாட்டீர்களா? [125]நான் உங்களுக்கான நம்பிக்கைக்குரிய தூதராவேன். [126]எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; எனக்குக் கட்டுப்படுங்கள். [127]இதற்காக நான் உங்களிடம் எந்தக் கூலியையும் கேட்கவில்லை. எனது கூலியோ அனைத்துலகங்களின் இறைவனிடமே*

*அன்றி (வேறு எவரிடமும்) இல்லை.* [128]*நீங்கள் உயரமான இடங்களிலெல்லாம் நினைவுச் சின்னங்களை வீணாக எழுப்புகிறீர்களே!* [129]*என்றென்றும் வாழ்பவர்களைப் போல மாபெரும் மாளிகைகளைக் கட்டுகிறீர்களே!* [130]*நீங்கள் யாரையேனும் தண்டித்தால் கொடூரமாகத் தண்டிக்கிறீர்கள்.* [131]*நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; எனக்குக் கட்டுப்படுங்கள்.* [132] *நீங்கள் அறிந்துள்ளவற்றைக்கொண்டு உங்களுக்கு உதவிபுரிந்த அந்த இறைவனுக்கு அஞ்சுங்கள்.* [133]*அவன்தான் கால்நடைகள், குழந்தைகள்,* [134]*தோட்டங்கள் மற்றும் நீரூற்றுகளைக்கொண்டு உங்களுக்கு உதவிபுரிந்தான்.* [135]*உங்கள் விஷயத்தில் மாபெரும் நாளின் வேதனையைக் குறித்து நான் அஞ்சுகிறேன்" என்று கூறினார்.*

[136]*அவர்கள், "நீர் அறிவுரை வழங்குவதும், அறிவுரை வழங்காமலிருப்பதும் எங்களுக்கு ஒன்றுதான்.* [137]*இ(வ்வாறு அறிவுரைகள் கூறுவ)து முன்னோர்களின் ஒரு வழக்கமேயன்றி வேறில்லை.* [138]*நாங்கள் ஒருபோதும் தண்டிக்கப்பட மாட்டோம்" என்று கூறினர்.* [139]*அவர்கள் அவரைப் பொய்மைப்படுத்தி விட்டனர். எனவே நாம் அவர்களை அழித்து விட்டோம். உறுதியாக இதில் ஒரு சான்று இருக்கிறது. (இருப்பினும்) அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்ளவில்லை.* [140]*உறுதியாக (நபியே!) உம் இறைவன் யாவற்றினும் வல்லவன்; நிகரற்ற அன்பாளன்.*

[141]*'ஸமூத்' சமூகத்தினர் தூதர்களைப் பொய்யர்கள் என்று கூறினர்.* [142]*அவர்களின் சகோதரர் சாலிஹ், அவர்களிடம், "நீங்கள் (இறைவனுக்கு) அஞ்சமாட்டீர்களா?* [143]*நான் உங்களுக்கான நம்பிக்கைக்குரிய தூதராவேன்.* [144]*(ஆகவே) நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; எனக்குக் கட்டுப்படுங்கள்.* [145]*இதற்காக உங்களிடம் எந்தக் கூலியையும் நான் கேட்கவில்லை. எனது கூலியோ அனைத்துலகங்களின் இறைவனிடமே அன்றி (வேறு எவரிடமும்) இல்லை.* [146]*நீங்கள் இங்கு(ள்ள சுக போகங்களில் என்றென்றும்)*

அச்சமின்றி (வாழ) விட்டு வைக்கப்படுவீர்க(ள் என்று எண்ணிக் கொண்டீர்க)ளா? [147]தோட்டங்களிலும் நீரூற்றுகளிலும் [148]விளைநிலங்களிலும் குலைதள்ளிய பேரீச்சைத் தோப்புகளிலும் (அச்சமின்றி வாழ விட்டுவைக்கப்படுவீர்களா?) [149]மலைகளைக் குடைந்து வீடுகள் அமைத்து உங்கள் திறமையில் செருக்குக் கொள்கிறீர்களா? [150]எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; எனக்குக் கட்டுப்படுங்கள். [151]வரம்பு மீறிச் செல்வோருக்குக் கீழ்ப்படியாதீர்கள். [152]அவர்கள் உலகில் சீர்திருத்தம் செய்வதற்கு மாறாகக் குழப்பம் விளைவிப்பவர்கள்" என்று கூறினார்.

[153]அவர்கள், (சாலிஹிடம்) நீர் சூனியம் செய்யப்பட்டோரில் ஒருவராக இருக்கிறீர். [154]நீர் எங்களைப்போன்ற ஒரு மனிதரேயன்றி வேறில்லை. நீர் உண்மையாளராயின் ஏதேனும் சான்றைக் கொண்டுவாரும்" என்று கூறினர். [155]அதற்கு அவர், "(உங்களுக்குச் சான்றாக) இதோ ஒரு பெண் ஒட்டகம் (நீங்கள் அருந்தும் நீர் நிலையில்) ஒரு நாள் தண்ணீர் குடிக்கட்டும். நீங்கள் தண்ணீர் பிடித்துக்கொள்ள ஒருநாளை அறுதியிட்டுக்கொள்ளுங்கள். [156]அதற்கு எந்தத் தீங்கும் இழைக்காதீர்கள். அவ்வாறு செய்தால் மாபெரும் நாளின் வேதனை உங்களைத் தாக்கும்" என்று கூறினார். [157]அவர்கள் அதன் கால்நரம்பை வெட்டி(க் கொன்று) விட்டனர். (அது இறந்துவிடவே தங்களுக்கு வரவிருக்கும் வேதனை குறித்துப்) பின்னர் வருத்தப்பட்டு நின்றனர். [158]ஆகவே அவர்களை வேதனை தாக்கியது. உறுதியாக இதில் சான்று இருக்கிறது. இவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்ளவில்லை. [159](நபியே!) உறுதியாக உம் இறைவன் யாவற்றினும் வல்லவன்; நிகரற்ற அன்பாளன்.

[160]லோத்தின் சமூகத்தினர் தூதர்களைப் பொய்யர்கள் என்று கூறினர். [161]அவர்களின் சகோதரர் லோத், இவ்வாறு கூறியதை (நபியே! நீர் மக்களுக்கு) நினைவூட்டுவீராக! அவர் அவர்களிடம் "நீங்கள் அஞ்சமாட்டீர்களா? [162]நான் உங்களுக்கான நம்பிக்கைக்குரிய தூதராவேன். [163]நீங்கள் அல்லாஹ்வுக்கு

*அஞ்சுங்கள். எனக்குக் கட்டுப்படுங்கள். 164இதற்காக நான்*
*உங்களிடம் எந்தக் கூலியையும் கேட்கவில்லை. எனது கூலியோ*
*அனைத்துலகங்களின் இறைவனிடமே அன்றி (வேறு எவரிடமும்)*
*இல்லை. 165உலக மக்களிலேயே நீங்கள் (ஓரினச் சேர்க்கைக்காக)*
*ஆண்களிடம் செல்கிறீர்களா? 166உங்கள் இறைவன் உங்களுக்காகப்*
*படைத்துள்ள உங்கள் மனைவியரை விட்டுவிடுகிறீர்களே! நீங்கள்*
*வரம்புமீறும் மக்களாக இருக்கிறீர்கள்" என்று கூறினார்.*

*167அவர்கள், "லோத்தே! நீர் இதிலிருந்து விலகிக்கொள்ளாவிடில்*
*உறுதியாக நீர் (ஊரைவிட்டு) வெளியேற்றப்படுவீர்" என்று கூறினர்.*
*168அவர், "உங்கள் செயல்களை நான் மிகவும் வெறுக்கிறேன்*
*(என்று கூறி, இறைவனிடம்) 169"என் இறைவா! இவர்களின்*
*செயல்களிலிருந்து என்னையும் என் குடும்பத்தினரையும்*
*பாதுகாப்பாயாக!" என்று இறைஞ்சி வேண்டினார். 170எனவே*
*நாம் அவரையும் அவரது குடும்பத்தினர் அனைவரையும்*
*காப்பாற்றினோம், 171(அவருடைய மனைவியாகிய) ஒரு*
*கிழவியைத் தவிர! அவள் பின்தங்கியவர்களுடன் இருந்து*
*விட்டாள். 172பின்னர் நாம் மற்றவர்களை அழித்து விட்டோம்.*
*173அவர்களின் மீது நாம் (கல்)மழையைப் பொழியச் செய்தோம்.*
*அது எச்சரிக்கப்பட்டோர் மீது பொழிந்த கேடான மழையாக*
*இருந்தது. 174உறுதியாக இதில் சான்று இருக்கிறது. இருப்பினும்*
*இவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்ளவில்லை.*
*175(நபியே!) உறுதியாக உம் இறைவன் யாவற்றினும் வல்லவன்;*
*நிகரற்ற அன்பாளன்.*

*176தோப்புவாசிகளும் தூதர்களைப் பொய்யர்கள் எனக்*
*கூறினர். 177ஷுஐப் அவர்களிடம் "நீங்கள் (இறைவனுக்கு) அஞ்ச*
*மாட்டீர்களா? 178நான் உங்களுக்கான நம்பிக்கைக்குரிய தூதராவேன்.*
*179நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; எனக்குக் கட்டுப்படுங்கள்.*
*180இதற்காக நான் உங்களிடம் எந்தக் கூலியையும் கேட்கவில்லை.*
*எனது கூலியோ அனைத்துலகங்களின் இறைவனிடமே அன்றி*
*(வேறு எவரிடமும்) இல்லை. 181நீங்கள் (அளவைச்) சரியாக*

*அளந்து கொடுங்கள்; (யாருக்கும்) இழப்பை ஏற்படுத்தி விடாதீர்கள். [182]சரியான தராசைக்கொண்டு எடைபோடுங்கள். [183]மக்களுக்குக் கொடுக்க வேண்டிய பொருள்களைக் குறைத்து வழங்காதீர்கள். பூமியில் குழப்பம் செய்துகொண்டு திரியாதீர்கள். [184]உங்களையும் முந்தைய தலைமுறையினரையும் படைத்தவனுக்கு அஞ்சுங்கள்" என்று கூறினார்.*

*[185]அவர்கள், "நீர் சூனியம் செய்யப்பட்டவர்களுள் ஒருவரே! [186]நீர் எங்களைப்போன்ற ஒரு மனிதரேயன்றி வேறில்லை. நாங்கள் உம்மைப் பொய்யராகவே கருதுகிறோம்.*

*[187]நீர் உண்மையாளராக இருந்தால் வானத்திலிருந்து ஒரு துண்டுப் பகுதியை எங்கள் மீது விழச்செய்யும்" என்று கூறினர். [188]அவர், "நீங்கள் செய்து கொண்டிருப்பவற்றை என் இறைவன் நன்கறிவான்" என்றார். [189]எனினும் (பின்னரும்) அவர்கள் அவரைப் பொய்யர் எனக் கூறிவிட்டனர். எனவே (மேகம்) நிழலிட்ட நாளின் வேதனை அவர்களைப் பற்றிக்கொண்டது. உறுதியாக அது ஒரு மகத்தான நாளின் வேதனையாக இருந்தது. [190]உறுதியாக இதில் சான்று இருக்கிறது. இவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்ளவில்லை. [191](நபியே!) உறுதியாக உம் இறைவன் யாவற்றினும் வல்லவன்; நிகரற்ற அன்பாளன்.*

*[192](நபியே!) உறுதியாக இது அனைத்துலகங்களின் இறைவனால் அருளப்பட்ட வேதமாகும். [193]நம்பிக்கைக்குரிய வானவர் (கேப்ரியேல்) இதைப் பெற்று இறக்கி அருளினார். [194]நீர் எச்சரிக்கை செய்பவரில் ஒருவராக இருக்கவேண்டும் என்பதற்காக உம்முடைய உள்ளத்தில் இறக்கி அருளினான். [195](இது) தெளிவான அரபி மொழியில் அருளப்பட்டுள்ளது. [196](இது குறித்து) முன்னோர்களின் வேதங்களிலும் (முன்னறிவிப்பு) உள்ளது. [197]இஸ்ராயீலின் வழித்தோன்றல்களிலுள்ள அறிஞர்களும் இதனை அறிந்துள்ளனர் என்பது இம்மக்களுக்கு ஒரு சான்றாக இல்லையா?*

198நாம் இதனை அரபியர் அல்லாத யாரேனும்
ஒருவருக்கு அருளியிருந்து, 199இவர்களுக்கு அவர் இதனை
ஓதிக் காட்டியிருந்தால் (அப்போதும்) இதனை இவர்கள்
நம்பியிருக்கவேமாட்டார்கள். 200இவ்வாறே நாம் (ஓரிறை)
மறுப்பைக் குற்றவாளிகளின் உள்ளங்களில் புகுத்திவிடுகிறோம்.
201கடுமையான வேதனையைக் காணும்வரை அவர்கள் நம்பிக்கை
கொள்ளமாட்டார்கள். 202அவர்கள் உணராதிருக்கும் நிலையில்
திடீரென அது அவர்களை வந்தடைந்துவிடும். 203அப்போது
அவர்கள் எங்களுக்குக் காலநீட்டிப்பு கொடுக்கப்படாதா என்று
புலம்புவார்கள்.

204(இப்போது) எம் வேதனைக்காகவா அவர்கள்
அவசரப்படுகிறார்கள்? 205(நபியே! நீர்) எண்ணிப்பாரும். நாம்
அவர்களைச்சில ஆண்டுகள்வரை சுகம் அனுபவிக்க விட்டுவைத்துப்
206பின்னர் அவர்களுக்கு எச்சரிக்கப்பட்ட(வேதனையான)து
அவர்களிடம் வந்துவிடுமானால் 207(அதுவரை) அவர்கள்
அனுபவித்த இன்பங்கள் அவர்களுக்கு என்ன பயனளித்துவிடப்
போகின்றன? 208நாம் எந்த ஊர் மக்களையும் அவர்களுக்கு
எச்சரிக்கை செய்பவர்களை அனுப்பி நினைவூட்டாமல்
அழித்ததில்லை. 209நாம் (யாருக்கும்) அநீதி இழைப்போர் அல்லர்.
210(குர்ஆனாகிய) இதனைச் சாத்தான்கள் கொண்டு வரவில்லை.
211அது அவர்களுக்குத் தகுதியானதுமன்று; அதற்கு அவர்கள்
ஆற்றல் உடையவர்களும் அல்லர். 212(மேலும்) இதனைச்
செவியுறாதவாறு அவர்கள் தடுக்கப்பட்டவர்களாவர்.

213ஆதலால், (நபியே!) நீர் அல்லாஹ்வுடன் வேறு எந்த
இறைவனையும் அழைக்காதீர். அவ்வாறு அழைத்தால் நீரும்
தண்டிக்கப்பட்டு விடுவீர். 214உம் நெருங்கிய உறவினர்களை
எச்சரிக்கை செய்வீராக! 215உம்மைப் பின்பற்றும்
நம்பிக்கையாளர்களிடம் நீர் இதமாக நடந்துகொள்ளும்.
216அவர்கள் உமக்கு எதிராகச் செயல்பட்டால் "நீங்கள்
செய்யும் செயல்களிலிருந்து முற்றிலும் நான் விலகிவிட்டேன்"

என்று கூறிவிடும். 217யாவற்றினும் வல்லவனும் நிகரற்ற
அன்பாளனுமாகிய இறைவனையே சார்ந்திருப்பீராக! 218நீர்
(தனித்து வணங்க) நிற்கும்போது அவன் உம்மைப் பார்க்கிறான்.
219(தலை வணங்குவோருடன் சேர்ந்து) வணங்கும்போதும்
உம் செயல்களை அவன் பார்க்கிறான். 220உறுதியாக அவன்
செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.

221(மக்களே!) சாத்தான்கள் யார்மீது இறங்குகிறார்கள் என்பதை
நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? 222(அவர்கள்) பொய்கூறும்
பாவிகள் அனைவர் மீதும் இறங்குகின்றனர். 223சாத்தான்கள்
ஒட்டுக்கேட்டதைப் (பொய்யர்களின் காதில்) போடுகின்றனர்
அம்மக்களில் பெரும்பாலோர் பொய்யர்களே! 224கவிஞர்கள்–
அவர்களை வழிகெட்டவர்கள்தாம் பின்பற்றுகின்றனர்.
225அக்கவிஞர்கள் ஒவ்வொரு பள்ளத்தாக்கிலும் தடுமாறித்
திரிவதை (நபியே!) நீர் காணவில்லையா? 226அவர்கள் தாம்
செய்யாதவற்றை(ச் செய்ததாக)ச் சொல்கின்றனர். 227ஆயினும்
(கவிஞர்களில்) நம்பிக்கைகொண்டு நற்செயல்கள்புரிந்து
அல்லாஹ்வை மேன்மேலும் நினைவுகூர்ந்து (தமக்குக்)
கொடுமை இழைக்கப்பட்டபிறகு பதிலடி கொடுப்பவர்களைத்
தவிர! (மற்றவர்கள்தாம் குற்றவாளிகள்). தாம் எங்குத் திரும்பிச்
செல்லவேண்டும் என்பதை விரைவில் தீவினையாளர்கள்
அறிந்துகொள்வர்.

# 27. எறும்புகள் (அந்நம்ல்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

1தா – ஸீன்.

இவை தெளிவான வேதமாகிய குர்ஆனின் வசனங்களாகும்.
2இது (இறை) நம்பிக்கையாளர்களுக்கு வழிகாட்டியாகவும்
நற்செய்தியாகவும் இருக்கிறது. 3அவர்கள் தொழுகையைக்
கடைப்பிடிப்பார்கள்; கடமையாக்கப்பட்ட கொடையை
வழங்குவார்கள்; மறுமையின்மீதும் உறுதியான நம்பிக்கை

கொண்டிருப்பார்கள். [4]மறுமையை நம்பாதோருக்கு அவர்களின்
(தீய)செயல்களை நாம் அழகாக்கிக் காட்டியுள்ளோம். எனவே
அவர்கள் தடுமாறித் திரிகின்றனர். [5]அவர்களுக்குக் கேடான
தண்டனையுண்டு; மறுமையிலோ அவர்கள்தாம் பெரும்
இழப்பிற்குரியவர்கள். [6](நபியே! உறுதியாக) இந்தக் குர்ஆன்,
அனைத்தையும் அறிந்த ஞானம் மிக்கவனிடமிருந்து உமக்கு
வழங்கப்படுகிறது.

[7](பயணத்தில்)மோசே தம் குடும்பத்தாரிடம், "நான் (அங்கே ஒரு)
நெருப்பைக் காண்கிறேன். (நான் சென்று) அங்கிருந்து ஏதேனும்
செய்தியை உங்களுக்குக் கொண்டுவருகிறேன். அல்லது நீங்கள்
குளிர்காய்வதற்காக ஒரு எரிகொள்ளியைக் கொண்டுவருகிறேன்"
என்று கூறியதை (நபியே!) நினைவூட்டுவீராக! [8]அவர் அங்கு
வந்தபோது பின்வருமாறு ஒருகுரல் கேட்டது: "நெருப்பில்
(அதன் ஒளியில்) உள்ளவர்களும் அதன் அருகில் உள்ளவர்களும்
பெரும் பேறுடையவர்கள். அனைத்துலகங்களின் இறைவனாகிய
அல்லாஹ் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்."

[9]"மோசே! நான்தான் அல்லாஹ்! நான் யாவற்றினும்
வல்லவன்; ஞானம் மிக்கவன்" (என்று அல்லாஹ் கூறினான்) [10]"நீர்
உம் கைத்தடியை எறியும்'' (என்றான், அவ்வாறு அவர் அதைப்
போட்டபோது) அது பாம்பைப்போல் நெளிவதைக்கண்டு அவர்
அஞ்சிப் பின்வாங்கி ஓடினார்; திரும்பிக்கூட பார்க்கவில்லை.
"மோசே! அஞ்சாதீர்! தூதர்கள் என்னிடத்தில் அஞ்சமாட்டார்கள்,
[11]தவறிழைத்தவர்களைத்தவிர! ஆயினும் தீமை செய்தவர் (அதனை
உணர்ந்து) பின்னர் நன்மைகள் செய்தால் உறுதியாக நான்
பெரும் மன்னிப்பாளனும் அளவற்ற அன்பாளனும் ஆவேன்.
[12]நீர் உம் கையை அக்குளில் நுழைப்பீராக! அதை (வெளியில்
எடுக்கும்போது) மாசற்ற வெண்மையாக வெளிப்படும். (இந்த
இரண்டையும் சேர்த்து) ஒன்பது சான்றுகளுடன் ஃபாரோவிடமும்
அவனது சமூகத்தாரிடமும் செல்வீராக! உறுதியாக அவர்கள்

*கீழ்ப்படியாதவர்களாக இருக்கின்றனர்” என்றான். [13](இவ்வாறு
மோசேவுக்குக் கொடுக்கப்பெற்ற) எம் தெளிவான சான்றுகள்
அவர்களிடம் வந்தபோது, “இது வெளிப்படையான சூனியமே”
என்று அவர்கள் கூறினர். [14]அவர்களின் உள்ளங்கள் அவற்றை
உறுதியாக நம்பிக்கொண்டிருந்தும் அநீதியாலும் செருக்காலும்
அவற்றை மறுத்தனர். குழப்பவாதிகளின் முடிவு என்னவாயிற்று
என்பதை (நபியே!) நீர் நோக்குவீராக!*

*[15]நாம் தாவீதுக்கும் சாலமனுக்கும் ஞானத்தை வழங்கினோம்.
அவ்விருவரும் “அனைத்துப்புகழும் அல்லாஹ்வுக்கே! அவன்
நம்பிக்கைகொண்ட தன்னுடைய அடியார்களில் பலரைவிடவும்
எங்களுக்குச் சிறப்பளித்திருக்கிறான்” என்று (நன்றியுடன்)
கூறினர். [16]தாவீதுக்கு சாலமன் வாரிசானார். “மக்களே!
எங்களுக்குப் பறவைகளின்மொழி கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது.
(மேலும் எங்களுக்குத் தேவையான) அனைத்து வகையான
நற்பொருள்களும் வழங்கப்பட்டுள்ளன. உறுதியாக இது
(இறைவனின்) வெளிப்படையான அருளாகும்” என்று அவர்
கூறினார்.*

*[17]சாலமனுக்காக ஜின்கள், மனிதர்கள், பறவைகள்
ஆகியோரிலிருந்து படைகள் திரட்டப்பட்டு அவை அணியணியாக
வகுக்கப்பட்டன. [18](ஒருமுறை) அவை எறும்புகளின் ஒரு
பள்ளத்தாக்கின் அருகில் வந்தபோது, ஓர் எறும்பு (மற்ற
எறும்புகளை நோக்கி) “எறும்புகளே! உங்கள் புற்றுகளில்
நுழைந்துகொள்ளுங்கள். சாலமனும் அவரது படையினரும்
தெரியாமல் உங்களை மிதித்து விடக்கூடாது” என்று கூறியது.
[19]அப்பேச்சைக் கேட்ட சாலமன் புன்னகைத்துச் சிரித்தார்.
அவர், “இறைவா! என்மீதும் என் பெற்றோர்களின்மீதும் நீ புரிந்த
அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துவதற்கும் நீ விரும்புகிற
நற்செயல்களைச் செய்வதற்கும் நீ எனக்கு அருள்புரிவாயாக!
உன் அருளால் உன் நல்லடியார்களில் என்னையும் சேர்த்து
விடுவாயாக!” என்று இறைஞ்சி வேண்டினார்.*

[20](மற்றொரு சமயம்) சாலமன் பறவைகளைப் பார்வையிட்டுக்
கொண்டிருந்தார். “என்ன விஷயம்? கொண்டைலாத்திப்
பறவையைக் காணவில்லையே? அது எங்காவது (சென்று)
மறைந்து விட்டதா? [21](இதற்குச்) சரியான காரணத்தைக்
கொண்டுவராவிட்டால் (அதற்கு) கடுந்தண்டனை அளிப்பேன்;
அல்லது அதனை அறுத்து விடுவேன்” என்றார். [22]சிறிது
நேரத்திலேயே அது அவரிடம் வந்து, “நீங்கள் அறிந்திராத ஒன்றை
நான் அறிந்து(வந்து)ள்ளேன். ‘ஸபா’ நகரத்திலிருந்து உறுதியான
ஒரு செய்தியை உங்களிடம் கொண்டு வந்துள்ளேன். [23]அங்கு
அம்மக்களை ஒரு பெண் ஆட்சி செய்து கொண்டிருப்பதைக்
கண்டேன். அவளுக்கு எல்லா வகையான பொருள்களும்
வழங்கப்பட்டுள்ளன. அவள் மாபெரும் சிறப்பணையையும்
பெற்றிருக்கிறாள். [24]அவளும் அவளது சமூகத்தினரும்
அல்லாஹ்வையன்றிச் சூரியனுக்கு தலைவணங்குவதைக் கண்டேன்.
அவர்களின் செயல்களைச் சாத்தான் அவர்களுக்கு அழகுபடுத்தி
நேர்வழியிலிருந்து அவர்களைத் தடுத்துள்ளான். [25]அவர்கள்,
வானங்களிலும், பூமியிலும் மறைத்துள்ளவற்றை வெளிப்படுத்தக்
கூடியவனும் (அவர்கள்) மறைத்துக் கொண்டிருப்பவற்றையும்
வெளிப்படுத்துபவற்றையும் நன்கறிபவனுமாகிய அல்லாஹ்வுக்கு
அவர்கள் தலைவணங்காதவர்களாக உள்ளனர். [26]அல்லாஹ்வைத்
தவிர வேறு இறைவன் இல்லை. அவன் மகத்தான
இறையிருக்கையின் உரிமையாளன்” என்று கூறியது.

[27]சாலமன், “நீ உண்மையைச் சொல்கிறாயா அல்லது பொய்
சொல்கிறாயா என்பதை விரைவில் நாம் கண்டுகொள்வோம்.
[28]நீ எனது இக்கடிதத்தை எடுத்துச்சென்று அவர்களிடம்
போட்டுவிட்டுப் பின்னர் விலகிச்சென்று அவர்கள் என்ன முடிவு
செய்கிறார்கள் என்பதைக் கவனி” என்று கூறினார். [29](அவ்வாறே
அப்பறவை சென்று அக்கடிதத்தை அவர்கள்முன் எறிய, அது
கண்ட) அரசி தன் அவையோரை நோக்கி, “அவையோரே!

*என்னிடம் மதிப்புமிக்க ஒரு கடிதம் போடப்பட்டுள்ளது.*
*[30]அது சாலமனிடமிருந்து வந்துள்ளது. அதில் “அளவற்ற*
*அருளாளனும் நிகரற்ற அன்பாளனுமாகிய அல்லாஹ்வின்*
*பெயரால்...! [31]என்னிடம் செருக்குக் கொள்ளாதீர்கள்*
*(இறைவனுக்கு முற்றிலும்) கட்டுப்பட்டவர்களாக என்னிடம்*
*வந்து விடுங்கள் என்று கூறப்பட்டுள்ளது” எனக் கூறினாள்.*
*[32]மேலும் அவள் “அவையோரே! இதைக் குறித்து எனக்கு*
*ஆலோசனை கூறுங்கள். உங்கள் முன்னிலையில் அல்லாமல்*
*எந்த விஷயத்தையும் நான் தீர்மானிப்பதில்லை” என்றாள்.*
*[33]அவர்கள் “நாம் வலிமை மிக்கவர்களாகவும் போர்த்திறம்*
*படைத்தவர்களாகவும் இருக்கிறோம். (முடிவு செய்யும்) அதிகாரம்*
*உங்களிடமே உள்ளது. எனவே என்ன கட்டளையிட வேண்டும்*
*என்பதை நீங்களே சிந்தித்து முடிவு செய்துகொள்ளுங்கள்”*
*என்று கூறினர். [34]அவள், “அரசர்கள் ஓர் ஊருக்குள் புகுந்தால்*
*அதனைப் பாழாக்கிவிடுவர். அங்குள்ள கண்ணியமானவர்களை*
*இழிவுபடுத்திவிடுவர். அவ்வாறுதான் இவர்களும் செய்வர். [35]நான்*
*அவர்களிடம் ஓர் அன்பளிப்பை அனுப்பித் தூதுவர்கள் என்ன*
*பதிலைக் கொண்டுவருகிறார்கள் என்று பார்க்கப்போகிறேன்!”*
*என்றாள்.*

*[36]தூதுவர் சாலமனிடம் வந்தபோது அவர், “செல்வத்தால்*
*நீங்கள் எனக்கு உதவி செய்ய விரும்புகிறீர்களா? அல்லாஹ்*
*எனக்கு வழங்கியிருப்பது உங்களுக்கு வழங்கியிருப்பதைவிடச்*
*சிறந்ததாகும். உங்கள் அன்பளிப்பைக் கொண்டு நீங்களே*
*மகிழ்ச்சியடைந்து கொள்ளுங்கள். [37]அவர்களிடம் திரும்பிச்*
*செல்லுங்கள். அவர்கள் எதிர்கொள்ளமுடியாத அளவுக்கு*
*நாம் படைகளைத் திரட்டிக்கொண்டு வருவோம். அவர்கள்*
*சிறுமைப்பட்டு இழிவானவர்களாக அங்கிருந்து வெளியேறுமாறு*
*செய்வோம்” என்று கூறினார்.*

*[38](பின்னர்த் தம் அவையோரை நோக்கி) அவையோரே!*
*அவர்கள் (இறைவனுக்குக்) கீழ்ப்படிந்து என்னிடம்*
*வருவதற்குமுன் அவளது சிறப்பணையை உங்களில் யார்*

*என்னிடம் கொண்டு வருவீர்கள்” என்று சாலமன் கேட்டார்.*
*[39]ஆற்றல்மிக்க ஒரு ஜின், “நீர் உம் இடத்திலிருந்து எழுவதற்கு முன்பே நான் அதனை உம்மிடம் கொண்டு வந்துவிடுவேன். நான் அதற்கு ஆற்றலுடையவன், நம்பிக்கைக்குரியவன் ஆவேன்” என்று கூறியது. [40]ஆயினும் வேதஅறிவு பெற்றிருந்த ஒருவர், “நீர் கண் இமைப்பதற்குள் அதனை நான் கொண்டு வந்துவிடுவேன்” என்று கூறினார். (அவ்வாறே வரச்செய்தார்.) அது தனக்கு முன்னால் இருப்பதைக் கண்ட சாலமன், “இது என் இறைவனின் அருளாகும். இதன்மூலம் நான் நன்றி செலுத்துகிறேனா இல்லையா என்பதை அவன் சோதிக்கிறான். எவர் நன்றி செலுத்துகிறாரோ அவர் தம(து நன்மை)க்காகவே நன்றி செலுத்துகிறார். யாரேனும் நன்றி மறந்தால் அவர் அறிந்து கொள்ளட்டும்! என் இறைவன் தேவை (எதுவும்) அற்றவன்; கண்ணியம் மிக்கவன்” என்று கூறினார்.*

*[41]“அவளது சிறப்பணையை (அடையாளம்) மாற்றி அமைத்துவிடுங்கள். அவள் அதனை அறிந்து கொள்கிறாளா அல்லது அறிந்துகொள்ள முடியாதவளாக இருக்கிறாளா? என்பதைப் பார்ப்போம்” என்று சாலமான் கூறினார். [42]அவள் வந்து சேர்ந்தபோது, “உன் சிறப்பணை இவ்வாறுதான் இருக்குமா?” என்று கேட்கப்பட்டது. அதற்கு அவள், “இது அது போன்றுதான் இருக்கிறது. இதற்கு (இந்த அற்புத நிகழ்வுக்கு) முன்பாகவே (உங்கள் மேன்மை குறித்த) அறிவு எங்களுக்கு வழங்கப்பட்டிருந்தது. நாங்கள் இறைவனுக்குக் கீழ்ப்படிந்தவர்களாகவே வந்திருக்கின்றோம்” என்று கூறினாள். [43](அதுவரை) அல்லாஹ்வையன்றி அவள் வணங்கிக் கொண்டிருந்தவைதாம் அவளைத் தடுத்துவிட்டிருந்தன. அவள் மறுப்பாளர்களின் கூட்டத்தில் ஒருத்தியாக இருந்தாள். [44]பின்னர் “இந்த மாளிகையினுள் நுழைவாயாக!” என்று அவளிடம் கூறப்பட்டது. அவள் அதனைப் பார்த்தபோது நீர்த்தடாகம் என்று எண்ணித் தன் ஆடைகளைக் கெண்டைக்கால்களுக்கு மேல் உயர்த்தினாள். அப்போது சாலமன் இது கண்ணாடிகளால்*

*இழைக்கப்பட்ட ஒரு மாளிகை" என்று கூறினார். அவள், "என் இறைவா! நானே எனக்குத் தீங்கிழைத்துக் கொண்டிருந்தேன். இப்போது நான் சாலமனுடன் சேர்ந்து அனைத்துலகங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்து விட்டேன்" என்று கூறினாள்.*

*[45]நாம் ஸமூது சமூகத்தினரிடம் அவர்களின் சகோதரர் ஸாலிஹை (எமது தூதராக) அனுப்பினோம். அவர்களிடம் 'அல்லாஹ்வையே வணங்குங்கள்' என்று அவர் கூறினார். ஆனால் அவர்கள் இரு பிரிவுகளாக (பிளவுபட்டு) தர்க்கம் செய்துகொண்டனர். [46](அப்போது ஸாலிஹ்) "என் சமூக மக்களே! நீங்கள் நன்மை வருவதற்கு முன்னர்த் தீமைக்கு ஏன் அவசரப்படுகிறீர்கள்? உங்கள்மீது அருள்புரியப்படுவதற்காக நீங்கள் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரக்கூடாதா?" என்று கேட்டார். [47]அவர்கள், "நாங்கள் உம்மையும் உம்முடன் இருப்போரையும் கெட்ட சகுனமாகக் கருதுகிறோம்" என்றனர். அவர், "உங்களுடைய கெட்ட சகுனம் அல்லாஹ்விடம் உள்ளது. உண்மையில் நீங்கள் சோதிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்" என்று பதிலுரைத்தார்.*

*[48]அந்நகரில் ஒன்பது பேர் (கொண்ட ஒரு குழுவினர்) இருந்தனர். அவர்கள் நாட்டில் சீர்திருத்தம் செய்யாமல் குழப்பம் செய்து கொண்டிருந்தனர். [49]அவர்கள் "நாம் நம்மிடையே அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டுக் கொள்வோம். (ஸாலிஹ் ஆகிய) அவரையும் அவருடைய மக்களையும் இரவோடு இரவாகக்கொன்றுவிடுவோம். பின்னர் அவரதுபொறுப்பாளரிடம் "அவருடைய குடும்பத்தினர் கொல்லப்பட்டபோது நாங்கள் அங்கு இல்லை, நாங்கள் உண்மையைத்தான் சொல்கிறோம் என்று கூறிவிடுவோம்" எனப் பேசிக் கொண்டனர். [50](இவ்வாறு) அவர்கள் சூழ்ச்சி செய்தனர். அவர்களுக்குத் தெரியாமல் நாமும் ஒரு சூழ்ச்சி செய்தோம். [51]அவர்களின் சூழ்ச்சியின் முடிவு என்னவாயிற்று என்பதை (நபியே! நீர்) எண்ணிப்பாரும்.*

*நாம் அவர்களையும் அவர்களது சமூகத்தினர் அனைவரையும் அடியோடு அழித்துவிட்டோம். [52]இதோ அவர்களின் வீடுகள், அவர்கள் செய்த தீவினைகளின் பயனாகப் பாழடைந்து கிடக்கின்றன. உறுதியாக அறிவுடைய மக்களுக்கு இதில் படிப்பினை அடங்கியுள்ளது. [53]நம்பிக்கைகொண்டு, இறையச்சம் கொண்டிருந்தோரை நாம் காத்துக்கொண்டோம்.*

*[54](நபியே!) லோத்தையும் (நினைவு கூரும்) தம் சமூகத்தினரிடம் அவர் "நீங்கள் அறிந்துகொண்டே வெட்கக்கேடான செயலைச் செய்கிறீர்களா? [55]பெண்களை விட்டுவிட்டு ஆண்களிடம் (பாலியல்) விருப்பங்களைத் தீர்த்துக் கொள்கிறீர்களே! உண்மையில் நீங்கள் அறிவற்ற சமூகமாக இருக்கிறீர்கள்" என்று கூறினார்.*
*[56]அவரின் சமூகத்தினர் (தமக்குள்) "லோத்தின் குடும்பத்தினரை உங்கள் ஊரிலிருந்து வெளியேற்றி விடுங்கள்; அவர்கள் தூயவர்களாம்!" எனப் பேசிக் கொண்டதே அவர்களின் பதிலாக இருந்தது. [57]எனவே அவரையும் அவரது குடும்பத்தினரையும் நாம் காப்பாற்றினோம், அவரது மனைவியைத் தவிர! அவள் பின்தங்கிவிட வேண்டும் என்று நாம் முடிவு செய்துவிட்டோம்.*
*[58]நாம் அவர்களின் மீது பயங்கரமான (சுடுகல்) மழையைப் பொழியச்செய்தோம். எச்சரிக்கை செய்யப்பட்டோருக்கு அது மிகவும் கேடான மழையாக இருந்தது! [59](நபியே!) "அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் தேர்ந்தெடுத்துக் கொண்ட அவனது அடியார்களின் மீது சாந்தி நிலவட்டும்! என்று கூறுவீராக! "அல்லாஹ் சிறந்தவனா அல்லது அவர்கள் இணைவைத்து வணங்கும் தெய்வங்கள் சிறந்தவையா" (என இணைவைப்பாளரிடம்) கேட்பீராக!*

*[60]அன்றி, வானங்களையும் பூமியையும் படைத்து உங்களுக்காக வானத்திலிருந்து மழையைப் பொழிவிப்பவன் அல்லவா (சிறந்தவன்!) அதனைக் கொண்டு எழில்மிக்க தோட்டங்களை நாம் உண்டாக்குகிறோம். (அவற்றிலுள்ள) மரங்களை உங்களால் முளைக்கச் செய்ய இயலாது. அல்லாஹ்வுடன் வேறு இறைவனும் இருக்கிறானா? எனினும் அவர்கள் (அல்லாஹ்வுக்கு*

இணைவைத்து) நேர்வழியிலிருந்து விலகிச் செல்லும் மக்களாக
இருக்கின்றனர். [61]பூமியை வாழ்வதற்குத் தகுந்த இடமாக்கி
அதனிடையே ஆறுகளை ஓடச்செய்து உறுதியான மலைகளையும்
அமைத்து (சுவையால் வேறுபட்ட) இரு கடல்களுக்கிடையே ஒரு
தடுப்பை ஏற்படுத்தியவன் அல்லவா சிறந்தவன்! அல்லாஹ்வுடன்
வேறு இறைவனும் இருக்கிறானா? மாறாக அவர்களில்
பெரும்பாலோர் அறிந்து கொள்வதில்லை.

[62]துன்பத்திற்குள்ளானவனின் அழைப்பைச் செவியுற்று அவன்
துன்பத்தைப் போக்குபவனும் இப்பூமிக்கு முன்னோர்களின்
வாரிசாக உங்களை ஆக்கியவனும் (ஆகிய அல்லாஹ்) அல்லவா
(சிறந்தவன்!) அல்லாஹ்வுடன் வேறு இறைவனும் இருக்கிறானா?
நீங்கள் படிப்பினை பெறுவது மிகமிக அரிதே! [63]நிலத்திலும்
கடலிலுமுள்ள இருள்களில் உங்களுக்கு வழிகாட்டுபவன்
அல்லவா (சிறந்தவன்!) தன்னுடைய அருள்மழைக்கு முன்னர்க்
காற்றுகளை நற்செய்தியாக அனுப்புபவன் அல்லவா (சிறந்தவன்!).
அல்லாஹ்வுடன் வேறு இறைவனும் இருக்கிறானா? அவர்களின்
இணைவைப்பவற்றிலிருந்து அல்லாஹ் மிக உயர்ந்தவன்.
[64]தொடக்கத்தில் படைத்தவனும் (அவை மறைந்தபின்) மீண்டும்
படைக்கவிருப்பவனும் (ஆகிய அல்லாஹ்) அல்லவா சிறந்தவன்!
வானத்திலிருந்தும் பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன்
அல்லவா (சிறந்தவன்!) அல்லாஹ்வுடன் வேறு இறைவனும்
இருக்கிறானா? (நபியே!) "நீங்கள் உண்மையாளர்களாயின்
உங்களது சான்றைக் கொண்டு வாருங்கள்" என நீர் கேட்பீராக.

[65]மேலும் "வானங்களிலும் பூமியிலும் உள்ள மறைவானவற்றை
அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறியமாட்டார்கள். அவர்கள்
(மாய்ந்த பின்பு மீண்டும்) எப்போது எழுப்பப்படுவார்கள்
என்பதையும் அவர்கள் அறியமாட்டார்கள்" என்றும் கூறுவீராக!
[66]மாறாக, மறுமையைப்பற்றிய அவர்களின் அறிவு அற்றுப்
போய்விட்டது. அதுகுறித்து அவர்கள் ஐயத்திலேயே உழன்று
கொண்டிருக்கின்றனர். உண்மையில் அவர்கள் மறுமையின்

*விஷயத்தில் குருடர்களாகவே இருக்கின்றனர். [67]"நாங்களும் எங்கள் முன்னோர்களும் மண்ணோடு மண்ணாகிவிட்டபின் மீண்டும் எழுப்பப்படுவோமா?" என்று மறுப்பாளர்கள் கேட்கின்றனர். [68]"இதற்குமுன் நாங்களும் எங்கள் முன்னோரும் இது குறித்து எச்சரிக்கப்பட்டிருந்தோம். இது முன்னோர்களின் கட்டுக்கதைகளேயாகும்" எனவும் கூறுகின்றனர். [69](நபியே!) "குற்றவாளிகளின் முடிவு என்னவாயிற்று என்பதை பூமியில் பயணம் செய்துப் பாருங்கள்" என்று (அவர்களிடம்) கூறுவீராக!*

*[70](நபியே!) அவர்களைக் குறித்துக் கவலைப்படாதீர். அவர்கள் தீட்டும் திட்டங்களால் மனநெருக்கடிக்குள்ளாகி விடாதீர். [71]"நீங்கள் உண்மையாளர்களாயின் இந்த எச்சரிக்கை வாக்கு எப்போது நிறைவேறும்? என்று கூறுங்கள்" என (ஏளனமாக) அவர்கள் கேட்கின்றனர். [72](நபியே!) "நீங்கள் அவசரப்பட்டு வேண்டும் (தண்டனையில்) சில (இப்போதே) உங்களை வந்தடையவும்கூடும்" என்று கூறுவீராக. [73](நபியே!) உறுதியாக உம் இறைவன் மக்களின் மீது பேரருள்புரிபவன். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை. [74]அவர்களின் உள்ளங்கள் மறைப்பவற்றையும் வெளிப்படுத்துவதையும் உறுதியாக உம் இறைவன் நன்கறிந்தவன். [75]வானத்திலும் பூமியிலும் மறைந்திருக்கும் எந்தப் பொருளும் தெளிவான பதிவேட்டில் பதியப்படாமல் இல்லை.*

*[76]உறுதியாக இந்தக் குர்ஆன் இஸ்ராயீலின் வழித்தோன்றல்கள் முரண்பட்டுக் கொண்டிருக்கும் பெரும்பாலான விஷயங்களைத் தெளிவுபடுத்துகிறது. [77]இது நம்பிக்கையாளர்களுக்கு வழிகாட்டியாகவும் அருளாகவும் இருக்கிறது. [78]உறுதியாக உம் இறைவன் தன் கட்டளையால் அவர்களிடையே தீர்ப்பளிப்பான். அவன் யாவற்றினும் வல்லவன்; முற்றும் அறிந்தவன். [79]எனவே (நபியே!) அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருப்பீராக! உறுதியாக நீர் தெளிவான உண்மையில் இருக்கிறீர். [80]இறந்தவர்களை உம்மால் செவியுறச் செய்யமுடியாது. புறங்காட்டி*

*ஓடும் செவிடர்களையும் உம் அழைப்பைக் கேட்குமாறு செய்யமுடியாது. [81]உம்மால் குருடர்களைக் கெடுவழியிலிருந்து காப்பாற்றி நேர்வழியில் கொண்டுவர முடியாது. எமது வசனங்களின்மீது நம்பிக்கைகொண்டு கீழ்ப்படிந்தவர்களை மட்டுமே உம்மால் செவியுறச் செய்யமுடியும்.*

*[82]அவர்களுக்கெதிரான (இறைவனின்) வாக்கு நெருங்கும் சமயத்தில் அவர்களுக்கு பூமியிலிருந்து ஒரு 'தாப்பாஹ்'வை வெளிப்படுத்துவோம். மக்கள் எமது வசனங்களை நம்பாமல் இருந்தது குறித்து அது அவர்களிடம் பேசும்.* [83](மறுமையாகிய) அந்நாளில் ஒவ்வொரு சமூகத்தினரிலும் எம் வசனங்களைப் பொய்மைப்படுத்தி வந்தவர்களை ஓர் அணியாகத் திரட்டுவோம். (பின்னர்) அவர்கள் (தகுதியைப் பொறுத்துப் பல தரநிலைகளில்) முறைப்படுத்தப்படுவர். [84]அவர்கள் வந்தவுடன், "நீங்கள் என் வசனங்களை முழுமையாக அறிந்துகொள்ளாத நிலையிலேயே அவற்றைப் பொய்மைப்படுத்தி விட்டீர்களா? அல்லது நீங்கள் என்னதான் செய்து கொண்டிருந்தீர்கள்?" என்று இறைவன் கேட்பான். [85]அவர்கள் புரிந்த தீவினையின் காரணமாக அவர்களின் மீதான சாபம் பலித்துவிடும். அப்போது அவர்களால் ஒன்றும் பேச முடியாது. [86]இரவை ஓய்வெடுப்பதற்காகவும் பகலை அவர்களுக்கு ஒளி வழங்குவதற்காகவும் நாம் ஆக்கியுள்ளோம் என்பதை அவர்கள் கவனிக்கவில்லையா? நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு உறுதியாக இதில் பல சான்றுகள் உள்ளன.*

---

***இந்த உலகத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வரவேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவன் முடிவு செய்யும் பொழுது, அந்த இறுதிக் கட்டத்தை காட்டும்விதமாகச் சில அசாதாரணமானவை தோன்றும். அப்படிப்பட்டவற்றில் ஒன்றுதான் 'தாப்பாஹ்' என்பதாக இருக்கலாம். மனிதர்களுக்காகக் கொண்டு வரப்பட்டு, அவர்கள் ஏற்காமல் புறக்கணித்த தூதுச் செய்தி 'தாப்பாஹ்'வினால் அறிவிக்கப்படலாம் என்று கருதத் தோன்றுகிறது. நவீன தொலைத் தொடர்பு அமைப்புகளே 'தாப்பாஹ்' என்று கூறப்பட்டிருக்கலாம். இதுவே மனிதனின் சோதனைக் காலமுடிவை அறிவிக்கும் மணியோசையாக இருக்கலாம்.**

[87]எக்காளம் ஊதப்படும் நாளில் அல்லாஹ் விரும்பியவர்களைத்தவிர வானங்களிலும் பூமியிலும் உள்ளவர்கள் திகிலடைந்து விடுவார்கள். அனைவரும் அவனுக்கு முன்னால் பணிந்து அடங்கி வருவர். [88](நபியே!) மலைகளைக் கண்டு அவை நிலையாக இருக்கும் என்று நீர் எண்ணுகிறீர். ஆனால் அவை மேகம் நகர்வதைப் போன்று செல்லும். இது அல்லாஹ்வின் செயல்திறனாகும். அவன் ஒவ்வொரு பொருளையும் செம்மையாகப் படைத்தவன். நீங்கள் செய்பவற்றை அவன் நன்கு தெரிந்திருப்பவன். [89]எவர் (தம்முடன்) நன்மையைக் கொண்டுவருகிறாரோ அவர்களுக்கு அதைவிடச் சிறந்த கூலி கிடைக்கும். (மறுமையாகிய) அந்நாளின் திடுக்கீட்டிலிருந்து அவர்கள் பாதுகாப்பாக இருப்பார்கள். [90]தீமையைக் கொண்டு வருபவர்கள் முகங்குப்புற நரகத்தில் வீசப்படுவர். “உங்களின் செயல்களுக்குத்தான் நீங்கள் கூலி கொடுக்கப்படுகிறீர்கள்” என்று சொல்லப்படும்.

[91](நபியே! “மக்காவாகிய) இந்நகரின் காவலனான அல்லாஹ்வையே வணங்குமாறு நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். அவன்தான் இதனைப் புனிதமாக்கியவன். எல்லாப் பொருள்களும் அவனுக்கே உரியன. அவனுக்குக் கீழ்ப்படிந்தவனாக இருக்கவேண்டும் எனவும் கட்டளையிடப்பட்டுள்ளேன்” என்று கூறுவீராக! [92]குர்ஆனை எடுத்துரைக்க வேண்டும் என்றும் (நான் கட்டளையிடப்பட்டுள்ளேன்). என்று கூறுவீராக! நேர்வழி பெறுபவர் தமக்காகவே நேர்வழி பெறுகிறார். யாரேனும் வழிதவறினால், நான் எச்சரிக்கை செய்பவன் மட்டுமே” என்று (நபியே!) நீர் கூறிவிடும். [93](நபியே!) “அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே. தன் சான்றுகளை அவன் விரைவில் உங்களுக்குக் காட்டுவான். நீங்கள் அவற்றை அறிந்து கொள்வீர்கள். நீங்கள் செய்பவற்றை அவன் கவனிக்காமலில்லை” என்றும் கூறுவீராக!

# 28. நடந்த செய்திகள் (அல்கஸஸ்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1]*தா – ஸீம் – மீம்.*

[2]*இவை தெளிவான வேதத்தின் வசனங்களாகும். [3](நபியே!) நம்பிக்கைகொண்ட மக்களுக்காக மோசே மற்றும் ஃபாரோ பற்றிய சில செய்திகளை நாம் உமக்குத் தெளிந்த உண்மையுடன் எடுத்துரைக்கிறோம். [4]உறுதியாக ஃபாரோ பூமியில் மிகுந்த செருக்குடன் நடந்துகொண்டான்; அதிலுள்ளோரைப் பல பிரிவினர்களாக்கி அவர்களில் ஒரு பிரிவினரைப் வலுவிழக்கச் செய்யும்பொருட்டு அவர்களின் ஆண் குழந்தைகளைக் கொன்றுவிட்டுப் பெண் குழந்தைகளை (மட்டும்) வாழ விட்டுவந்தான். உறுதியாக அவன் குழப்பம் விளைவிப்பவர்களில் ஒருவனாக இருந்தான். [5](எனினும் அந்தப்) பூமியில் ஒடுக்கப்பட்ட மக்கள்மீது நாம் அருள்புரிந்து அவர்களைத் தலைவர்களாகவும் (அந்தப் பூமிக்கு) வாரிசுகளாக்கவும் விரும்பினோம். [6](மேலும் அந்தப்) பூமியில் அவர்களுக்கு அதிகாரம் வழங்கவும் விரும்பினோம். ஃபாரோவும் ஹாமானும் அவர்களுடைய படையினரும் (ஒடுக்கப்பட்ட மக்களிடம்) எதைக்குறித்து அஞ்சிக் கொண்டிருந்தார்களோ அதை அவர்களுக்குக் காட்டவும் விரும்பினோம்.*

[7]*(மோசே பிறந்தபோது ஃபாரோ குறித்து அஞ்சிய) மோசேயின் அன்னைக்கு, ‘நீர் அவருக்குப் பாலூட்டும்; அவரைக் குறித்து நீர் அஞ்சினால் அவரை ஆற்றில் விட்டுவிடும்; நீர் அச்சப்படவோ கவலைப்படவோ வேண்டாம்; நாம் அவரை உம்மிடமே திரும்பக் கொண்டுவருவோம்; அவரைத் தூதர்களில் ஒருவராகவும் ஆக்குவோம்” என்று உள்ளுதிப்பாகத் தெரிவித்தோம். [8](அவ்வாறே ஆற்றில் விடப்பட்ட) அக்குழந்தையைப் ஃபாரோவுடைய குடும்பத்தார் எடுத்துக்கொண்டனர், (பிற்காலத்தில் அக்குழந்தை) அவர்களின் எதிரியாகவும் அவர்களின் கவலைக்குக் காரணமாகவும் அமைவதற்காக! உறுதியாக ஃபாரோவும் ஹாமானும் அவர்களது*

*படையினரும் (தம் அழிவை உணராது) தவறிழைத்தோர்*
*ஆயினர். [9]ஃபாரோவுடைய மனைவி (தன் கணவனிடம்)*
*"இக்குழந்தை எனக்கும் உங்களுக்கும் கண்குளிர்ச்சியாகவுள்ளது.*
*நீங்கள் இதனைக் கொன்று விடாதீர்கள். இது நமக்குப்*
*பயனளிக்கலாம் அல்லது இதனை நம் மகனாகத் தத்தெடுத்துக்*
*கொள்ளலாம்" என்று கூறினாள். (அதன் விளைவை) அவர்கள்*
*உணர்ந்திருக்கவில்லை.*

*[10]மோசேயின் அன்னையின் உள்ளம் (அவரை ஆற்றில்*
*விட்டபின்)நிம்மதியிழந்துவிட்டது.அவர் நம்பிக்கைகொண்டவராக*
*வேண்டும் என்பதற்காக அவரது உள்ளத்தை நாம்*
*உறுதிப்படுத்தியிராவிட்டால் அவர் அக்குழந்தையைப் பற்றிய*
*விஷயத்தை வெளிப்படுத்தியிருப்பார். [11]அவர் அக்குழந்தையின்*
*சகோதரியிடம் "நீ அக்குழந்தையைப் பின்தொடர்ந்து செல்"*
*என்று கூறினார். எனவே, அவள் அ(தனை எடுத்த)வர்கள்*
*அறியாதவண்ணம் தொலைவிலிருந்து அக்குழந்தையைப் பார்த்துக்*
*கொண்டிருந்தாள். [12]நாம் முன்னரே அக்குழந்தையைப் பாலூட்டும்*
*பெண்கள் (எவருடைய) பாலையும் அருந்தாமல் தடுத்திருந்தோம்.*
*அப்போது அச்சிறுமி அவர்களிடம், "இக்குழந்தையை*
*உங்களுக்காக வளர்க்கப் பொறுப்பேற்றுக்கொள்ளும் ஒரு*
*வீட்டாரைப்பற்றி நான் உங்களுக்குக் கூறட்டுமா? அவர்கள்*
*இக்குழந்தைக்கு நலம்விரும்பியாக இருப்பார்கள்" என்று*
*கூறினாள். [13]இவ்வாறு நாம் அவரை அவரது அன்னையிடம்*
*சேர்த்துவிட்டோம். அது அவரது கண் குளிர்ச்சியடைந்து*
*கவலைப்படாமல் இருப்பதற்காகவும் அல்லாஹ்வின் வாக்குறுதி*
*உண்மையானது என்பதை அவர் அறிந்துகொள்வதற்காகவும்தான்.*
*ஆயினும், அவர்களில் பெரும்பாலோர் (இந்த இரகசியத்தை)*
*அறிந்துகொள்ளவில்லை. [14]மோசே இளம்பருவம் அடைந்து*
*மன முதிர்ச்சியும் பெற்றபோது நாம் அவருக்கு ஞானத்தையும்*
*(கல்வி) அறிவையும் வழங்கினோம். நன்மைசெய்வோருக்கு நாம்*
*இவ்வாறே கூலி வழங்குகிறோம்.*

15(ஒருநாள்) நகரத்தில் மக்கள் அயர்திருந்த நேரத்தில் அவர்
(நகருக்குள்) நுழைந்தார். அங்கு இருவர் சண்டையிட்டுக்
கொண்டிருப்பதைக் கண்டார். ஒருவன் அவருடைய
சமூகத்தைச் சேர்ந்தவன், மற்றொருவர் அவரது எதிரியின்
சமூகத்தைச் சேர்ந்தவன், அவரது சமூகத்தைச் சேர்ந்தவன்
தமது எதிரிக்கெதிராக அவரிடம் உதவி கோரினான். எனவே
மோசே அவ்வெதிரியை ஓங்கிக் குத்தினார். அதனால்
அவன் இறந்துவிட்டான். (அப்போது) மோசே, "இது
சாத்தானின் செயலாகும், உறுதியாக அவன் வழிகெடுக்கும்
வெளிப்படையான பகைவன் ஆவான்" என்று கூறினார்.
16(மேலும்) அவர், "என் இறைவா! எனக்கு நானே தீங்கிழைத்துக்
கொண்டேன். எனவே என்னை மன்னித்து விடுவாயாக!" என்று
இறைஞ்சினார். இறைவன் அவரை மன்னித்து விட்டான்.
உறுதியாக அவன் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.
17(மோசே இறைவனிடம்) "என் இறைவா! நீ என்மீது
அருள்புரிந்ததால் இனி நான் குற்றவாளிகளுக்கு ஒருபோதும்
உதவிபுரிய மாட்டேன்" என்றும் கூறினார்.

18(மறுநாள்) காலையில் நகரத்தில் (என்ன நடக்குமோ என்ற)
அச்சத்துடன் அவர் எச்சரிக்கையாக நடந்து கொண்டிருந்தார்.
அப்போது முந்தைய நாள் உதவி கோரிய அதே மனிதன்
இன்றும் உதவி கோரிக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தான்.
அப்போது மோசே அவனிடம், "உறுதியாக நீ வெளிப்படையான
கலகக்காரனாக இருக்கிறாய்" என்றார். 19எனினும் அவனுக்கும்
தனக்கும் எதிரியாயிருப்பவனை அவர் பிடிக்க முயன்றபோது,
அ(வரது இனத்த)வன், (தன்னையே அவர் பிடிக்க வருவதாகத்
தவறாகக் கருதி) "மோசே! நேற்று நீர் ஒருவனைக் கொன்றதைப்
போன்று என்னையும் கொல்ல விரும்புகின்றீரா? பூமியில்
அடக்குமுறையாளராகத்தான் நீர் இருக்கவிரும்புகிறீர். சீர்திருத்தம்
செய்பவராக இருக்க நீர் விரும்பவில்லை" என்று கூச்சலிட்டான்.
20(மோசே செய்த கொலை பற்றிய உண்மை இக்கூச்சலால்
நகரத்தில் பரவி விடவே தலைவர்கள் அவரைக் கொலை செய்யத்

*திட்டமிட்டனர். இதை அறிந்து) நகரத்தின் கடைக்கோடியிலிருந்து ஒருவர் ஓடோடி வந்து, "மோசே உம்மைக் கொன்றுவிட வேண்டும் என்று அரசவையினர் திட்டமிட்டுக் கொண்டிருக்கின்றனர். எனவே, நீர் வெளியேறிவிடும். (உண்மையிலேயே) நான் உம் நலம்விரும்பியாக இருக்கிறேன்" என்று கூறினார். [21]எனவே அவர் அஞ்சி எச்சரிக்கையுடன் நகரத்தைவிட்டு வெளியேறினார். "என் இறைவா! தீவினைபுரியும் இந்த மக்களிடமிருந்து என்னைக் காப்பாற்றுவாயாக!" என்று அவர் இறைஞ்சி வேண்டினார்.*

*[22]அவர் (எகிப்தை விட்டு) மத்யனை நோக்கிச் செல்லக் கருதிய சமயத்தில் "என் இறைவன் எனக்கு நேர்வழியைக் காட்டக்கூடும்" என்று தமக்குள் கூறிக் கொண்டார். [23](அவ்வாறு சென்று சேர்ந்த) அவர் மத்யன் நகரத்தில் இருந்த நீர்நிலைக்கு வந்தபோது, அங்கு ஒரு கூட்டம் தங்கள் கால்நடைகளுக்குத் தண்ணீர் புகட்டிக் கொண்டிருப்பதைக் கண்டார். அவர்களிடமிருந்து விலகி இருபெண்கள் (தங்கள் ஆட்டுமந்தையைத்) தடுத்து நிறுத்திவைத்துக் கொண்டிருப்பதையும் கண்டார். அவர் அப்பெண்களிடம் "உங்கள் பிரச்சினை என்ன?" என்று கேட்டார். அவர்கள், "இம்மேய்ப்பர்கள் இங்கிருந்து தங்கள் கால்நடைகளை விலக்கிச் செல்லாதவரை நாங்கள் (ஆடுகளுக்குத்) தண்ணீர் புகட்ட முடியாது. எங்களின் தந்தையோ மிகவும் வயதானவராக இருக்கிறார் (அவர் இங்கு வரமுடியாது)" என்றனர். [24]எனவே (அவர்களின் கால்நடைகளுக்கு) அவர் தண்ணீர் (இறைத்துப்) புகட்டிவிட்டு (ஒருமர) நிழலில் ஒதுங்கி "என் இறைவா! நீ எனக்கு எந்த நன்மையை அருளினாலும் அது எனக்குத் தேவைப்படும் நிலையில்தான் நான் இருக்கிறேன்" என்று இறைஞ்சி வேண்டினார்.*

*[25]அவ்விரு பெண்களில் ஒருவர் நாணத்தோடு நடந்துவந்து அவரிடம், "எங்(கள் கால்நடை)களுக்கு நீங்கள் தண்ணீர் புகட்டியதற்கான கூலியைத் தருவதற்காக என் தந்தை உங்களை அழைக்கிறார்" என்று கூறினார். மோசே அவரிடம் சென்றபோது*

*தமக்கு நடந்த அனைத்துச் செய்திகளையும் எடுத்துரைத்தார்.
அவர், "அஞ்சாதீர், தீவினைபுரியும் மக்களிடமிருந்து நீர்
தப்பிவிட்டீர்" என்று கூறினார். [26]அவ்விரு பெண்களில் ஒருவர்
"தந்தையே, இவரை வேலைக்கு அமர்த்திக்கொள்ளுங்கள்.
வலிமையானவராகவும் நம்பிக்கைக்குரியவராகவும் இருப்பவர்தான்
நீங்கள் வேலைக்கு அமர்த்திக் கொள்ளத் தகுந்தவர் ஆவார்"
என்று கூறினார். [27]அவர், (மோசேவிடம்) "நீர் எட்டு ஆண்டுகள்
என்னிடம் பணிபுரிய வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில்
என்னுடைய இவ்விரு மகள்களில் ஒருவரை உமக்குத் திருமணம்
செய்துதர நான் விரும்புகிறேன். நீர் பத்து ஆண்டுகள்
நிறைவுசெய்தால் அது உமது விருப்பமாகும். நான் உம்மைச்
சிரமப்படுத்த விரும்பவில்லை. அல்லாஹ் விரும்பினால் நான்
நேர்மையாளர்களில் ஒருவன் என்பதை நீர் கண்டுகொள்வீர்"
என்று கூறினார். [28]அதற்கு மோசே, "இது (இவ்வுடன்படிக்கை)
எனக்கும், உங்களுக்கும் இடையில் உறுதியாகி விட்டது. இரு
நிபந்தனைகளில் எதையும் நான் நிறைவேற்றலாம்; என் மீது எந்தக்
கட்டாயமும் இல்லை. நாம் பேசிக் கொண்டதற்கு அல்லாஹ்வே
சாட்சியாவான்" என்று கூறினார்.*

*[29]மோசே தம் தவணையை நிறைவு செய்துவிட்டுத் தம்
குடும்பத்துடன் பயணம் செய்தபோது (ஸினாய்) மலையின்
பக்கம் ஒரு நெருப்பைக் கண்டார். அவர் தம் குடும்பத்தாரிடம்,
"நீங்கள் இங்கேயே இருங்கள். நான் (அங்கே ஒரு) நெருப்பைக்
காண்கிறேன். நான் அங்கிருந்து ஏதேனும் செய்தியைக்
கொண்டுவரலாம்; அல்லது நீங்கள் குளிர்காய்வதற்காக ஒரு
நெருப்புக் கொள்ளியையேனும் உங்களிடம் கொண்டுவரக்கூடும்"
என்று கூறினார். [30]அவர் அங்குச் சென்றதும் பள்ளத்தாக்கின்
வலக்கரையில், பேறுபெற்ற பகுதியிலுள்ள ஒரு மரத்திலிருந்து,
"மோசே! நான்தான் அல்லாஹ், அனைத்துலகங்களின்
உரிமையாளன்" என்று கூறி அழைக்கப்பட்டார். [31]"உம்
கைத்தடியை(க் கீழே) எறியும்" (என்று கட்டளையிடப்பெற்றார்.*

*அவ்வாறு அவர் அதை எறிந்தபோது) அது பாம்பைப் போல் அசைந்து நெளிவதைக் கண்டு அஞ்சிப் பின்வாங்கி ஓடினார்; திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. (அப்போது) “மோசே! அஞ்சவேண்டாம். முன்னால் வாரும். நீர் மிகவும் பாதுகாப்பாக இருக்கின்றீர்” (என்று கூறப்பட்டது).*
*[32]“உம் கையை அக்குளில் வையும். (வெளியில் நீர் எடுக்கும்போது) அது குறை ஏதுமற்ற வெண்மையாக அது வெளிப்படும். (உமக்கு அச்சம் ஏற்பட்டால்) அச்சத்தைப் போக்கிக்கொள்வதற்காக உமது தோள்களை உமது விலாப்பக்கம் ஒடுக்கிக்கொள்ளும். ஃபாரோவிடமும் அவனது அவையோர்களிடமும் (கொண்டு) செல்வதற்காக இவையிரண்டும் உமது இறைவனிடமிருந்து வந்துள்ள சான்றுகளாகும். உறுதியாக அவர்கள் கீழ்ப்படியாத மக்களாக இருக்கிறார்கள்” என்றும் கூறப்பட்டது.*

*[33]“என் இறைவனே, அவர்களில் ஒருவனை நான் கொன்றுவிட்டேன். எனவே அவர்கள் என்னைக் கொன்று விடுவார்களோ என்று அஞ்சுகிறேன்.*
*[34]என் சகோதரர் ஆரோன் என்னைவிடத் தெளிவாகப் பேசுபவர். எனவே அவரை நீ எனக்கு உதவியாக அனுப்பி வைப்பாயாக! அவர் எனக்கு உறுதுணையாக இருப்பார். (நான் தனியே சென்றால்) மக்கள் என்னைப் பொய்யர் என்று மறுத்து விடுவார்களோ என நான் அஞ்சுகிறேன்” என்று மோசே கூறினார்.*
*[35](அதற்கு) அவன், “நாம் உம் சகோதரரைக் கொண்டு உம்முடைய தோள்களை வலுப்படுத்துவோம். அவர்கள் உங்களை நெருங்க முடியாதவாறு உங்கள் இருவருக்கும் அதிகார வலிமையை வழங்குவோம். நீங்கள் எம் சான்றுகளுடன் (செல்லுங்கள்.) நீங்களும் உங்களைப் பின்பற்றியோரும்தாம் வெற்றிபெறுவீர்கள்” என்று கூறினான்.*

*[36]எம் தெளிவான சான்றுகளுடன் மோசே அவர்களிடம் சென்றபோது அவர்கள், “இது புனையப்பட்ட சூனியம்தான். எங்களுடைய முன்னோர்களிடம் இது குறித்து எதுவும் நாங்கள் கேள்விப்பட்டதில்லை” என்று கூறினர்.*
*[37]மோசே “என் இறைவன் தன்னிடமிருந்து நேர்வழிபெற்று வந்தவர் யார் என்பதையும்*

*மறுமையின் வீடு யாருக்குக் கிடைக்கும் என்பதையும் நன்கறிவான். உறுதியாகத் தீவினையாளர்கள் வெற்றி பெறமாட்டார்கள்" என்று மோசே கூறினார்.*
*[38]ஃபாரோ, அவையோரே! உங்களுக்கு என்னைத்தவிர வேறு இறைவன் இருப்பதாக நான் அறியவில்லை. ஹாமானே! களிமண்ணுக்கு (செங்கல் சூளைக்கு) நெருப்பு மூட்டி (அச்செங்கற்களைக் கொண்டு) ஓர் உயர்ந்த கட்டடத்தை எழுப்பு. நான் (அதன் மீதேறி) மோசேயுடைய இறைவனைப் பார்க்கவேண்டும், நான் மோசேயை ஒரு பொய்யராகத்தான் கருதுகிறேன்" என்று ஃபாரோ கூறினான்.*

*[39]அவனும் அவனது படைகளும் பூமியில் நியாயமின்றி செருக்குக்கொண்டனர். அவர்கள் எம்மிடம் திரும்பக்கொண்டு வரப்படப் போவதில்லை என்றும் எண்ணிக்கொண்டனர்.*
*[40]எனவே நாம் அவனையும் அவனது படைகளையும் பிடித்துக் கடலில் எறிந்து (மூழ்கடித்து) விட்டோம். அத்தீவினையாளர்களின் முடிவு என்னவாயிற்று என்பதை (நபியே! நீர்) கவனியும்.*
*[41]நரகத்தின்பால் (மக்களை) அழைக்கும் தலைவர்களாகவே (இவ்வுலகில்) அவர்களை ஆக்கினோம் மறுமை நாளில் அவர்கள் உதவி அளிக்கப்படமாட்டார்கள்.*
*[42]இவ்வுலகில் நாம் அவர்களைச் சாபம் பின்தொடரும்படிச் செய்தோம். மறுமை நாளில் அவர்கள் மிகவும் கேடான நிலையில் இருப்பார்கள்.*
*[43]நாம் முந்தைய சமூகங்களை அழித்தபிறகு மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். அது மக்கள் படிப்பினை பெறும் வண்ணம் ஆழ்ந்த பார்வை தருவதாகவும் வழிகாட்டியாகவும் அருட்கொடையாகவும் திகழ்ந்தது.*

*[44](நபியே! சினாய் மலையில்) நாம் மோசேவுக்குக் கட்டளைகளை வழங்கியபோது (அந்த) மலையின் மேற்குப் பகுதியில் நீர் இருக்கவில்லை; அதனைப் பார்த்துக் கொண்டிருந்தவர்களில் ஒருவராகவும் (நீர்) இருக்கவில்லை.*
*[45]ஆயினும் (அதனை எம் அறிவிப்புகள் மூலம் உமக்குத் தெரிவித்தோம், அவர்களுக்குப் பின்னர்ப்) பல்வேறு சமூகத்தினரை நாம் படைத்தோம். அவர்கள்*

மீது பல காலங்களும் கடந்துவிட்டன. நீர் மத்யன்வாசிகளுடன் வாழ்ந்து எமது வசனங்களை எடுத்துக்கூறுபவராக இருக்கவில்லை. ஆயினும் நாம்தாம் தூதர்களை அனுப்பி வந்திருக்கிறோம்.
46நாம் மோசையை அழைத்தபோது (ஸினாய்) மலைப் பகுதியில் நீர் இருக்கவில்லை. ஆயினும் (அந்த விவரங்களைத் தெரிவிக்கும்) இவ்வறிவிப்பு உம் இறைவனின் அருளாகும். இதற்கு முன் எச்சரிப்பவர் எவரும் வராத இந்த மக்களை அவர்கள் படிப்பினை பெறும்பொருட்டு நீர் எச்சரிக்கவேண்டும் என்பதற்காகத்தான் (அறிவிக்கப்படுகிறது.)

47இவர்கள் தாம் செய்த தீவினையால் ஏதேனும் துன்பம் தமக்கு நேர்ந்துவிட்டால் "எங்கள் இறைவா! எங்களிடம் ஏன் ஒரு தூதரை அனுப்பவில்லை? நாங்கள் உன் வசனங்களைப் பின்பற்றி நம்பிக்கையாளர்களாக ஆகியிருப்போமே!" என்று கூறுவர். (ஆகவேதான் உம்மை எம்முடைய தூதராக இவர்களிடம் அனுப்பிவைத்தோம்.)
48ஆயினும் எம்மிடமிருந்து சத்தியம் இவர்களிடம் வந்தபோது "மோசேயுக்கு வழங்கப்பட்டதுபோன்று இவருக்கும் (முஹம்மதுக்கும் அற்புதங்கள்) ஏன் வழங்கப்படவில்லை?" என்று கேட்கின்றனர். இதற்கு முன்னர் மோசேவுக்கு வழங்கப்பட்ட(வேதத்)தை அ(க்காலத்த)வர்கள் மறுக்கவில்லையா? "(இந்தக் குர்ஆனும் அந்தத் தவ்ராத்தும்) ஒன்றையொன்று உறுதிப்படுத்தக்கூடிய இரண்டு சூனியங்கள்தாம்" என்றும் இவை அனைத்தையும் நாங்கள் மறுக்கிறோம்" என்றும் இவர்கள் கூறுகின்றனர்.

49(ஆகவே, நபியே! அவர்களிடம்) "நீங்கள் உண்மையாளர்களாயின் இவ்விரண்டையும்விடச் சிறந்த நேர்வழி காட்டக்கூடிய (ஒரு) வேதத்தை இறைவனிடமிருந்து கொண்டு வாருங்கள், நான் அதனைப் பின்பற்றுகிறேன்" என்று நீர் கூறும்.
50அவர்கள் உமக்குப் பதிலளிக்கவில்லை என்றால் அவர்கள் தம் மன விருப்பங்களைத்தான் பின்பற்றுகின்றனர் என்று புரிந்துகொள்ளும். அல்லாஹ்வின் வழிகாட்டுதலின்றித் தன்

மன விருப்பத்தைப் பின்பற்றுபவனைவிட வழிகெட்டவன் யார்?
அல்லாஹ் தீவினைபுரியும் மக்களுக்கு நேர்வழி காட்டுவதில்லை.
[51]அவர்கள் படிப்பினை பெறும்பொருட்டுத் தொடர்ந்து
அவர்களுக்கு எம் (வேத)வாக்குகளை அனுப்பி வந்தோம்.

[52]நாம் இதற்கு முன்னர் யாருக்கு வேதம் வழங்கியிருந்தோமோ
அவர்கள் (குர்ஆன் ஆகிய) இதன்மீது நம்பிக்கை கொள்கின்றனர்.
[53]அவர்களிடம் இது ஓதிக் காட்டப்படும்போது “நாங்கள் இதன்மீது
நம்பிக்கை கொண்டோம். இது எங்கள் இறைவனிடமிருந்து
வந்துள்ள உண்மையாகும். நாங்கள் முன்னரே (இதனை எங்கள்
வேதத்திலிருந்து அறிந்து) முற்றிலும் கீழ்ப்படிந்தவர்களாகவே
இருந்து வருகிறோம்” என்று கூறுவர். [54]அவர்கள் நிலைகுலையாமல்
இருந்ததனால் அவர்களுக்குரிய கூலி இரு மடங்காக வழங்கப்படும்.
அவர்கள் நன்மையைக் கொண்டு தீமையைத் தடுக்கின்றனர். நாம்
வழங்கியவற்றிலிருந்து (அறச்)செலவும் செய்கின்றனர். [55]அவர்கள்
வீணான பேச்சைச் செவியுற்றால் அவற்றைப் புறக்கணித்துவிடுவர்.
எங்கள் செயல்கள் எங்களுக்கு; உங்கள் செயல்கள் உங்களுக்கு;
உங்கள்மீது சாந்தி நிலவட்டும். நாங்கள் அறிவற்றவர்களை
(அவர்களுடன் வாதிடுவதை) விரும்பமாட்டோம்” என்று
சொல்வர். [56](நபியே!) நீர் விரும்பியோருக்கு நேர்வழி அளித்திட
உம்மால் முடியாது. ஆயினும் தான் விரும்பியோருக்கு அல்லாஹ்
நேர்வழியை அளிக்கிறான். நேர்வழி பெறக்கூடியவர்கள்
யார் என்பதை அவன்தான் நன்கறிந்தவன். [57](நபியே!
மக்காவாசிகளான) இவர்கள் “உம்முடன் சேர்ந்து நாங்களும்
இவ்வழிகாட்டுதலின்படி நடந்தால் எங்கள் ஊரிலிருந்து நாங்கள்
தூக்கி எறியப்பட்டு விடுவோம்” என்று கூறுகின்றனர். நாம்
இவர்களுக்கு அமைதியான பாதுகாப்பான (இந்தப்) புனித
பூமியை அளிக்கவில்லையா? இங்கு எம்மிடமிருந்து (இவர்களுக்கு)
உணவாக அனைத்து கனிகளும் கொண்டு வரப்படவில்லையா?
ஆயினும் இவர்களில் பெரும்பாலோர் அறியமாட்டார்கள்.

58தங்களது வாழ்க்கை வசதிகள் குறித்துச் செருக்குக்
கொண்டிருந்த எத்தனையோ ஊர்(மக்)களை நாம் அழித்து
விட்டோம். (இதோ!) இவைதாம் அவர்கள் வாழ்ந்திருந்த
இடங்கள். அவர்களுக்குப்பின் மிகச்சிலரே அன்றி யாருமே
அங்குக் குடியிருக்கவில்லை; அவற்றுக்கு நாமே வாரிசானோம்.
59(நபியே!) தன் வசனங்களை ஓதிக்காட்டக்கூடிய ஒரு தூதரை
ஒரு சமூகத்தினரின் தலையாய நகருக்கு அனுப்பாதவரை உம்
இறைவன் எந்த ஊராரையும் அழித்துவிடமாட்டான். ஊர்மக்கள்
தீவினையாளர்களாக இருந்தாலன்றி நாம் அவர்களை அழித்துவிட
மாட்டோம்.

60உங்களுக்கு வழங்கப்பட்டிருக்கும் பொருள்கள் எல்லாம்
உலக வாழ்வின் இன்பங்களும் அதன் அலங்காரமும்தான்.
அல்லாஹ்விடம் இருப்பவைதாம் மிகச் சிறந்தவை; நிலையானவை.
நீங்கள் (இதைப்) புரிந்துகொள்ள மாட்டீர்களா? 61எவருக்கு
நாம் அழகிய வாக்குறுதியளித்து அதனை அவர் (மறுமையில்)
பெறுபவராக இருக்கிறாரோ அவரும் எவருக்கு உலக வாழ்வின்
இன்பங்களை மட்டுமே நாம் வழங்கிப் பின்னர் மறுமை நாளில்
எம்முன் (தண்டனைக்காக) நிறுத்தப்படுபவராக இருக்கிறாரோ
அவரும் சமமாவார்களா?

62அவன் (விசாரணைக்காக) அவர்களை அழைக்கிற
நாளில் "எனக்கு இணையானவர்கள் என்று நீங்கள் கூறிக்
கொண்டிருந்தீர்களே, அவர்கள் எங்கே?" என்று கேட்பான்.
63வேதனை உறுதியாகி விட்ட (இணைவைக்கப்பட்டோராகிய)
அவர்கள், "எங்கள் இறைவா! இவர்களைத்தாம் நாங்கள்
வழிகெடுத்தோம்; நாங்கள் வழிகெட்டவாறே இவர்களையும்
வழிகெடுத்தோம். (இப்போது) இவர்களிடமிருந்து நாங்கள்
விலகி(உன்னிடம் ஒதுங்கி)க் கொள்கிறோம். இவர்கள் எங்களை
வணங்கிக் கொண்டிருக்கவில்லை" என்று (மறுத்துக்) கூறுவர்.

64பின்னர் "நீங்கள் எனக்கு இணையாக்கிய தெய்வங்களை
அழையுங்கள்" என்று (மனிதர்களாகிய) அவர்களிடம்
கூறப்படும். அப்போது அவர்கள் (தம்) இணைத் தெய்வங்களை

அழைப்பார்கள். ஆனால் அவர்கள் அவ்வழைப்புக்கு
விடையளிக்கமாட்டார்கள். (அதற்குள்) அந்த மனிதர்கள் தங்கள்
வேதனையைக் காண்பார்கள். அந்தோ! அவர்கள் நேர்வழி
பெற்றிருக்கக் கூடாதா? 65அவர்களை அழைக்கும் நாளில் அவன்
“(நாம் அனுப்பிய) தூதர்களுக்கு நீங்கள் என்ன பதிலளித்தீர்கள்?”
என்று கேட்பான். 66(மறுமையாகிய) அந்நாளில் அவர்களின்
பேச்சுக்கள் அனைத்தும் மறக்கடிக்கப்பட்டுவிடும்; அவர்கள்
ஒருவரையொருவர் விசாரித்துக்கொள்ளவும் முடியாது.
67ஆயினும் (இவ்வுலக வாழ்வில்) பாவமன்னிப்புக் கோரி
(இறை)நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர் வெற்றி பெற்று
விடுவார்.

68(நபியே!) உம் இறைவன் தான் விரும்பியதைப்
படைக்கிறான்; (தன் பணிக்காகத்) தான் விரும்பியவர்களையும்
தேர்ந்தெடுக்கின்றான். தேர்ந்தெடுக்கும் உரிமை அவர்களுக்கு
இல்லை. அவர்கள் இணைவைப்பவற்றிலிருந்து அல்லாஹ்
மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்; மிக உயர்ந்தவன்.
69அவர்கள் தங்கள் உள்ளங்களில் மறைப்பவற்றையும்
வெளிப்படுத்துபவற்றையும் உம் இறைவன் நன்கறிவான்.
70அவன்தான் அல்லாஹ்! அவனைத்தவிர வேறு இறைவன்
இல்லை. இம்மையிலும் மறுமையிலும் புகழனைத்தும் அவனுக்கே!
தீர்ப்பளிக்கும் அதிகாரம் அவனுக்கே உரியது. அவனிடமே
நீங்கள் கொண்டு வரப்படுவீர்கள்.

71(நபியே!) நீர் அவர்களிடம் “நீங்களே கூறுங்கள்.
அல்லாஹ் உங்களுக்கு இரவை மறுமை நாள் வரை நிலையாக
நீட்டித்துவிட்டால் உங்களுக்கு வெளிச்சத்தைக் கொண்டுவர
அல்லாஹ்வையன்றி வேறு இறைவன் இருக்கிறானா? நீங்கள்
செவியுறவே மாட்டீர்களா?” என்று கேளும். 72மேலும்
“நீங்களே கூறுங்கள். அல்லாஹ் உங்களுக்குப் பகலை மறுமை
நாள்வரை நிலையாக நீட்டித்துவிட்டால் நீங்கள் ஓய்வு
பெறுவதற்கான இரவைக் கொண்டுவர அல்லாஹ்வையன்றி

*வேறு இறைவன் இருக்கிறானா? நீங்கள் சிந்தித்துப் பார்க்கவே
மாட்டீர்களா?" எனவும் கேளும்.*
[73]*அவன்தான் தனது அருளால்
இரவையும் பகலையும் ஏற்படுத்தினான். அது நீங்கள் நிம்மதி
கொள்வதற்காகவும் அவனது அருளைத் தேடுவதற்காகவும்
நீங்கள் நன்றி செலுத்துவோராகத் திகழ வேண்டும்
என்பதற்காகவும்தான்.*

[74]*(நபியே!) அவன் அவர்களை அழைக்கிற நாளில் "எனக்கு
இணையானவர்கள் என்று கூறிக்கொண்டிருந்தீர்களே அவர்கள்
எங்கே?" என்று கேட்பான்.*
[75]*ஒவ்வொரு சமூகத்திலிருந்தும்
(அச்சமூகத்திற்கு நாம் அனுப்பிய தூதராகிய) ஒருவரைச்
சாட்சியாளராக வைத்துக் கொள்வோம். (பின்னர் அம்மக்களிடம்)
உங்களின் சான்றைக் கொண்டு வாருங்கள்" என்று கேட்போம்.
உண்மை(யான இறைமை) அல்லாஹ்வுக்கே உரியது என்பதை
அவர்கள் அறிந்து கொள்வார்கள். அவர்கள் புனைந்து
வைத்திருந்தவை யாவும் அவர்களிடமிருந்து மறைந்துவிடும்.*

[76]*மோசேயின் சமூகத்தைச் சார்ந்தவன், கோரா. ஆயினும்
அவன் அவர்களிடம் வரம்பு மீறினான். நாம் அவனுக்குப்
பெரும் கருவூலங்களை அளித்திருந்தோம். வலிமை வாய்ந்த
ஒரு குழுவினர்கூட அவற்றின் சாவிகளைச் சிரமத்துடன்தான்
சுமக்க வேண்டியிருந்தது. அவனது சமூகத்தினர் அவனிடம்,
"செருக்குக் கொள்ளாதே! உறுதியாக அல்லாஹ் செருக்குக்
கொள்பவர்களை விரும்பமாட்டான்.*
[77]*அல்லாஹ் உனக்கு
வழங்கியுள்ள(செல்வத்)தைக் கொண்டு மறுமை (சொர்க்க)
வீட்டைத் தேடிக்கொள். இவ்வுலகில் (ஈகையால் நீ
தேடிக்கொண்ட) உனது பங்கை (அங்குக் கொண்டு செல்ல)
மறந்துவிடாதே அல்லாஹ் உனக்கு நன்மைபுரிந்தவாறே நீயும்
மக்களுக்கு நன்மை செய். உலகில் குழப்பத்தை விளைவிக்க
முனையாதே! உறுதியாக அல்லாஹ் குழப்பம் செய்வோரை
விரும்பமாட்டான்" என்று கூறினர்.*

[78]*அதற்கு அவன், "இச்செல்வங்கள் அனைத்தும் என்
அறிவால்தான் எனக்குக் கிடைத்துள்ளன" என்றான். இதற்கு
முன்னர் அவனைவிட மிகுந்த வலிமையும் பெருஞ்செல்வங்களும்*

*கொண்டிருந்த எத்தனையோ சமூகத்தினரை அல்லாஹ் அழித்துள்ளான் என்பதை அவன் அறிந்துகொள்ளவில்லையா? (மறுமையில்) குற்றவாளிகளிடம் அவர்கள் புரிந்த குற்றங்கள் குறித்து விளக்கம் கேட்கப்படமாட்டாது.*

[79]*பிறகு (ஒருநாள்) அவன் தன் முழு அலங்காரத்துடன் தன் மக்களுக்கு முன்னால் வந்தான். (அவர்களில்) இவ்வுலக வாழ்க்கையைப் பெரிதும் விரும்பியவர்கள், “கோராவுக்குக் கொடுக்கப்பட்டது போன்று நமக்கும் கொடுக்கப்பட்டிருக்கக் கூடாதா? உறுதியாக அவன் பெரும் பேறுபெற்றவன்” என்று கூறினர். [80]ஆயினும் (அவர்களில்) ஞானம் வழங்கப்பட்டவர்கள், “உங்களுக்குக் கேடுதான். (ஓரிறை)நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்களுக்கு (மறுமையில்) அல்லாஹ் வழங்கும் கூலி (இதைவிடச்) சிறந்ததாகும். அது பொறுமையாளர்களுக்கு மட்டுமே கிடைக்கும்” என்று கூறினர்.*

[81]*பின்னர் நாம் அவனையும் அவனது வீட்டையும் பூமியில் புதையச் செய்துவிட்டோம். அல்லாஹ்வைத் தவிர அவனுக்கு உதவி செய்யும் கூட்டத்தார் எவரும் அவனுக்கு இல்லை. அவனால் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும் முடியவில்லை.*
*[82]அவனைப் போல ஆகிவிட வேண்டும் என்று முந்தைய நாள் ஆசை கொண்டவர்கள், (அவனுக்கு நேர்ந்த அழிவைக் கண்டு) “அந்தோ! அல்லாஹ் தன் அடியார்களில் தான் விரும்பியோருக்கு வாழ்வாதாரத்தை விரிவாக்குகிறான். தான் விரும்பியோருக்கு அதனைச் சுருக்கி விடுகிறான். அல்லாஹ் நமக்கு அருள் செய்திராவிட்டால் நம்மையும் அவன் பூமியில் புதையச் செய்திருப்பான். அந்தோ! உறுதியாக மறுப்பாளர்கள் வெற்றி பெறமாட்டார்கள்” என்று கூறினர்.*

[83]*பூமியில் செருக்குக் கொள்வதையும் குழப்பம் செய்வதையும் விரும்பாதவர்களுக்குத்தான் நாம் மறுமை வீட்டை ஏற்படுத்தியுள்ளோம். இறுதி (நன்)முடிவு*

*இறையச்சமுடையோருக்கே! [84]எவர் நன்மையைக் கொண்டு வருகிறாரோ அவருக்கு (மறுமையில்) அதைவிடச் சிறந்த கூலி உண்டு. எவர் தீமையைக் கொண்டு வருகிறாரோ – (அவரைப்போல்) தீமை செய்தோர்க்கு அவர்களுடைய தீமைகளின் அளவுக்கு மட்டுமே கூலி கொடுக்கப்படும்.*

*[85](நபியே!) இந்தக் குர்ஆனை உம்மீது கடமையாக்கியவன் உம்மை ஒரு நல்ல முடிவின்பால் கொண்டு சேர்த்தே தீருவான். (ஆகவே) நீர் "எவர் நேர்வழியைக் கொண்டு வந்துள்ளார், எவர் வெளிப்படையான கெடுவழியில் இருக்கிறார் என்பதை என் இறைவனே நன்கறிவான்" என்று கூறும். [86]இவ்வேதம் உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப்படும் என்பதை நீர் எதிர்பார்த்திருக்கவில்லை. ஆயினும் இது உம் இறைவனின் அருளிலிருந்து (வழங்கப்படுகிறது.) எனவே நீர் (ஓரிறை) மறுப்பாளருக்குத் துணை புரியாதீர். [87]இறை வசனங்கள் உமக்கு அருளப்பட்டபின் அவற்றிலிருந்து அவர்கள் உம்மைத் தடுக்க விடாதீர். உம் இறைவனின் பால் (மக்களை) அழைப்பீராக! இணைவைப்பாளர்களுடன் ஒருபோதும் இணைந்து விடாதீர். [88]அல்லாஹ்வுடன் வேறு எந்த இறைவனையும் அழைக்காதீர். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனைத் தவிர அனைத்தும் அழிந்துவிடக் கூடியவையே; தீர்ப்பளிக்கும் அதிகாரம் அவனுக்கே உரியது. அவனிடமே நீங்கள் (அனைவரும்) திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்.*

## 29. சிலந்திப் பூச்சி (அல்அன்கபூத்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]அலிஃப் – லாம் – மீம்.*

*[2]"நாங்கள் (இறை)நம்பிக்கை கொண்டோம்" என்று கூறினால் மட்டும் சோதிக்கப்படாமல் விட்டுவிடப்படுவார்கள் என்று மனிதர்கள் எண்ணிக் கொண்டார்களா? [3]அவர்களுக்கு*

*முன்பு இருந்தவர்களையும் நாம் சோதித்தே இருக்கிறோம்.
உண்மையாளர்கள் யார் என்பதையும் பொய்யர்கள் யார்
என்பதையும் அல்லாஹ் உறுதியாக அறிவான்.*

*[4]தீமைகளைச் செய்வோர் எம்மிடமிருந்து தப்பிவிடலாம்
என்று எண்ணிக் கொண்டார்களா? அவர்களுடைய இந்தத்
தீர்மானம் மிகவும் கெட்டது. [5]அல்லாஹ்வைச் சந்திப்போம்
என நம்பியிருப்பவர்கள் (அதற்கான நற்செயல்களைச்
செய்யவேண்டும். ஏனெனில்) அல்லாஹ் அறுதியிட்ட தவணை
வந்தேதீரும். அவன் அனைத்தையும் செவியுறுபவன்; முற்றும்
அறிந்தவன். [6]எவர் (இறைவழியில்) முயற்சி செய்கிறாரோ அவர்
தம(து நலனு)க்காகவே முயற்சி செய்கிறார். உறுதியாக அல்லாஹ்
உலகத்தார் அனைவரிடமிருந்தும் தேவை எதுவுமற்றவன்.
[7](இறை)நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிபவர்களின்
பாவங்களை உறுதியாக நாம் போக்கிவிடுவோம். அவர்கள்
செய்த நற்செயல்களுக்கான சிறந்த கூலியையும் அவர்களுக்கு
வழங்கிவிடுவோம்.*

*[8]தன் தாய் தந்தையருடன் நல்ல முறையில் நடந்துகொள்ளுமாறு
நாம் மனிதனுக்கு அறிவுறுத்தினோம். ஆனாலும் (மனிதனே!)
நீ அறிந்திராத ஒன்றை எனக்கு இணையாக்குமாறு அவர்கள்
உன்னை வற்புறுத்தினால் அவர்களுக்கு நீ கட்டுப்படக்கூடாது.
என்னிடமே நீங்கள் (அனைவரும்) திரும்ப வேண்டியுள்ளது.
அப்போது நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றைப்பற்றி நான்
உங்களுக்கு அறிவிப்பேன். [9](இறை)நம்பிக்கைகொண்டு நற்செயல்
புரிபவர்களை உறுதியாக நாம் நல்லோர்களுடன் சேர்த்து
விடுவோம்.*

*[10](நபியே!) மக்களில் சிலர், “நாங்கள் அல்லாஹ்வின் மீது
நம்பிக்கை கொண்டிருக்கிறோம்” என்று கூறுகின்றனர். ஆயினும்
அவர்கள் இறைவழியில் (முயலும்போது) துன்புறுத்தப்பட்டால்
மக்களால் ஏற்படும் அத்துன்பங்களை இறைவேதனைபோல்*

*(பெரிதாக) எண்ணி (உம்மைவிட்டு நீங்க முனைந்து) விடுகின்றனர். ஆனால் உம் இறைவனிடமிருந்து (உமக்கு) ஏதேனும் உதவி வந்துவிட்டால் நாங்கள் உங்களுடன்தான் இருந்தோம்” என்று கூறுகின்றனர். உலக மக்களின் உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனல்லவா!*
*[11]அல்லாஹ் உறுதியாக (இறை)நம்பிக்கையாளர்கள் யார் என்பதை அறிந்துகொள்வான். (அவ்வாறே) உறுதியாக நயவஞ்சகர்கள் யார் என்பதையும் அறிந்துகொள்வான்.*

*[12](ஓரிறை)மறுப்பாளர்கள் நம்பிக்கையாளர்களிடம் “நீங்கள் எங்கள் வழியைப் பின்பற்றுங்கள்; உங்கள் பாவங்களை நாங்கள் சுமந்து கொள்கிறோம்” என்று கூறுகின்றனர். ஆனால் அவர்களின் பாவங்களில் எதனையும் இவர்கள் சுமப்பதற்கில்லை. (எனவே) உறுதியாக இவர்கள் பொய்யர்களே.*
*[13]இவர்கள் தம் சுமைகளையும் அத்துடன் (பிறரை வழிகெடுத்ததற்காக) வேறு பல சுமைகளையும் சுமப்பார்கள். (மேலும்) இவர்கள் (பொய்யாகப்) புனைந்து கூறியதைப் பற்றியும் உறுதியாக மறுமை நாளில் விசாரிக்கப்படுவார்கள்.*

*[14]நாம் நோவாவை (எமது தூதராக) அவரது சமூகத்தினரிடம் அனுப்பினோம். அவர் ஆயிரத்துக்கு ஐம்பது குறைவான ஆண்டுகள் அவர்களிடையே வாழ்ந்திருந்தார். (எனினும்) அவர்கள் தீவினையாளர்களாகவே இருந்ததால் வெள்ளப் பெருக்கு அவர்களைச் சூழ்ந்து கொண்டது.*
*[15]நாம் அவரையும் அவருடன் கப்பலில் இருந்தவர்களையும் காப்பாற்றினோம். அந்நிகழ்ச்சியை உலகத்தாருக்கு ஒரு படிப்பினைச் சான்றாகவும் ஆக்கினோம்.*

*[16](அவ்வாறே) ஆப்ரஹாமையும் (நாம் அனுப்பினோம்). அவர் தம் சமூகத்தினரிடம் “அல்லாஹ்வையே வணங்குங்கள்; அவனுக்கே அஞ்சுங்கள். நீங்கள் அறிந்துகொள்வீர்கள் என்றால் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும்” என்றும்*
*[17]“நீங்கள் அல்லாஹ்வை விடுத்து வெறும் சிலைகளைத்தான் வணங்கிக்*

*கொண்டிருக்கிறீர்கள். அவை நீங்கள் பொய்யாகப் புனைந்து கொண்டவை. அல்லாஹ்வை விடுத்து நீங்கள் வணங்குபவை உங்களுக்கு உணவளிக்க ஆற்றலற்றவை. அல்லாஹ்விடமே உணவைத் தேடுங்கள்; அவனையே வணங்கி வாருங்கள்; அவனுக்கே நன்றி செலுத்துங்கள்; அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்.*
*[18]நீங்கள் (இறைச்செய்தியைப்) பொய்யென மறுத்தால் – உங்களுக்கு முன்னிருந்த பல சமூகத்தார்களும் (இவ்வாறே இறைச்செய்தியைப்) பொய்யெனக் கூறியுள்ளனர். (இறைத்தூதைத்) தெளிவாக எடுத்துரைப்பதைத் தவிரத் தூதருக்கு வேறு பொறுப்பில்லை" என்றும் கூறினார்.*

*[19]அல்லாஹ் முதலில் படைப்புகளை எவ்வாறு (படைக்கத்) தொடங்குகிறான் என்பதை அவர்கள் (சிந்தித்துப்) பார்க்கவில்லையா? (அவ்வாறே இறப்புக்குப்) பிறகும் அவற்றை அவன் மீளவைப்பான். உறுதியாக இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது.*
*[20](நபியே! உம்முடைய மக்களிடம்) "பூமியில் பயணம் செய்து அல்லாஹ் எவ்வாறு படைப்பைத் தொடங்கினான் என்பதைக் கவனியுங்கள். பின்னர் அவன் (அவை இறந்தபின் மறுமையில்) புத்துயிர்ப்பு வழங்குவான். உறுதியாக அவன் யாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்" என்று கூறுவீராக!*
*[21]அவன், தான் விரும்பியோரைத் தண்டிப்பான்; தான் விரும்பியோர் மீது இரக்கம் காட்டுவான். அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்.*
*[22]பூமியிலோ வானத்திலோ உங்களால் அவனைத் தோற்கடிக்க முடியாது. அல்லாஹ்வைத்தவிர உங்களுக்குப் பாதுகாவலனோ உதவியாளனோ யாருமில்லை.*
*[23]அல்லாஹ்வின் வசனங்களையும் அவனது சந்திப்பையும் ஏற்க மறுப்பவர்கள்தாம் எனது அருளிலிருந்து நம்பிக்கையை இழந்துவிட்டவர்கள். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு.*

*[24](பின்னர்) ஆப்ரஹாமின் மக்கள், "இவரைக் கொன்று விடுங்கள், அல்லது எரித்து விடுங்கள்" என்று கூறியதே (அவருடைய அறிவுரைக்கு) அவர்கள் அளித்த பதிலாக இருந்தது.*

*(அவர்கள் அவரை நெருப்பில் எறிந்தபோது) அல்லாஹ் நெருப்பிலிருந்து அவரைப் பாதுகாத்துக் கொண்டான். (ஓரிறை) நம்பிக்கையாளர்களுக்கு உறுதியாக இதில் பல்வேறு சான்றுகள் உள்ளன.*
*[25](பின்னும்) ஆப்ரஹாம் (தம் சமூகத்தாரிடம்) "நீங்கள் அல்லாஹ்வையன்றி(இந்த)ச் சிலைகளை(த் தெய்வங்களாக) ஆக்கிக் கொண்டதற்குக் காரணம், இவ்வுலக வாழ்வில் நீங்கள் ஒருவருக்கொருவர் அன்புப் பிணைப்பை உருவாக்கிக் கொள்வதற்காகத்தான். ஆனால் மறுமை நாளில் உங்களில் சிலர் சிலரை மறுப்பர்; சிலர் சிலரைச் சபிப்பர். உங்களின் உறைவிடம் நரகமே; (அங்கு) உங்களுக்கு உதவுவோர் எவரும் இல்லை" என்று கூறினார்.*
*[26](எனினும் அச்சமூகத்தாரில்) லோத் (மட்டுமே) அவர்மீது நம்பிக்கை கொண்டார். (மேலும்) ஆப்ரஹாம் "நான் என் இறைவனை நாடிப் புலம்பெயர்ந்து செல்கிறேன். உறுதியாக அவன் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்" என்று கூறினார.*
*[27]நாம் அவருக்கு (மகனாக) ஈசாக்கையும் (பின்னர்ப் பேரனாக) ஜேக்கபையும் அளித்தோம். அவரின் வழித்தோன்றல்களுக்கு தூதுத்துவத்தையும் வேதத்தையும் அருளினோம். அவரது கூலியை இம்மையிலும் அவருக்கு வழங்கினோம்; மறுமையிலும் அவர் நல்லோர்களில் ஒருவராகவே இருப்பார்.*

*[28]லோத்தை அவரது சமூகத்தினரிடம் அனுப்பினோம். அவர் அவர்களிடம், "உறுதியாக உங்களுக்கு முன் உலக மக்களில் யாருமே செய்திராத மானக்கேடான (ஒரு) செயலை நீங்கள் செய்கிறீர்கள்.*
*[29]நீங்கள் (பாலுறவுக்காகப் பெண்களை விட்டுவிட்டு) ஆண்களிடம் செல்கிறீர்களே வழிப்பறியில் ஈடுபடுகிறீர்களே! உங்கள் அவைகளிலேயே அருவருக்கத்தக்க செயல்களை (வெளிப்படையாகச்) செய்கிறீர்களா?" என்று கூறினார். அதற்கு அவரது சமூகத்தாரின் மறுமொழி, "நீர் உண்மையாளராயின் இறைவேதனையை எங்களிடம் கொண்டுவாரும்" என்பதாகத்தான் இருந்தது.*
*[30](அப்போது) அவர்*

*“என் இறைவா! குழப்பம் விளைவிக்கின்ற இம்மக்களுக்கு எதிராக
எனக்கு உதவி புரிவாயாக!” என்று இறைஞ்சி வேண்டினார்.*

*[31]எம் (வானவத்) தூதர்கள் ஆப்ரஹாமிடம் (அவருக்கு
ஈசாக் பிறக்க இருக்கும்) நற்செய்தியுடன் வந்தபோது (லோத்
வசிக்கும் ஊரைச் சுட்டிக்காட்டி) “நாங்கள் இவ்வூர்வாசிகளை
அழிக்கப் போகிறோம். உறுதியாக இங்குள்ளவர்கள் பெரும்
தீவினையாளர்களாக இருக்கின்றனர்” என்று கூறினர். [32]அவர்,
“அங்கு லோத்தும் இருக்கிறாரே!” என்றார். வானவர்கள்,
“அங்கிருப்பவர்கள் யார் என்பதை நாம் நன்கறிவோம். அவருடைய
மனைவி நீங்கலாக அவரையும் அவரின் குடும்பத்தையும்
உறுதியாக நாங்கள் காப்பாற்றி விடுவோம்; அவள் பின்தங்கி
(அவ்வூராருடன் அழிந்து) விடுவாள்” என்று கூறினர். [33]எம்
(வானவ) தூதர்கள் லோத்திடம் வந்தபோது அவர்களைக் கண்ட
அவர் (அவ்வூர் மக்களால் அவர்களுக்குத் தீங்கு நேருமோ எனக்)
கவலையால் மனநெருக்கடிக்குள்ளானார். அப்போது அவர்கள்,
“நீர் அஞ்ச வேண்டாம்; கவலைப்படவும் வேண்டாம். உறுதியாக
நாம் உம்மையும் உமது மனைவியைத் தவிர உம் குடும்பத்தையும்
காப்பாற்றி விடுவோம்; அவள் பின்தங்கி (அழிந்து) விடுவாள்.
[34]நாங்கள் இவ்வூர்வாசிகள் செய்து கொண்டிருந்த தீச்செயல்கள்
காரணமாக இவர்களின் மீது வானத்திலிருந்து வேதனையை
இறக்கப் போகிறோம்” என்றனர். (அவ்வாறே அவர்கள்
அனைவரும் அழிக்கப்பட்டனர்.) [35]புரிந்துகொள்ளும் மக்கள்
படிப்பினை பெறும்பொருட்டு ஒரு தெளிவான சான்றை அவர்கள்
இருந்த ஊரில் நாம் விட்டு வைத்துள்ளோம்.*

*[36]மத்யன்(நகர மக்கள்)பால் அவர்களின் சகோதரர்
ஷுஐபை (எமது தூதராக) அனுப்பினோம். அவர், “என்
சமூகத்தோரே! அல்லாஹ்வையே வணங்குங்கள்; இறுதி நாளை
எதிர்பார்த்திருங்கள்; பூமியில் குழப்பம் செய்துகொண்டு
திரியாதீர்கள்” என்று (அவர்களிடம்) கூறினார். [37]ஆயினும்
அவர்கள், அவரைப் பொய்யர் என்று கூறிவிட்டனர். ஆகவே*

கடும் நிலநடுக்கம் அவர்களைப் பீடித்தது. அவர்கள் காலையில் தம் வீடுகளில் (முகங்குப்புற) மாண்டு கிடந்தனர்.

[38]இவ்வாறே நாம் ஆத், ஸமூத் சமூகத்தாரையும் அழித்து விட்டோம். அவர்கள் வாழ்ந்த இடங்க(ளில் உள்ள அழிவு எச்சங்க)ளிலிருந்து அது உங்களுக்குத் தெளிவாகி விட்டது. அவர்கள் அறிவுடையோர்களாக இருந்தும் சாத்தான் அவர்களின் செயல்களை அழகாக்கிக் காட்டி நேர்வழியிலிருந்து அவர்களைத் தடுத்துவிட்டான்.
[39]இவ்வாறே கோரா, ஃபாரோ, ஹாமான் ஆகியோரையும் அழித்துவிட்டோம். உறுதியாக மோசே அம்மக்களிடம் தெளிவான சான்றுகளுடன் வந்தார். ஆயினும் அவர்கள் பூமியில் செருக்குடன் நடந்து கொண்டனர். அவர்களால் எம்மிடமிருந்து தப்பித்துக்கொள்ள முடியவில்லை.
[40]அவர்களில் ஒவ்வொரு சமூகத்தாரையும் அவரவர் செய்த பாவத்தின் காரணமாக நாம் தண்டித்தோம். அவர்களில் சிலர்மீது நாம் கல்மாரி பொழியும் காற்றை அனுப்பினோம்; அவர்களில் சிலரைப் பேரிடி முழக்கம் தாக்கியது; சிலரைப் பூமியினுள் அழுந்தச் செய்தோம்; சிலரை (நீரில்) மூழ்கடித்தோம். அல்லாஹ் அவர்கள்மீது அநீதி இழைக்கவில்லை. மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டனர்.

[41]அல்லாஹ்வையன்றி மற்றவர்களைப் பாதுகாவலர்களாகக் கொண்டவர்கள் (தான் பின்னிய) வலையை வீடாக அமைத்துக்கொள்ளும் சிலந்திப் பூச்சியைப் போன்றவர்கள். உறுதியாக வீடுகளிலேயே மிகவும் வலுவற்றது சிலந்தியின் வீடுதான். அந்தோ, அவர்கள் அறிந்துகொள்ள வேண்டுமே!
[42]அல்லாஹ்வையன்றி அவர்கள் எதை அழைக்கிறார்களோ அதனை அல்லாஹ் உறுதியாக அறிவான். அவன் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.
[43]இத்தகைய உவமைகளை நாம் மனிதர்களுக்கு (அறிவுறுத்தவே) எடுத்துரைக்கிறோம். ஆயினும் அறிவுடையோர்தாம் அவற்றைப் புரிந்து கொள்வர்.
[44]வானங்களையும் பூமியையும் அல்லாஹ் நோக்கத்துடன்தான்

*படைத்துள்ளான். உறுதியாக நம்பிக்கையாளர்களுக்கு இதில் சான்று இருக்கிறது.*

45*(நபியே!) உமக்கு அறிவிக்கப்பட்டுள்ள இவ்வேதத்தை நீர் (மக்களுக்கு) எடுத்துரைப்பீராக! தொழுகையையும் கடைப்பிடிப்பீராக! உறுதியாகத் தொழுகை மானக்கேடான செயல்களிலிருந்தும் பாவங்களிலிருந்தும் (மனிதனைத்) தடுக்கிறது. அல்லாஹ்வை நினைவுகூர்வது மிகப்பெரிய விஷயமாகும். நீங்கள் செய்யும் அனைத்தையும் அல்லாஹ் நன்கறிகிறான்.*

46*நம்பிக்கையாளர்களே! வேதமுடையோருள் அநீதியாளர்களுடன் விவாதிக்க வேண்டாம். (மற்றவர்களுடன் விவாதிக்க நேரும்போது) மிக அழகான முறையிலன்றி (வேறு விதமாக) விவாதிக்க வேண்டாம். “எங்களுக்கு அருளப்பட்ட(வேதத்)தையும் உங்களுக்கு அருளப்பட்ட(வேதத்)தையும் நாங்கள் நம்புகிறோம். எங்கள் இறைவனும் உங்கள் இறைவனும் ஒருவனே. அவனுக்கே நாங்கள் கீழ்ப்படிந்து நடப்பவர்கள்” என்று நீங்கள் கூறுங்கள்.*

47*(நபியே!) இவ்வாறே நாம் உம்மீது வேதத்தை அருளினோம் (இதற்குமுன்) எவருக்கெல்லாம் நாம் வேதம் வழங்கியுள்ளோமோ அவர்(களில் உள்ள நீதியாளர்)கள் இ(வ்வேதத்)தையும் நம்புகின்றனர். (அரபிகளாகிய) இவர்களிலும்கூடச் சிலர் இதன்மீது நம்பிக்கை கொள்கின்றனர். மறுப்பாளர்களைத் தவிர (வேறுயாரும்) எம் வசனங்களை மறுக்கமாட்டார்கள்.* 48*(நபியே!) இதற்கு முன்னர் நீர் எந்த வேதத்தையும் படித்ததில்லை. உம் வலக்கையால் அதனை எழுதியதுமில்லை. அவ்வாறு இருந்திருந்தால் பொய்மையாளர்கள் (இதனை நீர் கற்பனை செய்தீர் என) ஐயம் கொண்டிருப்பார்கள்.* 49*மாறாக இது அறிவு வழங்கப்பட்டோரின் உள்ளங்களில் (பதிவாகக்கூடிய) தெளிவான வசனங்களாகத் திகழ்கிறது. தீவினையாளர்களைத் தவிர (வேறு எவரும்) எம் வசனங்களை மறுக்கமாட்டார்கள்.*

[50]இவரது "இறைவனிடமிருந்து இவருக்கு ஏன் (அற்புதங்களாகிய)
சான்றுகள் அருளப்படவில்லை?" என்று கேட்கின்றனர்;
(நபியே! நீர் கூறும்:) "சான்றுகள் அல்லாஹ்விடமே உள்ளன.
நானோ வெளிப்படையாக எச்சரிப்பவன்தான்" [51](நபியே!)
அவர்களுக்கு எடுத்துரைக்கப்படும் இவ்வேதத்தை நாம்
உமக்கு அருளியிருப்பது அவர்களுக்குப் போதுமான (சான்றாக
இருக்கிற)தல்லவா! உறுதியாக (இறை)நம்பிக்கைகொள்ளும்
மக்களுக்கு இதில் அருட்கொடையும் அறிவுரையும் அடங்கியுள்ளன.
[52](நபியே!) "எனக்கும் உங்களுக்கும் இடையில் சாட்சியாக இருக்க
அல்லாஹ்வே போதுமானவன். அவன் வானங்களிலும் பூமியிலும்
உள்ளவற்றை நன்கறிகிறான். பொய்யை நம்பி அல்லாஹ்வை
மறுப்பவர்கள்தாம் உண்மையில் இழப்பிற்குரியவர்கள்" என்று
நீர் கூறும்.

[53](நபியே!) அவர்கள் வேதனையை உம்மிடம் அவசரமாக
வேண்டுகிறார்கள். (அதற்கெனக்) குறிப்பிட்ட ஒரு தவணை
விதிக்கப்படாதிருந்தால் (அவ்)வேதனை (இதற்குள்) அவர்களிடம்
வந்திருக்கும். அது அவர்கள் அறியாதவகையில் திடீரென
அவர்களைத் தாக்கும். [54]அவர்கள் வேதனையை உம்மிடம்
அவசரமாக வேண்டுகிறார்கள்; ஆனால் மறுப்பாளர்களை
உறுதியாக நரகம் (ஏற்கனவே) சூழ்ந்து கொண்டிருக்கிறது.
[55](மறுமையாகிய) அந்நாளில் வேதனை அவர்களுக்கு மேலிருந்தும்
அவர்களின் பாதங்களுக்கு அடியிலிருந்தும் அவர்களைச்
சூழ்ந்துகொள்ளும். அப்போது "நீங்கள் செய்து கொண்டிருந்தத(ன்
பய)னைச் சுவையுங்கள்" என்று இறைவன் கூறுவான்.

[56]நம்பிக்கைகொண்ட என் அடியார்களே! உறுதியாக என் பூமி
(மிக) விரிவானது. எனவே (மார்க்கத்தைப் பின்பற்றப் புலம்பெயர
நேரிட்டால், எங்கிருந்தேனும்) என்னையே வணங்குங்கள்.
[57]ஒவ்வொரு மனிதனும் சாவைச் சுவைத்தே தீரவேண்டும்.
பின்னர் நீங்கள் எம்மிடமே திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்.
[58]நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர்களுக்குச் சொர்க்கத்தின்

*உயர்ந்த மாளிகைகளில் நாம் இடமளிப்போம். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பர். நற்செயல்கள் புரிவோரின் கூலி எவ்வளவு சிறப்பானது!* [59]*அவர்கள் பொறுமையை மேற்கொள்கிறார்கள்; தங்கள் இறைவனையே முழுவதும் சார்ந்திருக்கிறார்கள்.* [60]*தம் உணவைச் சுமந்துகொண்டு திரியாத எத்தனையோ உயிரினங்கள் இருக்கின்றன. அவற்றுக்கும் உங்களுக்கும் அல்லாஹ்தான் உணவளிக்கிறான். அவன் (யாவற்றையும்) செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.*

[61]*(நபியே!) நீர் அவர்களிடம் "வானங்களையும் பூமியையும் படைத்துச் சூரியனையும் சந்திரனையும் கட்டுக்குள் வைத்திருப்பவன் யார்?" என்று கேட்டால் அவர்கள் "அல்லாஹ்தான்" என்று உறுதியாகக் கூறுவார்கள். அவ்வாறாயின் அவர்கள் (எம்மைவிட்டு) எவ்வாறு விலகிப் போகிறார்கள்?* [62]*அல்லாஹ் தன் அடியார்களில் தான் விரும்பியோருக்கு வாழ்வாதாரத்தை மிகுதியாக வழங்குகிறான்; தான் விரும்பியோருக்கு அளவோடு குறைத்து விடுகிறான். உறுதியாக அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவன்.* [63]*(நபியே!) "வானத்திலிருந்து மழையை இறக்கி அதன்மூலம் இறந்த பூமியை மீண்டும் உயிர்ப்பிப்பவன் யார்?" என்று நீர் அவர்களிடம் கேட்டால் "அல்லாஹ்தான்" என்று அவர்கள் உறுதியாகக் கூறுவர். "அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே!" என்று நீர் கூறுவீராக! ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் (இதனைப்) புரிந்து கொள்வதில்லை.*

[64]*இவ்வுலக வாழ்க்கை கேளிக்கையும் வீண் விளையாட்டுமேயன்றி வேறில்லை. மறுமையின் வீடு–உண்மையில் அதுதான் வாழ்வு! அந்தோ! (இதனை) அவர்கள் அறிந்து கொள்ள வேண்டுமே!* [65]*அவர்கள் கப்பலில் பயணம் செய்(யும் போது ஏதேனும் ஆபத்து நேர்ந்)தால் அல்லாஹ்வின் மீது மட்டுமே நம்பிக்கை கொண்டு மனத்தூய்மையுடன் அவனையே இறைஞ்சுகின்றனர். ஆனால் அவன் அவர்களைக் காப்பாற்றிக்*

*கரைசேர்த்து விட்டால் அவனுக்கு இணைவைக்கத் தொடங்கி விடுகின்றனர். [66]அவர்களுக்கு நாம் வழங்கிய அருளுக்காக நன்றி செலுத்துவதை மறுக்கட்டும்; (இவ்வுலகில் சிறிது காலம்) சுகமனுபவித்துக் கொண்டிருக்கட்டும். (தங்கள் செயல்களுக்கான பயனை) விரைவில் அவர்கள் தெரிந்து கொள்வார்கள்.*

*[67]சுற்றியுள்ள பகுதிகளில் மக்கள் தாக்கப்படும் நிலையில், அவர்களுக்குப் பாதுகாப்பானதாக (மக்கா எனும் இப்)புனித இறையில்லத்தை ஆக்கியிருப்பதை அவர்கள் பார்க்கவில்லையா? அவர்கள் பொய்மையை ஏற்றுக்கொண்டு அல்லாஹ்வின் அருட்கொடைக்கு நன்றி செலுத்த மறுக்கின்றனரா?*
*[68]அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனைபவனைவிட அல்லது உண்மை தன்னிடம் வரும்போது அதனைப் பொய்யெனக் கூறுபவனைவிட மிகப்பெரிய தீவினையாளன் யார்? நரகம்*
*(ஓரிறை)மறுப்பாளர்களின் தங்குமிடமல்லவா! [69]எமது வழியில்*
*செல்லக் கடுமையாக முயல்பவர்களுக்கு உறுதியாக நாம் எம் வழிகளைக் காட்டுவோம். நன்மை செய்வோருடன் உறுதியாக அல்லாஹ் இருக்கிறான்.*

# 30. ரோமானியர்கள் (அர்ரூம்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]அலிஃப் – லாம் – மீம்.*

*[2]ரோமானியர்கள்(பாரசீகர்களால்)தோற்கடிக்கப்பட்டுள்ளனர்.*
*[3]அண்மையிலுள்ள பகுதியில். இருப்பினும் (இத்)தோல்விக்குப்*
*பின்னர் அவர்கள் வெற்றி பெறுவர். [4](அதுவும்) சில*
*ஆண்டுகளுக்குள்ளாகவே. (வெற்றிக்கு) முன்னரும் பின்னரும் (உள்ள நிகழ்வுகள் குறித்த) அதிகாரம் அல்லாஹ்வுக்கே உரியது. (ரோமானியர்கள் வெல்லும்) அந்நாளில் (ஓரிறை)நம்பிக்கையாளர்*
*மகிழ்ச்சியடைவர். [5]அல்லாஹ்வின் உதவி காரணமாக (மகிழ்வர்.)*
*அவன் தான் விரும்பியோருக்கு உதவி புரிகிறான். அவன்*

*யாவரினும் வல்லமை மிக்கவன்; நிகரற்ற அன்பாளன். [6]இது*
*அல்லாஹ்வின் வாக்குறுதி. ஒருபோதும் தன் வாக்குறுதிக்கு*
*அல்லாஹ் எதிராகச் செயல்படுவதில்லை. ஆயினும் மக்களில்*
*பெரும்பாலோர் (இதனை) அறிந்துகொள்வதில்லை. [7]அவர்கள்*
*இவ்வுலக வாழ்வின் வெளித்தோற்றத்தை அறிவர். ஆனால்*
*மறுமையைப்பற்றி அவர்கள் அலட்சியமாக இருக்கின்றனர்.*

*[8]வானங்களையும் பூமியையும் அவற்றிற்கிடையில்*
*உள்ளவற்றையும் நோக்கத்துடனும் ஒரு குறிப்பிட்ட*
*தவணையுடனும் அல்லாமல் அல்லாஹ் படைக்கவில்லை.*
*இதனை அவர்கள் தங்களுக்குள் சிந்தித்துப் பார்க்கவில்லையா?*
*ஆயினும் மக்களில் பெரும்பாலோர் தங்கள் இறைவனின்*
*சந்திப்பை மறுப்பவர்களாகவே இருக்கின்றனர். [9]அவர்கள்*
*பூமியில் பயணம் செய்து தங்களுக்கு முன்பு வாழ்ந்தவர்களின்*
*முடிவு என்னவாயிற்று என்பதைப் பார்க்கவில்லையா? அவர்கள்*
*இவர்களைவிட வலிமை வாய்ந்தவர்களாக இருந்தனர். அவர்கள்*
*பூமியைப் பண்படுத்தி இவர்கள் செழிப்பாக்கியதைவிட*
*அதிகமாகச் செழிப்பாக்கினர். தூதர்கள் தெளிவான சான்றுகளை*
*(அவர்களிடம்) கொண்டுவந்தனர். அல்லாஹ் அவர்களுக்கு*
*அநீதி இழைக்கவில்லை; மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி*
*இழைத்துக் கொண்டனர். [10]தீச்செயல்களைச் செய்தோரின்*
*முடிவும் தீயதாகவே அமைந்தது. அவர்கள், இறைவசனங்களைப்*
*பொய்யென்று கூறி அவற்றை ஏளனம் செய்து கொண்டிருந்ததுதான்*
*அதற்கான காரணமாகும்.*

*[11](மனிதர்களே!) அல்லாஹ்வே படைப்பைத் தொடங்குகிறான்.*
*(இறப்புக்குப்)பின்னர் அவன்தான் அதனை மீண்டும் படைக்கிறான்.*
*அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்.*
*[12](தீர்ப்புக்குரிய) 'அந்தநேரம்' நிலைபெறும் நாளில் குற்றவாளிகள்*
*நம்பிக்கையிழந்து (பேச்சற்றுப்போய்) விடுவர். [13]அவர்களின்*
*இணைத்தெய்வங்களில் அவர்களுக்காகப் பரிந்து பேசுபவர்கள்*
*எவரும் இருக்கமாட்டார்கள். (இணைவைத்த) அவர்களும் தங்கள்*
*இணைத் தெய்வங்களை மறுத்துவிடுவார்கள். [14]'அந்தநேரம்'*

*நிலைபெறும் நாளில் மனிதர்கள் (நல்லோர், தீயோர் எனத்)
தனித்தனியாகப் பிரிந்துவிடுவர். [15]நம்பிக்கைகொண்டு நற்செயல்
புரிந்தவர்கள் சொர்க்கச் சோலையில் மகிழ்விக்கப்படுவர்.
[16]சத்தியத்தை மறுத்து எம் வசனங்களையும் மறுமையில் எம்
சந்திப்பையும் பொய்மைப்படுத்தியவர்கள் வேதனையின் முன்
நிறுத்தப்படுவர். [17]எனவே (நம்பிக்கையாளர்களே!) நீங்கள்
மாலையிலும் காலையிலும் அல்லாஹ்வின் மகத்துவத்தைப்
போற்றிக் கொண்டிருங்கள். [18]வானங்களிலும் பூமியிலும்
புகழனைத்தும் அவனுக்கே உரியன. பிற்பகலிலும் நண்பகலிலும்
அவனைப் போற்றிக் கொண்டிருங்கள்.**

*[19]அவன்தான் உயிரற்றவைகளிலிருந்து உயிருள்ளவற்றை
வெளிப்படுத்துகிறான்; உயிருள்ளவற்றிலிருந்து உயிரற்றவற்றை
வெளிப்படுத்துகிறான். பூமியை அது இறந்த பின்னர்
உயிர்ப்பிக்கிறான். இவ்வாறே நீங்களும் (இறந்த பின்னர்
மறுமையில்) வெளிப்படுத்தப்படுவீர்கள். [20]அவன் உங்களை
மண்ணிலிருந்து படைத்திருப்பதும் பின்னர் நீங்கள் மனிதர்களாகப்
(பல பகுதிகளிலும்) பரவியதும் அவனது சான்றுகளில்
அடங்குவன. [21]நீங்கள் மனஅமைதி பெறவேண்டும் என்பதற்காக
உங்கள் இனத்திலிருந்தே உங்களுக்கு அவன் இணைகளைப்
படைத்திருப்பதும் உங்களிடையே அன்பையும் இரக்கத்தையும்
ஏற்படுத்தியிருப்பதும் அவனது சான்றுகளில் அடங்குவனவாகும்.
உறுதியாக இதில் சிந்திக்கக்கூடிய மக்களுக்கு பல்வேறு சான்றுகள்
உள்ளன.*

---

***இறைவணக்கம் போன்றவை மூலமாக இறைவனை நிலையாக நினைவில் இருத்திக் கொள்வதும் இறைமையை ஆழ்ந்து சிந்திப்பதும் இறைவனைக் கண்டடையச் செய்யும். ஆழ்ந்து சிந்திப்பதன் மூலமே மனிதன் இறைவனைக் கண்டடைய முடியும். இந்த நடப்புலகில் மனிதனைச் சுற்றியும் சூழ்ந்திருக்கும் பிரபஞ்சத்திலும் இறைத்தூதரின் போதனைகள் மூலமாகவும் எண்ணற்ற அடையாளங்களை இறைவன் பரப்பி வைத்துள்ளான். இவற்றின் மீதும் மிகவும் கவனம் செலுத்தி ஈடுபாட்டுடன் சிந்திப்பவர்கள் இறைவனைக் கண்டடைவார்கள்.***

[22]வானங்கள், பூமி ஆகியவற்றின் படைப்பும் உங்களின் மொழிகள் மற்றும் நிறங்கள் வேறுபட்டிருப்பதும் அவனது சான்றுகளில் அடங்குவனவாகும். அறிவுடையோருக்கு உறுதியாக இதில் சான்றுகள் (பல) உள்ளன. [23]இரவிலோ பகலிலோ நீங்கள் உறங்குவதும் (உங்கள் வாழ்க்கைக்குத் தேவையான) அவனது அருட்கொடையைத் தேடுவதும் அவனது சான்றுகளில் அடங்குவனவே. செவியுறும் மக்களுக்கு இதில் பல சான்றுகள் உள்ளன. [24]அச்சமும் நம்பிக்கையும் ஏற்படுத்துமாறு மின்னலை அவன் உங்களுக்குக் காட்டுவதும் மேகத்திலிருந்து மழையைப் பொழிவித்து அதன்மூலம் இறந்த பூமியை உயிர்ப்பிப்பதும் அவனது சான்றுகளில் அடங்குவனவாகும். உறுதியாக, அறிந்துகொள்ளும் மக்களுக்கு இவற்றில் பல்வேறு சான்றுகள் உள்ளன.

[25]வானமும் பூமியும் அவனது கட்டளைப்படி நிலைபெற்றிருப்பதும் அவனது சான்றுகளில் அடங்கும். (வாழ்ந்து, இறந்து, அடக்கம் செய்யப்பட்ட) பின்னர் அவனது ஒரே அழைப்பில் நீங்கள் பூமியிலிருந்து உடனே வெளிப்பட்டு விடுவீர்கள். [26]வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியவை. இவையனைத்தும் அவனுக்கே கீழ்ப்படிந்து நடக்கின்றன. [27]அவன்தான் படைப்பைத் தொடங்குகிறான். (இறப்புக்குப்)பின்னர் அவன்தான் அதனை மீண்டும் படைக்கிறான். இது அவனுக்கு மிகவும் எளிதானது. வானங்களிலும் பூமியிலும் (சிந்தனைக்கும் சொல்லுக்கும் எட்டாத) மீபேரியல்பு அவனுக்கே உரியது. அவன் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.

[28](மனிதர்களே!) உங்களிலிருந்தே அவன் உங்களுக்கு ஓர் உதாரணம் கூறுகிறான். உங்கள் அடிமைகளில் யாராவது நாம் உங்களுக்கு வழங்கியுள்ளவற்றில் உங்களுக்குச் சம பங்காளிகள் ஆவார்களா? உங்களைப் போன்ற (சுதந்திரமான)வர்களுக்கு நீங்கள் அஞ்சுவதைப் போன்று (அடிமைகளாகிய)அவர்களுக்கும் அஞ்சுவீர்களா? (அவ்வாறிருக்க என்னால் படைக்கப்பட்டவற்றையே எனக்கு நீங்கள்

*இணையாக்கலாமா?) புரிந்துகொள்ளும் மக்களுக்காக எமது வசனங்களை இவ்வாறு தெளிவுபடுத்துகிறோம். [29]ஆயினும் தீவினையாளர்கள் அறிவில்லாமல் தம் மன விருப்பங்களைத்தான் பின்பற்றுகின்றனர். அல்லாஹ் வழிதவறச் செய்துவிடுவோர்க்கு யார் வழிகாட்ட முடியும்? அவர்களுக்கு உதவி செய்வோர் யாருமில்லை.*

*[30](நபியே!) முழுமனத்துடன் உம் முகத்தை (நேரான) மார்க்கத்தின்பக்கம் திருப்பி நிலைப்படுத்திக் கொள்ளும். (மனிதர்களே!) அல்லாஹ் மக்களைப் படைத்த இயற்கை அமைப்பிலேயே நிலைத்திருங்கள். அல்லாஹ்வின் படைப்பில் எந்த மாற்றமும் இல்லை. இதுவே சீரிய மார்க்கம். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் (இதனை) அறிந்துகொள்வதில்லை.*
*[31](நம்பிக்கையாளர்களே!) அவனையே முன்நோக்கித் திரும்புங்கள். அவனுக்கே அஞ்சுங்கள். தொழுகையைக் கடைப்பிடியுங்கள். இணைவைப்போருடன் இணைந்து விடாதீர்கள். [32]அவர்கள்*
*தங்கள் மார்க்கத்தைத் துண்டு துண்டாக்கிப் பல பிரிவுகளாகி விட்டனர். ஒவ்வொரு கூட்டத்தாரும் தம்மிடம் இருப்பதைக்கொண்டு பெருமிதம் அடைகின்றனர். [33]மக்கள்*
*தமக்கு ஏதேனும் துன்பம் ஏற்படும்போது தம் இறைவனின் பக்கம் முன்நோக்கி (உதவிக்காக) அவனை அழைக்கின்றனர். அவன் தன் அருளை அவர்கள் சுவைக்கும்படி செய்தால் அதன்பின் அவர்களில் ஒரு சாரார் தம் இறைவனுக்கு இணை கற்பிக்கின்றனர். [34]நாம் அவர்களுக்கு வழங்கியதற்கு (நன்றி மறந்து)*
*அவர்கள் மறுக்கட்டும்; “சில நாட்கள்வரை (நீங்கள் உங்கள் விருப்பப்படி) அனுபவித்துக்கொள்ளுங்கள். விரைவில் அதன் பயனை அறிந்துகொள்வீர்கள்”. [35]அவர்களை (இறைவனோடு)*
*இணைவைக்கச் சொல்லும் ஏதேனும் ஒரு சான்றை அவர்கள் மீது இறக்கியுள்ளோமா?*

*[36]மக்கள் எம் அருளைச் சுவைக்கும்படி செய்தால் மகிழ்ச்சியடைகின்றனர். அவர்கள் செய்த தீவினையின் காரணமாக அவர்களுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டுவிட்டால் உடனே*

அவர்கள் நம்பிக்கையிழந்து விடுகின்றனர். 37(உறுதியாக) அல்லாஹ்
தான் விரும்பியோருக்கு வாழ்வாதாரத்தைத் தாராளமாக
வழங்குகிறான்; தான் விரும்பியோருக்குக் குறைவாகவும்
வழங்குகிறான் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா?
நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு இதில் பல்வேறு சான்றுகள்
உள்ளன.

38(நபியே!) உறவினர்களுக்கும் ஏழைகளுக்கும் பயணிகளுக்கும்
அவரவர் உரிமையை வழங்கிவிடுவீராக! இறைஉவப்பை
விரும்புவோருக்கு இதுவே மிகச் சிறந்ததாகும். அவர்கள்தாம்
வெற்றியாளர்கள். 39(மக்களே!) மற்ற மக்களுடைய
செல்வங்களுடன் சேர்ந்து (உங்கள் செல்வம்) பெருகும் நோக்குடன்
நீங்கள் வட்டிக்குக் கொடுக்கும் பொருள் அல்லாஹ்விடம்
பெருகுவதில்லை. மாறாக, இறைவனுடைய உவப்பை விரும்பி
நீங்கள் வழங்கும் அறக்கொடைதான் அல்லாஹ்விடம்
பெருகும். அ(வ்வாறு வழங்குப)வர்கள் அதனைப் பன்மடங்காகப்
பெருக்கிக்கொள்பவர்கள் ஆவர்.

40(மனிதர்களே!) அல்லாஹ்தான் உங்களைப் படைத்தவன்;
உங்களுக்கு உணவளிப்பவன்; பின்னர் அவன்தான் உங்களை
இறக்கச் செய்கிறான். (அதன்) பின்னர் அவன்தான்
உங்களை உயிர்ப்பிப்பான்; உங்கள் இணைத்தெய்வங்களில்
இவற்றில் ஒன்றையேனும் செய்யக்கூடிய இணைத் தெய்வம்
உண்டா? அவர்களின் இணைவைப்பிலிருந்து அவன் மிகவும்
(அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்; மிக உயர்ந்தவன்.
41மனிதனின் கைகள் செய்த தீவினைகளால் நிலத்திலும் கடலிலும்
சீரழிவுகள் தோன்றி விட்டன. எனவே அவர்கள் (நேர்வழிக்குத்)
திரும்பிவிடும் பொருட்டு அல்லாஹ், அவர்கள் தங்களது சில
தீச்செயல்களின் விளைவைச் சுவைக்கும்படி செய்கிறான்.
42(நபியே! அவர்களிடம்) “நீங்கள் பூமியில் சுற்றுப்பயணம்
செய்து முன்னர் வாழ்ந்தவர்களின் முடிவு எப்படி ஆயிற்று
என்பதைக் கவனித்துப் பாருங்கள்” எனக் கூறுவீராக! அவர்களில்
பெரும்பாலோர் இணைவைப்போராகவே இருந்தனர்.

[43]எனவே (நபியே) அல்லாஹ்விடமிருந்து தப்பமுடியாத நாள் வருவதற்கு முன் நீர் உம் முகத்தைச் சீரிய மார்க்கத்தின்பால் நிலைநிறுத்திக்கொள்ளும். (மறுமையாகிய) அந்நாளில் (மனிதர்கள் நல்லோர், தீயோர் எனத் தனித்தனியாகப்) பிரிந்துவிடுவர்.
[44]யார் (அல்லாஹ்வை ஏற்க) மறுத்தாரோ அவரது மறுப்பு அவருக்கே கேடாக அமையும். யார் நற்செயல்புரிந்தனரோ அவர்கள் தங்களுக்காகவே (மறுமையின்) நன்மையைத் தயார்செய்து கொள்கின்றனர். [45]இது நம்பிக்கை கொண்டு
நற்செயல் புரிவோருக்குத் தன் அருளிலிருந்து அல்லாஹ் கூலி வழங்குவதற்காகத்தான். அவன் மறுப்பாளர்களை நேசிக்கமாட்டான்.

[46]அவனது சான்றுகளில் ஒன்று, நற்செய்தி கூறுபவையாகக் காற்றுகளை அவன் அனுப்பிவைப்பதாகும். தன் அருளை (மழையை) நீங்கள் சுவைக்குமாறு செய்யவும், அவனது கட்டளைப்படி கப்பல்கள் செல்வதற்காகவும் (அவற்றில் பயணம் செய்து) நீங்கள் அவனது அருளைத் தேடிக் கொள்வதற்காகவும் (இவற்றுக்கெல்லாம்) நீங்கள் நன்றி செலுத்துவதற்காகவும்
(இவ்வாறு காற்றுகளை அனுப்புகிறான்). [47](நபியே!) நாம் உமக்கு
முன்னரும் தூதர்கள் பலரை அவ(ரவ)ர்களின் சமூகத்தாருக்கு அனுப்பிவைத்தோம். அவர்கள் தம் மக்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டுவந்தனர். பின்னர் (அவற்றை மறுத்த) குற்றவாளிகளை நாம் தண்டித்தோம். நம்பிக்கையாளர்களுக்கு உதவிசெய்வது (உறுதியாக) எம்மீது கடமையாக இருந்தது.

[48]அல்லாஹ்வே காற்றுகளை அனுப்புகிறான். அவை மேகங்களை எழச்செய்கின்றன. பின்னர்த் தான் விரும்பியவாறு அவன் அவற்றை வானத்தில் பரப்பித் திட்டுத்திட்டுகளாக்கி விடுகின்றான். அவற்றிற்கிடையிலிருந்து மழை பொழிவதை நீர் காண்கிறீர். தன் அடியார்களில் தான் விரும்பியோர் மீது அவன் அதனைப் பொழியச் செய்யும்போது அவர்கள்
மகிழ்ச்சியடைகின்றனர். [49]ஆனால் அது அவர்களின் மீது

பொழிவதற்கு முன்னால் அவர்கள் நம்பிக்கை இழந்திருந்தனர்.
50(நபியே!) அல்லாஹ்வுடைய அருளின் பயன்களைப் பார்ப்பீராக!
இறந்துகிடக்கும் பூமியை அவன் எவ்வாறு உயிர்ப்பிக்கிறான்
(என்பதைக் கவனிப்பீராக! உறுதியாக இவ்வாறே) அவன்தான்
இறந்தோரை உயிர்ப்பிப்பவன். அவன் எல்லாவற்றின் மீதும்
பேராற்றலுடையவன். 51ஆனால் நாம் (வறண்ட) ஒருவிதக்
காற்றை அனுப்பி, அதனால் பயிர்கள் (வாடிப்) பழுப்பு
நிறமாகிப் போவதை அவர்கள் பார்த்தால் (முன்னர் நாம் செய்த
நன்மைகளை மறந்து) எம்மை மறுப்போராகி விடுகின்றனர்.
52எனவே உம்மால் இறந்தோரைச் செவியுறச் செய்யமுடியாது.
(உம்மைப் புறக்கணித்துப்) பின்வாங்கி ஓடும் செவிடர்களை
உம் அழைப்பைக் கேட்கும்படி செய்யவும் முடியாது.
53பார்வையற்றோரை அவர்களின் கெடுவழியிலிருந்து நல்வழிக்குக்
கொண்டுவரவும் உம்மால் முடியாது. எம் வசனங்களின் மீது
நம்பிக்கை கொண்டு கீழ்ப்படிந்தவர்களைத்தவிர வேறு எவரையும்
உம்மால் செவியுறச் செய்யமுடியாது.

54(மனிதர்களே!) அல்லாஹ்தான் உங்களை வலுவற்ற
நிலையில் படைத்தான். வலுவின்மைக்குப்பின் வலுவை
அளித்தான். வலுவுக்குப்பின் வலுவின்மையையும் முதுமையையும்
ஏற்படுத்தினான். தான் விரும்புவதை அவன் படைக்கிறான்.
அவன் முற்றும் அறிந்தவன்; பேராற்றலுடையவன். 55‘அந்தநேரம்’
நிலைபெறும் நாளில் “நாங்கள் ஒரு மணி நேரத்திற்கு
மேல் (உலகில்) தங்கியிருக்கவில்லை” என்று குற்றவாளிகள்
சத்தியம் செய்து கூறுவார்கள். இவ்வாறே அவர்கள் (திசை)
திருப்பப்பட்டு வந்தனர். 56ஆனால் அறிவும் (இறை)நம்பிக்கையும்
வழங்கப்பட்டவர்கள் “அல்லாஹ்வுடைய பதிவேட்டின்படி
நீங்கள் மீண்டும் எழுப்பப்படும் நாள்வரை (உலகில்)
தங்கியிருந்தீர்கள். இதுதான் ‘எழுப்பப்படும் நாள்’. ஆயினும்
நீங்கள் இதைப்பற்றி அறியாதவர்களாக இருந்தீர்கள்” என்று
கூறுவர். 57(மறுமையாகிய) அந்நாளில் தீவினையாளர்களின்

*சாக்குப்போக்குகள் பயனளிக்கமாட்டா. மன்னிப்புக் கோரும்படி அவர்கள் கூறப்படவும் மாட்டார்கள்.*

*[58]உறுதியாக இந்தக் குர்ஆனில் மனிதர்களுக்காகப் பலவிதமான எடுத்துக்காட்டுகளையும் எடுத்துரைத்திருக்கிறோம். ஆயினும் (நபியே!) நீர் அவர்களிடம் ஏதேனும் சான்றைக் கொண்டு வந்தால் "நீங்கள் அனைவரும் பொய்யரேயன்றி வேறில்லை" என்று மறுப்பாளர்கள் உறுதியாகக் கூறுவர். [59]இவ்வாறுதான் அல்லாஹ் அறிந்துகொள்ளாத உள்ளங்களின்மீது முத்திரையிட்டு விடுகிறான்.*
*[60]எனவே (நபியே!) நீர் பொறுமையுடன் இருப்பீராக! உறுதியாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. நம்பிக்கையற்றவர்கள் உம்மை ஒருபோதும் கலக்கமடையச் செய்துவிட வேண்டாம்.*

## 31. லுக்மான் (லுக்மான்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]அலிஃப் – லாம் – மீம்.*

*[2]இவை ஞானம் நிறைந்த வேதத்தின் வசனங்களாகும். [3]இது நன்மை செய்வோருக்கு நேர்வழிகாட்டியாகவும் அருளாகவும் உள்ளது. [4]அவர்கள் தொழுகையைக் கடைப்பிடிப்பார்கள்; கடமையாக்கப்பட்ட கொடையை வழங்குவார்கள்; மறுமையின் மீது உறுதியான நம்பிக்கை கொள்வார்கள். [5]அவர்கள்தாம் தம் இறைவனின் நேர்வழியில் இருப்பவர்கள்; அவர்கள்தாம் வெற்றியாளர்கள்.*

*[6]மக்களில் சிலர், அறிவின்றி இறைவழியிலிருந்து மக்களைப் பிறழச் செய்வதற்காகவும் அதனை ஏளனப்பொருளாக எடுத்துக்காட்டுவதற்காகவும் மதிமயக்கும் வீணான (கட்டுக்கதைச்) செய்திகளை விலைக்கு வாங்குகின்றனர். (மக்களிடையே படித்துக் காட்டுக்கின்றனர்). இத்தகையவர்களுக்கு இழிவுமிக்க வேதனை உண்டு. [7]அத்தகைய ஒருவனிடம் எம் வசனங்கள் எடுத்துரைக்கப்பட்டால் அவற்றைச் செவியுறாதவன் போலவும்*

*அவனது இரு காதுகளிலும் செவிட்டுத் தன்மையுள்ளவன் போலவும் செருக்குடன் முகம் திருப்பிக்கொள்கிறான். (நபியே!) அவனுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு எனும் 'நற்செய்தி'யைக் கூறிவிடுவீராக! [8]உறுதியாக நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்களுக்கு அருட்கொடைகள் நிறைந்த (சொர்க்கச்)சோலைகள் உண்டு. [9]அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பர். இது அல்லாஹ்வின் உண்மையான வாக்குறுதியாகும். அவன் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.*

*[10]அவன்தான் கண்களுக்குப் புலப்படக்கூடிய தூண்கள் எவையும் இன்றி வானங்களைப் படைத்தான். (மக்களே!) பூமி உங்களைச் சாய்த்து விடாதிருக்க அதில் மலைகளை முளைகளாக ஊன்றினான். அதில் அனைத்து வகையான உயிரினங்களையும் பரவச் செய்தான். (அல்லாஹ்வாகிய) நாமே வானத்திலிருந்து மழையை இறக்கி அனைத்து வகையான உயர்ந்த தாவரங்களையும் அதில் முளைக்கச் செய்தோம். [11]இவை அல்லாஹ்வின் படைப்புகளாகும். அவனைத் தவிர (நீங்கள் தெய்வங்கள் எனக்கூறும்) மற்றவர்கள் எதைப் படைத்துள்ளனர் என்பதை எனக்குக் காட்டுங்கள். உண்மையில் தீவினையாளர்கள் தெளிவான கெடுவழியில் இருக்கின்றனர்.*

*[12]உறுதியாக நாம் லுக்மானுக்கு ஞானத்தை வழங்கினோம். "நீர் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துவீராக! எவர் நன்றி செலுத்துகிறாரோ அவர் தம் நன்மைக்காகவே நன்றி செலுத்துகிறார். எவர் நன்றி மறக்கிறாரோ அவர் (தமக்கே தீங்கிழைத்துக் கொள்கிறார்; அதனால் அல்லாஹ்வுக்கு இழப்பொன்றுமில்லை) அல்லாஹ் தேவை எதுவுமற்றவன்; புகழுக்குரியவன்" (என்று கூறினோம்) [13]லுக்மான் தம் மகனுக்கு அறிவுரை வழங்கியபோது "என் அருமை மகனே! நீ அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்காதே! உறுதியாக இணைவைத்தல் மிகப்பெரும் தீவினையாகும்" என்று கூறியதை (நபியே! நீர்) நினைவுகூர்வீராக!*

[14]நாம் மனிதனை அவனுடைய பெற்றோருக்கு நன்றி
செலுத்துமாறு அறிவுறுத்தினோம். அவனது தாய் துன்பத்திற்கு
மேல் துன்பம் அனுபவித்து அவனைச் சுமந்தாள். அவனைப்
பால்குடி மறக்கச் செய்ய ஈராண்டுகள் ஆயின. எனவே
(மனிதனே!) எனக்கும் உன் பெற்றோருக்கும் நன்றி செலுத்து.
(முடிவில் நீ) என்னிடமே திரும்பிவர வேண்டியுள்ளது.
[15]ஆனால் நீ அறிந்திராத ஒன்றை எனக்கு இணையாக்குமாறு
அவர்கள் இருவரும் உன்னை வற்புறுத்தினால் நீ அவர்களுக்குக்
கீழ்ப்படியவேண்டாம். ஆயினும் இவ்வுலகில் அவர்களுடன்
நல்லமுறையில் நடந்துகொள். என்னையே முன்நோக்கியவர்களின்
வழியைப் பின்பற்று. இறுதியில் நீங்கள் (அனைவரும்) என்னிடமே
திரும்பிவர வேண்டியுள்ளது. அப்போது நீங்கள் செய்து
கொண்டிருந்தவற்றைக் குறித்து நான் உங்களுக்கு அறிவிப்பேன்.

[16](மேலும் லுக்மான் தம் மகனை நோக்கி) “என் மகனே!
ஏதேனும் ஒரு பொருள் கடுகு வித்தளவு இருந்தாலும் சரி, அது
ஏதேனும் ஒரு பாறைக்குள்ளோ வானங்களிலோ பூமியிலோ
(மறைந்து) கிடந்தாலும் சரி, அல்லாஹ் அதனை வெளிக்கொண்டு
வருவான். உறுதியாக அல்லாஹ் நுட்பமானவன்; நன்கறிந்தவன்”
(என்றும் கூறினார்.) [17]“என் மகனே! தொழுகையைக் கடைப்பிடி;
நன்மை செய்யுமாறு தூண்டு; தீமை செய்வதைத் தடு; (அதனால்)
உனக்கு வரக்கூடிய துன்பங்களைப் பொறுத்துக்கொள். உறுதியாக
இதுவே மனவுறுதிமிக்க செயலாகும். [18](செருக்குக்கொண்டு)
மக்களிடமிருந்து உன் முகத்தைத் திருப்பிக்கொள்ளாதே. பூமியில்
செருக்குக்கொண்டு திரியாதே; பெருமையடிக்கும் எவரையும்
அல்லாஹ் நேசிக்கமாட்டான். [19]உன் நடையில் மிதமான
வேகத்தைக் கடைப்பிடி, உன் குரலைத் தாழ்த்திக்கொள்.
உறுதியாக, குரல்களிலெல்லாம் வெறுக்கத்தக்கது கழுதையின்
(உரத்த) குரலேயாகும்” (என்றும் அறிவுரைகள் கூறினார்.)

[20]*(மனிதர்களே!) வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றை*
*அவன் உங்களுக்கு வசப்படுத்தித் தந்திருப்பதையும் தன்*
*அருட்கொடைகளை உங்களுக்கு வெளிப்படையாகவும்*
*மறைமுகமாகவும் நிறைவாக வழங்கியிருப்பதையும் நீங்கள்*
*பார்க்கவில்லையா? (இவ்வாறிருந்தும்) மனிதர்களில் சிலர்*
*அறிவோ வழிகாட்டுதலோ ஒளியூட்டும் வேத(ஆதார)மோ இன்றி*
*அல்லாஹ்வைப்பற்றி வீண் வாதம் புரிகின்றனர். [21]"அல்லாஹ்*
*இறக்கி அருளியுள்ள இ(வ்வேதத்)தைப் பின்பற்றுங்கள்" என்று*
*அவர்களிடம் கூறப்பட்டால் இல்லை, எங்கள் முன்னோர்களை*
*எவ்வழியில் கண்டோமோ அதைத்தான் நாங்கள் பின்பற்றுவோம்"*
*என்று அவர்கள் கூறுகின்றனர். சாத்தான் அம்முன்னோர்களை*
*நரக வேதனையின்பால் அழைத்திருந்தாலுமா (இவர்கள்*
*அவர்களைப் பின்பற்றுவார்கள்?)*

[22]*எவர் தம் முகத்தை முற்றிலும் அல்லாஹ்வின்பால் திருப்பி*
*நற்செயல் புரிபவராகவும் இருக்கிறாரோ அவர் உறுதிமிக்க*
*(திரிக்கப்பட்ட கயிற்றின்) பிடிமானத்தைப் பற்றிப் பிடித்துக்*
*கொண்டவராவார். அனைத்து விவகாரங்களின் முடிவும்*
*அல்லாஹ்விடமே உள்ளது. [23](நபியே!)மறுப்பாளரின் மறுப்பு*
*உம்மைக் கவலைக்குள்ளாக்க வேண்டாம். (ஏனெனில்)*
*எம்மிடமே அவர்கள் திரும்ப வர வேண்டியுள்ளது. அப்போது*
*அவர்கள் செய்தவை குறித்து நாம் அவர்களுக்கு அறிவிப்போம்.*
*உறுதியாக அல்லாஹ் (மனித) உள்ளங்களில் உள்ளவற்றையும்*
*நன்கறிந்தவன். [24]சில காலம்வரை அவர்களை நாம் அனுபவிக்க*
*விட்டு விடுவோம். பின்னர் அவர்களைக் கடும் வேதனையின்பால்*
*தள்ளிவிடுவோம்.*

[25]*(நபியே!) "வானங்களையும் பூமியையும் படைத்தவன்*
*யார்?" என்று நீர் அவர்களிடம் கேட்டால் 'அல்லாஹ்தான்'*
*என்று உறுதியாக அவர்கள் கூறுவர். "அனைத்துப் புகழும்*
*அல்லாஹ்வுக்கே" என்று நீர் கூறுவீராக! ஆயினும் அவர்களில்*
*பெரும்பாலோர் (உண்மையை) அறியமாட்டார்கள்.*

[26]வானங்களிலும் பூமியிலும் உள்ளவை அல்லாஹ்வுக்கே உரியன.
உறுதியாக அல்லாஹ் தேவை எதுவுமற்றவன்; புகழுக்குரியவன்.
[27]பூமியிலுள்ள மரங்களெல்லாம் எழுதுகோல்களாகவும் கடலுடன்
இன்னும் ஏழு கடல்கள் சேர்ந்து மையாகவும் இருந்தால்கூட
இறைவனின் வார்த்தைகளை எழுதி முடிக்க இயலாது*. அவன்
யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.

[28]உங்கள் அனைவரைப் படைப்பதும் (பின்னர் மீண்டும்)
உயிர்கொடுத்து எழுப்புவதும் (தொடக்கத்தில்) இன்மையிலிருந்து
ஒருவரைப் படைத்ததைப் போலன்றி வேறில்லை. உறுதியாக
அவன் (யாவற்றையும்) செவியுறுபவன்; உற்று நோக்குபவன்.
[29](நபியே!) நீர் அறியவில்லையா? அல்லாஹ்தான் இரவைப்
பகலில் புகுத்துகின்றான்; பகலை இரவில் புகுத்துகின்றான்.
அவன்தான் சூரியனையும் சந்திரனையும் (தன் நியதிக்குள்)
கட்டுப்படுத்தியுள்ளான். ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட
தவணைவரை ஓடிக்கொண்டிருக்கும். உறுதியாக அல்லாஹ்
நீங்கள் செய்பவற்றைத் தெரிந்தவன். [30]அல்லாஹ்தான்
உண்மையானவன், அவனைத்தவிர (இணைகற்பிக்கும்) அவர்கள்
அழைப்பவை அனைத்தும் பொய்யானவை. அல்லாஹ்வே மிக
உயர்ந்தவன்; மிகப் பெரியவன்.

[31]இறையருளால் கடலில் கப்பல் செல்கிறது; அது அவன்
சான்றுகளை உங்களுக்குக் காட்டுவதற்காகவேயாகும் என்பதை
நீங்கள் அறியவில்லையா? பொறுமையும் நன்றியுணர்வுமுள்ள
ஒவ்வொருவருக்கும் இதில் பல்வேறு சான்றுகள் உள்ளன.
[32](கடற்பயணத்தில்) மலைகளைப் போன்ற (உயரமான) அலைகள்
அவர்களைச் சூழ்ந்துகொண்டால் அல்லாஹ்வின் மீது மட்டுமே

---

*இறைவனுடைய வார்த்தைகளையும் இறைவனைப் பற்றிய வார்த்தைகளையும் குறிக்கும். அவன் படைத்த எண்ணிலாப் பிரபஞ்சங்களின் ஒவ்வோர் அணுவுக்கும் ஒவ்வொரு கணமும் அவன் அனுப்பும் கட்டளைகள். வியந்து போற்றி வடிக்க முயலும் மானிட வார்த்தைகள் இவ்விருவகை வார்த்தைகளும் என்றும் எவராலும் எவ்வகையிலும் எழுதிமுடிக்க முடியாதவை.

நம்பிக்கைகொண்டு மனத்தூய்மையுடன் அவனையே இறைஞ்சுகின்றனர். ஆனால் அவன் அவர்களைக் காப்பாற்றிக் கரை சேர்த்துவிட்டால் அவர்களில் சிலர் (நம்பிக்கைக்கும் மறுப்புக்கும்) இடைப்பட்ட நிலையில் இருக்கின்றனர். நன்றிகெட்ட சதிகாரர்களையன்றி (வேறெவரும்) எமது சான்றுகளை மறுப்பதில்லை.

33மனிதர்களே! உங்கள் இறைவனுக்கு அஞ்சி (நடந்து) கொள்ளுங்கள். மேலும் ஒரு நாளைக் குறித்தும் அஞ்சுங்கள். அந்த நாளில் எந்தத் தந்தையும் தன் பிள்ளைக்கு எத்தகைய உதவியும் செய்ய முடியாது. எந்தப் பிள்ளையும் தன் தந்தைக்கு எத்தகைய உதவியும் செய்ய முடியாது. உறுதியாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. ஆகவே இவ்வுலக வாழ்க்கை உங்களை ஏமாற்றிவிட வேண்டாம். (சாத்தானாகிய) ஏமாற்றுக்காரனும் அல்லாஹ்வின் விஷயத்தில் உங்களை ஏமாற்றிவிட வேண்டாம்.
34‘அந்த நேரத்தைப்’ பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது. அவன்தான் மழையைப் பொழிவிக்கிறான். கருவறைகளில் உள்ளவற்றையும் அவன் அறிவான். எந்த ஆன்மாவும் தான் நாளை என்ன ஈட்டுவோம் என்பதை அறியாது. எந்த ஆன்மாவும் தான் எந்த பூமியில் இறப்போம் என்பதையும் அறியாது. உறுதியாக அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; (யாவற்றையும்) நன்கு தெரிந்திருப்பவன்.

## 32. தலைவணங்கல் (அஸ்ஸஜ்தா)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

1அலிஃப் – லாம் – மீம்.

2(நபியே!) இது அனைத்துலகங்களின் இறைவனிடமிருந்து அருளப்பட்ட வேதம் என்பதில் எத்தகைய ஐயமும் இல்லை.
3“இதனை இவர் தாமாகப் புனைந்து கொண்டார்” என்று அவர்கள் கூறுகிறார்களா? அப்படியல்ல. இது உமக்குமுன்

*எச்சரிப்பவர் எவரும் வந்திராத ஒரு சமூகத்தாருக்கு அவர்கள் நேர்வழி அடையும்பொருட்டு நீர் எச்சரிக்கை செய்யவேண்டும் என்பதற்காக உம் இறைவனிடமிருந்து வந்துள்ள சத்தியமாகும்.*

*4அல்லாஹ்தான் வானங்களையும் பூமியையும்
அவற்றிற்கிடையில் உள்ளவற்றையும் ஆறு நாட்களில் படைத்தான்.
பின்னர் இறையிருக்கையின் மேல் உயர்ந்துவிட்டான்.
அவனைத்தவிர உங்களுக்கு உதவுபவரோ பரிந்து பேசுபவரோ
எவரும் இல்லை. நீங்கள் சிந்திக்கமாட்டீர்களா? 5வானத்திலிருந்து
பூமிவரையுள்ள செயல்கள் அனைத்தையும் அவன்தான்
நிர்வகிக்கிறான். அவை ஒருநாள் அவனிடமே சென்றுவிடும்.
அந்த நாளின் அளவு உங்கள் கணக்கின்படி ஆயிரம்
ஆண்டுகளுக்குச் சமமாகும். 6அவன் மறைவானவற்றையும்
வெளிப்படையானவற்றையும் நன்கறிந்தவன்; அவன் யாவற்றினும்
வல்லவன்; நிகரற்ற அன்பாளன். 7அவன் தான் படைத்த ஒவ்வொரு
பொருளையும் நேர்த்தியாகப் படைத்தான். மனிதப் படைப்பைக்
களிமண்ணிலிருந்து தொடங்கினான். 8பின்னர் அற்பத் துளியின்
சாரத்திலிருந்து மனிதனது வழித்தோன்றல்களை உருவாக்கினான்.
9பின்னர் அவனைச் செம்மையாக வடிவமைத்துத் தனது
ஆன்மாவை அவனுள் ஊதினான். உங்களுக்குச் செவிகளையும்
கண்களையும் உள்ளங்களையும் அமைத்தான். ஆயினும் நீங்கள்
நன்றி செலுத்துவது அரிதே!*

*10"பூமியில் நாங்கள் மறைந்து (ஒன்றுமில்லாமல்) போய்விட்ட
பின்னர் மீண்டும் புதிதாகப் படைக்கப்படுவோமா?" என்று
அவர்கள் கேட்கின்றனர். உண்மையில் அவர்கள் தங்கள்
இறைவனின் சந்திப்பையே மறுப்போராக உள்ளனர். 11(நபியே!)
அவர்களிடம் "உங்களுக்கென நியமிக்கப்பட்டுள்ள மரணத்தின்
வானவர் உங்கள் உயிரைக் கைப்பற்றிக்கொள்வார்; பின்னர் உங்கள்
இறைவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்" என்று
நீர் கூறும். 12அந்தோ! (மறுமை நாளில் இந்தக்) குற்றவாளிகள்
தம் இறைவனுக்கு முன்னால் தலைகுனிந்தவர்களாக நிற்பதை*

*நீர் பார்க்கவேண்டுமே! "எங்கள் இறைவா! நாங்கள் பார்த்துக் கொண்டோம், கேட்டுக்கொண்டோம். எனவே எங்களைத் திரும்பவும் (பூமிக்கே) அனுப்பிவிடு. நாங்கள் நற்செயல்புரிவோம். உறுதியாக நாங்கள் நம்பிக்கைகொண்டு விட்டோம்" என்று அவர்கள் இறைஞ்சுவர். [13]நாம் விரும்பியிருந்தால் இவர்களில் ஒவ்வொருவருக்கும் (உலகில்) நேர்வழிகாட்டியிருப்போம். ஆயினும் (பாவிகளாகிய) 'ஜின்களையும் மனிதர்களையும் கொண்டு நான் நரகத்தை நிரப்புவேன்' என்ற எமது கூற்று (முன்பே) உறுதியாகி விட்டது. [14]எனவே "இந்த நாளின் சந்திப்பை நீங்கள் மறந்ததன் பயனை அனுபவியுங்கள்; நாமும் உங்களை மறந்துவிட்டோம். உங்களின் தீவினைகளின் பயனாக என்றென்றும் வேதனையை அனுபவியுங்கள்" என்று அவர்களிடம் கூறப்படும்.*

*[15]எமது வசனங்கள் நினைவூட்டப்படும் போது, யார் தலைவணங்கி வீழ்ந்து தங்கள் இறைவனைப் புகழ்ந்து போற்றுகின்றனரோ அவர்களே எமது வசனங்கள் மீது நம்பிக்கைகொள்பவர்கள் ஆவர். அவர்கள் செருக்குக் கொள்ளமாட்டார்கள். [16](இரவில்) அவர்களுடைய விலாப்புறங்கள் படுக்கைகளிலிருந்து விலகியிருக்கும். அவர்கள் அச்சத்துடனும் ஆர்வ எதிர்பார்ப்புடனும் தம் இறைவனை இறைஞ்சுவர். நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து (அறச்) செலவும் செய்வர். [17]அவர்களின் (நற்)செயல்களுக்குக் கூலியாக மறைத்து வைக்கப்பட்டுள்ள கண்குளிர்ச்சி தரும் இன்பங்களை எவரும் அறியமாட்டார்கள்.*

*[18]நம்பிக்கைகொண்டவர், கீழ்ப்படியாதவரைப் போன்றவராவாரா? இருவரும் சமமாகமாட்டார்கள். [19]நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர்களுக்கு அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றிற்காகச் சொர்க்கத்தில் விருந்தினர் போன்ற போற்றுதலுடன் உறைவிடங்கள் கிடைக்கும். [20]ஆனால் கீழ்ப்படியாதவர்கள் (நரக) நெருப்பையே தங்குமிடமாகப் பெறுவர். அதிலிருந்து அவர்கள் வெளியேற முயலும்போதெல்லாம்*

மீண்டும் அதிலேயே தள்ளப்படுவர். அப்போது அவர்களிடம்,
“எதனை நீங்கள் பொய்மைப்படுத்திக் கொண்டிருந்தீர்களோ
அந்த நரக வேதனையைச் சுவையுங்கள்” என்று கூறப்படும்.
21அந்தப் பெரும் வேதனைக்கு முன்பு, அவர்கள் (எம் பக்கம்)
திரும்பிவிடும் பொருட்டு (இம்மையில்) சிறிய வேதனையை
சுவைக்கும்படி செய்வோம். 22தன் இறைவனின் வசனங்களின்மூலம்
அறிவுரை வழங்கப்பட்ட பின்னரும் அவ்வசனங்களைப்
புறக்கணிப்பவனைவிட மிகப்பெரிய முறைகேடன் யார்? நாம்
குற்றவாளிகளைத் தண்டித்தே தீருவோம்.

23(நபியே!) உறுதியாக நாம் மோசேவுக்கு (தவ்ராத்)
வேதத்தை வழங்கினோம். எனவே அது போன்ற(வேதத்)தை
நீர் பெறுவது குறித்து ஐயப்படாதீர். நாம் அதனை
(தவ்ராத்) இஸ்ராயீலின் மக்களுக்கு வழிகாட்டியாகவும்
ஆக்கினோம். 24அவர்கள் பொறுமையைக் கடைப்பிடித்து எமது
வசனங்களின்மீது உறுதியான நம்பிக்கை கொண்டிருந்தவரை எம்
கட்டளைப்படி வழிநடத்தும் தலைவர்களை அவர்களிலிருந்து
நாம் ஏற்படுத்தினோம். 25(நபியே!) அவர்கள் (தமக்கிடையில்)
முரண்பட்டுக் கொண்டிருந்த விஷயங்களில் உம் இறைவன்
அவர்களிடையே மறுமை நாளில் தீர்ப்பளிப்பான். 26நாம்
(மக்காவின் இணைவைப்பாளர்களாகிய) இவர்களுக்குமுன்
எத்தனையோ சமூகங்களை அழித்திருக்கின்றோம் என்பதிலிருந்து
இவர்கள் படிப்பினை பெறவில்லையா? அவர்கள் வாழ்ந்த
இடங்களின் வழியாகத் தானே (பயணத்தில்) இவர்கள் நடந்து
கொண்டிருக்கின்றனர்! உறுதியாக இதில் பல்வேறு சான்றுகள்
உள்ளன. இவர்கள் செவிசாய்க்க மாட்டார்களா என்ன?

27இவர்கள் கவனிக்கவில்லையா? நாம் வறண்ட பூமியை நோக்கி
மேகத்தை ஓட்டி (மழை)பொழியச் செய்வதன்மூலம் இவர்களும்
இவர்களது கால்நடைகளும் உண்ணக்கூடிய பயிர்களை முளைக்கச்
செய்கிறோம். (இவர்கள் உற்றுப்) பார்க்கமாட்டார்களா?

[28]“நீங்கள் உண்மையாளர்களாயின் இந்தத் தீர்ப்பு எப்போது
(வரும் என்று சொல்லுங்கள்”) என (ஏளனமாக) இவர்கள்
கேட்கின்றனர். [29](நபியே!) நீர் “மறுப்பாளர்கள் தீர்ப்பு
நாளன்று நம்பிக்கைகொள்வது அவர்களுக்குப் பயன் தராது.
அவர்களுக்குத் தவணை அளிக்கப்படவும் மாட்டாது” என்று
கூறும். [30]நீர் இவர்களைப் புறக்கணித்து (மறுமையாகிய
அந்நாளை) எதிர்பார்த்திருப்பீராக! இவர்களும் எதிர்பார்த்துக்
கொண்டிருக்கிறார்கள்.

## 33. படையினர் (அல்அஹ்ஸாப்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

[1]நபியே! அல்லாஹ்வுக்கு அஞ்சுவீராக! மறுப்பாளர்களுக்கும்
நயவஞ்சகர்களுக்கும் இசையாதீர். உறுதியாக அல்லாஹ் முற்றும்
அறிந்தவன்; ஞானம் மிக்கவன். [2]உம் இறைவனிடமிருந்து உமக்கு
அறிவிக்கப்படுவதைப் பின்பற்றுவீராக! உறுதியாக அல்லாஹ்
நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவன். [3]அல்லாஹ்வையே
முழுமையாகச் சார்ந்திருப்பீராக! அல்லாஹ்வே பொறுப்பேற்கப்
போதுமானவன்.

[4](மக்களே! ஒரே நேரத்தில் முரணான இரண்டு விஷயங்களை
ஏற்றுக்கொள்ள) எந்த மனிதனுடைய நெஞ்சுக்குள்ளும் இரண்டு
இதயங்களை அல்லாஹ் அமைத்திடவில்லை. உங்கள் மனைவியரில்
யாரை நீங்கள் உங்கள் தாயுடன் ஒப்பிட்டீர்களோ அவர்களை
உங்களுக்கு அவன் அன்னையர்களாக்கவில்லை. உங்கள் வளர்ப்பு
மகன்களை உங்களின் சொந்த மகன்களாக்கவில்லை. இவை
யாவும் உங்கள் வாய்ப்பேச்சுகளாகும். அல்லாஹ் உண்மையைக்
கூறுகிறான்; நேர்வழியைக் காட்டுகிறான். [5]வளர்ப்பு மகன்களை
அவர்களின் (சொந்தத்) தந்தையர்(பெயர்)களுடன் சேர்த்து
அழையுங்கள். இதுவே அல்லாஹ்விடம் மிகவும் முறையானதாகும்.
அவர்களின் தந்தையர் (இன்னாரென்று) உங்களுக்குத்

*தெரியாவிட்டால் அவர்கள் உங்களுக்கு மார்க்கச் சகோதர்களும் உங்கள் நண்பர்களும் ஆவர். இவற்றில் நீங்கள் அறியாமல் தவறுதலாக அழைத்திருந்தால் உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை. ஆயினும் நீங்கள் மனமறிய வேண்டுமென்றே செய்திருந்தால் (அது குற்றமாகும்) அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

[6]*நம்பிக்கையாளர்களுக்குத் தங்கள் உயிர்களைவிடவும் இத்தூதர் மேலானவர். தூதருடைய மனைவியர் அவர்களுக்கு அன்னையர்களாவர். (சொத்துரிமையைப் பொறுத்தவரை) இறைவேதத்தின்படி (மற்ற) நம்பிக்கையாளர்களை விடவும் புலம்பெயர்ந்தவர்களை விடவும் உறவினர்களே ஒருவருக் கொருவர் நெருங்கிய(உரிமையுடைய)வர்கள் ஆவர். ஆயினும் உங்கள் நண்பர்களுக்கு நீங்கள் (ஏதேனும்) நன்மை செய்ய விரும்பினால் (செய்துகொள்ளலாம்). இது வேதத்தில் எழுதப்பட்டதாகும்.*

[7]*(நபியே! பொதுவாக) நாம் தூதர்களிடமும் (சிறப்பாக) உம்மிடமும் நோவா, ஆப்ரஹாம், மோசே மற்றும் மர்யத்தின் மைந்தர் இயேசு ஆகியோரிடமும் (இறைச்செய்தியை மக்களுக்கு எடுத்துரைத்து நேர்வழிகாட்ட) வாக்குறுதி பெற்றோம்; அவர்களிடம் நாம் வலுவான உறுதிமொழியைப் பெற்றோம் (என்பதை இவர்களுக்கு நினைவூட்டுவீராக!)*
[8]*உண்மையாளர்(களாகிய அத்தூதர்)களிடம் அவர்களின் உண்மையைக் குறித்து விசாரிக்க வேண்டும் என்பதற்காக அல்லாஹ் (இவ்வாறு உறுதிமொழி பெற்றான்). மறுப்பாளர்களுக்கு அவன் துன்புறுத்தும் வேதனையைத் தயார்செய்து வைத்துள்ளான்.*

[9]*நம்பிக்கையாளர்களே! அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய அருட்கொடையை நினைவுகூருங்கள். (வலிமையான எதிரிப்) படைகள் உங்களைத் தாக்க வந்தபோது (புயல்) காற்றையும் உங்கள் பார்வைக்குத் தென்படாத படைகளையும் அவர்களுக்கெதிராக நாம் அனுப்பினோம். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் கூர்ந்து பார்த்துக் கொண்டுதான் இருந்தான்.*
[10]*அவர்கள் மேற்புறத்திலிருந்தும்*

*கீழ்ப்புறத்திலிருந்தும் வந்தபோது உங்கள் பார்வைகள் நிலைகுத்தி, இதயங்கள் தொண்டைக்குழியை அடைந்துவிட்டன. (அப்போது) நீங்கள் அல்லாஹ்வைப்பற்றிப் பல்வேறு (தவறான) எண்ணங்களைக் கொண்டிருந்தீர்கள். [11]அந்த நேரத்தில் நம்பிக்கையாளர்கள் சோதனைக்குள்ளாக்கப்பட்டனர்; கடுமையான அதிர்ச்சிக்குள்ளாக்கப்பட்டனர்.*

*[12]"அல்லாஹ்வும் அவனது தூதரும் (வெற்றி நமக்கே என) அளித்த வாக்குறுதி வெறும் ஏமாற்றுதான்" என்று நயவஞ்சகர்களும் உள்ளங்களில் நோயுள்ளவர்களும் கூறிக்கொண்டிருந்ததை நினைத்துப் பாருங்கள்! [13]அவர்களில் ஒரு சாரார் "யஸ்ரிப் (மதீனா)வாசிகளே! நீங்கள் (எதிரிகளின் தாக்குதலை எதிர்த்து இங்கே) நிற்க முடியாது. ஆகவே திரும்பிச் சென்றுவிடுங்கள்" என்று கூறியதையும் நினைத்துப் பாருங்கள். அவர்களில் மற்றொரு சாரார் "உறுதியாக எங்கள் வீடுகள் பாதுகாப்பற்ற நிலையில் உள்ளன" என்று (பொய்க்காரணம்) கூறித் தூதரிடம் (போர்க்களத்தினின்றும் திரும்பிவிட) அனுமதி கோரினர். அவர்களின் வீடுகளோ பாதுகாப்பற்ற நிலையில் இல்லை. உண்மையில் அவர்கள் (களத்தினின்றும்) ஓடிவிடவே விரும்பினர். [14]எதிரிகள் நகரின் நாலாபுறமிருந்தும் நுழைந்து குழப்பம் விளைவிப்பதற்காக அவர்களை அழைத்திருந்தால் உறுதியாக அவர்கள் (ஆதரவாக) பதிலளித்திருப்பார்கள். சிறிதும் தாமதித்திருக்க மாட்டார்கள். [15]ஆயினும் அவர்கள் "புறங்காட்டி ஓட மாட்டோம்" என்று முன்னரே அல்லாஹ்விடம் உறுதிமொழி அளித்திருந்தனர். அல்லாஹ்விடம் அவர்கள் அளித்த உறுதிமொழி குறித்து விசாரிக்கப்படும். [16](நபியே!) நீர் கூறும்: "சாவைக் கண்டோ, கொல்லப்படுவோம் என்றோ நீங்கள் வெருண்டோடினால் அது உங்களுக்கு எந்தப் பயனையும் அளிக்காது. உங்களால் சிறிதுகாலம் மட்டுமே அனுபவிக்க முடியும்"* [17](மேலும்) நீர் "அல்லாஹ் உங்களுக்குத் துன்பம்*

---

**முன்னுரை காண்க : பக்கம் எண் XX*

*தர விரும்பினால் அவனிடமிருந்து உங்களைக் காப்பவர் யார்? அல்லது அவன் உங்களுக்கு அருள்புரிய விரும்பினால் (அதனைத் தடை செய்பவர் யார்?)" என்று கேட்பீராக! அல்லாஹ்வையன்றித் தங்களுக்கு (வேறு) உதவியாளனையோ பாதுகாவலனையோ அவர்கள் காணமுடியாது.*

[18]*உங்களில் (போருக்குச் செல்வோரைத்) தடுப்பவர்களையும் தம் சகோதர்களிடம் "(போருக்குச் செல்லாமல்) எங்களிடம் வந்துவிடுங்கள்" என்று கூறுபவர்களையும் அல்லாஹ் நன்கறிவான். அவர்கள் மிக அரிதாகவே அன்றிப் போருக்கு வருவதில்லை.*
[19]*அவர்கள் உங்களுக்கு உதவுவதில் கஞ்சத்தனம் செய்கின்றனர். (நபியே! எதிரிகளால்) அச்சம் நேரும்போது மரணவேளையில் மருள்பவரைப் போல அவர்களின் கண்கள் சுழன்று சுழன்று உம்மைப் பார்ப்பதை நீர் காண்பீர். (நம்பிக்கையாளர்களுக்கு வெற்றி கிடைத்து) அச்சம் நீங்கிவிட்டால் (போரில் கிடைத்த) செல்வத்தின்மீது பேராசைகொண்டு கூர்மையான நாவுகளால் உங்களை(க் குற்றங்குறைகள் கூறி)த் துன்புறுத்துகின்றனர். அவர்கள் நம்பிக்கை கொள்ளவில்லை. ஆகவே அவர்கள் (செய்திருந்த நற்)செயல்களை அல்லாஹ் அழித்து விட்டான். இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது.* [20]*(முற்றுகையிட்டிருந்த*
*பகைவர் திரும்பிச் சென்ற பின்னரும் அப்)படைகள் இன்னும் போகவில்லை என்றே அவர்கள் எண்ணுகின்றனர். (ஒருவேளை) அப்படைகள் (திரும்ப) வந்துவிட்டால் (ஊரைவிட்டு ஓடி வனத்தில்) நாட்டுப்புற மக்களுடன் இருந்துகொண்டு உங்களைப்பற்றிய செய்திகளை விசாரித்தறியவே விரும்புவர். அவர்கள் உங்களுடன் இருந்திருந்தாலும் (அரிதாகச்) சிறிது நேரமேதான் போரிடுவார்கள்.*

[21]*உங்களில் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பி அல்லாஹ்வை மிக அதிகமாக நினைவுகூர்வோர்க்கு அல்லாஹ்வின் தூதரிடம் அழகிய முன்மாதிரி இருக்கிறது.* [22]*நம்பிக்கையாளர்கள்*
*எதிரிகளின் படைகளைப் பார்த்தபோது, "இதுதான் அல்லாஹ்வும்*

அவனுடைய தூதரும் நமக்கு வாக்களித்தது. அல்லாஹ்வும்
அவனுடைய தூதரும் உண்மையே கூறினார்கள்” என்றனர். அது
அவர்களின் நம்பிக்கையையும் கீழ்ப்படிதலையுமே அதிகரித்தது.
23நம்பிக்கையாளர்களில் இப்படியும் சில மனிதர்கள் இருக்கிறார்கள்.
அவர்கள் அல்லாஹ்விடம் செய்த வாக்குறுதியை நிறைவேற்றி
விட்டனர். அவர்களில் சிலர் தம் பொறுப்பை முழுமைப்படுத்தி
விட்டனர். சிலர் அதனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர்.
அவர்கள் தம் வாக்குறுதியில் சிறிதும் மாறுபட்டுவிடவில்லை.
24இது (நிகழ்ந்தது) அல்லாஹ் உண்மையாளர்களுக்கு அவர்களின்
உண்மைக்கான கூலியை வழங்குவதற்காகவும் நயவஞ்சகர்களை
அவன் விரும்பினால் தண்டிப்பதற்காகவும் அல்லது (விரும்பினால்)
மன்னித்து விடுவதற்காகவும்தான். உறுதியாக அல்லாஹ் பெரும்
மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.

25மறுப்பாளர்களை அவர்களின் கடுஞ்சினத்துடனேயே
அல்லாஹ் திருப்பி அனுப்பிவிட்டான். அவர்கள் எந்த ஒரு
நன்மையையும் பெறவில்லை. இந்த(அகழ்)ப் போரில்
நம்பிக்கையாளர்களைக் காக்க இறைவனே
போதுமானவனாயிருந்தான். அல்லாஹ் வலிமை மிக்கவன்;
யாவற்றினும் வல்லவன்.

26தாக்கவந்த படையினருக்கு உதவிபுரிந்த வேதமுடையோரை
அவர்களின் கோட்டைகளிலிருந்து அவன் இறக்கினான்; அவர்களின்
உள்ளங்களில் திகிலை ஏற்படுத்தினான். அவர்களில் ஒரு சாராரை
நீங்கள் கொன்றீர்கள். மற்றொரு சாராரைச் சிறைப் பிடித்தீர்கள்.
27அவர்களின் நிலம், வீடுகள், செல்வங்கள் மற்றும் நீங்கள்
(இதுவரை) கால் வைக்காத (அவர்களின் பிற) பூமி ஆகியவற்றுக்கு
உங்களை அவன் உரிமையாளர்களாக்கினான். அல்லாஹ்
அனைத்துப் பொருள்களின்மீதும் பேராற்றலுடையவன்.

28(நபியே!) நீர் உம் மனைவியரிடம் “நீங்கள் இவ்வுலக
வாழ்க்கையையும் அதன் அலங்காரத்தையும் விரும்பினால்,
வாருங்கள், நான் உங்களுக்கு ஓரளவு செல்வத்தைக் கொடுத்து

*அழகிய முறையில் உங்களை அனுப்பிவிடுகிறேன். [29]ஆனால்
நீங்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறுமையின்
(சொர்க்க)வீட்டையும் விரும்புவீர்களாயின் அறிந்துகொள்ளுங்கள்!
உங்களில் நற்செயல்புரிவோருக்கு அல்லாஹ் பெரும் கூலியைத்
தயார் செய்துவைத்துள்ளான்" என்று கூறுவீராக! [30]தூதரின்
மனைவியரே! உங்களில் யாரேனும் வெளிப்படையான
மானக்கேடான செயலைச் செய்தால் (மறுமையில்) அவருக்கு
இருமடங்கு வேதனை அளிக்கப்படும். இது அல்லாஹ்வுக்கு மிக
எளிதானது.*

*[31]உங்களில் எவர் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும்
கட்டுப்பட்டு நற்செயல் புரிகிறாரோ அவருக்குரிய கூலியை நாம்
இரு மடங்காக்குவோம். மேலும் நாம் அவர்களுக்குக் கண்ணியமான
வாழ்வாதாரத்தையும் தயார்செய்து வைத்துள்ளோம். [32]தூதரின்
மனைவியரே! நீங்கள் மற்ற (சாதாரணப்) பெண்களைப்
போன்றவர்களல்லர். நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுவீர்களாயின்
(அந்நியருடன் பேசும்போது) உங்கள் பேச்சில் நளினம்
காட்டாதீர்கள். உள்ளத்தில் நோயுள்ளவன் சபலம் கொள்ளக்கூடும்.
எனவே நீங்கள் தகுந்த முறையில் பேசுங்கள். [33]நீங்கள் உங்கள்
வீடுகளில் தங்கியிருங்கள். முந்தைய அறியாமைக் காலத்துப்
பெண்கள் (தங்களை அழகு செய்துகொண்டு வெளியில்)
சுற்றித் திரிந்ததுபோல் நீங்கள் திரியாதீர்கள். தொழுகையைக்
கடைப்பிடியுங்கள். கடமையாக்கப்பட்ட கொடையையும்
அளித்து வாருங்கள். அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும்
கீழ்ப்படியுங்கள். தூதரின் குடும்பத்தினரே! உங்களிடமிருந்து
அனைத்து மாசுகளையும் போக்கி உங்களை முழுமையாகத்
தூய்மைப்படுத்தவே அல்லாஹ் விரும்புகிறான். [34]உங்கள்
வீடுகளில் ஓதப்படுகின்ற இறைவசனங்களையும் ஞானத்தையும்
நினைவில் வையுங்கள். உறுதியாக அல்லாஹ் நுண்ணறிவாளன்;
நன்கறிந்தவன்.*

*[35]உறுதியாகக் கீழ்ப்படிகின்ற ஆண்களும் பெண்களும்
நம்பிக்கைகொண்ட ஆண்களும் பெண்களும் (இறைவனுக்கு)*

*வழிப்படும் ஆண்களும் பெண்களும் வாய்மையான ஆண்களும் பெண்களும், பொறுமையைக் கடைப்பிடிக்கும் ஆண்களும் பெண்களும், பணிவுகொண்ட ஆண்களும் பெண்களும், ஈகை புரியும் ஆண்களும் பெண்களும், நோன்பு நோற்கும் ஆண்களும் பெண்களும், தங்கள் கற்பைப் பாதுகாத்துக் கொள்ளும் ஆண்களும் பெண்களும், அல்லாஹ்வை அதிகமாக நினைவுகூரும் ஆண்களும் பெண்களும் ஆகிய இவர்களுக்காக அல்லாஹ் மன்னிப்பையும் பெரும் கூலியையும் தயார்செய்து வைத்துள்ளான்.*
[36]*அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஒரு விஷயத்தில் தீர்ப்பளித்துவிட்ட பின்னர் நம்பிக்கைகொண்ட எந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் அதில் சுயமுடிவு எடுத்துக் கொள்வதற்கு உரிமை இல்லை. அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படியாதவர் வெளிப்படையான கெடுவழியில் இருப்பவராவார்.*

[37]*நபியே! நீர் நினைவுகூரும்: எவருக்கு அல்லாஹ்வும் நீரும் அருள்புரிந்தீர்களோ அவரிடம் "நீ உன் மனைவியை (மணவிலக்குச் செய்யாமல்) தடுத்து வைத்துக்கொள், அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்துகொள்" என்று நீர் கூறிய அந்நேரத்தில், அல்லாஹ் வெளிப்படுத்த விரும்பியிருந்த ஒரு விஷயத்தை மக்களுக்கு அஞ்சி உம் உள்ளத்தில் மறைத்துக் கொண்டிருந்தீர். (நீர்) அஞ்சுவதற்கு மிகத் தகுதியானவன் அல்லாஹ்தான். ஆகவே 'ஸைத்' அவரை (ஜைனப்) மணவிலக்கு செய்தபின்னர் நாம் அப்பெண்ணை உமக்கு மணமுடித்து வைத்தோம். நம்பிக்கையாளர்களால் வளர்க்கப்பட்டவர்கள் தம் மனைவியரை மணவிலக்குச் செய்துவிட்டால் (தந்தையாக இருந்து வளர்த்த) நம்பிக்கையாளர்கள் அப்பெண்களை மணந்துகொள்வதில் எந்தத் தடையும் இருக்கக் கூடாது என்பதற்காகவே (இவ்வாறு செய்தோம்) அல்லாஹ்வின் கட்டளை நிறைவேறியே தீரும்.*

[38]*நபியின் மீது அல்லாஹ் விதியாக்கியதை நிறைவேற்றுவதில் அவர்மீது குற்றமில்லை. முன்சென்றவர்(களாகிய தூதர்)களின் விஷயத்திலும் இதுதான் அல்லாஹ்வின்*

*வழிமுறையாகும். அல்லாஹ்வின் கட்டளை (முன்னரே)
தீர்மானிக்கப்பட்டதாகும்.*
[39]*அவர்கள் அல்லாஹ்வின்
தூதுச்செய்தியை எடுத்துரைப்பவர்களாக இருந்தனர். அவனுக்கு
மட்டுமே அஞ்சுபவர்களாக அவனைத்தவிர வேறு யாருக்கும்
அஞ்சாதவர்களாக இருந்தனர். (அவர்களிடம்) கணக்குக்
கேட்க அல்லாஹ்வே போதுமானவன்.*
[40]*(மக்களே!) உங்கள்
ஆண்களில் முஹம்மத் எவருக்கும் தந்தையல்லர். ஆனால் அவர்
இறைத்தூதராகவும் இறைத்தூதர்களில் இறுதியானவராகவும்
இருக்கிறார். அல்லாஹ் யாவற்றையும் நன்கறிந்தவன்.*

[41]*நம்பிக்கையார்களே! அல்லாஹ்வை மிகுதியாக
நினைவுகூருங்கள்.*
[42]*காலையிலும் மாலையிலும் அவனைத்
துதித்துக்கொண்டிருங்கள்.*
[43]*உங்களை இருளிலிருந்து
(வெளியேற்றி) ஒளியின்பால் கொண்டு வருவதற்காக அவன்தான்
உங்கள்மீது அருள்புரிகிறான்; (உங்கள்மீது அருள்புரியுமாறு)
அவனுடைய வானவர்களும் (அவனிடம்) இறைஞ்சுகின்றனர்.
அவன் நம்பிக்கையாளர்களுக்கு நிகரற்ற அன்பாளன்.*
[44]*அவனை
அவர்கள் சந்திக்கும் நாளில் 'சாந்தி உண்டாவதாக' என்று
வரவேற்கப்படுவார்கள். அவன் அவர்களுக்காகக் கண்ணியமான
கூலியையும் தயார்செய்து வைத்துள்ளான்.*

[45]*நபியே! நாம் உம்மை (மக்களிடம்) சாட்சியாளராகவும்
நற்செய்தி அறிவிப்பவராகவும் எச்சரிக்கை செய்பவராகவும்*
[46]*அல்லாஹ்வின் கட்டளைப்படி அவன்பால் (மக்களை)
அழைப்பவராகவும் ஒளிவீசும் விளக்காகவும் அனுப்பியுள்ளோம்.*
[47] *(ஓரிறை)நம்பிக்கையாளர்களுக்கு "அல்லாஹ்விடம் பெரும்
அருட்கொடையுள்ளது" எனும் நற்செய்தியைக் கூறிவிடுவீராக!*
[48]*(ஓரிறை)மறுப்பாளர்களுக்கும் நயவஞ்சகர்களுக்கும் நீர்
இணங்கிவிடாதீர்! அவர்களின் துன்புறுத்தலைப் புறக்கணித்து
விடுவீராக! அல்லாஹ்வையே முற்றிலும் சார்ந்திருப்பீராக!
பொறுப்பேற்பதற்கு அல்லாஹ்வே (உமக்குப்) போதுமானவன்.*

[49]நம்பிக்கையாளர்களே! நம்பிக்கைகொண்ட பெண்களை நீங்கள் மணந்து, பின்னர் அவர்களைத் தீண்டுவதற்கு முன்னரே அவர்களை மணவிலக்குச் செய்தால் அவர்களுக்கு நீங்கள் (மற்ற பெண்களுக்குக்) கணக்கிடுவதுபோலக் (காத்திருப்புக்) காலக்கெடு விதிக்க உங்களுக்கு உரிமை இல்லை. எனவே அவர்களுக்கு ஏதேனும் பொருள் வழங்கி நல்லமுறையில் அவர்களை (மண உறவிலிருந்து) விடுவித்து விடுங்கள்.

[50]நபியே! நீர் மணக்கொடை (மஹர்) அளித்து(மணந்து கொண்டு)ள்ள உம் மனைவியரையும் அல்லாஹ் (போரின் மூலம்) உமக்கு வழங்கிய அடிமைப் பெண்களையும் (உறுதியாக) உமக்கு அனுமதித்துள்ளோம். (மேலும்) உம்முடன் புலம் பெயர்ந்துவந்த உம் தந்தையின் சகோதரரின் மகள்கள், உம் தந்தையின் சகோதரிகளின் மகள்கள், உம் தாயின் சகோதரருடைய மகள்கள், உம் தாயின் சகோதரிகளுடைய மகள்கள் ஆகியோரையும் (மணந்துகொள்ள) நாம் உமக்கு அனுமதித்துள்ளோம். நம்பிக்கையாளரான ஒருபெண் (மணக்கொடை பெறுவதின்றித்) தன்னையே தூதருக்கு அர்ப்பணித்து இறைத்தூதரும் அவரை மணந்துகொள்ள விரும்பினால் அப்பெண்ணும் (உமக்கு அனுமதிக்கப்பட்டவரே. நபியே இது) ஏனைய நம்பிக்கையாளர்களைத் தவிர்த்து உமக்கு மட்டுமே (நாம் அளிக்கும்) சிறப்பு அனுமதியாகும். (ஏனைய நம்பிக்கையாளர்களுக்கு அவர்களுடைய) மனைவியர் மற்றும் அடிமைப் பெண்கள் தொடர்பாக நாம் விதியாக்கியுள்ளவற்றை அறிவோம். (உமக்குச் சிறப்பு அனுமதி வழங்கியிருப்பது) உமக்கு எந்த மனநெருக்கடியும் ஏற்படக்கூடாது என்பதற்காகத்தான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.

[51]நபியே! (உம்முடைய மனைவியராகிய) அவர்களில் நீர் விரும்பியவாறு ஒருவரை (அவர் உம்மோடிருக்க வேண்டிய முறைநாளில்) ஒதுக்கிவைக்கலாம்; நீர் விரும்பியவரைச் சேர்த்துக் கொள்ளலாம். நீர் ஒதுக்கிவைத்தவர்களுள் எவரையேனும்

நீர் விரும்பினால் (மறுபடி சேர்த்துக் கொள்வதில்) உம்மீது குற்றமில்லை. அவர்களின் கண்கள் குளிர்ச்சியடைவதற்கும் நீர் அவர்களுக்கு அளிப்பதைக்கொண்டு அவர்கள் மனநிறைவடைந்து கவலைப்படாமல் இருப்பதற்கும் இதுவே மிகச்சிறந்த வழியாகும். உங்கள் உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் முற்றும்
அறிந்தவன்; சகிப்புத்தன்மை மிக்கவன். [52](நபியே!) இவர்களைத்
தவிர வேறு பெண்கள் உமக்கு அனுமதிக்கப்பட்டவர்கள் அல்லர். (இப்போதிருக்கும்) இவர்களுக்குப் பதிலாக வேறு பெண்கள் அவர்களின் அழகு உம்மைக் கவர்ந்த போதிலும் (அவர்களை மணந்துகொள்ள) அனுமதியில்லை; ஆயினும் உம் அடிமைப்பெண்களைத் தவிர! அல்லாஹ் அனைத்தையும் கண்காணிப்பவன்.

[53]நம்பிக்கையாளர்களே! உணவருந்த நீங்கள்
அழைக்கப்பட்டாலன்றித் தூதரின் இல்லங்களுக்குச் செல்லாதீர்கள். அங்கு உணவு தயாராவதற்கு முன்பாகவே சென்று காத்துக் கொண்டிருக்காதீர்கள். ஆயினும் நீங்கள் அழைக்கப்படும்போது (உள்ளே) நுழையுங்கள். உணவருந்திவிட்டால் கலைந்து சென்றுவிடுங்கள். பேசிக்கொண்டே அமர்ந்து விடாதீர்கள். அது தூதருக்குத் தொல்லை தருவதாகும். (இதனை) அவர் உங்களிடம் கூற வெட்கப்படுகிறார். ஆனால் உண்மையைக் கூற அல்லாஹ் வெட்கப்படமாட்டான். (தூதரின் மனைவியரிடம்) நீங்கள் ஏதேனும் கேட்க வேண்டியிருந்தால் திரைக்குப் பின்னிருந்தே கேளுங்கள். உங்களின் உள்ளங்களுக்கும் அவர்களின் உள்ளத் தூய்மைக்கும் இதுவே ஏற்றது. இறைத்தூதருக்குத் தொல்லை அளிப்பது உங்களுக்குத் தகாது. அவருடைய மனைவியரை அவருக்குப்பின் மணந்துகொள்வது ஒருபோதும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டதன்று. இது அல்லாஹ்விடம் மிகப்பெரும்
பாவமாகும். [54]நீங்கள் எதனை வெளிப்படுத்தினாலும்
அல்லது மறைத்தாலும் உறுதியாக அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவன்.

*[55]தூதரின் மனைவியர் தங்களின் தந்தையர், புதல்வர்கள், சகோதரர்கள், சகோதரர்களின் மகன்கள், சகோதரிகளின் மகன்கள், தம்முடைய பெண்கள் மற்றும் அடிமைகள் ஆகியோருக்கு (முன்பாக வருவதில்) எந்தக் குற்றமுமில்லை. அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்துகொள்ளுங்கள். உறுதியாக அல்லாஹ் அனைத்தையும் கண்காணித்துக் கொண்டிருக்கின்றான்.*

*[56]உறுதியாக அல்லாஹ்வும் அவனுடைய வானவர்களும் இந்த நபிக்கு (ஸலவாத்) வாழ்த்துக்களைக் கூறுகின்றனர். நம்பிக்கையாளர்களே! அவர்மீது அருளும் அமைதியும் உண்டாக இறைஞ்சுங்கள். [57]அல்லாஹ்வுக்கும் அவனுடைய*
*தூதருக்கும் தொல்லை தருபவர்களை அல்லாஹ் இம்மையிலும் மறுமையிலும் சபித்து விட்டான். அவர்களுக்காக இழிவுமிக்க வேதனையைத் தயார்செய்து வைத்துள்ளான்.*
*[58]நம்பிக்கைகொண்ட ஆண்களையும் பெண்களையும் அவர்கள் செய்யாத குற்றத்திற்காகத் துன்புறுத்துபவர்கள் பெரும் அவதூற்றைச் செய்து வெளிப்படையான பாவத்தையும் சுமக்கின்றனர்.*

*[59]நபியே! உம் மனைவியருக்கும் உம் மகள்களுக்கும் நம்பிக்கையாளர்களின் பெண்களுக்கும் அவர்கள் தங்கள் தலை முக்காடுகளைக் கொஞ்சம் கீழே தாழ்த்திக் கொள்ளுமாறு கூறுவீராக! அவர்கள் (கண்ணியமானவர்கள் என) அறிந்துகொள்ளப்பட்டுத் தொல்லை கொடுக்கப்படாமல் இருப்பதற்கு இதுவே சிறந்த வழியாகும். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

*[60](நபியே!) நயவஞ்சகர்களும் உள்ளங்களில் நோயுள்ளவர்களும் மதீனாவில் பொய்ச் செய்திகளைப் பரப்பிக் கொண்டிருப்பவர்களும் தங்களின் செயல்களிலிருந்து விலகிக் கொள்ளவில்லையெனில் நாம் அவர்களுக்கெதிராக உமக்கு அதிகாரம் வழங்குவோம். பிறகு சிறிது காலமேயன்றி அங்கு அவர்கள் உம்முடன்*
*இருக்கமாட்டார்கள். [61]அவர்கள் சபிக்கப்பட்டு விட்டனர்.*

*அவர்கள் எங்குக் காணப்படினும் பிடிக்கப்பட்டுக்
கொல்லப்படுவர்** [62]முன்பு வாழ்ந்து சென்றவர்கள் குறித்தும்
இதுவே அல்லாஹ்வின் நடைமுறையாகும். அல்லாஹ்வின்
நடைமுறையில் எந்த மாற்றத்தையும் நீர் காணமாட்டீர்.*

[63]*(நபியே!) இறுதிநாள் பற்றி மக்கள் உம்மிடம் கேட்கின்றனர்.
“அதைப்பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது; உங்களுக்கு
எப்படித் தெரியும்? (மறுமையாகிய) அந்நாள் அருகிலும்
இருக்கலாம்” என்று நீர் கூறுவீராக!* [64]*உறுதியாக அல்லாஹ்
மறுப்பாளர்களைச் சபித்து, அவர்களுக்காகக் கொழுந்து
விட்டெரியும் நெருப்பைத் தயார்செய்து வைத்துள்ளான்.*
[65]*அவர்கள் என்றென்றும் அதில்தான் இருப்பார்கள். (தங்களைப்)
பாதுகாப்பவரையோ உதவி செய்பவரையோ காணமாட்டார்கள்.*
[66]*அவர்களின் முகங்கள் நெருப்பில் புரட்டி எடுக்கப்படும்
(மறுமையாகிய) அந்நாளில் அவர்கள், “அந்தோ! நாங்கள்
அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் கட்டுப்பட்டிருக்க வேண்டுமே!”
என்று கூறுவர்.* [67]*“இறைவா! நாங்கள் எங்கள் தலைவர்கள்,
பெரியோர்கள் ஆகியோரின் பேச்சைக் கேட்டோம். அவர்கள்
எங்களை வழிகெடுத்து விட்டனர்” என்றும் கூறுவர்.* [68]*மேலும்
இறைவா! அவர்களுக்கு இருமடங்கு வேதனையைத் தருவாயாக.
அவர்களைக் கடுமையாகச் சபிப்பாயாக!” என்றும் கூறுவர்.*

[69]*நம்பிக்கையாளர்களே! மோசேயை(ப் பற்றி அவதூறு
கூறி)த் துன்புறுத்தியவர்களைப் போன்று நீங்களும்
ஆகிவிடாதீர்கள். அவர்கள் கூறிய அவதூற்றிலிருந்து
அல்லாஹ் அவரை விடுவித்துவிட்டான், அவர்
அல்லாஹ்விடம் கண்ணியமானவராகவே இருந்தார்.*
[70]*(ஆகவே) நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்;
நேர்மையான சொல்லையே கூறுங்கள்.* [71]*(அவ்வாறு செய்தால்)
அவன் உங்கள் செயல்களைச் சீர்ப்படுத்தி உங்கள் பாவங்களை*

---

***முன்னுரை காண்க : பக்கம் எண்** XX

*மன்னித்து விடுவான். அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படிந்தவர் மாபெரும் வெற்றி பெற்றுவிட்டார்.*

[72]*நாம் (செயலுரிமை எனும்) இந்தப் பொறுப்பை வானங்கள், பூமி மற்றும் மலைகள் ஆகியவற்றுக்கு முன்னால் வைத்தபோது அவை அதனைச் சுமக்க அஞ்சி மறுத்துவிட்டன. ஆனால் மனிதன் அந்தச் சுமையை ஏற்றுக் கொண்டான். உறுதியாக அவன் தீவினையாளனாகவும் அறிவிலியாகவும் இருக்கிறான்.*
[73]*ஆக அல்லாஹ் (இப்பொறுப்புக்கு எதிராக நடக்கும்) நயவஞ்சகம்கொண்ட ஆண்களையும் பெண்களையும் இணைவைக்கும் ஆண்களையும் பெண்களையும் தண்டிப்பான். (இப்பொறுப்பை மதித்து நடக்கும்) நம்பிக்கை கொண்ட ஆண்களையும் பெண்களையும் (தன்னுடைய அருளை நோக்கி) அல்லாஹ் திருப்பிவிடுவான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

# 34. ஸபா (ஸபா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]*அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே! வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியன. மறுமையிலும் புகழனைத்தும் அவனுக்கே உரியன. அவன் ஞானம் மிக்கவன்; நன்கறிந்தவன்.*
[2]*பூமிக்குள் இறங்குகின்ற (விதை முதலிய)வைகளையும் வெளிப்படுகின்ற(மரம், செடி போன்ற)வைகளையும் வானத்திலிருந்து இறங்குகின்றவைகளையும் அதை நோக்கி உயர்கின்றவைகளையும் அவன் அறிகின்றான். அவன் அளவற்ற அன்பாளன்; பெரும் மன்னிப்பாளன்.*

[3]*மறுப்பாளர்கள் "அந்த நேரம் எங்களிடம் (ஒருபோதும்) வராது" என்று கூறுகிறார்கள். நபியே! நீர் கூறும்: "அவ்வாறன்று மறைவானவற்றை அறிந்த என் இறைவன்மீது ஆணையாக உறுதியாக அது உங்களிடம் வந்தே தீரும். வானங்களிலோ*

*பூமியிலோ கடுகு வித்தளவும் அவனுக்கு மறைவானதாக இல்லை. அதைவிடச் சிறியதோ, பெரியதோ அனைத்தும் ஒரு தெளிவான பதிவேட்டில் பதியப்படாமலில்லை. [4]அ(வ்வாறு பதியப்படுவ)து நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிவோருக்கு (மறுமையில்) அவன் நற்கூலி வழங்குவதற்காகத்தான். அவர்களுக்குப் பாவமன்னிப்பும் கண்ணியமான உணவும் உண்டு"! [5]எமது வசனங்களைத் தோற்கடிக்க முயற்சி செய்பவர்களுக்குத் துன்புறுத்தும் கடுமையான வேதனையுண்டு. [6](நபியே! வேத)அறிவு வழங்கப்பட்டவர்க(ளில் உள்ள உண்மையாளர்க)ள் உமது இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பட்ட(இவ்வேதமான)து உண்மை என்பதையும் அது யாவற்றினும் வல்லவனும் புகழுக்குரியவனுமான அல்லாஹ்வின் பாதைக்கு வழிகாட்டுகிறது என்பதையும் அறிந்துகொள்வர்.*

*[7]மறுப்பாளர்கள் (மக்களிடம்) "நீங்கள் (மடிந்து) துகள் துகளாகச் சிதறிப்போன பின்னரும் மீண்டும் புதிதாகப் படைக்கப்படுவீர்கள் என்று உங்களிடம் அறிவிக்கும் ஒரு மனிதரைப்பற்றி நாங்கள் உங்களுக்குக் கூறட்டுமா?" என்று (ஏளனமாகக்) கேட்கின்றனர். [8]"இவர் அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைந்து கூறுகிறாரா? அல்லது இவருக்குப் பித்துப் பிடித்துவிட்டதா?" (என்றும் கேட்கின்றனர்). உண்மையில் மறுமையின் மீது நம்பிக்கைகொள்ளாதவர்கள் வேதனையிலும் மிகத் தொலைவிலான கெடுவழியிலும் இருக்கின்றனர். [9]தங்களுக்கு முன்னும் பின்னும் இருக்கிற வானத்தையும் பூமியையும் அவர்கள் பார்க்கவில்லையா? நாம் விரும்பினால் அவர்களைப் பூமியில் புதையச் செய்துவிடுவோம்; அல்லது அவர்கள்மீது வானத்திலிருந்து ஒரு துண்டை விழச் செய்துவிடுவோம். உறுதியாக அவன்பால் (பாவமன்னிப்பைத் தேடித்) திரும்பும் ஒவ்வொரு அடியானுக்கும் இதில் சான்று இருக்கிறது.*

*[10]நாம் தாவீதுக்கு எம்மிடமிருந்து பெரும் அருட்கொடையை வழங்கினோம். "மலைகளே! பறவைகளே! அவருடன் சேர்ந்து நீங்களும் (இறைவனைத்) துதிபாடுங்கள்" (என்று*

*கட்டளையிட்டோம்). நாம் அவருக்கு இரும்பை இளக வைத்தோம். [11]“நீர் (உடலை நன்கு மறைக்கும்) முழுமையான (இரும்புப்) போர்க் கவசங்கள் செய்வீராக! வளையங்களைச் சரியான அளவில் பொருத்துவீராக! (என அவருக்குக் கட்டளையிட்டோம். அவரையும் அவரைச் சார்ந்தோரையும் நோக்கி) “நற்செயல்புரியுங்கள்! நீங்கள் செய்பவற்றை எல்லாம் நான் உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கின்றேன்” (என்றும் கூறினோம்).*

*[12]நாம் சாலமனுக்குக் காற்றை வசப்படுத்தித் தந்தோம். அதனுடைய காலைப் பயணம் ஒருமாதத் தொலைவாகவும் மாலைப் பயணம் ஒருமாதத் தொலைவாகவும் இருந்தது. நாம் அவருக்காக உருகிய செம்பின் ஊற்றை ஓடச்செய்தோம். ஜின்களிலும் சிலர் தம் இறைவனின் கட்டளைப்படி அவருக்குப் பணிவிடை செய்துவந்தனர். “அவர்களில் யாரேனும் எம் கட்டளையைப் புறக்கணித்தால் அவரைக் கொழுந்து விட்டெரியும் நெருப்பின் வேதனையைச் சுவைக்கும்படிச் செய்வோம்” என்றோம். [13]அவர் விரும்பியபடி உயர்ந்த மாளிகைகள், சிற்பங்கள், தடாகங்களைப் போன்ற (அகன்ற) கொப்பறைகள், நகர்த்த முடியாத பெரும் பாத்திரங்கள் ஆகியவற்றை அவர்கள் செய்தனர். “தாவீதின் குடும்பத்தோரே! (இவற்றுக்காக) நன்றி செலுத்த (நற்)செயல் புரிந்துவாருங்கள். என் அடியார்களில் நன்றி செலுத்துவோர் மிக அரிதானவர்களே” (என்று கூறினோம்).*

*[14]நாம் அவருக்கு (சாலமனுக்கு) மரணத்தை விதித்தபோது அவர் (ஊன்றி நின்றிருந்த) தடியை அரித்துக்கொண்டிருந்த நிலத்தின் பூச்சி(கறையான்)தான் அவர் இறந்து விட்டார் என்பதை ஜின்களுக்கு அறிவித்துக் கொடுத்தது. (கைத்தடி அரிக்கப்பட்டு) அவர் கீழே விழுந்தபோதுதான் (வேலை செய்துகொண்டிருந்த) ஜின்கள் ‘தாங்கள் மறைவான விஷயங்களை அறிந்திருந்தால் இழிவுதரும் இந்த வேதனைக்கு உள்ளாகியிருக்க மாட்டோமே’ என்பதைத் தெளிவாக அறிந்துகொண்டனர்.*

*[15]‘ஸபா’ (நகர)வாசிகளுக்கு அவர்களின் வசிப்பிடத்தில் ஒரு (நல்ல) சான்று இருந்தது; (ஊரின்) வலப்புறமும் இடப்புறமும் இரு தோட்டங்கள் இருந்தன. “உங்கள் இறைவன் அளித்துள்ள உணவை உண்ணுங்கள்; அவனுக்கு நன்றி செலுத்துங்கள். வளமான நகரத்தையும் மன்னிப்பளிக்கும் இறைவனையும் நீங்கள் பெற்றுள்ளீர்கள்!” (என்று அவர்களுக்குக் கூறப்பட்டது.)*
*[16]ஆயினும் அவர்கள் (இறைக்கட்டளையைப்) புறக்கணித்தனர். எனவே நாம் அவர்களின் மீது (அணையை உடைத்துப் பாய்ந்த) பெருவெள்ளத்தை அனுப்பினோம். அவர்களின் இரு தோட்டங்களையும் புளிப்பும் கசப்புமுள்ள பழங்களுடைய மரங்களும் சிறிதளவு இலந்தை மரங்களும் கொண்ட இரு தோட்டங்களாக மாற்றி விட்டோம். [17]இது அவர்கள்*
*(நன்றியின்றி) எம்மை மறுத்ததற்காக அவர்களுக்கு நாம் அளித்த தண்டனையாகும். எம்மை (நன்றிகெட்டு) மறுப்பவர்களைத்தான் நாம் இவ்வாறு தண்டிக்கிறோம்.*

*[18](மேலும்) அவர்களு(டைய ஊரு)க்கும் நாம் அருள்புரிந்த செழிப்பான (சிரியா நாட்டு) நகரங்களுக்கும் இடையே (பயணிகளுக்கு) எளிதில் தென்படக்கூடிய பல ஊர்களை அமைத்தோம். (அவற்றிற்கிடையில் பயணம் வசதியாயிருக்கும் வகையில்) பயணத் தொலைவை (அளவோடு இருக்குமாறு) அமைத்தோம். அவற்றில் இரவு, பகல் எவ்வேளையிலும் அச்சமின்றிப் பயணம் செய்யுங்கள்” (என்று கூறியிருந்தோம்)*
*[19]ஆனால் அவர்கள், (இந்த நன்மையைப் புறக்கணித்து) எங்கள் பயணங்களுக்கிடையே (உள்ள) தொலைவை அதிகப்படுத்துவாயாக” என்று வேண்டினர். (அவ்வாறு) அவர்கள் தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டனர். எனவே நாம் அவர்களை (இழிவாகப் பேசப்படும் பழங்)கதைகளாக்கி விட்டோம்; அவர்களை முற்றிலும் சின்னாபின்னமாக்கி(ப் பல்வேறிடங்களுக்கும்) சிதறடித்துவிட்டோம். உறுதியாக, இதில் பொறுமையுடன் நன்றி செலுத்தும் ஒவ்வொருவருக்கும்*

*(பல) சான்றுகள் உள்ளன.* [20]*(ஸபா மக்களை வழிகெடுக்க முடியும் என்ற) தனது எண்ணத்தை இப்லீஸ் உண்மையாக்கிக் காட்டினான். நம்பிக்கையாளர்களான ஒரு சாராரைத் தவிர மற்றவர்கள் அவனைப் பின்பற்றினர்.* [21]*இப்லீஸுக்கு அவர்களின் மீது எந்த அதிகாரமும் இருக்கவில்லை. மறுமையின் மீது நம்பிக்கைகொண்டவரையும் அது குறித்து ஐயம் கொண்டிருப்பவரையும் (பிரித்து) அறிவிப்பதற்காகவே (இது நடைபெற்றது, நபியே!) உம் இறைவன் யாவற்றையும் கண்காணிப்பவன்.*

[22]*(நபியே! இணைவைப்போரிடம்) நீர் கூறும்: "அல்லாஹ்வையன்றி நீங்கள் யாரை(த் தெய்வங்களென)க் கருதிக் கொண்டிருக்கிறீர்களோ அவர்களை அழைத்துப் பாருங்கள். வானங்களிலோ பூமியிலோ அவர்கள் மிகச்சிறு அளவும் அதிகாரம் பெற்றிருக்கவில்லை. அவ்விரண்டின் படைப்பிலும் அவர்களுக்கு எந்தப் பங்குமில்லை. அவர்களில் யாரும் அவனுக்கு உதவியாளராகவும் இல்லை."*

[23]*(மறுமையில்) அவனது அனுமதிபெற்றவர்களைத் தவிர வேறு எவரும் (அவன் விரும்பியோரை அன்றி வேறு யாருக்காகவும்) அவனிடம் பரிந்துரைப்பது பயனளிக்காது. எனவே (பரிந்துரை அனுமதியை வேண்டும்) அவர்களின் உள்ளங்களிலிருந்து நடுக்கம் நீங்கியவுடன் 'உங்கள் இறைவன் என்ன கூறினான்?' என்று கேட்டு, 'உண்மையையே கூறினான்' என்று அவர்களுக்குள் கூறிக் கொள்வர். அவன் மிக உயர்ந்தவன்; மிகப் பெரியவன்.*

[24]*(நபியே! இணைவைப்போரிடம்) "வானங்களிலிருந்தும் பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்?" என்று கேட்பீராக! "அல்லாஹ்தான்" என்று நீரே கூறுவீராக! "உறுதியாக நாங்களோ, நீங்களோ (நம்மில் ஒரு பிரிவினர்தாம்) நேர்வழியில் இருக்கிறோம் அல்லது தெளிவான கெடுவழியில் இருக்கிறோம்" (என்றும் நீர் கூறுவீராக!)* [25]*"நாங்கள் செய்த குற்றங்கள் குறித்து நீங்கள் விசாரிக்கப்பட மாட்டீர்கள். நீங்கள் செய்த குற்றங்கள்*

குறித்து நாங்கள் விசாரிக்கப்பட மாட்டோம்” என்று (நபியே!)
நீர் கூறுவீராக! [26](மேலும்) “நம் இறைவன் நம்மை (மறுமையில்)
ஒன்றுசேர்ப்பான். பின்னர் நமக்கிடையே நியாயப்படி
தீர்ப்பளிப்பான். அவன் (மேலான) தீர்ப்பாளன்; முற்றும்
அறிந்தவன்” என்று கூறுவீராக! [27]“அவனுக்கு இணையானவர்கள்
என்று நீங்கள் சேர்த்து வைத்தவர்களை எனக்குக் காட்டுங்கள்.
ஒருபோதும் (உங்களால்) காட்டமுடியாது. (இணைதுணை
இல்லாத) அவன்தான் அல்லாஹ். அவன் யாவற்றினும் வல்லவன்;
ஞானம் மிக்கவன்” என்றும் (அவர்களுக்குக்) கூறுவீராக!

[28](நபியே!) மனித சமூகம் முழுவதற்கும் நற்செய்தியாளராகவும்
எச்சரிக்கையாளராகவுமே நாம் உம்மை அனுப்பியுள்ளோம்.
ஆயினும் மனிதர்களில் பெரும்பாலோர் (இதனை) அறியமாட்டார்கள்.
[29]“நீங்கள் உண்மையாளர்களாயின் (இறுதித் தீர்ப்புநாள் குறித்த)
இந்த எச்சரிக்கை வாக்கு எப்போது (நிறைவேறும்)?” என்று
(அவர்கள்) கேட்கின்றனர். [30]“உங்களுக்கெனக் குறிப்பிட்ட ஒரு
நாள் இருக்கிறது. அதிலிருந்து ஒரு நொடிகூட நீங்கள் பிந்தவோ,
முந்தவோ மாட்டீர்கள்” என்று (நபியே!) நீர் கூறுவீராக!

[31](ஓரிறை)மறுப்பாளர்கள், “நாங்கள் இந்தக் குர்ஆனையும்
இதற்கு முன்புள்ள(வேதம் எ)தையும் நம்ப மாட்டோம்”
என்று கூறுகின்றனர். (நபியே!) இத்தீவினையாளர்கள் தங்கள்
இறைவனுக்கு முன்னால் நிறுத்தப்படுவதை நீர் காண
வேண்டுமே! அப்போது ஒருவர் மீது மற்றொருவர் பழிசுமத்துவர்.
வலுவற்றவர்கள் செருக்குக் கொண்டோரை நோக்கி “நீங்கள்
(மட்டும்) இல்லையென்றால் நாங்கள் நம்பிக்கையாளர்களாக
இருந்திருப்போம்” என்று (குறை) கூறுவர். [32]செருக்குக்
கொண்டோர் வலுவற்றவர்களிடம் “உங்களிடம் நேர்வழி
வந்துவிட்ட பின் அதிலிருந்து நாங்களா உங்களைத் தடுத்தோம்?
மாறாக நீங்கள்தாம் குற்றவாளிகளாக இருந்தீர்கள்” என்று
(மறுமொழி) கூறுவர். [33]அதற்கு வலுவற்றவர்கள் செருக்குக்
கொண்டோரிடம் “இல்லை. நீங்கள்தான் இரவுபகலாகச்

*சூழ்ச்சிசெய்து நாங்கள் அல்லாஹ்வை (ஏற்க) மறுக்குமாறும் அவனுக்கு இணைகளை உண்டாக்குமாறும் எங்களுக்குக் கட்டளையிட்டீர்கள்” என்று கூறுவர். இவர்கள் (அனைவரும்) வேதனையை (நேரில்) காணும்போது தங்கள் வருத்தத்தை மறைத்துக் கொள்வர். மறுப்பாளர்களின் கழுத்துக்களில் நாம் விலங்குகளை மாட்டிவிடுவோம். அவர்கள் தாம் செய்த தீவினைகளுக்குத் தக்க கூலியையே பெறுவர்.*

*34நாம் எச்சரிக்கை செய்வோரை எந்த ஊருக்கு அனுப்பினாலும் அங்கிருந்த செல்வர்கள் “நீங்கள் கொண்டுவந்துள்ள தூதுச் செய்தியை நாங்கள் மறுக்கிறோம்” என்றே கூறினர்.*
*35“நாங்கள் பொருட் செல்வத்திலும் பிள்ளைச் செல்வத்திலும் மிகுந்தவர்களாக உள்ளோம்; (ஆகவே) நாங்கள் ஒருபோதும் தண்டிக்கப்பட மாட்டோம்” என்றும் கூறினர். 36(நபியே!)*
*“என் இறைவன் தான் விரும்பியோருக்கு வாழ்வாதாரத்தைத் தாராளமாக வழங்குகிறான்; தான் விரும்பியோருக்குக் குறைத்தும் வழங்குகிறான். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் (இதன் உண்மையை) அறிந்துகொள்வதில்லை” என்று நீர் கூறுவீராக.*
*37உங்களின் செல்வங்களோ பிள்ளைகளோ உங்களை எம்மிடம் நெருக்கமானவர்களாக ஆக்கி விடுவதில்லை. ஆனால் நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர்களுக்கு அத்தகையோருக்கு அவர்களின் (நற்)செயல்களின் பயனாக இரு மடங்கு கூலி உண்டு. அவர்கள் உயர்ந்த (சொர்க்க) மாளிகைகளில் நிம்மதியாக இருப்பர்.*
*38எமது வசனங்களைத் தோற்கடிக்க (எண்ணி எமக்கெதிராக) முயல்பவர்கள் வேதனைக்காக (எம் முன்) கொண்டு*
*வரப்படுப்பவர். 39(நபியே!) நீர் (அவர்களிடம்) “என் இறைவன், தன் அடியார்களில் தான் விரும்பியோருக்கு வாழ்வாதாரத்தை விரிவாக வழங்குகிறான்; தான் விரும்பியோருக்குச் சுருக்கியும் விடுகிறான். நீங்கள் எப்பொருளை(த் தானமாக)ச் செலவு செய்தாலும் அதற்குரிய பயனை அவன் உங்களுக்கு வழங்கிவிடுவான். வாழ்வாதாரம் வழங்குவோரில் அவன்தான் மிகச் சிறந்தவன்” என்று கூறுவீராக!*

[40]அவர்கள் அனைவரையும் அவன் ஒன்றுதிரட்டும் நாளில்
வானவர்களிடம், “இவர்கள் உங்களைத்தான் வணங்கிக்
கொண்டிருந்தார்களா”? என்று கேட்பான். [41]அப்போது அவர்கள்
“(இறைவா!) நீ மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்.
நீயே எங்கள் பாதுகாவலன். இவர்கள் (எங்களை
வணங்கியோர்) அல்லர். மாறாக ஜின்களைத்தான் வணங்கிக்
கொண்டிருந்தனர். இவர்களில் பெரும்பாலோர் அவர்கள்
(ஜின்கள்) மீதே நம்பிக்கை கொண்டிருந்தனர்” என்று கூறுவர்.
[42](அப்போது அனைவரையும் நோக்கி) “இன்று நீங்கள் ஒருவர்
மற்றவருக்குப் பயனளிக்கவோ தீங்கிழைக்கவோ முடியாது”
(என்று கூறப்படும்.) தீவினையாளர்களிடம் “நீங்கள் பொய்யெனக்
கூறிக் கொண்டிருந்த நரகத்தின் வேதனையைச் சுவையுங்கள்”
என்று நாம் கூறுவோம்.

[43]எம் தெளிவான வசனங்கள் இவர்களிடம்
எடுத்துரைக்கப்படும்போது “இவர் உங்கள் முன்னோர்கள்
வணங்கிக்கொண்டிருந்த தெய்வங்களிடமிருந்து உங்களைத் தடுக்க
விரும்பும் ஒரு மனிதர்தான்” என்றும் “இது புனைந்துரைக்கப்பட்ட
பொய்யே அன்றி வேறில்லை” என்றும் கூறுகின்றனர்.
மறுப்பாளர்கள் (திருக்குர்ஆன் ஆகிய) சத்தியம் தம்மிடம்
வந்தபோது “இது தெளிவான சூனியமேயாகும்” என்றும் கூறினர்.
[44](நபியே! இதற்கு முன்னர்) நாம் இவர் (மக்காவாசி)களுக்குப்
படிக்கக்கூடிய எந்த வேதத்தையும் வழங்கவில்லை. உமக்கு
முன்னர் எச்சரிக்கை செய்பவர் எவரையும் இவர்களிடம் நாம்
அனுப்பவுமில்லை. [45]இவர்களுக்கு முன்பு வாழ்ந்தவர்களும்
பொய்மைப்படுத்தினர். அவர்களுக்கு அளித்த(வளம், வலிமை
ஆகிய)வற்றில் பத்தில் ஒரு பங்கைக் கூட இவர்கள் பெறவில்லை.
(எனினும்) அவர்கள் எம் தூதர்களைப் பொய்மைப்படுத்தினர்.
அதன்பின் எப்படி இருந்தது (அவர்கள்மீதான) எம்
தண்டனை!

*[46](நபியே! இவர்களிடம்) "நான் உங்களுக்கு அறிவுறுத்துவது ஒன்றைத்தான். நீங்கள் இருவர் இருவராகவோ தனித்தனியாகவோ அல்லாஹ்வுக்காக எழுந்து (நின்று சுயமாகச்) சிந்தித்துப் பாருங்கள். உங்கள் தோழருக்கு மனநோய் ஏதுமில்லை. அவர் (உங்களுக்குக்) கடும் வேதனையை (வருமுன்னர் அது) குறித்து எச்சரிப்பவர் மட்டுமே (என்பதைப் புரிந்துகொள்வீர்கள்)" என்று கூறுவீராக!*
*[47](நபியே! இவர்களுக்கு) நீர் கூறும்: "நான் உங்களிடம் கூலி எதையும் கேட்கவில்லை. அது உங்களுக்கே உரியது. எனது கூலி அல்லாஹ்விடமே அன்றி (வேறெவரிடமும்) இல்லை. அவன் யாவற்றையும் கண்காணித்துக் கொண்டிருக்கின்றான்"*

*[48]மேலும் "என் இறைவன் சத்தியத்தை (அசத்தியத்தின்மீது வீசி) எறிகிறான்; அவன் மறைவானவற்றை நன்கறிந்தவன். [49]நீர்*
*கூறும்: "சத்தியம் வந்துவிட்டது. அசத்தியம் புதிதாக எதையும் உருவாக்குவதில்லை; மறுஉருவாக்கம் செய்யப் போவதுமில்லை"*
*[50]நீர் கூறும்: "நான் கெடுவழியில் இருந்தால் அதனுடைய தீங்கு என்னையே சாரும். நான் நேர்வழியில் இருந்தால் அதற்கு என் இறைவன் எனக்கு அறிவிக்கும் இறைவெளிப்பாடே காரணமாகும். அவன் (அனைத்தையும்) செவியுறுபவன்; (யாவற்றையும்விட) நெருங்கியிருப்பவன்"*

*[51](மறுமையில்) அவர்கள் அதிர்ச்சியுற்றிருப்பதை (நபியே!) நீர் காண்பீராயின் (எவ்வாறிருக்கும்!) அவர்களால் தப்பி ஓட*
*முடியாது. அருகிலேயே அவர்கள் பிடிக்கப்படுவர். [52](அப்போது)*
*அவர்கள் "அ(வ்வேதத்)தை நம்புகிறோம்" என்று கூறுவர். (அதனைவிட்டு மறுமை வரை) மிகுதொலைவு (விலகிச்) சென்றுவிட்ட அவர்களால் எவ்வாறு (அந்த நம்பிக்கையை)*
*அடைய முடியும்? [53]இதற்கு முன்னர் அவர்கள் (அதனை)*
*மறுத்தனர். தொலைவான இடத்திலிருந்து (உலகிலிருந்து) அவர்களுக்கு மறைவாக இருந்ததைப் (பொய் என்று) பிதற்றிக்*
*கொண்டிருந்தனர். [54]அவர்களுக்கு முன்னர் இருந்தவர்களுக்குச்*

*செய்யப்பட்டதைப் போன்றே அவர்களுக்கும் அவர்களின் விருப்பங்களுக்குமிடையில் தடை ஏற்படுத்தப்படும். (ஏனெனில்) உறுதியாக அவர்களும் பெரும் ஐயத்திற்குள்ளாகி இருந்தனர்.*

# 35. படைப்பாளன் (ஃபாத்திர்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]*அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவன் வானங்களையும் பூமியையும் படைத்தவன்; இரண்டு, மூன்று, நான்கு இணை இறக்கைகளுடைய வானவர்களைத் தூதுவர்களாக நியமித்தவன். படைப்பில் தான் விரும்பியதை அவன் மிகுதிப்படுத்துகிறான். உறுதியாக அல்லாஹ் யாவற்றின்மீதும் பேராற்றலுடையவன்.*
[2]*அல்லாஹ் மனிதர்களுக்கு எந்த அருளைத் திறந்துவிட்டாலும் அதனைத் தடுப்பவர் எவருமில்லை; எதனை அவன் தடுத்துவிடுகிறானோ அதற்குப்பின் அதனை விடுவிப்பவர் எவருமில்லை. அவன் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.*

[3]*மனிதர்களே! அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய அருட்கொடைகளை நினைவுகூருங்கள். வானத்திலிருந்தும் பூமியிலிருந்தும் உங்களுக்கு வாழ்வாதாரம் அளிக்கும் படைப்பாளன் அல்லாஹ்வையன்றி வேறொருவன் இருக்கிறானா? அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. (அவ்வாறிருக்கையில்) நீங்கள் (அவனைவிட்டு) எவ்வாறு திசை திருப்பப்படுகிறீர்கள்?*
[4]*(நபியே!) அவர்கள் உம்மைப் பொய்யரென மறுத்தால் (கவலைப்படாதீர். இவ்வாறே) உமக்கு முன்னரும் தூதர்கள் பொய்மைப்படுத்தப்பட்டுள்ளனர். அனைத்து விவகாரங்களும் அல்லாஹ்விடமே திரும்பக் கொண்டு வரப்படுகின்றன.*

[5]*மனிதர்களே! உறுதியாக அல்லாஹ்வின் (மறுமை) வாக்குறுதி உண்மையானது. ஆகவே இவ்வுலக வாழ்வு உங்களை ஏமாற்றிவிட வேண்டாம். அல்லாஹ் தொடர்பாக (சாத்தானாகிய)*

ஏமாற்றுக்காரனும் உங்களை ஏமாற்றிவிட வேண்டாம்.*
[6]உறுதியாகச் சாத்தான் உங்களுக்குப் பகைவனாவான். எனவே
நீங்களும் அவனைப் பகைவனாகவே கொள்ளுங்கள். தன்(னைப்
பின்பற்றும்) கூட்டத்தாரை அவன் அழைப்பதெல்லாம் அவர்கள்
நரகவாசிகளாக ஆகிவிட வேண்டும் என்பதற்காகத்தான்.
[7]மறுப்பாளர்களுக்குக் கடுமையான வேதனையுண்டு. ஆனால்
நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிவோருக்கு(ப் பாவ)மன்னிப்பும்
பெரும் கூலியும் உண்டு.

[8]யாருக்கு அவனது தீச்செயல்கள் அழகாகக் காட்டப்பட்டு,
அவனும் அவற்றை நல்லவையாகக் காண்கிறானோ அவன்
(நல்வழி காட்டப்பட்டவருக்கு நிகராவானா? உறுதியாக)
அல்லாஹ் தான் விரும்பியோரை வழிதவற விட்டுவிடுகிறான்.
விரும்பியோரை நேர்வழியில் செலுத்துகிறான். (நபியே!) அவர்கள்
மீதுள்ள கவலைகளால் உம் உயிர் போய்விட வேண்டாம்.
அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் முற்றும் அறிந்தவன்.

[9]அல்லாஹ்தான் காற்றுகளை அனுப்புகிறான். அவை
மேகங்களை ஓட்டிச் செல்கின்றன. பின்னர் நாம் அவற்றை
இறந்து கிடக்கும் ஊரின் பக்கம் கொண்டு சென்று (மழை
பொழிவித்து) அதன்மூலம் அந்நிலத்தை உயிர்ப்பிக்கிறோம்.
(இறந்துபோனவர்கள் மறுமையில்) எழுப்பப்படுவதும் இவ்வாறே.
[10]எவர் கண்ணியத்தை விரும்புகிறாரோ அவர் (அல்லாஹ்வுக்குக்
கீழ்ப்படியட்டும். ஏனெனில்) கண்ணியம் முழுமையும்
அல்லாஹ்வுக்கே உரியதாகும். தூய்மையான சொல் அவனை
நோக்கியே உயர்ந்து செல்கின்றன. நற்செயல்கள் அவனால்
உயர்த்திக்கொள்ளப்படுகின்றன. தீச்செயல் புரியச் சூழ்ச்சி

*திடீர் மரணம், நிலநடுக்கம் மற்றும் அதனைப் போன்ற நிகழ்வுகள் மனிதனை நிலைகுலையச் செய்கின்றன. உண்மையில் இவை இறுதி நாளை அது நிகழ்வதற்கு முன்னரே அறிவிப்பவையாகும். ஆனால் இவையெல்லாம் இயற்கை நிகழ்வுகள் என்றும் இறைச் செயல்பாடு அல்ல என்றும் மனிதனின் மனதில் தோன்றும்படி, சாத்தான் செய்கிறான்.

*செய்பவர்களுக்குக் கடுமையான வேதனை உண்டு. அவர்களின்
சூழ்ச்சிகள் அழிந்துபோகும்.*

11 *அல்லாஹ் (தொடக்கத்தில்) மண்ணிலிருந்தும் பின்னர்
ஒருதுளி விந்திலிருந்தும் உங்களைப் படைத்தான். பின்னர் உங்களை
(ஆண், பெண்) இணைகளாக ஆக்கினான். அவன் அறியாமல்
எந்தப் பெண்ணும் கருவுறுவதும் இல்லை; ஈன்றெடுப்பதும்
இல்லை. ஒருவரது ஆயுள் நீட்டிக்கப்படுவதோ குறுக்கப்படுவதோ
ஒரு பதிவேட்டில் பதியப்படாமல் (நடைபெறுவது) இல்லை.
உறுதியாக இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானதே ஆகும்.*

12 *(ஆறு, ஏரி, ஊற்று) நீரும் கடல் நீரும் சமமாகி விடா.
ஒன்று குடிப்பதற்கு ஏற்ற சுவையான, இனிமையான நீர்.
மற்றொன்று உவர்ப்பும் கசப்பும் உடையது. ஆயினும்
ஒவ்வொன்றிலிருந்தும் நீங்கள் புத்தம் புதிய (மீன்) இறைச்சியை
உண்கிறீர்கள். நீங்கள் அணியக்கூடிய (முத்து, பவளம் போன்ற)
அழகுப் பொருள்களையும் எடுக்கிறீர்கள். கடலில் கப்பல்கள்
நீரைப் பிளந்து செல்வதை நீங்கள் காண்கிறீர்கள். அது நீங்கள்
இறையருள் கொண்டு (பொருள்) தேடிக் கொள்வதற்காகவும்
(அதற்கு) நன்றி செலுத்துவதற்காகவுமே ஆகும்.* 13 *அவன்தான்
இரவைப் பகலில் புகுத்துகிறான்; பகலை இரவில் புகுத்துகிறான்.
சூரியனையும் சந்திரனையும் ஒரு நியதிக்குட்படுத்தியுள்ளான்;
ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட தவணைவரை சென்று
கொண்டிருக்கும். (இத்தகைய)அல்லாஹ்தான் உங்கள் இறைவன்.
ஆட்சி அவனுக்கே உரியது. அல்லாஹ்வையன்றி நீங்கள் (யாரைத்
தெய்வங்களென) அழைக்கிறீர்களோ அவர்கள் பேரீச்சம்பழ
விதையின் மேல்தோல் அளவு(ப் பொருளுக்கு)ம் உரிமை
பெற்றவர்கள் அல்லர்.* 14 *நீங்கள் அவர்களை அழைத்தாலும்
உங்களின் அழைப்பை அவர்கள் செவியுறமாட்டார்கள்;
செவியுற்றாலும் உங்களுக்குப் பதிலளிக்கமாட்டார்கள்.
(மேலும்) நீங்கள் (அவர்களை) இணைவைத்து வணங்கியதை*

மறுமை நாளில் அவர்கள் மறுத்துவிடுவார்கள். யாவற்றையும் அறிந்த(இறை)வனைப் போல (வேறு யாரும் உண்மையை) உங்களுக்கு அறிவிக்கமுடியாது.

15மனிதர்களே! நீங்கள்தாம் அல்லாஹ்விடம்
தேவையுடையவர்கள். அல்லாஹ் தேவை எதுவுமற்றவன்;
புகழுக்குரியவன். 16அவன் விரும்பினால் உங்களை அகற்றிவிட்டு
(உங்களுக்குப் பதிலாக)ப் புதியதொரு படைப்பைக்
கொண்டு வருவான். 17இவ்வாறு செய்வது அல்லாஹ்வுக்குக்
கடினமானதன்று. 18(மறுமையில்) ஒருவரின் (பாவச்)சுமையை
மற்றொருவர் சுமக்கமாட்டார். பளுவான சுமையுடையவர்
தம் சுமையைச் சுமக்கும்படி (யாரை) அழைத்தாலும் – அவர்
நெருங்கிய உறவினராக இருந்தாலும் அதிலிருந்து சிறிதளவும்
சுமக்கமாட்டார். (நபியே!) மறைவிலும் தம் இறைவனுக்கு
அஞ்சித் தொழுகையைக் கடைப்பிடிப்பவர்களைத்தான்
நீர் எச்சரிக்க முடியும். எவர் தம்மைத் தூய்மைப்படுத்திக்
கொள்கிறாரோ அவர் தம் நன்மைக்காகவே அவ்வாறு
செய்கிறார். (அனைவரும்) அல்லாஹ்விடமே திரும்பிச்செல்ல
வேண்டியுள்ளது.

19பார்வையற்றவனும் பார்வையுடையவனும் சமமாகமாட்டார்கள்.
20இருளும் ஒளியும், 21நிழலும் வெயிலும் (சமமாகா)
22உயிருள்ளவர்களும் உயிரற்றவர்களும் சமமாகமாட்டார்கள்.
தான் விரும்பியோரை அல்லாஹ் செவியுறச் செய்கிறான்.
சவக்குழிகளில் உள்ளவர்களை உம்மால் செவியுறச் செய்ய
முடியாது. 23நீர் எச்சரிக்கை செய்பவர்தான் 24(நபியே!) நாம்
உம்மைச் சத்தியத்தைக் கொண்டு நற்செய்தி கூறுபவராகவும்
எச்சரிக்கை செய்பவராகவும் அனுப்பியுள்ளோம். எச்சரிக்கை
செய்பவர் வராத எந்தச் சமூகமும் இல்லை. 25இவர்கள் உம்மைப்
பொய்மைப்படுத்துகின்றனர் எனில் (நீர் வருந்தவேண்டாம்).
இவர்களுக்குமுன் வாழ்ந்து சென்றவர்களும் (தங்களிடம் வந்த
தூதர்களைப்) பொய்மைப்படுத்தினர். அவர்களின் தூதர்கள்
தெளிவான சான்றுகளையும் ஆகமங்களையும் ஒளிவீசும்
வேதத்தையும் அவர்களிடம் கொண்டு வந்திருந்தனர். 26பின்னர்

*(அவற்றை) மறுத்தவர்களை நான் தண்டித்தேன். எப்படி இருந்தது எனது தண்டனை!*

*27(நபியே!) அல்லாஹ் வானத்திலிருந்து மழை பொழியச் செய்வதை நீர் கவனிக்கவில்லையா? அதன்மூலம் நாம் பலவித நிறங்களுடைய கனிகளை விளைவிக்கின்றோம். மலைகளிலும் வெண்மை, சிவப்பு, அடர்ந்த கருநிறம் எனப் பல்வேறு நிறங்களுடைய அடுக்குகள் காணப்படுகின்றன.*
*28இவ்வாறே மனிதர்களிலும் பிற உயிரிகளிலும் கால்நடைகளிலும் பல நிறங்கள் காணப்படுகின்றன. (உறுதியாக) அல்லாஹ்வின் அடியார்களில் (அவனுடைய படைப்பருமையைச் சிந்தித்துணரும்) அறிவுடையோர்தாம் அவனுக்கு அஞ்சுகின்றனர். உறுதியாக அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; பெரும் மன்னிப்பாளன்.*

*29இறைவேதத்தை ஓதித் தொழுகையைக் கடைப்பிடித்து நாம் வழங்கியவற்றிலிருந்து மறைவாகவும் வெளிப்படையாகவும் ஈகை செய்வோர் ஒருபோதும் இழப்பே ஏற்படாத வணிகத்தை எதிர்பார்க்கின்றனர்.*
*30(ஏனெனில்) அவர்களின் கூலியை அல்லாஹ் முழுமையாக வழங்கிவிடுவான்; தன் அருளிலிருந்து அவர்களுக்கு மிகுதியாக்கவும் செய்வான். அவன் பெரும் மன்னிப்பாளன்; நன்றியை ஏற்பவன்.*

*31(நபியே!) நாம் உமக்கு இறைச்செய்தியாக அறிவித்துள்ள இவ்வேதமே சத்தியமானதாகவும் (வேதங்களில்) தனக்கு முன்னுள்ளவற்றை உண்மைப்படுத்தக் கூடியதாகவும் இருக்கிறது. அல்லாஹ் தன் அடியார்களை நன்கறிந்தவன்; உற்று நோக்குபவன்.*

*32பின்னர் எம் அடியார்களில் நாம் தெரிந்தெடுத்துக் கொண்டவர்களை இவ்வேதத்திற்கு வாரிசுகளாக்கினோம். ஆயினும் அவர்களில் சிலர் தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்டனர். அவர்களில் சிலர் (நன்மைக்கும் தீமைக்கும்) இடைப்பட்டவர்களாக இருக்கின்றனர். அவர்களில் சிலர் அல்லாஹ்வின் கட்டளைப்படி நன்மையின்பால் முந்திச்*

செல்பவர்களாகவும் இருக்கின்றனர். இதுதான் மாபெரும் அருளாகும். [33]நிலையான சொர்க்கங்களில் அவர்கள் நுழைவார்கள். அங்கே அவர்களுக்குத் தங்கக்காப்புகளும் முத்து(மாலை)களும் அணிவிக்கப்படும். அங்கு அவர்களுடைய ஆடை பட்டால் ஆனதாக இருக்கும். [34]“எங்களிடமிருந்து கவலையைப் போக்கிய அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும் உரியன. உறுதியாக எங்கள் இறைவன் மாபெரும் மன்னிப்பாளன்; நன்றியை ஏற்பவன்” என்று அவர்கள் கூறுவர். [35]“அவன்தான் தன் அருளால் நிலையான வீட்டில் எங்களைத் தங்கச் செய்தான். இங்கு எங்களுக்கு எந்தத் தொல்லையும் ஏற்படுவதில்லை; எந்தச் சோர்வும் எங்களைத் தீண்டுவதில்லை” என்றும் அவர்கள் கூறுவர்.

[36]மறுப்பாளர்களுக்கு நரக நெருப்புத்தான் உண்டு. இறந்து போகும்படி அவர்கள் தீர்ப்பளிக்கப்படவும் மாட்டார்கள். நரக வேதனை அவர்களுக்குக் குறைக்கப்படவும் மாட்டாது. (இவ்வாறுதான்) ஒவ்வொரு மறுப்பாளனையும் நாம் தண்டிப்போம். [37]அங்கு அவர்கள், “எங்கள் இறைவா! எங்களை (இங்கிருந்து) வெளியேற்றுவாயாக! (முன்பு) நாங்கள் செய்துவந்த செயல்களுக்கு முற்றிலும் மாறான நற்செயல்களைச் செய்வோம்” என்று கதறுவர். (அப்போது அல்லாஹ்) “புரிந்துகொள்ள விரும்புபவன் புரிந்துகொள்ளும் அளவு நாம் உங்களுக்குப் போதுமான ஆயுளை வழங்கவில்லையா? உங்களிடம் எச்சரிக்கை செய்பவர் வந்(தே இருந்)தார். எனவே (வேதனையை) அனுபவியுங்கள். தீவினையாளர்களுக்கு உதவியாளர் யாரும் இல்லை” (என்று கூறுவான்.)

[38]உறுதியாக அல்லாஹ் வானங்களிலும் பூமியிலும் மறைவாகவுள்ள அனைத்தையும் நன்கறிந்தவன். அவன் உள்ளங்களில் உள்ளவற்றை முற்றும் அறிந்தவன். [39]அவன்தான் இப்புவியில் (உங்களுக்கு முன்னிருந்தோரின்) வழித்தோன்றல்களாக உங்களை வாழச் செய்தான். எனவே யாரேனும் (ஏக இறைவனை) மறுத்தால் அது அவருக்கே கேடாக அமையும். மறுப்பாளர்களின்

*மறுப்பு அவர்களுடைய இறைவனிடம் வெறுப்பைத்தான் மிகுதிப்படுத்தும். (இறை)மறுப்பாளர்களின் மறுப்பு (அவர்களுக்கு) இழப்பைத்தான் மிகுதிப்படுத்தும்.**

[40]*(நபியே!) நீர் (அவர்களிடம்) "அல்லாஹ்வையன்றி நீங்கள் வணங்குகின்ற உங்கள் தெய்வங்களைக் கவனித்தீர்களா? அவர்கள் பூமியில் எதைப் படைத்துள்ளன என்பதை எனக்குக் காட்டுங்கள். அல்லது வானங்களி(ன் படைப்பி)ல் அவர்களுக்கு ஏதேனும் பங்கு உண்டா?" என்று கேட்பீராக! அல்லது நாம் (இணைவைப்பாளர்களான) அவர்களுக்கு ஒரு வேதம் வழங்கி (அதில் தங்கள் இணைவைப்புக்குச்) சான்றை (அவர்கள்) பெற்றிருக்கின்றனரா? இல்லை. மாறாக, இத்தீவினையாளர்கள் (இணைத்தெய்வங்கள் காக்கும் என) ஒருவருக்கொருவர் அளிக்கும் வாக்குறுதி வெறும் ஏமாற்றுதலே அன்றி வேறில்லை.*
[41]*உறுதியாக அல்லாஹ்தான் வானங்களையும் பூமியையும் (தத்தமது எல்லையிலிருந்து) விலகிவிடாதவாறு தடுத்து வைத்திருக்கின்றான். அவை விலகினால் அவனைத் தவிர வேறு யாராலும் அவற்றைத் தடுத்துவிடமுடியாது. உறுதியாக அவன் பொறுமையாளன்; பெரும் மன்னிப்பாளன்.*

[42]*எச்சரிக்கை செய்பவர் யாரேனும் தங்களிடம் வந்தால் மற்ற எல்லாச் சமூகத்தாரைவிடவும் தாங்கள்தாம் மிகவும் நேர்வழி பெற்றவர்களாக இருப்போம் என்று அவர்கள் அல்லாஹ்வின் மீது உறுதியாகச் சத்தியம்செய்து கூறினர். ஆயினும் எச்சரிக்கை செய்பவர் அவர்களிடம் வந்தபோது அது அவர்களுக்கு வெறுப்பைத்தான் மிகுதிப்படுத்தியது.* [43]*அவர்கள் பூமியில்*

---

****இந்த வசனத்தில் வழித்தோன்றல் (கலீஃபா) என்று கூறப்படுவது உங்களுக்கு முன்னிருந்தவர்களுக்கு பின்னர் உங்களை வாழும்படி செய்தோம் என்று பொருள்கொள்ள வேண்டியதாகும். இவ்வகையில் மனிதர்களை இறைவன் வாழும்படி செய்து பூமியில் வளர்ச்சியுண்டாக்கச் செய்கிறான். ஆனால் அந்த மனித இனம் அதற்குத் தகுதியானதல்ல என்று ஆகிறபோது வேறு மனிதர்களைக் கொண்டு அவர்களை இறைவன் மாற்றி விடுகிறான்.***

*செருக்குக் கொண்டவர்களாகத் தீய சூழ்ச்சிகள் செய்தனர். உண்மையில் தீய சூழ்ச்சிகள் அவற்றில் ஈடுபடுபவர்களைத்தான் சூழ்ந்துகொள்ளும். இவர்களுக்கு முன்பு இருந்தோர்க்கு நேர்ந்ததைத் தவிர (வேறு வழிமுறை எதையும்) இவர்கள் எதிர்பார்க்கிறார்களா? அல்லாஹ்வின் நடைமுறையில் எந்த மாற்றத்தையும் (நபியே!) நீர் காணமாட்டீர்; மேலும் அல்லாஹ்வின் நடைமுறையில் எந்தப் பின்வாங்கலையும் நீர் காணமாட்டீர்.*
*[44]இவர்கள் பூமியில் பயணம் செய்து இவர்களுக்கு முன்னிருந்தோரின் நிலை என்னவாயிற்று என்பதைப் பார்க்கவில்லையா? அவர்கள் இவர்களைவிட வலிமை மிக்கவர்களாக இருந்தனர். வானங்களிலும் பூமியிலும் எந்த ஒன்றும் அல்லாஹ்வை வென்றுவிட முடியாது. உறுதியாக அவன் முற்றும் அறிந்தவன்; பேராற்றலுடையவன்.*

*[45]மக்களை அவர்கள் செய்யும் தீயசெயல்களுக்காக (அவ்வப்போதே) தண்டிப்பதாக இருந்தால் பூமியில் எந்த உயிரினத்தையும் அல்லாஹ் விட்டு வைத்திருக்கமாட்டான். ஆயினும் அவன் குறிப்பிட்ட தவணைவரை அவர்களுக்குக் காலநீட்டிப்பு அளிக்கிறான். அவர்களுக்கான தவணை வந்துவிடுமானால் (அப்போது அவர்கள் அறிந்துகொள்வார்கள்) உறுதியாகத் தன் அடியார்களை அல்லாஹ் உற்றுநோக்கிக் கொண்டிருக்கின்றான்.*

## 36. யா-ஸீன் (யாஸீன்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]யா – ஸீன்.*

*[2]ஞானம் நிறைந்த குர்ஆன்மீது ஆணையாக! [3](நபியே!)*
*உறுதியாக நீர் இறைத்தூதர்களில் ஒருவராவீர். [4](நீர்) நேர்வழியில்*
*இருக்கின்றீர். [5]இது (இக்குர்ஆன்) யாவற்றினும் வல்லோனும் நிகரற்ற அன்பாள(னுமாகிய இறைவ)னால் அருளப்பட்டதாகும்.*
*[6]இது தம் முன்னோர்கள் எச்சரிக்கப்படாததால் அலட்சியமாக*

*இருக்கும் (இந்த அரபு) சமூகத்தாருக்கு நீர் எச்சரிக்கை செய்யவேண்டும் என்பதற்காக (உமக்கு அருளப்பட்டதாகும்).*

*[7]அவர்களில் பெரும்பாலோர்மீது (அவர்கள் நரக வேதனைக்குரியவர்கள் என்னும் இறைவாக்கு) உறுதியாகிவிட்டது. ஆகவே அவர்கள் நம்பிக்கை கொள்ளமாட்டார்கள். [8]நாம் அவர்களின் கழுத்துக்களில் விலங்குகளைப் பூட்டியுள்ளோம். அவை அவர்களின் தாடைவரை உள்ளன. அதனால் அவர்கள் (நேராகப் பார்க்க முடியாதபடி) மேல்நோக்கித் தலை நிமிர்த்தப்பட்டிருக்கின்றனர். [9]நாம் அவர்களுக்கு முன்னால் ஒரு தடுப்பையும் பின்னால் ஒரு தடுப்பையும் ஏற்படுத்தி அவர்களை மூடி விட்டோம். எனவே அவர்களால் எதனையும் பார்க்க முடியாது.*
*[10]நீர் அவர்களை எச்சரிப்பதும் எச்சரிக்கை செய்யாதிருப்பதும் ஒன்றுதான். அவர்கள் நம்பிக்கை கொள்ளமாட்டார்கள். [11]எவர் (குர்ஆனாகிய) இந்த அறிவுரையைப் பின்பற்றி மறைவிலும் அளவற்ற அருளாளனுக்கு அஞ்சி நடக்கிறாரோ அவரைத்தான் நீர் எச்சரிக்கை செய்ய முடியும். அவருக்கு(ப் பாவ)மன்னிப்பும் பெரும் கூலியும் உண்டு எனும் நற்செய்தியைக் கூறிவிடுவீராக!*

*[12]உறுதியாக நாமே இறந்தோரை (மறுமையில்) உயிர்ப்பிப்போம். (இறக்கும்வரை) அவர்கள் செய்த(னுப்பிய)வற்றையும் (அவர்கள்) விட்டுச்சென்ற (நடைமுறைகளாகிய) சுவடுகளையும் நாம் பதிவு செய்கிறோம். அனைத்தையும் ஒரு தெளிவான பதிவேட்டில் பதிவு செய்துள்ளோம். [13](நபியே!) ஓர் ஊர் மக்களிடம் தூதர்கள் வந்தபோது நடந்ததை உதாரணமாக இவர்களுக்கு எடுத்துக் கூறுவீராக!*

*[14]நாம் அவர்களிடம் இரு தூதர்களை அனுப்பியபோது அவ்விருவரையும் அவர்கள் பொய்மைப்படுத்தினர். எனவே மூன்றாமவரைக்கொண்டு நாம் அவர்களை வலுப்படுத்தினோம். அவர்கள் (அம்மக்களிடம்) உறுதியாக “நாங்கள் உங்களிடம்*

*அனுப்பப்பட்ட (இறைத்)தூதர்களாவோம்” என்று கூறினர்.*
*15அவ்வூர் மக்கள் “நீங்கள் எங்களைப் போன்ற மனிதர்கள்தாம்.*
*அளவற்ற அருளாளன் (வேதம்) எதையும் (உங்கள் மீது) இறக்கி*
*வைக்கவில்லை. நீங்கள் பொய்தான் கூறுகிறீர்கள்” என்றனர்.*
*16தூதர்கள் “நாங்கள் உங்களிடம் அனுப்பப்பட்டுள்ள தூதர்கள்தாம்*
*என்பதை எங்கள் இறைவன் நன்கறிவான்; 17(தூதுச் செய்தியை*
*உங்களுக்குத்) தெளிவாக எடுத்துரைப்பதன்றி (எங்களுக்கு) வேறு*
*கடமை இல்லை” என்று கூறினர். 18அதற்கு அவ்வூரார், “நாங்கள்*
*உங்களைக் கெட்ட சகுனமாகக் கருதுகிறோம். நீங்கள் (உங்கள்*
*அழைப்பிலிருந்து) விலகிக் கொள்ளாவிடில் உறுதியாக உங்களைக்*
*கல்லால் அடிப்போம். அன்றியும் நீங்கள் எங்களிடமிருந்து*
*துன்புறுத்தும் வேதனையும் அடைவீர்கள்'' என்றனர். 19தூதர்கள்,*
*“உங்களின் கெட்ட சகுனம் உங்களிடம்தான் இருக்கிறது. நாங்கள்*
*உங்களுக்கு அறிவுரை கூறியதற்காகவா (இப்படிக் கூறுகிறீர்கள்?)*
*உண்மையில் நீங்கள் வரம்புமீறும் மக்களாக இருக்கிறீர்கள்!” என்று*
*கூறினர். 20(இந்நிலையில்) அந்நகரத்தின் கடைக்கோடியிலிருந்து*
*ஒரு மனிதர் விரைந்தோடி வந்து, “என் சமூகத்தோரே!*
*இத்தூதர்களைப் பின்பற்றுங்கள். 21உங்களிடம் எந்தக் கூலியும்*
*கேட்காத இவர்களைப் பின்பற்றுங்கள். இவர்கள்தாம் நேர்வழியில்*
*உள்ளவர்கள்” என்று கூறினார்.*

*22அவர் (“நீங்கள் என்னையும் எதிர்க்க விழைகிறீர்கள். ஆனால்*
*உங்களிடம் நான் கேட்கிறேன்): என்னைப் படைத்தவனை நான்*
*வணங்காமலிருக்க எனக்கு என்ன நேர்ந்தது? அவனிடமே*
*நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள். 23அவனையன்றி*
*வேறெவரையும் நான் இறைவனாக்கிக் கொள்வேனா? அளவற்ற*
*அருளாளன் எனக்கு ஏதேனும் தீங்கிழைக்க விரும்பினால் அந்த*
*(இணை)த் தெய்வங்களின் பரிந்துரை எப்பயனையும் அளிக்காது;*
*அவர்களால் என்னைக் காப்பாற்றவும் முடியாது. 24அவ்வாறு*
*செய்தால் நான் வெளிப்படையான கெடுவழியில்தான் இருப்பேன்.*
*25(உறுதியாக) நான் உங்கள் இறைவன்மீது நம்பிக்கைகொண்டேன்.*
*எனவே நான் கூறுவதைக் கேளுங்கள்” (என்று கூறினார்.)*

[26](ஆனால் அம்மக்கள் அவரைக் கொன்றுவிட்டனர்).
“சொர்க்கத்தில் நுழைவீராக” என்று அவரிடம் கூறப்பட்டது.
அப்போது அவர், “அந்தோ! என் சமூகத்தார் அறிந்துகொள்ள
வேண்டுமே! [27]என் இறைவன் எனக்கு(ப்பாவ)மன்னிப்பு வழங்கி
என்னைக் கண்ணியமிக்கவர்களில் ஒருவனாக ஆக்கியதை
(அறிந்துகொள்ள வேண்டுமே!)” என்று கூறினார்.

[28]அவருக்குப் பின் நாம் அவரது சமூகத்தினருக்கு எதிராக
வானத்திலிருந்து எந்தப் படையையும் அனுப்பவில்லை. நாம்
அவ்வாறு (படையை) இறக்கி வைப்பதும் இல்லை. [29]ஒரே ஒரு
பேரோசைதான்; அவர்கள் அனைவரும் சாம்பலாகிவிட்டனர்.
[30]அந்தோ, அடியார்களுக்கு ஏற்பட்ட கேடே! அவர்களிடம்
எந்தத் தூதர் வந்தாலும் அவரை அவர்கள் ஏளனம் செய்யாமல்
இருந்ததில்லை.

[31]இவர்களுக்கு முன்னர் (வாழ்ந்த) எத்தனையோ
சமூகத்தாரை நாம் அழித்திருக்கின்றோம் என்பதை இவர்கள்
அறியவில்லையா? அ(வ்வாறு அழிந்து போன)வர்கள்
இவர்களிடம் மீண்டுவரமாட்டார்கள். [32](ஆனால்) அனைவரும்
(விசாரணைக்காக) எம்மிடமே கொண்டு வரப்படுவர்.

[33]இறந்து கிடக்கும் பூமி இம்மக்களுக்கு ஒரு சான்றாகும்.
நாமே அதனை உயிர்ப்பித்து அதிலிருந்து தானியத்தை
வெளிப்படுத்துகிறோம். அதிலிருந்துதான் அவர்கள் உண்கின்றனர்.
[34](மேலும்) அதில் நாம் பேரீச்சை மற்றும் திராட்சைத்
தோட்டங்களை உண்டாக்கினோம். அதில் நீரூற்றுகளையும்
பொங்கி ஓடச் செய்தோம். [35]அதன் கனிகளை அவர்கள்
உண்பதற்காக! (இவ்வாறு உண்டாக்கினோம்.) அவர்களின்
கைகள் அவற்றை விளைவிக்கவில்லை. (இதற்காக) அவர்கள் நன்றி
செலுத்தமாட்டார்களா? [36]பூமி முளைக்கச் செய்கின்றவற்றையும்
அவர்களையும் இன்னும் அவர்கள் அறியாதவற்றையும்
இணைஇணைகளாகப் படைத்தவன் மிகவும் (அப்பாற்பட்டுத்)
தனித்துயர்ந்தவன்.

*[37]இரவும் அவர்களுக்கு ஒரு சான்றாகும். அதிலிருந்து நாம்
பகலின் ஒளியை உரித்தெடுத்துவிடும்போது அவர்கள் இருளில்
மூழ்கிவிடுகின்றனர். [38]சூரியன் தனக்கு வரையறுக்கப்பட்ட
பாதையில் சென்று கொண்டிருக்கிறது. இது யாவற்றினும்
வல்லவனும் நன்கறிந்தவனுமாகிய(இறைவ)வன் ஏற்படுத்திய
விதியாகும். [39]உலர்ந்த பேரீச்சை மட்டையைப் போலத்
தோன்றும்வரை சந்திரனுக்கு நாம் பல நிலைகளை
ஏற்படுத்தியிருக்கிறோம். [40]சூரியன் சந்திரனை அடைய முடியாது.
இரவு பகலை முந்த முடியாது. ஒவ்வொன்றும் அதனதன்
வட்டப்பாதையில் நீந்திக்கொண்டிருக்கின்றன.*

*[41]நிரம்பிய (நோவாவின்) கப்பலில் நாம் அவர்களின்
மூதாதையர்களை ஏற்றியதும் அவர்களுக்கு ஒரு சான்றாகும்.
[42]அவர்கள் ஏறிப் பயணம்செய்ய அதுபோன்றவற்றையும்
அவர்களுக்காக நாம் படைத்துள்ளோம். [43]நாம் விரும்பினால்
அவர்களை மூழ்கடித்து விடுவோம். அப்போது (அவர்களின்
முறையீட்டைக் கேட்டு) அவர்களைக் காப்பாற்றுபவர் எவரும்
இருக்கமாட்டார்கள். அவர்கள் காப்பாற்றப்படவும் மாட்டார்கள்.
[44]ஆயினும் எமது அருளாலும் குறிப்பிட்ட காலம்வரை நாம்
அவர்கள் அனுபவிக்க வசதிகள் அளித்திருப்பதாலும் அன்றி
(வேறெதற்காகவும் அவர்கள் காப்பாற்றப்படுவதில்லை).*

*[45]“உங்களுக்கு முன்னால் (கடந்துசென்ற காலத்தில்)
உள்ளவை(யான பாவங்கள்) உங்களுக்குப் பின்னால்
(மறுமையில்) உள்ளவை(யான தண்டனைகள்) ஆகியவற்றுக்கு
அஞ்சுங்கள்; உங்கள் மீது இரக்கம் காட்டப்படலாம்” என்று
அவர்களிடம் கூறப்பட்டால் (அதனைப் புறக்கணித்து
விடுகின்றனர்.) [46]அவர்களுடைய இறைவனின் சான்றுகளில்
எந்த ஒரு சான்று அவர்களிடம் வந்தாலும் அவர்கள்
அதனைப் புறக்கணியாதிருப்பதில்லை. [47]“அல்லாஹ் உங்களுக்கு
வழங்கியவற்றிலிருந்து நீங்கள் (அறச்)செலவு செய்யுங்கள்
என்று அவர்களிடம் கூறப்பட்டால் மறுப்பாளர்கள்*

நம்பிக்கையாளர்களிடம், "அல்லாஹ் விரும்பியிருந்தால் எவருக்கெல்லாம் உணவளித்திருப்பானோ அவர்களுக்கு நாங்கள் உணவளிப்பதா? நீங்கள் வெளிப்படையான கெடுவழியிலேயே இருக்கிறீர்கள்" என்று கூறுகின்றனர்.

48"நீங்கள் உண்மையாளர்களாயின், (மறுமை வேதனை பற்றிய) இந்த எச்சரிக்கை வாக்கு எப்போது (நிறைவேறும்)
என்று கூறுங்கள்"? என அவர்கள் (ஏளனமாகக்) கேட்கின்றனர்.
49இந்த மக்கள் (முடிவு நாளின்) ஒரு பேரோசையைத்தான்
எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அது அவர்கள் வாதம்
புரிந்து கொண்டிருக்கும்போதே அவர்களைத் தாக்கிவிடும்.
50அப்போது அவர்களால் இறுதிவிருப்பம் அளிக்கவோ தம்
மக்களிடம் திரும்பிச் செல்லவோ முடியாது. 51(பின்னர்)
எக்காளம் ஊதப்படும். உடனே அவர்கள் (உலகில் வாழ்ந்து
மறைந்த அனைத்து மனிதர்களோடும்) சவக்குழிகளிலிருந்து
வெளிப்பட்டுத் தம் இறைவனிடம் விரைவார்கள். 52"அந்தோ!
எங்கள் தீப்பேறே! எங்களின் துயிலிடங்களிலிருந்து எங்களை
எழுப்பியது யார்?" என்று கேட்பார்கள். "இதுதான் அளவற்ற
அருளாளன் அளித்த வாக்குறுதியும் தூதர்கள் எடுத்துரைத்த
உண்மையும் ஆகும்" (என்று கூறப்படும்). 53ஒரே ஒரு (எக்காளப்)
பேரோசைதான். உடனே அவர்கள் அனைவரும் எம்முன்
கொண்டு வரப்படுவார்கள்.

54அந்த நாளில் யாருக்கும் சிறிதளவும் அநீதி
இழைக்கப்படமாட்டாது. "நீங்கள் செய்தவற்றுக்குத்தான் கூலி
கொடுக்கப்படுவீர்கள்" (என்று கூறப்படும்.) 55உறுதியாகச்
சொர்க்கவாசிகள் அந்த நாளில் தம் பணிகள் அனைத்திலும்
மகிழ்ச்சியுற்றிருப்பர். 56அவர்களும் அவர்களின் மனைவியரும்
நிழல்முற்றச் சாய்வு இருக்கைகளில் சாய்ந்திருப்பர். 57அங்கே
கனிகளும் அவர்கள் வேண்டும் அனைத்தும் கிடைக்கும். 58நிகரற்ற
அன்பாளனாகிய இறைவனிடமிருந்து 'சாந்தி உண்டாகட்டும்'
எனவும் (வாழ்த்துக்) கூறப்படும்.

[59](தீவினையாளர்களை நோக்கி) “குற்றவாளிகளே!
இன்று (நம்பிக்கையாளர்களைவிட்டுப்) பிரிந்து நில்லுங்கள்.
[60]ஆதமுடைய மக்களே! நீங்கள் சாத்தானை வணங்கக்கூடாது;
அவன் உங்களுக்கு வெளிப்படையான பகைவனாவான் என்று
நான் உங்களிடம் உறுதிமொழி பெறவில்லையா? [61](மேலும்)
நீங்கள் என்னையே வணங்கவேண்டும்! இதுவே நேர்வழியாகும்.
(என்று உறுதிமொழி பெறவில்லையா?) [62]அவன் உங்களில்
பெருங்கூட்டத்தினரை வழிகெடுத்துவிட்டான் (அப்போது)
நீங்கள் புரிந்துகொள்ளவில்லையா? [63]இதுதான் உங்களுக்கு
வாக்களிக்கப்பட்ட நரகம். [64]நீங்கள் (உண்மையை) மறுத்துக்
கொண்டிருந்ததனால் இன்று இதனுள் நுழையுங்கள்” (என்று
இறைவன் கூறுவான்)” [65]அந்த நாளில் நாம் அவர்களின்
வாய்களின்மீது முத்திரையிட்டுவிடுவோம். அவர்கள் செய்து
கொண்டிருந்தவை குறித்து அவர்களின் கைகள் எம்மிடம் பேசும்;
அவர்களின் கால்கள் சாட்சியம் கூறும்.

[66]நாம் விரும்பியிருந்தால் (இறை மறுப்புக்காக, உலகில்)
அவர்களின் கண்களைக் குருடாக்கியிருப்போம். அப்போது
அவர்கள் (தாம் செல்ல வேண்டிய) பாதையைத் தேடி விரைந்து
ஓடியிருந்தாலும் அவர்களால் எதைப் பார்த்திருக்க முடியும்?
[67]நாம் விரும்பியிருந்தால் அவர்கள் இருந்த இடத்திலேயே (அசைய
முடியாதபடி) அவர்களை உருமாற்றியிருப்போம். அவர்களால்
முன்னால் செல்லவும் பின்னால் திரும்பவும் முடிந்திராது.
[68]நாம் எவரது ஆயுளை நீட்டித்திருக்கிறோமோ அவரது (உடல்)
நிலையை (குழந்தையைப் போல்) தலைகீழ் ஆக்கி விடுகிறோம்.
(இதனை) அவர்கள் புரிந்துகொள்ளமாட்டார்களா?

[69]மேலும் (நபியாகிய) இவருக்கு நாம் கவிதை
கற்றுக்கொடுக்கவில்லை. அது இவருக்கு ஏற்றதும் அன்று.
(அன்றி) இது ஓர் அறிவுரையாகவும் தெளிவாக்கக்கூடிய
குர்ஆன் (வேதநூல்) ஆகவும் உள்ளது. [70](உணர்வும்)
உயிரு(மு)ள்ளவர்களை எச்சரிப்பதற்காகவும் (எச்சரிக்கையைப்
பொருட்படுத்தாத ஓரிறை)மறுப்பாளர்களின்மீது (இறை)வாக்கை
நிறைவு செய்வதற்காகவும்தான் (இது அருளப்பெற்றுள்ளது).

[71]எம் கைகள் செய்தவற்றில் அவர்களுக்காகக் கால்நடைகளைப்
படைத்துள்ளோம். அவற்றிற்கு அவர்கள் உரிமையாளர்களாக
உள்ளனர். இதனை அவர்கள் சிந்தித்துப் பார்க்கவில்லையா?
[72]நாம் அவற்றை அவர்களுக்குக் கீழ்ப்படியச் செய்தோம்.
சிலவற்றின்மீது அவர்கள் பயணம் செய்கின்றனர்; சிலவற்றை
அவர்கள் உண்கின்றனர். [73]மேலும் அவற்றிலிருந்து அவர்களுக்கு
(வேறுசில) பயன்(படுபொருள்)களும் பானங்களும் கிடைக்கின்றன.
(இவற்றுக்காக) அவர்கள் நன்றி செலுத்த வேண்டாமா? [74]ஆனால்
அவர்கள் தமக்கு உதவி கிடைக்கும் என நம்பி அல்லாஹ்வையன்றி
வேறு தெய்வங்களை ஏற்படுத்திக்கொண்டனர். [75](ஆனால்
இணைத்தெய்வங்களாகிய) அவர்களால் இவர்களுக்கு
உதவமுடியாது. (மறுமையில்) அவர்களே இவர்களுக்கெதிரான
படையாகக் கொண்டுவரப்படுவர். [76]எனவே (நபியே!) அவர்களின்
பேச்சு உம்மைக் கவலைப்படுத்த வேண்டாம். அவர்கள்
மறைப்பதையும் வெளிப்படுத்துவதையும் நாம் நன்கறிவோம்.

[77]நாம் ஒரு துளி விந்திலிருந்து மனிதனைப் படைத்தோம்
என்பதை அவன் (சிந்தித்துப்) பார்க்கவில்லையா? அவ்வாறிருந்தும்
அவன் (எம்மை எதிர்த்து) வெளிப்படையாக வாதம்புரிபவனாக
இருக்கின்றான். [78]அவன், தான் படைக்கப்பட்ட விதத்தை
மறந்துவிட்டு எம(து ஆற்றலு)க்குச் சாதாரண மானிட
ஆற்றலை உவமையாக்கிக் கொண்டு "எலும்புகள் மக்கிப்போன
பின்னர் அவற்றை உயிர்ப்பிப்பவன் யார்?" என்று கேட்கிறான்.
[79]"முதன்முறை அவற்றைப் படைத்தவன்தான் மீண்டும் அவற்றுக்கு
உயிர்கொடுப்பான். அவன் எல்லாவகைப் படைப்புகளையும்
நன்கறிந்தவன்" என்று நபியே நீர் கூறுவீராக! [80]அவன்தான்
பசுமையான மரத்திலிருந்து உங்களுக்காக நெருப்பை
உண்டாக்கினான். அதிலிருந்துதான் நீங்கள் தீயை மூட்டுகிறீர்கள்.
[81]வானங்களையும் பூமியையும் படைத்தவன் இவர்களைப்
போன்றவர்களைப் படைக்க ஆற்றலற்றவனா? ஆம். அவன்தான்
(ஒப்புவமையற்ற) மிக மேன்மையான படைப்பாளன்; முற்றும்
அறிந்தவன். [82]அவன் ஏதேனும் ஒன்றைப் படைக்க விரும்பினால்

*அதற்கு அவனிடும் கட்டளை 'ஆகு' என்பதுதான். அது ஆகி*
*விடும். [83](எனவே) எவனது கையில் அனைத்து அதிகாரமும்*
*உள்ளதோ அவன் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்;*
*அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்.*

# 37. அணிவகுத்து நிற்போர் (அஸ்ஸாஃப்ஃபாத்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

*[1]அணி அணியாக நிற்போர் (வானவர்கள்) மீது சத்தியமாக!*
*[2](தீயவற்றை வெகுண்டு) விரட்டுவோர் மீது சத்தியமாக!*
*[3](இறை)வேதத்தை ஓதிக்காட்டுவோர்மீது சத்தியமாக! [4](உறுதியாக)*
*உங்கள் இறைவன் ஒருவனே! [5]அவன்தான் வானங்கள், பூமி*
*அவ்விரண்டிற்கும் இடையே உள்ளவை ஆகியவற்றின் இறைவன்.*
*(சூரியன் சிறிது சிறிதாக இடம் மாறி) உதிக்கும் கிழக்குகளுக்கும்*
*அவன்தான் இறைவனாவான்.*

*[6](வானங்களுள் பூமிக்கு மிக) அருகிலிருக்கும் (முதல்) வானத்தை*
*நாம் நட்சத்திரங்களின் அழகைக் கொண்டு அலங்கரித்துள்ளோம்.*
*[7]வரம்புமீறிய ஒவ்வொரு சாத்தானிடமிருந்தும் அதனைப்*
*பாதுகாத்துள்ளோம். [8]அவர்களால் மிக உயர்ந்த(வான)வர்கள்*
*பேசுவதைச் செவியுற முடியாது. எல்லாப் பக்கங்களிலிருந்தும்*
*அவர்கள் (எரிகற்கள் வீசி) விரட்டியடிக்கப்படுவர். [9]அவர்களுக்கு*
*நிலையான வேதனையுண்டு. [10]ஆயினும் (சாத்தான்)*
*யாரேனும் திருட்டுத்தனமாக (வானவர்களின்) ஏதேனும் ஒரு*
*செய்தியை ஒட்டுக்கேட்டுப் பறித்துச்செல்ல முற்பட்டால்*
*அவனைத் தீச்சுவாலை பின்தொடரும். [11](நபியே!) நீர் (இறை)*
*மறுப்பாளர்களிடம் கேளும்: அவர்களைப் படைப்பது அதிக*
*சிரமமானதா அல்லது வேறு படைப்புகளைப் படைப்ப(து*
*சிரமமான)தா? நாம் அவர்களைப் பிசுபிசுப்பான களிமண்ணால்*
*படைத்தோம். [12]நீர் (இறைவனின் பேராற்றல் கண்டு)*
*வியப்படைகிறீர். அவர்களோ (அதனை) ஏளனம் செய்கின்றனர்.*

[13]அவர்களுக்கு அறிவுரை கூறப்பட்டாலும் அதை அவர்கள்
பொருட்படுத்துவதில்லை. [14]எந்த ஒரு சான்றினைக் கண்டாலும்
அவர்கள் அதனை ஏளனம் செய்கின்றனர். [15]“இது தெளிவான
சூனியமேயன்றி வேறில்லை” என்கின்றனர். [16]“நாங்கள்
இறந்து மண்ணாகவும் எலும்புகளாகவும் ஆகிவிட்ட பின்னர்
மீண்டும் மெய்யாகவே (உயிர்கொடுத்து) எழுப்பப்படுவோமா?
[17]எங்களுக்கு முன்சென்ற மூதாதையர்களுமா (எழுப்பப்படுவர்?
என்று கேட்கின்றனர்). [18](நபியே!) நீர் “ஆம், நீங்கள் இழிவுக்கும்
உள்ளாவீர்கள்!” என்று (அவர்களிடம்) கூறும்.

[19]அதுவோ ஓர் உரத்த அதட்டல்தான். உடனே அவர்கள்
(உயிர் பெற்றெழுந்து மறுமை நிகழ்வைக் கண்கூடாகக்)
காண்பர். [20](கண்டதும்) “அந்தோ, எங்கள் கேடே! இது
தீர்ப்பு நாளாயிற்றே!” என்று கூறுவர். [21]“நீங்கள் பொய்யெனக்
கூறிக்கொண்டிருந்த தீர்ப்புநாள் இதுதான்” (என்று கூறப்படும்).
[22]“தீவினையாளர்களையும் அவர்களின் கூட்டாளிகளையும்
அல்லாஹ்வையன்றி அவர்கள் வணங்கிக்கொண்டிருந்த
தெய்வங்களையும் ஒன்று திரட்டுங்கள். [23]அவர்கள் அனைவருக்கும்
நரகத்துக்கான வழியினைக் காட்டுங்கள். [24](அங்கு) அவர்களை
நிறுத்தி வையுங்கள். அவர்கள் (உறுதியாக) விசாரிக்கப்பட
வேண்டியவர்கள்” (என்று வானவர்களுக்குக் கட்டளையிடப்படும்)
[25](குற்றவாளிகளிடம்) “உங்களுக்கு என்ன நேர்ந்தது? நீங்கள்
(உலகில் செய்ததுபோல் இங்கு) ஒருவருக்கொருவர் உதவிக்
கொள்வதில்லையே?” (என்று கேட்கப்படும்). [26]மாறாக அவர்கள்
அன்று முற்றிலும் கீழ்ப்படிந்தவர்களாக இருப்பர்.

[27]அவர்களுள் சிலர் வேறு சிலரை நோக்கி வினவிக்
கொண்டிருப்பர். [28](வழிகெட்டோர் தம்மை வழிகெடுத்த
தலைவர்களை நோக்கி) “நீங்கள் வலப்பக்கமிருந்துதானே
(அதிகார வலுவுடன்) நன்மையைவிட்டுத் தடுக்க எங்களிடம்
வந்து கொண்டிருந்தீர்கள்! என்று கூறுவர். [29]அதற்கு
அ(த்தலை)வர்கள், “இல்லை, நீங்கள்தான் நம்பிக்கையாளர்களாக
இல்லை! [30]எங்களுக்கு உங்கள்மீது எந்த அதிகாரமும்

*இருக்கவில்லை. ஆயினும் நீங்கள்தான் வரம்பு மீறிய மக்களாக இருந்தீர்கள். [31](தண்டனை குறித்த) எங்கள் இறைவனின் வாக்கு எங்களுக்கு உறுதியாகி விட்டது. உறுதியாக நாம் அனைவரும் வேதனையை அனுபவித்தே தீரவேண்டும். [32](ஆம்). நாங்கள் உங்களை வழிகெடுத்தோம். (ஏனெனில் உறுதியாக) நாங்களும் வழிகெட்டவர்களாகவே இருந்தோம்" என்று கூறுவர். [33]ஆகவே (மறுமையாகிய) அந்நாளில் அவர்கள் (யாவரும்) வேதனையில் பங்காளிகளாக இருப்பார்கள். [34]உறுதியாக நாம் குற்றவாளிகளுடன் இவ்வாறே நடந்து கொள்வோம்.*

*[35]"அல்லாஹ்வைத்தவிர வணக்கத்திற்குரியவன் யாருமில்லை" என்று அவர்களிடம் கூறப்பட்டபோது அவர்கள் செருக்குக் கொள்பவர்களாக இருந்தனர். [36]"ஒரு பைத்தியக்காரக் கவிஞரின் சொல்லைக் கேட்டு நாங்கள் எங்கள் தெய்வங்களை விட்டுவிடுவோமா?" என்று அவர்கள் கேட்டனர். [37]"மாறாக அவர் சத்தியத்தைக் கொண்டு வந்துள்ளார்; ஏனைய தூதர்களையும் உண்மைப்படுத்துகிறார். (அவ்வாறிருந்தும் நீங்கள் அவற்றைப் பொய்யாக்கினீர்கள்). [38](எனவே இங்கு) உறுதியாக நீங்கள் துன்புறுத்தும் வேதனையை அனுபவித்தே தீரவேண்டும்; [39]உங்களின் செயல்களுக்குத்தான் நீங்கள் கூலி கொடுக்கப்படுவீர்கள்,*

*[40]ஆயினும் அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக்கப்பட்ட (தூய) அடியார்களைத் தவிர! (அவர்களுக்கு எவ்வேதனையும் இல்லை" என்று கூறப்படும்). [41]அவர்களுக்கு அறியப்பட்ட உணவு உண்டு. [42]பல்வகைக் கனிகளும் இருக்கும்; அவர்கள் கண்ணியப்படுத்தப்படுவார்கள். [43]பேரின்பச் சொர்க்கச் சோலைகளில் [44]ஒருவரையொருவர் நோக்கியவாறு கட்டில்களில் சாய்ந்திருப்பர். [45](தெளிந்தோடும்) ஊற்றுகளின் மதுவினால் நிரப்பப்பட்ட குவளைகள் அவர்களிடையே சுற்றி வரச்செய்யப்படும். [46]அது வெண்மையானது; அருந்துவோர்க்குச் சுவையானது. [47]அதில் எந்தத் தீங்கும் இராது; அவர்கள் மயக்கமடையவும்*

*மாட்டார்கள். [48]அவர்களுடன் அடக்கமான பார்வையுடைய கண்ணழகிகளும் இருப்பர். [49]அவர்கள் (இறக்கைகளால்) மறைத்து வைக்கப்பட்ட (தீக்கோழி) முட்டைகளைப் போல் (வெளிர் மஞ்சள் நிறத்தில்) இருப்பர்.*

*[50]அவர்கள் (சொர்க்கவாசிகள்) ஒருவரையொருவர் விசாரித்துக் கொள்வர். [51] அவர்களில் ஒருவர் "(உலகில்) எனக்கு ஒரு நண்பன் இருந்தான். [52]அவன், "(தூதர்கள் கூறும் செய்தியை) உண்மையென ஏற்பவர்களில் நீயும் ஒருவனா? [53]நாம் இறந்து மண்ணாகவும் எலும்புகளாகவும் ஆகிவிட்ட பின்னரும் (நம் செயல்களுக்காகக்) கூலி கொடுக்கப்படுவோமா?" என்றெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தான். [54]நீங்கள் அவனைப் பார்க்க விரும்புகிறீர்களா?" என்று கேட்பார். [55]பின்னர் அவர் எட்டிப் பார்ப்பார். நரகத்தின் நடுவில் அவனைக் காண்பார். [56]அப்போது அவர் (அவனை நோக்கி) "அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீ என்னை அழித்துவிடவே முற்பட்டாய். [57]என் இறைவனின் அருள் இல்லாதிருந்தால் நானும் (நரகத்திற்குக்) கொண்டு வரப்பட்டவர்களில் ஒருவனாக இருந்திருப்பேன்" என்று கூறுவார். [58](பின்னர்த் தமது சொர்க்கத் தோழர்களிடம்) "இனி நாம் இறக்க வேண்டியதில்லையல்லவா! [59]நம்முடைய முந்தைய சாவைத் தவிர (இனிச் சாவு இல்லை). இனி நாம் வேதனை செய்யப்படவும் மாட்டோம் அல்லவா! [60]உறுதியாக இதுதான் மாபெரும் வெற்றியாகும்" (என்றும் கூறுவார்) [61]நற்செயலாற்றுவோர் இத்தகைய வெற்றிக்காகத்தான் செயல்பட வேண்டும்.*

*[62]இந்த விருந்தோம்பல் சிறந்ததா? அல்லது 'ஸக்கூம்' என்ற கள்ளி மரம் சிறந்ததா? [63]உறுதியாக நாம் அதனைத் தீவினையாளர்களுக்கு ஒரு சோதனையாக ஆக்கியுள்ளோம். [64]அது நரகத்தின் அடிப்பகுதியிலிருந்து முளைத்தெழும் மரமாகும். [65]அதன் பழக்குலைகள் சாத்தான்களின் தலைகளைப் போன்றிருக்கும்.*

*[66]உறுதியாக அவர்கள் (பசிக்கொடுமையால்) அதனைத் தின்று வயிற்றை நிரப்பிக் கொள்வர். [67]பின்னர் அவர்களுக்குக் குடிக்கக் கொதி நீர்(க் கலவை) கொடுக்கப்படும். [68]பின்னரும் அவர்கள் செல்லுமிடம் நரக நெருப்புத்தான். [69]அவர்கள் தம் முன்னோர்களை உறுதியாக நெறிபிறழ்ந்தவர்களாகவே இருக்கக் கண்டனர். [70]ஆயினும் அவர்களின் அடிச்சுவட்டிலேயே விரைந்து சென்றனர்.*

*[71]இவர்களுக்கு முன்னரும் இவர்களுடைய முன்னோர்களில் பெரும்பாலோர் வழிதவறியிருந்தனர். [72]நாம் அவர்களிடையே எச்சரிக்கை செய்வோரை உறுதியாக அனுப்பியிருந்தோம். [73](அவ்வாறு) எச்சரிக்கப்பட்டோரின் முடிவு என்னவாயிற்று என்பதை (நபியே! எண்ணிப்) பார்ப்பீராக! [74]அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக்கப்பட்ட அடியார்களைத் தவிர (ஏனையோர் அனைவரும் அழித்தொழிக்கப்பட்டனர்).*

*[75]நோவா எம்மை (இறைஞ்சி) அழைத்தார். அழைப்புக்குப் பதிலளிப்போரில் நாமே மிகச் சிறந்தோம்! [76]நாம் அவரையும் அவருடைய மக்களையும் மிகப் பெரும் துன்பத்திலிருந்து காப்பாற்றினோம். [77]அவரது வழித்தோன்றல்களை மட்டும் (உலகில்) எஞ்சியிருக்கச் செய்தோம். [78]பின்வந்த தலைமுறைகளிடையே அவ(ரது நற்பெய)ரை நிலைத்திருக்கச் செய்தோம். [79]உலக மக்களிடையே நோவாவின் மீது சாந்தி உண்டாவதாக! [80]நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே கூலி வழங்குகிறோம். [81]உறுதியாக அவர் நம்பிக்கைகொண்ட எம் அடியார்களில் ஒருவராவார். [82]பின்னர் (அவரைப் பின்பற்றியவர்களைத் தவிர) மற்றவர்களை மூழ்கடித்து விட்டோம்.*

*[83]உறுதியாக ஆப்ரஹாமும் அவரது வழியைப் பின்பற்றியவராகவே இருந்தார். [84]அவர் தூய உள்ளத்துடன் தம் இறைவனிடம் வந்த சமயத்தை (நபியே!) நினைவுகூர்வீராக! [85]அவர் தம் தந்தையிடமும் தம் சமூகத்தாரிடமும் “நீங்கள் எதை வணங்குகிறீர்கள்? என்று கேட்டதையும் நினைவுகூர்வீராக!*

*[86]"அல்லாஹ்வை விடுத்துப் பொய்யான தெய்வங்களையா நீங்கள் விரும்புகிறீர்கள்? [87]அவ்வாறாயின், அனைத்துலகங்களின் இறைவனைப் பற்றி உங்கள் எண்ணம்தான் என்ன?" (என்றும் கேட்டார்.)*

*[88](பின்னர்) அவர் நட்சத்திரங்களை ஒருமுறை பார்த்(துச் சிந்தனையில் ஆழ்ந்)தார். [89]"உறுதியாக நான் நோயுற்றிருக்கிறேன்"*
*என்றார். [90]எனவே அவர்கள் அவரை விட்டு(த் திருநாள்*
*கொண்டாடச்) சென்று விட்டனர். [91]அவர் அவர்களின்*
*தெய்வங்களிடம் சென்று "நீங்கள் உண்ணமாட்டீர்களா?"*
*என்று கேட்டார். [92]"உங்களுக்கு என்ன நேர்ந்தது? நீங்கள் ஏன்*
*பேசுவதில்லை" என்றும் கேட்டார். [93](பின்னர்) அவற்றைத் தம்*
*வலக்கையால் பலமாக அடித்தார். [94]மக்கள் அவரிடம் விரைந்து*
*வந்தனர். [95]அவர்களிடம், "நீங்களே செதுக்கிய இவற்றையா*
*வணங்குகிறீர்கள்? [96]உங்களையும் நீங்கள் செய்தவற்றையும்*
*அல்லாஹ்தான் படைத்தான்" (என்று கூறினார்.) [97](இறுதியில்)*
*அவர்கள், "இவருக்காக ஒரு (நெருப்புக்) கிடங்கை அமைத்துக் கொழுந்து விட்டெரியும் நெருப்பில் இவரை எறியுங்கள்" என்று*
*கூறினர். [98]அவர்கள் அவருக்கெதிராகச் சூழ்ச்சிசெய்ய விரும்பினர்.*
*ஆனால் நாம் அவர்களையே இழிவுபடுத்தி விட்டோம் [99]அவர்*
*"நான் என் இறைவன்பால் செல்கிறேன். அவன் எனக்கு*
*வழிகாட்டுவான்" என்று கூறினார். [100]"என் இறைவா! எனக்கு*
*நல்லோர்களில் (ஒருவராக இருக்கக்கூடிய) ஒரு குழந்தையைத் தருவாயாக" (என்று இறைஞ்சி வேண்டினார்). [101]எனவே*
*(அவருக்குப்) பொறுமையுள்ள ஒரு மகன் (பிறக்கப்போவது)*
*குறித்து நாம் நற்செய்தி கூறினோம். [102]அம்மகன் அவருடன்*
*சேர்ந்து உழைக்கின்ற வயதை அடைந்தபோது அவர், "என் அருமை மகனே! மெய்யாகவே உன்னை நான் அறுத்துப் பலியிடுவது போலக் கனவு கண்டேன். இது குறித்து உன் கருத்து என்ன என்பதை யோசித்துச் சொல்" என்று கூறினார். அதற்கு அவர், "என் தந்தையே, உங்களுக்கு இடப்பட்ட கட்டளைப்படியே செய்யுங்கள். அல்லாஹ் நாடினால் நீங்கள்*

*என்னைப் பொறுமையாளனாகக் காண்பீர்கள்!” என்றார்.*
*103எனவே இருவரும் தம் இறைவனின் கட்டளைக்கு முற்றிலும்*
*கீழ்ப்படிந்தனர். ஆப்ரஹாம் அவரை முகங்குப்புறக் கிடத்தினார்.*
*104அப்போது நாம் அவரை “ஆப்ரஹாமே!” என்று அழைத்து, 105“நீர்*
*கண்ட கனவை உண்மைப்படுத்திவிட்டீர். உறுதியாக இவ்வாறே*
*நாம் நன்மை செய்வோருக்குக் கூலி வழங்குகிறோம்.” என்று*
*கூறினோம். 106உறுதியாக அது ஒரு தெளிவான சோதனையாக*
*இருந்தது. 107ஆயினும் (அவர் மகனுக்குப் பதிலாக) நாம்*
*மகத்தான ஒரு பலிப்பிராணியை(ஆட்டை)க் கொடுத்து அவரை*
*விடுவித்தோம். 108பின் வந்த தலைமுறைகளிடையே அவ(ரது*
*நற்பெய)ரை நிலைத்திருக்கச் செய்தோம். 109ஆப்ரஹாம் மீது*
*சாந்தி உண்டாவதாக! 110நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே*
*கூலி வழங்குகிறோம். 111உறுதியாக அவர் நம்பிக்கைகொண்ட*
*எம் அடியார்களில் ஒருவராவார். 112நாம் அவருக்கு ஈசாக்*
*(பிறக்கப்போவது) பற்றிய நற்செய்தி கூறினோம். 113நாம் அவர்*
*(ஆப்ரஹாம்)மீதும் ஈசாக்கின் மீதும் அருள்வளம் நல்கினோம்.*
*அவர்களின் வழித்தோன்றல்களில் நல்லோர்களும் இருந்தனர்.*
*தமக்குத்தாமே தெளிவாக அநீதி இழைத்துக் கொண்டோரும்*
*இருந்தனர்.*

*114நாம் மோசேவுக்கும் ஆரோனுக்கும் அருள் புரிந்தோம்.*
*115அவர்களையும் அவர்களின் சமூகத்தினரையும் மாபெரும்*
*துன்பத்திலிருந்து காப்பாற்றினோம். 116அவர்களுக்கு உதவி*
*புரிந்தோம். எனவே அவர்களே வெற்றியாளர் ஆயினர். 117நாம்*
*அவ்விருவருக்கும் தெளிவான வேதத்தையும் வழங்கினோம்.*
*118நேரான பாதையில் அவ்விருவரையும் வழிநடத்தினோம்.*
*119பின்வந்த தலைமுறைகளிடையே அவ்விருவ(ர் நற்பெய)ரையும்*
*நிலைத்திருக்கச் செய்தோம். 120மோசே மீதும் ஆரோன் மீதும் சாந்தி*
*உண்டாவதாக! 121நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே கூலி*
*வழங்குகிறோம். 122உறுதியாக அவ்விருவரும் நம்பிக்கைகொண்ட*
*எமது அடியார்களில் உள்ளோர் ஆவர்.*

[123]உறுதியாக இல்யாஸும் (எமது) தூதர்களில் ஒருவராவார்.
[124]அவர் தம் சமூகத்தாரிடம் "நீங்கள் (இறைவனுக்கு)
அஞ்சமாட்டீர்களா"? என்று வினவியதை (நபியே!
நினைவுகூர்வீராக!) [125]படைப்பாளர்களிடையே மிகச்
சிறந்தவனை விட்டுவிட்டு 'பஅல்' எனும் சிலையை
வணங்குகிறீர்களே! [126]அல்லாஹ்தான் உங்களுக்கும் முன்சென்ற
உங்கள் மூதாதையர்களுக்கும் இறைவனாவான்" என்று கூறினார்.
[127]ஆனால் அவர்கள் அவரைப் பொய்மைப்படுத்தினர். ஆகவே
உறுதியாக அவர்கள் (மறுமையில்) எம்மிடம் தண்டனை
வழங்கப்படுவதற்குக் கொண்டுவரப்படுவர். [128]ஆயினும்
(அவர்களில்) அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக்கப்பட்ட தூய
அடியார்களைத் தவிர! (இவர்கள் காக்கப்பட்டு நற்கூலி
பெறுவர்.) [129]பின்வந்த தலைமுறைகளிடையே அவ(ரது
நற்பெய)ரை நிலைத்திருக்கும்படிச் செய்தோம். [130]இல்யாஸ்மீது
சாந்தி உண்டாவதாக! [131]நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே
கூலி வழங்குகிறோம். [132]உறுதியாக அவர் நம்பிக்கைகொண்ட
எம் அடியார்களில் ஒருவராக இருந்தார்.

[133]உறுதியாக லோத்தும் (எமது) தூதர்களில் ஒருவராவார்.
[134]நாம் அவரையும் அவரது குடும்பத்தார் அனைவரையும்
காப்பாற்றியதை (நபியே!) நினைவு கூர்வீராக! [135]பின் தங்கிவிட்ட
(தீய)வர்களுடன் இருந்துவிட்ட கிழவியைத் தவிர (ஏனையோர்
பாதுகாக்கப்பட்டனர்). [136]பின்னர்(ப் பாவம் செய்துவந்த)
மற்றவர்களை நாம் அழித்து விட்டோம். [137](மக்களே!) நீங்கள்
காலையில் அவர்க(ளின் சிதைந்திருக்கும் ஊர்க)ளைக் கடந்து
செல்கிறீர்கள்; [138]இரவிலும் (கடந்து செல்கிறீர்கள்). நீங்கள் புரிந்து
கொள்ளமாட்டீர்களா?" (என்று நபியே நீர் கேளும்!).

[139]உறுதியாக யோனாவும் எமது தூதர்களில் ஒருவராவார்.
[140]அவர் (தப்பி) ஓடி (அளவுக்கு அதிகமான பொருள்கள்)
நிரம்பிய கப்பலில் ஏறிக்கொண்டதை (நபியே நினைவுகூர்வீராக!)
[141](கடல் சீற்றத்தால் கப்பலின் சுமையைக் குறைக்கக் கடலில்)

*எறியப்பட வேண்டியவர் யார் என அறிய அவர்கள் சீட்டுக் குலுக்கிப் போட்டனர். (அதில்) அவர் தோல்வியுற்றார். [142](அவர் கடலில் தூக்கி எறியப்பட்ட போது) பெரிய மீன் ஒன்று அவரை விழுங்கியது. அவர் தம்மையே பழித்துக் கொண்டார். [143]அவர் இறைவனைத் துதிப்பவர்களில் ஒருவராக இல்லாதிருந்தால் [144](மறுமையில்) எழுப்பப்படும் நாள்வரை அந்த மீனின் வயிற்றிலேயே இருந்திருப்பார். [145](பின்னர்) நாம் (அந்த மீன்) வெட்டவெளியில் அவரை எறியுமாறு செய்தோம். அப்போது அவர் நோயுற்றிருந்தார். [146]நாம் அவருக்கு (நிழலாக) ஒரு சுரைக் கொடியை முளைக்கச் செய்தோம். [147]நாம் அவரை ஒரு இலட்சம் அல்லது அதைவிட அதிகமானவர்களிடம் (தூதராக) அனுப்பினோம். [148]அவர்கள் நம்பிக்கை கொண்டனர். ஆகவே குறிப்பிட்ட காலம்வரை அவர்கள் (தம் வாழ்வைச்) சுவைக்கச் செய்தோம்.*

*[149](நபியே! நீர்) அவர் (மக்காவாசி)களிடம் "உங்கள் இறைவனுக்குப் பெண் மக்கள்! உங்களுக்கு ஆண் மக்களா?" என்று கேட்பீராக! [150]நாம் வானவர்களைப் பெண்களாகப் படைத்தோமா? அவர்கள் அதனைப் பார்த்துக் கொண்டிருந்தார்களா? [151]அறிந்துகொள்ளும்! அவர்களின் பெரும் பொய்களில் ஒன்றாக [152]"அல்லாஹ் குழந்தைகளைப் பெற்றெடுத்தான்" என்று கூறுகின்றனர். உறுதியாக அவர்கள் பொய்யர்களே! [153]அவன் ஆண்மக்களை விடுத்துப் பெண்மக்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டானா? [154](நபியே! நீர் அவர்களிடம்)" உங்களுக்கு என்ன ஆயிற்று? எவ்வாறு நீங்கள் தீர்மானிக்கிறீர்கள்? [155]நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா? [156](அல்லது) உங்களிடம் ஏதாவது தெளிவான சான்று இருக்கிறதா? [157]நீங்கள் உண்மையாளர்களானால் உங்களின் வேதத்தைக் கொண்டு வாருங்கள்" (என்று கேட்பீராக!)*

*[158]அவர்கள் இறைவனுக்கும் ஜின்களுக்குமிடையே உறவுமுறையைக் கற்பித்துள்ளனர். (ஆனால்) ஜின்களோ தாம்*

*(தீர்ப்பளிக்கப்படுவதற்காக) இறைவனுக்கு முன்னால் கொண்டு வரப்படுபவர்களே என்பதை உறுதியாக அறிந்திருக்கின்றனர்.*
*[159]அவர்களின் (பொய்) வர்ணிப்புகளிலிருந்து அல்லாஹ் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். [160]களங்கமற்ற அல்லாஹ்வின் அடியார்களைத் தவிர (மற்றவர்களின் வர்ணிப்புகளிலிருந்து அவன் மிகவும் அப்பாற்பட்டுத் தனித்துயர்ந்தவன்).*

*[161](நபியே!) நீர் கூறும்: "உறுதியாக நீங்களும் நீங்கள் வணங்கிக் கொண்டிருப்பவையும் (சேர்ந்து) [162]இறைவனை விட்டு யாரையும் திசை திருப்பிவிட முடியாது, [163]நரக நெருப்பில் பொசுங்கவிருப்போரைத் தவிர" [164](வானவர்கள் கூறுகின்றனர்): எங்களில் ஒவ்வொருவருக்கும் அறுதியிடப்பட்ட ஒரு தகுதிநிலை உள்ளது. [165]நாங்கள் (இறைக்கட்டளையை எதிர்நோக்கி) அணிவகுத்து நிற்போராக இருக்கிறோம். [166]உறுதியாக நாங்கள் (அவனைப் போற்றித்) துதி செய்வோராக இருக்கிறோம்"*

*[167]உறுதியாக (மக்காவாசிகள்) இவ்வாறு கூறிக் கொண்டிருந்தனர்: [168]"முன்னோர்களுக்குக் கிடைத்தது போன்ற அறிவுரை எங்களுக்கும் கிடைத்திருந்தால் [169]நாங்கள் அல்லாஹ்வின் தூய அடியார்களாக இருந்திருப்போம்." [170]ஆனால் (குர்ஆன் அவர்களிடம் வந்தபோது) அவர்கள் அதனை மறுத்துவிட்டனர். விரைவில் அவர்கள் (அதன் விளைவை) அறிந்துகொள்வர்.*
*[171]நாம் அனுப்பிய தூதர்களான எம் அடியார்களுக்காக எமது வாக்கு முன்பே முடிவு செய்யப்பட்டு விட்டது. [172]உறுதியாக அவர்கள் உதவி செய்யப்படுவார்கள். [173]எம் படையின(ராகிய நம்பிக்கையாள)ரே வெற்றிபெறுவர். [174]ஆகவே (நபியே!) சிறிது காலம்வரை அவர்களைப் புறக்கணிப்பீராக! [175]அவர்களை (அவர்களுக்கு நேரவிருப்பதை) நீர் பார்த்துக் கொண்டிருப்பீராக! விரைவில் அவர்களும் (அதனைக்)கண்டு கொள்வர்.*

*[176]எம் தண்டனைக்காகவா அவர்கள் அவசரப்படுகிறார்கள்?*
*[177]அது அவர்களின் முற்றத்தில் இறங்கிவிடும்போது*

*எச்சரிக்கப்பட்ட அவர்களின் விடிகாலைப் பொழுது மிகக்
கொடியதாக இருக்கும். [178]ஆகவே (நபியே!) சிறிது காலம்வரை
அவர்களைப் புறக்கணிப்பீராக! [179]அவர்களை (அவர்களுக்கு
நேரவிருப்பதை) நீர் பார்த்துக் கொண்டிருப்பீராக!
விரைவில் அவர்களும் (அதனைக்) கண்டுகொள்வார்கள்.
[180]கண்ணியத்தின் முழு உரிமையாளனாகிய உம் இறைவன்
(அவர்கள் கற்பிக்கின்றவற்றிலிருந்து) மிகவும் (அப்பாற்பட்டுத்)
தனித்துயர்ந்தவன். [181]தூதர்களுக்கு (இறைவனிடமிருந்து) சாந்தி
உண்டாகட்டும்! [182]அனைத்துலகங்களின் இறைவனாகிய
அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும்!*

## 38. ஸாத் (ஸாத்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]ஸாத்.*

*(நல்லறிவுரைகளின்) நினைவூட்டல் நிறைந்த குர்ஆனின்
மீது சத்தியமாக! [2]மறுப்பாளர்கள் செருக்கிலும் பகைமையிலும்
(மூழ்கிக்) கிடக்கின்றனர். [3]இவர்களுக்கு முன்னர் எத்தனையோ
தலைமுறையினரை நாம் அழித்திருக்கிறோம். (அப்போது)
அவர்கள் (உதவி தேடிக்) கூக்குரலிட்டார்கள். ஆனால் அது
தப்பித்துக்கொள்வதற்குரிய நேரமாக இருக்கவில்லை.*

*[4]இவர்களிலிருந்தே எச்சரிப்பவர் ஒருவர் இவர்களிடம்
வந்ததுபற்றி வியப்படைகின்றனர். இவ்விறைமறுப்பாளர்கள் “இவர்
சூனியக்காரர்; பெரும் பொய்யர்” என்று கூறுகின்றனர். [5]“இவர்
(நம்முடைய) அத்தனை கடவுள்களையும் ஒரே கடவுளாக்கி
விட்டாரா? உறுதியாக இது மிகவும் வியப்புக்குரியதுதான்”
என்றும் கூறுகின்றனர். [6]இவர்களின் தலைவர்கள் “(இவரைவிட்டு)
நீங்கள் சென்றுவிடுங்கள்; உங்கள் தெய்வங்களை உறுதியாகப்
பற்றிக்கொள்ளுங்கள். உண்மையில் இது (உங்களுக்கெதிராக)
உள்நோக்கத்துடன் திட்டமிடப்பட்டதாகும்” என்று*

*சொல்லிக்கொண்டே சென்றனர். [7]"முந்தைய வழிமுறையிலும்
இத்தகைய ஒன்றை நாங்கள் கேள்விப்பட்டதில்லை. இது
கற்பனையாக இட்டுக்கட்டப்பட்ட ஒன்றுதான். [8]நம்மில்
இவருக்கு (மட்டும்)தான் இறைவாக்கு இறக்கப்பட வேண்டுமா?"
என்று கேட்கின்றனர். இவர்கள் எனது (வேத) எச்சரிக்கையைக்
குறித்து ஐயம் கொண்டுள்ளனர். இவர்கள் என்(னால் தரப்படும்)
வேதனையை (இன்னும்) அனுபவிக்கவில்லை.*

*[9](நபியே!) யாவற்றினும் வல்லோனும்
பெருங்கொடையாளனுமாகிய உம் இறைவனின் அருட்கருவூலங்கள்
இவர்களிடம் இருக்கின்றனவா? [10]அல்லது வானங்கள், பூமி
அவற்றிற்கு இடையிலுள்ளவை ஆகியவற்றின் ஆட்சி இவர்களிடம்
உள்ளதா? அவ்வாறாயின் இவர்கள் கயிற்றேணிகொண்டு
(வானங்களின்) வாசல்களில் ஏறட்டும். [11](முந்தைய தூதர்களை
எதிர்த்த) படையினரைப் போலவே இங்கு(மக்காவிலு)ள்ள
(மறுப்புப்) படையினரும் தோற்கடிக்கப்படுவர். [12]இவர்களுக்கு
முன்னர் நோவாவின் சமூகத்தினர், ஆத் சமூகத்தினர், பெரும்
படைகளுள்ள ஃபாரோ, [13]ஸமூத் சமூகத்தினர், லோத்தின்
சமூகத்தினர், 'அய்க்கா' (தோப்பு)வாசிகள் ஆகியோரும் (எம்
தூதர்களைப்) பொய்யர்கள் எனக் கூறியுள்ளனர். அவர்கள்
பெரும் கூட்டத்தாராக இருந்தனர். [14]அவர்கள் அனைவரும்
தூதர்களைப் பொய்யர்கள் எனக் கூறினர். எனவே எனது
தண்டனை உறுதியாகிவிட்டது. [15](இப்போது) இவர்கள்
ஒரேயொரு பேரோசையைத்தான் எதிர்பார்க்கின்றனர். அது
சிறிதும் தாமதிக்கப்படாது. [16]"எங்கள் இறைவா! விசாரணை
நாளுக்கு முன்னரே (தண்டனையில்) எங்கள் பங்கை விரைவில்
அளித்துவிடு" என்று இவர்கள் ஏளனமாகக் கூறுகின்றனர்.*

*[17](நபியே!) இவர்கள் கூறுவதை நீர் பொறுத்துக்கொள்ளும்.
வலிமைமிக்க எமது அடியார் தாவீதை நினைவுகூரும். அவர்
(எல்லாவற்றுக்கும் எம்மையே நோக்கித்) திரும்புபவராக
இருந்தார். [18]நாம் அவருக்கு மலைகளை வசப்படுத்தித் தந்தோம்.
அவை (அவருடன் சேர்ந்து) காலையிலும் மாலையிலும்*

*(இறைவனைத்) துதித்துக் கொண்டிருந்தன. [19]ஒன்றுதிரண்ட*
*பறவைகளையும் (அவருக்கு வசப்படுத்திக் கொடுத்தோம்.)*
*அவை அனைத்தும் (இறைவனைத் துதித்துப்பாட) அவனிடமே*
*திரும்புபவையாக இருந்தன. [20]நாம் அவருடைய அரசாட்சியை*
*வலுப்படுத்தினோம். அவருக்கு ஞானத்தையும் தெளிவான*
*தீர்ப்பளிக்கும் பேச்சாற்றலையும் வழங்கினோம்.*

[21]*(நபியே!) சுவர் ஏறி (தாவீதின்) தொழுகை மாடத்திற்குள்*
*வந்த அந்த (இரு) வழக்காளிகள் பற்றிய செய்தி உமக்கு*
*வந்ததா?* [22]*அவர்கள் தாவீதிடம் வந்தபோது அவர்களைக்*
*கண்டு அவர் திடுக்கிட்டார். அவர்கள், "அஞ்சாதீர். நாங்கள்*
*இருவரும் வழக்காளிகள். எங்களில் ஒருவர் மற்றவர்மீது*
*அநீதி இழைத்துள்ளார். எனவே எங்களிடையே நியாயமாகத்*
*தீர்ப்பளிப்பீராக. அநீதி இழைத்துவிடாதீர். எங்களுக்கு*
*நேர்வழியைக் காட்டுவீராக" என்று கூறினர்.*

[23]*(அவர்களில் ஒருவர்) "இவர் என் சகோதரர். இவரிடம்*
*தொண்ணூற்று ஒன்பது செம்மறி ஆடுகளுள்ளன. என்னிடமோ*
*ஒரே ஓர் ஆடுதான் உள்ளது. 'அதையும் என்னிடமே தந்துவிடு'*
*என்று இவர் கூறுகிறார்; வாதத்திறனில் இவர் என்னை*
*வென்றுவிடுகிறார்" (என்று கூறினார்.)* [24]*(தாவீத் அவரை நோக்கி)*
*"உமது ஆட்டைத் தமது ஆடுகளுடன் சேர்த்துவிடுமாறு கேட்டதன்*
*மூலம் உறுதியாக இவர் உமக்கு அநீதி இழைத்துவிட்டார்.*
*பங்காளிகளில் பெரும்பாலோர் ஒருவர் மற்றவருக்கு அநீதி*
*இழைக்கின்றனர், (ஆனால்) நம்பிக்கைகொண்டு நற்செயல்*
*புரிவோரைத் தவிர! (அவர்கள் அநீதி இழைப்பதில்லை).*
*அவர்களோ மிகக் குறைவாகவே இருக்கின்றனர்" என்று*
*கூறினார். (இவ்வாறு தீர்ப்பளிக்கும் போதே இவ்வழக்கின்*
*மூலம்) உண்மையில் நாம் அவரைச் சோதித்தோம் என்பதை(த்*
*தாவீது) புரிந்துகொண்டார்; தம் இறைவனிடம் பாவமன்னிப்புக்*
*கோரினார். தலைவணங்கி வீழ்ந்தவராக அவனிடமே மீண்டார்.*
[25]*(எனவே) நாம் அவரது தவற்றை மன்னித்து விட்டோம்.*

*உறுதியாக எம்மிடம் அவருக்கு நெருக்கமும் நல்ல மீளிடமும் உள்ளது.*

[26]*(நாம் அவரிடம்) "தாவீதே! நாம் உம்மைப் பூமியில் (ஆட்சிபுரியும்) அரசராக ஆக்கியுள்ளோம். எனவே மக்களிடையே நியாயமாகத் தீர்ப்பளிப்பீராக! மன விருப்பங்களைப் பின்பற்றாதீர். அது உம்மை இறைவழியைவிட்டுத் தவறச் செய்துவிடும்; இறைவழியைவிட்டுப் பிறழ்ந்து விடுபவர்களுக்குக் கடும் தண்டனை உண்டு. அவர்கள் விசாரணை நாளை மறந்து விடுவதுதான் அதற்கான காரணமாகும்" (என்று கூறினோம்)*

[27]*வானத்தையும் பூமியையும் அவை இரண்டிற்குமிடையே உள்ளவற்றையும் நாம் (இலக்கின்றி) வீணாகப் படைக்கவில்லை. அது மறுப்பாளர்களின் எண்ணமாகும். மறுப்பாளர்களுக்கு (நரக) நெருப்பின் கேடுதான் இருக்கிறது.* [28]*நாம் (ஓரிறை) நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோரையும் பூமியில் குழப்பம் செய்வோரையும் சமமாக நடத்துவோமா? (அல்லது) இறையச்சமுடையோரைக் கொடியோரைப் போல நடத்துவோமா?*
[29]*(நபியே!) இது அருள்நிறைந்த வேதமாகும். இதன் வசனங்களை மக்கள் சிந்திப்பதற்காகவும் அறிவுடையோர் நல்லறிவு பெறுவதற்காகவும் இதனை நாம் உமக்கு அருளினோம்.*

[30]*நாம் தாவீதுக்கு சாலமனை (மகனாக) வழங்கினோம். அவர் (சாலமன்) மிகச் சிறந்த அடியார்; அவர் (எப்போதும் எம் பக்கமே) மிகுதியாகத் திரும்புபவராக இருந்தார்.* [31]*(இந்த நிகழ்ச்சியை நினைவு கூரும்! ஒரு நாள்) மாலைப்பொழுதில் வேகமாக ஓடக்கூடிய உயர்தரமான குதிரைகள் அவர் முன்னால் கொண்டு வரப்பட்டபோது அவர்,* [32]*"சூரியன் திரைக்குள் மறையும்வரை என் இறைவனை நினைவுகூர்வதிலிருந்து (இந்தச்) செல்வங்களின்மீது விருப்பம் கொண்டுவிட்டேன்" என்று (வருந்திக்) கூறினார்.* [33]*(பின்னர்) "அவற்றை என்னிடம் திரும்பக் கொண்டு வாருங்கள்" (என்று கூறி) அவற்றின் கெண்டைக்*

*கால்களையும் கழுத்துகளையும் (பரிவுடன்) தடவிக் கொடுக்கத் தொடங்கினார்.*

*[34](உறுதியாக) நாம் சாலமனைச் சோதித்தோம். அவரது சிறப்பணையில் ஒரு வெற்றுடலைப் போட்டு விட்டோம். அப்போது அவர் எம் பக்கம் திரும்பினார். [35]"என் இறைவா! என்னை மன்னித்து விடுவாயாக! எனக்குப்பின் எவரும் அடைய முடியாத ஓர் அரசாட்சியை எனக்கு அளிப்பாயாக! உறுதியாக நீயே மாபெரும் கொடையாளி" என்று இறைஞ்சி வேண்டினார். [36]எனவே, நாம் அவருக்குக் காற்றை வசப்படுத்திக் கொடுத்தோம். அது அவரது கட்டளைப்படி அவர் செல்லவிரும்பிய இடங்களுக்கு மென்மையாக (அவரைச் சுமந்து) சென்று கொண்டிருந்தது. [37](மேலும்) ஜின்களில் கட்டடம் கட்டுவோர், முத்துக்குளிப்போர் ஆகியோரையும் [38]சங்கிலிகளால் பிணைக்கப்பட்டிருந்த வேறு சிலரையும் அவருக்கு வசப்படுத்திக் கொடுத்தோம். [39]"இவை எமது அருட்கொடையாகும் (இதிலிருந்து) நீர் விரும்பினால் பிறருக்குக் கொடுக்கலாம்; அல்லது நீரே வைத்துக் கொள்ளலாம் (இது குறித்து உம்மிடம்) எந்த விசாரணையும் இராது" (என்று கூறினோம்) [40]உறுதியாக எம்மிடம் அவருக்கு நெருக்கமும் அழகிய மீளிடமும் உண்டு.*

*[41](நபியே!) எம் அடியார் யோபை நினைவுகூர்வீராக! அவர் தம் இறைவனை நோக்கி இறைஞ்சி வேண்டி "சாத்தான் எனக்குத் துயரத்தையும் வேதனையையும் ஏற்படுத்தி விட்டான்" என்று கூறினார். [42](அப்போது நாம்) "உம் காலால் (பூமியை) அடிப்பீராக!" (என்றோம், அவர் அடித்ததால் ஓர் ஊற்றுப் பீறிட்டது) "இது குளிர்ந்த நீராகும்; குளிப்பதற்கும் குடிப்பதற்கும் ஏற்றதாகும்" என்று கூறினோம். (அந்நீரால் அவரது நோய்த் துன்பங்கள் நீங்கின). [43]பின்னர் எம் அருளாகவும் அறிவுடையோருக்குப் படிப்பினையாகவும் (அமையுமாறு பிரிந்திருந்த) அவரது குடும்பத்தையும் அவர்களுடன் அவர்களைப் போன்றோரையும் அவருக்கு வழங்கினோம். [44]"உம் கையில் ஒரு பிடி புல்லை எடுத்து*

*அதைக் கொண்டு (உம் மனைவியை) அடிப்பீராக! (முன்பு நீர் செய்திருந்த) சத்தியத்தை முறித்து விடாதீர்" என்றோம். உறுதியாக நாம் அவரைப் பொறுமையாளராகக் கண்டோம். அவர் மிகச் சிறந்த அடியாராகவும் (யாவற்றுக்கும்) எம் பக்கமே திரும்புபவராகவும் இருந்தார்.*

[45]*(நபியே!) ஆற்றலும் அகப்பார்வையுமுடைய எம் அடியார்களான ஆப்ரஹாம், ஈசாக், ஜேக்கப் ஆகியோரையும் நினைவுகூர்வீராக!* [46]*உறுதியாக மறுமையை நினைவூட்டுதல் என்னும் தூய நோக்கத்திற்காக அவர்களைத் தேர்ந்தெடுத்தோம்.*
[47]*அவர்கள் எம்மிடம் தேர்ந்தெடுக்கப்பட்ட நல்லோர்களில் அடங்குவோர் ஆவர்.* [48]*(நபியே! இன்னும்) இஸ்மவேல், அல்யஸ்உ, துல்கிஃப்ல் ஆகியோரையும் நினைவுகூர்வீராக! அவர்கள் அனைவரும் நல்லோர்களில் அடங்குவோர் ஆவர்.*

[49]*இது (குர்ஆன், நம்பிக்கையாளர்களுக்கு) ஓர் அறிவுரையாகும். உறுதியாக இறையச்சமுடையோருக்கு அழகிய மீளுமிடம் உண்டு.*
[50]*அவை நிலையான சொர்க்கச் சோலைகளாகும். அவற்றின் வாயில்கள் அவர்களுக்காகத் திறந்தே இருக்கும்.* [51]*அங்கே அவர்கள் பஞ்சணைகளில் சாயந்தவண்ணம் பல்வேறு கனிகளையும் பானங்களையும் கேட்டுக் கொண்டிருப்பர்.* [52]*அவர்களிடம் பார்வைகளைத் தாழ்த்திய சம வயதுடைய கன்னிப்பெண்கள் இருப்பர்.* [53]*"விசாரணை செய்யப்படும் நாளில் உங்களுக்கு(க் கிடைக்கும் என) வாக்களிக்கப்பட்டவை இவையேயாகும்" (என்று கூறப்படும்).* [54]*உறுதியாக இவை எம்முடைய அருட்கொடைகள்; இவற்றுக்கு முடிவே கிடையாது.*

[55]*இதுவே (இறையச்சமுடையவர்களுக்குரிய முடிவாகும்). ஆனால் வரம்பு மீறுவோர்க்கு மிகக் கெட்ட இருப்பிடம்தான் உண்டு.* [56]*(அதுதான்) நரகம்! அதில் அவர்கள் எரிந்து பொசுங்குவர். அது மிகக் கெட்ட உறைவிடமாகும்.* [57]*"இது கொதிநீரும் சீழுமாகும். இதனை அவர்கள் சுவைக்கட்டும்" என்று*

*கூறப்படும். [58]இதைப் போன்று வேறு பல வகை வேதனைகளும்
உண்டு. [59](அவர்களின் தலைவர்களை நோக்கி) "இதோ ஒரு படை
உங்களுடன் முண்டியடித்துக் கொண்டு நுழைகிறது" (என்று
கூறப்படும். அப்போது) "அவர்களுக்கு இது நல்வரவு இல்லை.
அவர்கள் நெருப்பில் பொசுங்கக் கூடியவர்கள்தாம்." (என்று
அத்தலைவர்கள்) கூறுவர். [60]அ(வர்களைப் பின்பற்றியவ)வர்கள்
"அன்று. நீங்களும்தான் (பொசுங்கிக் கொண்டிருக்கிறீர்கள்);
உங்களுக்கும் எந்த வரவேற்பும் இல்லை, நீங்கள்தான்
இச்சூழ்நிலைக்கு எங்களை ஆளாக்கினீர்கள். (உறைவிடங்களில்)
இது மிகவும் கெட்ட உறைவிடமாகும்" என்று கூறுவர்.
[61](மேலும் இறைவனிடம்) "இறைவா! எங்களை இந்நிலைக்கு
ஆளாக்கியோருக்கு நரகத்தில் இரு மடங்கு வேதனையை
அளிப்பாயாக!" என்றும் வேண்டுவர். [62](மேலும்) அவர்கள்,
"என்ன ஆயிற்று? (உலகில்) நாம் தீயவர்களாகக் கருதிக்
கொண்டிருந்தவர்களை (இங்குக்) காணமுடியவில்லையே!" என்று
(தமக்குள்ளேயே) கேட்டுக் கொள்வர். [63]"அவர்களை நாம் ஏளனம்
செய்து கொண்டிருந்தோமே! அல்லது (இங்கு நம்) பார்வைகள்
அவர்களைக் காணத் தவறி விட்டனவா? [64](என) இவ்வாறு
நரகவாசிகள் ஒருவருக்கொருவர் வாக்குவாதம் செய்வார்கள்.
உறுதியாக இது உண்மையேயாகும்.*

*[65](நபியே!) "நான் எச்சரிக்கை செய்பவனே ஆவேன்.
அடக்கியாளும் ஒருவனான அல்லாஹ்வைத்தவிர
வணக்கத்திற்குரியவன் யாரும் இல்லை. [66]வானங்கள், பூமி மற்றும்
அவையிரண்டிற்குமிடையே உள்ளவை ஆகிய அனைத்திற்கும்
அவன்தான் இறைவன். அவன் யாவற்றினும் வல்லவன்; பெரும்
மன்னிப்பாளன்" என்று கூறுவீராக! [67](மேலும் அவர்களிடம்
"நான் எடுத்துரைக்கும்) இது மாபெரும் (இறைச்) செய்தியாகும்.
[68]ஆனால் நீங்கள் இதனைப் புறக்கணிக்கிறீர்கள். [69](பூமியில்
முதல் மனிதரைப் படைக்கப் போகிறேன் என இறைவன்
வானவர்களிடம் கூறியபோது) அம்மேலோர் ஆகிய வானவர்கள்*

*வாதம் புரிந்தது குறித்த ஞானம் எனக்கு இல்லை (இறைவன் அறிவித்த பின்னரே அன்றி எதுவும் எனக்குத் தெரியாது.)* [70]*நான் வெளிப்படையாக எச்சரிப்பவன் என்பதற்காகவே அன்றி எனக்கு இறைவனிடமிருந்து (இறைச்செய்தி) அறிவிக்கப்படுவதில்லை" என்றும் கூறுவீராக!*

[71]*(நபியே!) இறைவன் வானவர்களிடம், "நான் களிமண்ணால் (ஒரு) மனிதரைப் படைக்கப் போகிறேன் (என்று கூறியதை நினைவுகூர்வீராக!)* [72]*"நான் அவரை முழுமைப்படுத்தி அவருக்குள் என் உயிரிலிருந்து ஊதினால் நீங்கள் அவருக்கு முன் தலைபணிய வேண்டும்" என்று கூறினான்.* [73]*அப்போது வானவர்கள் அனைவரும் தலைபணிந்தனர்.* [74]*இப்லீஸைத் தவிர! அவன் செருக்குக் கொண்டான்; (எம் கட்டளையை) மறுப்போரில் ஒருவனாகி விட்டான்.* [75]*"இப்லீஸே! என் இரு கைகளாலும் படைத்தவருக்குத் தலைபணிவதிலிருந்து உன்னைத் தடுத்தது எது? நீ செருக்குக் கொண்டு விட்டாயா அல்லது (தம்மை) உயர்ந்தோர்(எனக்கருதிக் கொள்பவர்)களில் ஒருவனாகி விட்டாயா?" என்று இறைவன் கேட்டான்.* [76]*அதற்கு அவன், "நான் அவரை விடச் சிறந்தவன். நீ என்னை நெருப்பினால் படைத்தாய். அவரைநீ களிமண்ணால்தான் படைத்துள்ளாய்" என்று கூறினான்.* [77]*"இங்கிருந்து நீ வெளியேறிவிடு. உறுதியாக நீ விரட்டப்பட்டவன்.* [78]*தீர்ப்பு நாள்வரை உன் மீது என் சாபம் இருக்கும்" என்று இறைவன் கூறினான்.*

[79]*(அப்போது) இப்லீஸ் "என் இறைவா! மக்கள் மீண்டும் எழுப்பப்படும் நாள்வரை எனக்குத் தவணை அளிப்பாயாக!" என்று வேண்டினான்.* [80]*"உனக்குக் காலநீட்டிப்பு அளிக்கப்பட்டு விட்டது,* [81]*குறிப்பிட்ட நாள்வரை" என்று இறைவன் கூறினான்.* [82]*"உன் கண்ணியத்தின்மீது சத்தியமாக! நான் அவர்கள் அனைவரையும் (உறுதியாக) வழிகெடுத்தே தீருவேன்;* [83]*(எனினும்) அவர்களில் உன்னால் தேந்தெடுக்கப்படும் உன் அடியார்களைத்*

*தவிர! (ஏனையோரை வழிகெடுத்திருப்பேன்)" என்று இப்லீஸ் கூறினான். [84](அப்போது) இறைவன், "இதுதான் உண்மை. நான் உண்மையையே கூறுகிறேன். [85]உன்னைக் கொண்டும் அவர்களில் உன்னைப் பின்பற்றும் அனைவரைக் கொண்டும் நான் நரகத்தை நிரப்புவேன்" என்று கூறினான்.*

*[86](எனவே நபியே!) நீர் கூறும்: (மக்களே!) "நான் இ(வ்வேதத்தை எடுத்துரைப்ப)தற்காக உங்களிடம் எந்தக் கூலியும் கேட்கவில்லை. நான் (பொய்ப்) புனைந்துரையாளனும் அல்லன். [87]இ(வ்வேதமான)து உலக மக்கள் அனைவருக்கும் ஓர் அறிவுரையாகும். [88]இதன் உண்மை நிலையை விரைவில் நீங்கள் அறிந்து கொள்வீர்கள்.*

## 39. கூட்டங்கள் (அஸ்ஸுமர்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]இவ்வேதம் யாவற்றினும் வல்லவனும் ஞானம் மிக்கவனுமாகிய அல்லாஹ்விடமிருந்து அருளப்பட்டதாகும்.*
*[2](நபியே!) உறுதியாக நாமே உமக்கு இவ்வேதத்தைச் சத்தியத்துடன் அருளியுள்ளோம். எனவே நீர் தூய மார்க்கத்தை அல்லாஹ்வுக்கே உரித்தாக்கியவராக அவனையே வணங்குவீராக!*
*[3]அறிந்துகொள்வீராக! தூய மார்க்கம் அல்லாஹ்வுக்கே உரியதாகும். அவனையன்றி வேறு பொறுப்பாளர்களை ஏற்படுத்திக் கொண்டோர் "அவர்கள் எங்களை அல்லாஹ்விடம் நெருக்கமாக்கி வைப்பார்கள் என்பதற்காகவே அன்றி (வேறு நோக்கில்) அவர்களை நாங்கள் வணங்குவதில்லை" என்று கூறுகின்றனர். எவற்றில் அவர்கள் முரண்பட்டு கொண்டிருந்தார்களோ அவற்றில் (மறுமையில்) உறுதியாக அல்லாஹ் அவர்களுக்கிடையே தீர்ப்பளிப்பான். பொய்யனாகவும் சத்தியத்தை மறுப்பவனாகவும் உள்ளவனுக்கு அல்லாஹ் நல்வழி காட்டமாட்டான்.*

*4அல்லாஹ் தனக்கு ஒரு மகனை உண்டாக்கிக்கொள்ள
விரும்பியிருந்தால் தன் படைப்பிலிருந்து தான் விரும்பியவரைத்
தேர்ந்தெடுத்திருப்பான். (இவற்றினின்றும்) அவன் மிகவும்
(அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். அவன்தான் (யாவற்றையும்)
அடக்கியாளும் ஏகனான அல்லாஹ். 5அவன் வானங்களையும்
பூமியையும் உண்மையான நோக்கத்துடன் படைத்துள்ளான்.
அவன்தான் பகல்மீது இரவைக் கவிக்கின்றான்; இரவின் மீது
பகலைக் கவிக்கின்றான். சூரியனையும் சந்திரனையும் அவன்
கட்டுப்படுத்தி வைத்துள்ளான். ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட
தவணைவரை சென்று கொண்டிருக்கும். அவன் யாவற்றினும்
வல்லவன்; பெரும் மன்னிப்பாளன்.*

*6(மனிதர்களே! முதலில்) அவன் உங்களை ஒரே
ஆன்மாவிலிருந்து படைத்தான். பின்னர் அதிலிருந்து அதன்
துணையைப் படைத்தான். அவன்தான் உங்களுக்காக (நான்கு)
இணைகளாக அமைந்த எட்டுக் கால்நடைகளை அருளியுள்ளான்.
உங்கள் அன்னையரின் வயிற்றில் மூன்று இருள்களினுள்
ஒன்றன்பின் ஒன்றான (வளர்ச்சி) நிலைகளில் உங்களைப்
படைக்கிறான். அவன்தான் உங்கள் இறைவனான அல்லாஹ்.
ஆட்சி அனைத்தும் அவனுக்கே உரியன. அவனைத்தவிர வேறு
இறைவன் இல்லை. அவ்வாறிருக்க எவ்வாறு நீங்கள் திசை
திருப்பப்படுகிறீர்கள்?*

*7(அவனை) நீங்கள் (ஏற்க) மறுப்பீர்களானால் (அவனுக்கு
இழப்பேதுமில்லை) உறுதியாக அல்லாஹ் உங்களிடம் தேவை
எதுவுமற்றவன். அவன் தன் அடியார்களிடம் மறுப்பை
விரும்பமாட்டான். நீங்கள் நன்றி செலுத்துவீர்களாயின் அவன்
உங்களைக் குறித்து நிறைவடைவான். எந்த ஆன்மாவும் மற்றோர்
ஆன்மாவின் (பாவச்)சுமையைச் சுமக்காது. பின்னர் நீங்கள்
உங்கள் இறைவனிடமே திரும்பவேண்டும். (அப்போது உலகில்)
நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றைக் குறித்து அவன் உங்களுக்கு*

*அறிவிப்பான். உறுதியாக அவன் உள்ளங்களில் உள்ளவற்றையும் நன்கறிந்தவன்.*

[8]*மனிதனுக்கு ஏதேனும் ஒரு தீங்கு நேர்ந்தால் தன் இறைவனை நோக்கி முற்றிலும் திரும்பி அவனிடமே இறைஞ்சுகிறான். ஆனால் இறைவன் அவனுக்குத் தன் அருட்கொடையை வழங்கினால், முன்னர் எதற்காக அவனை அழைத்துக் கொண்டிருந்தானோ அதனை அவன் மறந்துவிடுகிறான். இறைவழியிலிருந்து (மக்களைப்) பிறழச்செய்வதற்காக இறைவனுக்கு இணைகளை ஏற்படுத்துகிறான். (நபியே!) அத்தகையவனிடம் “உன் மறுப்பைக் கொண்டு சிறிதுகாலம் சுகம் அனுபவித்துக்கொள். உறுதியாக நீ நரகவாசிகளில் ஒருவனே” என்று கூறுவீராக!*
[9]*மறுமைக்கு அஞ்சித் தம் இறைவனின் அருளை எதிர்நோக்கி இரவு நேரங்களில் நின்றவாறும் தலைபணிந்தவாறும் அவனை வணங்குகின்றவரா (மறுப்பாளனைப் போல் ஆவார்?). (நபியே!) “அறிந்தவர்களும் அறியாதவர்களும் சமமாவார்களா?” என்று நீர் கேளும். அறிவுடையோர்தாம் அறிவுரையை ஏற்றுக்கொள்வர்.*

[10]*“நம்பிக்கைகொண்ட என் அடியார்களே! உங்கள் இறைவனுக்கு அஞ்சுங்கள். இவ்வுலகில் நன்மை செய்தோருக்கு நன்மையே கிடைக்கும். அல்லாஹ்வின் பூமி விரிவானது. பொறுமையாளர்கள் (மறுமையில்) தங்களின் கூலியைக் கணக்கின்றிப் பெறுவர்” (என்று நான் இடும் கட்டளையை என் அடியார்களுக்கு, நபியே!) நீர் எடுத்துரைப்பீராக!*

[11]*(நபியே!) “நான் மார்க்கத்தை அல்லாஹ்வுக்கு மட்டுமே உரித்தாக்கி உளத்தூய்மையுடன் வணங்கவேண்டும் எனக் கட்டளையிடப்பட்டுள்ளேன்.*
[12]*(மேலும் அவனுக்குத்) கீழ்ப்படிவோரில் முதலாமவனாக (நான்) இருக்கவேண்டும் எனவும் கட்டளையிடப்பட்டுள்ளேன்” என்று கூறுவீராக!*
[13]*(நபியே!) “நான் என் இறைவனுக்கு எதிராகச் செயல்பட்டால்*

*மகத்தான (மறுமை) நாளின் வேதனைக்கு அஞ்சுகிறேன்” என்று
நீர் கூறுவீராக! [14](மேலும்) “என் மார்க்கத்தை அவனுக்கு
மட்டுமே உரித்தாக்கி அவனையே தூய்மையுடன் வணங்குகிறேன்.
[15](ஆனால்) நீங்கள் அவனையன்றி விரும்பியோரை
வணங்கிக்கொள்ளுங்கள். மறுமை நாளில் தங்களுக்கும் தங்கள்
குடும்பத்திற்கும் இழப்பை ஏற்படுத்திக் கொண்டவர்கள்தாம்
உண்மையில் இழப்படைந்தவர்கள். இதுதான் தெளிவான
இழப்பாகும்” என்றும் (நபியே!) நீர் கூறுவீராக! [16]அவர்களுக்கு
மேலிருந்தும் கீழிருந்தும் நெருப்பின் நிழல்கள் சூழ்ந்துகொள்ளும்.
இவற்றைக் கொண்டே தன் அடியார்களை அல்லாஹ்
அச்சுறுத்துகிறான்: “என் அடியார்களே! எனக்கே அஞ்சுங்கள்!”*

*[17]தீய சக்திகளை வணங்குவதை விட்டுவிலகி அல்லாஹ்வின்
பக்கமே முற்றிலும் திரும்பிக் கொண்டவர்களுக்கு நற்செய்தி உண்டு.
ஆகவே (நபியே!) என் அடியார்களுக்கு நற்செய்தி கூறுவீராக!
[18]அவர்கள் (இறைவனின்) சொற்களைக் கவனமாகக் கேட்டுச்
சிறந்தவற்றைப் பின்பற்றுகின்றனர். அவர்களுக்குத்தான் அல்லாஹ்
நேர்வழி காட்டியுள்ளான். அவர்கள்தாம் அறிவுடையோர்.*

*[19]எவன்மீது வேதனையின் வாக்கு உறுதியாகி விட்டதோ
அவனை, (நரக) நெருப்பில் கிடப்பவனை (நபியே!) நீர்
காப்பாற்றி விடுவீரா? [20]ஆயினும் தம் இறைவனுக்கு அஞ்சி
நடக்கக் கூடியவர்களுக்கு (சொர்க்கத்தில்) அடுக்கடுக்காகக்
கட்டப்பட்ட உயர்ந்த மாளிகைகள் உள்ளன. அங்கு ஆறுகள்
ஓடிக்கொண்டிருக்கும். (இது) அல்லாஹ்வின் வாக்குறுதியாகும்
(தன்) வாக்குறுதியை அல்லாஹ் மீறுவதில்லை.*

*[21](நபியே!) நீர் பார்க்கவில்லையா? உறுதியாக அல்லாஹ்தான்
வானத்திலிருந்து மழையை இறக்கி அதனை(ப் பூமியில்)
ஊற்றுகளாக(ப் பெருகி) ஓடச் செய்கிறான். பின்னர் அதன்மூலம்
பல்வேறு நிறங்களுடைய பயிர்களை வெளிப்படுத்துகிறான்.
பின்னர் அவை முற்றி மஞ்சள் நிறமாகி விடுவதை நீர் காண்கிறீர்.*

*பின்னர் அவற்றைச் சருகுகளாக்கி விடுகிறான். உறுதியாக இதில் அறிவுடையோருக்கு அறிவுரை இருக்கிறது.** [22]*எவரது இதயத்தை இஸ்லாத்திற்காக (இறைவனுக்கு முற்றிலும் கீழ்ப்படிவதற்காக) அல்லாஹ் விரிவாக்குகிறானோ அவர் தம் இறைவனிடமிருந்து வந்துள்ள தெளிவான ஒளியில் உள்ளார். (அவர், உள்ளம் இறுகியவரைப் போல ஆவாரா?) இறைநினைவிலிருந்து இதயங்கள் இறுகிப் போனவர்களுக்குக் கேடுதான். அவர்கள் வெளிப்படையான கெடுவழியில் இருக்கின்றனர்.*

[23]*அல்லாஹ் மிக அழகிய செய்திகளை ஒரு வேதமாக அருளியுள்ளான். அது ஒன்றையொன்று ஒத்த, திரும்பத் திரும்ப வரக்கூடிய வசனங்களைக் கொண்டிருப்பதாகும். (அதனைச் செவியுறும்போது) தம் இறைவனுக்கு அஞ்சுவோரின் மேனி சிலிர்த்து விடுகிறது. பின்னர் அல்லாஹ்வின் நினைவிலேயே அவர்களின் உடலும் உள்ளமும் இளகிவிடுகின்றன. இதுவே அல்லாஹ்வின் வழிகாட்டுதலாகும். இதன்மூலம் தான் விரும்பியோரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துகிறான். அல்லாஹ் யாரை வழிதவறவிட்டு விடுகிறானோ அவருக்கு வழிகாட்டுபவர் யாரும் இல்லை.*

[24]*மறுமை நாளின் கொடிய வேதனையைத் தன் முகத்தைக்கொண்டு தடுக்க முயல்பவனைப்பற்றி என்ன சொல்வது?*

---

****மழை பொழிந்து பசுமையான தாவரங்கள் முளையிட்டு வளர்ந்து அவற்றின் விளைச்சல்கள் அறுவடை செய்யப்படுவது போன்ற அற்புதமான அனைத்து நிகழ்வுகளிலும் பொருள் நிறைந்த எண்ணற்ற படிப்பினைகள் உள்ளன. இந்தப் படிப்பினைகள், பாடங்கள் எல்லாம் ஆழ்ந்து சிந்திப்பவர்களுக்கே கிடைக்கும். தங்களது இயற்கை ஆற்றல்களை உயிர்ப்புடன் வைத்துக்கொண்டு அவற்றைப் பயன்படுத்துவதன் மூலம் உலகியல்புகளை ஆழ்ந்து சிந்திப்போர் தம் உள்ளங்களில் இறைவனைப் பற்றிய ஆழ்ந்த பேருணர்வை (மஃரிஃபா) பெறுவர். வசனத்தில் தாவரங்கள் தொடர்பாக கூறப்பெற்றுள்ள படிப்படியான நிகழ்வுகள் அனைத்துயிர்களின் தோற்றம், வளர்ச்சி, முதிர்ச்சி, மறைவு மற்றும் பிரபஞ்சங்களின் தோற்றம், விரிவு, மறைவு என்பவற்றைக் குறியீடாக உணர்த்துவதாக அறிஞர்கள் காண்கிறார்கள்.***

*அவன் (அதிலிருந்து பாதுகாப்புப் பெற்ற சொர்க்கவாசியைப்
போலாவானா? இப்படிப்பட்ட) தீவினையாளர்களிடம் “நீங்கள்
ஈட்டிக் கொண்டிருந்தவற்றி(ன் பய)னைச் சுவையுங்கள்” என்று
(அப்போது) கூறப்படும். 25இவர்களுக்கு முன்பு வாழ்ந்தவர்களும்
(எம் தூதர்களைப்) பொய்மைப்படுத்தி இருக்கின்றனர். ஆகவே
அவர்கள் எதிர்பாராத வகையில் அவர்களிடம் வேதனை
வந்தடைந்தது. 26அல்லாஹ் இவ்வுலக வாழ்வில் அவர்கள்
இழிவைச் சுவைக்கும்படி செய்தான். மறுமையின் வேதனையோ
மிகக் கடுமையானது. அந்தோ, அவர்கள் (இதனை) அறிந்திருக்க
வேண்டுமே!*

*27மக்கள் அறிவுரை பெறும்பொருட்டு நாம் இந்தக் குர்ஆனில்
எல்லாவகையான எடுத்துக்காட்டுகளையும் கூறியுள்ளோம்.
28அவர்கள் இறையச்சம் கொள்வதற்காக எந்தக் கோணலுமற்ற
(இந்தக்)குர்ஆனை அரபி மொழியில் அருளியுள்ளோம். 29அல்லாஹ்
ஓர் எடுத்துக்காட்டு கூறுகிறான். ஒரு மனிதன் – அவனுக்குத்
தீயகுணமுடைய பங்காளிகள் (பலர்) உரிமையாளர்களாக
இருக்கிறார்கள். மற்றொரு மனிதன் முழுக்கமுழுக்க ஒரே
உரிமையாளனுக்கே அடிமையாக இருக்கிறான். இவர்கள்
இருவரும் சமமாவார்களா? அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே!
ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை.
30(நபியே!) நீரும் இறந்துவிடக்கூடியவரே! உறுதியாக அவர்களும்
இறந்துவிடக் கூடியவர்களே! 31(மனிதர்களே!) பின்னர் நீங்கள்
அனைவரும் மறுமை நாளில் உங்கள் இறைவன் முன்னிலையில்
(உங்களுக்குள்) வாதம் புரிந்து கொண்டிருப்பீர்கள்.*

*32அல்லாஹ்வைப்பற்றிப் பொய்யுரைத்து, தன்னிடம் வந்த
(வேதமாகிய) உண்மையைப் பொய்யெனக் கூறியவனைவிடப்
பெரும் முறைகேடன் யார்? இத்தகைய மறுப்பாளர்களின்
உறைவிடம் நரகத்தில் அல்லவா (இருக்கிறது!) 33(இறைவனிடமிருந்து)
சத்தியத்தைக் கொண்டு வந்த(வராகிய எமது தூது)வரும் அதனை
மெய்யென்று உறுதிப்படுத்துவோரும்தாம் இறையச்சமுடையவர்கள்.*

[34]தாம் விரும்புகின்றவை அனைத்தும் அவர்களின்
இறைவனிடமிருந்து அவர்களுக்குக் கிடைக்கும். இதுதான்
நன்மை செய்வோருக்குரிய கூலியாகும். [35](இவ்வாறு இறைவன்
செய்வது ஏனெனில்) அல்லாஹ், அவர்கள் செய்துகொண்டிருந்த
தீச்செயல்களை நீக்கி (மன்னித்து) விடுவதற்காகவும், செய்த
நற்செயல்களுக்கு(ம் மேலாக) மிக அழகிய முறையில் கூலி
அளிக்கவேண்டும் (என்பதற்காகவுமேயாகும்).

[36]தன் அடியானுக்கு அல்லாஹ் போதுமானவனில்லையா?
(நபியே!) அவர்கள் (தங்கள் தெய்வங்களாகிய) அவன்
அல்லாதவர்களைக் கொண்டு உம்மை அச்சுறுத்துகின்றனர்.
அல்லாஹ் யாரை வழிதவற விட்டுவிடுவானோ அவருக்கு
நேர்வழிகாட்டுபவர் யாரும் இல்லை. [37]அல்லாஹ் யாரை
நேர்வழியில் செலுத்துகிறானோ அவரை வழிகெடுப்பவர் யாரும்
இல்லை. அல்லாஹ் யாவற்றினும் வல்லவனும் பழிதீர்ப்பவனும்
அல்லவா!

[38](நபியே!) "வானங்களையும் பூமியையும் படைத்தவன்
யார்?" என்று நீர் அவர்களிடம் கேட்டால் 'அல்லாஹ்தான்'
என்று உறுதியாக அவர்கள் கூறுவர். "அவனைவிடுத்து நீங்கள்
அழைக்கின்றவற்றைப் பற்றி நினைத்துப் பாருங்கள். அல்லாஹ்
எனக்கு ஏதேனும் ஒரு தீங்கிழைக்க விரும்பினால் அவற்றால்
அத்தீங்கை நீக்கிவிட முடியுமா? அல்லது அவன் எனக்கு
ஓர் அருளை வழங்க விரும்பினால் அவற்றால் அவனது
அருளைத் தடுத்துவிடமுடியுமா?" என்று கேட்பீராக. (நபியே!)
"அல்லாஹ்வே எனக்குப் போதுமானவன். நம்பிக்கையாளர்கள்
அவன் மீதிலேயே முழுமையாக நம்பிக்கை வைக்கட்டும்" என்று
கூறும். [39](மேலும்) "என் சமூகத்தோரே! நீங்கள் உங்கள் வழியில்
செயல்படுங்கள். நானும் என் வழியில் செயல்படுகிறேன். விரைவில்
நீங்கள் அறிந்துகொள்வீர்கள். [40]இழிவுதரும் வேதனை யாருக்கு
வரும், நிலையான வேதனை எவர் மீது இறங்கும் என்பதை
விரைவில் நீங்கள் அறிந்துகொள்வீர்கள்" என்றும் கூறிவிடுவீராக!

[41]*(நபியே!) நாம் மனிதர்களு(டைய நன்மை)க்காக இவ்வேதத்தைச் சத்தியத்துடன் உமக்கு அருளியுள்ளோம். (ஆகவே இதனைக் கொண்டு) யாரேனும் நேர்வழியைப் பின்பற்றினால் அது அவரது நன்மைக்காகவே ஆகும். யாரேனும் வழிதவறிச் சென்றால் அவர் தமக்குக் கேடாகவே வழிதவறிச் செல்கிறார். நீர் அவர்களுக்குப் பொறுப்பாளி அல்லர்.*

[42]*மனிதர்களுடைய இறப்பு வேளையிலும், வாழ்ந்து கொண்டிருப்போரின் உறக்க வேளையிலும் அல்லாஹ்வே அவர்களின் உயிர்களைக் கைப்பற்றுகிறான். (உறக்கத்தில் கைப்பற்றப்பட்டவற்றுள்) எந்த உயிர்களுக்கு அவன் இறப்பை (முன்பே) விதித்துவிட்டானோ அவற்றை (உலகிற்குத் திரும்பமுடியாதபடி) தடுத்துக்கொள்கிறான். மற்றவற்றைக் குறிப்பிட்ட தவணைவரை (உயிர்வாழத்) திருப்பி அனுப்புகிறான். உறுதியாக இதில் சிந்திக்கக்கூடிய மக்களுக்குப் பல சான்றுகள் உள்ளன.*

[43]*(இணைவைப்பாளர்களான) அவர்கள் அல்லாஹ் அல்லாதவர்களை (அல்லாஹ்விடம் தங்களுக்குப்) பரிந்துரை செய்பவர்களாக ஆக்கிக் கொண்டனரா? "அ(ல்லாஹ் அல்லாத)வர்கள் எந்த அதிகாரமும் இல்லாதவர்களாகவும் எதையும் புரிந்துகொள்ள முடியாதவர்களாகவும் இருந்தாலுமா? (அவர்களைப் பரிந்துரையாளராகக் கொணர்வீர்கள்?)"
என்று (நபியே!) நீர் கேளும். [44]"பரிந்துரை செய்வது முழுவதும் அல்லாஹ்வின் அதிகாரத்திலேயே உள்ளது. வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி அவனுக்கே உரியது. பின்னர் அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்" என்று கூறுவீராக!
[45]தனித்தவனாகிய அல்லாஹ் நினைவுகூரப்பட்டால் மறுமையின் மீது நம்பிக்கைகொள்ளாதவரின் உள்ளங்கள் வெறுப்பில் சுருங்கி விடுகின்றன. அவன் அல்லாதவர்க(ளின் பெயர்)கள் நினைவுகூரப்பட்டால் அவர்கள் மகிழ்ச்சியடைகின்றனர்.*

*[46](நபியே!) நீர் “அல்லாஹ்வே! வானங்களையும் பூமியையும் படைத்தவனே! மறைவானதையும் வெளிப்படையானதையும் அறிந்தவனே! நீ தான் உன் அடியார்களுக்கிடையே உள்ள கருத்து வேறுபாடுகள் தொடர்பாக (மறுமையில்) தீர்ப்பு வழங்குபவன் ஆவாய்” என்று கூறுவீராக. [47]தீவினையாளர்களிடம் பூமியிலுள்ளவை அனைத்தும் அதுபோன்ற இன்னொரு மடங்கும் இருந்தாலும் மறுமை நாளின் கொடிய வேதனையிலிருந்து தப்புவதற்காக அவற்றை ஈடாகக் கொடுத்துவிட முன்வருவார்கள். அவர்கள் எண்ணிப் பார்த்திராதவையெல்லாம் அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்கு வெளிப்படும். [48](உலகில்) அவர்கள் செய்த தீச்செயல்களின் விளைவுகள் அவர்களின் முன் வெளிப்படும். எதனை அவர்கள் ஏளனம் செய்து கொண்டிருந்தார்களோ அ(வ்வேதனையான)து அவர்களைச் சூழ்ந்துகொள்ளும்.*

*[49]மனிதனுக்கு ஏதேனும் ஒரு தீங்கு நேர்ந்தால் அவன் (அதை நீக்குமாறு இறைஞ்சி) எம்மையே அழைக்கிறான். பின்னர் நாம் அவனுக்கு எம்மிடமிருந்து ஏதேனும் அருட்கொடையை வழங்கினால் “இது என் அறிவின் காரணமாகத்தான் எனக்கு வழங்கப்பட்டுள்ளது” என்று கூறுகிறான். (அது சரி) அன்று. அது ஒரு சோதனையே! ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் (அதனை) உணர்வதில்லை. [50]இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் இவ்வாறே கூறினர். ஆயினும் அவர்கள் ஈட்டிய எதுவும் அவர்களுக்குப் பயனளிக்கவில்லை. [51]அவர்கள் ஈட்டியவற்றின் தீயவிளைவுகள் அவர்களைப் பற்றிக்கொண்டன. இன்றைய தீவினையாளர்களையும் இவர்கள் ஈட்டியவற்றின் தீயவிளைவுகள் விரைவில் பற்றிக்கொள்ளும். இவர்கள் எமது பிடியிலிருந்து தப்பிவிட முடியாது. [52]தான் விரும்பியவர்களுக்கு அல்லாஹ் வாழ்வாதாரத்தை விரிவாக வழங்குகிறான், (தான் விரும்பியவர்களுக்குச்) சுருக்கியும் விடுகிறான் என்பதை அவர்கள் அறிந்துகொள்ளவில்லையா? உறுதியாக நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு இதில் பல சான்றுகள் உள்ளன.*

53(நபியே! நான் கூறும் இவற்றை அவர்களிடம்) கூறுவீராக:
“என் அடியார்களே! (உங்களில்) தமக்குத்தாமே தீங்கிழைத்துக்
கொண்டவர்கள் அல்லாஹ்வின் அருளில் நம்பிக்கையிழந்து
விடவேண்டாம். உறுதியாக அல்லாஹ் எல்லாப் பாவங்களையும்
மன்னித்துவிடுவான். உறுதியாக அவன் பெரும் மன்னிப்பாளனும்
நிகரற்ற அன்பாளனும் ஆவான்” 54(ஆகவே மனிதர்களே!)
வேதனை உங்களை வந்தடைவதற்கு முன்பே நீங்கள் உங்கள்
இறைவன்பால் திரும்பி அவனுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்துவிடுங்கள்.
(வேதனை வந்துவிட்டால்) பின்னர் நீங்கள் உதவி செய்யப்பட
மாட்டீர்கள்.

55நீங்கள் அறியாதிருக்கும் நிலையில் திடீரென உங்கள்மீது
வேதனை வருவதற்கு முன்பே இறைவனிடமிருந்து உங்களுக்கு
அருளப்பெற்ற வேதத்தின் சிறந்த அம்சத்தைப் பின்பற்றுங்கள்.*
56(உங்களில்) எந்தவொரு மனிதனும் “அந்தோ, நான்
அல்லாஹ்வுக்கு(ச் செய்யவேண்டிய கடமைகளில்) குறைபாடு
செய்துவிட்டேனே, (இறைவழியை) ஏளனம் செய்வோரில்
ஒருவனாக இருந்தேனே!” எனப் புலம்பக்கூடாது என்பதற்காகவும்,
57அல்லது “அல்லாஹ் எனக்கு நல்வழிகாட்டியிருந்தால்
(உறுதியாக) இறையச்சமுடையோரில் நானும் ஒருவனாகி
இருப்பேனே” எனப் புலம்பக்கூடாது என்பதற்காகவும், 58அல்லது
(மறுமை) வேதனையைக் கண்ணால் காணும்போது “அந்தோ,
நான் மீண்டும் (உலகிற்குத்) திரும்பிச் செல்ல முடிந்தால்
நல்லோர்களில் ஒருவனாகியிருப்பேனே!” எனப் புலம்பக்கூடாது

---

*இறைவாக்கை சிறந்தவை, சாதாரணமானவை என்று வகைப்படுத்த முடியாது. குர்ஆனிலோ பிற வேதங்களிலோ சிறந்த வசனங்கள், சாதாரண வசனங்கள் என்ற வேறுபாடு கிடையாது. உண்மை என்னவெனில் உலகில் மனிதனுக்குச் செயல்படுவதற்கான சுதந்திரம் வழங்கப்பட்டுள்ளது. இங்கு அவன் விரும்பினால் ஒன்றை சரியான கோணத்தில் புரிந்து கொள்ளலாம்; விரும்பினால் அதனைத் தவறான கோணத்தில் புரிந்துகொண்டு தேவையற்ற சந்தேகங்கள் ஏற்படுவதிலிருந்து தவிர்ந்து கொள்ள வேண்டும். என்ற அடிப்படையில்தான் ‘சிறந்த அம்சத்தைப் பின்பற்றுங்கள்’ என்று கூறப்பட்டுள்ளது.

*என்பதற்காகவும் (அவ்வாறு பின்பற்றுங்கள்). [59](மனிதனே!)
மெய்யாகவே எனது வசனங்கள் உன்னிடத்தில் வந்தன.
ஆயினும் நீ அவற்றைப் பொய்மைப்படுத்தினாய்; தற்பெருமை
கொண்டாய்; மறுப்பாளர்களில் ஒருவனாகி விட்டாய்" என்று
கூறப்படும். [60]அல்லாஹ் தொடர்பாகப் பொய்யுரைத்தவர்களின்
முகங்கள் மறுமை நாளில் கருத்திருப்பதை (நபியே!) நீர் காண்பீர்.
செருக்குக் கொண்டோர்க்குத் தங்குமிடம் நரகத்தில் இல்லையா
என்ன? [61]ஆயினும் அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்தவர்களுக்கு
அவன் வெற்றியுடன் ஈடேற்றம் அளிப்பான். அவர்களை எந்தத்
தீமையும் அணுகாது. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.*

*[62]அல்லாஹ்தான் எல்லாவற்றையும் படைத்தவன்.
அவன்தான் எல்லாவற்றிற்கும் பொறுப்பாளன். [63]வானங்கள்
பூமி ஆகியவற்றின் திறவுகோல்கள் அவனுக்கே உரியன.
இறைவசனங்களை மறுப்பவர்கள்தாம் இழப்பிற்குரியோர் ஆவர்.
[64]"மூடர்களே! அல்லாஹ்வை விடுத்து மற்றவர்களையா நான்
வணங்கவேண்டும் என்று சொல்கிறீர்கள்?" என்று (நபியே!
அவர்களிடம்) கேட்பீராக! [65]"(நபியே! நீர்) இறைவனுக்கு
இணைவைத்தால் உம் (நற்)செயல்கள் யாவும் அழிந்துவிடும். (நீர்)
இழப்பிற்குரியவர்களில் ஒருவராகிவிடுவீர்" என்று உமக்கும் உமக்கு
முன்பிருந்த(தூது)வர்களுக்கும் திட்டவட்டமாக இறையறிவிப்புச்
செய்யப்பட்டுவிட்டது. [66]ஆகவே நீர் அல்லாஹ்வையே
வணங்குவீராக! நன்றி செலுத்துவோருள் ஒருவராகி விடுவீராக!*

*[67](இணைவைப்போராகிய) அவர்கள் அல்லாஹ்வைக்
கண்ணியப்படுத்த வேண்டிய முறையில் கண்ணியப்படுத்தவில்லை.
மறுமை நாளில் பூமி முழுவதும் அவனது கைப்பிடியில் இருக்கும்.
வானங்கள் அவனது வலக்கரத்தில் சுருட்டப்பட்டிருக்கும். அவர்கள்
செய்யும் இணைவைப்பிலிருந்து அவன் மிகவும் (அப்பாற்பட்டுத்)
தனித்துயர்ந்தவன்; மிக உயர்ந்தவன். [68]எக்காளம் ஊதப்படும்.
வானங்களிலும் பூமியிலும் உள்ள அனைவரும் – அல்லாஹ்
விரும்பியவர்களைத் தவிர – மயக்கமுற்று வீழ்ந்துவிடுவர். பின்னர்
மீண்டும் எக்காளம் ஊதப்படும். உடனே (உலகில் வாழ்ந்து மறைந்த*

*மக்கள்) அனைவரும் எழுந்துநின்று பார்த்துக் கொண்டிருப்பர்.*
*[69]பூமி தன் இறைவனின் ஒளியால் பிரகாசிக்கும். (அவரவர்க்குரிய) வினைப்பதிவேடு (அவரவர் முன்) வைக்கப்படும். தூதர்களும் சாட்சியாளர்களும் கொண்டுவரப்பட்டு, மனிதர்களிடையே நியாயமாகத் தீர்ப்பளிக்கப்படும். அவர்களுக்கு எந்த அநீதியும் இழைக்கப்பட மாட்டாது.*
*[70]ஒவ்வொருவருக்கும் அவரவர் செயல்களுக்கேற்ப முழுமையான கூலி வழங்கப்படும். அவர்கள் செய்தவற்றை அவன் நன்கறிந்தவன்.*

*[71](அந்நாளில்)மறுப்பாளர்கள் கூட்டம் கூட்டமாக நரகத்திற்கு ஓட்டிச் செல்லப்படுவார்கள். அவர்கள் அங்கு வந்தவுடன் அதன் வாயில்கள் திறக்கப்படும். அதன் காவலர்கள் "உங்களிலிருந்தே (இறைவனின்) தூதர்கள் உங்களிடம் வரவில்லையா? அவர்கள் இறைவனின் வசனங்களை உங்களுக்கு ஓதிக் காட்டவில்லையா? (மறுமையாகிய) இந்தநாளை நீங்கள் சந்திக்கவிருப்பதுபற்றி அவர்கள் எச்சரிக்கை செய்யவில்லையா?" என்று அவர்களிடம் கேட்பர். அதற்கு அவர்கள் 'ஆம் (எச்சரித்தனர்)' என்பார்கள். ஆயினும் வேதனைபற்றிய வாக்கு மறுப்பாளர்களின் மீது உறுதியாகிவிட்டது.*
*[72]அவர்களிடம் "(நீங்கள்) நரகத்தின் வாயில்களில் நுழைந்துவிடுங்கள். என்றென்றும் அதில் தங்கிவிடுங்கள்" என்று கூறப்படும். செருக்குடையவரின் இருப்பிடம் மிகவும் கெட்டதாகும்.*

*[73]தம் இறைவனுக்கு அஞ்சி நடந்தவர்கள் சொர்க்கத்தின்பால் கூட்டம் கூட்டமாக அழைத்து வரப்படுவர். அவர்கள் அங்கு வந்தவுடன் அதன் வாயில்கள் திறக்கப்படும். அதன் காவலர்கள் அவர்களிடம், "உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும். நீங்கள் மகிழ்ச்சியாக இருங்கள். இதில் நுழைந்து என்றென்றும் தங்கிவிடுங்கள்" என்று கூறுவர்.*
*[74](அப்போது சொர்க்கவாசிகளான) அவர்கள் "அல்லாஹ்வுக்கே அனைத்துப்புகழும்! அவன் எங்களுக்குச் செய்த வாக்குறுதியை உண்மைப்படுத்திக் காட்டினான், எங்களை இந்தப் பூமிக்கு உரிமையாளர்களாக்கினான். சொர்க்கத்தில்*

நாங்கள் விரும்பும் இடங்களில் தங்கிக் கொள்வோம்" என்று கூறுவர். நற்செயல்புரிவோருக்கு எவ்வளவு சிறப்பான கூலி இது!
[75](நபியே! மறுமையாகிய அந்நாளில்) வானவர்கள் இறையிருக்கையை வட்டமிட்டவாறு தம் இறைவனைப் துதித்துப் போற்றிக் கொண்டிருப்பதை நீர் காண்பீர். (மேலும்) மக்களிடையே நியாயமான முறையில் தீர்ப்பளிக்கப்படும். "அனைத்துலகங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும்" என்று கூறப்படும்.

# 40. நம்பிக்கையாளர் (அல்முஃமின்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]ஹா – மீம்.*

*[2]இது அல்லாஹ்விடமிருந்து அருளப்பட்ட வேதமாகும். அவன் யாவற்றினும் வல்லவன்; முற்றும் அறிந்தவன்.*
*[3]பாவங்களை மன்னிப்பவன்; பாவமன்னிப்பு வேண்டுதலை ஏற்றுக்கொள்பவன்; தண்டிப்பதில் கடுமையானவன்; பெருங்கொடையாளன்; அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவனிடமே (அனைவரும்) திரும்பிச் செல்ல வேண்டியிருக்கிறது.*

*[4](நபியே!)மறுப்பாளர்களைத் தவிர (வேறெவரும்) இறை வசனங்களில் வாதம் புரிவதில்லை. நகரங்களில் அவர்கள் (ஆடம்பரத்துடன் சுகமாகச்) சுற்றித் திரிவது உம்மை மருட்டிவிட வேண்டாம்.*
*[5]இவர்களுக்கு முன் நோவாவின் சமூகத்தினரும் அவர்களுக்குப்பின் வந்த பல கூட்டத்தாரும் (எம்முடைய தூதர்களைப்) பொய்யர்கள் எனக் கூறியுள்ளனர். ஒவ்வொரு சமூகத்தினரும் தங்கள் தூதரை(க் கொல்வதற்காகச் சிறை) பிடிக்கவே விரும்பினர். பொய்மையின் மூலம் உண்மையை அழித்துவிட வாதம் செய்தனர். ஆகவே நான் அவர்களை (எனது தண்டனையைக் கொண்டு) பற்றிக்கொண்டேன். எப்படி இருந்தது எனது தண்டனை (என்பதைக் கவனிப்பீராக!)*
*[6]இவ்வாறுதான்*

*(இந்த)மறுப்பாளர்கள்மீதும் ‘இவர்கள் நரகவாசிகளே’ எனும் உம் இறைவனின் வாக்கு உறுதியாகிவிட்டது.*

*[7]இறையிருக்கையைச் சுமப்பவர்க(ளாகிய வானவர்)களும்
அதனைச் சூழ உள்ளவர்களும் தம் இறைவனைப் புகழ்ந்து
துதித்துக் கொண்டிருக்கின்றனர். அவன்மீது நம்பிக்கை
கொண்டிருக்கின்றனர். (மனிதரில் உள்ள) நம்பிக்கையாளர்களுக்காகப்
பாவமன்னிப்புக் கோருகின்றனர். “எங்கள் இறைவா! நீ (உன்)
அருளாலும் அறிவாலும் எல்லாவற்றையும் சூழ்ந்திருக்கிறாய்.
எனவே மன்னிப்புக்கோரி உன்வழியைப் பின்பற்றுவோரை
மன்னித்து விடுவாயாக! நரக வேதனையிலிருந்து அவர்களைக்
காப்பாயாக! [8]எங்கள் இறைவா! நீ அவர்களுக்கு வாக்களித்த
நிலையான சொர்க்கங்களில் அவர்களையும் அவர்களின்
முன்னோர், மனைவியர், வழித்தோன்றல்கள் ஆகியோருள்
உள்ள நல்லோர்களையும் நுழையச் செய்வாயாக! உறுதியாக
நீ யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன். [9](மேலும்)
அவர்களைத் தீமைகளிலிருந்து காப்பாயாக! அந்த நாளில் யாரை
நீ தீமைகளிலிருந்து காத்துக்கொண்டாயோ அவர்மீது உறுதியாக
நீ பேரருள் புரிந்துவிட்டாய். இதுவே மிகமேலான வெற்றியாகும்”
(என்று அவ்வானவர்கள் கூறுகின்றனர்.)*

*[10](மறுமையில்) மறுப்பாளர்கள் அழைக்கப்பட்டு, “நீங்கள்
இறைநம்பிக்கையின்பால் அழைக்கப்பட்ட போது மறுத்துக்
கொண்டிருந்தீர்கள். (அப்போது) அல்லாஹ் கொண்ட வெறுப்பு
(இன்று) உங்கள்மீதே நீங்கள் கொள்கின்ற வெறுப்பைவிட மிகக்
கடுமையானது” என்று அவர்களிடம் கூறப்படும். [11]“இறைவா!
நீ எங்களுக்கு இருமுறை சாவையும் இருமுறை வாழ்வையும்
அளித்துவிட்டாய். நாங்கள் எங்கள் பாவங்களை ஒப்புக்
கொள்கிறோம். எனவே (நாங்கள் இந்நரகிலிருந்து) வெளியேற
ஏதேனும் வழி உண்டா?” என்று அவர்கள் கேட்பார்கள்.
[12]இ(ந்நிலை உங்களுக்கு ஏற்பட்ட)தற்குக் காரணம் ஏகனான*

*அல்லாஹ்வின்பால் அழைக்கப்பட்டபோது நீங்கள் (அவனை) மறுத்தீர்கள். ஆனால் அவனுக்கு இணை கற்பிக்கப்பட்ட போது நீங்கள் (அதனை) நம்பினீர்கள். இனித் தீர்ப்பளிக்கும் அதிகாரம் மிக உயர்ந்தவனும் மிகப் பெரியவனுமாகிய அல்லாஹ்விடமே உள்ளது" (என்று அவர்களிடம் கூறப்படும்)*

[13]*(மனிதர்களே!) அவன்தான் உங்களுக்குத் தன் சான்றுகளைக் காட்டுகின்றான். உங்களுக்காக வானத்திலிருந்து வாழ்வாதாரத்தையும் இறக்கி வைக்கிறான். அவன்பால் திரும்புபவர்களைத் தவிர (வேறெவரும்) அறிவுரையைப் பெறமாட்டார்கள்.* [14]*ஆகவே (நம்பிக்கையாளர்களே! உங்களை) மறுப்பாளர்கள் வெறுத்தாலும் (நீங்கள்) நம்பிக்கையைத் தூய்மையுடன் அவனுக்கே உரித்தாக்கி அவனையே வணங்குங்கள்.* [15]*அவன் மிக உயர்ந்த தகுதிகளையுடையவன்; இறையிருக்கையின் உரிமையாளன். (தன்னைச்) சந்திக்கும் நாளைக் குறித்து (மனிதர்களுக்கு) எச்சரிக்கை செய்ய வேண்டுமென்பதற்காகத் தன் அடியார்களில் தான் விரும்புவோருக்கு அவன் தன் கட்டளையை அறிவிக்கிறான்.* [16]*அந்த நாளில் மனிதர்கள் (தங்கள் சவக்குழிகளிலிருந்து) வெளிப்பட்டு (இறைவன்முன்) வருவர். அவர்களின் எந்த விஷயமும் அல்லாஹ்வுக்கு மறைவாக இராது. "இன்றைய நாளில் ஆட்சி யாருக்குரியது?" (என்று கேட்கப்படும்.) "அடக்கியாளும் ஏகனான அல்லாஹ்வுக்கே உரியது" (என்று மறுமொழியும் கூறப்படும்.)* [17]*"இன்று ஒவ்வொருவருக்கும் அவரவர் செயல்களுக்கான கூலி வழங்கப்படும். இன்று எத்தகைய அநீதியும் நடைபெறாது. உறுதியாக அல்லாஹ் கணக்குத் தீர்ப்பதில் விரைவானவன்" (என்றும் கூறப்படும்).*

[18]*(நபியே!) நெருங்கிக் கொண்டிருக்கும் (மறுமையாகிய அந்த) நாளைக் குறித்து அவர்களுக்கு எச்சரிக்கை செய்வீராக! (அந்நாளில் அவர்களின்) இதயங்கள் துக்கத்தால் நிரம்பித் தொண்டைகளை அடைத்துக்கொள்ளும். தீவினையாளர்களுக்கு நண்பர்களோ, ஏற்றுக்கொள்ளப்படும் பரிந்துரையாளர்களோ*

*(அங்கு) இருக்கமாட்டார்கள். [19]கண்களின் மோசடிகளையும் நெஞ்சங்கள் மறைத்து வைத்திருப்பவற்றையும் அவன் அறிவான். [20]அல்லாஹ் உண்மையுடன் தீர்ப்பு வழங்குவான். (ஆனால்) அவனையன்றி இவர்கள் யாரை வழிபடுகிறார்களோ அவர்கள் எந்தத் தீர்ப்பும் வழங்க முடியாது. உறுதியாக அல்லாஹ் அனைத்தையும் செவியுறுபவன்; உற்று நோக்குபவன்.*

*[21](நபியே!) இவர்கள் தங்களுக்கு முன்பு வாழ்ந்தவர்களின் நிலை என்னவாயிற்று என்பதை பூமியில் பயணம் செய்து கண்டுகொள்ளவில்லையா? அவர்கள் இவர்களைவிட ஆற்றல் உள்ளவர்களாக இருந்தனர்; பூமியில் அவர்கள் விட்டுச்சென்ற அடையாளச் சின்னங்களாலும் (இவர்களைவிட) வல்லவர்களாக இருந்தனர். ஆயினும் அவர்களின் பாவங்களினால் அல்லாஹ் அவர்களைத் தண்டித்தான். அல்லாஹ்விடமிருந்து அவர்களைக் காப்பாற்றுபவர் யாரும் இருக்கவில்லை. [22]இதற்குக் காரணம், தூதர்கள் அவர்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டுவந்திருந்தபோதும் அவர்கள் மறுத்துவிட்டனர் என்பதுதான். ஆகவே அல்லாஹ் அவர்களைத் தண்டித்தான். உறுதியாக அவன் ஆற்றல் மிக்கவன்; தண்டிப்பதில் கடுமையானவன்.*

*[23]உறுதியாக நாம் மோசேயை எமது சான்றுகளுடனும் (அற்புதமாகிய) தெளிவான ஆதாரங்களுடனும் அனுப்பினோம். [24]ஃபாரோ, ஹாமான், கோரா ஆகியோர்களிடம் (அவரை) அனுப்பினோம். ஆனால் அவர்களோ, “இவர் ஒரு சூனியக்காரர், பொய்யர்” என்று கூறினர். [25]எம்மிடமிருந்து சத்தியத்தைக்கொண்டு அவர்களிடம் அவர் சென்றபோது அவர்கள், “நம்பிக்கை கொண்டு இவருடன் சேர்ந்திருப்போரின் ஆண் மக்களைக் கொன்றுவிட்டுப் பெண் மக்களை உயிருடன் விட்டு விடுங்கள்” என்று கூறினர். ஆயினும் மறுப்பாளர்களின் சூழ்ச்சி பயனற்றுப் போனது.*

*[26]ஃபாரோ (ஒருநாள் தன் அவையோரிடம்) “என்னை விடுங்கள்; நான் மோசேயைக் கொன்றுவிடுகிறேன்; அவர்*

தம் இறைவனை அழைக்கட்டும். அவர் உங்கள் மார்க்கத்தை மாற்றிவிடுவார், அல்லது நாட்டில் குழப்பத்தை உண்டாக்குவார் என்று நான் அஞ்சுகிறேன்" என்றான். [27](அப்போது) மோசே, "உறுதியாக விசாரணை நாளின் மீது நம்பிக்கைகொள்ளாத, செருக்குக்கொண்ட அனைவரிடமிருந்தும் என் இறைவனாகவும் உங்கள் இறைவனாகவும் இருப்பவனிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன்" என்று கூறினார்.

[28]ஃபாரோவுடைய குடும்பத்தைச் சேர்ந்த, தம் (ஓரிறை) நம்பிக்கையை மறைத்து வைத்திருந்த நம்பிக்கையாளராகிய ஒருவர் "அல்லாஹ்தான் என் இறைவன்" என்று கூறியதற்காகவா ஒரு மனிதரை நீங்கள் கொல்லப்போகிறீர்கள்? அவரோ உங்கள் இறைவனிடமிருந்து தெளிவான சான்றுகளைக் கொண்டுவந்திருக்கிறார். அவர் பொய்யராக இருந்தால் அதன் கேடு அவரையே சாரும். (ஆனால்) அவர் உண்மையாளராக இருப்பாராயின் அவர் உங்களை எச்சரித்த (பயங்கர) விளைவுகளில் சில உங்களை அடைந்தே தீரும். உறுதியாக அல்லாஹ் வரம்பு மீறுபவனுக்கும் பொய்யனுக்கும் நேர்வழி காட்டமாட்டான்" என்று கூறினார். [29]"என் சமூகத்தோரே! இன்று ஆட்சி உங்களிடம் இருக்கிறது. (நீங்கள்தான்) பூமியில் மேலோங்கி இருக்கிறீர்கள். ஆயினும் இறைவேதனை நம்மிடம் வந்துவிட்டால் நமக்கு உதவக்கூடியவர் யார்?" (என்றும் அவர் கூறினார்.) அதற்கு ஃபாரோ "நான் சரியெனக் காண்பதையே உங்களுக்கும் காட்டுகிறேன்; உங்களுக்கு நேர்வழியைத்தான் நான் காட்டுகிறேன்" என்று கூறினான்.

[30]நம்பிக்கை கொண்டிருந்த அவர், "என் சமூகத்தோரே! முந்தைய சமூகத்தாருக்கு வந்த அந்த (அழிவு)நாள் உங்களுக்கும் வந்துவிடுமோ என்று அஞ்சுகிறேன். [31]நோவாவின் சமூகத்தினருக்கும் ஆத், ஸமூத் சமூகத்தினருக்கும் அவர்களுக்குப் பின்வந்த சமூகத்தினருக்கும் நேர்ந்ததைப் போல் (உங்களுக்கும் நேர்ந்து விடுமோ? என அஞ்சுகிறேன்)" என்றார். "தன் அடியார்களுக்குச்

சிறிதும் அநீதி இழைக்க அல்லாஹ் விரும்புவதில்லை” (என்றும்
கூறினார்). 32“(மேலும்) என் சமூகத்தோரே! நீங்கள் அழுது புலம்பி
ஒருவரையொருவர் கூவி அழைக்கும் “(மறுமை)நாளைக் குறித்தும்
(அஞ்சுகிறேன்.) 33(வேதனைக்கு அஞ்சி) நீங்கள் புறங்காட்டி ஓடும்
(மறுமையாகிய) அந்நாளில் அல்லாஹ்விடமிருந்து உங்களைக்
காப்பாற்றுபவர் எவரும் இருக்கமாட்டார். அல்லாஹ் யாரை
வழிதவற விட்டுவிடுகிறானோ அவருக்கு நல்வழிகாட்டுபவர்
யாருமில்லை” (என்றும் கூறினார்).

34“இதற்கு முன் ஜோஸஃப் உங்களிடம் தெளிவான
சான்றுகளுடன் வந்தார். ஆயினும், நீங்கள் அவர்
கொண்டுவந்தவற்றைக் குறித்து ஐயத்திலேயே இருந்தீர்கள்.
இறுதியில் அவர் இறந்துவிட்ட பின்னர் (அவரைப் புகழ்ந்து)
“இவருக்குப்பின் அல்லாஹ் ஒருபோதும் எந்தத் தூதரையும்
அனுப்பமாட்டான்” என்று நீங்கள் கூறினீர்கள். இவ்வாறுதான்
வரம்பு மீறுவோரையும் ஐயம் கொள்வோரையும் அல்லாஹ்
வழிதவற விட்டுவிடுகிறான்” (என்றும் அவர் கூறினார்.) 35அவர்கள்
(எத்தகையோர் எனில்) தங்களிடம் எந்தச் சான்றும் வராத
நிலையிலேயே இறை வசனங்களில் (பயனற்ற) வாதம்புரிகின்றனர்.
இது அல்லாஹ்விடமும் நம்பிக்கையாளர்களிடமும் மிகவும்
வெறுப்புக்குரியதாகும். இவ்வாறே அல்லாஹ் செருக்குமிக்க
தீவினையாளரின் உள்ளங்களில் முத்திரையிட்டு விடுகிறான்.

36ஃபாரோ (தன் அமைச்சரை நோக்கி) “ஹாமானே! நான்
வானங்களின் பாதைகளைச் சென்றடையும்பொருட்டு எனக்காக
ஓர் உயர்ந்த கோபுரத்தை எழுப்பு. 37வானங்களின் பாதைகளை
அடைந்து மோசேயின் இறைவனை நான் எட்டிப் பார்க்கவேண்டும்.
நான் அவரைப் பொய்யராகவே கருதுகிறேன்” என்றான். இவ்வாறு
ஃபாரோவுக்கு அவனது தீச்செயல் அழகானதாகக் காட்டப்பட்டு
நேர்வழியிலிருந்து தடுக்கப்பட்டான். ஃபாரோவின் சூழ்ச்சி
எல்லாம் அழிவில் அன்றி (வேறு வகையில்) முடியவில்லை.

[38](மறைவாக) நம்பிக்கைகொண்டிருந்த அந்த மனிதர், "என்னுடைய சமூகத்தோரே! என்னைப் பின்பற்றுங்கள். நான் உங்களுக்கு நேர்வழியைக் காட்டுகிறேன். [39]என் சமூகத்தோரே! இவ்வுலக வாழ்க்கை நிலையற்ற இன்பம்தான். உறுதியாக மறுமையே நிலையான உறைவிடமாகும். [40]தீமை செய்பவருக்கு அதன் அளவிலான (தண்டனைக்) கூலியேயன்றி(க் கூடுதலாகக்) கொடுக்கப்படமாட்டாது. (ஆனால்) ஆணாயினும் பெண்ணாயினும் நம்பிக்கைகொண்ட நிலையில் நற்செயல்புரிபவர் சொர்க்கங்களில் நுழைவர்; அங்கு அவர்களுக்கு அளவின்றியே (அவர்கள் வேண்டுபவையெல்லாம்) வழங்கப்படும். [41]என் சமூகத்தோரே! என்ன (வியப்பு) இது? நான் உங்களை ஈடேற்றத்தின்பால் அழைக்கிறேன். நீங்களோ என்னை நரகத்தின்பால் அழைக்கிறீர்கள்! [42]அல்லாஹ்வை மறுப்பதற்கும் நான் அறியாதவற்றை அல்லாஹ்வுக்கு இணையாக்கவும் நீங்கள் என்னை அழைக்கிறீர்கள். (ஆனால்) நான் யாவற்றினும் வல்லோனும்; பெரும் மன்னிப்பாளனும் ஆகிய அவனிடம் உங்களை அழைக்கிறேன். [43]உறுதியாக நீங்கள் எவற்றின்பால் என்னை அழைக்கிறீர்களோ அவற்றிற்கு இம்மையிலும் மறுமையிலும் (எவருடைய) அழைப்பு(க்கும் பதில் தரும் ஆற்றலு)ம் இல்லை; உறுதியாக நாம் அனைவரும் அல்லாஹ்விடமே திரும்பவேண்டும். உறுதியாக வரம்புமீறுவோர் நரகவாசிகளே! [44]ஆகவே நான் உங்களுக்குக் கூறுவதை விரைவில் நீங்கள் நினைத்துப் பார்ப்பீர்கள். என் செயலை நான் அல்லாஹ்விடமே ஒப்படைக்கிறேன். உறுதியாக அல்லாஹ் (தன்) அடியார்களைக் கண்காணிப்பவன்" (என்றும் கூறினார்).

[45](பின்னர்) அவர்களின் தீய சூழ்ச்சிகளிலிருந்து அல்லாஹ் (இறைநம்பிக்கை கொண்டிருந்த) அவரைக் காப்பாற்றிவிட்டான். ஃபாரோவின் கூட்டத்தாரைக் கொடிய வேதனை சூழ்ந்து கொண்டது. [46](கடலில் மூழ்கடிக்கப்பட்ட அவர்கள், மறுமை நாள் வரை) காலையிலும் மாலையிலும் (நரக நெருப்பின்முன்)

கொண்டு செல்லப்படுவர். மறுமைநாள் வரும்போது
“ஃபாரோவின் கூட்டத்தாரைக் கடுமையான வேதனையில்
புகுத்திவிடுங்கள்” (என்று வானவர்களிடம் கூறப்படும்.)

47நரகத்தில் அவர்கள் தங்களுக்குள் வாக்குவாதம் செய்து
கொண்டிருப்பர் (என்பதை நபியே! நினைவுகூர்வீராக! உலகில்)
வலுவற்றவர்களாக இருந்தோர் செருக்குக் கொண்டிருந்த
(தலை)வர்களை நோக்கி, “உறுதியாக நாங்கள் உங்களைப்
பின்பற்றிவந்தோம். (இன்று) எங்களிடமிருந்து நரக நெருப்பின்
சிறிதளவையாவது உங்களால் தடுக்க முடியுமா?” என்று
கேட்பர். 48செருக்குக் கொண்டிருந்தவர்கள், “நாம் அனைவரும்
இங்குத்தானே இருக்கிறோம்! தன் அடியார்களிடையே அல்லாஹ்
உறுதியாகத் தீர்ப்பளித்து விட்டான்” என்று கூறுவர். 49(பின்னர்)
நரகத்தில் உள்ளவர்கள் அதன் காவலர்களிடம், “ஒரு நாளாவது
எங்களைவிட்டு இவ்வேதனையைக் குறைத்துக்கொள்ளுமாறு
உங்கள் இறைவனிடம் இறைஞ்சுங்கள்” என வேண்டுவர்.
50நரகத்தின் காவலர்கள், “உங்கள் தூதர்கள் உங்களிடம் தெளிவான
சான்றுகளுடன் வரவில்லையா?” என்று கேட்பர். அதற்கு
அவர்கள் ‘ஆம்’ என்பர். (அப்போது காவலர்கள்) “அவ்வாறாயின்
நீங்களே (இறைவனை) வேண்டிக்கொள்ளுங்கள்” என்பர்.
மறுப்பாளர்களின் இறைஞ்சுதல் பயனற்றுப் போய்விடும்.

51உறுதியாக நாம் எம் தூதர்களுக்கும் நம்பிக்கையாளர்களுக்கும்
இவ்வுலக வாழ்க்கையிலும், (இவர்களுக்கு உதவியாகச்) சாட்சிகள்
(வந்து)நிற்கும் (மறுமை) நாளிலும் உதவி புரிவோம். 52(மறுமையாகிய)
அந்நாளில் தீவினையாளருக்கு அவர்களின் (பொய்க்)காரணங்கள்
பயனளிக்கமாட்டா. அவர்கள்மீது (இறைவனின்) சாபம்
உண்டாகும்; அவர்களுக்குத் தீய உறைவிடமும் உண்டு. 53நாம்
மோசேவுக்கு(த் தவ்ராத் வேதம் எனும்) நேர்வழி அளித்தோம்.
இஸ்ராயீலின் மக்களை (அவ்)வேதத்திற்கு உரியவர்களாக்கினோம்.
54அது அறிவுடையோருக்கு வழிகாட்டியாகவும் அறிவுறுத்தலாகவும்

*இருந்தது. [55]எனவே (நபியே!) நீர் பொறுமை காப்பீராக! உறுதியாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. உமது பாவத்திற்காக (இறைவனிடம்) பாவமன்னிப்புக் கோருவீராக! உம் இறைவனைக் காலையிலும் மாலையிலும் துதித்துப் போற்றுவீராக!*

*[56](நபியே!) உறுதியாகத் தங்களிடம் எந்தச் சான்றும் வராமலேயே அல்லாஹ்வின் வசனங்களில் வாதம்புரிபவர்களுடைய உள்ளங்களில் பெருமையைத் (தேடும் ஆர்வம்) தவிர வேறொன்றும் இல்லை. ஆயினும் அவர்கள் அ(ப்பெருமை)தனை அடையப் போவதுமில்லை. ஆகவே நீர் அல்லாஹ்விடம் பாதுகாப்பைத் தேடிக் கொள்வீராக! உறுதியாக அவன் செவியுறுபவன்; உற்றுநோக்குபவன்.*

*[57]உறுதியாக மனிதர்களைப் படைப்பதை(யும் இறந்தபின் மீட்டெழுப்புவதையும்)விட வானங்களையும் பூமியையும் படைப்பதுதான் மிகப்பெரிதாகும். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை. [58]பார்வையற்றவனும் பார்வையுள்ளவனும் சமமாகமாட்டார்கள். நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிவோரும் தீமைசெய்வோரும் சமமாகமாட்டார்கள். நீங்கள் நல்லுணர்வு பெறுவது மிக அரிது. [59]உறுதியாக மறுமை வந்தேதீரும். அதில் ஐயம் ஏதுமில்லை. ஆயினும் மக்களில் பெரும்பாலோர் (இதனை) நம்புவதில்லை.*

*[60]உங்கள் இறைவன் கூறுகிறான்: "(மக்களே!) என்னையே அழையுங்கள். நான் உங்களு(டைய இறைஞ்சுதலு)க்குப் பதிலளிக்கிறேன். என்னை வணங்குவதைவிட்டுச் செருக்குக் கொண்டவர்கள் உறுதியாகச் சிறுமைப்பட்டவர்களாக நரகத்தில் நுழைவர். [61]அல்லாஹ்தான் நீங்கள் ஓய்வெடுப்பதற்காக இரவைப் படைத்தான். பகலை அவன் ஒளியுடையதாக்கினான். உறுதியாக அல்லாஹ் மனிதர்களின் மீது அருளுடையவன். ஆயினும் மனிதர்களில் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை. [62]அத்தகைய அல்லாஹ்தான் உங்கள் இறைவன்; எல்லாவற்றையும்*

படைத்தவன். அவனைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு
யாருமில்லை. (அப்படி இருக்கும் போது) நீங்கள் எவ்வாறு
(அவனைவிட்டுத்) திசை திருப்பப்படுகிறீர்கள். 63இறைவசனங்களை
முன்னர் மறுத்துக் கொண்டிருந்தவர்களும் இவ்வாறுதான்
திசைதிருப்பப்பட்டனர்.

64(மக்களே!) அல்லாஹ்தான் பூமியை உங்களுக்கு
வாழ்விடமாகவும் வானத்தை முகடாகவும் ஆக்கினான். உங்களை
வடிவமைத்தான்; உங்கள் வடிவங்களை அழகாகவும் ஆக்கினான்.
உங்களுக்குச் சிறந்த பொருள்களிலிருந்து உணவளித்தான். அத்தகைய
அல்லாஹ்தான் உங்கள் இறைவன். அனைத்துலகங்களின்
இறைவனாகிய அல்லாஹ் அருள்வளம் மிக்கவன். 65அவன்தான்
என்றும் உயிர்த்திருப்பவன்; அவனைத்தவிர வணக்கத்திற்குரிய
வேறு இறைவன் இல்லை. (ஆகவே மனிதர்களே!) மார்க்கத்தை
அவனுக்கே உரித்தாக்கித் தூய உள்ளத்துடன் அவனிடமே
இறைஞ்சுங்கள். “அனைத்துலகங்களின் இறைவனாகிய
அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும்!” (என்று கூறுங்கள்.)

66(நபியே! நீர் இவர்களிடம்) “என் இறைவனிடமிருந்து
எனக்குத் தெளிவான சான்று வந்தபின்னர், அல்லாஹ்வையன்றி
நீங்கள் வழிபடுகின்றவர்களை வணங்குவதிலிருந்து நான்
தடுக்கப்பட்டுள்ளேன். அனைத்துலகங்களின் இறைவனுக்கே
முற்றிலும் கீழ்ப்படியவேண்டும் என்றும் நான்
பணிக்கப்பட்டுள்ளேன்” என்று கூறும். 67(மனிதர்களே! முதலில்)
மண்ணிலிருந்தும் பின்னர் விந்திலிருந்தும் பின்னர் இரத்தக்
கட்டியிலிருந்தும் அவன்தான் உங்களைப் படைத்தான். பின்னர்
அவன் உங்களைக் குழந்தைகளாக வெளிப்படுத்துகிறான். பின்னர்
நீங்கள் (இளமையின்) வலிமையை அடைந்து (அதன்) பின்னர்
முதியோராக ஆகும் வரையிலும் (உங்களை வாழவைக்கிறான்).
உங்களில் சிலர் இதற்கு முன்னரே உயிர் கைப்பற்றப்படுவதும்
உண்டு (இவ்வாறெல்லாம் இறைவன் செய்வது) நீங்கள் குறிப்பிட்ட
தவணையை அடைவதற்காகவும் (உண்மையை) நீங்கள் புரிந்து
கொள்வதற்காகவும்தான். 68அவன்தான் உயிரளிக்கின்றான்;

*(அவன்தான்) சாவையும் அளிக்கிறான். அவன் ஒன்றை ஆக்கவேண்டுமெனத் தீர்மானித்து விட்டால் 'ஆகுக' என்றுதான் கூறுவான்; அது ஆகிவிடும்.*

69*(நபியே!) இறைவசனங்களில் வாதம்புரிவோர் எவ்வாறு
திசை திருப்பப்படுகின்றனர் என்பதை நீர் பார்க்கவில்லையா?*
70*(எமது) இவ்வேதத்தையும் எம்(முடைய மற்ற) தூதர்கள்
கொண்டுவந்த(வேதத்)தையும் பொய்மைப்படுத்துவோர்
விரைவில் (மறுமையில்) அதன் விளைவை அறிந்துகொள்வர்.*
71*அவர்களின் கழுத்துகள் விலங்குகளாலும் சங்கிலிகளாலும்
பிணைக்கப்பட்டு இழுத்து வரப்படுவர்.* 72*கொதிநீரில்
(இழுத்துவரப்பட்டுப்) பின்னர் நெருப்பிலும் எறியப்படுவர்.*
73*பின்னர் அவர்களிடம், "அல்லாஹ்வையன்றி நீங்கள்
இணைவைத்துக் கொண்டிருந்தவையெல்லாம் எங்கே?" என்று
கேட்கப்படும்.* 74*அதற்கு அவர்கள் "அவை எங்களை(க் கை)
விட்டு மறைந்து விட்டன. உண்மையில் நாங்கள் இதற்கு
முன்பு எந்த ஒன்றையும் வழிபட்டுக் கொண்டிருக்கவில்லை"
என்று கூறுவர். இவ்வாறுதான் அல்லாஹ் மறுப்பாளர்களை
வழிதவறச்செய்கிறான்.* 75*(அவர்களிடம் கூறப்படும்): "நீங்கள்
பூமியில் நியாயமின்றிப் (பாவங்களில்) மகிழ்ந்துகொண்டும்
இறுமாப்புக்கொண்டும் இருந்தீர்கள். அதுவே (உங்களின்
இந்நிலைக்குக்) காரணம்.* 76*என்றென்றும் தங்குவதற்காக நரகத்தின்
வாயில்களில் நுழைந்துவிடுங்கள்". செருக்குக் கொண்டோரின்
உறைவிடம் மிகவும் கெட்டதாகும்.*

77*(எனவே, நபியே!) நீர் பொறுமை காப்பீராக! உறுதியாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. நாம் அவர்களுக்கு எச்சரிக்கும் (தண்டனைகளில்) சிலவற்றை உமக்குக் (கண்ணெதிரே) காட்டினாலும் அல்லது உம்மை (அதற்குமுன்) இறக்கச் செய்தாலும் அவர்கள் எம் பக்கமே திரும்பக் கொண்டுவரப்படுவர்.*

78*(நபியே!) உறுதியாக உமக்கு முன்னர் இறைத்தூதர்கள் பலரை அனுப்பியுள்ளோம். அவர்களில் சிலரைப் பற்றிய வரலாறுகளை*

*நாம் உமக்கு எடுத்துரைத்துள்ளோம். வேறு சிலரைப் பற்றிய வரலாறுகளை நாம் உமக்குக் கூறவில்லை. அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்தத் தூதரும் எந்தவொரு சான்றையும் (தாமே) கொண்டு வரமுடியாது, அல்லாஹ்வின் கட்டளை வரும்போது சத்தியத்தின்படி தீர்ப்பளிக்கப்பட்டுவிடும். (இறை வசனங்களைப்) பொய்யெனக் கூறியோர் அப்போது இழப்பிற்குள்ளாகிவிடுவர்.*

*[79]அல்லாஹ்தான் உங்களுக்காகக் கால்நடைகளைப்
படைத்திருக்கின்றான். அது, அவற்றில் சிலவற்றை நீங்கள் வாகனமாகப் பயன்படுத்துவதற்காகவும் சிலவற்றை நீங்கள்
உண்பதற்காகவும்தான். [80]அவற்றில் உங்களுக்கு இன்னும் பல
பயன்களும் இருக்கின்றன. அவற்றின்மூலம் உங்கள் மனம் விரும்பும் இடங்களை அடைவதற்காகவும் (அவற்றைப் படைத்தான்.) அவற்றின் மீதும் கப்பல்களின் மீதும் நீங்கள் சுமந்து
செல்லப்படுகிறீர்கள். [81]தன்(னை உணர்த்தக்கூடிய) சான்றுகளை
உங்களுக்கு அவன் காட்டுகிறான். ஆகவே அல்லாஹ்வின் அச்சான்றுகளில் எதனை நீங்கள் மறுப்பீர்கள்?*

*[82]இவர்கள் பூமியில் பயணம்செய்து தங்களுக்கு முன்பு
வாழ்ந்தவர்களின் நிலை என்னவாயிற்று என்பதைப் பார்க்கவிலையா? அவர்கள் இவர்களைவிட எண்ணிக்கையில் மிகுந்தவர்களாகவும் வலிமை மிக்கவர்களாகவும் இருந்தனர். பூமியில் (இவர்களைவிட) மாபெரும் அடையாளங்களையும் விட்டுச் சென்றிருந்தனர். ஆயினும் அவர்கள் ஈட்டி வைத்திருந்தவை அவர்களுக்கு எந்தப் பயனையும் அளிக்கவில்லை.
[83]அவர்களின் தூதர்கள் அவர்களிடம் தெளிவான சான்றுகளைக்
கொண்டுவந்தபோது தம்மிடம் என்ன அறிவு(த் திறமை) இருந்ததோ அதைக்கொண்டே அவர்கள் பூரிப்படைந்தனர். அவர்கள் எதனை ஏளனம் செய்து கொண்டிருந்தார்களோ அதுவே அவர்களைச்
சூழ்ந்து கொண்டது. [84]அவர்கள் எமது வேதனையைக்
கண்டபோது “அல்லாஹ்வை மட்டுமே நாங்கள் நம்பிக்கை கொண்டோம். அவனுக்கு இணையாக்கிக் கொண்டிருந்தவற்றை*

*மறுத்துவிட்டோம்" என்று கூறினர். [85]ஆயினும் எமது வேதனையைக் (கண் முன்) கண்ட பின்னர் அவர்களுக்கு ஏற்பட்ட நம்பிக்கை பயனளிக்கவில்லை. (ஏனெனில்) இதுதான் அடியார்கள் தொடர்பாக (இதற்கு முன்னரும்) நடைபெற்று வருகின்ற அல்லாஹ்வின் வழிமுறையாகும். (வேதனை இறங்கிய) அப்போது மறுப்பாளர் இழப்பிற்குள்ளானார்கள்.*

# 41. விவரிக்கப்பட்ட வசனங்கள் (ஃபுஸ்ஸிலத்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]ஹா – மீம்.*

*[2]அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்பாளனும் ஆகிய (இறை)வனிடமிருந்து அருளப்பெற்ற [3]இது ஒரு வேதமாகும். அரபி மொழியில் அமைந்துள்ள குர்ஆனாகிய இதன் வசனங்கள் அறிந்துகொள்ளும் (ஆற்றலுடைய) மக்களுக்காகத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. [4]இது நற்செய்தி கூறக்கூடியதாகவும் எச்சரிக்கை செய்யக் கூடியதாகவும் இருக்கிறது. ஆயினும், அவர்களில் பெரும்பாலோர் (இதனைப்) புறக்கணித்து விட்டனர். ஆகவே அவர்கள் (இதனைச்) செவியுறுவதும் இல்லை.*
*[5]"(முஹம்மதே!) நீர் எதன்பால் எங்களை அழைக்கின்றீரோ (அதனைக் கவனிக்க முடியாதபடி) எங்கள் உள்ளங்கள் திரைகளுக்குள் (மறைக்கப்பட்டு) உள்ளன. (மேலும் நீர் கூறுவதைக் கேட்கமுடியாதவாறு ஒரு) செவிட்டுத்தன்மை எங்கள் செவிகளில் உள்ளது. உமக்கும் எங்களுக்குமிடையே ஒரு திரை இருக்கின்றது. ஆகவே நீர் (விரும்பும் வழியில்) செயல்படுவீராக! நாங்களும் (எங்கள் விருப்பப்படி) செயல்படுகிறோம்" என்று அவர்கள் கூறுகின்றனர்.*

*[6](நபியே!) "நான் உங்களைப் போன்ற ஒரு மனிதன்தான். ஆயினும் எனக்கு 'உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான் என்று இறைச்செய்தி அறிவிக்கப்படுகிறது. ஆகவே அவனை*

*நோக்கிய நேர்வழியிலேயே நிலைகொள்ளுங்கள். அவனிடமே பாவமன்னிப்புக் கோருங்கள்; இணைவைப்பாளர்களுக்குக் கேடுதான்” என்று நீர் கூறுவீராக!** [7]அவர்கள் கடமையாக்கப்பட்ட கொடையை வழங்குவதில்லை; மறுமையையும் மறுக்கின்றனர்.
[8]உறுதியாக நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர்களுக்கு என்றும் முடிவுறாத நற்கூலி இருக்கிறது.*

[9]*(நபியே!) “பூமியை இரண்டே நாட்களில் படைத்தவனை நீங்கள் ஏற்க மறுக்கிறீர்களா? அவனுக்கு இணைகளை ஏற்படுத்துகின்றீர்களா? அவன் அனைத்துலகங்களின் இறைவனாவான்” என்று நீர் கூறும். [10]அவன் பூமியின் மீது உறுதியான மலைகளை அமைத்தான்; பூமியில் வளங்களை அருளினான்; அதில் (வாழவிருப்போர்க்கு வேண்டிய) உணவுகளை நான்கு நாட்களில் வரையறுத்துப் படைத்தான். (பூமியையும் அதிலுள்ள படைப்புகளையும் பற்றிக்) கேட்பவர்களுக்கான விடை இதுதான். [11]பின்னர் அவன் வானத்தின் மீது கவனம் செலுத்தினான். அப்போது அது புகையாக இருந்தது. வானத்திடமும் பூமியிடமும் அவன், “நீங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் (வழிபட்டு) வந்துவிடுங்கள்” என்று கூறினான். அவையிரண்டும் “நாங்கள் விரும்பியே (கீழ்ப்படிந்து) வந்துவிட்டோம்” என்று கூறின. [12]ஆகவே அவன் இரு நாட்களில் ஏழு வானங்களையும் அமைத்து ஒவ்வொன்றுக்கும் அதற்குரிய கடமையை அறிவித்தான். (உலகிற்கு அருகிலுள்ள) கீழ் வானத்தை நாம் நட்சத்திரங்களால் அலங்கரித்தோம். அதனைப் பாதுகாப்பாகவும் வைத்தோம். இது யாவற்றினும் வல்லவன், முற்றும் அறிந்தவனின் ஏற்பாடாகும்.*

[13]*(எனினும்) அவர்கள் (நம்பிக்கை கொள்ளாது) புறக்கணித்து விடுவார்களாயின் (நபியே!) “ஆத், ஸமூத் கூட்டத்தாருக்கு*

---

***எனவே அவனை நோக்கிய நேர்வழியிலேயே நிலைகொள்ளுங்கள் என்பதன் பொருள், ‘உங்களது வணக்கத்தை முழுமையாக இறைவனுக்கேயானதாக்குங்கள்’ என்பதாகும். அதாவது, முழு கவனமும் இறைவனை நோக்கியதாகவே இருக்க வேண்டும்;**

*ஏற்பட்டது போன்ற பேரழிவு (உங்களுக்கும் நேரலாம் என்பது) குறித்து நான் உங்களை எச்சரிக்கிறேன்” என்று கூறுவீராக!*
*[14]முன்னிருந்தும் பின்னிருந்தும் தூதர்கள் அவர்களிடம் வந்து “அல்லாஹ்வைத்தவிர வேறு யாரையும் வணங்காதீர்கள்” என்று கூறியபோது அவர்கள், “எங்கள் இறைவன் விரும்பியிருந்தால் வானவர்களை(த் தூதர்களாக) இறக்கியிருப்பான். (ஆகவே) நீங்கள் கொண்டு வந்துள்ள தூதுச் செய்தியை நாங்கள் ஏற்க மறுக்கிறோம்” என்று கூறினர்.*

*[15]ஆத் சமூகத்தினர் பூமியில் நியாயமின்றிச் செருக்குக் கொண்டு, “எங்களைவிட வலிமை வாய்ந்தவர்கள் யார்?” என்று கேட்டனர். அவர்களைப் படைத்த இறைவன் அவர்களைவிட வலிமை வாய்ந்தவன் என்பதை அவர்கள் அறியவில்லையா?*
*அவர்கள் எம் சான்றுகளை மறுத்துக்கொண்டிருந்தனர். [16]ஆகவே*
*கெடுபேறான நாட்களில் கடும் புயல் காற்றை அவர்களின் மீது அனுப்பினோம், இம்மை வாழ்விலேயே இழிவுதரும் வேதனையை அவர்கள் சுவைக்கும்படிச் செய்வதற்காக! மறுமையின் வேதனையோ இதனைவிட இழிவானதாகும். அவர்களுக்கு*
*(அங்கு) எந்த உதவியும் கிடைக்காது. [17]ஸமூத் கூட்டத்தாருக்கு*
*நாம் நேர்வழி காட்டினோம். ஆனால் அவர்கள் நேர்வழிக்குப் பதிலாகக் குருட்டுத்தனத்தை விரும்பினர். ஆகவே அவர்களின் தீவினையால் இழிவுமிக்க வேதனை அவர்களைத் தாக்கியது.*
*[18]ஆயினும் நம்பிக்கைகொண்டு இறையச்சத்துடன் இருந்தவர்களை நாம் பாதுகாத்துக் கொண்டோம்.*

*[19](நபியே! அந்த நாளில் நிகழ்பவற்றை மக்களுக்கு எடுத்துரைப்பீராக!) அல்லாஹ்வின் எதிரிகள் நரகத்தை நோக்கி ஒன்றுதிரட்டப்படும்போது அவர்கள் (தங்களுடைய*
*செயல்களுக்கேற்ப) வகைப்படுத்தப்படுவர். [20]இறுதியில் அவர்கள்*
*(அனைவரும்) அங்கு வந்ததும் அவர்களின் செவிகளும் கண்களும் தோல்களும் அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றைக் குறித்து அவர்களுக்கு எதிராகச் சாட்சி கூறும். [21]அவர்கள்*

*தம் தோல்களிடம், “நீங்கள் ஏன் எங்களுக்கு எதிராகச் சாட்சி
கூறினீர்கள்?” என்று கேட்பர். அவை, “ஒவ்வொரு பொருளையும்
பேசவைத்த அல்லாஹ்தான் எங்களையும் பேசவைத்தான்.
அவன்தான் உங்களை முதன்முறையும் படைத்தான். (பின்னரும்)
அவனிடமே) நீங்கள் கொண்டு வரப்பட்டுள்ளீர்கள்” என்று
கூறும். 22“உங்கள் செவிகளும் கண்களும் தோல்களும் உங்களுக்கு
எதிராகச் சாட்சி கூறாதிருக்குமாறு (உங்கள் பாவங்களை)
உங்களால் மறைக்கமுடியவில்லை. எனினும் நீங்கள் செய்கின்ற பல
செயல்களை அல்லாஹ் அறியமாட்டான் என்றுதான் எண்ணிக்
கொண்டிருந்தீர்கள். 23உங்கள் இறைவனைப்பற்றி நீங்கள் எண்ணிக்
கொண்டிருந்த இந்த எண்ணம்தான் உங்களை அழிவிற்குள்ளாக்கி
விட்டது. (எனவே) நீங்கள் இழப்பிற்குள்ளானவராகி விட்டீர்கள்”
என்றும் அவை கூறும். 24அவர்கள் (வேதனையைப்) பொறுத்துக்
கொண்டாலும் (அப்பொறுமை இல்லாவிட்டாலும்) நரகமே
அவர்களின் இருப்பிடமாகும். அவர்கள் மன்னிப்புக் கோரினாலும்
அவர்களுக்கு மன்னிப்புக் கிடைக்காது.*

*25நாம் (இம்மையில்) இவர்களுடன் சில (தீய)கூட்டாளிகளை
இணைத்து விட்டோம். (அக்கூட்டாளிகள்) இவர்களுக்கு முன்னும்
பின்னுமுள்ள (தீச்செயல்கள்) அனைத்தையும் அழகாக்கிக்
காட்டினர். இவர்களுக்கு முன்னர் வாழ்ந்து சென்ற ஜின்கள்,
மனிதர்களுள் உள்ள(பாவியான)வர்கள்மீது உறுதியாக்கப்பட்ட
தீர்ப்பு இவர்கள்மீதும் உறுதியாகி விட்டது. உறுதியாக இவர்கள்
இழப்பிற்கு உரியவர்களாகி விட்டனர்.*

*26“இந்தக் குர்ஆனை உங்கள் காதால் கேட்காதீர்கள். (அது
ஓதப்படும்போது பிறரும் கேட்க முடியாதவாறு) அதில் இடையூறு
ஏற்படுத்துங்கள், அதன்மூலம் நீங்கள் வெற்றிபெறுவீர்கள்”
என்று இந்த மறுப்பாளர்கள் கூறுகின்றனர். 27ஆனால் நாம்
இவ்விறைமறுப்பாளர்கள் கடும் வேதனையை அனுபவிக்கும்படி
செய்வோம். அவர்கள் செய்துகொண்டிருந்த தீயசெயல்களுக்கு
உறுதியாக நாம் கூலி வழங்குவோம். 28இதுதான் அல்லாஹ்வின்*

*பகைவர்களுக்கான கூலியாகும். அதாவது நரகம்! எமது வசனங்களை அவர்கள் மறுத்துக் கொண்டிருந்ததனால் அங்கு அவர்களுக்கு உறைவிடம் இருக்கிறது.*

*29(மறுமையில்) மறுப்பாளர்கள் இறைவனிடம், "எங்கள் இறைவா! ஜின்கள், மனிதர்கள் ஆகியோரில் எங்களை வழிகெடுத்தவர்களைக் காட்டுவாயாக! அவர்களைத் தாழ்ந்தோரிலும் மிகத் தாழ்ந்தோராக ஆக்கும் பொருட்டு நாங்கள் அவர்களை எங்கள் கால்களுக்குக் கீழே போட்டு (மிதித்து) விடுகிறோம்" என்று கூறுவர்.*

*30யாரெல்லாம் "அல்லாஹ்தான் எங்கள் இறைவன்" என்று கூறி அதில் உறுதியாக நிலைத்து நின்றார்களோ (அவர்களின் மரணவேளையில்) வானவர்கள் அவர்களிடம் இறங்கி "நீங்கள் அஞ்ச வேண்டாம்; கவலைப்பட வேண்டாம். உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட சொர்க்கத்தைக் கொண்டு நற்செய்தி பெற்றுக்கொள்ளுங்கள்" என்று கூறுவர். 31"நாங்கள் இந்த உலக வாழ்க்கையிலும் உங்கள் பொறுப்பாளர்கள்; மறுமையிலும் (உங்களுக்கு உதவியாளராவோம்). உங்கள் மனம்விரும்புகின்ற அனைத்தும் அங்கு உங்களுக்கு உண்டு. நீங்கள் கேட்பதெல்லாம் உங்களுக்குக் கிடைக்கும். 32இது பெரும் மன்னிப்பாளன், நிகரற்ற அன்பாளானிடமிருந்து கிடைக்கும் விருந்தாகும்" (என்றும் வானவர் கூறுவர்).*

*33எவர் அல்லாஹ்வின்பால் (மக்களை) அழைத்து, நற்செயல்கள் புரிந்து, "நான் உறுதியாகக் கீழ்ப்படிந்தவர்களில் ஒருவன்" என்று கூறுகிறாரோ அவரைவிட அழகிய சொல்லை உடையவர் யார்?*
*34நன்மையும் தீமையும் சமமாகமாட்டா. (ஆகவே, நபியே!) மிகச்சிறந்த நன்மையைக் கொண்டு (தீமையைத்) தடுப்பீராக! அப்போது உம்முடன் பகைமை கொண்டிருந்தவர்கூட உற்ற நண்பரைப்போல ஆகிவிடுவதை நீர் காண்பீர்!*
*35பொறுமையாளர்களைத் தவிர வேறு எவருக்கும் இது (இந்தப்*

*பண்பு) வாய்க்கப்பெறுவதில்லை. பெரும் பேறுடையவர்களைத் தவிர வேறு எவருக்கும் இது அருளப்படுவதில்லை. [36](நபியே!) சாத்தான் உம் உள்ளத்தில் (தீயதைச் செய்யுமாறு) ஏதேனும் ஊசலாட்டத்தை ஏற்படுத்தினால், உடனே அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுவீராக! உறுதியாக அவன் செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.*

*[37](மக்களே!) இரவும் பகலும் சூரியனும் சந்திரனும் அவனது சான்றுகளில் உள்ளவையாகும். (உண்மையில்) நீங்கள் அவனையே வணங்குவோராயின் சூரியனுக்கும் சந்திரனுக்கும் தலைவணங்காதீர்கள். அவற்றைப் படைத்த அல்லாஹ்வுக்குத் தலைவணங்குங்கள். [38]எனினும் (நபியே!) அவர்கள் செருக்குக் கொ(ண்டு இறைவனை வணங்காது விலகிக்கொ)ள்வார்களாயின் (இறைவனுக்கு இழப்பேதுமில்லை). உம் இறைவனிடம் உள்ள(வான)வர்கள் இரவிலும் பகலிலும் அவனை(ப் புகழ்ந்து) துதித்துக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் சோர்வடைவதில்லை.*

*[39](நபியே!) அவனது சான்றுகளில் மற்றொன்று: பூமி வறண்டு கிடப்பதை நீர் காண்கிறீர்; நாம் அதன்மீது மழை பொழியச் செய்தவுடன் அது செழிக்கிறது; (முளைவிட்டுப் பசுமை) வளர்கிறது. (இறந்த பூமிக்கு) உயிரூட்டியவன் தான் உறுதியாக இறந்தவர்களையும் உயிர்த்தெழச் செய்வான். அவன் யாவற்றின்மீதும் பேராற்றலுடையவன்.*

*[40]எமது வசனங்களுக்குத் (தமது கெடுநோக்கங்களுக்கேற்பத்) தவறான பொருள் கற்பிக்கின்றவர்கள் எம்மிடமிருந்து மறைந்துகொள்ள முடியாது. மறுமை நாளில் நெருப்பில் வீசியெறிப்படுபவர் சிறந்தவரா? நிம்மதி அடைந்தவராக வருபவர் சிறந்தவரா? (மனிதர்களே!) நீங்கள் விரும்பியதைச் செய்து கொண்டிருங்கள். உறுதியாக அவன் நீங்கள் செய்பவற்றைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். [41]இந்த வேதம் (குர்ஆன்) தங்களிடம் வந்தபோது அதனை அவர்கள் மறுத்து விட்டனர். உறுதியாக இது ஆற்றல்மிக்க வேதமாகும். [42]இதற்கு*

*முன்புறமிருந்தோ பின்புறமிருந்தோ பொய்மை இதனை அணுகாது. இது ஞானமும் புகழும் மிக்கவனிடமிருந்து அருளப்பெற்றதாகும்*
*43(நபியே!) உமக்குமுன் வந்த தூதர்களைக் குறித்துச் சொல்லப்பட்ட (பொய்ப்படுத்தும் தீய)வையே உம்மைக் குறித்தும் கூறப்படுகின்றன. உறுதியாக உம்முடைய இறைவன் பெரும் மன்னிப்பாளன்; துன்புறுத்தும் தண்டனை அளிப்பவன்.*

*44நாம் இதனை அரபி அல்லாத வேற்று மொழியில் அருளியிருந்தால் "இதன் வசனங்கள் (நமக்குத்) தெளிவாக்கப்பட்டிருக்க வேண்டாமா?" என்றும் "வேதமோ வேற்று மொழியில், அது அருளப்பட்ட(தூது)வரோ அரபி" என்றும் அவர்கள் கூறியிருப்பர். (நபியே!) "இது நம்பிக்கையாளர்களுக்கு வழிகாட்டியாகவும் அருமருந்தாகவும் இருக்கிறது" என்று நீர் கூறுவீராக! ஆனால் நம்பிக்கைகொள்ளாதவர்களின் காதுகளில் ஒரு செவிட்டுத்தனம் உள்ளது. கண்களின் மீது ஒரு திரையுள்ளது; அவர்கள் மிகத் தொலைவிலிருந்து அழைக்கப்படுபவர்கள் (போல இருக்கின்றனர்).*

*45உறுதியாக நாம் மோசேவுக்கும் வேதத்தை வழங்கியிருந்தோம். ஆனால் அதில் (அவர்களிடையே) கருத்து முரண்கள் ஏற்பட்டன. (அவர்களுக்கு மறுமையில் தீர்ப்பு வழங்கப்படும் எனும்) உம் இறைவனின் வாக்கு முன்னரே பிறவாதிருந்தால் அவர்களிடையே (இவ்வுலகில் எப்போதோ) தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும். உறுதியாக (உமது மக்களும் குர்ஆனாகிய) இது குறித்து ஐயத்தில் ஆழ்ந்து கிடக்கின்றனர்.*
*46எவர் நற்செயல் புரிகிறாரோ அது அவருக்கே நன்மையாகும். எவர் தீச்செயல்புரிகிறாரோ அது அவருக்கே கேடாக அமையும். (நபியே!) உம் இறைவன் அடியார்கள்மீது சிறிதும் அநீதி இழைப்பவன் அல்லன்.*

*47இறுதித் தீர்ப்புநாள் பற்றிய அறிவு அவனையே சார்ந்தது. அவனுக்குத் தெரியாமல் எந்தக் கனியும் தன் சூல்கொத்திலிருந்து வெளிப்படுவதில்லை; எந்தப் பெண்ணும் கருவுறுவதுமில்லை;*

*ஈன்றெடுப்பதுமில்லை. அவன் (இணைவைப்பாளர்களான) அவர்களை அழைத்து "எனக்கு இணையாக்கப்பட்டவர்கள் எங்கே?" என்று கேட்கும் (மறுமை) நாளில் அவர்கள், "எங்களில் (இணைவைப்புக்குச்) சாட்சி கூறுபவர் எவரும் (இன்று) இல்லை என்பதை நாங்கள் உனக்கு அறிவித்து விட்டோம்" என்று*
*கூறுவர். [48]இதற்கு முன் அவர்கள் (தெய்வங்கள் என) அழைத்துக்*
*கொண்டிருந்தவை யாவும் அவர்களை விட்டு மறைந்துவிடும். தாங்கள் தப்பிக்க எந்த வாய்ப்பும் இல்லை என்பதை அவர்கள் புரிந்து கொள்வர்.*

*[49]மனிதன் நன்மையை வேண்டி இறைஞ்சுவதில்*
*சோர்வடைவதில்லை. ஆயினும் ஒரு துன்பம் அவனைத்*
*தீண்டிவிட்டால் நம்பிக்கையிழந்து சோர்வுற்று விடுகிறான்.*
*[50]அவனுக்கு நேர்ந்த துன்பத்திற்குப்பின் எமது அருளை அவன்*
*சுவைக்குமாறு செய்தால், "இது எனக்குரியதுதான், மறுமை நாள் நிகழும் என நான் எண்ணவில்லை. ஒருவேளை இறைவனிடம் நான் திரும்பக் கொண்டு செல்லப்பட்டாலும் அவனிடத்தில் எனக்கு இன்பமே கிடைக்கும்" என்று அவன் கூறுவான். (ஆனால்) மறுப்பாளர்களுக்கு அவர்களின் (தீச்)செயல்களைக் குறித்து (அந்நாளில்) நாம் அறிவித்து விடுவோம். அவர்களைக் கடும் வேதனை அனுபவிக்கச் செய்வோம்.*

*[51]நாம் மனிதன்மீது அருள்புரிந்தால் (எமக்கு நன்றி*
*செலுத்துவதற்கு மாறாக) அவன் (எம்மையும் எம்முடைய கட்டளைகளையும்) புறக்கணித்து விலகிச் செல்கிறான். ஆனால் ஏதேனும் தீங்கு அவனுக்கு நேர்ந்துவிட்டால் (எம்மிடம்) தொடர்ந்து*
*இறைஞ்சி வேண்டுபவனாக மாறி விடுகிறான். [52](நபியே!) "நீங்களே*
*கூறுங்கள். (இந்தக் குர்ஆன்) அல்லாஹ்விடமிருந்து வந்திருந்தும் நீங்கள் இதனை மறுத்தால் – (இதனைப்) பகைப்பதில் மிகு தொலைவு சென்று விட்டவனைவிட வழிகேடன் வேறு யார் இருக்கமுடியும்?" என்று கேட்பீராக!*

[53]*(உறுதியாக) இதுதான் சத்தியம் என்பது அவர்களுக்குத் தெளிவாகும் வரையில் பரந்த இவ்வுலகிலும் அவர்களுக்குள்ளேயும் விரைவில் நாம் எமது சான்றுகளைக் காட்டுவோம். (நபியே!) உம் இறைவன் எல்லாவற்றிற்கும் சாட்சியாளனாக இருக்கிறான் என்பது அவர்களுக்குப் போதுமானதாக இல்லையா?* [54]*(நபியே!) அறிந்துகொள்ளும்! உறுதியாக அவர்கள் இறைவனைச் சந்திப்பதைக் குறித்து ஐயம் கொண்டிருக்கின்றனர். அறிந்துகொள்ளும்! அவன் அனைத்துப் பொருள்களையும் சூழ்ந்தறிபவனாக இருக்கிறான்.*

# 42. ஆலோசனை (அஷ்ஷூறா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1] *ஹா – மீம்.*

[2]*ஐன் – ஸீன் – காஃப்.*

[3]*யாவற்றினும் வல்லவன், ஞானம் நிறைந்தவன் இறைச்செய்தியை உமக்குமுன் சென்ற (தூது)வர்களுக்கு அறிவித்தவாறே உமக்கும் அறிவிக்கிறான்.* [4]*வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியன. அவன் மிக உயர்ந்தவன்; மகத்துவம் மிக்கவன்.* [5]*(பூமியில் உள்ளோர் இறைவனைப் புறக்கணித்து நெறிபிறழ்ந்து செல்வதன் காரணமாக) வானங்கள் அவர்கள்மீது வெடித்து (விழுந்து) விடவும் கூடும். வானவர்கள் தம் இறைவனைப் போற்றிப் புகழ்கின்றனர். பூமியில் உள்ளவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோருகின்றனர். (மக்களே!) அறிந்துகொள்ளுங்கள்! உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.* [6]*அல்லாஹ்வையன்றி (மற்றவர்களைத் தங்களின்) பாதுகாவலர்களாக்கிக் கொண்டவர்களை அவன் கண்காணித்துக் கொண்டிருக்கின்றான். (நபியே!) நீர் அவர்களுக்குப் பொறுப்பாளர் அல்லர்.*

[7]*இவ்வாறே அரபி மொழியில் இந்தக் குர்ஆனை நாம் உமக்கு அறிவித்துள்ளோம். நகரங்களின் தாய் (ஆகிய மக்காவில்*

*உள்ளோரு)க்கும் அதைச் சூழ உள்ளோருக்கும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காகவும் (விசாரணைக்காக அனைவரும்) ஒன்றுதிரட்டப்படும் நாளைக் குறித்து எச்சரிக்கை செய்வதற்காகவும் (இதனை உமக்கு அருளியுள்ளோம்). அந்தநாள் வருவதில் எத்தகைய ஐயமுமில்லை. (அன்று) ஒரு சாரார் சொர்க்கத்தில் இருப்பர்; மற்றொரு சாரார் நரகத்தில் இருப்பர்.*

*[8]அல்லாஹ் விரும்பியிருந்தால் அவர்கள் அனைவரையும் (ஒரே மார்க்கமுடைய) ஒரே சமூகத்தினராக ஆக்கியிருப்பான். ஆயினும் தான் விரும்பிய(நல்ல)வர்களையே அவன் தன் அருளில் நுழையச் செய்கிறான். அத்தீவினையாளர்களுக்குப் பாதுகாவலர்களோ உதவியாளர்களோ இல்லை. [9]அவனையன்றி வேறு பாதுகாவலர்களை அவர்கள் ஏற்படுத்திக் கொண்டனரா? (ஆனால், உண்மையில்) அல்லாஹ்வே பாதுகாப்பவன். அவன்தான் இறந்தவர்களை உயிர்த்தெழச் செய்கிறான். அவன் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன். [10]"நீங்கள் எந்த விஷயத்தில் (நம்பிக்கையாளர்களுடன்) முரண்படுகிறீர்களோ அதன் தீர்ப்பு அல்லாஹ்விடமே உள்ளது. அ(த்தகைய)வன்தான் என் இறைவனான அல்லாஹ்! அவனையே நான் முழுமையாகச் சார்ந்துள்ளேன். அவனையே (வணங்கி) முன்நோக்குகிறேன்" என்று (நபியே! அவர்களிடம் நீர்) கூறுவீராக!*

*[11](மக்களே!) அவன் வானங்களையும் பூமியையும் படைத்தவன். அவன்தான் உங்கள் இனத்திலிருந்து உங்களுக்கு இணைகளை ஏற்படுத்தினான். அதன்மூலம் உங்கள் வழித்தோன்றல்களைப் பெருகச்செய்தான். கால்நடைகளையும் இணைகளாகப் படைத்தான். அவனுக்கு நிகர் எதுவுமில்லை. அவன் (நன்கு) செவியுறுபவன்; உற்றுநோக்குபவன். [12]வானங்கள், பூமி ஆகியவற்றின் திறவுகோல்கள் அவனிடமே உள்ளன. தான் விரும்பியோருக்குத் தாராளமாக வாழ்வாதாரம் வழங்குகிறான். (தான் விரும்பியோருக்குக்) குறைத்தும் விடுகின்றான். அவன்*

*அனைத்துப் பொருள்களையும் நன்கறிந்தவன்” எனவும் கூறுவீராக!*

13*(நம்பிக்கையாளர்களே!) அவன் நோவாவுக்கு எதனை அறிவுறுத்தினானோ அதனையே உங்களுக்கும் மார்க்கமாக ஆக்கியுள்ளான். (நபியே!) நாம் உமக்கு அறிவிப்பதும் ஆப்ரஹாம், மோசே, இயேசு ஆகியோருக்கு அறிவுறுத்தியதும் இதுதான்: “நீங்கள் இம்மார்க்கத்தில் நிலைத்திருங்கள், அதில் முரண்பட்டு விடாதீர்கள்.” (நபியே!) இணைவைப்பாளர்களை நீர் எதன்பால் அழைக்கின்றீரோ அ(ந்த நம்பிக்கையான)து அவர்களுக்குப் பெரும் சுமையாக இருக்கிறது. தான் விரும்பியோரை அல்லாஹ் தன் பக்கம் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். தன் பக்கம் திரும்புவோருக்கு அவன் நேர்வழிகாட்டுகிறான்.*

14*அவர்கள்(இஸ்ராயீலின் மக்கள்) தங்களிடம் (வேத) அறிவு வந்த பின்னர்த்தான் பல பிரிவுகளாகப் பிளவுபட்டனர். (அதுவும்) தங்களுக்கிடையே உள்ள பொறாமையால்தான் (பிளவுபட்டனர்). ‘குறிப்பிட்ட தவணைவரை (அவர்களுக்குத் தீர்ப்பு தள்ளிப் போடப்படும்)’ எனும் உம் இறைவனின் வாக்கு முன்பே பிறந்திராவிட்டால் அவர்களிடையே உறுதியாகத் தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும். (மேலும்) அவர்களுக்குப் பின்னர் வேதத்தை வாரிசாகப் பெற்றவர்களும் குழப்பத்தில் ஆழ்த்தும் பெரும் ஐயத்தில் வீழ்ந்து விட்டனர்.*

15*எனவே (நபியே!) நீர் அதே (மார்க்கத்தின்) பக்கமாக (மக்களை) அழைப்பீராக! உமக்குக் கட்டளையிடப்பட்டபடி உறுதியாக இருப்பீராக! அவர்களின் மனவிருப்பங்களைப் பின்பற்றாதீர். நீர் கூறும்: “அல்லாஹ் அருளிய வேதத்தின் மீது நான் நம்பிக்கை கொண்டேன். உங்களிடையே நீதி செலுத்துமாறு நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். அல்லாஹ்தான் எங்கள் இறைவனும் உங்கள் இறைவனுமாவான். எங்களுக்கு எங்கள் செயல்(களின் பயன்)கள்; உங்களுக்கு உங்கள் செயல்(களின் பயன்)கள். எங்களுக்கும் உங்களுக்கும் இடையே*

*எந்த மோதலும் இல்லை. அல்லாஹ் நம் அனைவரையும் ஒன்றுதிரட்டுவான். அவனிடமே (நாம் அனைவரும்) திரும்ப வேண்டும்". [16]அல்லாஹ்வின் அழைப்பு ஏற்றுக்கொள்ளப்பட்ட பின்னரும் அவனைக் குறித்து (நம்பிக்கையாளர்களுடன்) தர்க்கம் புரிபவர்களின் வாதம் அவர்களின் இறைவனிடம் வீணானதேயாகும். அவர்களின் மீது அவனது சினம் இறங்கும். அவர்களுக்குக் கடுமையான வேதனையும் உண்டு.*

*[17]சத்தியம் அடங்கிய (இவ்)வேதத்தையும் (நீதித்) தராசையும் அல்லாஹ்வே அருளினான். (நபியே! ஒருவேளை) மறுமை நாள் மிக அண்மையில் இருந்தால், (அதனை) உமக்கு எது அறிவிக்கும் (இறைவன் அறிவித்தாலன்றி)? [18]அதனை நம்பாதவர்கள்தாம் அதற்காக அவசரப்படுகின்றனர். நம்பிக்கை கொண்டவர்களோ அதனைக் குறித்து அஞ்சிக் கொண்டிருக்கின்றனர். உறுதியாக அது உண்மைதான் என்பதை அவர்கள் அறிவார்கள். (நபியே!) அறிவீராக. உறுதியாக 'அந்த நேரம்' குறித்து (வீண்)வாதம் செய்வோர் கெடுவழியில் மிகத் தொலைவு சென்றுவிட்டனர்.*

*[19]அல்லாஹ் தன் அடியார்களிடம் மிகுந்த பரிவுடையவன். தான் விரும்பியோருக்கு வாழ்வாதாரம் வழங்குகிறான். அவன் ஆற்றல் மிக்கவன்; யாவற்றினும் வல்லவன். [20]எவர் மறுமையின் விளைச்சலை விரும்புகிறாரோ அவருக்கு அவரின் விளைச்சலை நாம் மிகுதிப்படுத்துவோம். எவர் இம்மையின் விளைச்சலை விரும்புகிறாரோ அதிலிருந்து சிறிதளவை வழங்குவோம். ஆனால் மறுமையில் அவருக்கு எந்தப் பங்கும் இல்லை.*

*[21]அல்லாஹ் மார்க்கத்தில் அனுமதிக்காத எதனையும் இவர்களுக்கு மார்க்கமாக ஆக்கும் இணை(த் தெய்வங்)களும் இருக்கின்றனவா? (கூலி வழங்குவது இறுதித் தீர்ப்பு நாளில்தான் எனும்) தீர்ப்பின் வாக்கு இல்லாதிருந்தால் இவர்களிடையே (எப்போதோ) தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும். உறுதியாக இத்தீவினையாளர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை இருக்கிறது.*

22(நபியே!) தீவினையாளர்கள் தாம் ஈட்டிய(தீய)வற்றைக் குறித்து
இறைத்தண்டனையை எண்ணி) அஞ்சிக் கொண்டிருப்பதை
(மறுமை நாளில்) நீர் காண்பீர். ஆயினும் அது அவர்களுக்கு
நிகழ்ந்தே தீரும். நம்பிக்கை கொண்டு நற்செயல்புரிந்தவர்கள்
சொர்க்கச் சோலைகளில் இருப்பர். அவர்களின் இறைவனிடம்
விரும்பியவை கிடைக்கும். இதுவே பேரருளாகும்.
23நம்பிக்கைகொண்டு நற்செயல்புரியும் தன் அடியார்களுக்கு
இதையே அல்லாஹ் நற்செய்தியாகக் கூறுகிறான். (நபியே!) நீர்
கூறும்: “நான் (இப்பணிக்காக) உங்களிடத்தில் எந்தக் கூலியையும்
கேட்கவில்லை. உறவினர்களிடையே காட்டப்படும் அன்பைத்
தவிர (வேறு எதையும் கேட்கவில்லை). எவர் நற்செயல் புரிகிறாரோ
நாம் அவருக்கு நன்மையை மிகுதிப்படுத்தி விடுவோம். உறுதியாக
அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நன்றியை ஏற்பவன்.

24(நபியே!) “இவர் அல்லாஹ்வின்மீது பொய்யைக்
கற்பனை செய்துகூறுகிறார் என்று அவர்கள் (உம்மைப் பற்றிக்)
கூறுகிறார்களா? (அவ்வாறு நீர் பொய் கூறியிருந்து) அல்லாஹ்
விரும்பினால் உம் இதயத்தின் மீது முத்திரையிட்டிருப்பான்.(ஆகவே
அவர்களுடைய கூற்று தவறானதே). அல்லாஹ் அசத்தியத்தை
அழிக்கிறான். தன் கட்டளைகளைக் கொண்டு சத்தியத்தை
உறுதிப்படுத்துகிறான். அவன் உள்ளங்களில் உள்ளவற்றை முற்றும்
அறிந்தவன். 25அவன்தான் தன் அடியார்களின் பாவமன்னிப்பு
வேண்டுதலை ஏற்றுக் கொள்கிறான்; (அவர்களின்) பாவங்களை
மன்னித்து விடுகிறான். (மக்களே!) நீங்கள் செய்பவற்றை அவன்
நன்கறிகின்றான். 26நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிபவர்களுக்கு
(அவர்களின் இறைஞ்சுதலை ஏற்று)ப் பதிலளிக்கிறான். தன்
அருளிலிருந்து அவர்களுக்கு இன்னும் மிகுதியாக வழங்குகிறான்.
மறுப்பாளர்களுக்கோ கடுந்தண்டனை உண்டு.

27அல்லாஹ் தன் அடியார்களுக்கு (மிக விரிவாக)
வாழ்வாதாரத்தை வழங்கினால் அவர்கள் பூமியில் (அட்டூழியம்
புரிந்து) எல்லை மீறிவிடுவர். ஆகவே அவன் தன் விருப்பப்படி

ஓர் அளவோடு இறக்கி வைக்கிறான். உறுதியாக அவன் தன்
அடியார்களை நன்கு அறிந்தவன்; உற்று நோக்குபவன். [28](இனி
மழை வராது என) மக்கள் நம்பிக்கை இழந்த பின்னர் மழையைப்
பொழியச் செய்கிறான். தன் அருளைப் பரவச் செய்கிறான்.
அவன்தான் பாதுகாவலன்; புகழுக்குரியவன். [29]அவன்
வானங்களையும் பூமியையும் படைத்திருப்பதும் அவ்விரண்டிலும்
உயிரினங்களைப் பரவச் செய்திருப்பதும் அவனது சான்றுகளில்
அடங்குவனவாகும். அவன் விரும்பும்போது அவற்றை
(மறுமையில்) ஒன்றுதிரட்டும் பேராற்றலுடையவன்.

[30](மக்களே!) உங்களுக்கு ஏதேனும் துன்பம் நேர்ந்தால் அது
உங்கள் கைகள் தேடிக் கொண்ட(தீய)வற்றின் விளைவேயாகும்.
அவன் பெரும்பாலான தவறுகளை மன்னித்து விடுகிறான்.
[31]நீங்கள் பூமியில் (ஓடி ஒளிந்து) இறைவனைத் தோற்கடித்துவிட
முடியாது. அல்லாஹ்வைத் தவிர உங்களுக்கு வேறு
பாதுகாவலரோ, உதவுபவரோ இல்லை.

[32]கடலில் மலைகளைப் போலச் செல்லும் கப்பல்களும்
அவனது சான்றுகளில் அடங்குவனவாகும். [33]அவன் விரும்பினால்
காற்றை அசைவற்றதாக்கி விடுவான்; அவை (அக்கப்பல்கள்
கடலின்) மேற்பரப்பில் அப்படியே நின்றுவிடும். பொறுமையுடன்
நன்றி செலுத்தும் ஒவ்வொருவருக்கும் உறுதியாக இதில் பல
சான்றுகள் உள்ளன. [34]அல்லது (அக்கப்பல் பயணிகளான)
அவர்களுடைய தீயசெயல்களின் காரணமாக அவற்றை
மூழ்கடித்து அழித்து(ம்)விடுவான். (மூழ்காமல் காப்பாற்றிப்)
பலருடைய பாவங்களை மன்னித்தும் விடலாம். [35]சான்றுகள்
குறித்து வாதம்புரிபவர்கள் தாங்கள் எங்கும் தப்ப முடியாது
என்பதை அறிந்துகொள்ளட்டும்.

[36](மக்களே!) உங்களுக்கு வழங்கப்பட்டிருப்பவையெல்லாம்
(நிலையற்ற) உலக வாழ்வின் (அற்ப) இன்பங்கள்தாம். ஆயினும்
நம்பிக்கைகொண்டு தம் இறைவனையே முழுமையாகச்

*சார்ந்திருப்பவர்களுக்கு அல்லாஹ்விடம் உள்ளதே மிகச் சிறந்ததும் நிலையானதுமாகும்.*

*[37](நம்பிக்கையாளர்களாகிய) அவர்கள் பெரும் பாவங்களையும் மானக்கேடான செயல்களையும் விட்டு விலகிக் கொள்வர்; (மேலும்) தாங்கள் சினமூட்டப்படும் போதும் (சினமூட்டியவரை) மன்னித்துவிடுவர். [38]அவர்கள் தங்கள் இறைவனின் கட்டளைகளை ஏற்றுக்கொள்வர்; தொழுகையைக் கடைப்பிடிப்பர். தங்களின் (ஒவ்வொரு) செயலை(யும்) தமக்குள் கலந்து ஆராய்ந்து (முடிவு) செய்வர். நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து (அறச்)செலவு செய்வர். [39]தங்கள்மீது அநீதி இழைக்கப்பட்டால் (வரம்பு மீறாத எதிர்த்தாக்குதல் செய்து தங்களைத்) தற்காத்துக் கொள்வர். [40]ஒரு தீங்கிற்கான தண்டனை அதே அளவு தீங்கு செய்வதே ஆகும். ஆயினும் எவர் (தீங்கிழைத்தவரை) மன்னித்துச் சமாதானம் செய்துகொள்கிறாரோ அவருடைய கூலி அல்லாஹ்விடம் இருக்கிறது. உறுதியாக அவன் தீவினையாளர்களிடம் அன்பு காட்டுவதில்லை. [41]எவர் தமக்குத் தீங்கிழைக்கப்பட்ட பின்னர் (அதே அளவு) பழி வாங்குகிறாரோ அவருக்கெதிராக(க் குற்றம் சுமத்த) வழியேதுமில்லை. [42]மக்களுக்கு அநீதி இழைத்து உலகில் நியாயமின்றி வரம்புமீறுவோர் மீதுதான் குற்றம் சாரும்; அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு. [43]ஆயினும் எவர் பொறுமையைக் கடைப்பிடித்து மன்னித்துவிடுகிறாரோ உறுதியாக அது துணிவுமிக்க (வீரச்) செயலாகும்.*

*[44]எவரை (அவரது பாவத்தின் காரணமாக) அல்லாஹ் வழிதவற விட்டுவிடுகிறானோ அதற்குப்பின் அவருக்கு வேறு பாதுகாவலர் இல்லை. (மறுமையில் இந்தத்) தீவினையாளர்கள் (நரக) வேதனையைக் (கண்ணெதிரே) காணும்போது "(உலகிற்குத்) திரும்பிச் செல்வதற்கு ஏதேனும் வழி உண்டா?" என்று கேட்பதை (நபியே) நீர் காண்பீர். [45](மேலும்) அவர்கள் நரகத்தின் முன் நிறுத்தப்படுவதையும் நீர் காண்பீர். அவர்கள்*

*இழிவுபடுத்தப்பட்டுத் தலைகுனிந்தவர்களாக (நரகத்தைத்) திருட்டுப் பார்வை பார்த்துக் கொண்டிருப்பார்கள். அப்போது நம்பிக்கையாளர்கள் (அவர்களை நோக்கி) "மறுமை நாளில் தமக்கும் தம் குடும்பத்தாருக்கும் இழப்பை உண்டாக்கிக் கொண்டவர்கள்தாம் உண்மையில் இழப்படைந்தோர் ஆவர். அறிந்துகொள்ளுங்கள்! தீவினையாளர்கள் நிலையான வேதனையில் வீழ்ந்திருப்பர்" என்று கூறுவர்.*
*[46]அல்லாஹ்வுக்கு எதிராக அவர்களுக்கு உதவிபுரியும் உதவியாளர்கள் எவரும் (மறுமையாகிய அந்நாளில்) இருக்கமாட்டார்கள். அல்லாஹ் யாரை வழிதவற விட்டு விடுகின்றானோ அவருக்கு எந்த வழியும் இல்லை.*

*[47](மக்களே!) அல்லாஹ்விடமிருந்து அறவே தடுக்க முடியாத அந்த நாள் வருமுன் நீங்கள் உங்கள் இறைவனின் அழைப்புக்குப் பதிலளியுங்கள். அந்த நாளில் உங்களுக்கு எந்தப் புகலிடமும் இராது. (உங்கள் பாவங்களை) நீங்கள் மறுக்கவும் முடியாது.*
*[48](நபியே! இனியும்) அவர்கள் (உம்மைப்) புறக்கணித்தால் அதைப்பற்றிக் கவலைப்படாதீர்). அவர்களைக் கண்காணிப்பவராக நாம் உம்மை அனுப்பவில்லை. (எமது தூதை அவர்களுக்கு) எடுத்துரைப்பதைத் தவிர உமக்கு வேறு கடமை இல்லை. நாம் மனிதனுக்கு எம்மிடமிருந்து ஏதேனும் அருளைச் சுவைக்கச் செய்தால் அவன் பெரும் மகிழ்ச்சியடைகிறான். அவன் செய்த தீவினையால் அவனுக்கு ஏதேனும் துன்பம் நேர்ந்துவிட்டால் உறுதியாக மனிதன் நன்றிகெட்டவனாகி விடுகிறான்.*

*[49]வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி அவனுக்கே உரியது. தான் விரும்புவதை அவன் படைக்கிறான். தான் விரும்பியோருக்குப் பெண் மக்கள் (மட்டும்) வழங்குகிறான். தான் விரும்பியோருக்கு ஆண் மக்கள் (மட்டும்) வழங்குகிறான்.*
*[50]அல்லது ஆண் மக்களையும் பெண் மக்களையும் சேர்த்து வழங்குகிறான். தான் விரும்பியோரை மலடுகளாகவும் ஆக்குகிறான். உறுதியாக அவன் முற்றும் அறிந்தவன்; பேராற்றலுடையவன்.*

[51]அல்லாஹ் மனிதனுடன் பேசுவதற்குரிய தகுதி எந்த
மனிதனுக்கும் இல்லை. வஹீ (உள்ளத்தில் உதிக்கச் செய்தல்)
மூலமோ, திரைக்கு அப்பாலிருந்தோ, ஒரு (வானவராகிய)
தூதரை அனுப்பி அவன் விரும்புவதை அவன் கட்டளைப்படி
அறிவிப்பதன் மூலமாகவோ அன்றி (அல்லாஹ் யாரிடமும்
நேரடியாகப் பேசமாட்டான்). அவன் மிக உயர்ந்தவன்; ஞானம்
மிக்கவன். [52](நபியே!) இவ்வாறே எமது கட்டளையின் வாயிலாக
உயிரானதை (குர்ஆனை) உமக்கு அறிவித்தோம். (அதற்கு
முன்னர்) வேதம் என்றால் என்ன, இறைநம்பிக்கை என்றால் என்ன
என்பதை நீர் அறியாதிருந்தீர். ஆயினும் நாம் இ(வ்வேதத்)தை
(உமக்கருளி) ஒளியாக ஆக்கியுள்ளோம். எமது அடியார்களில் நாம்
விரும்பியோருக்கு (இதனைக் கொண்டு) நேர்வழி காட்டுகிறோம்.
உறுதியாக நீர் மனிதருக்கு நேர்வழி காட்டுகிறீர். [53]இது தான்
அல்லாஹ்வின் வழியாகும். வானங்களிலும் பூமியிலும் உள்ளவை
யாவும் அவனுக்கே உரியன. (யாவரும்) அறிந்துகொள்க!
அவனிடமே அனைத்து விவகாரங்களும் திரும்புகின்றன.

## 43. அழகு செய்தல் (அஸ்ஸுக்ருஃப்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]ஹா – மீம்.

[2]தெளிவான இவ்வேதத்தின் மீது ஆணையாக!
[3](மக்காவாசிகளே!) நீங்கள் புரிந்துகொள்ளும் பொருட்டு
இதனை நாம் (உங்களுடைய) அரபி மொழியிலுள்ள குர்ஆனாக
ஆக்கியுள்ளோம். [4]உறுதியாக இது எம்மிடமுள்ள மூல ஏட்டில்
(பதிவாகி) உள்ளது. இது மிகவும் உயர்வானதும் ஞானம்
மிக்கதுமாகும்.

[5](மனிதர்களே!) நீங்கள் வரம்புமீறும் கூட்டத்தவராக
இருப்பதனால் (உங்கள்மீது வெறுப்புற்று வேதமாகிய) இந்த

அறிவுரையைக் கூறாமல் உங்களைப் புறக்கணித்து விடுவோமா
என்ன? [6]முந்தைய சமூகத்தார்களிடமும் நாம் எத்தனையோ
தூதர்களை அனுப்பியிருந்தோம். [7]தங்களிடம் வந்த எந்தத்
தூதரையும் அவர்கள் (இகழ்ந்து) எள்ளாமல் இருந்ததில்லை.
[8]இவர்களைவிட வலிமை வாய்ந்தவர்களையும் நாம்
அழித்திருக்கிறோம். முந்தையோரின் கடந்து சென்றுவிட்ட (முன்)
உதாரணம் இத்தகையதே ஆகும்.

[9]"(நபியே!) வானங்களையும் பூமியையும் படைத்தவன் யார்?"
என்று நீர் அவர்களிடம் கேட்டால், "யாவற்றினும் வல்லவனும்
முற்றும் அறிந்தவனுமாகிய அல்லாஹ்தான் படைத்தான்" என்று
உறுதியாக அவர்கள் கூறுவார்கள். [10]அவன்தான் உங்களுக்காகப்
பூமியைத் தொட்டிலாக ஆக்கினான். மேலும் நீங்கள் விரும்பிய
இடத்தை அடையும் பொருட்டு அதில் பாதைகளையும்
ஏற்படுத்தினான். [11]அவன்தான் வானத்திலிருந்து ஓர் அளவோடு
மழையை இறக்குகிறான். அதன்மூலம், இறந்தபூமியை நாம்
உயிர்ப்பிக்கின்றோம். இவ்வாறே நீங்களும் (இறந்தபின்னர்
பூமிக்குள்ளிருந்து உயிர்கொடுத்து) வெளிப்படுத்தப்படுவீர்கள்.
[12]அவன் எல்லாவகையான (உயிரினங்களின் ஆண், பெண்)
இணைகளையும் படைத்தான். நீங்கள் ஏறிப் பயணம் செய்யக்
கப்பல்களையும் கால்நடைகளையும் உண்டாக்கினான். [13]அ(வ்வாறு
அவன் படைத்த)து நீங்கள் அவற்றின் முதுகுகளின் மீது உறுதியாக
ஏறி அமர்ந்து, உங்கள் இறைவனின் அருட்கொடையை
நினைவுகூர்ந்து "அவன் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்;
அவன்தான் எங்களுக்கு இவற்றை வசப்படுத்தித் தந்தான்.
நாங்கள் இவற்றைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் உள்ளவர்களாக
இருக்கவில்லை" (என்றும்) [14]"உறுதியாக நாங்கள் எங்கள்
இறைவனிடமே திரும்பச் செல்பவர்கள்" என்றும் (நீங்கள்)
கூறுவதற்காகத்தான்.

[15](எனினும் இணைவைப்பாளர்களாகிய) இவர்கள் இறைவனது
அடியார்களில் சிலரை (வானவர்களை) அவனுக்கு (இறைமையில்)
கூட்டாளிகளாகப்(பெண் வழித்தோன்றல்களாக)க் கற்பித்துவிட்டனர்.

உறுதியாக மனிதன் அப்பட்டமாக நன்றிகெட்டவனாக
இருக்கிறான். [16]“இறைவன் தான் படைத்தவர்களில் தனக்கெனப்
பெண் மக்களை எடுத்துக் கொண்டு உங்களுக்கு ஆண் மக்களை
வழங்கிவிட்டானா? [17]இவர்கள் அளவற்ற அருளாளனுடன்
ஒப்பிட்டு(க்கற்பித்து)க் கூறும் பெண்மகவு இவர்களில்
ஒருவருக்கு(ப் பிறந்ததாக) நற்செய்தி கூறப்பட்டால் அவரின் முகம்
கருத்துவிடுகிறது; (மனத்தில்) துயரம் நிறைந்து விடுகிறது. [18]நகை
(ஒப்பனை)களுடன் வளர்கின்ற, (தமக்குரிய சிறப்பொழுக்கமாகிய
அடக்கம் காரணமாக விவாதத்தில் தம் கருத்தைத்) தெளிவாக
எடுத்துரைக்க முடியாதவர்(களான பெண்)களையா (இவர்கள்
அவனுக்குப் பிள்ளைகள் எனக் கூறுகின்றனர்?) [19]அளவற்ற
அருளாளனின் அடியார்களான வானவர்களை இவர்கள் பெண்கள்
எனக் கொள்கிறார்களே! அவர்கள் படைக்கப்பட்டபோது
இவர்கள் பார்த்துக் கொண்டிருந்தனரா? இவர்களின் (இந்தச்)
சாட்சியம் பதிவு செய்யப்படும். (இதுகுறித்து) இவர்கள்
விசாரிக்கப்படுவர்.

[20]மேலும் இவர்கள், “அளவற்ற அருளாளன் (வானவர்களைச்
சிலைவடிவில் நாங்கள் வழிபடக்கூடாது என) விரும்பியிருந்தால்
அ(வ்வான)வர்களை வணங்கியிருக்க மாட்டோம்” என்று
கூறுகின்றனர். இவர்களுக்கு இது குறித்து எந்த அறிவும் இல்லை.
இவர்கள் பொய்யுரைக்கின்றனர். [21]அதற்கு (குர்ஆனுக்கு) முன்
நாம் ஏதேனும் வேதத்தை இவர்களுக்கு வழங்கி, அதனை
இவர்கள் (தம் இணைவைப்புக்குச்) சான்றாகப் பற்றிப்
பிடித்திருக்கிறார்களா? [22]இல்லை, இவர்கள் (சான்றாகக் கூறுவது)
“நாங்கள் எங்கள் முன்னோர்களை ஒரு வழிமுறையில் (செல்லக்)
கண்டோம். அவர்களின் அடிச்சுவடுகளிலேயே நாங்கள் சென்று
கொண்டிருக்கிறோம்” என்பதுதான். [23](நபியே!) இவ்வாறே உமக்கு
முன்னர் எந்த ஊருக்கு நாம் எச்சரிப்பாளரை அனுப்பினாலும்
அங்கிருந்தோரில் செல்வர்கள் “நாங்கள் எங்கள் முன்னோர்கள்
ஒரு வழிமுறையில் (செல்வதைக்) கண்டோம்; அவர்களின்

*அடிச்சுவடுகளையே நாங்கள் பின்பற்றிச் செல்கிறோம்" என்று கூறாமலிருந்ததில்லை.* [24]*(ஒவ்வொரு தூதரும் அந்த மக்களிடம்) "உங்கள் முன்னோர்கள் எந்த வழியில் சென்றதாகக் கண்டீர்களோ அதைவிடச் சிறந்த நேர்வழியை நான் காட்டினாலுமா (நீங்கள் அவர்களின் வழியைப் பின்பற்றுவீர்கள்?)" என்று கேட்டார். அதற்கு அவர்கள், "எந்தத் தூதுச் செய்தியுடன் நீங்கள் அனுப்பப்பட்டீர்களோ அச்செய்தியை நாங்கள் மறுக்கிறோம்" என்று கூறினர்.* [25]*எனவே, நாம் அவர்களைப் பழிவாங்கினோம். (தூதர்களைப்) பொய்மைப்படுத்திக் கொண்டிருந்தோரின் முடிவு என்னவாயிற்று என்பதை (நபியே! நீர்) பார்ப்பீராக!*

[26]*(நபியே!) ஆப்ரஹாம் தம் தந்தையையும் தம் சமூகத்தாரையும் நோக்கி "நீங்கள் வணங்குபவற்றை (வழிபடுவதை) விட்டு நான் முற்றிலும் விலகிக் கொண்டேன்;* [27]*ஆயினும் என்னைப் படைத்தவனை (நான் வணங்குவேன்). உறுதியாக அவன்தான் எனக்கு நேர்வழி காட்டுவான்" என்று கூறியதை நினைவுகூர்வீராக!* [28]*தமது வழித்தோன்றல்கள் (தம் இறைவன் பக்கமே) திரும்புவதற்காக இதை (ஏகத்துவக் கொள்கையை) நிலையான வாக்காக அவர் அமைத்தார்.* [29]*ஆயினும் (அவர் வழிவந்த அரபிகள் இணைவைப்போராகவே இருந்த நிலையிலும்) இவர்களிடம் (இந்த வேதமாகிய) சத்தியமும் தெளிவான (எமது இந்தத்) தூதரும் வரும்வரை நாம் இவர்களுக்கும் இவர்களின் முன்னோர்களுக்கும் உலகியல் வசதிகளை வழங்கினோம்.*
[30]*ஆனால் சத்திய(வேத)ம் இவர்களிடம் வந்தபோது "இது சூனியமே, உறுதியாக நாங்கள் இதனை மறுக்கிறோம்" என்று கூறினர்.*

[31]*"அன்றி (மக்கா, தாயிஃப் எனும்) இவ்விரு ஊர்களிலுள்ள (யாரேனும்) ஒரு பெரிய மனிதருக்கு இந்தக் குர்ஆன் அருளப்பட்டிருக்கக் கூடாதா?" என்று இவர்கள் கேட்கின்றனர்.*
[32]*(நபியே!) உம் இறைவனின் அருட்கொடையைப் பங்கீடு செய்பவர்கள் இவர்கள்தாமா? இவ்வுலக வாழ்வில் இவர்களிடையே இவர்களுக்குரிய வாழ்வாதாரத்தை நாம்தானே*

*பங்கிட்டளிக்கிறோம்; இவர்களில் சிலரைத் தகுதிகளால் உயர்த்தி,
வேறு சிலரை இவர்கள் பணியாளர்களாக்கிக் கொள்ளும்படி
(செய்துள்ளோம்). உம் இறைவனின் அருட்கொடை இவர்கள்
திரட்டிக் கொண்டிருப்பவற்றை விட மிகச் சிறந்ததாகும்.
[33](மறுப்பாளர்களின் செல்வங்களைக் கண்டு ஆசைப்பட்டு)
மனிதர்கள் அனைவரும் (மறுப்பாளர்களாக) – ஒரே சமூகத்தவராக–
ஆகி விடுவார்களோ எனும் நிலை இல்லாதிருந்தால் அளவற்ற
அருளாளனை மறுப்போரின் வீட்டு முகடுகளையும் ஏறிச் செல்லும்
படிகளையும்கூட நாம் வெள்ளியினால் ஆக்கியிருப்போம்.
[34]மேலும் அவர்களுடைய வீட்டுக் கதவுகளையும் அவர்கள்
சாய்கின்ற கட்டில்களையும் வெள்ளியால் ஆக்கியிருப்போம்.
[35](இன்னும் அவற்றைத்) தங்கத்தாலும் ஆக்கியிருப்போம். ஆனால்
இவையனைத்தும் (அழிந்துவிடக்கூடிய) இவ்வுலக வாழ்வின்
இன்பங்கள்தாம். ஆனால் உம் இறைவனிடமுள்ள மறுமை
(வாழ்க்கை)யோ இறையச்சமுடையவர்களுக்கே உரியதாகும்.*

*[36]எவன் அளவற்ற அருளாளனின் (குர்ஆன் ஆகிய)
அறிவுரையைப் புறக்கணிக்கிறானோ அவன்மீது நாம் ஒரு
சாத்தானை ஏவி விடுகிறோம்; இவன் (சாத்தான்) அவனுக்கு
நண்பனாகி விடுகிறான். [37]இவர்கள் (இந்த சாத்தான்கள்)
அவர்களை நேர்வழியிலிருந்து தடுத்துக் கொண்டிருப்பார்கள்.
ஆயினும் அவர்கள், தாம் நேர்வழியில் செல்வதாகவே எண்ணிக்
கொள்வர். [38]இறுதியில் அவன் எம்மிடம் வந்து சேரும்போது
(அந்தச் சாத்தானை நோக்கி) “அந்தோ! எனக்கும் உனக்கும்
இடையே கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையிலுள்ள தொலைவு
இருந்திருக்கக் கூடாதா! எவ்வளவு கொடிய நண்பன் நீ!” என்று
கூறுவான். [39]அப்போது அ(வனைப்போன்ற)வர்களிடம் “நீங்கள்
தீவினை புரிந்துவிட்டபின் இந்தப் பேச்சு இன்று உங்களுக்கு எந்தப்
பயனையும் அளிக்காது. நீங்கள் வேதனையில் (சாத்தான்களின்)
பங்காளிகளாவீர்கள்” என்று கூறப்படும்.*

[40](நபியே!) உம்மால் செவிடர்களைச் செவியுறச் செய்ய
முடியுமா? அல்லது குருடர்களுக்கும் வெளிப்படையான
கெடுவழியில் இருப்பவர்களுக்கும் நேர்வழி காட்ட முடியுமா?
[41](நபியே! அவர்களைத் தண்டிப்பதற்குமுன்) நாம் உம்மை
எடுத்துக் கொண்டாலும் அவர்களைத் தண்டித்தே தீருவோம்.
[42]அல்லது நாம் அவர்களுக்கு வாக்களித்த வேதனையை நீர்
(உயிர் வாழும்போதே உமது கண்ணால்) காணுமாறு செய்வோம்.
உறுதியாக நாம் அவர்களின்மீது முழு ஆற்றல் உடையவராவோம்.
[43]ஆகவே (நபியே!) உமக்கு அறிவிக்கப் பெறுவ(தாகிய வேதத்)தை
உறுதியாகப் பற்றிப்பிடித்துக் கொள்வீராக! உறுதியாக நீர்
நேரான வழியில் இருக்கின்றீர். [44]இது உமக்கும் உம்முடைய
சமுதாயத்தாருக்கும் சிறந்த அறிவுரையாகும். (இதன்படி நடந்து
கொண்டீர்களா என்பது பற்றி) நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள்.
[45](நபியே!) உமக்கு முன்னர் நாம் அனுப்பிய எம் தூதர்களிடம்
‘வணங்கப்படுவதற்கு அளவற்ற அருளாளனையன்றி வேறு
தெய்வங்களை நாம் நியமித்திருந்தோமா?’ என்று (அவர்களுக்கு
அருளப்பட்ட வேதங்களின் வாயிலாகக்) கேட்டுப் பார்ப்பீராக!

[46]நாம் மோசேயை ஃபாரோவிடமும் அவனது
அவையினரிடமும் எம் சான்றுகளுடன் அனுப்பினோம். அவர்,
(அவர்களிடம்) “நான் அனைத்துலகங்களின் இறைவனால்
அனுப்பப்பட்ட தூதராவேன்” என்று கூறினார். [47](அவ்வாறு)
அவர் எமது சான்றுகளுடன் வந்தபோது அவற்றைக் கண்டு
அவர்கள் (எள்ளி) நகைத்தனர். [48]நாம் அவர்களுக்குக் காட்டிய
ஒவ்வொரு சான்றும் முந்தைய சான்றைவிடப் பெரியதாகவே
இருந்தது. அவர்கள் எம்மிடம் திரும்புவதற்காக வேதனையால்
அவர்களைத் தண்டித்தோம். [49](அப்போதெல்லாம்) அவர்கள்
(மோசேயை நோக்கி) “சூனியக்காரரே! அவன் உமக்களித்துள்ள
வாக்குறுதியின் பேரில் எங்களுக்காக இறைஞ்சி வேண்டுவீராக!
உறுதியாக நாங்கள் நேர்வழி பெற்று விடுவோம்” என்று
கூறினர். [50]அவர்களிடமிருந்து நாம் வேதனையை நீக்கியபோது

*(ஒவ்வொருமுறையும்) அவர்கள் தம் வாக்குறுதியை முறித்துக் கொண்டனர்.*

[51]*(ஒருநாள்) ஃபாரோ தன் சமூகத்தாரை அழைத்து "என்*
*மக்களே! எகிப்தின் அரசாட்சி என்னுடையதல்லவா! இந்த*
*ஆறுகள் எனக்குக் கீழேதானே ஓடிக்கொண்டிருக்கின்றன! நீங்கள்*
*(சிந்தித்துப்) பார்க்கவில்லையா?* [52]*இழிவானவரும் தெளிவாகப்*
*பேச முடியாதவருமாகிய இவரை (மோசேயை)விட நான்*
*சிறந்தவனில்லையா?* [53]*(இவர் என்னைவிடச் சிறந்தவர் என்றால்)*
*இவருக்கு ஏன் தங்கக் காப்புகள் அணிவிக்கப்படவில்லை?*
*அல்லது இவருடன் சேர்ந்து வானவர்கள் வர வேண்டாமா?"*
*என்று கேட்டான்.* [54]*(இவ்வாறு) அவன் தன் சமூகத்தினரை*
*மூடர்களாக்கினான். அவர்களும் அவனுக்குக் கட்டுப்பட்டனர்.*
*உறுதியாக அவர்கள் பாவம் புரிவோராகவே இருந்தனர்.*
[55]*(இறுதியில்) அவர்கள் எம்மைச் சினமடையச் செய்தபோது*
*நாம் அவர்களைப் பழிவாங்கினோம். அவர்கள் அனைவரையும்*
*மூழ்கடித்து விட்டோம்.* [56]*அவர்களை (அழிவுப்பாதையின்)*
*முன்னோடிகளாகவும் பின்வருவோருக்குப் படிப்பினையாகவும்*
*ஆக்கினோம்.*

[57]*(நபியே!) மர்யத்தின் மைந்தர் (இயேசு, இணைவைத்து*
*வணங்கப்படுவதற்கான ஓர்) எடுத்துக்காட்டாகக் கூறப்பட்டபோது*
*உம் சமூகத்தினர் (ஆரவாரம் செய்து) எள்ளி நகையாடினர்.*
[58]*"எங்கள் தெய்வங்கள் சிறந்தவையா? அல்லது அவர் சிறந்தவரா?"*
*என்று கேட்டனர். இந்த(த் தவறான) எடுத்துக்காட்டை*
*அவர்கள் உம்மிடம் வீண்வாதம் செய்தற்காகவே கூறுகின்றனர்.*
*அவர்கள் குதர்க்கம் செய்யும் மக்களேயாவர்.* [59]*அவர்(இயேசு)*
*எம் அடியாரே அன்றி(த் தெய்வம்) இல்லை. அவர்மீது நாம்*
*அருள்புரிந்தோம். இஸ்ராயீலின் மக்களுக்கு நாம் அவரை*
*ஒரு முன்னுதாரணமாக்கினோம்.* [60]*நாம் விரும்பியிருந்தால்,*
*(மனிதர்களே!) உங்களுக்குப் பதிலாக வானவர்களை நியமித்து*

பூமியில் அவர்களை வழித்தோன்றலாக ஆக்கியிருப்போம்.
[61]உறுதியாக அவர் மறுமையின் ஓர் அடையாளம் ஆவார். அது
குறித்து நீங்கள் ஐயுற வேண்டாம். என்னையே பின்பற்றுங்கள்.
இதுவே நேர்வழியாகும். [62]சாத்தான் (இந்த நேர்வழியிலிருந்து)
உங்களைத் தடுத்துவிட வேண்டாம். உறுதியாக அவன் உங்களுக்கு
வெளிப்படையான பகைவனாவான்.

[63]இயேசு தெளிவான சான்றுகளுடன் (தம் சமூகத்தாரிடம்)
வந்தபோது “உறுதியாக உங்களிடம் நான் ஞானத்தைக் கொண்டு
வந்திருக்கிறேன்; நீங்கள் முரண்பட்டுக் கொண்டிருக்கும்
சிலவற்றைத் தெளிவுபடுத்துவதற்காகவும் (வந்துள்ளேன்).
ஆகவே அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; எனக்குக் கட்டுப்படுங்கள்;
[64]உறுதியாக அல்லாஹ்தான் என் இறைவனும் உங்கள்
இறைவனுமாவான். எனவே நீங்கள் அவனையே வணங்குங்கள்.
இதுவே நேர்வழியாகும்” என்று (அவர்களிடம்) கூறினார்.
[65]ஆயினும் அந்தக் கூட்டத்தார் (அவர் தொடர்பாகத்)
தங்களிடையே முரண்பட்டுக் கொண்டனர். (ஆகவே அந்தத்)
தீவினைபுரிந்தோர்க்குத் துன்புறுத்தும் வேதனையுடைய நாளில்
கேடுதான்.

[66](மக்காவாசிகளாகிய) இவர்கள் தாம் அறியாதிருக்கும்
நிலையில் திடீரென ‘அந்த நேரம்’ (மறுமை நாள்) வருவதைத்
தவிர (வேறெதனையும்) எதிர் பார்க்கின்றனரா? [67](மறுமையாகிய)
அந்நாளில் இறையச்சமுடையவர்களைத் தவிர நண்பர்கள்
அனைவரும் ஒருவருக்கொருவர் பகைவர்களாகிவிடுவர்.
[68](அந்நாளில் இறையச்சமுடையவர்களிடம்) “என் அடியார்களே!
இன்று உங்களுக்கு எந்த அச்சமும் இல்லை. நீங்கள் கவலைப்படவும்
மாட்டீர்கள்” என இறைவன் கூறுவான். [69]அவர்கள் எமது
வசனங்களின் மீது நம்பிக்கைகொண்டனர். கீழ்ப்படிந்தவர்களாகவும்
இருந்தனர். [70]“நீங்களும் உங்கள் மனைவியரும் சொர்க்கத்தில்
நுழைந்து விடுங்கள் (அங்கு) நீங்கள் மகிழ்விக்கப்படுவீர்கள்”

*(என்றும் கூறப்படும்). [71](உண்பவையும் பருகுபவையும் நிறைந்த) தங்கத் தட்டுகளும் கிண்ணங்களும் அவர்களிடையே சுற்றி வந்து கொண்டிருக்கும். மனம் விரும்புகின்ற, கண்கள் இன்புறுகின்ற அத்தனையும் அங்கு இருக்கும் "நீங்கள் இதில் என்றென்றும் வாழ்ந்திருப்பீர்கள். [72]உங்கள் நற்செயல்களின் காரணமாக உங்களுக்கு உரிமையாக்கப்பட்ட சொர்க்கம் இதுதான். [73]இதில் உங்களுக்குப் பல்வேறு கனி(வகை)கள் உள்ளன. அவற்றிலிருந்து நீங்கள் உண்பீர்கள்" (என்றும் கூறப்படும்)*

*[74]பாவம் புரிந்தோர் உறுதியாக நரகவேதனையில் என்றென்றும் கிடப்பர். [75]அவர்களின் வேதனை குறைக்கப்படமாட்டாது. அங்கு அவர்கள் நம்பிக்கையிழந்தவர்களாக இருப்பர். [76]நாம் அவர்களுக்கு அநீதி இழைக்கவில்லை; ஆனால் அவர்கள்தாம் தீவினையாளர்களாக இருந்தனர். [77](நரகத்தின் காவலரை நோக்கி) "நரகத்தின் காவலரே ! உம் இறைவன் எங்களை அழித்து விடட்டும்" என்று அவர்கள் கதறுவர். அதற்கு அவர், (முடியாது) "இவ்வாறே நீங்கள் (வேதனை அனுபவித்துக் கொண்டு நிலையாகக்) கிடக்க வேண்டியவர்கள்தாம்" என்று கூறுவார். [78]"(நாம்) உங்களிடம் (எம் தூதர் மூலமாகச்) சத்தியத்தைக் கொண்டு வந்தோம். ஆனால் உங்களில் பெரும்பாலோர் சத்தியத்தை வெறுப்பவர்களாகவே இருந்தீர்கள்" என்று கூறப்படும்.*

*[79](நபியே !) அவர்கள் உமக்கெதிராக ஏதேனுமொரு திட்டம் தீட்டியுள்ளனரா ? உறுதியாக நாம் (அதை முறியடிக்கும்) திட்டம் தீட்டியுள்ளோம். [80]அவர்கள் (தங்கள் உள்ளங்களில்) மறைத்து வைத்திருப்பவற்றையும் தம்முள் மறைவாகப் பேசிக் கொள்பவற்றையும் நாம் செவியுறுவதில்லை என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்களா ? இல்லை. உறுதியாக அவர்களுடனேயே இருக்கும் எம் தூதுவர்கள் (வானவர்கள் – அவர்களின் சொல், செயல்கள்) அனைத்தையும் பதிவு செய்து கொண்டிருக்கின்றனர்.*

[81](நபியே! இணைவைப்பாளர்களிடம்) “அளவற்ற
அருளாளனுக்குக் குழந்தை இருந்தால் அதனை வணங்குவோரில்
நானே முதலாமவனாக இருப்பேன்” என்று கூறுவீராக!
[82]வானங்கள், பூமி ஆகியவற்றின் இறைவனும் இறையிருக்கையின்
உரிமையாளனும் ஆகிய அவன் அவர்கள் (பொய்யாகக்) கற்பித்துக்
கூறுபவற்றினின்றும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்.
[83]ஆகவே (நபியே!) அவர்களை விட்டுவிடும். அவர்களுக்கு
வாக்களிக்கப்பட்ட அந்நாளைச் சந்திக்கும்வரை அவர்கள்
வீண்வாதங்களில் மூழ்கியிருக்கட்டும்; விளையாடட்டும்.

[84]அவன்தான் வானத்திலும் இறைவன்; பூமியிலும் இறைவன்.
அவன் ஞானம் மிக்கவன்; முற்றும் அறிந்தவன். [85]வானங்கள்,
பூமி அவ்விரண்டிற்குமிடையே உள்ளவை ஆகியவற்றின் ஆட்சி
யாருக்குரியதோ அவன் பெரும் பேறுடையவன். மறுமை
பற்றிய அறிவு அவனிடமே உள்ளது. அவனிடமே நீங்கள்
திரும்பக்கொண்டு வரப்படுவீர்கள்.

[86]அவனை விட்டுவிட்டு யாரை இவர்கள் இறைஞ்சுகிறார்களோ
அவர்கள் (மறுமையில் இவர்களுக்காக இறைவனிடம்) பரிந்து
பேசும் ஆற்றல் பெற்றவர்கள் அல்லர். ஆயினும் எவர் (ஓரிறை)
உண்மையை அறிந்து, அதற்குச் சாட்சி கூறுவோராகவும்
இருந்தனரோ அவர்களைத் தவிர. (அத்தகையோர் பரிந்துரை
உரிமை பெறுவர்). [87](நபியே!) அவர்களைப் படைத்தவன் யார்
என்று நீர் அவர்களிடம் கேட்டால் ‘அல்லாஹ்’ என்றே கூறுவார்கள்.
(அவ்வாறிருக்க) அவர்கள் (அவனை வணங்குவதிலிருந்து)
எப்படித் (திசை) திருப்பப்படுகிறார்கள்? [88]“என் இறைவா!
இவர்கள் நம்பிக்கைகொள்ளாத மக்களாக இருக்கிறார்கள்” என்று
தூதர் (பணிந்து) உரைப்பதையும் அவன் அறிவான். [89]ஆகவே
(நபியே!) நீர் அவர்களைப் பொறுத்துக்கொள்ளும். ‘உங்கள்மீது
சாந்தி நிலவட்டும்’ என்று கூறும். விரைவில் அவர்கள் (தங்கள்
செயலின் விளைவை) அறிந்து கொள்வார்கள்.

# 44. புகை (அத்துகான்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

*[1]ஹா – மீம்.*

*[2]தெளிவான இவ்வேதத்தின் மீது ஆணையாக! [3]நாம் இதனை
பெரும் பேறுடைய ஓர் இரவில் இறக்கினோம். (ஏனெனில்)
உறுதியாக நாம் (இதன்மூலம்) எச்சரிக்கை செய்வோராவோம்.
[4]அந்த இரவில்தான் அறிவார்ந்த ஒவ்வொரு (காரணமும்) காரியமும்
உறுதி செய்யப்படுகின்றன. [5](அது) எம்முடைய கட்டளைப்படி
(செய்யப்படுவது ஆகும்). உறுதியாக நாம் அவர்களிடம் தூதரை
அனுப்புவோராய் இருந்தோம். [6]அ(வ்வாறு அனுப்புவ)து (நபியே!)
உம் இறைவன் (உலகிற்கு) அருளிய அருட்கொடையாகும்.
உறுதியாக அவன் அனைத்தையும் செவியுறுபவன்; முற்றும்
அறிந்தவன். [7](மனிதர்களே!) நீங்கள் உறுதியான நம்பிக்கை
கொள்வோராக இருப்பின், அவன்தான் வானங்கள், பூமி
அவற்றிற்கிடையே உள்ளவை ஆகியவற்றின் இறைவன் (என்பதை
உணர்வீர்கள்) [8]அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை.
அவன்தான் உயிர்ப்பிக்கிறான், மரணமடையச்செய்கிறான்.
(அவன்தான்) உங்கள் இறைவனும் உங்களுக்கு முன்வாழ்ந்த
மூதாதையர்களின் இறைவனும் ஆவான்.*

*[9]ஆயினும் அவர்கள் ஐயத்தில் கிடந்து விளையாடிக்
கொண்டிருக்கின்றனர். [10]ஆகவே (நபியே!) வானம் தெளிவான
புகையைக் கொண்டுவரும் (மறுமையாகிய) அந்நாளை
எதிர்பார்ப்பீராக! [11]அது மக்களை மூடிக்கொள்ளும் துன்புறுத்தும்
வேதனையாகும். [12](அந்நாளில் மக்கள் இறைவனிடம்) “எங்கள்
இறைவா! எங்கள் வேதனையை அகற்றுவாயாக! உறுதியாக நாங்கள்
நம்பிக்கை கொள்கிறோம்” (என்று கூறுவர்.) [13](அந்தநேரத்தில்)
அவர்களுக்கு அறிவுரை எவ்வாறு பயனளிக்கும்? தெளிவாக
எடுத்துரைக்கும் தூதர் (ஏற்கனவே) அவர்களிடம் வந்து விட்டார்.*

[14]ஆயினும் அவர்கள் அவரைப் புறக்கணித்து "இவர் (எவராலோ
நன்கு) பயிற்றுவிக்கப்பட்டவர்; பைத்தியக்காரர்" என்று கூறினர்.
[15](மறுப்பாளர்களே! நீங்கள் திருந்தக்கூடும் என்று) நாம் சிறிது
காலம் வேதனையை அகற்றுவோம்; எனினும் நீங்கள் மீண்டும்
முந்தைய நிலைக்கே திரும்பி விடுவீர்கள். [16]மிக வலுவாக நாம்
உங்களைப் பிடிக்கும் நாளில் உறுதியாகத் தண்டிப்போம்.

[17]நாம் இவர்களுக்கு முன்னர் ஃபாரோவின் சமூகத்தவரைச்
சோதித்தோம். அவர்களிடம் கண்ணியமான (எம்முடைய)
தூதர் ஒருவர் வந்தார். [18](அவர்) "அல்லாஹ்வின் அடியார்களை
என்னிடம் ஒப்படைத்து விடுங்கள். நான் உங்களுக்கு
(அனுப்பப்பட்ட) நம்பிக்கைக்குரிய தூதராவேன். [19]அல்லாஹ்வுக்கு
எதிராக உங்களை நீங்கள் உயர்வாகக் கருதிக்கொள்ளாதீர்கள்.
நான் உங்களிடம் தெளிவான சான்றைக் கொண்டு வருகிறேன்"
(என்று கூறினார்). [20]"நீங்கள் என்னைக் கல்லெறிந்து
கொல்லாதிருக்கும் பொருட்டு என் இறைவனும் உங்கள்
இறைவனுமாகிய அல்லாஹ்விடம் பாதுகாப்பைக் கோருகிறேன்.
[21]நீங்கள் என்மீது நம்பிக்கை கொள்ளவில்லையாயின் என்னை
விட்டு விலகிவிடுங்கள்" என்றும் அவர் கூறினார்.

[22]பின்னர் மோசே தம் இறைவனிடம், "இவர்கள் பாவம்
புரியும் சமூகத்தினராக உள்ளனர்" என்று (இறைஞ்சி)
முறையிட்டார். [23]"(மோசே! நீர்) என் அடியார்களை இரவோடு
இரவாக (இந்நாட்டைவிட்டு) அழைத்துச் செல்வீராக! உறுதியாக
நீங்கள் (ஃபாரோவின் படையினரால்) பின்தொடரப்படுவீர்கள்.
[24](நீங்கள் செல்வதற்காகப் பிளந்த) கடலைப் பிளவுபட்ட அதே
நிலையிலேயேவிட்டு (முன்னேறிச் சென்று)விடுவீராக! அவர்கள்
மூழ்கடிப்படுவார்கள்" (என்று இறைவன் கூறினான்.) [25]அவர்கள்
எத்தனையோ தோட்டங்களையும் நீரூற்றுகளையும் [26]வயல்களையும்
உயர்தரமான இல்லங்களையும் [27]தாம் அனுபவித்துவந்த

*வாழ்க்கை வசதிகளையும் விட்டுச்சென்றுவிட்டனர்.*
*[28](அவர்களின் முடிவு) அவ்வாறே ஆனது. நாம் அவற்றிற்கு வேறு*
*சமூகத்தாரை வழியுரிமையாளர்களாக்கினோம். [29](அழிந்துபோன)*
*அவர்களுக்காக வானமும் பூமியும் அழவில்லை. (தப்பித்துக்*
*கொள்ள) அவர்களுக்கு காலக்கெடுவும் அளிக்கப்படவில்லை.*

*[30]இழிவுதரும் வேதனையிலிருந்து இஸ்ராயீலின் மக்களை நாம்*
*காப்பாற்றினோம், [31]அதாவது ஃபாரோவிடமிருந்து! உறுதியாக*
*அவன் செருக்குக் கொண்டவனாக, வரம்பு மீறுவோரில்*
*ஒருவனாக இருந்தான். [32]நாம் (இஸ்ராயீலின் மக்களைப் பற்றி)*
*அறிந்திருந்தும் (அவர்கள் காலத்துப்) பிற சமுதாயங்களினும்*
*(மேலாக) அவர்களைத் தேர்ந்தெடுத்தோம். [33]நாம் அவர்களுக்கு*
*(அருட்கொடைகளான) சான்றுகளை அளித்தோம்; அவற்றில்*
*(அவர்களுக்கு) வெளிப்படையான சோதனை இருந்தது.*

*[34](மக்காவின் மறுப்பாளர்களாகிய) இவர்கள் கூறுகின்றனர்:*
*[35]"நம்முடைய முதல் சாவுக்கு அப்பால் வேறொன்றும்*
*இல்லை; நாம் மீண்டும் எழுப்பப்பட மாட்டோம்" [36]இவர்கள்*
*(நம்பிக்கையாளர்களிடம்) நீங்கள் உண்மையாளர்களானால்*
*எங்கள் முன்னோர்களைக் கொண்டுவாருங்கள்" என்றும்*
*(கூறுகின்றனர்.) [37](வலிமையிலும் திறமையிலும்) இவர்கள்*
*சிறந்தவர்களா? அல்லது 'துப்பஉ' சமூகத்தாரும் அவர்களுக்கு*
*முன் இருந்தவர்களும் சிறந்தவர்களா? நாம் அவர்களையே*
*அழித்து விட்டோம். ஏனெனில் அவர்கள் பாவம் செய்தவர்களாக*
*இருந்தனர்.*

*[38]வானங்களையும் பூமியையும் அவையிரண்டிற்கும் இடையில்*
*உள்ளவற்றையும் நாம் விளையாட்டிற்காகப் படைக்கவில்லை.*
*[39]அவற்றை நாம் (சத்தியத்தை வெளிப்படுத்தும்) நோக்கத்துடன்*
*படைத்துள்ளோம். ஆயினும் இவர்களில் பெரும்பாலோர்*
*(இதனை) அறிவதில்லை. [40]உறுதியாகத் தீர்ப்பு நாள்தான்*

இவர்கள் அனைவருக்கும் அறுதியிடப்பட்ட நேரமாகும்
[41]அந்நாளில் எந்த நண்பரும் தம் நெருங்கிய (எந்த) நண்பருக்கும்
பயனளிக்கமாட்டார். அவர்களுக்கு(த் தண்டனையிலிருந்து
தப்ப வேறு) எந்த உதவியும் கிடைக்காது; [42]அல்லாஹ்
அருள்புரிந்தவர்களைத் தவிர! (அவர்களுக்கு உதவி கிடைக்கும்).
அவன் யாவற்றினும் வல்லவன்; நிகரற்ற அன்பாளன்.*

[43]உறுதியாக ('ஸக்கூம்' எனும்) கள்ளிமரம்தான் [44]பாவிகளின்
உணவாகும். [45]அது எண்ணெயின் கசடைப் போலிருக்கும்;
(அவர்களுடைய) வயிறுகளில் கொதிக்கும். [46]வெந்நீர்
கொதிப்பதைப் போல! [47](நரகத்தின் ஓரப்பகுதிக்கு வந்துவிட்ட
ஒருவனைச் சுட்டி) அவனைப் பிடியுங்கள்; நரகத்தின் நடுப்பகுதிக்கு
இழுத்துச் செல்லுங்கள். [48]பின்னர் அவன் தலைமீது கொதிக்கும்
நீரைக்கொட்டி வேதனைப்படுத்துங்கள்" (என்று நரகத்தின்
காவலர்களுக்கு கட்டளையிடப்படும். அவனை நோக்கி, "நீ இதைச்)
[49]"சுவைத்துப் பார். நீ வல்லமை மிக்கவன், கண்ணியமுடையவன்
(என்று உலகில் சொல்லிக் கொண்டிருந்தாய்) அல்லவா?" (என்றும்

---

*வானம், பூமி ஆகியவற்றைக் குறித்து ஏன், முழு பிரபஞ்சத்தைக் குறித்தும் ஒருவர் சிந்திப்பாரேயானால் குறிப்பிட்ட நிச்சயமானதொரு நோக்கத்திற்காக அவை படைக்கப்பட்டுள்ளன என்பது தெளிவாகத் தெரியவரும். அது மட்டும் அப்படி இல்லாவிடில், இந்த உலகில் அற்புதமான கலாச்சாரங்களை மனிதன் உருவாக்கி இருப்பது என்பது இயலாத ஒன்றாகவே இருந்திருக்கும். பிரபஞ்சத்தின் ஒட்டுமொத்தச் செயல்பாடும் பொருளுடையதாக இருப்பது, அதன் முடிவும் பொருளுடையதாகவும் பயனுள்ள விதத்திலுமே இருக்கும் என்பதைக் காட்டுவதாக உள்ளது. பிரபஞ்சத்தின் முடிவு வேறுவிதமாக இருக்கும் என்பது கற்பனை செய்து கூடப் பார்க்க இயலாத ஒன்றாகும். பிரபஞ்சத்தின் முடிவு என்பது மறுமை வாழ்க்கையின் தொடக்கமாகவே இருக்கும். மேலும் மரணத்திற்குப் பின்னரான மறுமை வாழ்க்கை என்பதில் நம்பிக்கை கொள்வது, பிரபஞ்சம் ரீதியில் அர்த்தமுள்ளது என்பதன் நீட்சியே ஆகும். இந்த நிலை சோதனைக்கானதேயாகும். எனவே இந்த உலகு அர்த்தமுள்ளது என்பதில் ஒவ்வொருவருக்கும் பங்கு உண்டு. ஆனால் மறுமை வாழ்க்கையின் அர்த்தமுள்ள தன்மையில் இறைவனின் பார்வையில் தகுதியானவரே தங்கள் பங்கைப் பெறுவர்.

*கூறப்படும்.)* [50]*(நரகவாசிகளை நோக்கி "உலகில்) நீங்கள் எதைக்*
*குறித்து ஐயம் கொண்டிருந்தீர்களோ அ(ந்த வேதனையான)து*
*இதுதான்" (என்று கூறப்படும்.)*

[51]*உறுதியாக இறையச்சமுடையோர் பாதுகாப்பான இடத்தில்*
*(இருப்பர்).* [52]*சோலைகளிலும் நீரூற்றுகளி(ன் சூழலி)லும் (இருப்பர்).*
[53]*மெல்லிய மற்றும் கனமான பட்டாடைகளை அணிந்துகொண்டு*
*எதிரெதிரே அமர்ந்திருப்பர்.* [54]*(சொர்க்கத்தில் அவர்கள் நிலை)*
*இவ்வாறே இருக்கும். மேலும் அழகிய விழிகளையுடைய சொர்க்கக்*
*கன்னிகளை நாம் அவர்களுக்கு மணமுடித்து வைப்போம்.*
[55]*அங்கு நிம்மதியுடன் எல்லாவகையான கனிகளையும் அவர்கள்*
*வேண்டுவர்.* [56]*முதலில் நிகழ்ந்துவிட்ட இறப்பைத்தவிர அங்கே*
*எந்த இறப்பையும் அவர்கள் அனுபவிக்க மட்டார்கள். அவன் நரக*
*வேதனையிலிருந்து அவர்களைப் பாதுகாப்பான்.* [57]*(நபியே!) இது*
*உம் இறைவனின் அருளாகும். இதுவே மாபெரும் வெற்றியாகும்.*
[58]*எனவே, மக்கள் நல்லுணர்வு பெறுவதற்காகவே இவ்வேதத்தை*
*உமது (அரபி) மொழியில் எளிதாக்கியுள்ளோம்.* [59]*(நல்லுணர்வு*
*பெறாவிடில்) அவர்களுக்கு நேரக்கூடிய தண்டனையை) நீர்*
*எதிர்பாரும்; அவர்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர்.*

# 45. முழந்தாளிடுதல் (அல்ஜாஸியா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]*ஹா – மீம்.*

[2]*இது யாவற்றினும் வல்லவனும் ஞானம் மிக்கவனுமாகிய*
*அல்லாஹ்விடமிருந்து அருளப்பெற்ற வேதமாகும்.* [3]*உறுதியாக*
*நம்பிக்கையாளர்களுக்கு வானங்களிலும் பூமியிலும் பல சான்றுகள்*
*உள்ளன.* [4]*(மனிதர்களாகிய) உங்களைப் படைத்திருப்பதிலும்*
*பூமியில் உயிரினங்களைப் பரவச் செய்திருப்பதிலும் உறுதியாக*
*நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு எண்ணற்ற சான்றுகள்*
*உள்ளன.* [5]*இரவு, பகல் மாறிமாறி வருவதிலும் வானத்திலிருந்து*

*அல்லாஹ் வாழ்வாதாரத்தை இறக்கி அதன்மூலம் இறந்த பூமியை உயிர்ப்பிப்பதிலும் காற்றுகளின் சுழற்சியிலும் அறிவுடைய மக்களுக்கு பல்வேறு சான்றுகள் உள்ளன.*
*6இவை இறை வசனங்களாகும். (நபியே! நாம்) இவற்றைச் சத்தியத்துடன் உமக்கு ஓதிக்காட்டுகிறோம். அல்லாஹ்வையும் அவனது வசனங்களையும் விட்டுவிட்டு வேறு எந்தச் செய்தியை இவர்கள் நம்புவார்கள்?*

*7புனைந்துரைக்கும் ஒவ்வொரு பாவிக்கும் கேடுதான்.*
*8அவனிடம் இறைவசனங்கள் எடுத்துரைக்கப்படும்போது அவற்றை அவன் செவியுறுகிறான். பின்னர் அவற்றைக் கேளாதவனைப் போல் செருக்குடன் (இறைமறுப்பில்) பிடிவாதமாக இருக்கிறான். (நபியே! நீர்) அவனுக்குத் துன்புறுத்தும் வேதனை (உண்டு என்பதைப்) பற்றிய 'நற்செய்தி' கூறுவீராக!*
*9எமது வசனங்களிலிருந்து ஏதேனும் ஒன்றை அறிந்துகொள்ளும்போது அதனை அவன் ஏளனமாக எடுத்துக் கொள்கிறான். இத்தகையவர்களுக்கு இழிவுமிக்க வேதனை உண்டு.*
*10அவர்களுக்கு எதிரே நரகம் உள்ளது. (உலகில்) அவர்கள் ஈட்டிய எதுவும் (மறுமையில்) அவர்களுக்குப் பயனளிக்காது. அல்லாஹ்வையன்றி யாரை அவர்கள் பாதுகாவலர்களாக ஏற்றுக் கொண்டார்களோ அவர்களும் பயனளிக்கமாட்டார்கள். அவர்களுக்கு மாபெரும் வேதனை உண்டு.*
*11(குர்ஆன் ஆகிய) இதுவே வழிகாட்டியாகும். தங்கள் இறைவனின் வசனங்களை மறுத்தோருக்குத் துன்புறுத்தும் கடும் தண்டனை உண்டு.*

*12(மனிதர்களே!) அல்லாஹ்தான் கடலை உங்களுக்கு வசப்படுத்திக் கொடுத்திருக்கிறான். அ(வ்வாறு கொடுத்திருப்ப)து அவனது கட்டளைப்படி கப்பல்கள் அதில் செல்வதற்காகவும் (அதன்மூலம்) அவனது அருளை நீங்கள் தேடிக் கொள்வதற்காகவும் நீங்கள் நன்றி செலுத்துவதற்காகவும்தான்.*
*13வானங்களிலும் பூமியிலுமுள்ள அனைத்தையும் தன் அருளால் அவன் உங்களுக்கு வசப்படுத்திக் கொடுத்துள்ளான். இதில் சிந்திக்கக் கூடிய மக்களுக்குப் பல சான்றுகள் உள்ளன.*

[14]நம்பிக்கையாளர்களிடம் நீர் கூறுவீராக! இறைவனின்
(தண்டனைக்குரிய) நாட்களை நம்பாதவர்களை அவர்கள்
மன்னித்து விடட்டும். ஏனெனில், அவன் (அத்தகைய) மக்களுக்கு
அவர்கள் ஈட்டிய(தீய)வற்றுக்கான கூலியை (மறுமையில்)
வழங்குவான். [15]எவர் நற்செயல் புரிகிறாரோ அது அவருக்கே
நன்மையாகும். எவர் தீயசெயல் புரிகிறாரோ அது அவருக்கே
கேடாக அமையும். பின்னர் (நீங்கள் அனைவரும்) உங்கள்
இறைவனின் பக்கமே திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்.

[16]நாம் இஸ்ராயீலின் மக்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும்,
தூதுத்துவத்தையும் வழங்கினோம். அவர்களுக்குத் தூய்மையான
வாழ்வாதாரங்களையும் வழங்கினோம். (அக்கால) உலக
மக்கள் அனைவரையும்விட அவர்களுக்கு மேன்மையை
அளித்திருந்தோம். [17]நாம் அவர்களுக்கு மார்க்கம் குறித்துத்
தெளிவான சான்றுகளைக் கொடுத்திருந்தோம். ஆயினும்
தெளிவான அறிவு தங்களிடம் வந்தபின்னரும், தங்களிடையே
உள்ள பொறாமையின் காரணமாக முரண்பட்டனர். உறுதியாக
உம் இறைவன் அவர்கள் முரண்பட்டுக் கொண்டிருந்தவற்றில்
மறுமை நாளில் அவர்களிடையே தீர்ப்பளிப்பான்.

[18](நபியே!) பின்னர் (இப்போது) மார்க்கத்தின் தெளிவான
வழிமுறையில் நாம் உம்மை நிலைநிறுத்தியிருக்கிறோம்.
எனவே நீர் அதனைப் பின்பற்றுவீராக! அறிவற்ற மக்களின்
மன விருப்பங்களைப் பின்பற்றாதீர்! [19](பின்பற்றினால்)
அல்லாஹ்விடமிருந்து (அவனுடைய தண்டனையிலிருந்து)
சிறிதளவையும் உம்மைவிட்டு அவர்கள் தடுக்கமாட்டார்கள்.
தீவினையாளர்கள் ஒருவருக்கொருவர் தோழர்களாக இருக்கின்றனர்.
அல்லாஹ் இறையச்சமுடையோரின் தோழனாவான். [20]இவ்வேதம்
மக்களுக்குத் தெளிவுதரும் சான்றுகள் (கொண்டது) ஆகவும்,
உறுதியான நம்பிக்கையுடையோருக்கு வழிகாட்டியாகவும்,
அருளாகவும் இருக்கிறது.

*[21]தீவினைகளைச் செய்தோர் தங்களை, நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர்களுக்குச் சமமாக (மறுமையில்) நாம் நடத்துவோம் என்று எண்ணிக் கொண்டார்களா? அவர்களின் வாழ்வும் சாவும் (நம்பிக்கையாளர்களின் வாழ்விற்கும் சாவுக்கும்) சமமாகிவிடுமா? அவர்கள் எடுக்கும் முடிவு கேடானது! [22]அல்லாஹ் வானங்களையும் பூமியையும் உண்மையான நோக்கத்திற்காகவே படைத்துள்ளான். மேலும் ஒவ்வொரு ஆன்மாவுக்கும் அதன் செயல்களுக்கேற்பக் கூலி வழங்குவதற்காகவே (படைத்துள்ளான்). அவற்றுக்கு எந்த அநீதியும் இழைக்கப்படமாட்டாது.*

*[23](நபியே!) தன் மன விருப்பத்தை(த் தான் வணங்கும்) இறைவனாகக் கொண்டவனை நீர் பார்த்தீரா? அல்லாஹ் அறிந்துகொண்டே அவனைக் கெடுவழியில் விட்டுவிட்டான். அவன் செவியின் மீதும் உள்ளத்தின் மீதும் முத்திரையிட்டு விட்டான். அவனது பார்வையின் மீது ஒரு திரையை அமைத்து விட்டான். அல்லாஹ் அவனை(க் கெடுவழியில்) விட்டுவிட்ட பிறகு யார்தான் அவனுக்கு வழிகாட்ட முடியும்? (மறுப்பாளர்களே!) நீங்கள் படிப்பினை பெற மாட்டீர்களா?*

*[24]"நமது இவ்வுலக வாழ்வைத் தவிர வேறு வாழ்வு இல்லை. இங்குத்தான் நாம் இறக்கிறோம்; உயிர் வாழவும் செய்கிறோம். காலத்தைத் தவிர வேறெதுவும் நம்மை அழிப்பதில்லை" என்று அவர்கள் கூறுகின்றனர். இது குறித்த அறிவு அவர்களுக்கு இல்லை. வெறும் ஊகத்தின் அடிப்படையில்தான் அவர்கள் இவ்வாறு கூறுகின்றனர். [25]எமது தெளிவான வசனங்கள் அவர்களிடம் எடுத்துரைக்கப்படும்போது (இறைநம்பிக்கையாளர்களை நோக்கி) "நீங்கள் உண்மையாளர்களாயின் எங்கள் முன்னோர்களை (உயிர்ப்பித்துக்) கொண்டு வாருங்கள்" என்று கூறுவதைத் தவிர அவர்களிடம் வேறு எந்த வாதமும் இருப்பதில்லை. [26](நபியே!) நீர் (அவர்களிடம்) "அல்லாஹ்தான் உங்களை உயிர்ப்பிக்கிறான். பின்னர் அவன்தான் உங்களை இறந்துபோகச் செய்கிறான்.*

*பின்னர் மறுமை நாளன்று அவன் உங்களை ஒன்றுதிரட்டுவான். அதில் எந்த ஐயமுமில்லை" என்று கூறும். ஆயினும் மனிதர்களில் பெரும்பாலோர் இதனை அறிந்துகொள்வதில்லை.*

[27]*வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. 'அந்தநேரம்' (விசாரணை நாள்) நிலைபெறும்போது*
*பொய்யர்கள் இழப்பிற்குள்ளாகிவிடுவர். [28]அப்போது ஒவ்வொரு*
*சமூகத்தினரும் முழந்தாளிட்டிருக்கும் நிலையை (நபியே!) நீர் காண்பீர். ஒவ்வொரு சமூகத்தினரும் அவரவரின் (வினைப்) பதிவேட்டின்பால் அழைக்கப்படுவர். "நீங்கள் (உலகில்) செய்து கொண்டிருந்தவற்றுக்குத்தான் இன்று கூலி கொடுக்கப்படுவீர்கள்.*
[29]*இது உங்களைக் குறித்த உண்மையைப் பேசும் எமது பதிவேடு.*
*நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றையெல்லாம் நாம் பதிவு செய்து கொண்டிருந்தோம்" (என்று கூறப்படும்.)*

[30]*நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தவர்களை (மறுமையில்) அவர்களின் இறைவன் தன் அருளில் நுழையச்*
*செய்வான். இதுவே தெளிவான வெற்றியாகும். [31]ஆனால்*
*மறுப்பாளர்களை நோக்கி, "உங்களிடம் எம் வசனங்கள் ஓதிக்காட்டப்படவில்லையா? ஆயினும் (உலகில்) நீங்கள் செருக்குக் கொண்டிருந்தீர்கள். குற்றம் புரியும் கூட்டமாக*
*இருந்தீர்கள்" (என்று கூறப்படும்). [32]"உறுதியாக அல்லாஹ்வின்*
*வாக்குறுதி உண்மையானது; 'அந்த நேரம்' (மறுமை நாள்) வருவதில் எத்தகைய ஐயமுமில்லை" என்று (உங்களிடம்) கூறப்பட்டபோது, 'அந்த நேரம் என்னவென்று எங்களுக்குத் தெரியாது. நாங்கள் அதனைக் கற்பனை என்றே கருதுகிறோம். அதனை நாங்கள் உறுதியாக நம்புவோராக இல்லை' என்று நீங்கள் கூறினீர்கள்" (எனவும் கூறப்படும்.)*

[33]*அவர்கள் செய்த(தீய)வற்றின் விளைவுகள் (மறுமையில்) அவர்களின்முன் வெளிப்பட்டுவிடும். அவர்கள் எ(ந்)த (வேத)னைக் குறித்து ஏளனம் செய்து கொண்டிருந்தார்களோ*

*அதுவே அவர்களைச் சூழ்ந்துகொள்ளும். 34அவர்களிடம்,
“உங்களது இந்நாளின் சந்திப்பை நீங்கள் மறந்திருந்ததைப்
போலவே நாமும் இன்று உங்களை மறந்து விடுவோம்.
உங்களின் இருப்பிடம் நரகமாகும். உங்களுக்கு உதவி புரிவோர்
யாருமில்லை” என்று கூறப்படும். 35“நீங்கள் இறை வசனங்களை
ஏளனமாக எடுத்துக் கொண்டீர்கள்; உலக வாழ்க்கை உங்களை
ஏமாற்றி விட்டது” என்றும் கூறப்படும். எனவே இன்று அவர்கள்
(நரகமாகிய) அதிலிருந்து விடுவிக்கப்படவும் மாட்டார்கள்;
(பாவமன்னிப்பு வேண்டி) அவர்கள் கூறும் காரணங்களும்
ஏற்றுக் கொள்ளப்படமாட்டா.*

*36அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன்தான்
வானங்களின் இறைவனும் பூமியின் இறைவனும் உலகத்தார்
அனைவரின் இறைவனுமாவான். 37வானங்களிலும் பூமியிலும்
பெருமைகள் அனைத்தும் அவனுக்கே உரியனவாகும். அவன்
யாவற்றினும் வல்லவன்; முற்றும் அறிந்தவன்.*

## 46. மணல்மேடுகள் (அல்அஹ்காஃப்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*1ஹா – மீம்.*

*2இது யாவற்றினும் வல்லவனும் ஞானமிக்கவனுமாகிய
அல்லாஹ்விடமிருந்து அருளப்பெற்ற வேதமாகும். 3நாம்
வானங்களையும் பூமியையும் அவற்றிற்கிடையே உள்ளவற்றையும்
சத்திய(நோக்க)த்துடனும் ஒரு குறிப்பிட்ட (காலத்)
தவணையுடனுமே படைத்துள்ளோம். ஆயினும் மறுப்பாளர்கள்
தங்களுக்கு விடுக்கப்படும் எச்சரிக்கையைப் புறக்கணிக்கின்றனர்.*

*4(நபியே!) நீர் (இவர்களிடம்) கேட்பீராக! “அல்லாஹ்வைத்
தவிர்த்து நீங்கள் இறைஞ்சி வேண்டுகின்றவற்றைப் பற்றிச்
சிந்தித்துப் பார்த்ததுண்டா? அவை பூமியில் எதைப்*

*படைத்துள்ளன என்பதை எனக்குக் காட்டுங்கள். அல்லது வானங்களி(ன் படைப்பி)ல் அவற்றுக்குப் பங்குண்டா? நீங்கள் உண்மையாளர்களாயின் (உங்கள் கொள்கைக்கு ஆதாரமாக) முன்பு உள்ள ஒரு வேதத்தையோ (முன்னோரின் கல்வியில்) எஞ்சியுள்ள ஞானத்தையோ என்னிடம் கொண்டு வாருங்கள்"*
*[5]அல்லாஹ்வையன்றி மற்றவர்களிடம் இறைஞ்சி வேண்டுபவர்களைவிட மிகப்பெரும் முறைகேடர்கள் யார்? மறுமைநாள் வரை (அழைத்தாலும்) அவர்கள் இவர்களுக்குப் பதில் அளிக்கமாட்டார்கள். (பொய்த்தெய்வங்களான) அவர்கள், (இணைவைப்பாளரான) இவர்கள் தம்மை இறைஞ்சி அழைப்பதை அறியமாட்டார்கள்.*

*[6](மறுமையில்) மனிதர்கள் அனைவரும் ஒன்றுதிரட்டப்படும்போது (கடவுளாக வழிபடப்பட்ட) அவர்கள், (வழிபட்ட) இவர்களுக்குப் பகைவர்களாகிவிடுவர். தம்மை (இவர்கள்) வணங்கிக் கொண்டிருந்ததையும் அவர்கள் மறுத்து விடுவார்கள்.*
*[7]எமது தெளிவான வசனங்கள் இவர்களிடம் ஓதிக் காட்டப்படும்போது தம்மிடம் வந்த (அந்தச்) சத்தியத்தை மறுத்து "இது தெளிவான சூனியமாகும்" என்று கூறுகின்றனர்.*
*[8]அல்லது "இதனை அவர் தாமே புனைந்து கொண்டார்" என்று இவர்கள் (உம்மைப்பற்றிக்) கூறுகின்றனரா? (நபியே!) நீர் இவர்களிடம் "நான் இதனை இட்டுக்கட்டியிருந்தால் அல்லாஹ்விடமிருந்து என்னைக் காப்பாற்றும் ஆற்றல் சிறிதும் உங்களுக்கு இல்லை. நீங்கள் ஈடுபட்டிருக்கும் (பொய்ப்) புனைவுரைகளை அவன் நன்கறிந்தவன். எனக்கும் உங்களுக்குமிடையே சாட்சியாளனாக இருக்க அவன்தான் போதுமானவன். அவன் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்" என்று கூறுவீராக!*

*[9](நபியே! மேலும் இவர்களிடம்) "தூதர்களில் நான் ஒன்றும் புதுமையானவன் அல்லன். (எனக்கு முன்னரும் தூதர் பலர் வந்து ஓரிறைக் கொள்கையையே பரப்புரை செய்து வந்துள்ளனர்.)*

*அன்றி எனக்கும் உங்களுக்கும் என்ன நேரும் என்பதை நான் அறிய மாட்டேன். (இறைவனிடமிருந்து) எனக்கு அறிவிக்கப்படும் இறைச் செய்தியைத் தவிர வேறெதையும் நான் பின்பற்றமாட்டேன். நான் வெளிப்படையாக எச்சரிக்கை செய்பவனே அன்றி வேறல்லன்" என்று கூறுவீராக.*
*[10](நபியே!) நீர் (இவர்களிடம்) கூறும்: "இ(வ்வேதமான)து அல்லாஹ்விடமிருந்து வந்திருந்தும் இதனை நீங்கள் மறுத்துவிட்டால் உங்களின் நிலை என்னவாகும் என்பதை நீங்கள் சிந்தித்துப் பார்த்தீர்களா? இஸ்ராயீலின் வழித்தோன்றல்களில் ஒருவர் (முந்தைய வேதங்களுடன் இவ்வேதம் ஒத்திருப்பதற்குச்) சாட்சி கூறி இதன்மீது நம்பிக்கையும் கொண்டிருக்கும் நிலையில் நீங்கள் செருக்குக் கொண்டுள்ளீர்கள்" உறுதியாக அல்லாஹ் (இத்தகைய) தீவினையாளர்களுக்கு நேர்வழி காட்டமாட்டான்.*

*[11]மறுப்பாளர்கள் நம்பிக்கையாளர்களைக் குறித்து, "இது (குர்ஆன்) நன்மையானதாக இருந்திருந்தால், இதன்மீது (நம்பிக்கைகொள்வதில்) இவர்கள் எங்களை முந்தியிருக்க மாட்டார்கள்" (நாங்கள் அல்லவோ முந்தியிருப்போம்!) என்று கூறுகின்றனர். அவர்கள் இ(வ்வேதத்)திலிருந்து நேர்வழி பெறாமையால் "இது பழங்காலக் கட்டுக்கதைதான்" என்றே கூறுகின்றனர்.*

*[12]இதற்கு முன்னர் மோசேவுக்கு வழங்கப்பட்ட வேதம் வழிகாட்டியாகவும் அருளாகவும் இருந்தது. (குர்ஆன் ஆகிய) இது அரபி மொழியில் அமைந்து (முந்தைய வேதங்களை) உண்மைப்படுத்தும் வேதமாகும். இது தீவினையாளர்களை எச்சரிப்பதற்காகவும் நன்மை செய்வோருக்கு நற்செய்தி கூறுவதற்காகவும் (அருளப்பெற்றுள்ளது.)*
*[13]உறுதியாக 'எங்கள் இறைவன் அல்லாஹ்தான்' என்று கூறிப் பின்னர் அதில் உறுதியாக நிலைத்து நிற்கின்றவர்களுக்கு எந்த அச்சமுமில்லை; அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.*
*[14]அவர்கள்தாம் சொர்க்கவாசிகள். உலகில் அவர்கள் செய்து கொண்டிருந்த நற்செயல்களுக்குக் கூலியாக என்றென்றும் அங்கு வாழ்வர்.*

15நாம் தாய் தந்தையரிடம் நல்லமுறையில் நடந்துகொள்வதை
மனிதனுக்கு விதியாக்கி அறிவுறுத்தினோம். அவனது
தாய் அவனைத் துன்பத்துடனே சுமந்து துன்பத்துடனே
பெற்றெடுத்தாள். (கருவில்) அவனைச் சுமந்ததும் அவனுக்குப்
பால்குடியை மறக்கடித்ததும் (ஆகிய காலம்) முப்பது மாதங்கள்
ஆகும். அவன் பருவமெய்தி (முழு வலிமை பெற்று) நாற்பது
வயதை அடைந்தவுடன், "என் இறைவா! நீ எனக்கும் என் தாய்
தந்தையர்க்கும் புரிந்த அருளுக்காக நன்றி செலுத்துவதற்கும்
உன் உவப்புக்குரிய நற்செயல்களைச் செய்வதற்கும் எனக்கு
அருள்வாயாக! என் வழித்தோன்றல்களையும் சீர்ப்படுத்துவாயாக!
உறுதியாக நான் உன்பால் மீண்டுவிட்டேன்; உறுதியாக நான்
கீழ்ப்படிந்து வாழ்வோரில் ஒருவனாகி விட்டேன்" என்று
இறைஞ்சுகிறான். 16நாம் இத்தகையோரின் நற்செயல்களை
ஏற்றுக்கொண்டு இவர்களின் தீமைகளை மன்னித்துவிடுவோம்.
இவர்களுக்கு அளிக்கப்பட்ட உண்மையான வாக்குறுதியின்படி
இவர்கள் சொர்க்கவாசிகளுடன் இருப்பர்.

17ஆனால் ஒருவன் தன் பெற்றோரிடம் "சீ உங்கள் இருவர்
மீதும் இழிவு உண்டாகட்டும். நான் (இறந்தபின்னர் மீண்டும்)
எழுப்பப்படுவேன் என்று (என்னை) மிரட்டுகிறீர்களா? எனக்கு
முன்னர் எத்தனையோ சமூகத்தார் (வாழ்ந்து) சென்று விட்டனர்"
என்று கூறுகிறான். அப்போது (அவன் பெற்றோர்) அல்லாஹ்விடம்
(அவனுக்காக) மன்றாடியவர்களாக, "உனக்குக் கேடுதான்.
நம்பிக்கைகொள்; அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது"
என்று கூறுகின்றனர். (ஆயினும்) அவனோ "இவையெல்லாம்
முன்னோர்களின் கட்டுக்கதைகளேயன்றி வேறில்லை" என்று
கூறுகிறான். 18இவர்களுக்கு முன் வாழ்ந்து சென்ற (பாவிகளான)
ஜின், மனித சமூகங்களோடு இத்தகைய மக்கள்மீதும் (இறை
வேதனை வந்திறங்கும் என்ற) வாக்கு உறுதியாகி விட்டது.
உறுதியாக இவர்கள் பெரும் இழப்பிற்குள்ளாகி விட்டனர்.

*[19](நல்லோர் தீயோர் ஆகியவர்களுள்) ஒவ்வொருவருக்கும் அவரவர் செயல்களுக்கேற்பத் தகுந்த படிநிலைகள் உள்ளன. அல்லாஹ் அவர்களுக்கு (அவர்களின் செயல்களுக்கேற்ற) கூலியை முழுமையாக வழங்கிவிடுவான். அவர்கள் (நன்மையைக் குறைத்தோ தீமையை மிகுதிப்படுத்தியோ) அநீதி இழைக்கப்படமாட்டார்கள்.*
*[20](ஓரிறை)மறுப்பாளர்கள் நரகத்தின்முன் கொண்டுவரப்படும் நாளில் “நீங்கள் உங்களுக்குக் கிடைத்த நல்லவற்றையெல்லாம் (நல்லவகையில் பயன்படுத்தாமல்) வீணடித்து அவற்றின்மூலம் உலக வாழ்வில் இன்பம் அனுபவித்து விட்டீர்கள். ஆகவே நீங்கள் பூமியில் முறையின்றிச் செருக்குக் கொண்டும் பாவம் செய்து கொண்டும் இருந்ததால் இன்று இழிவுமிக்க வேதனைதான் உங்களுக்குக் கூலியாக வழங்கப்படும்” என்று அவர்களிடம் கூறப்படும்.*

*[21](நபியே!) ஆது (சமூகத்தாரு)டைய சகோதரரை (ஹூதை இவர்களுக்கு) நினைவுபடுத்துவீராக! அவர் தம் சமூகத்தினரை மணல்மேடுகளில் நின்று எச்சரித்தார். அவருக்கு முன்னரும் பின்னரும் எச்சரிக்கை செய்பவர்கள் வந்து சென்றுள்ளனர். (அவர்) “நீங்கள் அல்லாஹ்வைத் தவிர வேறு எவரையும் வணங்காதீர்கள். (வணங்கினால்) உங்களுக்கு உறுதியாக வரவிருக்கும் கடினமான நாளின் வேதனை குறித்து நான் அஞ்சுகிறேன்” (என்றார்).*
*[22]அவர்கள், “எங்களுடைய தெய்வங்களை விட்டு எங்களைத் திசைதிருப்பிவிடவா எங்களிடம் வந்திருக்கிறீர்? நீர் உண்மையாளராக இருந்தால் எந்த வேதனையைக் குறித்து அச்சுறுத்துகின்றீரோ அதனை எங்களிடம் கொண்டு வாரும்” என்று கூறினர்.*
*[23]அதற்கு அவர், “அது பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது. எதனுடன் நான் உங்களிடம் அனுப்பப்பட்டுள்ளேனோ அதைத்தான் நான் எடுத்துரைக்கிறேன். ஆயினும் நீங்கள் அறிவற்ற மக்களாக இருப்பதைக் காண்கிறேன்” என்று கூறினார்.*

24(இறை வேதனை) அடர்ந்த மேகமாகத் தங்களின்
பள்ளத்தாக்குகளை நோக்கி வருவதைக் கண்ட அவர்கள் “இது
எங்களுக்கு மழை தரும் மேகம்” என்று கூறினர். “அன்று.
நீங்கள் அவசரப்பட்டீர்களே, அதுதான் இது. இது துன்புறுத்தும்
வேதனையை உள்ளடக்கிய (புயற்)காற்றாகும். 25தன் இறைவனின்
கட்டளைப்படி இது அனைத்தையும் அழித்துவிடும் (என்று
அவர் கூறினார்) அவ்வாறே (மறுநாள்) பொழுது விடிந்தபோது
அவர்களின் வீடு(களின் சிதைவு)களைத் தவிர வேறொன்றும்
காணப்படாதவாறு அவர்கள் (அழிவிற்குள்) ஆயினர். இவ்வாறே
நாம் குற்றவாளிகளைத் தண்டிக்கிறோம்.

26(மக்காவாசிகளே!) உங்களுக்கு வழங்காத
வசதிவாய்ப்புகளை(யும் ஆற்றல்களையும்) நாம் அவர்களுக்கு
வழங்கியிருந்தோம். (மேலும்) அவர்களுக்குச் செவிகளையும்
கண்களையும் உள்ளங்களையும் அளித்திருந்தோம். ஆயினும்
அவர்கள் இறை வசனங்களை மறுத்துக்கொண்டிருந்ததன்
காரணமாக, அவர்களின் செவிப்புலனும் பார்வையும்
உள்ளங்களும் எந்தத் தண்டனையும் அவர்களை அணுகாமல்
தடுக்கவில்லை. அவர்கள் ஏளனம் செய்துகொண்டிருந்த
(இறைத்தண்டனையாகிய) அதுவே அவர்களைச் சூழ்ந்து
கொண்டது. 27(மக்காவாசிகளே!) நாம் உங்களைச் சுற்றியிருந்த
(பல) ஊர்களை அழித்திருக்கின்றோம். அவர்கள் (நேர்வழிக்குத்)
திரும்பிவிடும் பொருட்டு மீண்டும் மீண்டும் எம் சான்றுகளைத்
தெளிவுபடுத்தினோம். 28இறைவனை நெருங்க (உதவுபவை எனக்
கருதி) அல்லாஹ்வையன்றி அவர்கள் ஏற்படுத்திக்கொண்ட
தெய்வங்கள் ஏன் அவர்களுக்கு உதவிபுரியவில்லை? மாறாக
அவையனைத்தும் அவர்களை விட்டு மறைந்துவிட்டன. இதுவே
அவர்களின் பொய்யுரை, புனைந்துரைகளின் விளைவாகும்.

29(நபியே!) ஜின்களில் ஒரு குழுவினரை – அவர்கள்
குர்ஆனைச் செவியுற வேண்டும் என்பதற்காக நாம் உம்மிடம்
கொண்டுவந்த நிகழ்வை நினைவூட்டுவீராக! (நீர் குர்ஆனை
ஓதிக் கொண்டிருந்த அந்த இடத்திற்கு) அவர்கள் வந்தபோது

'அமைதியாக இரு(ந்து கேளு)ங்கள்' என்று தம்மிடையே
கூறிக் கொண்டனர் (பின்னர்) அது (ஓதி) முடிக்கப்பட்டதும்
தம் இனத்தாரிடம் எச்சரிக்கை செய்வதற்காகத் திரும்பினர்.
30(தம் இனத்தவர்களை நோக்கி) "எங்கள் இனத்தவர்களே!
"நாங்கள் மோசேவுக்குப்பின் அருளப்பட்ட ஒரு வேதத்தைச்
செவியுற்றோம்! அது தனக்கு முன் (இறைவேதங்களாக)
வந்தவற்றை உண்மைப்படுத்துகிறது; அது உண்மைக்கும் மிக
நேரான பாதைக்கும் வழிகாட்டுகிறது. 31எங்கள் இனத்தவர்களே!
அல்லாஹ்வின்பால் அழைப்பவரின் அழைப்பை ஏற்று அவர்மீது
நம்பிக்கைகொள்ளுங்கள். அவன் உங்கள் பாவங்களை மன்னித்துத்
துன்புறுத்தும் வேதனையிலிருந்து உங்களைப் பாதுகாப்பான்"
என்று கூறினர். 32அல்லாஹ்வின்பால் அழைப்பவரின் அழைப்பை
ஏற்றுக்கொள்ளாதவர் உலகில் அல்லாஹ்விடமிருந்து தப்பிவிட
முடியாது. அவனையன்றி அவர்களுக்கு வேறு பாதுகாவலர்களும்
இல்லை. இப்படிப்பட்டவர்கள் வெளிப்படையாகக் கெடுவழியில்
இருக்கின்றனர்.

33வானங்களையும் பூமியையும் படைத்து, அவற்றைப்
படைப்பதில் சோர்வடைந்துவிடாத அல்லாஹ், இறந்தவர்களை
மீண்டும் உயிர்கொடுத்து எழுப்பவும் ஆற்றலுடையவன்
என்பதை அவர்கள் அறிந்துகொள்ளவில்லையா? ஆம். அவன்
எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன். 34மறுப்பாளர்கள்
நரகத்திற்குமுன்பு கொண்டுவரப்படும் நாளில் "இது உண்மை
அல்லவா?" என்று அவர்களிடம் கேட்கப்படும். அதற்கு
அவர்கள், "ஆம். எங்கள் இறைவன்மீது சத்தியமாக! (இது
உண்மை நிகழ்வுதான்)" என்று கூறுவர். அதற்கு அவன், "நீங்கள்
(உண்மையை) மறுத்துக் கொண்டிருந்ததால் இவ்வேதனையை
அனுபவியுங்கள்" என்று கூறுவான்.

35(எனவே, நபியே!) மனஉறுதிமிக்க தூதர்கள் பொறுத்துக்
கொண்டதுபோல் நீரும் பொறுமையுடன் இருப்பீராக!
அவர்களுக்குரியதைக் குறித்து அவசரம் காட்டாதீர்! அவர்களுக்கு

*எச்சரிக்கப்பட்டதை அவர்கள் காணும் நாளில் பகலின் சிறிதளவு நேரத்திற்குமேல் (பூமியில் தாம்) தங்கியிருக்கவில்லை என்றே அவர்களுக்குத் தோன்றும். (நபியே!) இதனை (நீர் அவர்களுக்கு) எடுத்துரைத்துவிட வேண்டும் (என்பதே உமது பொறுப்பாகும்). கீழ்ப்படியாத மக்களையன்றி (வேறெவரும்) அழிக்கப்படுவார்களா, என்ன?*

# 47. முஹம்மத் (முஹம்மத்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]சத்தியத்தை மறுத்து இறைவழியிலிருந்து (மக்களைத்)*
*தடுத்துக் கொண்டிருந்தவர்களின் (நல்லறச்) செயல்களை*
*அவன் பயனற்றவையாக்கி விட்டான். [2]யார் நம்பிக்கைகொண்டு*
*நற்செயல் புரிந்து முஹம்மத் மீது அருளப்பட்ட(வேதத்)தை*
*தங்கள் இறைவனிடமிருந்து வந்துள்ள உண்மை என நம்பிக்கை*
*கொள்கிறார்களோ அவர்களின் பாவங்களைப் போக்கி*
*அவர்களின் நிலையையும் அவன் சீராக்குவான். [3]இதற்குக்*
*காரணம் மறுப்பாளர்கள் பொய்மையைப் பின்பற்றினார்கள்;*
*நம்பிக்கையாளர்கள் தங்கள் இறைவனிடமிருந்து வந்துள்ள*
*மெய்ம்மையைப் பின்பற்றினார்கள் என்பதேயாகும். இவ்வாறே*
*அல்லாஹ் மக்களுக்கு ஒப்பீட்டின்மூலம் அவர்களின்*
*நிலைமைகளை எடுத்துரைக்கிறான்.*

*[4](நம்பிக்கையாளர்களே!) மறுப்பாளர்களை நீங்கள் (போர்க்களத்தில்) சந்திக்க நேர்ந்தால் அவர்களின் கழுத்துகளை வெட்டுங்கள். அவர்களை நீங்கள் முறியடித்துவிட்டால் (எஞ்சியவர்களைச் சிறை) பிடித்து வலுவாகக் கட்டுங்கள். பின்னர் அவர்கள் மீது இரக்கம் காட்டியோ ஈட்டுத்தொகை பெற்றோ அவர்களை விடுவித்துவிடலாம். இது போர் (தன் ஆயுதச்) சுமைகளை இறக்கி முடியும் வரையிலாகும். இதுதான் (இறைவனின் கட்டளை). அல்லாஹ் விரும்பியிருந்தால்*

(போரின்றி) அவனே அவர்களைப் பழிதீர்த்திருப்பான். ஆயினும்
(போரின்மூலம்) அவன் உங்களில் சிலரை (வேறு) சிலரைக்
கொண்டு சோதிக்கிறான். இறைவழியில் கொல்லப்பட்டவர்களின்
செயல்களை அவன் ஒருபோதும் வீணாக்கிவிடமாட்டான்.*
5அவர்களுக்கு (நல்)வழிகாட்டி அவர்களின் நிலைமையை
அவன் சீராக்குவான். 6அவன் அவர்களுக்கு அறிமுகப்படுத்தி
வைத்திருந்த சொர்க்கத்தில் அவர்களை நுழையச் செய்வான்.

7நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வு(டைய மார்க்கத்து)க்கு
உதவி புரிந்தால் அவன் உங்களுக்கு உதவி புரிவான்; உங்க(ள்
பாதங்க)ளை உறுதிப்படுத்துவான். 8மறுப்பாளர்களுக்குக்கேடுதான்!
அல்லாஹ் அவர்களின் (நற்)செயல்களை(யும்) பயனற்றவையாக்கி
விட்டான். 9ஏனெனில் அல்லாஹ் இறக்கி அருளியதை அவர்கள்
வெறுத்தனர். ஆகவே அவன் அவர்களின் நல்லறங்களைப்
பயனற்றவையாக்கி விட்டான். 10அவர்கள் பூமியில் பயணம்
செய்து தங்களுக்கு முன்பு (மறுப்பாளர்களாக) இருந்தவர்களின்
முடிவு எப்படியிருந்தது என்பதைப் பார்க்கவில்லையா? அல்லாஹ்
அவர்களை அடியோடு அழித்து விட்டான். அவை போன்ற
முடிவுகள்தாம் இவ்விறைமறுப்பாளர்களுக்கும் நேரும். 11இதற்குக்
காரணம், அல்லாஹ் நம்பிக்கையாளர்களின் பாதுகாவலனாக
இருக்கிறான்; மறுப்பாளர்களுக்கோ பாதுகாவலர் யாரும் இல்லை
(என்பதேயாகும்.)

12நம்பிக்கைகொண்டு, நற்செயல்கள் புரிவோரை உறுதியாக
அல்லாஹ் சொர்க்கச் சோலைகளில் நுழையச் செய்வான்;
அவற்றிடையே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். மறுப்பாளர்கள்
(உலக இன்பங்களை) அனுபவித்துக் கொண்டிருக்கின்றனர்;
கால்நடைகளைப் போல் தின்று கொண்டிருக்கின்றனர். (எனினும்)
நரகமே அவர்களின் (இறுதி) உறைவிடமாகும். 13நபியே!

*முன்னுரை காண்க : பக்கம் எண் XX

*உம்மை வெளியேற்றிய உமது ஊரை விடவும் வலிமைமிக்க எத்தனையோ ஊர்கள் இருந்திருக்கின்றன; அவ்வூர்(மக்)களை அழித்திருக்கின்றோம். (அப்போது) அவர்களுக்கு உதவுவோர் யாருமே இல்லை.*

[14]*தம் இறைவனின் தெளிவான ஆதாரத்தின்மீது இருப்பவர், தம் தீயசெயல்கள் அழகாகக் காட்டப்பட்டுத் தம் மன விருப்பங்களைப் பின்பற்றுவோரைப் போல் ஆகிவிடுவாரா?*
[15]*இறையச்சமுடையோருக்கு வாக்களிக்கப்பட்டுள்ள சொர்க்கத்தின் தன்மை இதுதான்: அங்குத் தூய நீரோடும் ஆறுகளும், சிறிதும் சுவைமாறாத பாலாறுகளும், அருந்துபவர்களுக்கு இன்பமளிக்கும் மது ஆறுகளும், தூய்மையான தேனாறுகளும் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்களுக்கு எல்லாவகையான கனிவகைகளும் உண்டு. (எல்லாவற்றுக்கும் மேலாகத்) தங்கள் இறைவனிடமிருந்து (பாவ)மன்னிப்பும் அவர்களுக்கு உண்டு. (இத்தகைய பேரின்பம் பெற்றவர்களுக்கு) என்றென்றும் நரகத்தில் கிடப்போர். கொதிநீர் புகட்டப்பட்டுக் குடல்கள் துண்டு துண்டாவோர் ஒப்பாவார்களா?*

[16]*(நபியே!) அவர்களில் சிலர் உமது பேச்சைக் காது கொடுத்துக் கேட்கின்றனர். ஆயினும் அவர்கள் உம்மை விட்டுச் சென்றதும் (நம்பிக்கையாளர்களாகிய வேத) அறிவு வழங்கப்பட்டவர்களிடம் (ஏளனமாக) “இவர் இப்போது என்ன சொன்னார்?” என்று கேட்கின்றனர். அல்லாஹ் இத்தகையோரின் உள்ளங்களில் முத்திரையிட்டுவிட்டான். அவர்கள் தம் (கீழான) மனவிருப்பங்களையே பின்பற்றிச் செல்கின்றனர்.*
[17]*ஆயினும், நேர்வழியைப் பின்பற்றியவர்களை அல்லாஹ் அவ்வழியில் மேன்மேலும் முன்னேறச் செய்கிறான். அவர்களிடம் இறையச்சத்தையும் உண்டாக்குகிறான்.*

[18]*(நபியே!) மறுமை நாள் தங்களிடம் திடீரென வருவதைத்தவிர (வேறெதனையும்) அவர்கள் எதிர்பார்க்கிறார்களா? அதனுடைய*

அடையாளங்கள் வெளிப்பட்டு விட்டன. அது அவர்களிடம் வந்துவிட்டதெனில் அவர்களுக்கான அறிவுரை அவர்களுக்கு எவ்வாறு பயனளிக்கும்? [19](நபியே!) உறுதியாக அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை என்பதை நன்கறிந்து கொள்வீராக! உமது தவறுகளுக்காகவும் நம்பிக்கைகொண்ட ஆண்கள், பெண்களுக்காகவும் பாவமன்னிப்புக் கோருவீராக! (நம்பிக்கையாளர்களே!) உங்களின் (பகற்பொழுது) இயக்கங்களையும் (இரவுபொழுதுத்) தங்குமிடங்களையும் அல்லாஹ் நன்கறிவான்.

[20](போர் புரிவது குறித்து) "ஏதேனும் ஓர் அத்தியாயம் அருளப்படக் கூடாதா?" என்று நம்பிக்கையாளர்கள் கேட்கிறார்கள். அவ்வாறே போர் புரிவது குறித்து உறுதியான ஓர் அத்தியாயம் அருளப்பட்டால், உள்ளங்களில் நோயுள்ளவர்கள், சாவின் பேரச்சத்தால் மயக்கமுற்றவர்கள் பார்ப்பதுபோல (நபியே!) உம்மை பார்ப்பதைக் காண்பீர். ஆகவே அவர்களுக்குக் கேடுதான். [21]"(உமக்குக்) கட்டுப்பட்டோம்" என்று கூறுவதும் (உம்மிடம்) கண்ணியமாகப் பேசுவதும்தாம் (அவர்களுக்கு நல்லது. போருக்குப் புறப்பட வேண்டும் எனும்) கட்டளை உறுதியான பின்னர் அவர்கள் அல்லாஹ்விடம் உண்மையாக நடந்திருந்தால் அது அவர்களுக்கு நன்மையாக அமைந்திருக்கும்.
[22](நயவஞ்சகர்களே!) நீங்கள் (போருக்கு வராமல்) புறக்கணித்துச் சென்றால் நீங்கள் பூமியில் குழப்பம் உண்டாக்கவும் உறவுகளைத் துண்டித்து விடவும் முனைவீர்கள் அல்லவா!
[23]இத்தகையவர்களைத்தான் அல்லாஹ் சபித்து விட்டான். அவர்களைச் செவிடாக்கி அவர்களின் கண்களையும் குருடாக்கி விட்டான்.

[24]அவர்கள் குர்ஆனை ஆழ்ந்து சிந்திக்க வேண்டாமா? அல்லது அவர்களுடைய உள்ளங்களின் மீது பூட்டுக்கள் போடப்பட்டுள்ளனவா? [25]நேர்வழி தெளிவாகிவிட்ட பின்னரும் யாரெல்லாம் (நம்பிக்கையை விட்டுப்) பின்வாங்கித்

*திரும்பிச் சென்றார்களோ அவர்களுக்கு (அவர்களின் தவறுகளைச்) சாத்தான் அழகானவையாகக் காட்டி விட்டான்; அல்லாஹ்வும் அவர்களுக்குக் காலநீட்டிப்பு வழங்கிவிட்டான்.*
*[26]இதற்குக் காரணம், அவர்கள் அல்லாஹ் அருளியவற்றை வெறுப்பவர்களிடம் "நாங்கள் சில விஷயங்களில் உங்களுக்குக் கட்டுப்படுவோம்" என்று (மறைவில்) கூறியதுதான். அல்லாஹ் அவர்களின் மறைவுரைகளை நன்கறிவான். [27]வானவர்கள்*
*அவர்களின் முகங்களிலும் முதுகுகளிலும் அடித்து உயிர்களைக் கைப்பற்றும்போது (அவர்களின்நிலை) எவ்வாறிருக்கும்? [28]இதற்குக்*
*காரணம் அவர்கள் அல்லாஹ்வுக்குச் சினமூட்டக்கூடியதைப் பின்பற்றியதும் அவனுக்கு உவப்பானதை வெறுத்ததுமாகும். ஆகவே அவன் அவர்களின் (நற்)செயல்களை வீணாக்கி விட்டான்.*

*[29]உள்ளங்களில் (நயவஞ்சகம் எனும்) நோயுள்ளவர்கள் தங்களின் தீய எண்ணங்களை அல்லாஹ் (நம்பிக்கையாளர்களுக்கு) வெளிப்படுத்திக் காட்டிவிடமாட்டான் என்று எண்ணிக் கொண்டார்களா? [30](நபியே!) நாம் விரும்பியிருந்தால்*
*அவர்களை உமக்குக் காட்டியிருப்போம். ஆயினும் அவர்களின் (முகக்) குறிகளைக் கொண்டே நீர் அவர்களை உறுதியாக அறிந்துகொள்ளலாம். அவர்கள் பேசும் தொனியிலும் அவர்களை நீர் அறிந்து கொள்வீர். (நயவஞ்சகர்களே!) உங்களின் செயல்களை அல்லாஹ் நன்கறிவான்.*

*[31](நம்பிக்கையாளர்களே!) உங்களில் அவனது பாதையில் கடுமையாகப் பாடுபடுவோர் யார், உறுதியுடன் நிலைத்துநிற்போர் யார் என்பதை நாம் அறியும்வரை உறுதியாக உங்களைச் சோதிப்போம். உங்களின் (சொல், செயல் ஆகிய) நிலைகளையும் நாம் சோதிப்போம். [32]தங்களுக்கு நேர்வழி (இன்னதென்று)*
*தெளிவான பின்னரும் மறுத்து (மக்களையும்) இறைவழியைவிட்டுத் தடுத்து, தூதரை(க் கடுமையாக) எதிர்ப்போர் அல்லாஹ்வுக்கு*

*எந்தத் தீங்கும் இழைத்துவிட முடியாது. அவர்கள் (நல்லறங்கள் செய்திருந்தால் அச்)செயல்களை அவன் பயனற்றவையாக்கி விடுவான்.*

[33]*நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படியுங்கள்; அவனது தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். உங்களது (நற்) செயல்களைப் பாழாக்கி விடாதீர்கள்* [34]*சத்தியத்தை மறுத்து இறைவழியை விட்டு மக்களைத் தடுத்துப் பின்னர் மறுப்பு நிலையிலேயே இறந்தும் போகிறவர்களை அல்லாஹ் ஒருபோதும் மன்னிக்கமாட்டான்.* [35]*நீங்கள் (போரில்) துணிவிழந்து (உங்கள் எதிரிகளிடம்) சமாதானத்தைக் கோராதீர்கள். நீங்கள்தாம் மேலோங்கி நிற்பீர்கள். அல்லாஹ் (உங்களின் வெற்றிக்கு உதவ) உங்களுடன் இருக்கிறான். அவன் உங்களின் நற்செயல்(களின் பயன்)களை ஒருபோதும் குறைத்துவிடமாட்டான்.*

[36]*இவ்வுலக வாழ்வெல்லாம் விளையாட்டும், வேடிக்கையுமேயாகும். நீங்கள் நம்பிக்கைகொண்டு அவனுக்கு அஞ்சி நடந்துகொண்டால் அவன் உங்களுக்குரிய கூலியை வழங்குவான். உங்களிடம் உள்ள பெரும் செல்வத்தைக் கேட்கமாட்டான்.* [37]*அவன் உங்களிடம் உள்ள செல்வம் அனைத்தையும் கேட்டு வற்புறுத்தினாலும் நீங்கள் கஞ்சத்தனமே செய்வீர்கள். (இவ்வாறு) அவன் உங்கள் கெட்ட எண்ணங்களை வெளிப்படுத்தி விடுவான்.* [38]*(மக்களே! அறிந்துகொள்ளுங்கள்!) நீங்கள் இறைவழியில் செலவு செய்ய அழைக்கப்படுகிறீர்கள். ஆயினும் உங்களில் சிலர் கஞ்சத்தனம் செய்கின்றனர். கஞ்சத்தனம் செய்பவர் தமக்குத்(தீங்காகத்)தான் கஞ்சத்தனம் செய்கிறார். அல்லாஹ் தேவை எதுவுமற்றவன். நீங்கள் (எப்போதும் அவனிடம்) தேவையுடையோராகவே இருக்கிறீர்கள். நீங்கள் (அவன்மீது நம்பிக்கையின்றிப்) புறக்கணித்தால் அல்லாஹ் (உங்கள் இடத்தில்) நீங்கள் அல்லாத வேறொரு சமுதாயத்தைக் கொண்டு வருவான். அவர்கள் உங்களைப் போல் இருக்கமாட்டார்கள்.*

# 48. வெற்றி (அல்ஃபத்ஹ்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

*[1](நபியே!) உறுதியாக நாம் உமக்குத் தெளிவான வெற்றியை அளித்துள்ளோம். [2](அவ்வாறு அளித்தது) அல்லாஹ் உம்முடைய முன், பின் பாவங்களை மன்னிப்பதற்காகவும், தனது அருட்கொடையை உமக்கு முழுமைப்படுத்துவதற்காகவும், நேர்வழி காட்ட வேண்டும் என்பதற்காகவும், [3]உமக்கு (மேன்மேலும்) வல்லமைமிக்க பேருதவி செய்வதற்காகவுமேயாகும்.*

*[4]அவன்தான் (ஓரிறை)நம்பிக்கையாளர்களின் நம்பிக்கையை மேலும் மிகுதிப்படுத்துவதற்காக அவர்களின் உள்ளங்களில் நிம்மதியை அருளினான். வானங்களிலும் பூமியிலுமுள்ள படைகள் அல்லாஹ்வுக்கே உரியன. அவன் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன். [5]நம்பிக்கைகொண்ட ஆண்களையும் பெண்களையும் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும் சொர்க்கச் சோலைகளில் நுழையச் செய்வதற்காக(வும்) அவற்றில் அவர்கள் நிலையாக வாழ்ந்திருப்பதற்காக(வும்) அவர்களின் பாவங்களை அவன் அகற்றி விடுவதற்காக(வும் இந்த வெற்றியை அளித்தான்) இதுவே அல்லாஹ்விடத்திலிருந்து கிடைக்கும் அரும்பெரும் வெற்றியாகும். [6]அல்லாஹ்வைப்பற்றித் தீயஎண்ணம் கொண்ட நயவஞ்சக ஆண்களையும் பெண்களையும் இணைவைக்கும் ஆண்களையும் பெண்களையும் தண்டிப்பதற்காகவும்தான் (இந்த வெற்றியை உமக்களித்தான்). அவர்கள்தாம் தீமையின் சுழலில் (சிக்கிக்) கிடக்கின்றனர். அல்லாஹ் அவர்கள்மீது சினம்கொண்டான்; அவர்களைச் சபித்தான். அவர்களுக்காக நரகத்தைத் தயார்செய்து வைத்துள்ளான். அது மிகவும் கெட்ட உறைவிடமாகும். [7]வானங்களிலும் பூமியிலுமுள்ள படைகள் அல்லாஹ்வுக்கே உரியன. அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.*

[8](நபியே!) நாம் உம்மைச் சாட்சியாளராகவும்
நற்செய்தியாளராகவும் எச்சரிக்கையாளராகவும் அனுப்பியுள்ளோம்.
[9](நம்பிக்கையாளர்களே!) நீங்கள் அல்லாஹ்வின் மீதும் அவனது
தூதரின்மீதும் நம்பிக்கை கொள்வதற்காகவும் அவருக்கு உதவி
புரிந்து அவரைக் கண்ணியப்படுத்துவதற்காகவும் காலையிலும்
மாலையிலும் இறைவனைப் போற்றிப் புகழ வேண்டும்
என்பதற்காகவும் (அவரை அனுப்பியுள்ளோம்.) [10](நபியே!)
உம்மிடம் (போர் நேர்ந்தால் பின்வாங்க மாட்டோம் என)
வாக்குறுதி அளித்தவர்கள் உண்மையில் அல்லாஹ்விடமே
வாக்குறுதி அளித்தவர்களாவர். (அப்போது) அல்லாஹ்வின் கை
அவர்களின் கைகள் மீது இருந்தது. யாரேனும் வாக்குறுதியை
முறித்துக் கொண்டால் அவர் தமக்குக் கேடாகவே அதனை
முறித்துக் கொள்கிறார். அல்லாஹ்விடம் செய்துகொண்ட
நம்பிக்கை வாக்குறுதியை நிறைவேற்றுபவர்களுக்கு அவன்
அரும்பெரும் கூலியை வழங்குவான்.

[11](நபியே! உம்ராவுக்காக நீர் புறப்பட்டபோது உம்முடன்
வர அஞ்சிப்) பின்தங்கிவிட்ட நாட்டுப்புற அரபிகள் உம்மிடம்
வந்து “எங்களின் செல்வங்களும் குடும்பங்களும் எங்களை(ப்
பணிகளில்) ஈடுபடுத்திவிட்டன. எனவே (இறைவனிடம்)
எங்களுக்காக நீர் பாவமன்னிப்புக் கோருவீராக” என்று கூறுவர்.
அவர்கள் தங்கள் உள்ளங்களில் இல்லாதவற்றைத் தங்கள்
நாவுகளால் கூறுகின்றனர். (ஆகவே நபியே! அவர்களிடம்)
“அல்லாஹ் உங்களுக்கு ஏதேனும் தீங்கிழைக்க விரும்பினாலோ
நன்மையளிக்க விரும்பினாலோ அதனைத் தடுக்கும் அதிகாரம்
பெற்றவர் யார்? உங்கள் செயல்களை அல்லாஹ் நன்கறிந்தவன்”
எனக் கூறுவீராக. [12]“தூதரும் நம்பிக்கையாளர்களும் ஒருபோதும்
தத்தம் குடும்பத்தினரிடம் திரும்பி வரமாட்டார்கள் என்று
நீங்கள் எண்ணிக் கொண்டீர்கள். உங்கள் உள்ளங்களுக்கு இது
(இந்நினைவு) அழகாகத் தோன்றியது. நீங்கள் தீய எண்ணம்
கொண்டீர்கள். அழிவுக்குள்ளாகும் சமூகத்தினராகி விட்டீர்கள்”

(என்றும் கூறுவீராக!) 13அல்லாஹ்வின் மீதும் அவனது தூதரின்
மீதும் நம்பிக்கைகொள்ளாத மறுப்பாளர்களுக்கு நாம் கொழுந்து
விட்டெரியும் நெருப்பைத் தயார் செய்து வைத்திருக்கிறோம்.
14வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி அல்லாஹ்வுக்கே
உரியது. தான் விரும்பியோரை அவன் மன்னிக்கிறான்;
தான் விரும்பியோரைத் தண்டிக்கிறான். அல்லாஹ் பெரும்
மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.

15(நபியே! உம்முடன் வராது) பின்தங்கி விட்டவர்கள்,
(கைபர் எனுமிடத்தில் நடந்த) போரில் கிடைத்த பொருள்களைக்
கைப்பற்றுவதற்காக நீங்கள் செல்லும்போது, “எங்களையும்
உங்களுடன் வர அனுமதியுங்கள்” என்று கூறுவார்கள். அவர்கள்
(‘ஹுதைபிய்யா நிகழ்வில் தூதருடன் துணைநின்ற தோழர்களுக்கே
போர்ச் செல்வங்கள் உரியவை’ என்னும்) அல்லாஹ்வின் வாக்கை
மாற்றிவிட விரும்புகின்றனர். “நீங்கள் எங்களுடன் வரவே
வேண்டாம்; அல்லாஹ் முன்னரே இதனைக் கூறிவிட்டான்”
(என நீர் அவர்களிடம் கூறுவீராக!) அதற்கு அவர்கள், “இல்லை.
நீங்கள் எங்கள் மீது பொறாமைப்படுகிறீர்கள்” என்று கூறுவார்கள்.
உண்மையில் அவர்கள் புரிந்து கொள்வது மிக அரிதே ஆகும்.

16(நபியே! போருக்கு வராமல்) பின்தங்கிவிட்ட நாட்டுப்புற
அரபிகளிடம் “நீங்கள் விரைவில் வலிமைமிக்க மக்களுடன்
போர் புரியுமாறு அழைக்கப்படுவீர்கள். அவர்களுடன் நீங்கள்
கடும்போர்புரிய நேரிடும்; அல்லது அவர்கள் கீழ்ப்படிந்துவிடுவர்.
நீங்கள் அக்கட்டளைக்குக் கீழ்ப்படிந்தால் அல்லாஹ் உங்களுக்கு
அழகிய கூலி வழங்குவான். இதற்கு முன்னர்ப் புறக்கணித்தது
போன்றே இப்போதும் நீங்கள் புறக்கணித்து விட்டால்
துன்புறுத்தும் வேதனையால் அவன் உங்களைத் தண்டிப்பான்”
(என்று கூறுவீராக!) 17பார்வையற்றவர், முடவர், நோயாளி
ஆகியோர் (போருக்கு வரவில்லையென்றால் அவர்கள்) மீது
எந்தக் குற்றமுமில்லை. அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும்
கட்டுப்படுபவர்களை அல்லாஹ் சொர்க்கச் சோலைகளில்

*நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். ஆயினும் யாரேனும் புறக்கணித்தால் துன்புறுத்தும் வேதனையால் அவன் அவரைத் தண்டிப்பான்.*

[18]*நம்பிக்கையாளர்கள் (ஹுதைபிய்யாவில்) அந்த மரத்தின்
கீழே உம்மிடம் (நம்பிக்கை) வாக்குறுதி செய்தபோது அல்லாஹ்
அவர்களைக் குறித்து நிறைவடைந்தான். அவர்களின் உள்ளங்களில்
உள்ளவற்றை அறிந்தான். (அதனால்) அவர்களுக்குப் பேரமைதியை
அருளினான். (கைபர் என்னும் இடத்தில்) விரைவில் வெற்றியையும்
அவர்களுக்குப் பரிசிலாக வழங்கினான்.* [19]*(அப்போரில்)
ஏராளமான செல்வத்தையும் அவர்கள் அடையும்படி செய்தான்.
அல்லாஹ் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.*
[20]*(ஓரிறைநம்பிக்கையாளர்களே! கைபர் வெற்றிக்குப் பின்னரும்)
மிகுதியான போர்ச் செல்வங்களை(க் கைப்பற்றுவீர்கள் என)
அல்லாஹ் உங்களுக்கு வாக்களித்திருக்கிறான். விரைவாக இதை
(ஹுதைபியா வெற்றி) வழங்கி உங்களுக்கு(க் குறைஷி) மக்களின்
கைகள் (தீங்கிழைக்காதபடி) தடுத்தான். இ(வ்வாறு காத்த)து
நம்பிக்கையாளர்களுக்கு ஒரு சான்றாக அமைவதற்காகவும்
உங்களுக்கு நேர்வழியைக் காட்டுவதற்காகவுமேயாகும்.*
[21]*(இப்போதைக்கு) உங்கள் ஆற்றலுக்கு எட்டாத வேறுசில
வெற்றிகளும் உள்ளன. அல்லாஹ் அவற்றை முழுமையாகச்
சூழ்ந்து(அறிந்து)ள்ளான். அல்லாஹ் எல்லாவற்றின் மீதும்
பேராற்றலுடையவன்.*

[22]*(ஹுதைபிய்யாவில்) மறுப்பாளர்கள் உங்களுடன் போரிட்டிருந்தால்
புறங்காட்டி ஓடியிருப்பர். பின்னர் அவர்களுக்கு எந்தப்
பாதுகாவலரும் உதவியாளரும் கிடைத்திருக்கமாட்டார்கள்.*
[23]*இதுவே இதற்கு முன்னரும் நடைபெற்றுள்ள அல்லாஹ்வின்
வழிமுறையாகும். அல்லாஹ்வின் வழிமுறையில் எந்த மாறுதலையும்
(நபியே!) நீர் காணமாட்டீர்.* [24]*(ஹுதைபிய்யா நாளில்) மக்காவின்
பள்ளத்தாக்கில் அவன்தான் அவர்களுக்கெதிராக உங்களுக்கு
வெற்றி அளித்தபிறகு (போர் மூளாமல்) அவர்களின் கைகளை*

உங்களிடமிருந்தும் உங்களின் கைகளை அவர்களிடமிருந்தும் தடுத்துவிட்டான். உங்கள் செயல்களை அவன் உற்று நோக்கிக் கொண்டிருக்கிறான்.

25(மக்காவாசிகளான) அவர்கள்தாம் மறுப்பாளர்கள். (அவர்களே) உங்களைப் புனித இறையில்லத்திற்குச் செல்லவிடாமல் தடுத்தவர்களும் பலிப்பிராணிகளை அவை அடைய வேண்டிய இடத்தை அடையவிடாமல் தடுத்தவர்களும் ஆவர். (மக்காவில், எதிரிகளின் நடுவே) இறை நம்பிக்கைகொண்ட ஆண்களும் பெண்களும் இல்லாதிருந்தால் (மக்காவாசிகளுடன் போரிட நீங்கள் அனுமதிக்கப்பட்டிருப்பீர்கள்). அறியாமல் நீங்கள் நம்பிக்கையாளர்களைத் தாக்கி அதனால் உங்கள்மீது பழி ஏற்பட்டிருக்கும். (ஆகவே போரிட அனுமதி வழங்கப்படவில்லை). மேலும் அல்லாஹ் அவ்வாறு ஏன் அனுமதி அளிக்கவில்லையென்றால் (மக்காவில் இருப்போருள்) தான் விரும்பியோரை அல்லாஹ் தன் அருளில் (நம்பிக்கையாளர்களாக) நுழையச் செய்வதற்காகவேயாகும். (நீங்கள் அறியாத இறைநம்பிக்கையாளர்களான) அவர்கள் (மக்காவிலுள்ள மறுப்பாளர்களிடமிருந்து இடம்பெயர்ந்து) விலகியிருப்பார்களாயின் அவ்விறைமறுப்பாளர்களைத் துன்புறுத்தும் வேதனையால் நாம் தண்டித்திருப்போம்.

26(ஹுதைபியா நாளில் ஓரிறை)மறுப்பாளர்கள் தங்கள் உள்ளங்களில் அறியாமைக் காலத்து மூட வைராக்கியத்தைக் கொண்டிருந்தபோது அல்லாஹ் தன் தூதருக்கும் நம்பிக்கையாளர்களுக்கும் பேரமைதியை அருளினான். நம்பிக்கையாளர்களுக்கு இறையச்சமெனும் வாக்கைப் பேணி நடப்பதைக் கட்டாயமாக்கினான். அவர்கள் அதற்கு மிகத் தகுதியானவர்களாகவும் அதற்கு உரிமையுடையவர்களாகவும் இருந்தனர். அல்லாஹ் அனைத்துப் பொருள்களையும் முற்றும் அறிந்தவன்.

27உறுதியாக அல்லாஹ் தன் தூதருக்கு (அவர் கண்ட) கனவை உண்மையாக்கிவிட்டான். (நம்பிக்கையாளர்களே!) அல்லாஹ் விரும்பினால் உறுதியாகப் புனித இறையில்லத்தில் உங்கள் தலைமுடியை மழித்தவர்களாக அல்லது குறைத்தவர்களாக அமைதியுடன் நீங்கள் நுழைவீர்கள். உங்களுக்கு எந்த அச்சமும் இராது. நீங்கள் அறியாத(இ)வற்றை அவன் அறிந்திருந்தான். (மக்காவில் நீங்கள் உம்ரா செய்யும்) அதற்கு முன்பே அவன் ஒரு வெற்றி (கைபர் வெற்றி) அளித்து விட்டான்.

28அல்லாஹ்தான் தன் தூதரை நேர்வழியுடனும் சத்திய மார்க்கத்துடனும் அனுப்பியுள்ளான், பிற அனைத்து மார்க்கங்களை விடவும் இதனை மேலோங்கச் செய்வதற்காக! (இதற்கு) அல்லாஹ்வே போதுமான சாட்சியாவான்.

29முஹம்மத் இறைத்தூதராவார். அவருடன் இருப்பவர்கள் மறுப்பாளர்களிடம் கடுமையானவர்கள்; தங்களுக்கிடையே பரிவு மிக்கவர்கள். இறைவனின் அருளையும் அவனது உவப்பையும் தேடிக் குனிந்து தலைபணி(ந்து வணங்கு)பவர்களாகவும் அவர்களை (நபியே!) நீர் காண்பீர். தலைபணிவதனால் அவர்களின் முகங்களில் தோன்றும் (அக ஒளியாகிய) அடையாளமே அவர்களின் அடையாளமாகும். இதுவே தவ்ராத்(வேதத்)தில் அவர்களைக் குறித்துச் சொல்லப்பட்ட விளக்கம் ஆகும். இன்ஜீல் (வேதத்தில்) அவர்களுக்குச் சொல்லப்பட்டுள்ள உவமை ஒரு பயிர். அது தன் குருத்தை வெளிப்படுத்திப் பின்னர் அதனை வலுப்படுத்துகிறது. பின்னர் அது பருத்துத் தன் தண்டின்மீது நிமிர்ந்து நிற்கிறது. அது விவசாயிகளை மகிழ்ச்சியடையச் செய்கிறது. இவற்றைக் கொண்டு அல்லாஹ் மறுப்பாளர்களை எரிச்சலடையச் செய்கிறான். ஆயினும் அவர்களில் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிபவர்களுக்கு அல்லாஹ் மன்னிப்பும் மாபெரும் கூலியும் தருவதாக வாக்களிக்கிறான்.

# 49. அறைகள் (அல்ஹுஜுராத்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

*[1](ஓரிறை)நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் முன்னிலையில் (சொல்லாலோ செயலாலோ) நீங்கள் முந்தாதீர்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். உறுதியாக அல்லாஹ் (அனைத்தையும்) செவியுறுபவன்; முற்றும் அறிந்தவன்.*

*[2]நம்பிக்கையாளர்களே! தூதரின் (முன்னிலையில் அவரது) குரலைவிட உங்களின் குரலை உயர்த்தி விடாதீர்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் இரைந்து பேசிக் கொள்வதைப் போல அவருடன் இரைந்து பேசாதீர்கள். அதனால் நீங்கள் உணராமலேயே உங்களின் நற்செயல் பாழாகிவிடும்.*
*[3]இறைத்தூதருக்கு முன்னால் தங்கள் குரல்களைத் தாழ்த்திக் கொள்பவர்களின் உள்ளங்களை அல்லாஹ் இறையச்சமுடையவை எனச் சோதித்துத் தேர்ந்தெடுத்திருக்கிறான். அவர்களுக்கு (பாவ)மன்னிப்பும் அரும்பெரும் கூலியும் உண்டு. [4](நபியே!)*
*நீர் தங்கியிருக்கும் அறைகளுக்கு வெளியே இருந்து உம்மை உரக்க அழைப்பவர்களில் பெரும்பாலோர் அறிவற்றவர்களே.*
*[5]நீர் (அறைகளிலிருந்து) வெளியேறி (அவர்களிடம்) வரும்வரை அவர்கள் பொறுமையுடன் இருந்திருந்தால் அது அவர்களுக்கு மிக நல்லதாக இருந்திருக்கும். (எனினும்) அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

*[6]நம்பிக்கையாளர்களே! தீயவன் ஒருவன் உங்களிடம் (ஒரு சமூகத்தாரைப் பற்றிய) ஏதேனும் (ஒரு) செய்தி கொண்டுவந்தால் அதைத் தீரவிசாரித்துத் தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள். ஏனெனில் நீங்கள் அறியாமையால் (அச்)சமூகத்தினருக்கு தீங்கிழைத்துவிட்டு அதற்காக வருந்தக்கூடியவர்களாகி விடக்கூடாது. [7]உறுதியாக அறிந்துகொள்ளுங்கள்! உங்களிடையே இறைத்தூதர் இருக்கிறார். பல செயல்பாடுகளில் அவர் உங்களின் விருப்பத்திற்கிணங்க நடந்தால் நீங்கள்தாம் துன்பத்திற்குள்ளாகி*

*விடுவீர்கள். ஆயினும் அல்லாஹ் உங்களுக்கு இறைநம்பிக்கையை விருப்பமானதாக்கினான்; உங்கள் உள்ளங்களில் அதனை அழகாக்கியும் உள்ளான். மறுப்பையும் பாவம் புரிவதையும் கீழ்ப்படியாமையையும் அவன் உங்களுக்கு வெறுப்பாக்கியும் வைத்துள்ளான். இத்தகையவர்கள்தாம் நேர்வழியில் செல்வோர் ஆவர்.* [8]*இறைவனின் அருளாலும் அவனது கொடையாலும் (அவர்கள் நேர்வழி அடைந்தோர் ஆவர்.) அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம்மிக்கவன்.*

[9]*நம்பிக்கையாளர்களில் இரு பிரிவினர் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டால் அவர்களிடையே சமாதானம் செய்து வையுங்கள். அவர்களில் ஒரு பிரிவினர் மற்றொரு சாராருக்கு எதிராக எல்லை மீறினால், எல்லை மீறியோருடன் அவர்கள் அல்லாஹ்வுடைய கட்டளையின்பால் திரும்பும்வரை போரிடுங்கள். அவர்கள் திரும்பிவிட்டால் அவ்விரு பிரிவினரிடையே நேர்மையான முறையில் சமாதானம் செய்து வையுங்கள்; நீதியுடன் நடந்துகொள்ளுங்கள். உறுதியாக அல்லாஹ் நீதியாளர்களை நேசிக்கிறான்.* [10]*நம்பிக்கையாளர்கள் அனைவரும் சகோதரர்களே. எனவே உங்கள் சகோதரர்(இருவர்) க்கிடையில் (பிணக்கு ஏற்பட்டால்) சமாதானம் செய்துவையுங்கள்; அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள், உங்கள்மீது இரக்கம் காட்டப்படும்.*

[11]*நம்பிக்கையாளர்களே! ஆண்கள் எவரும் பிற ஆண்கள் எவரையும் ஏளனம் செய்ய வேண்டாம். அவர்கள் இவர்களைவிடச் சிறந்தவர்களாக இருக்கக் கூடும். பெண்கள் எவரும் பிற பெண்கள் எவரையும் ஏளனம் செய்ய வேண்டாம். அவர்கள் இவர்களைவிடச் சிறந்தவர்களாக இருக்கக் கூடும். நீங்கள் ஒருவரையொருவர் குத்தலாக(க் குறை கூறி)ப் பேச வேண்டாம். ஒருவரையொருவர் இழிவான இடுபெயர் சூட்டி அழைக்காதீர்கள். நம்பிக்கைகொண்ட பின்னர்த் தீய பெயர்களைச் சூட்டுவது மிகவும் கொடிய செயல் ஆகும் (திருந்தி) இவற்றைவிட்டு விலகாதவர்கள் தீவினையாளர்கள் ஆவர்.*

12நம்பிக்கையாளர்களே! (பிறரைக் குறித்து) மிகுதியாக
ஐயம் கொள்வதைத் தவிர்த்துக் கொள்ளுங்கள். சில ஐயங்கள்
பாவமாகும். (உங்களுள் ஒருவரையொருவர்) உளவு பார்ப்பதில்
ஈடுபடாதீர்கள். உங்களில் ஒருவர் மற்றவரைப்பற்றிப் புறம் பேச
வேண்டாம். உங்களில் யாராவது இறந்துவிட்ட தன் சகோதரனின்
இறைச்சியை உண்ண விரும்புவாரா? (பாருங்கள்!) நீங்களே
அதனை வெறுக்கிறீர்கள். (புறம் பேசுவதும் அத்தகையதுதான்!)
அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். உறுதியாக அல்லாஹ் (திருந்திப்)
பாவமன்னிப்பு வேண்டுவதை ஏற்றுக் கொள்பவன்; நிகரற்ற
அன்பாளன்.

13மனிதர்களே! உறுதியாக நாம் உங்களை ஒரே ஆண்
பெண்ணிலிருந்து படைத்தோம். நீங்கள் (பிறப்பு, இரத்த உறவு
அடிப்படையில்) ஒருவரையொருவர் அறிந்துகொள்ளும் பொருட்டு
உங்களைச் சமூகங்களாகவும் குலங்களாகவும் ஆக்கினோம்.
(உங்களுக்குள் உயர்வு தாழ்வு கற்பித்துக்கொள்ள அல்ல)
அல்லாஹ்விடத்தில் மிகவும் கண்ணியம் வாய்ந்தவர் உங்களில்
அவனுக்கு மிகவும் அஞ்சுபவர்தான். உறுதியாக அல்லாஹ்
முற்றும் அறிந்தவன்' (அனைத்தையும்) நன்கு தெரிந்தவன்.

14(நபியே!) நாட்டுப்புற அரபிகள் “நாங்கள் நம்பிக்கை
கொண்டோம்” என்று கூறுகின்றனர். நீர் கூறும்: “நீங்கள்
நம்பிக்கை கொள்ளவில்லை. ஆயினும் ‘நாங்கள் கீழ்ப்படிந்தோம்’
என்று (உதட்டளவில்) கூறிக்கொள்ளுங்கள். இன்னும்
உங்கள் உள்ளங்களில் நம்பிக்கை நுழையவில்லை. நீங்கள்
(உண்மையாகவே) அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும்
கீழ்ப்படிந்து நடந்தால் அவன் உங்களுடைய (நற்)செயல்களின்
(கூலியில்) எதையும் குறைத்துவிடமாட்டான். உறுதியாக அல்லாஹ்
பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன். 15உண்மையான
நம்பிக்கையாளர்கள் யாரெனில் அல்லாஹ்வின் மீதும் அவனது
தூதரின் மீதும் நம்பிக்கைகொண்டு பின்னர் (அதில்) ஐயம்
கொள்ளாமல் தங்கள் செல்வங்களையும் உயிர்களையும் கொண்டு

*இறைவழியில் கடுமையாகப் பாடுபடுகின்றவர்களே ஆவர். அவர்கள்தாம் உண்மையாளார்கள்.*

[16]*('நாங்கள் நம்பிக்கை கொண்டோம்' எனக் கூறிக்கொள்ளும் நாட்டுப்புற அரபிகளிடம் நபியே!) நீர் கூறும்: "நீங்கள் அல்லாஹ்வுக்கே உங்கள் 'நம்பிக்கை'யைக் குறித்துக் கற்பிக்கிறீர்களா? வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றை அல்லாஹ் நன்கறிவான். அல்லாஹ் அனைத்துப் பொருள்களையும் முற்றும் அறிந்தவன்"*
[17]*(நபியே!) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதை உமக்குப் புரிந்த பேருதவியாகக் கருதுகின்றனர். நீர் கூறும்: "நீங்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதை எனக்குச் செய்த உதவியாகக் கருதாதீர்கள். நீங்கள் (நம்பிக்கை கொண்டதில்) உண்மையாளர்களாயின் உங்களுக்கு நம்பிக்கையின்பால் வழிகாட்டியதன்மூலம் அல்லாஹ்தான் பேருதவி புரிந்துள்ளான் (என்பதைப் புரிந்துகொள்வீர்கள்)"*
[18]*வானங்களிலும் பூமியிலும் மறைந்துள்ளவற்றை அல்லாஹ்வே நன்கறிவான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை உற்றுநோக்கிக் கொண்டிருக்கிறான்.*

# 50. காஃப் (காஃப்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]*காஃப்.*

*(நபியே!) மாட்சிமைமிக்க குர்ஆனின் மீது ஆணையாக! (நீர் எம்மால் அனுப்பப்பட்ட தூதர்தாம்)*
[2]*அவர்களிலிருந்தே அவர்களுக்கு எச்சரிக்கை செய்பவர் வந்திருப்பது குறித்து அவர்கள் வியப்படைகிறார்கள். ஆகவே, அவ்விறைமறுப்பாளர்கள் "இது (உண்மையில்) மிகப் புதுமையான ஒன்றே" என்று கூறுகின்றனர்.*
[3]*"(அன்றி அவர் கூறுவது போல) நாம் மரணமடைந்து மண்ணோடு மண்ணாகி விட்ட பின்னர் (மீண்டும்) உயிர் கொடுத்து எழுப்பப்படுவோமா? அவ்வாறு மீள்வது முற்றிலும் இயலாத ஒன்று!" என்றும் கூறுகின்றனர்.*
[4]*பூமி அவர்களை*

எந்த அளவு (தின்று) அழிக்கிறது என்பதை நாம் அறிவோம்.
(எனினும் உடல், உயிர், செயல்கள் அனைத்தையும் பதிவு செய்து)
பாதுகாக்கப்பட்ட ஏடு எம்மிடம் இருக்கிறது. [5]இருப்பினும்
சத்தியம் (குர்ஆன்) அவர்களிடம் வந்தபோது அதனை அவர்கள்
பொய்மைப்படுத்திவிட்டனர். (எனவே) அவர்கள் குழப்ப
நிலையில் இருக்கின்றனர்.

[6]தங்களுக்கு மேலிருக்கும் வானத்தை அவர்கள்
பார்க்கவில்லையா? அதனை நாம் எவ்வாறு அமைத்திருக்கிறோம்;
அழகுபடுத்தியிருக்கிறோம்! அதில் எவ்வகைப் பிளவுகளும்
இல்லை. [7]மேலும் நாம் பூமியை விரித்தோம்; அதில்
உறுதியான மலைகளை ஊன்றினோம். (இன்னும்) அதில்
எல்லாவகையான அழகிய தாவரங்களையும் முளைக்கச்
செய்தோம். [8](இவை அனைத்தும்) எம்மிடம் திரும்பக் கூடிய
ஒவ்வோர் அடியானும் உற்றுநோக்குவதற்காகவும் (அதன்மூலம்)
படிப்பினை பெறுவதற்காகவும் (படைக்கப் பெற்றவை.) [9]நாம்
வானத்திலிருந்து அருட்பேறான நீரை இறக்கினோம், அதன்மூலம்
தோட்டங்களையும் அறுவடை செய்யப்படும் தானியங்களையும்,
[10]அடுக்கடுக்காகக் குலைகள் தள்ளிய ஓங்கி வளர்ந்த பேரீச்சை
மரங்களையும் விளையச் செய்தோம். [11]அடியார்களுக்கு
உணவாக (இவற்றைப் படைத்தோம். இவற்றின் மூலம்) இறந்த
நிலத்தை (மீண்டும்) உயிர்ப்பிக்கிறோம். (இறந்தபோன மனிதர்கள்
பூமியிலிருந்து) மீட்டெடுக்கப்படுவதும் இவ்வாறே ஆகும்.

[12]இவர்களுக்கு முன்னர் (இருந்த) நோவாவின்
சமூகத்தினரும் 'ரஸ்'வாசிகளும் ஸமூத் மக்களும் (மறுமையைப்)
பொய்மைப்படுத்தினர். [13]ஆத் கூட்டத்தாரும் ஃபாரோவும்
லோத்தின் சகோதரர்களும் (இவ்வாறே பொய்மைப்படுத்தினர்)
[14]தோப்புவாசிகள், 'துப்பவு' சமூகத்தார் ஆகிய அனைவரும்
தூதர்களைப் பொய்ம்மைப்படுத்தினர். எனவே (அவர்கள்
மீதான வேதனை குறித்த) எனது எச்சரிக்கை உறுதியாகி
விட்டது. [15](படைப்புகளை) முதன்முறை படைத்ததில் நாம்

*களைப்படைந்து விட்டோமா? (இல்லை) ஆயினும் இவர்கள் (மறுமையில் தாங்கள்) புதிதாகப் படைக்கப்படுவது குறித்து ஐயத்தில் இருக்கின்றனர்.*

[16]*உறுதியாக நாமே மனிதனைப் படைத்தோம். அவனது
உள்ளத்தில் தோன்றுவதை (அவன் அறிவதைவிட நன்றாக)
நாம் அறிவோம். அவனது பிடரி நரம்பைவிடவும் நாம்
அவனுக்கு நெருக்கமாக இருக்கிறோம்.* [17]*(மனிதனின்)
வலப்புறமும் இடப்புறமும் இரு(வான)வர்கள் அமர்ந்து (அவனது
செயல்களைப்) பதிவு செய்து கொண்டிருக்கிறார்கள்.* [18]*அவன்
எந்தச் சொல்லைச் சொன்னாலும் (அதனைக்) கண்காணித்து
எழுதக் கூடியவர் அவனிடம் இல்லாமல் இல்லை.*

[19]*மரண மயக்கம் சத்தியத்தைப் புலப்படுத்தி வந்து சேரும்போது
"எதை விட்டு நீ மருண்டோடினாயோ அது இதுதான்" (என்று
அவனிடம் கூறப்படும்).* [20]*எக்காளம் ஊதப்படும் "இதுதான் (உனக்கு)
எச்சரிக்கை செய்யப்பட்ட நாளாகும்" (என்றும் கூறப்படும்.)*
[21]*(அப்போது) ஒவ்வொரு மனிதனும் தன்னை ஓட்டி வருபவர்,
சாட்சியாளர் ஆகியோருடன் வந்து சேர்வான்.* [22]*"(உலகில்) இது
குறித்து நீ பொருட்படுத்தாதிருந்தாய். உன்னிடமிருந்து உன்
(முகத்)திரையை நாம் அகற்றி விட்டோம். இன்று உன் பார்வை
கூர்மையாக உள்ளது. (நீ மறுத்தவற்றை இப்போதுபார்" என்று
கூறப்படும்).* [23]*அவனுடன் இருந்த வானவர், "இதோ என்னிடம்
(இவனுடைய பதிவேடு) தயாராக இருக்கிறது" (என்பார்)*
[24]*"பிடிவாதக்கார(ஓரிறை)மறுப்பாளன் ஒவ்வொருவனையும்
(அவனவனுக்குரிய வானவர்களிடம் "நீங்கள்) இருவரும் நரகத்தில்
வீசியெறியுங்கள்" (என்று கூறப்படும்.)* [25]*"(அவன்) நற்செயல்களைத்
தடுத்துக்கொண்டும் வரம்பு மீறிக்கொண்டும் (இந்நாள் குறித்த)
ஐயங்களை உண்டாக்கிக் கொண்டும் இருந்தான்.* [26]*அவன்
அல்லாஹ்வுடன் வேறு தெய்வத்தை ஏற்படுத்திக் கொண்டான்.
ஆகவே அவனைக் கடுமையான வேதனையில் வீசி எறியுங்கள்"
(என்றும் கூறப்படும்)* [27]*அவனுடைய கூட்டாளி (சாத்தான்)*

*கூறுவான்: “எங்கள் இறைவா! நான் இவனை வரம்பு மீறச் செய்யவில்லை. ஆயினும் இவனே மாபெரும் கெடுவழியில்தான் இருந்தான்”* [28]*இறைவன் கூறுவான்: “என் முன்னிலையில் சச்சரவிடாதீர்கள். இது குறித்து முன்னரே உங்களை எச்சரித்து விட்டேன்.* [29]*என் வாக்கு எப்போதும் மாற்றப்படுவதில்லை. நான் என் அடியார்களுக்குச் சிறிதும் அநீதி செய்பவனும் அல்லன்”*

[30]*நாம் நரகத்தை நோக்கி “நீ நிரம்பி விட்டாயா?” என்று கேட்கும் அந்த நாளில் “இன்னும் மிகுதியாக (ஏதும்) இருக்கிறதா?” என்று அது கேட்கும்.* [31]*இறையச்சமுடையோருக்குச் சொர்க்கம் தொலைவிலன்றி மிக அருகிலேயே கொண்டு வரப்படும்.* [32]*“இதுதான் உங்களுக்கு வாக்களிக்கப்பட்டது; (எப்போதும்) இறைவன்பால் மீள்வோர் (அவன் கட்டளைகளைப்) பேணி நடந்தோர் அனைவருக்கும் (இது வாக்களிக்கப்பட்டது)” என்று கூறப்படும்.* [33]*எவர் (பிறருக்கு) மறைவாக(த் தனிமையில்) இருக்கும்போதும் அளவற்ற அருளாளனுக்கு அஞ்சி (நடந்து) அவன்பால் திரும்பிய உள்ளத்துடன் வந்தாரோ (அவருக்கு இது வாக்களிக்கப்பட்டது).* [34]*“இதில் முழு அமைதியுடன் நுழையுங்கள் இந்த நாளே (இனி) முடிவற்ற வாழ்வின் நாள் ஆகும்” (என்று அவரிடம் கூறப்படும்).* [35]*அங்கே அவர்கள் விரும்புவதெல்லாம் அவர்களுக்குக் கிடைக்கும். எம்மிடம் இன்னும் மிகுதியானவையும் (அவர்களுக்கு) உண்டு.*

[36]*நாம் இவர்களுக்கு (மறுப்பாளர்களான மக்காவாசிகள்) முன்னர் எத்தனையோ சமூகத்தினரை அழித்திருக்கிறோம். அவர்கள் இவர்களைவிட மிகுந்த வலிமை வாய்ந்தவர்கள். (தண்டனையிலிருந்து தப்ப ஏதாவது புகலிடம் கிடைக்குமா என்று) அவர்கள் பல நாடுகளில் சுற்றித் திரிந்தனர். அவர்களுக்குப் புகலிடம் இருந்ததா?* [37]*எவரிடம் இதயம் உள்ளதோ, எவர் முழு மனத்துடன் செவிதாழ்த்திக் கேட்கிறாரோ அவருக்கு இதில் உறுதியாகப் படிப்பினை இருக்கிறது.*

[38]நாம்தாம் வானங்களையும் பூமியையும் அவற்றிற்கிடையே உள்ளவற்றையும் ஆறுநாட்(காலக்கட்டங்)களில் படைத்தோம். அதனால் எமக்கு எந்தக் களைப்பும் ஏற்படவில்லை. [39]எனவே (நபியே!) இவர்கள் (மீட்டெழுப்பப்படுவதை ஐயுற்றுக்) கூறுவதைப் பொறுத்துக் கொள்வீராக! சூரியன் உதிப்பதற்கு முன்பும் அது மறைவதற்கு முன்பும் உமது இறைவனைப் புகழ்ந்து துதிப்பீராக! [40]இரவிலும் (ஒவ்வொரு முறையும்) தலைபணிந்து வணங்கிய பின்பும் அவனைப் புகழ்வீராக!

[41](நபியே! இறந்தோரை) அழைப்பவர் மிக அருகிலிருந்து அழைக்கும் அந்த நாளில் (அதனைச்) செவிமடுத்துக் கேட்பீராக! [42](மறுமையாகிய) அந்நாளில் மனிதர்கள் சத்தியத்தை உணர்த்தும் (எக்காளப்) பேரொலியைக் கேட்பர். அதுதான் (சவக்குழிகளிலிருந்து) வெளியேறும் நாளாகும். [43]உறுதியாக நாமே உயிரளிக்கிறோம்; இறப்பையும் அளிக்கிறோம். எம்மிடமே (அனைவரும்) திரும்பி வரவேண்டியிருக்கிறது. [44](அவர்களை மூடிக் கொண்டிருக்கும்) பூமி பிளந்துவிடும் நாளில் அவர்கள் அனைவரும் விரைந்து வெளியேறுவார்கள். (அவர்களை) ஒன்றுதிரட்டுவது எமக்கு மிக எளிதானது.

[45](நபியே!) இவர்கள் பேசிக் கொள்வதை நாம் நன்கறிவோம். இவர்களை வலுக்கட்டாயப்படுத்துவது உமது பணி அன்று. எனவே என் எச்சரிக்கைக்கு அஞ்சி நடக்கும் மக்களுக்கு இந்தக் குர்ஆனின் மூலம் அறிவுரை வழங்குவீராக!

# 51. புழுதியைப் பரப்பக்கூடியவை (அஸ்ஸாரியாத்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

[1]புழுதியைப் பரப்பக் கூடியவை (ஆகிய காற்றுகளின்)மீது சத்தியமாக! [2](மழை நீரைச்) சுமப்பவை (ஆகிய மேகங்களின்)மீது சத்தியமாக! [3](அவற்றை)எளிமையாகக்கொண்டுசெல்பவை(ஆகிய மென்காற்றுகளின்)மீது சத்தியமாக! [4](அவற்றை) அல்லாஹ்வின்

கட்டளைப்படி பகிர்ந்தளிப்பவை (ஆகிய காற்றுகளின்)மீது
சத்தியமாக! [5]உங்களுக்கு வாக்களிக்கப்படுபவையெல்லாம்
உறுதியாக உண்மையானவையேயாகும். [6](செயல்களுக்கு ஏற்பக்)
கூலி வழங்குவது நிகழ்ந்தே தீரும். [7](கோள்கள், விண்மீன்கள்
இயங்கும் பற்பல) வழிகளையுடைய வானத்தின்மீது சத்தியமாக!
[8]உறுதியாக நீங்கள் (சத்தியத்திலிருந்து) முரண்பட்டுப்
பேசுகிறீர்கள். [9](சத்தியத்திலிருந்து – குர்ஆனிலிருந்து) திசை
திருப்பப்படத்தக்கவனே திருப்பப்படுகிறான்.

[10](மறுமையை மறுத்து) ஊகமாகப் பேசும் பொய்யர்கள்
அழிந்து போவார்களாக! [11]அவர்கள் அறியாமையில் ஆழ்ந்து
கிடக்கின்றனர். [12]“தீர்ப்புநாள் எப்போது வரும்?” என்று அவர்கள்
(ஏளனமாகக்)கேட்கின்றனர். [13]அந்நாளில் அவர்கள் நரக நெருப்பில்
வேதனைக்குள்ளாக்கப்படுவர். [14]“உங்களது வேதனையைச்
சுவையுங்கள். நீங்கள் அவசரமாகத் தேடிக் கொண்டிருந்தது
இதுதான்” (என்று கூறப்படும்). [15]இறையச்சமுடையோர்
(சொர்க்கச்) சோலைகளிலும் நீரூற்றுகளிலும் இருப்பர். [16]தங்கள்
இறைவன் தங்களுக்கு வழங்கியதை (மகிழ்ச்சியுடன்) பெற்றுக்
கொள்வர். உறுதியாக அவர்கள் இதற்கு முன்னர் (உலகில்)
நன்மை செய்வோராகவே இருந்தனர். [17]அவர்கள் இரவு
நேரங்களில் குறைவாக உறங்குபவர்களாகவும் [18]விடிகாலைப்
பொழுதுகளில் (தொழுது) பாவமன்னிப்பு வேண்டுபவர்களாகவும்
இருந்தனர். [19]அவர்களுடைய செல்வத்தில் இரப்போருக்கும்
இல்லாதோருக்கும் உரிமை இருந்தது.

[20]உறுதியான நம்பிக்கைகொண்டோருக்குப் பூமியில்
(இறையாற்றலை உணர்த்தும்) சான்றுகள் (மிகப்பல) உள்ளன.
[21](மனிதர்களே!) உங்களி(ன் உடலமைப்பி)னுள்ளும் சான்றுகள்
உள்ளன. நீங்கள் உற்றுநோக்க மாட்டீர்களா? [22]வானத்தில்தான்
உங்களுக்கு வாழ்வாதாரமும் உங்களுக்கு வாக்களிக்கப்பட்டவையும்
இருக்கின்றன. [23]வானம், பூமி ஆகியவற்றின் இறைவன் மீது
ஆணையாக! உங்களின் பேசுதலைப்போன்றே(‘வாக்களிக்கப்படல்’
என்னும்) அதுவும் உண்மையானதுதான்.

[24](நபியே!) ஆப்ரஹாமிடம் வந்த கண்ணியமிக்க
விருந்தினர்பற்றிய செய்தி உம்மிடம் வந்ததா? [25]அவரிடம் வந்து
“(உம்மீது) சாந்தி நிலவட்டும்” என்று அவர்கள் கூறியபோது
அவர் “(உங்கள்மீதும்) சாந்தி நிலவட்டும்” என்று கூறினார்,
‘இவர்கள் அறிமுகமில்லாத மக்களாக இருக்கிறார்களே!’
(என்று அவர் தமக்குள் சொல்லிக் கொண்டார்). [26]பின்னர்
அவர் தம் குடும்பத்தாரிடம் (விரைந்து) சென்று ஒரு
கொழுத்த காளைக்கன்றை (அறுத்துப் பொரித்துக்) கொண்டு
வந்தார். [27]அதனை அவர்கள் முன் வைத்தார். “(அவர்கள்
உண்ணாதிருக்கவே) “நீங்கள் உண்ண மாட்டீர்களா?” என்று
கேட்டார். [28](பின்னும் அவர்கள் உண்ணாமையால்) மனத்தில்
அவர்களைக் குறித்து அச்சம் கொண்டார். அவர்கள் “அஞ்ச
வேண்டாம்” என்று கூறி, அவருக்கு அறிவுள்ள ஒரு மகன்
பிறப்பான் எனும் நற்செய்தியையும் கூறினர். [29](அதனைக்
கேட்ட) அவரின் மனைவி உரத்த குரலெழுப்பிக் கொண்டு
முன்னோக்கி வந்து தன் முகத்தில் அடித்துக் கொண்டே, “நான்
மலட்டுக் கிழவியாயிற்றே!” என்று கூறினார். [30]அதற்கு அவர்கள்,
“இவ்வாறே உம் இறைவன் கூறியுள்ளான். உறுதியாக அவன்
ஞானம் மிக்கவன்; முற்றும் அறிந்தவன்” என்று கூறினர்.

[31](ஆப்ரஹாம் அவ்வானவர்களை நோக்கி) “வானவர்களே!
உங்கள் (வருகையின்) நோக்கம் என்ன?” என்று கேட்டார்.
[32](அதற்கு அவர்கள்) “நாங்கள் (மிகப் பெரும்) குற்றம்
புரியும் ஒரு சமூகத்தினரிடம் (அவர்களை அழித்துவிட)
அனுப்பப்பட்டுள்ளோம், [33](சுட்ட களிமண்) கற்களை
அவர்களின்மீது பொழிவதற்காக” என்று கூறினர். [34]அவை
வரம்பு மீறியவர்களுக்காக, உம் இறைவனால் (பெயர்கள்
குறிக்கப்பட்டு) அடையாளம் இடப்பட்டவையாகும். [35]ஆகவே
அவ்வூரிலிருந்த நம்பிக்கையாளர்களை நாம் (பாதுகாப்பாக)
வெளியேற்றி விட்டோம். [36]எனவே அங்கு (எம் தூதரின்) ஒரே
ஒரு வீட்டைத்தவிர வீடுகள் எவற்றையும் நாம் காணவில்லை.
[37]துன்புறுத்தும் வேதனைக்கு அஞ்சி நடக்கும் மக்களுக்காக

*அங்கு (அழிக்கப்பட்ட ஊரின் சின்னமாக) ஒரு சான்றை விட்டுவைத்தோம்.*

[38]மேலும் மோசேயி(ன் வரலாற்றி)லும் *(அத்தகைய
சான்று உள்ளது). நாம் தெளிவான ஆதாரத்துடன் அவரைப்
ஃபாரோவிடம் அனுப்பி வைத்தபோது* [39]*அவன் தன்
வலிமையால் (செருக்குற்று) அவரைப் புறக்கணித்தான். “இவர்
சூனியக்காரர் அல்லது பைத்தியக்காரர்” என்று கூறினான்.*
[40]*எனவே நாம் அவனையும் அவனது படைகளையும் பிடித்துக்
கடலில் வீசி எறிந்து விட்டோம்; அவனோ பழிப்பிற்குரியவனாகி
விட்டான்* [41]*ஆத் (மக்கள்) இடத்திலும் (ஒரு சான்று உள்ளது)
நாம் அவர்கள்மீது அழித்தொழிக்கும் காற்றை அனுப்பினோம்.*
[42]*அது தன் எதிரில் பட்டதையெல்லாம் தூள்தூளாக்கி விட்டது.*
[43]*ஸமூத் (மக்கள்) இடத்திலும் (ஒரு சான்று உள்ளது.) “ஒரு
குறிப்பிட்ட காலம்வரை சுகம் அனுபவித்துக்கொள்ளுங்கள்”
என்று அவர்களிடம் கூறப்பட்டபோது,* [44]*அவர்கள் தம்
இறைவனின் கட்டளையை(ச் செருக்குடன்) மீறினர். எனவே
அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே (பேரிடி) முழக்கம்
அவர்களைத் தாக்கியது.* [45]*ஆகவே அவர்களால் எழுந்து நிற்கவும்
முடியவில்லை; தம்மைக் காப்பாற்றிக் கொள்ளவும் இயலவில்லை.*
[46]இதற்கெல்லாம் முன்னர் நோவாவின் *சமூகத்தினரையும் (நாம்
அழித்தோம்). உறுதியாக அவர்களும் பாவம்புரியும் மக்களாகவே
இருந்தனர்.*

[47]*நாம் வானத்தை (பிரபஞ்சத்தை) எமது வல்லமையால்
அமைத்தோம். நாம் அதனை விரிவாக்கவும் வல்லோம்.* [48]*(மேலும்)
பூமியை விரித்தோம். நாம் சிறப்பான முறையில் விரிப்போராக
இருக்கிறோம்.* [49]*நீங்கள் (அவனது படைப்புகளைச் சிந்தித்து)
நல்லுணர்வு பெற வேண்டும் என்பதற்காக ஒவ்வொன்றையும் நாம்
(ஆண், பெண் என) இணை இணையாகப் படைத்துள்ளோம்.*
[50]*(நபியே! நீர் மக்களிடம் கூறுவீராக!) “ஆகவே அல்லாஹ்விடம்
விரையுங்கள். அவனிடமிருந்து நான் உங்களைத் தெளிவாக*

எச்சரிப்பவனாக வந்திருக்கிறேன். [51]அல்லாஹ்வுடன் வேறொரு
கடவுளை (இணை) ஆக்கி விடாதீர்கள். அவனிடமிருந்து நான்
உங்களைத் தெளிவாக எச்சரிப்பவனாக வந்திருக்கிறேன்."

[52]இவ்வாறே இவர்களுக்கு முன்பு வாழ்ந்தவர்களும் (தங்களிடம்)
எந்தத் தூதர் வந்தபோதும் "இவர் ஒரு சூனியக்காரர் அல்லது
பைத்தியக்காரர்" என்றுதான் கூறினர். [53]இவர்கள் (வழிவழியாக
நபிமார்களைப் புறக்கணிக்கத்) தங்களுக்குள் 'உபதேசம்' செய்து
கொண்டனரா என்ன? மாறாக, இவர்கள் (அனைவரும்
இயல்பாகவே) வரம்புமீறும் மக்களாவர். [54]ஆகவே (நபியே!) நீர்
இவர்களைப் புறக்கணித்துவிடும். நீர் பழிப்புக்குரியவர் அல்லர்.
[55](நபியே! நீர்) அறிவுரை கூறுவீராக! உறுதியாக அறிவுரை
நம்பிக்கையாளர்களுக்குப் பயனளிக்கும்.

[56]ஜின்களையும் மனிதர்களையும் என்னை வணங்குவதற்காகவே
அன்றி (வேறெதற்கும்) நான் படைக்கவில்லை. [57]நான்
அவர்களிடமிருந்து வாழ்வாதாரம் எதனையும் விரும்பவில்லை;
அவர்கள் எனக்கு உணவளிக்க வேண்டும் என்றும் விரும்பவில்லை.
[58]உறுதியாக அல்லாஹ்வே வாழ்வாதாரம் அளிப்பவன்; வல்லமை
மிக்கவன்; உறுதியானவன். [59]எனவே (இறைத்தண்டனையில்)
இத்தீவினையாளர்களுக்கு இவர்களது (முன்னோர்களாகிய)
தோழர்களின் பங்கைப் போன்ற பெரிய பங்கு உண்டு. எனவே
இவர்கள் அவசரப்பட வேண்டாம். [60](ஓரிறை) மறுப்பாளர்களுக்கு
அவர்கள் வாக்களிக்கப்பட்ட நாளில் கேடுதான்.

## 52. ஸினாய் மலை (அத்தூர்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

[1]ஸினாய் மலை மீது சத்தியமாக! [2-3]தோலில் எழுதி
விரிக்கப்பட்ட (திறந்த தவ்ராத் வேத) நூலின்மீது சத்தியமாக!
[4](வணங்குவோர்) நிறைந்திருக்கும் இறையில்லத்தின் மீது
சத்தியமாக! [5]உயர்ந்த (வான)முகட்டின் மீது சத்தியமாக!

6பொங்கும் கடலின் மீது சத்தியமாக! 7(நபியே!) உறுதியாக
உமது இறைவனின் தண்டனை நிகழ்ந்தே தீரும். 8அதனைத்
தடுப்பவர் எவருமில்லை. 9அந்த நாளில் வானம் நடுநடுங்கும்.
10மலைகள் இடம்பெயர்ந்து செல்லும். 11(நபியே! சத்தியத்தைப்)
பொய்மைப்படுத்தியவர்களுக்கு அந்தநாளில் பேரழிவுதான்.
12(இப்போது) அவர்கள் (வீண்வாதங்களில் மூழ்கி) விளையாடிக்
கொண்டிருக்கின்றனர். 13அந்த நாளில் அவர்கள் நரக நெருப்பில்
திடுமெனத் தள்ளப்படுவர். 14(அவர்களிடம்) “நீங்கள் பொய்யெனக்
கூறிக் கொண்டிருந்த நரக நெருப்பு இதுதான்” (என்று கூறப்படும்).
15“இது என்ன (வெறும்) சூனியமா? (இதை நீங்கள் கண்கூடாகப்)
பார்க்கவில்லையா? 16இதனுள் (நுழைந்து) பொசுங்குங்கள். நீங்கள்
(இதனைப்) பொறுத்துக்கொண்டாலும் பொறுத்துக்கொள்ளா
விட்டாலும் இரண்டும் உங்களுக்குச் சமமே. நீங்கள் செய்த
(தீய)வற்றுக்குத்தான் கூலி கொடுக்கப்படுகிறது” (என்றும் கூறப்படும்.)

17உறுதியாக இறையச்சமுடையோர் சொர்க்கச் சோலைகளில்,
பேரின்பத்தில் (திளைத்திருப்பர்). 18இறைவன் அவர்களுக்கு
அளித்த (பேறுகளைக்)கொண்டு மகிழ்ந்திருப்பர். மேலும் அவன்
நரக வேதனையிலிருந்தும் அவர்களைக் காப்பாற்றியிருக்கிறான்.
19“நீங்கள் செய்த (நற்)செயல்களின் பயனாக மகிழ்ச்சியுடன்
உண்ணுங்கள், பருகுங்கள்” (என்று அவர்களுக்குக் கூறப்படும்).
20அவர்கள் வரிசை வரிசையாகப் போடப்பட்ட கட்டில்களின்மீது
சாய்ந்திருப்பர். நாம் அவர்களுக்கு அழகிய கண்களையுடைய
கன்னியர்களை மணமுடித்து வைப்போம்.

21நம்பிக்கையாளர்களுடன், நம்பிக்கையில் அவர்களைப்
பின்பற்றிய வழித்தோன்றல்களையும் நாம் ஒன்றுசேர்த்து
வைப்போம். அவர்களின் நன்மைகளில் எந்த ஒன்றையும்
நாம் குறைத்துவிட மாட்டோம். ஒவ்வொரு மனிதனும் தான்
ஈட்டியவற்றிற்குப் பிணையாக இருக்கிறான். 22சொர்க்கத்தில்
அவர்கள் விரும்பும் கனிகளையும் இறைச்சியையும் நாம்

அவர்களுக்கு வழங்கிக் கொண்டே இருப்போம். [23]அங்கு அவர்கள்
தங்களுக்கிடையில் (மதுக்) கிண்ணங்களைப் பரிமாறிக் கொள்வர்.
அதில் வீண் பேச்சோ பாவச் செயலோ இராது. [24]அவர்களுக்குரிய
(பணிவிடைச்) சிறுவர்கள் அவர்களைச் சுற்றி வருவர்.
அ(ச்சிறு)வர்கள் (சிப்பிகளுக்குள்) மறைத்து வைக்கப்பட்டிருக்கும்
முத்துக்களைப் போல இருப்பர். [25](சொர்க்கவாசிகளாகிய)
அவர்கள் ஒருவரையொருவர் முன்னோக்கி(த் தம் உலக வாழ்வு
நிகழ்வுகளைக் குறித்து) விசாரித்துக் கொள்வர். [26]“நாம் இதற்கு
முன்னர் நமது குடும்பத்தாரிடையே இருந்தபோது (மறுமையைக்
குறித்து) அஞ்சிக் கொண்டிருந்தோம். [27]அல்லாஹ் நம்மீது அருள்
புரிந்து கொடிய வேதனையிலிருந்தும் நம்மைக் காப்பாற்றினான்.
[28]இதற்கு முன்னர் அவனையே நாம் இறைஞ்சி அழைத்துக்
கொண்டிருந்தோம். உறுதியாக அவன் பேருதவி செய்பவன்;
நிகரற்ற அன்பாளன்” (என்று அவர்கள் பேசிக் கொள்வர்.)

[29](நபியே! ஓரிறைமறுப்பாளர்களுக்கு) அறிவூட்டிக்
கொண்டிருப்பீராக! உம் இறைவனின் அருளால், நீர் குறி
கூறுபவரும் அல்லர்; பித்தரும் அல்லர். [30]“இவர் ஒரு கவிஞர்,
இவர் மீது காலத்தின் பேரிடரை (நாங்கள்) எதிர்பார்த்துக்
கொண்டிருக்கிறோம்” என்று அவர்கள் கூறுகின்றனரா? [31](நபியே!
நீர்) “எதிர்பாருங்கள். நானும் உங்களுடன் எதிர்பார்த்துக்
கொண்டிருக்கிறேன்” (என்று அவர்களிடம் கூறுவீராக!)
[32]அவர்களின் அறிவுதான் அவர்களை இவ்வாறு (பேசத்)
தூண்டுகிறதா? அல்லது அவர்கள் (இயல்பிலேயே) வரம்பு மீறும்
மக்களாக இருக்கின்றனரா? [33]“இதனை (இந்தக் குர்ஆனை) இவர்
தாமே புனைந்து கூறுகிறார்” என்று அவர்கள் கூறுகின்றனரா?
உண்மையில் அவர்கள் நம்பிக்கை கொள்ளவே மாட்டார்கள்.
[34]அவர்கள் உண்மையாளர்களாயின் இதைப்போன்ற ஒரு(வேத)
வாக்கைக் கொண்டுவரட்டும்.

[35]அவர்கள் (படைப்பாளி யாருமின்றித்) தாமாகவே உண்டாகி
விட்டனரா? அல்லது தமக்குத் தாமே படைப்பாளிகளா?

[36]*(எனில்) வானங்களையும் பூமியையும் அவர்கள்தாம்*
*படைத்தனரா? உண்மையில் (படைப்பாளன் மீது) அவர்கள்*
*நம்பிக்கை கொள்ளமாட்டார்கள்.* [37]*அவர்களிடம் உம் இறைவனின்*
*கருவூலங்கள் இருக்கின்றனவா? அல்லது அவர்களே (அவற்றை)*
*ஆள்கின்றவர்களா?* [38]*அவர்களிடம் ஓர் ஏணி இருந்து (அதில் ஏறிச்*
*சென்று) வானுலகில் பேசப்படுபவற்றைச் செவிமடுக்கின்றனரா?*
*அப்படியாயின் அவர்களுள் செவிமடுத்தவன் (அதற்கான)*
*தெளிவான சான்றைக் கொண்டுவரட்டும்.* [39]*அவனுக்குப் பெண்*
*மக்கள்; உங்களுக்கு ஆண் மக்களா?*

[40]*அவர்களிடம் நீர் ஏதேனும் கூலி கேட்டு அக்கடன்*
*சுமையில் அவர்கள் அழுந்திக் கொண்டிருக்கிறார்களா?*
[41]*அவர்களிடம் மறைவானவற்றைப்பற்றிய ஞானம் இருந்து*
*அதனை அவர்கள் எழுதிக் கொண்டிருக்கிறார்களா?* [42]*அவர்கள்*
*ஏதேனும் சூழ்ச்சி செய்ய நாடுகின்றனரா? அப்படியாயின்*
*அவ்விறைமறுப்பாளர்கள்தாம் சூழ்ச்சியில் அகப்பட்டுக் கொள்வர்.*
[43]*அல்லாஹ்வைத் தவிர வேறு ஓர் இறைவன் அவர்களுக்கு*
*இருக்கிறானா? அவர்கள் இணைவைப்பவற்றிலிருந்து அல்லாஹ்*
*(அப்பாற்பட்டுத்)தனித்துயர்ந்தவன்.*

[44]*(அவர்களே கேட்டது போல) வானத்திலிருந்து அதன்*
*ஏதேனும் ஒரு துண்டு கீழே விழுவதை அவர்கள் பார்த்தாலும்*
*அதனை 'அடர்ந்த மேகம்' என்றுதான் கூறுவர்.* [45]*(எனவே,*
*நபியே!) அவர்கள் (அச்சத்தால்) உணர்விழந்து போகும்*
*அந்த நாளைச் சந்திக்கும்வரை நீர் அவர்களை விட்டுவிடும்.*
[46]*அந்தநாளில் அவர்களின் சூழ்ச்சி அவர்களுக்கு எந்தப் பயனையும்*
*அளிக்காது. (எவரும்) அவர்களுக்கு உதவவும்மாட்டார்கள்.*
[47]*தீவினையாளர்களுக்கு இதைத்தவிர (இம்மையிலும்) இன்னொரு*
*வேதனை உண்டு. ஆயினும் அவர்களில் பெரும்பாலோர்*
*(இதனை) அறியமாட்டார்கள்.*

[48](நபியே!) உம் இறைவனின் தீர்ப்புக்காகப் பொறுமையாக இருப்பீராக! உறுதியாக நீர் எம் கண்காணிப்பில் இருக்கின்றீர். நீர் (உறக்கத்திலிருந்து) எழுந்திருக்கும்போது உம் இறைவனைத் துதித்துப் புகழ்வீராக! [49]இரவிலும் நட்சத்திரங்கள் மறையும் நேரத்திலும் அவனது தனித்துயர்வைப் போற்றுவீராக!

# 53. நட்சத்திரம் (அந்நஜ்ம்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

[1]மறைகின்ற நட்சத்திரத்தின் மீது சத்தியமாக!
[2](மக்காவாசிகளே!) உங்கள் தோழர் வழிதவறவுமில்லை, தவறான
வழியில் செலுத்தப்படவும் இல்லை. [3]அவர் தம் மன விருப்பப்படி
பேசுவதில்லை. [4]இது (குர்ஆன்) அவருக்கு அறிவிக்கப்படும்
இறைச்செய்தியேயாகும். [5]வல்லமைமிக்க(கேப்ரியேல் எனும்
வான)வர் அவருக்கு இதனைக் கற்றுக் கொடுத்தார். [6]அவர்
நுண்ணறிவாளர். [7](எமது தூதர் முன் தம் இயற்கை உருவத்தில்)
உயர்ந்த அடிவானத்தில் அ(வ்வான)வர் தோன்றினார். [8]பின்னர்
(மெதுவாக இறங்கி) நெருங்கி(த் தூதரின்) அருகில் வந்தார்.
[9]இரு வில்லின் (நீள) அளவுக்கு அல்லது அதைவிடவும் நெருங்கி
வந்து விட்டார். [10]அல்லாஹ் தன் அடியாருக்கு அறிவிக்கச்
சொன்னதை அவர் அறிவித்தார். [11](தூதர் தம் கண்களால்)
கண்டதைப்பற்றி அவரது உள்ளம் பொய்யுரைக்கவில்லை.
[12]ஆயினும் அவர் கண்டது குறித்து (ஐயுற்று) அவருடன் நீங்கள்
வாதம் செய்கிறீர்களா? [13]மற்றொருமுறை அ(வ்வான)வர் (தமது
இயற்கை வடிவில்) இறங்குவதை(த் தூதர்) கண்டார். [14]இறுதி
எல்லையிலுள்ள இலந்தை மரத்தின் அருகில். [15]அதன் அருகில்தான்
(நிலையான) உறைவிடமாகிய சொர்க்கம் இருக்கிறது. [16]இலந்தை
மரத்தைச் சூழ்ந்து கொள்ளக்கூடிய மறைமெய்ம்மை சூழ்ந்து
கொண்டிருந்தபோது [17](தூதரது) பார்வை தடுமாறவுமில்லை,
எல்லை மீறிச் செல்லவுமில்லை. [18] உறுதியாக அவர் தம்
இறைவனின் மிகப்பெரும் சான்றுகளைக் கண்டார்.

*[19](நீங்கள் வழிபடும்) ‘லாத்’, ‘உஸ்ஸா’ (எனும் தெய்வங்கள் பற்றியும்) [20]மூன்றாவதான ‘மனாத்’ பற்றியும் நீங்கள் (சிந்தித்தீர்களா?) சொல்லுங்கள். [21]உங்களுக்கு ஆண் மக்கள், அவனுக்குப் பெண் மக்களா? [22]அப்படியானால் இது அநீதியான பங்கீடாகும். [23]இவை நீங்களும் உங்கள் முன்னோர்களும் வைத்துக் கொண்ட வெறும் பெயர்களேயன்றி வேறொன்றுமில்லை. இ(வை தெய்வங்கள் என்ப)தற்கு அல்லாஹ் எந்தச் சான்றையும் இறக்கி வைக்கவில்லை. அவர்கள் ஊகங்களையும் மன விருப்பங்களையுமே பின்பற்றுகின்றனர். உறுதியாக அவர்களின் இறைவனிடமிருந்து அவர்களுக்கு வழிகாட்டுதல் வந்தே உள்ளது. [24](அவர்கள் அதனைப் பின்பற்றுவதில்லை). மனிதனுக்கு அவன் விரும்பியதெல்லாம் கிடைத்து விடுமா? [25]மறுமையும் இம்மையும் அல்லாஹ்வுக்கே உரியவை.*

*[26]வானங்களில் எத்தனையோ வானவர்கள் இருக்கின்றனர். அவர்களின் பரிந்துரைகள் (எவருக்கும்) எப்பயனையும் அளிக்கமாட்டா. ஆயினும் அல்லாஹ் யாரை உவப்பு கொண்டு விரும்புகிறானோ, அவர்களுக்காக(ப் பரிந்துரைக்க) யாருக்கு அனுமதியளிக்கின்றானோ அவர்களைத் தவிர (வேறு எவர் பரிந்துரையும் பயன் தராது.) [27]உறுதியாக மறுமையின் மீது நம்பிக்கைகொள்ளாதவர்கள்தாம் வானவர்களுக்குப் பெண்களுக்கான பெயர்களைச் சூட்டுகின்றனர். [28]உண்மையில் இது குறித்து அவர்களுக்கு எந்த அறிவும் இல்லை. அவர்கள் ஊகத்தைத்தான் பின்பற்றுகின்றனர். சத்தியத்திற்குப் பதிலாக ஊகம் எப்பயனையும் அளிக்காது. [29](நபியே!) எமது அறிவுரையைப் புறக்கணித்து இவ்வுலக வாழ்வை மட்டும் விரும்புபவனை நீர் புறக்கணித்து விடுவீராக! அ(த்தகைய)வர்களுடைய அறிவின் எல்லை அதுதான். [30]தனது பாதையை விட்டுப் பிறழ்ந்து விட்டவன் யார் என்பதையும் நேர்வழியில் செல்பவன் யார் என்பதையும் உம் இறைவன் நன்கறிவான்.*

[31]வானங்களிலும் பூமியிலும் உள்ளவை அல்லாஹ்வுக்கே
உரியன. (ஆகவே) தீமை செய்தோர்க்கு அவர்களின் (தீச்)
செயல்களுக்கு(த் தகுந்த தண்டனை)க் கூலியைக் கொடுப்பான்.
நன்மை செய்தோர்க்கு நற்கூலி வழங்குவான். [32](நன்மை செய்யும்)
அவர்கள் சிறு பிழைகளைத் தவிர, பெரும் பாவங்களையும்
மானக்கேடான செயல்களையும் தவிர்த்துவிடுவர். (நபியே!)
உறுதியாக உமது இறைவன் மன்னிப்பதில் தாராளமானவன்.*
(மனிதர்களே! முதன்முதலில்) அவன் உங்களை மண்ணிலிருந்து
படைத்தபோதும் உங்கள் அன்னையரின் வயிறுகளில் நீங்கள்
கருவாக இருந்தபோதும் உங்க(ள் இயல்புக)ளை அவன்
நன்கறிவான். எனவே உங்களை நீங்களே தூயவர்கள் எனக்
கூறிக்கொள்ளாதீர்கள். உண்மையில் இறையச்சமுடையோரை
அவன் நன்கறிவான்.

[33](நபியே!) சத்தியத்தினின்றும் விலகிச் சென்றவனை(ப் பற்றி
நினைத்து)ப் பார்த்தீரா? [34](நண்பனுக்கு வாக்களித்த தொகையில்)
சிறிது அளித்துவிட்டுப் பின்னர் நிறுத்திக் கொண்டான்.
[35]அவனிடம் (மனித அறிவுக்கு எட்டாத) மறைஞானம் இருந்து
அதன்மூலம் அவன் (மறுமை நிகழ்வுகளைப்) பார்த்துக்
கொண்டிருக்கிறானா? [36]மோசேயின் ஆகமங்களில் உள்ளவை
அவனுக்குத் தெரிவிக்கப்படவில்லையா? [37]தம் வாக்குறுதியை
முழுமையாக நிறைவேற்றிய ஆப்ரஹாமின் ஆகமங்களிலுள்ள
செய்திகள் (அவனுக்குத் தெரிவிக்கப்படவில்லையா?) [38](அவற்றில்
உள்ளது: பாவம் சுமக்கும்) எந்த ஒருவரும் மற்றொருவரின்
(பாவச்) சுமையைச் சுமக்க முடியாது. [39](மேலும்) மனிதனுக்கு

---

*மனிதன் எதனைச் செய்ய வேண்டும் எதனைச் செய்யக் கூடாது என்பதற்கான முழு வழிகாட்டுதலையும் எல்லாம்வல்ல இறைவன் அளித்திருக்கிறான். இருந்தாலும் சிறிய பாவங்களுக்காக மனிதன் மன்னிக்கப்படலாம். அதாவது உணர்ச்சி வசப்பட்ட நிலையில் எதனையாவது செய்துவிட்டு அதனை உடனடியாக உணர்ந்து வெட்கப்பட்டுத் தனது தவற்றை ஒப்புக் கொண்டு இறைவனிடம் மன்னிப்புக் கோரினால் இறைவனால் மன்னிக்கப்படலாம்.

அவன் எதை அடைய முயன்றானோ அதைத் தவிர வேறெதுவும்
வழங்கப்படமாட்டாது. [40]அவனது நன் முயற்சிகள் (தரும் பயன்
மறுமையில்) அவனுக்குக் காட்டப்படும். [41]பின்னர் நிறைவான
கூலி அவனுக்கு வழங்கப்படும்.

[42](நபியே!) இறைவனிடமே (உங்கள்) அனைவரின் இறுதிப்
புகலிடம் உள்ளது. [43]உறுதியாக அவன்தான் சிரிக்க வைக்கிறான்,
அழவும் வைக்கிறான். [44]அவன்தான் இறக்கச் செய்கிறான்.
உயிர்ப்பிக்கவும் செய்கிறான். [45]அவன்தான் ஆண் பெண் (எனும்)
இணைகளைப் படைத்தான், [46]செலுத்தப்படும் ஒரு துளி
விந்திலிருந்து! [47]மீண்டும் உயிர்கொடுத்து எழுப்புவதும் அவனது
பொறுப்பேயாகும். [48]அவன்தான் உடைமைகளை வழங்கிச்
செல்வனாக்குகிறான். [49]அவன்தான் ‘ஷிஃரா’வின் (ஒரு மிகப்
பெரும் நட்சத்திரம்) இறைவனாவான்.

[50]அவன்தான் ஆத் சமூகத்தாரை அழித்தான். [51]ஸமூத்
சமூகத்தாரையும் (அவன்தான் அழித்தான். அவர்களில்
யாரையும்) அவன் விட்டு வைக்கவில்லை. [52]அவர்களுக்கு முன்னர்
நோவாவின் சமூகத்தாரையும் (அவன்தான் அழித்தான்). அவர்கள்
தீவினையாளர்களாகவும் வரம்பு மீறியவர்களாகவும் இருந்தனர்.
[53](லோத் சமூகத்தினரின்) ஊர்களையும் அவன்தான் புரட்டி
அழித்து விட்டான். [54]எனவே அவர்களைச் சூழ வேண்டியது
(வேதனை) சூழ்ந்து கொண்டது. [55]ஆகவே (மனிதனே!) உன்
இறைவனின் அருட்கொடைகளில் எதனை நீ ஐயுறுகிறாய்?

[56]முந்தைய எச்சரிக்கையாளர்களைப் போன்றே இவரும் ஓர்
எச்சரிக்கையாளர்தான். [57]நெருங்க வேண்டிய(மறுமையான)து
(மிக) நெருங்கி விட்டது. [58]அதனைத் தடுப்பவர் அல்லாஹ்வைத்
தவிர எவரும் இல்லை. [59]இச்செய்திகளைக் குறித்து நீங்கள்
வியப்படைகிறீர்களா? [60]நீங்கள் சிரிக்கிறீர்களே! அழ வேண்டாமா?
[61]நீங்கள் செருக்குக்கொள்கிறீர்களே! [62]அல்லாஹ்வின் முன்
தலைவணங்குங்கள், அவனையே வழிபடுங்கள்.

# 54. சந்திரன் (அல்கமர்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

*[1]மறுமை நாள் நெருங்கி விட்டது. (அதன் முன்னறிவிப்பாகச்) சந்திரன் பிளந்து விட்டது. [2]இவர்கள் எந்த (ஓர் இறைச்) சான்றைக் கண்டாலும் புறக்கணிக்கின்றனர். "இது வழக்கமாக நடைபெறும் சூனியம்தான்" என்று கூறுகின்றனர். [3]இவர்கள் சத்தியத்தைப் பொய்மைப்படுத்தித் தங்கள் மன விருப்பங்களையே பின்பற்றுகின்றனர். ஒவ்வொரு நிகழ்வுக்கும் வரையறுக்கப்பட்ட நேரம் உண்டு. [4](முன்னோர் வரலாறுகளிலிருந்து) பல எச்சரிக்கைச் செய்திகள் இவர்களிடம் வந்தே இருக்கின்றன. [5]அவை முதிர்ந்த ஞானமுடையவை. ஆயினும் எச்சரிக்கைகள் இவர்களுக்குப் பயனளிக்கவில்லை. [6-8]எனவே (நபியே!) இவர்களை விட்டு விலகி விடுவீராக! வெறுப்புக்குரிய (கேள்விக்கணக்கு) நிகழ்வுக்காக அழைப்பாளர் அழைக்கும் (மறுமை) நாளில் இவர்கள் பார்வைகளைத் தாழ்த்தியபடி, பரவிக் கிடக்கும் வெட்டுக் கிளிகளைப் போலச் சவக்குழிகளிலிருந்து வெளியேறி, அழைப்பாளரை நோக்கி விரைவார்கள். (அப்போது) இறைமறுப்பாளர்கள் "இது மிகக் கடினமான நாள்" என்று கூறுவர்.*

*[9]இவர்களுக்கு முன்னர் நோவாவுடைய சமூகத்தினர் (சத்தியத்தைப்) பொய்மைப்படுத்தினர். எமது அடியாரையும் பொய்மைப்படுத்தினர்; 'பித்தர்' எனவும் (பழித்துக்) கூறினர். அவர் மிரட்டப்பட்டார். [10]தம் இறைவனிடம் அவர், "நான் தோற்கடிக்கப்பட்டிருக்கிறேன்; எனக்கு உதவி புரிவாயாக" என்று இறைஞ்சி வேண்டினார். [11]எனவே கொட்டும் கடும் மழையால் வானத்தின் வாசல்களைத் நாம் திறந்து விட்டோம். [12]பூமியிலிருந்து நீரூற்றுகளையும் பீறிட்டு ஓடச் செய்தோம். (முன்பே) விதிக்கப்பட்ட நிகழ்வுக்காக இருவகை நீரும் ஒன்றிணைந்தன. [13](நாம்) அவரை(யும் அவரைப் பின்பற்றியோரையும்) பலகைகளாலும் ஆணிகளாலும்*

*செய்யப்பட்ட கப்பலில் ஏற்றிக் கொண்டோம். [14]அது எம் கண்காணிப்பில் சென்றது; (தம் மக்களால்) மறுக்கப்பட்ட (எம் அடிய)வருக்கு (நற்)கூலியாக (அது அமைந்தது). [15]நாம் அதனை ஒரு சான்றாக விட்டு வைத்தோம். (இதன் மூலம்) சிந்தித்து உணர்பவர் யாரேனும் உண்டா? [16](எனவே) எனது தண்டனையும் எச்சரிக்கையும் எப்படி(க் கடுமையாக) இருந்தன (என்று பாருங்கள்). [17]உறுதியாக இந்தக் குர்ஆனை (மனிதர்கள்) அறிவுரை பெறும்பொருட்டு நாம் எளிதாக்கியுள்ளோம். ஆகவே அறிவுரை பெறுவோர் எவரேனும் இருக்கின்றனரா?*

[18]*‘ஆத்’ சமூகத்தினரும் (சத்தியத்தைப்) பொய்யென்றனர். (எனவே) எனது தண்டனையும் எச்சரிக்கையும் எப்படி(க் கடுமையாக) இருந்தன (என்று பாருங்கள்). [19]நீடித்த கெடுபேறான ஒருநாளில் அவர்கள்மீது கடும் புயல் காற்றை நாம் ஏவினோம். [20]அது வேரோடு பிடுங்கப்பட்ட பேரீச்சை மரங்களைப் போல மக்களைத் தூக்கி எறிந்தது. [21]எனவே எனது தண்டனையும் எச்சரிக்கையும் எப்படி(க் கடுமையாக) இருந்தன (என்பதைப் பாருங்கள்!) [22]உறுதியாக இந்தக் குர்ஆனை (மனிதர்கள்) அறிவுரை பெறும்பொருட்டு நாம் எளிதாக்கியுள்ளோம். ஆகவே அறிவுரை பெறுவோர் யாரேனும் இருக்கின்றனரா?*

[23]*‘ஸமூத்’ சமூகத்தினரும் (எமது தூதர் சாலிஹ் மூலம் நாம் விடுத்த) எச்சரிக்கைகளைப் பொய்மைப்படுத்தினர். [24]அவர்கள், “நம்மில் ஒருவராக உள்ள ஒரு மனிதரையா நாம் பின்பற்றுவது? அவ்வாறு செய்தால் நாம் கெடுவழியிலும் பித்து நிலையிலும் இருக்கிறோம் என்று ஆகிவிடும். [25]நம்மிடையே இவருக்கு (மட்டும்தான்) இறைச்செய்தி வழங்கப்பட்டுள்ளதா? இல்லை, இவர் பெரும் பொய்யர்; தற்பெருமைக்காரர்” என்று கூறினர். [26](நாம் எம்முடைய தூதரிடம் சாலிஹே!) ‘பெரும் பொய்யர்’, ‘தற்பெருமைக்காரர்’ யார் என்பதை நாளை அவர்கள் திடமாக அறிந்து கொள்வார்கள். [27]நாம் அவர்களுக்குச் சோதனையாக*

ஒரு பெண் ஒட்டகத்தை அனுப்பி வைப்போம். நீர் அவர்களைப்
பொறுமையுடன் கவனித்துவாரும். [28](கிணற்றுத்) தண்ணீர்
அவர்களுக்கு(ம் ஒட்டகத்திற்கும்) இடையே பங்கிடப்பட்டுள்ளது
என்பதையும் ஒவ்வொருவரும் (அவரவர் தவணை) முறைப்படி
நீரருந்த வரலாம் என்பதையும் அவர்களுக்கு அறிவித்துவிடும்"
(என்று கட்டளையிட்டோம்) [29](அதனை விரும்பாத) அவர்கள்
தம் தோழனை அழைத்தனர். அவன் ஒட்டகத்தின் கால் நரம்பை
வெட்டி(க் கொன்று) விட்டான். [30]எனவே எனது தண்டனையும்
எச்சரிக்கையும் எப்படி(க் கடுமையாக) இருந்தன (என்பதைப்
பாருங்கள்!) [31]நாம் அவர்கள்மீது (இடிமுழக்கப்) பேரோசையை
ஏவினோம். அவர்கள் தொழுவத்தில் மிதித்து நசுக்கப்பட்ட
வைக்கோல் கூளங்களைப் போலாகி விட்டனர். [32]உறுதியாக
இந்தக் குர்ஆனை (மனிதர்கள்) அறிவுரை பெறும்பொருட்டு நாம்
எளிதாக்கியுள்ளோம். ஆகவே அறிவுரை பெறுவோர் யாரேனும்
இருக்கின்றனரா?

[33]லோத்துடைய சமூகத்தினரும் (லோத் மூலம் நாம் விடுத்த)
எச்சரிக்கைகளைப்) பொய்மைப்படுத்தினர். [34]நாம் அவர்கள்மீது
(சுடு) கல்மாரி பொழியும் காற்றை ஏவினோம். ஆயினும் (அதற்கு
முன்னரே) லோத்தின் குடும்பத்தினரை விடிகாலையில் நாம்
காப்பாற்றிக் கொண்டோம். [35]இது எம் அருளாகும். நன்றி
செலுத்துவோருக்கு இவ்வாறே நாம் (நற்கூலி) வழங்குகிறோம்.
[36]லோத் எமது தண்டனையைக் குறித்து எச்சரிக்கை
செய்திருந்தார். ஆயினும் அவர்கள் எச்சரிக்கையைக் குறித்து
ஐயுற்று வீண்வாதம் செய்தனர். [37]அவரது விருந்தினர்களைத்
தம் இச்சைக்கு இணங்க வைக்குமாறு அவரிடம் வற்புறுத்தினர்.
நாம் அவர்களின் பார்வைகளைப் பறித்து விட்டோம். "எனது
தண்டனையையும் எச்சரிக்கையையும் அனுபவியுங்கள்" என்று
கூறினோம். [38]விடிகாலையில் நிலையான வேதனை அவர்களைத்
தாக்கியது. [39]"இதோ எனது தண்டனையையும் எச்சரிக்கையையும்
அனுபவியுங்கள்" என்று கூறினோம். [40]உறுதியாக இந்தக்

*குர்ஆனை (மனிதர்கள்) அறிவுரை பெறும்பொருட்டு நாம் எளிதாக்கியுள்ளோம். ஆகவே அறிவுரை பெறுவோர் யாரேனும் இருக்கின்றனரா?*

*41ஃபாரோவுடைய சமூகத்தினரிடமும் எச்சரிக்கையாளர்கள்
வந்தனர். 42எம் சான்றுகள் அனைத்தையும் (அச்சமூகத்தினர்)
பொய்மைப்படுத்தினர். எனவே யாவற்றினும் மிக்கவன்; பெருவலிமை வாய்ந்தவன் தண்டிப்பதைப் போன்று நாம் அவர்களைத் தண்டித்தோம்.*

*43(மக்காவாசிகளே!) அவர்களைவிட உங்களிலுள்ள (ஓரிறை)மறுப்பாளர்கள் சிறந்தவர்களா? அல்லது வேதங்களில் 'உங்களுக்கு(ப் பாவ)மன்னிப்பு உண்டு' என்று ஏதும் உள்ளதா?
44அல்லது '(நபியே!) பெருங்கூட்டத்தினரான நாங்கள்தாம்
வெற்றிபெறுவோம்' என்று இவர்கள் கூறுகிறார்களா? 45விரைவில்
இக்கூட்டத்தார் தோற்கடிக்கப்படுவர்; புறமுதுகு காட்டி ஓடுவர்.
46உண்மையில் மறுமை நாள்தான் இவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட
நாளாகும். அந்நாள் மிகக் கடுமையானதும் மிகக் கசப்பானதுமாகும்.
47உறுதியாக (இக்)குற்றவாளிகள் கெடுவழியிலும் பித்துநிலையிலும்
இருக்கின்றனர். 48இவர்கள் நரகத்திற்கு முகங்குப்புற இழுத்துச்
செல்லப்படும் நாளில் "அனுபவியுங்கள் நரக நெருப்பை" என்று இவர்களிடம் கூறப்படும்.*

*49உறுதியாக ஒவ்வொன்றையும் ஒரு (குறிப்பிட்ட)
அளவின்படியே படைத்திருக்கிறோம். 50(எதையும் செய்வதற்கான)
எமது ஆணை கண்ணிமைப்பது போன்ற ஒன்றுதான்; (உடனே
அது) நிறைவேறிவிடும். 51(மக்காவாசிகளே!) உங்களைப் போன்ற
(தீவினையாளர்கள்) பலரையும் நாம் அழித்திருக்கிறோம். (அவற்றிலிருந்து) நல்லறிவு பெறுபவர் யாரேனும் உண்டா?
52இவர்கள் செய்தவை யாவும் பதிவேடுகளில் உள்ளன.
53சிறியவை, பெரியவை அனைத்தும் பதிவு செய்யப்பட்டுள்ளன.*

[54]இறையச்சமுடையவர்கள் சொர்க்கச் சோலைகளிலும் ஆறுகளி(ன் அருகி)லும் தங்கியிருப்பர். [55]சத்தியத்தின் பேரவையில் அனைத்தாற்றலும் கொண்ட அரசனுக்கு அருகில் அவர்கள் இருப்பர்.

# 55. அளவற்ற அருளாளன் (அர்ரஹ்மான்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1]அளவற்ற அருளாளன். [2]குர்ஆனைக் கற்றுக் கொடுத்தான். [3]அவன்தான் மனிதனைப் படைத்தான். [4]அவனுக்கு (விளக்கமாக)ப் பேசக் கற்றுக் கொடுத்தான். [5]சூரியனும் சந்திரனும் (அவனுடைய) கணிப்பின்படியே இயங்குகின்றன. [6]நட்சத்திரங்களும் மரங்களும் அவனுக்குத் தலைவணங்குகின்றன. [7](அவன்) வானத்தை உயர்த்தி(ப் பிரபஞ்ச இயக்க ஒழுங்கு எனும் நீதி)த் தராசை நிறுவினான். [8]மக்களே! (அதனைப் பின்பற்றி உலகில்) நீங்கள் நீதி தவறாதிருக்க வேண்டும் என்பதற்காக! [9]நிறுவையை நிறுப்பதை நியாயமாகச் செய்யுங்கள்; எடையைக் குறைத்து விடாதீர்கள்.

[10]அவன் பூமியை(த் தனது) படைப்பினங்களுக்காக அமைத்தான். [11]அதில் பழங்களும் பாளைகளுடைய பேரீச்சை மரங்களும் இருக்கின்றன. [12]உமி மூடிய தானியங்களும் வாசனைப் பூண்டுகளும் இருக்கின்றன. [13]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? [14]மண்பாண்டம் போல(த் தட்டினால்) ஒலி எழுப்பும் காய்ந்த களிமண்ணிலிருந்து அவன் மனிதனைப் படைத்தான். [15]தீப்பிழம்பிலிருந்து ஜின்களைப் படைத்தான். [16]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? [17](கோடை, குளிர் காலங்களில் சூரியன் உதிக்கும்) இரு கீழ்த் திசைகளுக்கும் (சூரியன் மறையும்) இரு மேல் திசைகளுக்கும் அவன்தான் உரிமையாளன். [18]ஆகவே

(மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள்
இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக்
கூறுவீர்கள்? 19அவன்தான் இரு கடல்களையும் சந்திக்கச் செய்தான்.
20(ஆயினும்) அவற்றிற்கிடையில் ஒரு தடுப்பும் இருக்கின்றது. அவை
அதனை மீறுவதில்லை. 21ஆகவே (மனிதர்களே! ஜின்களே!)
நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில்
எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? 22அவ்விரண்டிலிருந்தும்
முத்தும் பவளமும் வெளிப்படுகின்றன. 23ஆகவே (மனிதர்களே!
ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின்
அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்?
24மலைகளைப் போல உயர்ந்து கடலில் செல்லும் கப்பல்களும்
அவனுக்குரியவையே. 25ஆகவே (மனிதர்களே! ஜின்களே!)
நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில்
எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்?

26பூமியில் உள்ள அனைத்தும் அழியக்கூடியவையே!
27மகத்துவமும் கண்ணியமும் நிறைந்த உமது இறைவனின் முகம்
மட்டுமே நிலைத்திருக்கும். 28ஆகவே (மனிதர்களே! ஜின்களே!)
நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில்
எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? 29வானங்களிலும் பூமியிலும்
உள்ளோர் (தம் தேவைகள் அனைத்தையும்) அவனிடமே
வேண்டுகிறார்கள். ஒவ்வொரு நாளும் அவன் புதுப்புது
நிலைகளில் இருக்கிறான். 30ஆகவே (மனிதர்களே! ஜின்களே!)
நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில்
எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்?

31இரு பெரும் கூட்டத்தோரே! மிக விரைவில் நாம் உங்களின்
மீது கவனம் செலுத்துவோம். 32ஆகவே நீங்கள் இரு சாராரும்
உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக்
கூறுவீர்கள்? 33மனித, ஜின் கூட்டத்தோரே! (தப்பித்துக்
கொள்வதற்காக) வானங்கள் பூமி ஆகியவற்றின் எல்லைகளை
உங்களால் (ஊடுருவிக்) கடந்து செல்ல இயலுமானால் சென்று

பாருங்கள். ஆயினும் (எமது) அதிகாரமின்றி உங்களால் கடந்து
செல்ல இயலாது. [34]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு
சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப்
பொய்யெனக் கூறுவீர்கள்? [35](தப்பியோட முயன்றால்) உங்கள்
மீது தீச்சுவாலையும் உருக்கிய செம்பும் ஏவப்படும். உங்களால்
(அவற்றினின்றும்) தப்ப முடியாது.* [36]ஆகவே (மனிதர்களே!
ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின்
அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்?

[37]வானம் பிளந்து காய்ந்த எண்ணெய் போலும் செந்தோல்
போலும் சிவப்பாகிவிடும். [38]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!)
நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில்
எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? [39](மறுமையாகிய) அந்நாளில்
(பாவம்புரிந்த) மனிதர்களோ ஜின்களோ தம் பாவங்களைக் குறித்து
விசாரிக்கப்படமாட்டார்கள். [40]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!)
நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில்
எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? [41]குற்றவாளிகள் அவர்களின்
முக அடையாளங்கள் கொண்டு அறியப்படுவார்கள். அப்போது
அவர்களின் நெற்றி முடியையும் பாதங்களையும் பிடித்து(த் தூக்கி)
நரகத்தில் வீசப்படுவர். [42]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!)
நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில்
எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? [43]குற்றவாளிகள்
பொய்யெனக் கூறிக் கொண்டிருந்த நரகம் இதுதான். [44]அவர்கள்

---

*இந்த நடப்புலகு என்பது சோதனைக்கான ஒரு இடமேயாகும். இந்தச் சோதனைக்கான காலம் எவ்வளவு நீள்கிறதோ அதுவரை தங்கள் மனவிருப்பப்படி கர்வத்துடன் செயல்படும் வாய்ப்பு ஒவ்வொருவருக்கும் உள்ளது. ஆனால் இந்த முழுமையான சுதந்திரம் இருந்தும் எந்த ஒரு மனிதனுக்கும் ஜின்னுக்கும் பிரபஞ்சத்தின் எல்லைகளை மீறிச்செல்லும் சக்தி கிடையாது. மனிதன் முழுக்க முழுக்க இறைவனின் பிடிக்குள் இருக்கிறான் என்பதை நிருபிக்க இந்த உண்மையே போதுமானதாகும். சோதனைக்காலம் முடிவுற்றதும் இறைவன் மக்களைப் பிடிக்கத் தொடங்கும்போது தன்னைத்தானே காத்துக் கொள்வது என்பது எவருக்கும் சாத்தியப்படாது.

இத(ன் நெருப்பி)னுக்கும் கொதிக்கின்ற நீருக்கும் இடையே சுழன்று கொண்டிருப்பர். [45]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்?

[46]தம் இறைவனின் முன்னால் நிற்க வேண்டியிருப்பது குறித்து அஞ்சுபவருக்கு (சொர்க்கத்தில்) இரு சோலைகள் உண்டு. [47]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? [48]அவையிரண்டும் எண்ணற்ற கிளைகளையுடையவை. [49]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? [50]அவ்விரண்டிலும் இரு நீரூற்றுகள் ஓடிக்கொண்டிருக்கும். [51]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? [52]அவ்விரண்டிலும் உள்ள ஒவ்வொரு கனியிலும் இரு வகைகள் இருக்கும் [53]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? [54](சொர்க்கவாசிகள்) விரிப்புகளின்மீது சாய்ந்திருப்பார்கள். அவற்றின் உட்பகுதிகள் கனமான பட்டிலானவையாக இருக்கும். அவ்விரு சோலைகளிலும் (பறிப்பதற்கு ஏதுவாகப்) பழங்கள் (கிளைகளில்) இருக்கும். [55]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? [56]அவற்றில் கீழ்நோக்கிய பார்வையுடைய கன்னியர்கள் இருப்பர். அவர்களை (சொர்க்கவாசிகளாகிய) இவர்களுக்கு முன்னர் எந்தவொரு மனிதனும் ஜின்னும் தீண்டியிருக்கமாட்டார்கள். [57]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? [58]அவர்(அப்பெண்)கள்

மாணிக்கத்தையும் பவளத்தையும் போன்றிருப்பார்கள். 59 ஆகவே
(மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள்
இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக்
கூறுவீர்கள்? 60 (இம்மையில் செய்த) நன்மைக்கு (மறுமையில்)
நன்மையைத்தவிர வேறு கூலி உண்டா? 61 ஆகவே (மனிதர்களே!
ஜின்களே!) நீங்கள் (இரு சாராரும்) உங்கள் இறைவனின்
அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்?

62 அவற்றைத்தவிர (சொர்க்கத்தில் இன்னும்) இரு சோலைகளும்
இருக்கின்றன. 63 ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள்
(இரு சாராரும்) உங்கள் இறைவனின் அருட்கொடைகளில்
எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? 64 இரண்டும் கரும்பச்சை
நிறமுடையவை. 65 ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு
சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப்
பொய்யெனக் கூறுவீர்கள்? 66 அவ்விரண்டிலும் இரு ஊற்றுகள்
பொங்கிக் கொண்டிருக்கும். 67 ஆகவே (மனிதர்களே! ஜின்களே!)
நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில்
எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? 68 அவ்விரண்டிலும்
(பல்வேறு) கனி(மரங்)களும் பேரீச்சை (மரங்)களும் மாதுளை
(மரங்)களும் இருக்கும். 69 ஆகவே (மனிதர்களே! ஜின்களே!)
நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில்
எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்? 70 அவற்றில் அழகிய
நற்குணமுள்ள கன்னியர்கள் இருப்பர். 71 ஆகவே (மனிதர்களே!,
ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள் இறைவனின்
அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கூறுவீர்கள்?
72 கண்ணழகிகளான அக்கன்னியர்கள் கூடாரங்களில்
வசித்திருப்பர். 73 ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு
சாராரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப்
பொய்யெனக் கூறுவீர்கள்? 74 அவர்களை இவர்களுக்கு முன்னர்
எந்த ஒரு மனிதனும் ஜின்னும் தீண்டியிருக்கமாட்டார்கள்.
75 ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள்

*இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக்
கூறுவீர்கள்? [76]அவர்கள் (சொர்க்கவாசிகள்) பச்சை நிறக்
கம்பளங்களிலும் அழகிய விரிப்புகளிலும் சாய்ந்திருப்பார்கள்.
[77]ஆகவே (மனிதர்களே! ஜின்களே!) நீங்கள் இரு சாராரும் உங்கள்
இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக்
கூறுவீர்கள்? [78]மாட்சிமையும் கண்ணியமும் நிறைந்த உமது
இறைவனின் (திருப்)பெயர் அருட்பேறுகள் மிக்கதாகும்.*

## 56. நிகழக்கூடியது (அல்வாகிஆ)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]தவிர்க்க முடியாதது நிகழ்ந்து விடும்போது [2]அது நிகழ்வதை
(எவராலும்) பொய்மைப்படுத்த முடியாது. [3]அது (தீயோரைத்)
தாழ்த்தக்கூடியதும் (நல்லோரை) உயர்த்தக்கூடியதுமாகும். [4]பூமி
வன்மையாகக் குலுக்கப்படும்போது, [5]மலைகள் (நொறுக்கப்பட்டு)
தூள்தூளாகி, [6]பறக்கடிக்கப்பட்ட புழுதியாகிவிடும். [7]அப்போது
(மனிதர்களே!) நீங்கள் மூன்று பிரிவினராகி விடுவீர்கள்.**

*[8]வலப்புறத்தில் உள்ள பிரிவினர்! எத்துணை
நற்பேறுடையவர்கள் வலப்புறத்தில் உள்ளவர்கள்! [9]இடப்புறத்தில்
உள்ள பிரிவினர், எத்துணைத் தீப்பேறுடையவர்கள்*

---

***இந்த நடப்புலகில் தான் விரும்பிய எதனையும் செய்வதற்கான சுதந்திரம் இருப்பதாக மனிதன் எண்ணுகிறான். எனவே மறுமை நாளில் விதிக்கப்படும் தண்டனைகளைக் குறித்து எந்தத் தாக்கமும் இல்லாதிருக்கிறான். ஆனால் இந்த உலகு என்பது உருவாக்கப்பட்டதைப் போன்றே மறுமை உலகின் உருவாக்கமும் சாத்தியமான ஒன்றே. அந்த வேளை வரும்போது முழுமையான அமைப்பு முறையும் மீண்டும் நிகழும். நிலையில் உயர்வாக உள்ளவர்கள் தாழ்ந்து போவார்கள், தாழ்ந்த நிலையில் இருப்பவர்கள் உயர்த்தப்படுவார்கள். அந்த நேரத்தில் மனிதர்கள் மூன்று பிரிவாகப் பிரிக்கப்படுவார்கள். 'அஸ்ஸாபிகூன்' எனப்படுவோர் முன்னிலை மக்களாகவும், 'அஸ்ஹாபுல் யமீன்' எனப்படுவோர் வலப்பக்க மக்களாவும் 'அஸ்ஹாபுஷ்ஷிமால்' எனப்படுவோர் இடப்பக்க மக்களாவும் இருப்பார்கள்.**

இடப்புறத்தில் உள்ளவர்கள்! [10](மூன்றாம் பிரிவினர் உலகில்
நற்செயல் புரிவதில் பிறரைவிட) முந்தியவர்கள்! அவர்கள்
(சொர்க்கப் பேற்றிலும்) முதன்மையானவர்கள்! [11]அவர்கள்
(இறைவனுக்கு) நெருக்கமானவர்கள். [12]பேரின்ப(சொர்க்க)ச்
சோலைகளில் (அவர்கள்) இருப்பர். [13](முந்தைய நபிமார்களின்
காலத்து) முன்னோரில் பலரும் [14](இத்தூதரின் காலத்துக்குப்)
பின் வருவோரில் சிலரும் (சொர்க்கச் சோலைகளில்) இருப்பர்.
[15](சொர்க்கவாசிகள்) பொன்னிழைகளாலும் வைரங்களாலும்
அலங்கரிக்கப்பட்ட இருக்கைகளில் சாய்ந்து, [16]ஒருவரையொருவர்
பார்த்தவாறு அமர்ந்திருப்பர். [17]என்றும் இளமையாக இருக்கும்
சிறுவர்கள் அவர்களிடையே சுற்றி வருவர். [18]தூக்குகளையும்
குவளைகளையும் தூய்மையான மதுநிரம்பிய கிண்ணங்களையும்
ஏந்தியபடி (சுற்றிவருவர்). [19]அ(தை அருந்துவ)தனால் தலைவலியும்
ஏற்படாது, அறிவும் பிறழாது. [20]அவர்கள் விரும்பித் தெரிவு செய்யும்
பழங்களுடனும் [21]அவர்களுக்கு விருப்பமான பறவைகளின்
இறைச்சியுடனும் (அச்சிறுவர்கள் சுற்றி வருவர்). [22]அழகிய பெரிய
விழிகளையுடைய சொர்க்கக் கன்னியர்களும் அவர்களுக்காக
இருப்பர். [23]அவர்கள் சிப்பிக்குள் வைத்துக் காக்கப்படும்
முத்துக்களைப் போல இருப்பர். [24]இவை (அனைத்தும்) அவர்கள்
(உலகில்) செய்து கொண்டிருந்த (நல்ல)வற்றுக்குக் கூலியாகும்.
[25]அங்கு அவர்கள் வீண் பேச்சுக்களையோ பாவச் சொற்களையோ
செவியுறமாட்டார்கள். [26]‘சாந்தி, சாந்தி’ என்ற சொல்லைத் தவிர
(தீய எச்சொல்லையும் செவியுறமாட்டார்கள்).

[27]வலப்புறத்தில் உள்ளவர்கள்! எத்துணை நற்பேறுடையவர்கள்
வலப்புறத்தில் உள்ளவர்கள்! [28]முள்ளில்லாத இலந்தை மரங்களின்
கீழும் [29]அடுக்கடுக்கான குலைகள் கொண்ட வாழை மரங்களின்
அருகிலும் [30]பரந்து விரிந்த நிழலிலும் [31]ஓடிக்கொண்டிருக்கும்
நீருக்கு அருகிலும் [32]பல்வேறு கனிகளிடையிலும் – [33]அவை
என்றும் தீர்ந்துவிடாதவை; (பறிப்பதற்குத்) தடுக்கப்படாதவை –
[34]உயர்ந்த விரிப்புகளில் (அவர்கள் அமந்திருப்பர்). [35](அவர்களின்

*துணைகளான) அப்பெண்களை நாம் தனித்தன்மையுடன்
படைத்தோம். [36]அவர்களை நாம் கன்னியர்களாகவே வைத்தோம்.
[37](தத்தம்) கணவரை நேசிப்போராகவும் சம வயதுடையோராகவும்
ஆக்கினோம், [38]வலப்புறத்தில் உள்ளவர்களுக்காக!
[39]முன்னோர்களில் பலரும், [40]பின்னோர்களில் பலரும்
(வலப்புறத்தோர்) ஆவர்.*

*[41]இடப்புறத்தில் உள்ளவர்கள்! எத்துணைத்
தீப்பேறுடையவர்கள் இடப்புறத்தில் உள்ளவர்கள்! [42]அவர்கள்
அனல் காற்றிலும் கொதிக்கும் நீரிலும் [43]கரும்புகை நிழலிலும்
இருப்பார்கள். [44]அதில் குளிர்ச்சியும் இராது, சுகமும் இராது.
[45]அவர்கள் இதற்கு முன்னர் (உலக வாழ்வில்) சுகவாசிகளாக
இருந்தனர். [46]பெரும் பாவங்களைப் புரிவதில் பிடிவாதமாக
இருந்தனர் [47]"நாங்கள் இறந்து மண்ணாகவும் எலும்புகளாகவும்
ஆகிவிட்டபின்னர் மீண்டும் எழுப்பப்படுவோமா? [48]எங்களின்
முன்னோர்களுமா (எழுப்பப்படுவர்?)" என்று (ஏளனமாகக்)
கேட்டுக் கொண்டிருந்தனர். [49](நபியே!) நீர் கூறுவீராக! "உறுதியாக
முன்னோர்கள், பின்னோர்கள் [50]அனைவரும் ஒரு குறிப்பிட்ட
நாளின் குறிப்பிட்ட நேரத்தில் ஒன்று திரட்டப்படுவீர்கள்.
[51]பின்னர், வழிகெட்டவர்களே! (மறுமையாகிய அந்நாளைப்)
பொய்மைப்படுத்தியவர்களே! [52]நீங்கள் கள்ளி மரத்திலிருந்து
(அதன் கனிகளை) உண்பீர்கள். [53]அதைக் கொண்டு வயிறுகளை
நிரப்பிக் கொள்வீர்கள். [54]அதற்கும் மேலாகக் கொதிக்கின்ற
நீரை அருந்துவீர்கள். [55]தாகம் கொண்ட ஒட்டகத்தைப் போல
அருந்துவீர்கள்" [56]இதுதான் தீர்ப்புநாளில் அவர்களுக்குரிய
விருந்தாகும்.*

*[57](மனிதர்களே!) நாமே உங்களைப் படைத்தோம்.
(அவ்வாறிருக்க, உங்களை நாம் மறுமுறை படைப்போம் என்பதை)
ஏன் நீங்கள் உண்மையென ஏற்றுக் கொள்வதில்லை? [58]நீங்கள்
செலுத்துகின்ற விந்துத்துளியைக் கவனித்தீர்களா? [59]அதனை(க்
குழந்தையாக) நீங்கள் படைக்கிறீர்களா? அல்லது நாம்*

படைக்கிறோமா? [60]நாம்தாம் உங்களிடையே இறப்பை விதியாக்கி
விட்டோம். நாம் இயலாதவர்கள் அல்லோம். [61]உங்களுக்குப்
பதிலாக உங்களைப் போன்றே மற்றவர்களைப் படைப்பதற்கோ
நீங்கள் அறியாத வடிவங்களில் உங்களை ஆக்கி விடுவதற்கோ
நாம் இயலாதவர்கள் அல்லோம். [62](நாம்) முதன்முறை உங்களைப்
படைத்தது பற்றி நீங்கள் அறிந்தேயிருக்கிறீர்கள், (அதைக்
கொண்டு) எம்மால் மறுபடி படைக்க முடியும் எனும்) நல்லறிவை
நீங்கள் பெற மாட்டீர்களா? [63]நீங்கள் பயிரிடுபவற்றைப் பற்றிச்
சிந்தித்துப் பார்த்தீர்களா? [64]அவற்றை நீங்கள் முளைக்கச்
செய்கிறீர்களா அல்லது நாம் முளைக்கச் செய்கிறோமா? [65-67]நாம்
விரும்பினால் அவற்றைப் பதர்களாக ஆக்கி விடுவோம். நீங்கள்
திகைப்புற்று அந்தோ நாங்கள் அழிந்துவிட்டோமே! (விளைச்சல்)
எதையும் பெற முடியாதவர்களாகி விட்டோமே!” (என்று
பின்னர் நீங்கள் புலம்பிக் கொண்டேயிருப்பீர்கள்) [68]நீங்கள்
அருந்தும் நீரை கவனித்தீர்களா? [69]அதனை மேகத்திலிருந்து
நீங்கள் பொழியச் செய்கிறீர்களா, அல்லது நாம் பொழியச்
செய்கிறோமா? [70]நாம் விரும்பியிருந்தால் அதனை உப்பு நீராக்கி
விட்டிருப்போம். பிறகு ஏன் நீங்கள் நன்றி செலுத்துவதில்லை?
[71]நீங்கள் மூட்டுகின்ற நெருப்பைக் கவனித்தீர்களா? [72](தீமூட்டப்
பயன்படும்) அம்மரத்தை நீங்கள் உருவாக்கினீர்களா அல்லது
நாம் உருவாக்கினோமா? [73](நரக நெருப்பை உங்களுக்கு)
நினைவூட்டுவதற்காகவும் பயணிகளுக்குப் பயனளிக்கும் பொருட்டும்
நாம் அதனை ஆக்கினோம். [74]எனவே (நபியே!) நீர் மகத்துவம்
நிறைந்த உம் இறைவனின் திருப்பெயரைத் துதிப்பீராக!

[75](நீங்கள் பேசிக் கொள்வது போல்) இல்லை. நட்சத்திரங்கள்
மறையும் இடங்கள்மீது நான் சத்தியம் செய்கிறேன்.
[76]நீங்கள் சிந்தித்துப் பார்த்தீர்களானால் இது மகத்தான
சத்தியமாகும். [77]உறுதியாக இது கண்ணியமிக்க குர்ஆனாகும்.
[78](இறைவனிடமுள்ள) பாதுகாப்பான ஒரு (மூல)ஏட்டில்
(இது எழுதப்பட்டுள்ளது). [79]மிகத் தூய்மையானவர்கள் அன்றி

*(வேறெவரும்) இதனைத் தொடமுடியாது. [80]இது அகிலங்களின்
இறைவனிடமிருந்து இறக்கி அருளப்பெற்ற வேதமாகும்.
[81]இ(றை)ச் செய்தியையா நீங்கள் அலட்சியப்படுத்துகிறீர்கள்?
[82](இதனைப்) பொய்மைப்படுத்துவதையே உங்கள் வாழ்க்கை
வழிமுறையாக்கிக் கொண்டீர்களா?*

*[83](இறந்து கொண்டிருக்கும் ஒருவருடைய) உயிர்
தொண்டையை அடையும்போது [84]நீங்கள் (அருகிலிருந்தும்
ஏதும் செய்ய இயலாமல்) பார்த்துக் கொண்டிருப்பீர்கள்.
[85]நாம் உங்களைவிட அவருக்கு மிக அருகில் இருக்கிறோம்.
ஆயினும் உங்களால் எம்மைக் காணமுடியாது. [86]நீங்கள் (எமது
அதிகாரத்திற்குக்) கட்டுப்படாதோர் எனில், [87](அக்கருத்தில்)
நீங்கள் உண்மையானவர்கள் எனில் அந்த உயிரை ஏன் திரும்பக்
கொண்டு வருவதில்லை? [88]ஆயினும் (அவர் இறைவனுக்கு)
நெருக்கமானவர்களுள் ஒருவராக இருந்தால், [89]அவருக்கு நலமும்
சிறந்த உணவும் பேரின்பச் சொர்க்கமும் உண்டு. [90]அவர்
வலப்பக்கத்தாரில் ஒருவராக இருந்தால் [91]“உம்மீது சாந்தி
நிலவட்டும், நீர் வலப் பக்கத்தாரில் ஒருவராக இருக்கின்றீர்”
(என்று கூறப்படும்.) [92]ஆனால் அவர் வழிகெட்டு (உண்மையைப்)
பொய்மைப்படுத்தியவராக இருந்தால், [93]கொதிக்கும் நீரால்
விருந்தளிக்கப்பட்டு [94]நரகத்தில் எறியப்படுவார் [95](ஐயமின்றி)
இதுவே மிகவும் உறுதியான உண்மையாகும். [96]எனவே (நபியே!)
நீர் மகத்துவமிக்க இறைவனின் பெயரைத் துதிப்பீராக!*

# 57. இரும்பு (அல்ஹதீத்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வைப்
(புகழ்ந்து) துதிக்கின்றன. அவன் யாவற்றினும் வல்லவன்;
ஞானம் மிக்கவன். [2]வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி
அவனுக்கே உரியது. அவன்தான் வாழ்வையும் சாவையும்
அளிக்கிறான். அவன் எல்லாவற்றின் மீதும் பேராற்றல்*

*உடையவன். [3]அவன்தான் முதலும் முடிவுமானவன். வெளிப்படையானவனும் மறைவானவனும் ஆவான். அவன் அனைத்தையும் நன்கறிந்தவன். [4]அவன்தான் வானங்களையும் பூமியையும் ஆறுநாட்(காலக்கட்டங்)களில் படைத்தான். பின்னர் இறையிருக்கையின் மேல் உயர்ந்துவிட்டான். பூமியினுள் (ஊடுருவிச்) செல்வதையும் அதிலிருந்து வெளிப்படுவதையும் வானத்திலிருந்து இறங்குவதையும் அதில் ஏறுவதையும் அவன் அறிகிறான். நீங்கள் எங்கிருந்தபோதிலும் அவன் உங்களுடன் இருக்கிறான். நீங்கள் செய்பவற்றை எல்லாம் அவன் உற்று நோக்கிக் கொண்டிருக்கிறான். [5]வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி அவனுக்கே உரியது. (உங்களின்) அனைத்து விஷயங்களும் (எண்ணம், சொல், செயல்) அவனிடமே (தீர்ப்புக்காக) திருப்பப்படுகின்றன. [6]அவன் இரவைப் பகலில் நுழையச் செய்கிறான்; பகலை இரவில் நுழையச் செய்கிறான். அவன் உள்ளங்களில் உள்ளவற்றை முற்றும் அறிந்தவன்.*

*[7](ஆகவே, மனிதர்களே!) அல்லாஹ்வின் மீதும் அவனது தூதரின்மீதும் நம்பிக்கைகொள்ளுங்கள். அல்லாஹ் உங்களைப் பொறுப்பாளர்களாக்கித் தந்த செல்வத்திலிருந்து (அறச்)செலவு செய்யுங்கள். உங்களில் நம்பிக்கை கொண்டு (அறவழியில்) செலவு செய்வோருக்குப் பெரும் கூலி இருக்கின்றது. [8](மனிதர்களே!) அல்லாஹ்வின்மீது நம்பிக்கைகொள்ளாமலிருக்க உங்களுக்கு என்ன நேர்ந்தது? உங்கள் இறைவனின் மீது நம்பிக்கைகொள்ளுமாறு தூதர் அழைத்துக் கொண்டிருக்கிறார். இறைவன் உங்களிடம் (இறைநம்பிக்கை) உறுதிமொழியையும் பெற்றுள்ளான். நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் (அதனை நிறைவேற்றுங்கள்). [9]உங்களை இருளிலிருந்து வெளியேற்றி ஒளியின்பால் கொண்டு வருவதற்காக அவன்தான் தன் அடியார்மீது தெளிவான வசனங்களை இறக்கிக் கொண்டிருக்கிறான். அல்லாஹ் உங்கள் மீது மிகுந்த பரிவுடையவனும் அன்புடையவனும் ஆவான். [10]உங்களுக்கு என்ன நேர்ந்தது? இறைவழியில்*

*செலவு செய்யாமலிருக்க (என்ன காரணம்?) வானங்களிலும் பூமியிலும் உள்ள அனைத்து(ச் செல்வங்களும்) அல்லாஹ்வுக்கே உரிமையானவை. (மக்காவின்) வெற்றிக்கு முன்னர் (அறச்)செலவு செய்து போர் புரிந்தோர்க்கு உங்களில் எவரும் நிகராகமாட்டார்கள். அதற்குப் பின்னர்ச் செலவு செய்து போர்புரிந்தவர்களைவிட அவர்கள்தாம் மாபெரும் தகுதியுடையவர்கள். (எனினும்) அல்லாஹ் அனைவருக்கும் நன்மையையே வாக்களித்துள்ளான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறியக்கூடியவன்.**

*[11]அல்லாஹ்வுக்கு அழகிய கடன் அளிப்பவர் யார்? அவன் அதனை அவருக்குப் பன்மடங்காக்கித் தருவான். மேலும் அவருக்குக் கண்ணியமான கூலியும் உண்டு. [12](நபியே! மறுமையாகிய) அந்நாளில் நீர் (ஓரிறை)நம்பிக்கைகொண்ட ஆண்களையும் பெண்களையும் காண்பீர். அவர்களுடைய (நம்பிக்கை மற்றும் நல்லறங்களின்) ஒளி அவர்களுக்கு முன்பும் வலப்புறத்தும் ஓடிக்கொண்டிருக்கும். "இன்று உங்களுக்குரிய நற்செய்தி: ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும் (சொர்க்கச்) சோலைகளில் (நுழைந்து) நிலையாகத் தங்கிவிடுவீர்கள். இதுவே மாபெரும் வெற்றியாகும்" (என்று அவர்களிடம் கூறப்படும்) [13]அந்நாளில் நயவஞ்சக ஆண்களும் பெண்களும் நம்பிக்கையாளர்களிடம், "எங்களுக்காகக் காத்திருங்கள். நாங்கள் உங்கள் ஒளியிலிருந்து சிறிது பெற்றுக் கொள்கிறோம்" என்று கூறுவார்கள். அப்போது அவர்களிடம், "பின்னால் திரும்பிச் செல்லுங்கள். எங்காவது ஒளியினைத் தேடிக்கொள்ளுங்கள்" என்று கூறப்படும். (அப்போது) அ(வ்விரு)வர்களுக்கு நடுவே ஒரு (தடுப்புச்) சுவர் எழுப்பப்படும். அதில் ஒரு கதவு இருக்கும். (நம்பிக்கையாளர்களைக் கொண்ட) அதன் உட்புறம் அருளும் (நயவஞ்சகர்கள் இருக்கும் அதன்) வெளிப்புறம் வேதனையும் இருக்கும். [14](நயவஞ்சகர்கள் நம்பிக்கையாளரான) அவர்களைக் கூவி அழைப்பர். "நாங்கள் உங்களுடன் இருக்கவில்லையா?" என்று*

---

***முன்னுரை காண்க : பக்கம் எண் XX**

*கேட்பர். (நம்பிக்கையாளர்களான) அவர்கள் “ஆம். ஆயினும் நீங்களே உங்களைக் குழப்பத்தில் ஆழ்த்திக் கொண்டீர்கள். (நம்பிக்கையாளர்களுக்குத் துன்பம் வருமென) எதிர்பார்த்தீர்கள். (மறுமை வரும் என்பதையும்) ஐயுற்றீர்கள். வீணான ஆசைகள் உங்களை ஏமாற்றிவிட்டன. இறுதியில் இறைத்தீர்ப்பு வந்து விட்டது. ஏமாற்றுக்கார(சாத்தா)ன் அல்லாஹ்வைக் குறித்து உங்களை ஏமாற்றி விட்டான்” (என்று கூறுவார்கள்).*
*[15](நயவஞ்சகர்களே!) இன்று உங்களிடமிருந்தோ (ஓரிறையை) மறுத்தோரிடமிருந்தோ எந்த இழப்பீடும் ஏற்கப்படமாட்டாது. உங்கள் இருப்பிடம் நரகம்தான். அதுவே உங்களுக்குத் துணையாகும். மீளுமிடங்களில் அது மிகவும் கெட்டதாகும்.*

*[16]நம்பிக்கையாளர்களின் உள்ளங்கள் இறை நினைவாலும் தங்களுக்கு அருளப்பெற்றுள்ள சத்திய(வேத)த்தின் முன்பாகவும் (பணிந்து) நடுங்குவதற்கு (அவர்களுக்கு) நேரம் வரவில்லையா? இதற்கு முன்னர் வேதம் வழங்கப்பெற்றவர்களைப் போல அவர்கள் ஆகிவிடவேண்டாம்; அ(ம்முன்ன)வர்களது காலம் நீண்டுவிட்டபின் அவர்களின் இதயங்கள் இறுகிவிட்டன. அவர்களில் பெரும்பாலோர் பாவிகளாக இருந்தனர்.*
*[17](மனிதர்களே!) அறிந்துகொள்ளுங்கள், பூமியை அது இறந்ததன் பின்னர் அல்லாஹ்வே உயிர்ப்பிக்கிறான். நீங்கள் சிந்தித்து உணரும் பொருட்டுச் சான்றுகளை நாம் தெளிவாக விளக்குகிறோம்.*

*[18]உறுதியாக ஈகைஅறம் செய்யும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் அல்லாஹ்வுக்கு அழகிய கடனை அளித்தவர்களுக்கும் (அவற்றின் பயன்) பன்மடங்காக்கப்படும். அவர்களுக்குக் கண்ணியமான கூலியும் உண்டு.*
*[19]அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர்களின் மீதும் நம்பிக்கை கொண்டவர்கள்தாம் தங்கள் இறைவன் பார்வையில் உண்மையாளர்களும் (உண்மைக்குச்) சாட்சி பகர்வோரும் ஆவர். அவர்களுக்கு அவர்களின் கூலியும் ஒளியும் உண்டு; எவர் சத்தியத்தை மறுத்து*

*எம் வசனங்களைப் பொய்மைப்படுத்தினார்களோ அவர்கள்தாம் நரகவாசிகளே.*

[20]*(மனிதர்களே!) அறிந்துகொள்ளுங்கள்: இவ்வுலக வாழ்க்கை விளையாட்டும் வேடிக்கையும் வெளிப்பகட்டும் ஒருவருக்கொருவர் பெருமையடித்துக் கொள்ளுதலும் செல்வப்பெருக்கம், பிள்ளைப்பெருக்கம் ஆகியவற்றைக் கொண்டு ஒருவரோடு ஒருவர் போட்டியிடுவதுமேயாகும். அது மழைக்குப் பின்வரும் விளைச்சலைப் போன்றது. அது விவசாயிகளை மகிழ்ச்சி கொள்ளச் செய்கிறது. பின்னர் அது காய்ந்து பழுப்பு நிறமாகிப் போவதை (நபியே! நீர்) பார்க்கின்றீர். பின்னர் அது கூளமாகி(யும்) விடுகிறது. இம்மை வாழ்வின் மகிழ்ச்சியும் ஏமாற்றமும் இத்தகையனவே. மேலும் இவ்வுலக வாழ்வைத் தேர்ந்தெடுத்துக் கொண்டவர்களுக்கு மறுமையில் கடுமையான வேதனையும் உண்டு. (நம்பிக்கையாளர்களுக்கோ) அல்லாஹ்விடமிருந்து (பாவ)மன்னிப்பும் அவனது உவப்பும் உண்டு. உலக வாழ்க்கை ஏமாற்றும் இன்பமேயாகும்.* [21]*(ஆகவே) உங்கள் இறைவனின் மன்னிப்பை நோக்கியும் வானம், பூமி ஆகியவற்றின் அளவு விரிந்து பரந்த சொர்க்கத்தை நோக்கியும் (ஒருவரோடு ஒருவர் போட்டியிட்டு) முன்னேறுங்கள். அது அல்லாஹ்வின் மீதும் அவனது தூதர்களின் மீதும் நம்பிக்கை கொண்டோருக்காக ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அது இறைவனின் அருளாகும். தான் விரும்பியோருக்கு அதனை அவன் வழங்குகிறான். அல்லாஹ் பேரருளான் ஆவான்.*

[22]*பூமியில் ஏற்படும் (அல்லது) உங்களுக்கு ஏற்படும் துன்பம் எதுவாயினும் அதனை நாம் ஏற்படுத்துவதற்கு முன்பே அது (விதி) ஏட்டில் (பதிவாகி) இருந்ததே ஆகும். உறுதியாக இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது.* [23]*நீங்கள் இழந்ததைக்கண்டு கவலைகொள்ளாமல் இருப்பதற்கும் அவன் உங்களுக்கு வழங்கியதைக்கொண்டு செருக்கடையாமல் இருப்பதற்காகவும்தான் (இவ்வுண்மையை உங்களுக்கு அறிவிக்கிறான்). செருக்குக்கொண்டு*

பெருமை பேசும் எவரையும் அல்லாஹ் விரும்புவதில்லை.
[24]அவர்கள், தாம் கஞ்சத்தனம் செய்வதோடு பிறரையும் கஞ்சத்தனம் செய்யத் தூண்டுகின்றனர். எவன் (இறைக்கட்டளைகளைப்) புறக்கணித்து விலகிப் போகிறானோ அவன் அறிந்து கொள்ளட்டும், (அவன் தனக்குத்தான் தீங்கிழைத்துக் கொள்கின்றான்). அல்லாஹ் தேவை எதுவுமற்றவன் (அனைத்துப்) புகழுக்கும் உரியவன்.

[25]நாம் எமது தூதர்களைத் தெளிவான சான்றுகளுடன் அனுப்பினோம். மக்கள் நீதியில் நிலைத்திருக்கும் பொருட்டு அவர்களுடன் வேதத்தையும் (நீதி எனும்) துலாக்கோலையும் அருளினோம். நாம் இரும்பையும் இறக்கினோம். அதில் பெரும் வலிமையும் மக்களுக்குப் (பிற நற்)பயன்களும் உள்ளன. இ(வற்றைச் செய்த)து ஏனெனில் அவனுக்கும் அவனது தூதர்களுக்கும் (பிறரால் அறியப்படாத நிலையில்) மறைவாக உதவி புரிபவர்கள் யார் என்பதை அவன் அறிந்துகொள்வதற்காகத்தான். உறுதியாக அல்லாஹ் பேராற்றல் மிக்கவன்; யாவற்றினும் வல்லவன்.

[26]நாம்தாம் நோவாவையும் ஆப்ரஹாமையும் (எம் தூதர்களாக) அனுப்பினோம். அவர்களுடைய வழித்தோன்றல்களுக்குத் தூதுத்துவத்தையும் வேதத்தையும் அருளியிருந்தோம். அவர்களில் நேர்வழி பெற்றவர்களும் உண்டு. (ஆனால்) அவர்களில் பெரும்பாலோர் கீழ்ப்படியாதவர்களாகவே இருந்தனர். [27]பின்னர் அவர்களின் அடிச்சுவட்டிலேயே நாம் எமது தூதர்களை(த் தொடர்ந்து) அனுப்பினோம். அவர்களுக்குப் பின் மர்யத்தின் மைந்தர் இயேசுவை அனுப்பினோம். அவருக்கு இன்ஜீல் (எனும் வேதத்தை) வழங்கினோம். அவரைப் பின்பற்றியவர்களின் உள்ளங்களில் அன்பையும் இரக்கத்தையும் ஏற்படுத்தினோம். (ஆனால்) துறவறத்தை அவர்கள்தாம் புதுமையாக உருவாக்கிக் கொண்டனர். நாம் அதனை அவர்கள்மீது விதிக்கவில்லை. இறை உவப்பைப் பெற விரும்பியே அவர்கள் அதனை மேற்கொண்டபோதிலும் அதனைக் கடைப்பிடிக்க

*வேண்டியமுறையில் கடைப்பிடிக்கவில்லை. எனவே அவர்களில் (உண்மையான) நம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் கூலியை வழங்குவோம். அவர்களில் பெரும்பாலோர் கீழ்ப்படியாதவர்களே ஆவர்.*

28*(இயேசுவின்பால்) நம்பிக்கைகொண்டவர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; அவனது (இந்தத்) தூதரின் மீதும் நம்பிக்கைகொள்ளுங்கள். அவன் தன் அருளிலிருந்து இரு மடங்கு உங்களுக்கு வழங்குவான். உங்களுக்கு ஒளியையும் வழங்குவான். அதன் ஒளியில் நீங்கள் (நேர்வழியில்) செல்வீர்கள். உங்களை (அவன்) மன்னிப்பான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*
29*வேதம் அருளப்பெற்றோர் 'அல்லாஹ்வின் அருளில் எதனையும் அடையும் ஆற்றல் தங்களுக்கு இல்லை; உறுதியாக அருளானது அல்லாஹ்வின் கையில்தான் உள்ளது; தான் விரும்பியோருக்கு அவன் அதனை வழங்குகிறான்' என்பதை அறிந்து கொள்வதற்காகத் தான் (இவ்வாறு அல்லாஹ் அறிவிக்கிறான்). அல்லாஹ் மாபெரும் அருள் உடையவன்.*

# 58. முறையீடு (அல்முஜாதலா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

1*(நபியே! தன்னைத் தாய்க்குச் சமம் எனச் சொல்லி விலகிவிட்ட) தனது கணவனைப்பற்றி உம்மிடம் முறையிட்டு அல்லாஹ்விடம் புகார்செய்த அந்தப் பெண்ணின் சொல்லை உறுதியாக அல்லாஹ் கேட்டுக் கொண்டான். உங்கள் இருவரின் உரையாடலையும் அல்லாஹ் செவிமடுத்துக் கொண்டுதான் இருந்தான். உறுதியாக அல்லாஹ் அனைத்தையும் செவியுறுபவன்; உற்று நோக்குபவன்.*

2*உங்களில் யாரெல்லாம் தம் மனைவியரைத் தாய்க்கு ஒப்பிட்டுக் கூறி(விலகி) விடுகிறார்களோ, அவர்களின் மனைவியர் அவர்களுக்குத் தாயாக மாட்டார்கள். அவர்களைப்*

*பெற்றெடுத்தவளைத் தவிர (வேறெவரும்) அவர்களின் தாய் அல்லர். உறுதியாக அவர்கள் வெறுக்கத்தக்கதும் பொய்யானதும் ஆகிய சொல்லையே சொல்கின்றனர். அல்லாஹ் பிழைகளைப் பொறுப்பவன்; பெரும் மன்னிப்பாளன்.* [3]*தம் மனைவியரைத் தாய்க்கு ஒப்பிட்டுக் கூறிவிட்டுப் பின்னர் தாம் கூறியதைத் திரும்பப் பெற விரும்பினால் (அக்கணவன் மனைவியர்) ஒருவரையொருவர் தீண்டுவதற்கு முன்னர் ஓர் அடிமையை விடுதலை செய்ய வேண்டும். இவ்வாறு உங்களுக்கு அறிவுரை வழங்கப்படுகிறது. நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கு தெரிந்தவன்.* [4]*இவ்வாறு செய்வதற்கு இயலாதவர்கள் ஒருவரையொருவர் தீண்டுவதற்கு முன்னர் இரண்டு மாதங்கள் தொடர்ந்து நோன்பு நோற்க வேண்டும். அதற்கும் இயலாதவர்கள் அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். இது நீங்கள் அல்லாஹ் மீதும் அவனது தூதர்மீதும் கொண்டுள்ள நம்பிக்கையை உறுதிபடுத்துவதற்காகவே (விதியாக்கப்பட்டுள்ளது) இவை இறை வரம்புகளாகும். (இவற்றை மீறும்) மறுப்பாளர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.*

[5]*அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் எதிராகச் செயல்படுவோர் அவர்களுக்கு முன்பு வாழ்ந்தோர் இழிவுக்குள்ளாக்கப்பட்டதைப் போலவே இழிவுக்குள்ளாக்கப்படுவர். நாம் தெளிவான வசனங்களை அருளியுள்ளோம். (ஓரிறை)மறுப்பாளர்களுக்கு இழிவுதரும் வேதனையுண்டு.* [6]*அவர்கள் அனைவரையும் அல்லாஹ் எழுப்பும் நாளில் அவர்கள் செய்தவற்றை அவன் அவர்களுக்கு அறிவிப்பான். அல்லாஹ் அவற்றைக் கணக்கிட்டு வைத்துள்ளான். ஆனால் அவர்களோ அவற்றை மறந்து விட்டனர். அல்லாஹ் அனைத்திற்கும் சாட்சியாளனாக இருக்கிறான்.*

[7]*(நபியே!) வானங்களிலும் பூமியிலும் உள்ள யாவற்றையும் உறுதியாக அல்லாஹ் அறிவான் என்பதை நீர் அறிந்திருக்கவில்லையா? மூன்று மனிதர்களிடையே மறைமுகப் பேச்சு எதுவும் நடப்பதில்லை, அவர்களிடையே நான்காமவனாக*

*அல்லாஹ் இல்லாமல்! ஐந்து மனிதர்களிடையே மறைமுகப் பேச்சு எதுவும் நடப்பதில்லை, அவர்களிடையே ஆறாமவனாக அல்லாஹ் இல்லாமல்! (மறைமுகம் பேசுவோர் எண்ணிக்கை) இதைவிடக் குறைவாக இருந்தாலும் கூடுதலாக இருந்தாலும் (அவன் அவர்களுடன் இல்லாமலில்லை). அவர்கள் எங்கிருந்தபோதிலும் அவன் அவர்களுடன் இருக்கிறான். பின்னர் அவர்கள் செய்தவற்றை மறுமை நாளில் அவன் அவர்களுக்கு அறிவிப்பான். உறுதியாக அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவன். [8](நபியே!) மறைமுகப் பேச்சுகள் பேசுவதிலிருந்து தடுக்கப்பட்டவர்களை நீர் கவனிக்கவில்லையா? அவர்கள் தடுக்கப்பட்ட செயல்களையே மீண்டும் செய்கின்றனர். அவர்கள் பாவமான, வரம்புமீறுகின்ற, தூதருக்கு எதிரான பேச்சுக்களையே (மறைமுகமாக) தங்களுக்குள் பேசிக் கொள்கின்றனர். (நபியே!) அவர்கள் உம்மிடம்வந்தால் அல்லாஹ் உமக்கு முகமன் கூறிய முறையில் அல்லாமல் (வேறுவிதமாக) முகமன் கூறுகின்றனர். அவர்கள் மனத்திற்குள் (இவர் உண்மையில் இறைத்தூதர் எனில்) "இப்பேச்சுக்காக அல்லாஹ் நம்மை ஏன் தண்டிப்பதில்லை?" என்று கூறிக் கொள்கின்றனர். அவர்களுக்கு நரகமே ஏற்புடையதாகும். அதில் அவர்கள் எரிந்து பொசுங்குவர். சென்று சேரும் இடங்களில் மிகவும் கொடியது அது.*

*[9](ஓரிறை)நம்பிக்கையாளர்களே! நீங்கள் உங்களுக்குள் மறைவுரை பேசுவதாக இருந்தால் பாவம்புரிதல், வரம்புமீறுதல், தூதருக்கு எதிராகச் செயல்படுதல் ஆகியவற்றைப் பேசாதீர்கள். மாறாக நன்மை(புரிதல்), இறையச்சம்(கொள்ளல்) ஆகியவற்றைக் குறித்துப் பேசுங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அவனிடமே நீங்கள் ஒன்று சேர்க்கப்படுவீர்கள். [10]தீய நோக்கங்களுக்காக மறைவுரை பேசுவது சாத்தானியச் செயலாகும். நம்பிக்கையாளர்களைக் கவலையுறச் செய்யவே (அவன் அதனைத் தூண்டுகிறான்). அல்லாஹ்வின் அனுமதியின்றி அவர்களுக்கு அவனால் அறவே*

*தீங்கு செய்ய முடியாது. நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருக்க வேண்டும்.*

*[11]நம்பிக்கையாளர்களே! (நீங்கள்) "சபைகளில் (இருக்கும்போது) நகர்ந்து (பிறருக்கு) இடமளியுங்கள்" என்று உங்களுக்குச் சொல்லப்பட்டால் நகர்ந்து இடமளியுங்கள். அல்லாஹ் உங்களுக்கு (இடத்தை) விரிவுபடுத்துவான். "எழுந்துகொள்ளுங்கள்" என்று கூறப்பட்டால் எழுந்துகொள்ளுங்கள். உங்களில் நம்பிக்கை கொண்டோர்க்கும் கல்வி அறிவு வழங்கப்பட்டோர்க்கும் அல்லாஹ் தகுதிகளை உயர்த்துவான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை முற்றும் அறிந்தவன்.*

*[12]நம்பிக்கையாளர்களே! நீங்கள் தூதருடன் தனிமையில் பேசுவதாயின் அவ்வாறு பேசுவதற்கு முன் (ஏழைகளுக்குச் சிறிது) அறக்கொடை வழங்குங்கள். இது உங்களுக்குச் சிறந்ததும் (உங்களைத்) தூய்மை செய்வதுமாகும். ஆனால் கொடுப்பதற்கு எதுவும் உங்களிடம் இல்லையென்றால் – அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனும் நிகரற்ற அன்பாளனும் ஆவான்.*
*[13]நீங்கள் தூதருடன் தனிமையில் பேசுவதற்கு முன்னால் ஈகைபுரிய வேண்டுமே என அஞ்சி விட்டீர்களா? அவ்வாறு செய்ய இயலவில்லையெனில் – அறிந்துகொள்ளுங்கள், அல்லாஹ் உங்களை மன்னித்து விட்டான். எனவே தொழுகையைக் கடைப்பிடித்துக் கடமையாக்கப்பட்ட கொடையைக் கொடுத்து வாருங்கள். அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கட்டுப்படுங்கள். அல்லாஹ் நீங்கள் செய்யும் அனைத்தையும் முற்றும் அறிந்தவன்; நன்கு தெரிந்தவன்.*

*[14](நபியே!) இறைவனின் சினத்திற்குள்ளான மக்களுடன் நட்புக் கொள்வோரை நீர் கவனிக்கவில்லையா? அவர்கள் உங்களைச் சார்ந்தவர்களும் அல்லர்; அவர்களைச் சார்ந்தவர்களும் அல்லர். அவர்கள் அறிந்துகொண்டே (உங்களுடன் இருப்பதாக) அல்லாஹ்வின் மீது பொய்ச் சத்தியம் செய்கின்றனர்.*
*[15]அல்லாஹ் அவர்களுக்காகக் கடும் வேதனையைத் தயாராக வைத்திருக்கிறான்.*

உறுதியாக அவர்கள் செய்து கொண்டிருப்பவை தீயவையாகும்.
[16]அவர்கள் தங்கள் (பொய்) வாக்குறுதிகளைத் (தங்களைக்
காக்கும்) கேடயமாகப் பயன்படுத்துகின்றனர். இறைவழியிலிருந்து
(மக்களைத்) தடுக்கின்றனர். ஆகவே அவர்களுக்கு இழிவுதரும்
வேதனையுண்டு.

[17]செல்வங்களும் பிள்ளைகளும் அவர்களை
அல்லாஹ்விடமிருந்து சிறிதும் காப்பாற்ற முடியாது. அவர்கள்தாம்
நரகவாசிகளே! அதில் அவர்கள் என்றென்றும் கிடப்பார்கள்.
[18]அல்லாஹ் அவர்கள் அனைவரையும் எழுப்பும்நாளில்
உங்களிடம் சத்தியம் செய்தது போன்றே அவனிடமும்
(பொய்ச்) சத்தியம் செய்துவிட்டுத் தாங்கள் ஏதோ உறுதியான
அடிப்படையில் இருப்பதாக எண்ணிக் கொள்வார்கள்.
அறிந்துகொள்ளுங்கள், அவர்கள்தாம் பொய்யர்கள். [19]சாத்தான்
அவர்களை வெற்றிகொண்டு அவர்களுக்கு இறைநினைவை
மறக்கடித்து விட்டான். அவர்கள்தாம் சாத்தானின் அணியினர்.
அறிந்துகொள்ளுங்கள்! சாத்தானின் அணியினர்தாம்
இழப்பிற்குரியவர்கள். [20]அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும்
எதிராகச் செயல்படுபவர்கள் மிகவும் இழிவானவர்கள். [21]“நானும்
என் தூதர்களுமே வெல்வோம்” என்று அல்லாஹ் விதித்து
விட்டான். உறுதியாக அல்லாஹ் ஆற்றல்மிக்கவன்; யாவற்றினும்
வல்லவன்.

[22]அல்லாஹ்வின் மீதும் மறுமைநாளின் மீதும் நம்பிக்கை
கொண்ட மக்கள் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும்
எதிராகச் செயல்படுவோருடன் நட்புக் கொள்வதை
(நபியே! நீர்) காணமாட்டீர். அ(த்தகைய)வர்கள் தம்
தந்தையராயினும் பிள்ளைகளாயினும் சகோதரர்களாயினும்
இன்னும் தம் குடும்பத்தினர்களாயினும் (அவர்களுடன்
உறவு கொள்ளமாட்டார்கள். அல்லாஹ்) இத்தகையவர்களின்
இதயங்களில் நம்பிக்கையைப் பதித்து வைத்துத் தன் அருளால்

*அவர்களை வலுப்படுத்தி விட்டான். அவன் அவர்களைச் சொர்க்கச் சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் நிலையாகத் தங்கிவிடுவர். அல்லாஹ் அவர்களைக் குறித்து நிறைவடைகிறான். அவர்கள் அவனைக் குறித்து நிறைவடைகின்றனர். அவர்கள்தாம் அல்லாஹ்வின் அணியினர். அறிந்துகொள்ளுங்கள்! அல்லாஹ்வின் அணியினர்தாம் வெற்றியாளர்கள் ஆவர்.*

# 59. ஒன்றுதிரட்டுதல் (அல்ஹஷ்ர்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*1வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும்
அல்லாஹ்வைத் துதிக்கின்றன. அவன் யாவற்றினும் வல்லவன்;
ஞானம்மிக்கவன். 2அவன்தான் வேதம் வழங்கப்பட்டவர்களுள்
(ஓரிறை) மறுப்பாளர்களை அவர்களின் வீடுகளிலிருந்து
முதல் முறையிலேயே ஒன்று சேர்த்து வெளியேற்றினான்.
அவர்கள் வெளியேறுவார்கள் என்று (நம்பிக்கையாளர்களே!)
நீங்கள் நினைத்தும் பார்க்கவில்லை. உறுதியாகத் தங்களின்
கோட்டைகள் அல்லாஹ்விடமிருந்து தங்களைக் காப்பாற்றும்
என்று(தான்) அவர்கள் எண்ணியிருந்தனர்.ஆனால் அல்லாஹ்
அவர்கள் நினைத்துப் பார்க்காத வகையில் அவர்கள்மீது (தனது
தண்டனையைக் கொண்டு) வந்தான். அவர்களின் உள்ளங்களில்
பேரச்சத்தை ஏற்படுத்திவிட்டான். (அதன் பயனாக) அவர்கள்
தம் கைகளாலேயே தங்கள் இல்லங்களை அழித்தனர்.
இறைநம்பிக்கையாளர்களின் கைகளாலும் அவை அழிய(க்
காரணமாயினர்). எனவே அகநோக்குடையோரே! (இதிலிருந்து)
படிப்பினை பெறுங்கள்.*

*3அல்லாஹ் நாடுகடத்தலை அவர்களுக்கு விதித்திராவிட்டால்,
இவ்வுலகிலேயே அவர்களை(க் கடுமையாக) வேதனை
செய்திருப்பான். (எனினும்) மறுமையில் அவர்களுக்கு நரக*

*வேதனையுண்டு. [4]காரணம், அவர்கள் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் எதிர்ச்செயல்கள் புரிந்தனர். அல்லாஹ்வுக்கு எதிர்ச்செயல் புரிவோரைத் தண்டிப்பதில் அல்லாஹ் கடுமையானவன். [5]நீங்கள் (அவர்களுடைய) பேரீச்சை மரங்களை வெட்டியதோ அல்லது (வெட்டாமல்) அவற்றின் வேர்களில் அவற்றை நிற்கும்படி விட்டுவிட்டதோ அல்லாஹ்வின் ஒப்புதலுடன் (நடந்தவையாகும்). அவை வரம்பு மீறுவோரை இழிவுபடுத்துவதற்காக (நடந்தவையேயாகும்).*

*[6](நம்பிக்கையாளர்களே!) அல்லாஹ் எவற்றையெல்லாம் அவர்களிடமிருந்து தன் தூதருக்கு மீட்டுக் கொடுத்தானோ அவற்றிற்காக(ப் போரிட) நீங்கள் குதிரைகளையோ ஒட்டகங்களையோ ஓட்டிச் செல்லவில்லை. ஆயினும் அல்லாஹ் தன் தூதர்களுக்குத் தான் விரும்பியோர்மீது ஆதிக்கம் அளிக்கிறான். அல்லாஹ் எல்லாவற்றின் மீது பேராற்றலுடையவன்.*
*[7]அவ்வூரார்களிடமிருந்து தன் தூதருக்கு அல்லாஹ் (போரின்றி) மீட்டுக் கொடுத்தவை அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் (தூதரின்) உறவினர்களுக்கும் அநாதைகளுக்கும் ஏழைகளுக்கும் வழிப்போக்கர்களுக்கும் உரியவையாகும். (செல்வம்) உங்களில் செல்வர்களிடையே மட்டும் சுற்றிக் கொண்டிருக்கக் கூடாது என்பதற்காகவே இவ்வாறு பங்கிடப்பட்டுள்ளது. தூதர் உங்களுக்கு வழங்குவதைப் பெற்றுக்கொள்ளுங்கள். அவர் எதனைவிட்டு உங்களைத் தடுத்தாரோ அதனைவிட்டு விலகிக்கொள்ளுங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். உறுதியாக அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன். [8]தங்கள் வீடுகளையும் சொத்துகளையும்விட்டு வெளியேற்றப்பட்டு (மக்காவிலிருந்து) புலம்பெயர்ந்து வந்த ஏழைகளுக்கும் (அச்செல்வம்) உரியதாகும். அவர்கள் இறைவனின் அருளையும் அவனது உவப்பையும் விரும்புகிறார்கள். (மேலும்) அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் உதவி புரிகிறார்கள். அவர்கள்தாம் உண்மையாளர்கள்.*

[9](மேலும் மக்காவாசிகளான) அவர்களுக்கு முன்னரே (மதீனாவில்) வீடுகள் அமைத்து வாழ்ந்து வந்த, (அவர்களுக்கு முன்னரே இறை)நம்பிக்கையை உறுதிப்படுத்திக் கொண்டிருந்த (மதீனா) மக்களுக்கும் அது உரியதாகும். அவர்கள் புலம்பெயர்ந்து தங்களிடம் வருபவர்களை நேசிக்கின்றனர். அவர்களுக்கு அளிக்கப்படுவதைக் குறித்துத் தம் உள்ளங்களில் எந்தப் பொறாமையும் கொள்ளமாட்டார்கள். தாங்கள் ஏழ்மை நிலையில் இருந்த போதிலும் (பகிர்வில்) தம்மைவிட (நாடுதுறந்த) அவர்களுக்கே முன்னுரிமை அளிப்பார்கள். (இவ்வாறு தம்) உள்ளத்தின் கஞ்சத்தனத்திலிருந்து பாதுகாக்கப்பட்டவர்கள்தாம் வெற்றியாளர்கள். [10]அவர்களுக்குப்பின் (மதீனாவுக்கு) வந்த (நம்பிக்கைகொண்ட)வர்கள் “எங்கள் இறைவா! எங்களுக்கும் நம்பிக்கைகொள்வதில் எங்களை முந்திவிட்ட எங்கள் சகோதர்களுக்கும் மன்னிப்பருள்வாயாக! எங்கள் உள்ளங்களில் நம்பிக்கையாளர்கள்மீது காழ்ப்புணர்வை ஏற்படுத்தி விடாதே! எங்கள் இறைவா! நீயே மிகுந்த பரிவுடையவன்; நிகரற்ற அன்பாளன்” என்று (இறைஞ்சிக்) கூறுகின்றனர்.

[11](நபியே!) நயவஞ்சகர்களை நீர் கவனிக்கவில்லையா? வேதம் வழங்கப்பட்டவர்களில் (ஓரிறை) மறுப்பாளர்களாக உள்ள தங்கள் சகோதர்களிடம் அவர்கள், “நீங்கள் (மதீனாவிலிருந்து) வெளியேற்றப்பட்டால் நாங்களும் உங்களுடன் வெளியேறி விடுவோம். உங்கள் தொடர்பானவற்றில் (உங்களுக்கெதிராக) நாங்கள் எவருக்கும் ஒருபோதும் கீழ்ப்படியமாட்டோம். உங்கள்மீது போர் தொடுக்கப்பட்டால் உறுதியாக நாங்கள் உங்களுக்கு உதவுவோம்” என்று கூறுகின்றனர். அவர்கள் பொய்யர்களே என்று அல்லாஹ் சாட்சி கூறுகிறான். [12](ஏனென்றால் வேதம் வழங்கப்பட்டோராகிய) அவர்கள் வெளியேற்றப்பட்டால் (நயவஞ்சகர்களாகிய) இவர்கள் அவர்களுடன் வெளியேறமாட்டார்கள். அவர்கள்மீது போர் தொடுக்கப்பட்டால் இவர்கள் அவர்களுக்கு உதவி புரியவும்மாட்டார்கள். (அவ்வாறு) இவர்கள் அவர்களுக்கு உதவச் சென்றாலும் உறுதியாகப்

*புறங்காட்டி ஓடிவிடுவர். பின்னர் அவர்களுக்கு எங்கிருந்தும் உதவி கிடைக்காது.*

13*(நம்பிக்கையாளர்களே!) அவர்களின் உள்ளங்களில் அல்லாஹ்வைப் பற்றிய அச்சத்தைவிட உங்களைப்பற்றிய அச்சமே மிகுதியாக உள்ளது. காரணம், அவர்கள் புரிந்து கொள்ளாத மக்களாக இருக்கிறார்கள் என்பதுதான்.* 14*அரண் அமைக்கப்பட்ட ஊர்களிலிருந்தோ சுவர்களுக்குப் பின்னாலிருந்தோ அன்றி அவர்கள் ஒன்றுசேர்ந்து உங்களுடன் போரிடமாட்டார்கள். அவர்களுக்கிடையேயுள்ள பகையோ மிகக் கடுமையானது. அவர்கள் ஒன்றுபட்டுள்ளதாக (நபியே!) நீர் நினைக்கின்றீர். ஆனால் அவர்களின் உள்ளங்களோ பிரிந்து கிடக்கின்றன. அவர்கள் புரிந்துகொள்ளாத மக்களாக இருப்பதுதான் இதற்குக் காரணமாகும்.*

15*இவர்களுக்குச் சிறிது காலத்திற்கு முன்னர்த் தம் செயல்களின் விளைவை அனுபவித்த அந்த மக்களைப் போன்றவர்கள்தாம் இவர்கள். இவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.*
16*இவர்கள் சாத்தானைப் (பின்பற்றுபவர்களைப்) போன்றவர்கள். அவன் மனிதனை நோக்கி, “நீ (இறைவனை ஏற்க) மறுத்துவிடு” என்று கூறுகிறான். (அவ்வாறே) அவன் மறுத்துவிடும்போது “நான் உன்னைவிட்டு விலகி விட்டேன். அனைத்துலகங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கு நான் அஞ்சுகிறேன்” என்று கூறுகிறான்.* 17*இறுதியில் (தூண்டியோர், தூண்டப்பட்டோர் ஆகிய) அவ்விருவரின் முடிவு நரகத்தில் கிடப்பதாக ஆகிவிடும். அங்கு அவர்கள் என்றென்றும் கிடப்பர். இதுவே தீவினையாளர்களின் கூலியாகும்.*

18*நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். ஒவ்வொரு மனிதனும் (மறுமை) நாளைக்காகத் தான் எதனைச் சேர்த்து வைத்துள்ளான் என்பதைக் கவனிக்கட்டும். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். உறுதியாக நீங்கள் செய்பவற்றை*

*அல்லாஹ் நன்கு தெரிந்திருப்பவன். [19]அல்லாஹ்வை மறந்து விட்டவர்களைப் போல் நீங்கள் ஆகிவிடாதீர்கள். (அதனால்) அவன் அவர்கள் தம்மைத்தாமே மறக்கும்படிச் செய்துவிட்டான். அவர்கள்தாம் கீழ்ப்படியாதவர்கள். [20]நரகவாசிகளும் சொர்க்கவாசிகளும் சமமாக மாட்டார்கள். சொர்க்கவாசிகள்தாம் உண்மையில் வெற்றியாளர்கள்.*

*[21](நபியே!) நாம் இந்தக் குர்ஆனை ஒரு மலையின்மீது இறக்கியிருந்தால் அது இறையச்சத்தால் நடுங்கிப் பிளந்து விடுவதைக் காண்பீர். மனிதர்கள் சிந்திக்க வேண்டும் என்பதற்காக இத்தகைய எடுத்துக்காட்டுகளை நாம் அவர்களுக்கு விளக்குகிறோம். [22]அவன்தான் அல்லாஹ்! அவனைத் தவிர வணக்கத்திற்குரிய வேறு இறைவன் இல்லை. அவன் மறைவானதையும் வெளிப்படையானதையும் நன்கறிபவன்; அவன் அளவற்ற அருளாளன்; நிகரற்ற அன்பாளன் [23]அவன்தான் அல்லாஹ்! அவனைத் தவிர வணக்கத்திற்குரிய வேறு இறைவன் இல்லை. அவன்தான் பேரரசன்; மிகவும் தனித்துயர்ந்தவன்; அமைதியின் மூலமானவன்; அடைக்கலம் தருபவன்; பாதுகாவலன்; யாவற்றினும் வல்லவன்; அடக்கியாள்பவன்; மாட்சிமை மிக்கவன். அவர்கள் இணைவைப்பவற்றினின்றும் அல்லாஹ் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். [24]அவன்தான் அல்லாஹ்! படைப்பவன்; தோற்றுவிப்பவன்; வடிவமைப்பவன். அவனுக்கு அழகிய பெயர்கள் இருக்கின்றன. வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனையே துதிக்கின்றன. அவன் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.*

## 60. சோதனைக்கு ஆளானவள் (அல்மும்தஹினா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1](ஓரிறை) நம்பிக்கையாளர்களே! எனக்கும் உங்களுக்கும் பகைவர்களாக இருப்பவர்களை நண்பராகக் கொள்ளாதீர்கள். அவர்களுடன் அன்பு பாராட்ட வேண்டாம். அவர்களோ*

*உங்களிடம் வந்துள்ள சத்திய(வேத)த்தை ஏற்க மறுத்து விட்டனர். உங்கள் இறைவனாகிய அல்லாஹ்வின் மீது நம்பிக்கைகொண்டீர்கள் என்பதற்காக உங்களையும் உங்கள் தூதரையும் (புனித மக்காவிலிருந்து) வெளியேற்றினர். நீங்கள் என் பாதையில் கடுமையாகப் பாடுபடுவதற்காகவும் என் உவப்பைப் பெற விரும்பியும் (உங்கள் இல்லங்களிலிருந்து) வெளியேறியிருந்தீர்களானால், எப்படி உங்களால் அவர்களுடன் மறைமுக அன்புகொள்ளமுடியும்? நீங்கள் மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் செய்யும் அனைத்தையும் நான் நன்கறிவேன். உங்களில் யார் இவ்வாறு செய்கிறாரோ அவர் நேர்வழியிலிருந்து தவறி விட்டவராவார்.* [2]*அவர்கள் உங்களைவிட மேலோங்கிவிட்டால் உங்களுக்குப் பகைவர்களாகிவிடுவர். தம் கைகளாலும் நாவாலும் உங்களுக்குத் தீங்கிழைப்பர். நீங்களும் மறுப்பாளர்களாகிவிட வேண்டும் என்று விரும்புவர்.* [3]*(மக்காவில் உள்ள உங்கள் உறவினர்களைப் பாதுகாப்பதற்காக இவ்வாறு பகைவர்களுக்கு நீங்கள் உதவினாலும்) உங்கள் உறவுகளோ, பிள்ளைகளோ மறுமை நாளில் உங்களுக்கு பயனளிக்கமாட்டார்கள். அவன் உங்களுக்கிடையில் தீர்ப்பளிப்பான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.*

[4]*உங்களுக்கு (இறைத்தூதர்) ஆப்ரஹாமிடத்திலும் அவரது தோழர்களிடத்திலும் அழகிய முன்மாதிரி இருக்கிறது. அவர்கள் தம் சமூகத்தாரிடம் “உங்களையும் அல்லாஹ்வையன்றி நீங்கள் வணங்குபவற்றையும்விட்டு உறுதியாக நாங்கள் விலகி விட்டோம். நாங்கள் உங்களை மறுத்துவிட்டோம். அல்லாஹ் ஒருவனிடமே நீங்கள் நம்பிக்கைகொள்ளும் வரை உங்களுக்கும் எங்களுக்குமிடையே பகைமையும் வெறுப்பும் தான் நிலைத்திருக்கும்” என்று கூறினர். ஆனால் ஆப்ரஹாம் தம் தந்தையிடம் “நான் உறுதியாக உங்களுக்குப் பாவமன்னிப்புக் கோருவேன். ஆயினும் அல்லாஹ்விடமிருந்து உங்களுக்கு எதையும்*

*பெற்றுத்தரும் ஆற்றல் எனக்கில்லை” என்று கூறியதைத்தவிர (மற்றவற்றில் உங்களுக்கு அவர் முன்மாதிரி ஆவார், மேலும்) “எங்கள் இறைவா! நாங்கள் உன்னிடமே நம்பிக்கை கொண்டோம்; உன்னிடமே திரும்பி விட்டோம். மீளுமிடம் உன்னிடம் உள்ளது” (என்றும் அவர்கள் கூறினர்.)*
*5(மேலும்) “எங்கள் இறைவா! எங்களை மறுப்பாளர்களிடம் (பிடிபடவைத்துச்) சோதனையாக ஆக்கி விடாதே. எங்கள் இறைவா! எங்களை மன்னித்தருள்வாயாக! உறுதியாக நீதான் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்” (என்றும் அவர்கள் இறைஞ்சி வேண்டினர்.)*
*6அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்புவோருக்கு அவர்களிடம் அழகிய முன்மாதிரி இருக்கிறது. யாரேனும் இதனைப் புறக்கணித்தால் – (அவர் அறிந்துகொள்ளட்டும்): அல்லாஹ் தேவை எதுவுமற்றவன்; பெரும் புகழுக்குரியவன்.*
*7(நம்பிக்கையாளர்களே!) உங்களுக்கும் உங்கள் எதிரிகளுக்கும் இடையே அல்லாஹ் அன்பை ஏற்படுத்தி விடக்கூடும். அல்லாஹ் பேராற்றலுடையவன். அவன் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன்.*

*8யாரெல்லாம் (உங்கள்) மார்க்கம் தொடர்பானவற்றில் உங்களுடன் போரிடவில்லையோ, உங்களை உங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றவில்லையோ அவர்களுக்கு நீங்கள் நன்மை செய்வதையும் அவர்களிடம் நீதியுடன் நடந்து கொள்வதையும் அல்லாஹ் தடை செய்யமாட்டான். உறுதியாக அல்லாஹ் நீதியாளர்களை நேசிக்கிறான்.*
*9அவன் உங்களைத் தடுப்பதெல்லாம் மார்க்கம் தொடர்பானவற்றில் உங்களுடன் போர் புரிந்தவர்களுடனும் உங்களை உங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றியவர்களுடனும் உங்களை வெளியேற்றுவதற்கு உதவி செய்தவர்களுடனும் நீங்கள் நட்புக் கொள்வதைத்தான். அவர்களிடம் நட்பு கொள்பவர்கள் தீவினையாளர்களே ஆவர்.*

*10நம்பிக்கையாளர்களே! இறை நம்பிக்கைகொண்ட பெண்கள் புலம்பெயர்ந்து உங்களிடம் வரும்போது அவர்களைச் சோதித்துப் பாருங்கள். அவர்களின் நம்பிக்கையை அல்லாஹ்வே நன்கறிவான்*

(எனினும்) அவர்கள் நம்பிக்கையாளர்கள்தாம் என்பதை நீங்கள் அறிந்துகொண்டால் அவர்களை (அவர்களின் கணவர்கள் ஆகிய)மறுப்பாளர்களிடம் திருப்பி அனுப்பி விடாதீர்கள். இவர்கள் மறுப்பாளர்களுக்கு ஏற்புடையவர்கள் அல்லர். மறுப்பாளர்களும் இவர்களுக்கு ஏற்புடைய(கண)வர் அல்லர். (திருமணத்தில் ஓரிறை)மறுப்பாளர்கள் (இப்பெண்களுக்காகச்) செலவு செய்ததை அவர்களுக்கு வழங்கிவிடுங்கள். நீங்கள் அப்பெண்களுக்கு மணக்கொடையை அளித்து அவர்களை மணம் செய்து கொள்வதில் உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை. (உங்கள் மனைவியரில்) இறைவனை மறுக்கும் பெண்களின் திருமண உறவைப் பற்றிக்கொண்டிருக்காதீர்கள். நீங்கள் அவர்களுக்குச் செலவிட்டதை (அப்பெண்கள் சென்றிருக்கும் மறுப்பாளர்களிடம்) திருப்பிக் கேளுங்கள். அவர்களும் (உங்களிடம் வந்துவிட்ட நம்பிக்கைகொண்ட பெண்களுக்குத் தாங்கள்) செலவிட்டதைத் திருப்பிக் கேட்கட்டும். இது இறைக்கட்டளையாகும். அவன் உங்களிடையே தீர்ப்பளிக்கிறான். அல்லாஹ் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன். [11](இதற்கு மாறாக) உங்கள் மனைவியரில் யாரேனும் மறுப்பாளர்களிடம் சென்றுவிட்டால் (நீங்கள் அவர்களுக்களித்த மணக்கொடை அம்மறுப்பாளர்களிடமிருந்து திரும்பக் கிடைக்கவில்லையாயின்) பின்னர் (அவர்களுடன் போர் ஏற்பட்டு அப்போரில்) உங்களுக்குக் கிடைக்கும் போர்ச் செல்வத்திலிருந்து அக்கணவன்மார்களுக்கு அவர்கள் செலவிட்டதற்குச் சமமான தொகையை (நம்பிக்கையாளர்களே!) நீங்கள் வழங்கிவிடுங்கள். நீங்கள் நம்பிக்கை கொண்டிருக்கும் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்.

[12]நபியே! நம்பிக்கைகொண்ட பெண்கள் உம்மிடம் வந்து, “நாங்கள் அல்லாஹ்வுக்கு எதனையும் இணையாக்க மாட்டோம்; திருட மாட்டோம்; ஒழுக்கக் கேட்டில் ஈடுபடமாட்டோம்; எங்கள் குழந்தைகளைக் கொல்ல மாட்டோம்; ஒழுக்கம் தவறி

*எந்தப் பழிக்கூற்றையும் இட்டுக்கட்டிக் கூறமாட்டோம்; எந்த ஒரு நற்செயலிலும் உங்களுக்கு எதிராகச் செயல்பட மாட்டோம்" என்று உறுதிமொழி அளித்தால் அவர்களின் உறுதிமொழியை ஏற்றுக் கொள்வீராக! அவர்(கள் முன்னர்ச் செய்துவிட்ட பிழை)களுக்காக அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோருவீராக! அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனும், நிகரற்ற அன்பாளனும் ஆவான்.*

*[13]நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வின் சினத்திற்கு ஆளான மக்களுடன் நட்புக் கொள்ளாதீர்கள். சவக்குழிகளில் கிடக்கும் மறுப்பாளர்கள் நம்பிக்கை இழந்ததைப் போலவே அவர்கள் மறுமையைப் பற்றி நம்பிக்கை இழந்து விட்டனர்.*

# 61. அணிவகுப்பு (அஸ்ஸஃப்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வைத்
துதிக்கின்றன. அவன் யாவற்றினும் வல்லவன்; ஞானம்
மிக்கவன். [2]நம்பிக்கையாளர்களே! நீங்கள் செய்யாதவற்றை ஏன்
சொல்கிறீர்கள்? [3]நீங்கள் செய்யாதவற்றைச் (செய்வதாகச்) சொல்வது
அல்லாஹ்வின் பார்வையில் மிகவும் வெறுப்பிற்குரியதாகும்.
[4]ஈயத்தால் வார்க்கப்பட்ட சுவரைப்போல அணிவகுத்து நின்று
போரிடுபவர்களை உறுதியாக அல்லாஹ் நேசிக்கின்றான்.**

*[5](நபியே!) மோசே தம் சமூகத்தாரிடம் "என் சமூகத்தோரே! உறுதியாக நான் உங்களிடம் அனுப்பப்பட்ட இறைத்தூதர் என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொண்டிருந்தும் என்னை ஏன் துன்புறுத்துகிறீர்கள்?" என்று கேட்டதை எண்ணிப் பார்ப்பீராக! அவர்கள் (நேர்வழியிலிருந்து) விலகியபோது அல்லாஹ்வும்*

---

**முன்னுரை காண்க : பக்கம் எண் XX*

*அவர்களின் உள்ளங்களை (நேர்வழியிலிருந்து) திருப்பி விட்டான்.
கீழ்ப்படியாத மக்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவதில்லை.
6மர்யத்தின் மைந்தர் இயேசு, “இஸ்ராயீலின் மக்களே! நான்
உங்களிடம் அனுப்பப்பட்ட இறைத்தூதராவேன். எனக்கு முன்
வந்த தவ்ராத் எனும் வேதத்தை உண்மைப்படுத்தக்கூடியவனாகவும்
எனக்குப்பின் வரவிருக்கும் “அஹ்மது” எனும் பெயருடைய
தூதரைக் குறித்து நற்செய்தி கூறுபவனாகவும் இருக்கிறேன்” என்று
கூறியதையும் எண்ணிப் பார்ப்பீராக! (எனினும் அவர் அறிவித்த)
அ(த்தூது)வர் அவர்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு
வந்தபோது “இது தெளிவான சூனியமே” என்று (இஸ்ராயீலின்
மக்கள்) கூறினர்.*

*7இஸ்லாத்தின்பால் அழைக்கப்படும் நிலையில்
அல்லாஹ்வின் மீது (இணைவைத்தலாகிய) பொய்யைக்
கற்பிப்பவனைவிட மிகப்பெரிய முறைகேடன் யார்? (இத்தகைய)
தீவினையாளர்களுக்கு அல்லாஹ் நல்வழி காட்டமாட்டான்.
8அவர்கள் அல்லாஹ்வின் பேரொளியைத் தம் வாய்களால்
ஊதி அணைத்துவிட விரும்புகின்றனர். மறுப்பாளர்கள்
வெறுத்தாலும் சரி, அல்லாஹ் தனது (மார்க்கம் எனும்) ஒளியை
முழுமைப்படுத்தியே தீர்வான். 9அவன்தான் தனது தூதரை
நேர்வழியுடனும் சத்திய மார்க்கத்துடனும் அனுப்பி வைத்தான்,
ஏனைய அனைத்து மார்க்கங்களையும்விட அதனை மேலோங்கச்
செய்வதற்காக! அது இணைவைப்பாளர்களுக்கு எவ்வளவு
வெறுப்பாக இருந்தாலும் சரியே.*

*10நம்பிக்கையாளர்களே! உங்களைத் துன்புறுத்தும்
வேதனையிலிருந்து காப்பாற்றும் ஒரு வணிகத்தை நான் உங்களுக்கு
அறிவிக்கட்டுமா? 11நீங்கள் அல்லாஹ்வின் மீதும் அவனது
தூதரின் மீதும் நம்பிக்கைகொண்டு உங்கள் செல்வங்களாலும்
உயிர்களாலும் அவனது பாதையில் கடுமையாகப் பாடுபடுங்கள்,
நீங்கள் அறிவுடையோராயின் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும்.
12(அவ்வாறு செய்தால்) அல்லாஹ் உங்கள் பாவங்களை*

*மன்னிப்பான்; ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும் நிலையான சொர்க்கங்களில் உள்ள மிகச் சிறந்த இல்லங்களிலும் உங்களை நுழையச் செய்வான். இதுவே மாபெரும் வெற்றியாகும்.*
*13நீங்கள் விரும்பும் இன்னொன்றையும் அவன் உங்களுக்கு வழங்குவான். அது இறை உதவியும் மிக விரைவில் கிடைக்கவிருக்கும் வெற்றியுமாகும். (ஆகவே நபியே!) நம்பிக்கையாளர்களுக்கு நற்செய்தி கூறுவீராக!*

*14நம்பிக்கையாளர்களே! மர்யத்தின் மைந்தர் இயேசு தம் சீடர்களிடம் "அல்லாஹ்வுக்காக எனக்கு உதவி செய்பவர் யார்?" என்று கேட்டபோது "நாங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாவோம்" என்று அவர்கள் கூறியதைப் போல நீங்களும் அல்லாஹ்வின் உதவியாளராக ஆகிவிடுங்கள். இஸ்ராயீலின் மக்களில் ஒரு சாரார் நம்பிக்கை கொண்டனர்; மற்றொரு சாரார் ஏற்க மறுத்து விட்டனர். (எனவே இறை) நம்பிக்கையாளர்களை அவர்களின் பகைவர்களுக்கெதிராக நாம் வலுப்படுத்தினோம். எனவே, அவர்களே வெற்றியாளர்களாயினர்.*

## 62. வெள்ளிக்கிழமை (அல்ஜுமுஆ)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*1வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வைத் துதிக்கின்றன. (அவன்தான் மெய்யான) அரசன்; மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன்; யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.*
*2அவன்தான் எழுத்தறிவற்ற (அரபு) மக்களுக்கு அவர்களிலிருந்தே ஒரு தூதரை எழச் செய்தான். அவர் அவனது வசனங்களை அவர்களுக்கு எடுத்துரைக்கின்றார்; அவர்களைத் தூய்மைப்படுத்துகின்றார்; அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் கற்பிக்கின்றார். இதற்கு முன்னர் அவர்கள் தெளிவான கெடுவழியில் இருந்தனர்.*
*3இன்னும் அவர்களுடன் வந்துசேராத(வர்களுக்காகவும்) ஏனைய*

(எதிர்கால) மனிதர்களுக்காவும் (அவரைத் தூதராக அனுப்பி வைத்தான்). அவன் யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.
[4]இ(த்தூ)து அல்லாஹ்வின் அருளாகும். தான் விரும்பியோருக்கு இதனை அவன் வழங்குகிறான். அல்லாஹ் மாபெரும் அருள் உடையவன்.

[5]தவ்ராத் எனும் வேதம் (வழங்கிப்) பணிக்கப்பட்டுப் பின்னர்
அதன்படி செயல்படாதோர் (வேத) நூல்களைச் சுமக்கும் கழுதை
போன்றோர் ஆவர். இறை வசனங்களைப் பொய்யென்று கூறும்
மக்களுக்கான உவமை (எவ்வளவு) இழிவானது! தீவினைபுரியும்
மக்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டமாட்டான். [6](நபியே!)
நீர் கூறும்: "யூதர்களே! மற்ற மக்களைவிட நீங்கள்தாம் இறை
அன்பிற்குரியவர்கள் என்று எண்ணுவீர்களாயின், உங்கள்
கூற்றில் நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால், (அவனைச்
சென்றடைய) இறந்துபோக விரும்புங்கள்" [7]அவர்கள் முன்னர்ச்
செய்த (பாவச்) செயல்களின் காரணமாக அதனை ஒருபோதும்
விரும்பமாட்டார்கள். அல்லாஹ் தீவினையாளர்களை முற்றும்
அறிந்தவன். [8](நபியே! அவர்களிடம்)"எந்த மரணத்தைவிட்டு நீங்கள்
வெருண்டோடுகிறீர்களோ அது உறுதியாக உங்களை அடைந்தே
தீரும். பின்னர் மறைவானவற்றையும் வெளிப்படையானவற்றையும்
அறிந்தவனிடம் நீங்கள் கொண்டு செல்லப்படுவீர்கள். அப்போது
அவன் நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை உங்களுக்கு
அறிவிப்பான்" என்று கூறுவீராக!

[9]நம்பிக்கையாளர்களே! வெள்ளிக்கிழமையன்று
தொழுகைக்காக அழைக்கப்பட்டால் அல்லாஹ்வை
நினைவுகூர்வதற்காக விரைந்து செல்லுங்கள்; (அவ்வேளையில்)
வணிகத்தை விட்டுவிடுங்கள். நீங்கள் அறிவுடையோர்களாக
இருந்தால் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும். [10]தொழுகை
முடிவுற்றபின் பூமியில் பரவிச் சென்று இறையருளைத்
தேடிக்கொள்ளுங்கள். அல்லாஹ்வை மேலதிகமாக நினைவு
கூருங்கள். நீங்கள் வெற்றியடைவீர்கள். [11](நபியே! நீர்

*வெள்ளிக்கிழமைத் தொழுகைச் சிறப்புரையாற்றும்போது) அவர்கள் வணிக அறிவிப்பையோ வேடிக்கையையோ கண்டால் உம்மை நின்ற நிலையில் (அப்படியே) விட்டுவிட்டுச் சென்று விடுகின்றனர். "அல்லாஹ்விடம் இருப்பது, வேடிக்கையை விடவும் வணிகத்தைவிடவும் மிகச் சிறந்ததாகும். வாழ்வாதாரம் அளிப்போரில் அல்லாஹ்வே மிகச் சிறந்தவன்" என்று அவர்களிடம் நீர் கூறுவீராக!*

# 63. நயவஞ்சகர்கள் (அல்முனாஃபிகூன்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

*1(நபியே!) நயவஞ்சகர்கள் உம்மிடம் வரும்போது "உறுதியாக நீர் இறைத்தூதரே என்று நாங்கள் சாட்சி கூறுகிறோம்" என்பார்கள். உறுதியாக நீர் அவனது தூதர்தாம் என்பதை அல்லாஹ் நன்கறிவான். (இந்த) நயவஞ்சகர்கள் பொய்யர்கள்(தாம்) என்றும் அல்லாஹ் சாட்சி கூறுகிறான். 2அவர்கள் தங்கள் (பொய்ச்) சத்தியங்களைக் கேடயமாக ஆக்கி(த் தங்களைத் தற்காத்து)க் கொண்டு (மக்களை) இறைவழியிலிருந்து தடுக்கின்றனர். அவர்கள் செய்து கொண்டிருப்பது மிகவும் கேடானதாகும். 3அதற்குக் காரணம், அவர்கள் நம்பிக்கைகொண்டு பின்னர் மறுத்து விட்டதேயாகும். எனவே அவர்களுடைய உள்ளங்களின் மீது முத்திரையிடப்பட்டு விட்டது. (ஆகவே) அவர்கள் (எதனையும்) புரிந்து கொள்ளமாட்டார்கள்.*

*4(நபியே!) நீர் அவர்களைப் பார்க்கும்போது அவர்களின் உடலமைப்பு (வெளித்தோற்றம்) உம்மை வியப்புறச் செய்யும். அவர்கள் பேசத் தொடங்கினால் நீர் அவர்களின் பேச்சைக் கேட்டுக்கொண்டே இருப்பீர். ஆயினும் அவர்கள் சுவரில் சாய்த்து வைக்கப்பட்டிருக்கும் (உள்ளீடற்ற) மரக்கட்டைகளைப் போன்றவர்கள். ஒவ்வோர் உரத்த ஓசையையும் தங்களுக்கு எதிரானதாகவே (அவர்கள்) கருதுவர். அவர்கள்தாம் (கொடிய)*

*எதிரிகள். எனவே அவர்களைக் குறித்து எச்சரிக்கையாக இருப்பீராக. அல்லாஹ் அவர்களை அழிக்கட்டும். அவர்கள் எங்கே திசை மாறிச் செல்கின்றார்கள்?* [5]*அவர்களிடம் “வாருங்கள், இறைத்தூதர் உங்களுக்காக (இறைவனிடம்) பாவமன்னிப்பு வேண்டுவார்” என்று கூறினால் தங்கள் தலைகளைத் திருப்பிக் கொள்கின்றனர். அவர்கள் செருக்குடன் அலட்சியப்படுத்துவதை (நபியே!) நீர் காண்பீர்.* [6]*அவர்களுக்காக மன்னிப்பு வேண்டுவதும் வேண்டாது விடுவதும் அவர்களுக்குச் சமமே. அல்லாஹ் ஒருபோதும் அவர்களை மன்னிக்கமாட்டான். கீழ்ப்படியாத மக்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டமாட்டான்.*

[7]*அவர்கள்தாம் (மற்ற மக்களை நோக்கி) “இறைத்தூதருடன் இருப்போருக்கு நீங்கள் செலவு செய்யாதீர்கள்; இறுதியாக அவர்கள் (தூதரைவிட்டுப்) பிரிந்து போவார்கள்” என்று கூறுபவர்கள். வானங்கள், பூமி ஆகியவற்றின் கருவூலங்கள் அல்லாஹ்வுகே உரியனவாகும். எனினும் இந்நயவஞ்சகர்கள் (அதனைப்) புரிந்துகொள்ள மாட்டார்கள்.* [8]*(அவர்கள்) “நாங்கள் மதீனாவிற்குத் திரும்பிவந்தால் கண்ணியமுள்ளோர் இழிவான(நம்பிக்கைகொண்ட)வர்களை அங்கிருந்து உறுதியாக வெளியேற்றிவிடுவர்” என்று கூறுகின்றனர். கண்ணியமானது அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் நம்பிக்கையாளர்களுக்கும் உரியதாகும். ஆயினும் இந்நயவஞ்சகர்கள் அறியமாட்டார்கள்.*

[9]*(ஓரிறை) நம்பிக்கையாளர்களே! உங்களின் பெருஞ் செல்வங்களும் பிள்ளை(ச்செல்வங்)களும் இறைநினைவிலிருந்து உங்கள் கவனத்தைத் திருப்பி விட வேண்டாம். அவ்வாறு செய்பவர்கள்தாம் இழப்புக்குரியோர் ஆவர்.* [10]*உங்களில் எவருக்கும் இறப்பு வரும்முன்னரே நாம் உங்களுக்கு அளித்தவற்றிலிருந்து (பிறருக்கு அறச்)செலவு செய்யுங்கள். (அவ்வாறு செய்யாதவர் உயிர்நீங்கும் வேளையில்) “என் இறைவனே! எனக்குச் சிறிது காலநீட்டிப்பு வழங்கியிருக்கக் கூடாதா? (வழங்கினால்) நான்*

ஈகை புரிந்து நல்லோர்களில் ஒருவராக ஆகிவிடுவேனே" என்பார்.
[11]ஆனால் எந்த ஓர் உயிருக்கும் அதற்குரிய தவணை வந்து விட்டால்
அல்லாஹ் ஒருபோதும் காலநீட்டிப்பு வழங்கமாட்டான். நீங்கள்
செய்பவற்றை அல்லாஹ் நன்கு தெரிந்தவன்.

# 64. வெற்றி – தோல்வி (அத்தகாபுன்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1]வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும்
அல்லாஹ்வைத் துதிக்கின்றன. ஆட்சி அவனுக்கே உரியது.
புகழனைத்தும் அவனுக்கே உரியன. அவன் அனைத்தின் மீதும்
பேராற்றலுடையவன். [2]அவன்தான் உங்களைப் படைத்தான்.
உங்களில் சிலர் மறுப்பாளர்களாக இருக்கின்றனர், சிலர்
நம்பிக்கையாளர்களாக இருக்கின்றனர். நீங்கள் செய்பவற்றை
அல்லாஹ் உற்றுநோக்குபவன். [3]அவன் வானங்களையும்
பூமியையும் உண்மையான நோக்கத்துடன் படைத்துள்ளான்;
உங்களை வடிவமைத்தான்; உங்கள் வடிவங்களை அழகாக்கினான்.
(நீங்கள்) திரும்பிச் செல்ல வேண்டியது அவனிடமேயாகும்.
[4]வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றை அவன் நன்கறிவான்.
நீங்கள் மறைப்பதையும் வெளிப்படுத்துவதையும் அவன்
அறிகிறான். உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் முற்றும்
அறிந்தவன்.

[5](இறைமறுப்பாளர்களே!) உங்களுக்கு முன்னர் (இருந்த)
(இறை)மறுப்பாளர்கள் பற்றிய செய்தி உங்களிடம் வரவில்லையா?
அவர்கள் தங்கள் செயலின் தீய விளைவை அனுபவித்தனர்.
(மறுமையிலும்) அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.
[6]இதற்குக் காரணம், அவர்களின் தூதர்கள் அவர்களிடம்
தெளிவான ஆதாரங்களைக் கொண்டு வந்தபோதிலும்
அவர்கள் "மனிதர்களா எங்களுக்கு வழிகாட்டுவது?" என்று
கூறி (உண்மையை) மறுத்துப் புறக்கணித்து விட்டதுதான்.

*அல்லாஹ்வும் அவர்களைப் பொருட்படுத்தவில்லை. அல்லாஹ் தேவை எதுவுமற்றவன்; புகழுக்குரியவன்.*

*[7](சத்தியத்தை)மறுப்போர்'இறந்தபின் தாம் மீண்டும் எழுப்பப்பட மாட்டோம்' என்று உறுதியாக எண்ணிக் கொண்டிருக்கின்றனர். (நபியே!) நீர் "அவ்வாறன்று. என் இறைவன்மீது சத்தியமாக! உறுதியாக நீங்கள் எழுப்பப்படுவீர்கள். பின்னர் நீங்கள் செய்தவை குறித்து அறிவிக்கப்படுவீர்கள். இவ்வாறு செய்வது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது" என்று கூறுவீராக! [8]எனவே அல்லாஹ்வின் மீதும் அவனது தூதர்மீதும் நாம் அருளியிருக்கும் (இவ்வேத) ஒளியின் மீதும் நம்பிக்கைகொள்ளுங்கள். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கு தெரிந்தவன். [9]ஒன்று திரட்டப்படும் நாளுக்காக (மறுமையில்) அவன் உங்கள் அனைவரையும் ஒன்று திரட்டும் அந்த நாள்தான் வெற்றி தோல்விக்குரிய நாளாகும். எவர் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டு நற்செயல் புரிகிறாரோ அவரது பாவங்களை நீக்கிச் சொர்க்கச் சோலைகளில் அல்லாஹ் அவரை நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் நிலையாகத் தங்கியிருப்பர். இதுவே மாபெரும் வெற்றியாகும். [10]சத்தியத்தை மறுத்து எமது வசனங்களைப் பொய்மைப்படுத்தியவர்கள் நரகவாசிகளே ஆவர். அதில் அவர்கள் நிலையாக இருப்பார்கள். அது மிகவும் கொடிய உறைவிடமாகும்.*

*[11]அல்லாஹ்வின் அனுமதியின்றி எத்துன்பமும் (எவருக்கும்) நேர்வதில்லை. எவர் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்கிறாரோ அவரது உள்ளத்திற்கு அவன் நேர்வழி காட்டுகின்றான். அல்லாஹ் அனைத்தையும் முற்றும் அறிந்தவன். [12]அல்லாஹ்வுக்குக் கட்டுப்படுங்கள். தூதருக்கும் கட்டுப்படுங்கள் (இதனை) நீங்கள் புறக்கணித்தால் (இழப்பு உங்களுக்கே!) தெளிவாக எடுத்துரைப்பதுதான் எமது தூதருடைய கடமையாகும்.*

[13]அல்லாஹ்! அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. எனவே நம்பிக்கையாளர்கள் அவனையே சார்ந்திருக்க வேண்டும்.

[14](ஓரிறை) நம்பிக்கையாளர்களே! உங்கள் மனைவியரிலும் பிள்ளைகளிலும் உங்களுக்குப் பகைவர்கள் இருக்கின்றனர். எனவே அவர்களிடம் எச்சரிக்கையாக இருங்கள். நீங்கள் (அவர்களின் பிழைகளைப்) பொறுத்துக் கொண்டு பொருட்படுத்தாது மன்னித்து விட்டால் (அது உங்களுக்குச் சிறந்தது). அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன். [15]உங்களின் செல்வங்களும் பிள்ளைகளும் (உங்களுக்குச்) சோதனையே. அல்லாஹ்விடம்தான் பெரும் கூலி உள்ளது. [16]எனவே உங்களால் இயன்றவரை அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; (அவனுக்குச்) செவி தாழ்த்துங்கள்; கீழ்ப்படியுங்கள்; (அறச்)செலவு செய்யுங்கள். இது உங்கள் நன்மைக்கே ஆகும். தம் உள்ளத்தின் கஞ்சத்தனத்திலிருந்து தம்மைக் காத்துக்கொள்வோர்தாம் வெற்றியாளர்கள். [17]நீங்கள் அல்லாஹ்வுக்கு அழகிய கடன் அளித்தால் அவன் உங்களுக்கு இருமடங்கு அதிகமாக்கித் தருவான். (உங்கள் பாவங்களுக்காக) உங்களை மன்னித்தும் விடுவான். அல்லாஹ் நன்றியை ஏற்பவன்; பிழைபொறுக்கும் தன்மையுடையவன். [18]அவன் மறைவானவற்றையும் வெளிப்படையானவற்றைவும் அறிந்தவன்; யாவற்றினும் வல்லவன்; ஞானம் மிக்கவன்.

## 65. மணவிலக்கு (அத்தலாக்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

[1]நபியே! (நம்பிக்கையாளர்களிடம் கூறுவீராக!) நீங்கள் மனைவியரை மணவிலக்குச் செய்வதானால் அவர்கள் 'இத்தா' (காத்திருப்புக் காலம்) மேற்கொள்வதற்கு ஏற்ற (மாதவிடாய் முடிந்து தூய்மையாகிவிடும்) காலத்தில் மணவிலக்குச் செய்யுங்கள். (மேலும்) அவர்களின் 'இத்தா' (கால அள)வைச் சரியாகக் கணக்கிட்டுக்கொள்ளுங்கள்; உங்கள் இறைவனாகிய

*அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். (மணவிலக்கு கூறப்பட்ட) அப்பெண்களை அவர்கள் தங்கியிருக்கும் (உங்கள்) வீடுகளிலிருந்து வெளியேற்றாதீர்கள். அவர்களும் வெளியேறக் கூடாது. அவர்கள் வெளிப்படையான ஒழுக்கக்கேட்டைச் செய்தாலன்றி (அவர்களை வெளியேற்றக் கூடாது). இவை இறை வரம்புகளாகும். எவர் இறை வரம்பை மீறுகிறாரோ அவர் தனக்குத்தானே அநீதியிழைத்துக் கொண்டவராவார்" (நபியே! மணவிலக்குக் கூறிய) பின்னரும் அல்லாஹ் (அவர்கள் சேர்ந்துவாழ) ஏதேனும் புதிய சூழலை உண்டாக்கக்கூடும் என்பதை நீர் அறியமாட்டீர்.*
*2(நீர் அவர்களுக்குத் தெளிவிப்பீராக!) "அவர்கள் தங்களது காத்திருப்புக் காலத்தை நிறைவு செய்யும் தறுவாயில், (நீங்கள் விரும்பினால்) நல்லமுறையில் அவர்களை (மணஉறவில்) வைத்துக்கொள்ளுங்கள்; அல்லது (தவணை முடிந்துவிடும் போது) நல்லமுறையில் அவர்களை விட்டுப் பிரிந்து விடுங்கள். (அதற்கு) உங்களில் நேர்மையான இருவரைச் சாட்சிகளாக்கிக் கொள்ளுங்கள். அல்லாஹ்விற்காகச் சரியான முறையில் சாட்சியத்தை நிலை நிறுத்துங்கள்." அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்புவோருக்கு இவ்வாறு அறிவுரை கூறப்படுகிறது. எவர் அல்லாஹ்வுக்கு அஞ்சி நடக்கிறாரோ அவருக்கு அல்லாஹ் ஒரு தீர்வை ஏற்படுத்துவான்.*
*3அவர் எதிர்பார்த்திராத இடத்திலிருந்து அவருக்கு அவன் வாழ்வாதாரம் வழங்குவான். எவர் அல்லாஹ்வையே சார்ந்திருக்கிறாரோ அவருக்கு அவனேதான் போதுமானவன். உறுதியாக அல்லாஹ் தனது (சட்ட)திட்டங்களை நிறைவேற்றியே தீர்வான். அல்லாஹ் ஒவ்வொன்றிற்கும் ஓர் அளவை அறுதியிட்டுள்ளான்.*

*4உங்கள் பெண்களில் மாதவிடாய் வராது என நம்பிக்கையிழந்து விட்டவர்களைக் குறித்து (அவர்களின் காத்திருப்புக் காலத்தைக் கணக்கிடுவது குறித்து) உங்களுக்கு ஐயம் இருந்தால் அவர்களின் அக்கால அளவு மூன்று மாதங்களாகும். (இதுவரை) மாதவிடாய் வந்திராத பெண்களுக்கும் இதுவே விதியாகும். கருவுற்றிருக்கும்*

பெண்களின் காலஅளவு அவர்கள் குழந்தை பெற்றெடுக்கும்
வரையாகும். யார் அல்லாஹ்வுக்கு அஞ்சுகிறாரோ அவரின்
செயல்களை அவன் எளிதாக்கி விடுவான். 5இது அல்லாஹ்
உங்களுக்கு அருளியுள்ள கட்டளையாகும். யார் அல்லாஹ்வுக்கு
அஞ்சுவாரோ அவரது பாவங்களை அவன் நீக்கி விடுவான்.
அவருக்குப் பெரும் கூலியையும் வழங்குவான்.

6உங்களின் வசதிக்கேற்ப, நீங்கள் வாழும் இடத்திலேயே
(காத்திருப்பிலுள்ள) அப்பெண்களையும் வசிக்கச்
செய்யுங்கள். அவர்களை(த் தாமே வெளியேறும்படியான)
நெருக்கடிக்குள்ளாக்குவதற்காக அவர்களைத் துன்புறுத்தாதீர்கள்.
அவர்கள் கருவுற்றிருந்தால் குழந்தை பெறும்வரை அவர்களுக்கான
செலவைச் செய்யுங்கள். அவர்கள் உங்களுக்காக (உங்கள்
குழந்தைகளுக்கு)ப் பாலூட்டினால் அவர்களுக்குரிய ஊதியத்தைக்
கொடுத்து விடுங்கள். (இதுபற்றி முன்னதாகவே) நீங்கள்
ஒருவருக்கொருவர் முறையாகப் பேசி முடிவு செய்துகொள்ளுங்கள்.
(ஆனால்) உங்களுக்குள் (ஊதியம் தொடர்பாகவோ வேறு
காரணங்களாலோ) வேறுபாடு ஏற்பட்டால் குழந்தைக்கு
வேறொரு பெண் பாலூட்டட்டும். 7வசதியுள்ளவர் தம்
வசதிக்கேற்பச் செலவு செய்யட்டும். வருமானம் குறைந்தவர்
அல்லாஹ் வழங்கியதிலிருந்து செலவு செய்யட்டும். அல்லாஹ்
எந்த மனிதன்மீதும் தான் வழங்கியதற்கும் மேலான சுமையைச்
சுமத்துவதில்லை. அல்லாஹ் சிரமத்திற்குப் பிறகு விரைவில்
வசதியை ஏற்படுத்தி விடுவான்.

8எத்தனையோ ஊர்மக்கள் தங்கள் இறைவனின்
கட்டளையையும் அவனுடைய தூதர்களின் கட்டளையையும்
மீறினர். எனவே நாம் அவர்களைக் கடுமையாக விசாரணை
செய்தோம்; கடுமையான தண்டனையும் அளித்தோம். 9எனவே
அவர்கள் தங்கள் (தீச்)செயலின் விளைவைச் சுவைத்து
விட்டனர். அவர்களின் இறுதி முடிவு இழப்பாகவே அமைந்தது.
10(அன்றியும் மறுமையில்) அல்லாஹ் அவர்களுக்குக் கடும்

*வேதனையைத் தயார்செய்து வைத்துள்ளான். ஆகவே நம்பிக்கை கொண்ட அறிவுடையோரே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அல்லாஹ் உங்களுக்கு(க் குர்ஆன் ஆகிய) ஓர் அறிவுரையை அருளியுள்ளான். [11]ஒரு தூதரை (அனுப்பியுள்ளான்). அவர் அல்லாஹ்வின் தெளிவான வசனங்களை உங்களுக்கு எடுத்தோதுகிறார். நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோரை இருள்களிலிருந்து ஒளியின்பால் வெளிக்கொணர்வதற்காக (அவர் இறைவசனங்களை எடுத்தோதுகிறார்). எவர் அல்லாஹ்வின் மீது நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிகின்றாரோ அவரை அவன் (சொர்க்கச்) சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றிடையே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பர். அல்லாஹ் அவர்களுக்கு அழகிய வாழ்வாதாரத்தை ஏற்படுத்தி வைத்திருக்கிறான்.*

*[12]ஏழு வானங்களையும் அதைப்போன்று பூமியையும் அல்லாஹ்தான் படைத்தான். அவற்றிற்கிடையே (அன்றாடம் நிகழவேண்டியவை பற்றிய அவனது) கட்டளைகள் இறங்கிக் கொண்டிருக்கின்றன. (இதன்மூலம்) அல்லாஹ் அனைத்துப் பொருள்களின் மீது ஆற்றலுடையவன் என்பதையும் அல்லாஹ்வின் அறிவு அனைத்துப் பொருள்களையும் சூழ்ந்திருக்கிறது என்பதையும் நீங்கள் அறிந்து கொள்வீர்களாக!*

## 66. விலக்குதல் (அத்தஹ்ரீம்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1](நபியே!) உமது மனைவியரின் மனநிறைவுக்காக அல்லாஹ் உமக்கு அனுமதித்துள்ளதை (ஏன் சத்தியம் செய்து) விலக்கிக் கொள்கிறீர்? அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன் ஆவான். [2](மனிதர்களே!) நீங்கள் செய்யும் சத்தியங்களை (ஈடு செய்து) முறித்துக் கொள்வதை அல்லாஹ் (முன்பே) விதியாக்கியுள்ளான். அல்லாஹ்வே உங்கள் பாதுகாவலன். அவன் முற்றும் அறிந்தவன்; ஞானம் மிக்கவன்.*

*[3](எமது) நபி தம்முடைய மனைவியருள் ஒருவரிடம் ஒரு செய்தியை(ச் சொல்லி) மறைமுகமாக (வைத்துக் கொள்ளுமாறு) கூறியிருந்தார். (ஆனால்) அம்மனைவி அதனை (மற்றொரு மனைவியிடம்) வெளிப்படுத்தி விட்டார். அல்லாஹ் அதனைத் தூதருக்குத் தெரிவித்து விட்டான். நபி (மறைபொருளை வெளிப்படுத்திய) அம்மனைவியிடம் (இறைவன் வெளிப்படுத்தியதில்) சிலவற்றை மட்டும் சொல்லிக் காட்டி வேறு சிலவற்றை விட்டுவிட்டார். அப்போது "தங்களுக்கு இதனைத் தெரிவித்தது யார்?" என்று மனைவி கேட்டார். அதற்குத் தூதர் (அனைத்தையும்) நன்கறிந்த பேரறிவாளன்தான் எனக்குத் தெரிவித்தான்" என்று கூறினார். [4](நபியின் துணைவியர்களே!) நீங்கள் இருவரும் அல்லாஹ்விடம் (பாவ)மன்னிப்புக் கோரித் திரும்பினால் (அதுதான் உங்களுக்குச் சிறந்ததாகும்). ஏனெனில் உங்களுடைய உள்ளங்கள் சாய்ந்து விட்டன. நீங்கள் இருவரும் (ஒருவருக்கொருவர்) தூதருக்கு எதிராகத் துணை நின்றால், உறுதியாக அல்லாஹ் அவருக்குப் பாதுகாவலனாக இருக்கிறான். மேலும் கேப்ரியேலும் நம்பிக்கைகொண்ட நல்லோர்களும் வானவர்களும் அவருக்கு உதவியாளர்களாக இருக்கின்றனர். [5]தூதர் உங்கள் அனைவரையும் மணவிலக்குச் செய்துவிட்டால் அவரின் இறைவன் உங்களுக்குப் பதிலாக உங்களைவிடவும் சிறந்த மனைவியரை அவருக்கு வழங்கக்கூடும். அவர்கள் (இறைவனுக்குக்) கீழ்ப்படிந்தவர்களாக, (இறை)நம்பிக்கை கொண்டவர்களாக, (இறைவனுக்குக்) கட்டுப்பட்டவர்களாக, பாவமன்னிப்புக் கோருபவர்களாக, வழிபாடு செய்பவர்களாக, நோன்பு நோற்கக்கூடியவர்களாக (இருப்பர். மேலும் அவர்கள்) கைம்பெண்களாகவோ கன்னியர்களாகவோ இருப்பர்.*

*[6]நம்பிக்கையாளர்களே! உங்களையும் உங்கள் குடும்பத்தினரையும் நரக நெருப்பிலிருந்து காத்துக்கொள்ளுங்கள். அதன் எரிபொருள் மனிதர்களும் கற்களுமேயாகும். அங்குக் கடுமனமுடைய, கண்டிப்பான வானவர்கள் இருப்பார்கள்.*

*அவர்கள் இறைக் கட்டளைக்கு மாறாக நடப்பதில்லை. தங்களுக்கு இடப்பட்ட கட்டளைப்படியே அவர்கள் செயல்படுவர்.*
[7]*(அந்நாளில் மறுமையாகிய ஓரிறைமறுப்பாளர்களை நோக்கி) "மறுப்பாளர்களே! நீங்கள் இன்று எந்த பொய்க்காரணமும் சொல்லாதீர்கள். நீங்கள் செய்தவற்றுக்குத்தான் கூலி கொடுக்கப்படுகிறது" (என்று கூறப்படும்.)*

[8]*நம்பிக்கையாளர்களே! நேர்மையான மனத்துடன் பாவமன்னிப்புக்கோரி அல்லாஹ்விடம் திரும்புங்கள். உங்கள் இறைவன் உங்கள் பாவங்களை உங்களைவிட்டு அகற்றி உங்களைச் சொர்க்கச் சோலைகளில் நுழையச் செய்யக்கூடும். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அந்நாளில் தூதரையும் அவருடன் நம்பிக்கை கொண்டவர்களையும் அல்லாஹ் இழிவுபடுத்தமாட்டான். அவர்களுடைய (நம்பிக்கை மற்றும் நல்லறங்களின்) ஒளி அவர்களுக்கு முன்பும் வலப்புறத்தும் விரைந்துவரும். அவர்கள் "எங்கள் இறைவா! எங்கள் ஒளியை எங்களுக்கு முழுமையாக்கித் தருவாயாக! எங்களை மன்னிப்பாயாக! உறுதியாக நீ அனைத்துப் பொருள்களின்மீதும் பேராற்றலுடையவன்" என்று கூறுவர்.*

[9]*நபியே! மறுப்பாளர்களுக்கும் நயவஞ்சகர்களுக்கும் எதிராகக் கடுமையாகப் பாடுபடுவீராக! அவர்களிடம் கடுமையாக நடந்து கொள்வீராக! அவர்களின் இருப்பிடம் நரகமாகும். சென்றடையும் இடங்களில் அது மிகவும் கேடானதாகும்.* [10]*நோவாவுடைய மனைவியையும் லோத்தின் மனைவியையும் அல்லாஹ் (ஓரிறை)மறுப்பாளர்களுக்கு எடுத்துக்காட்டாகக் கூறுகிறான். அவ்விருவரும் நம்முடைய நல்லோரான இரு அடியார்களின் கீழ் இருந்தனர். எனினும் அவர்கள் தங்கள் கணவர்களுக்கு (எதிராக மார்க்கத்தில்) மோசம் செய்தனர். அப்பெண்களுக்கு அல்லாஹ்விடமிருந்து (வரும் வேதனை) எதனையும் அந்த நல்லடியார்களால் தடுக்க முடியவில்லை. "நரக நெருப்புக்குள்*

*நுழைவோருடன் நீங்களும் நுழையுங்கள்" என்றே அவ்விரு பெண்களுக்கும் கூறப்பட்டு விட்டது.*

*[11]நம்பிக்கையாளர்களுக்கு எடுத்துக்காட்டாக ஃபாரோவின் மனைவியை அல்லாஹ் கூறுகிறான். அவர் "என் இறைவா! உன்னிடத்திலே சொர்க்கத்தில் எனக்காக ஒரு வீட்டை அமைத்துத் தருவாயாக! ஃபாரோவிடமிருந்தும் அவனது (கொடுஞ்) செயலிலிருந்தும் என்னைக் காப்பாயாக!" மேலும் "தீவினையாளர் கூட்டத்திலிருந்தும் என்னைக் காப்பாயாக!" என்று இறைஞ்சிக் கொண்டிருந்தார். [12]மேலும் அல்லாஹ் இம்ரானின் மகள் மர்யத்தையும் (நம்பிக்கையாளர்களுக்கு எடுத்துக்காட்டாகக் கூறுகிறான்). அவர் தமது கற்பைக் காத்துக் கொண்டார். அவருள் நாம் எமது ஆன்மாவை ஊதினோம். அவர் தம் இறைவனின் வார்த்தைகளையும் அவனது வேதங்களையும் உண்மைப்படுத்தினார். முற்றிலும் கீழ்ப்படிந்து நடப்பவர்களில் ஒருவராக இருந்தார்.*

# 67. ஆட்சி (அல்முல்க்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1](மனிதர்களே!) ஆட்சி யார் கையில் உள்ளதோ அவன் பெரும் பேறுடையவன். அவன் அனைத்துப் பொருள்களின் மீதும் பேராற்றலுடையவன். [2]உங்களில் செயல்களால் மிக அழகானவர் யார் என்பதைச் சோதிப்பதற்காகவே அவன் இறப்பையும் வாழ்வையும் படைத்தான். அவன் யாவற்றினும் வல்லவன்; பெரும் மன்னிப்பாளன். [3]அவன்தான் ஏழு வானங்களையும் ஒன்றன் மேல் ஒன்றாகப் படைத்தான். (மனிதனே!) அளவற்ற அருளாளனின் படைப்பில் எந்தக் குறைபாட்டையும் நீ காணமாட்டாய். மீண்டும் (கவனம் செலுத்திப்) பார். உனக்கு ஏதேனும் குறை தென்படுகிறதா? [4]மீண்டும் இருமுறை பார்வையைச் செலுத்து. (உன்) பார்வை தோல்வியுற்றுக் களைத்து உன்னிடமே திரும்பிவிடும்.*

[5]நாம் முதல் வானத்தை விளக்குகளால் அலங்கரித்துள்ளோம்.
நாம் அவற்றை (வேவு பார்க்கவரும்) சாத்தான்களை எறிந்து
துரத்துவதற்காகவே அமைத்துள்ளோம். (அன்றி) அவர்களுக்குக்
கொழுந்து விட்டெரியும் நரக வேதனையையும் தயார்செய்து
வைத்துள்ளோம். [6]தங்கள் இறைவனை மறுப்போருக்கு நரக
வேதனையுண்டு. சென்றடையும் இடங்களில் அது மிகவும்
கெட்டதாகும். [7]அதில் அவர்கள் எறியப்படும்போது, கொதித்துக்
கொண்டிருக்கும் அதன் பயங்கர ஓலத்தைச் செவியுறுவர். [8]அது
கடுஞ்சினத்தால் (வெடித்துச்) சிதறிவிடும் போலத் தோன்றும்.
அதில் ஒரு சமூகத்தார் எறியப்படும் போதெல்லாம் அதன்
காவலர்கள் அவர்களிடம், “உங்களிடம் எச்சரிக்கை செய்பவர்
எவரும் வரவில்லையா?” என்று கேட்பர். [9]அதற்கு அவர்கள்,
“ஆம், எங்களிடம் எச்சரிக்கை செய்பவர் வந்திருந்தார். ஆயினும்
நாங்கள் அவரைப் பொய்மைப்படுத்தினோம். அல்லாஹ்
எதனையும் அருளவில்லை; நீங்கள் பெரும் கெடுவழியில்
இருக்கிறீர்கள் என்று கூறி விட்டோம்” எனக் கூறுவர். [10](மேலும்)
“நாங்கள் செவிமடுத்திருந்தால் அல்லது (தூதர் கூறியவற்றை)
விளங்கிக் கொண்டிருந்தால் நரகவாசிகளாக ஆகியிருக்க
மாட்டோமே” என்றும் கூறுவர். [11](இவ்வாறு) அவர்கள் தம்
பாவங்களை ஒப்புக் கொள்வர். இறையருள் நரகவாசிகளுக்கு
எட்டாத் தொலைவிலானதாகும்.

[12]மறைவிலும் தங்கள் இறைவனுக்கு அஞ்சுவோருக்கு(ப்
பாவ)மன்னிப்பும் பெரும் கூலியும் உண்டு. [13](மனிதர்களே!)
மறைமுகமாகப் பேசினாலும் வெளிப்படையாகப் பேசினாலும்
உறுதியாக அவன் உள்ளங்களில் உள்ளவற்றை நன்கறிவான்.
[14]படைத்தவன் அறியமாட்டானா, என்ன? அவன் நுட்பமானவன்;
முற்றும் அறிந்தவன்.

[15]அவன்தான் பூமியை உங்களுக்கு (நீங்கள் வாழ்வதற்கு)
இசைந்ததாக ஆக்கினான். அதன் பல பகுதிகளிலும்
செல்லுங்கள்; (அதில்) அவன் வழங்கும் உணவை உண்ணுங்கள்.

*(மறுமையில்) அவனிடமே நீங்கள் மீண்டும் எழுப்பப்பட்டுச்
செல்ல வேண்டியிருக்கிறது. [16]வானத்தில் உள்ளவன் உங்களைப்
பூமியினுள் புதையச் செய்துவிடமாட்டான் என்று நீங்கள்
அச்சமற்றிருக்கிறீர்களா? அப்போது அது குலுங்கும். [17]அல்லது
வானத்தில் உள்ளவன் உங்கள்மீது கற்களை வீசும் சூறாவளியை
அனுப்பிவிடமாட்டான் என்று அச்சமற்றிருக்கிறீர்களா? எனது
எச்சரிக்கை எத்தகையது என்பதை நீங்கள் விரைவில் அறிந்து
கொள்வீர்கள்? [18]இவர்களுக்கு முன் இருந்தவர்களும் (எமது
வசனங்களைப்) பொய்யென மறுத்துள்ளனர். அப்போது
(அவர்கள்மீதான) எனது மறுப்பு எத்தகைய(கொடூரமான)தாக
இருந்தது!*

*[19]இவர்களுக்கு மேலே இறக்கைகளை விரித்தும் குவித்தும் பறந்து
கொண்டிருக்கும் பறவைகளை இவர்கள் கவனிக்கவில்லையா?
அவற்றை விழுந்துவிடாமல் தடுத்துக் கொண்டிருப்பவன் அளவற்ற
அருளாளனைத் தவிர வேறு யாருமில்லை. உறுதியாக அவன்
அனைத்தையும் உற்று நோக்கிக் கொண்டிருக்கிறான். [20]அளவற்ற
அருளாளனுக்கு எதிராக உங்களுக்கு உதவும் படையினர் யார்?
(ஓரிறை)மறுப்பாளர்கள் ஏமாற்றத்தில் இருக்கின்றனர். [21]தான்
வழங்கும் வாழ்வாதாரத்தை அவன் நிறுத்திக் கொண்டால்
உங்களுக்கு வாழ்வாதாரம் வழங்குபவர் (வேறு) யார்?
மாறாக, அவர்கள் வரம்பு மீறுவதிலும் (சத்தியத்தைவிட்டு)
விலகியோடுவதிலும்தான் பிடிவாதமாக உள்ளனர்.*

*[22](நபியே!) முகம் கவிழ்ந்து நடந்து செல்பவன் நேர்வழி
பெற்றவனா அல்லது சீராகச் செல்பவன் நேர்வழி பெற்றவனா?
[23](நபியே! அவர்களிடம்) “அவன்தான் உங்களைப் படைத்து
உங்களுக்குச் செவிகளையும் கண்களையும் உள்ளங்களையும்
வழங்கினான். ஆயினும் நீங்கள் நன்றி செலுத்துவது மிக அரிதே”
என்று கூறுவீராக! [24](மேலும்) நீர், “அவன்தான் உங்களைப் பூமியில்
பரவச் செய்தான். அவனிடம்தான் நீங்கள் (மறுமையில்) ஒன்று
திரட்டப்படுவீர்கள்” என்றும் கூறுவீராக! [25](அவர்கள்) “நீங்கள்*

*உண்மையாளர்களாயின் இந்த எச்சரிக்கை வாக்கு எப்போது
நிறைவேறும் என்று (சொல்லுங்கள்” எனக்) கேட்கின்றனர்.
[26](நபியே!) “இதனைப்பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது,
நான் தெளிவாக எச்சரிப்பவன் மட்டுமே என்று நீர் கூறுவீராக!
[27]மறுப்பாளர்களாகிய அவர்கள் அதனை அருகில் காணும்போது
அவர்களின் முகங்கள் கருத்துவிடும். (அப்போது உலகில்)
”நீங்கள் (எப்போதுவரும் என்று) கேட்டுக் கொண்டிருந்தது
இதுதான்” என்று கூறப்படும். [28](நபியே!) அவர்களிடம்,
நீங்கள் விரும்பியவாறு) அல்லாஹ் என்னையும் என்னுடன்
இருப்பவர்களையும் அழித்துவிட்டாலோ அல்லது எங்கள் மீது
அருள் புரிந்தாலோ (அது எங்களைப் பொறுத்தது). ஆனால்
துன்புறுத்தும் வேதனையிலிருந்து (ஓரிறை)மறுப்பாளர்களைக்
காப்பாற்றுபவர் யார்?” என்று கேட்பீராக! [29]“அவன் அளவற்ற
அருளாளன், நாங்கள் அவன்மீதே நம்பிக்கை கொண்டுள்ளோம்.
அவனையே (பொறுப்பாளனாகச்) சார்ந்துள்ளோம். தெளிவாகக்
கெடுவழியில் இருப்பவர் யார் என்பதை நீங்கள் மிக விரைவில்
அறிந்துகொள்வீர்கள்” என்றும் கூறுவீராக! [30]“நீங்கள் பருகும்
தண்ணீர் அடியாழத்திற்குப் போய் விட்டால் உங்களுக்குத்
தூய (வேறொரு) நீரூற்றைக் கொண்டுவருபவன் யார்?” என்றும்
கேட்பீராக!*

## 68. எழுதுகோல் (அல்கலம்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]நூன்.*

*எழுதுகோலின் மீதும் மக்கள் எழுதுகின்றவற்றின் மீதும்
சத்தியமாக! [2](நபியே!) உமது இறைவனின் அருளால், நீர்
மனநலம் குன்றியவர் அல்லர். [3]உறுதியாக உமக்கு என்றும்
முடிவற்ற ஒரு கூலி உண்டு. [4]உறுதியாக நீர் உன்னதமான
நற்பண்புகள் உடையவராக இருக்கின்றீர். [5]எனவே விரைவில் நீரும்
கண்டுகொள்வீர், அவர்களும் கண்டுகொள்வார்கள், [6]உங்களில்*

*யார் மனநலம் குன்றியவர் என்பதை! [7]உங்களில் அவனது
வழியிலிருந்து தவறியவர்களை உம் இறைவனே நன்கறிவான்;
நேர்வழியில் செல்வோரையும் அவன்தான் நன்கறிவான்!
[8]எனவே (நபியே! சத்தியத்தைப்) பொய்மைப்படுத்துவோர்க்கு
நீர் பணிந்துவிடாதீர். [9]நீர் (உம்முடைய பரப்புரையைத்
தளர்த்தி) விட்டுக்கொடுத்தால் தாங்களும் விட்டுக்கொடுக்கலாம்
என்று அவர்கள் விரும்புகின்றனர். [10]அதிகம் சத்தியம்
செய்கின்ற, இழிவான எந்த மனிதனுக்கும் நீர் கட்டுப்படாதீர்.
[11]அவன் குறைகூறிப் புறம்பேசித் திரிபவன்; [12]நற்செயல்களைத்
தடுப்பவன்; வரம்பு மீறுபவன்; பெரும்பாவி; [13]கொடூரமானவன்.
இத்தனைக்கும் மேல் அவன் தவறான வழியில் பிறந்தவன்.
[14]அவன் செல்வமும் ஆண்பிள்ளைகளும் உடையவனாக
இருப்பதனால்தான் (செருக்குற்றவன்). [15]அவனிடம் எமது
வசனங்கள் ஓதிக்காட்டப்படும்போது "இவை முன்னோர்களின்
கட்டுக்கதைகள்" என்று கூறுகிறான். [16]விரைவில் நாம் அவனது
மூக்கின்மீது (சூடுபோட்டு) அடையாளம் இடுவோம்.*

*[17](முன்னர்) நாம் தோட்டக்காரர்களைச் சோதித்தது
போலவே (மக்காவாசிகளாகிய) இவர்களையும் சோதித்தோம்.
(அத்தோட்டக்காரர்கள்) "விடிகாலையில் சென்று (தோட்டத்தின்
கனிகளை) உறுதியாக அறுவடை செய்வோம்" என்று சத்தியம்
செய்திருந்தனர். [18](ஆனால்) "இறைவன் விரும்பினால்
(அறுவடை செய்வோம்") என்று கூறவில்லை. [19]எனவே அவர்கள்
உறங்கிக் கொண்டிருந்தபோது உமது இறைவனிடமிருந்து சுற்றி
வளைக்கக்கூடியது (பேரிடர் ஒன்று தோட்டத்தைச்) சுற்றி
வளைத்துக்கொண்டது. [20]அது அறுவடை செய்யப்பட்ட
வயல் போல(த் தரிசாகி)க் கிடந்தது. [21](இதனை அறியாத
தோட்டக்காரர்கள்) காலையில் ஒருவரையொருவர் அழைத்தனர்.
[22]"நீங்கள் கனிகளைப் பறிப்பதாக இருந்தால் விடிகாலையில்
உங்கள் தோட்டத்திற்குப் புறப்படுங்கள்" [23]என்றபடி தங்களுக்குள்
மெதுவாகப் பேசிக் கொண்டே புறப்பட்டுச் சென்றனர்.*

[24]“இன்று எந்த ஏழையும் உங்களிடம் அங்கே வந்துவிடக் கூடாது”
என்றும் கூறிக் கொண்டனர். [25](ஏழை எவரும் வந்து பெறுவதைத்)
தடுக்கும் ஆற்றல் உடையவர்கள் என்று அவர்கள் தம்மைக் கருதிக்
கொண்டனர். [26]ஆனால் தோட்டத்தை (அடைந்து) அவர்கள்
பார்த்தபோது (இது நம் தோட்டம் அல்ல), நாம் வழிதவறி
வந்துவிட்டோம்” என்றனர். [27](பின்னர்த் தமது தோட்டம்தான்
என்று அறிந்து) “இல்லை, நாம் இழப்பிற்குள்ளாகிவிட்டோம்”
என்று கூறினர். [28]அவர்களுள் இருந்த நீதியாளர் ஒருவர் “நீங்கள்
இறைவனைத் துதிக்க வேண்டும் என்று நான் உங்களுக்குக்
கூறவில்லையா?” என்று கேட்டார். [29]அதற்கு அவர்கள் “எங்கள்
இறைவன் மிகவும் (அப்பாற்பட்டுத்) தனித்துயர்ந்தவன். உறுதியாக
நாங்கள்தாம் தவறிழைத்தவர்கள்” என்று கூறினர். [30](பின்னர்)
அவர்கள் ஒருவர் மீது ஒருவர் பழி சுமத்தலாயினர் [31]“அந்தோ!
எங்கள் கேடே! உறுதியாக நாங்கள் வரம்பு மீறியவர்களாக
இருந்தோம். [32]நாங்கள் எங்கள் இறைவன்பால் திரும்புகின்றோம்;
எங்கள் இறைவன் இதற்குப் பதிலாக இதைவிடச் சிறந்த
தோட்டத்தை எங்களுக்கு வழங்கக் கூடும்” என்று கூறினர்.
[33](நபியே! உம்மை மறுக்கும் இவர்களுக்கும்) இவ்வாறுதான்
வேதனை வரும். மறுமையின் வேதனையோ இதைவிடக்
கடுமையானதாகும். அவர்கள் அறிந்துகொள்ள வேண்டாமா?

[34]உறுதியாக இறையச்சமுடையோருக்கு அவர்களின்
இறைவனிடம் பேரின்பச் சொர்க்கச் சோலைகள் உண்டு.
[35]முற்றிலும் கீழ்ப்படிந்து நடப்போரை நாம் பாவம்
புரிந்தவர்களுக்குச் சமமாக ஆக்கிவிடுவோமா என்ன?
[36](மறுப்பாளர்களே!) உங்களுக்கு என்ன நேர்ந்தது? (இருவரும்
சமம் என) நீங்கள் எவ்வாறு முடிவு செய்கிறீர்கள்? [37]உங்களிடம்
ஏதேனும் வேதம் உள்ளதா? அதில் நீங்கள் (நல்லோரும்
பாவிகளும் சமம் எனப்) படிக்கிறீர்களா? [38]அதில், நீங்கள்
விரும்புபவையெல்லாம் உங்களுக்குக் கிடைக்கும் என்று
(சொல்லப்பட்டு) உள்ளதா? [39]‘நீங்கள் கோருவதெல்லாம் மறுமை

நாள்வரை உங்களுக்குக் கிடைத்துக் கொண்டே இருக்கும்'' என்று
எம்மிடம் ஏதேனும் உடன்படிக்கை செய்திருக்கிறீர்களா? 40(அப்படி
இருந்தால்) அவர்களில் யார் இதற்குப் பொறுப்பாளி என்று நீர்
அவர்களிடம் கேளும். 41அவர்களுக்கு யாரேனும் இணையாளர்கள்
இருக்கின்றனரா? அவர்கள் உண்மையாளர்களாயின் தம்
இணையாளர்களைக் கொண்டு வரட்டும்.

42உண்மையின் மீதிருந்து திரை விலகி (அனைத்து
மறைபொருள்களும் வெளிப்பட்டுவிடும்) மறுமை நாளில்
மக்கள் (அல்லாஹ்வுக்குத்) தலைவணங்க அழைக்கப்படுவர்.
ஆனால் (இறைவனை மறுத்துவந்த) அவர்களால் தலைவணங்க
இயலாது. 43அவர்களின் பார்வைகள் தாழ்ந்திருக்கும்;
இழிவு அவர்களைச் சூழ்ந்துகொள்ளும். அவர்கள் (உலகில்)
உடல்நலத்துடன் இருந்தபோது (இறைவனுக்குத்) தலைவணங்குமாறு
அழைக்கப்பட்டு வந்தனர். 44ஆகவே (நபியே!) இந்த வேதத்தைப்
பொய்மைப்படுத்துவோரை என்னிடம் நீர் விட்டுவிடும்.
அவர்களே அறியாதவாறு, படிப்படியாக அவர்களை நாம்
(அழிவின்பால்) கொண்டுசெல்வோம்; 45நான் அவர்களுக்குக்
காலக்கெடு அளிக்கிறேன். உறுதியாக என் திட்டம் வலுவானது.

46அவர்களிடம் நீர் ஏதேனும் கூலி கேட்கிறீரா? அதனால்
கடன் சுமையில் அழுந்துகின்றனரா? 47அல்லது அவர்களிடம்
மறைவான(வற்றைப் பற்றிய) அறிவு இருந்து அதனை அவர்கள்
எழுதிக் கொண்டிருக்கிறார்களா? 48(ஆகவே, நபியே!) உம்
இறைவனின் தீர்ப்பு வரும்வரை நீர் பொறுமை காப்பீராக!
(தமது மக்களிடம் சினம் கொண்டு பிரிந்து சென்று) மீனால்
விழுங்கப்பட்டவரைப் போல் (யோனா) ஆகிவிடாதீர். அவர்
துயரம் நிறைந்தவராக(த் தம் இறைவனை) அழைத்ததை (நீர்
எண்ணிப்பாரும்). 49அவரது இறைவனின் அருள் அவரைத்
தழுவாதிருந்தால் பழிப்பிற்குரியவராக வெட்டவெளியில்

*வீசியெறியப்பட்டிருப்பார். [50]அவரது இறைவன் அவரைத் தேர்ந்தெடுத்து நல்லோர்களில் சேர்த்துக் கொண்டான். [51]மறுப்பாளர்கள் (குர்ஆன்) அறிவுரையைச் செவியுறும்போது தம் பார்வைகளைக் கொண்டே உம்மை வீழ்த்தி விட முனைகின்றனர். "உறுதியாக இவர் ஒரு மனநோயாளி" என்றும் கூறுகின்றனர். [52]இது (குர்ஆன்) உலகத்தாருக்கு ஓர் அறிவுரையேயன்றி வேறில்லை.*

# 69. உறுதியாக நிகழக்கூடியது (அல்ஹாக்கா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]உறுதியாக நிகழக்கூடியது! [2]'உறுதியாக நிகழக்கூடியது' எது? [3]'உறுதியாக நிகழக்கூடியது' என்னவென்று (நபியே!) உமக்கு உணர்த்தியது எது? [4]ஸமூத், ஆத் சமுகத்தினர் அந்தத் திடுக்கிடச் செய்யும் (மறுமை) நிகழ்வை மறுத்தனர். [5]எனவே ஸமூத் சமூகத்தார் பேரோசையால் அழிக்கப்பட்டனர். [6]ஆத் சமுகத்தினரோ கொடும் ஊதற்காற்றினால் அழிக்கப்பட்டனர். [7]தொடர்ந்து ஏழு இரவுகள், எட்டு பகல்கள் அவர்கள்மீது அல்லாஹ் அதனை வீசச் செய்தான். (அச்சமயம் நீர் அங்கிருந்தால்) அவர்கள் உளுத்துப்போய் அடியோடு பிடுங்கப்பட்ட பேரீச்சை மரத்தண்டுகளைப் போல் வீழ்ந்து கிடப்பதைக் கண்டிருப்பீர். [8]அவர்கள் (வழிவந்தோர்) யாரேனும் (தப்பிப்பிழைத்து) எஞ்சி இருப்பதாக நீர் பார்க்கிறீரா? [9]ஃபாரோவும், அவனுக்கு முன்பு வாழ்ந்தவர்களும், தலைகீழாகப் புரட்டப்பட்ட ஊரிலிருந்த (லோத்துடைய) மக்களும் தீச்செயல்புரிந்தனர். [10]அவர்கள் தங்கள் இறைவனின் தூதருக்கு எதிராகச் செயல்பட்டனர். எனவே அல்லாஹ் அவர்களை மிகக் கடுமையாக தண்டித்தான். [11](மக்களே! நோவா கால வெள்ளப் பெருக்கில்) தண்ணீர் எல்லை மீறிச் சென்றபோது நாம் உங்க(ள் முன்னோர்க)ளைக் கப்பலில் ஏற்றி(க் காப்பாற்றி)னோம். [12]அதனை உங்களுக்கு ஒரு படிப்பினையாக்குவதற்கும் கவனமிக்க செவிகள் (வழிவழியாக) அதனைப் பாதுகாத்து வைத்துக் கொள்வதற்கும் நாம் அவ்வாறு செய்தோம்.*

*13எக்காளம் ஒருமுறை ஊதப்படும்போது, 14பூமியும்
மலைகளும் உயர்த்தப்பட்டு ஒரேயடியாக நொறுக்கப்படும்போது,
15அன்றுதான் நிகழக்கூடிய (மாபெரும்) நிகழ்வு நிகழ்ந்துவிடும்.
16வானம் பிளந்துவிடும். (மறுமையாகிய) அந்நாளில் அது
வலுவிழந்துவிடும். 17வானவர்கள் அதன் விளிம்புகளில்
இருப்பார்கள். (நபியே!) அந்நாளில் உமது இறைவனின்
இறையிருக்கையை எட்டு வானவர்கள் தம்மீது சுமந்து
கொண்டிருப்பர். 18(மறுமையாகிய) அந்நாளில் (மனிதர்களே!)
நீங்கள் (இறைவன் முன்) நிறுத்தப்படுவீர்கள். உங்களது எந்த
மறைபொருளும் (இறைவன்முன்) மறைந்திராது.* 19எவரது
பதிவேடு அவரது வலக்கையில் கொடுக்கப்படுமோ அவர், "இதோ
என் பதிவேட்டைப் படியுங்கள். 20நான் எனது விசாரணையை
எதிர்கொள்வேன் என்று உறுதியாக எண்ணியிருந்தேன்" என்று
கூறுவார். 21எனவே அவர் மனநிறைவான வாழ்க்கையில் இருப்பார்.
22உயர்வான சொர்க்கச் சோலையில் (இருப்பார்). 23அதன்
கனிகள் (எளிதில் கைக்கெட்டும் வண்ணம்) தாழ்ந்து தொங்கிக்
கொண்டிருக்கும். 24"கடந்த காலங்களில் நீங்கள் செய்த (நல்)
வினைகளின் பயனாக (இப்போது) மகிழ்ச்சியுடன் உண்ணுங்கள்,
பருகுங்கள்" (என்று அவர்களிடம் கூறப்படும்). 25எவனது
வினைப்பதிவேடு அவனது இடக்கையில் கொடுக்கப்படுமோ
அவன், "எனது பதிவேடு என்னிடம் கொடுக்கப்படாமல்
இருந்திருக்கக் கூடாதா! 26எனது விசாரணையை நான்
அறியாதிருந்திருக்க வேண்டுமே! 27அந்தோ! (சாவு என்ற)
அதுவே எனக்கு முடிவானதாக இருந்திருக்கக் கூடாதா?*

---

***இந்த நடப்புலகு மனிதர்களை சோதிப்பதற்காகவே படைக்கப்பட்டுள்ளது. சோதனைக்கான காலம் முடிவுற்றதும் இந்த உலகம் அழிக்கப்படும். மேலும் சோதனை முடிவுகளுக்கான தீர்ப்பின் தேவைகளுக்குப் புதிய உலகம் ஏற்படுத்தப்படும். எல்லாம் வல்ல இறைவன் தற்போது தன்னை மறைமுகமான வகையில் வெளிப்படுத்துகிறான். ஆனால் இவ்வுலகம் அழிக்கப்பெற்று, பின் மறுமை உலகில் எல்லாம் வல்ல இறைவன் தன்னை நேரடியாகவே வெளிப்படுத்துவான்.**

*28எனது செல்வம் எனக்குப் பயனளிக்கவில்லையே! 29என்
அதிகாரமும் அழிந்துபோய் விட்டதே” (என்று புலம்புவான்)
30(அப்போது) “அவனைப் பிடியுங்கள்; அவனுக்கு விலங்கு
மாட்டுங்கள். 31பின்னர் அவனை நரகத்தில் தள்ளுங்கள். 32பின்னர்
அவனை எழுபது முழம் நீளமுள்ள சங்கிலியால் பிணையுங்கள்”
(என்று நரகத்தின் காவலர்களுக்கு ஆணையிடப்படும்). 33அவன்
மகத்துவமிக்க அல்லாஹ்வின்மீது நம்பிக்கைகொள்ளாமல்
இருந்தான். 34அவன் ஏழைகளுக்கு(த் தானும் உணவளிக்கவில்லை;)
உணவளிக்குமாறு (பிறரைத்) தூண்டவுமில்லை. 35(எனவே) “இன்று
இங்கு அவனுக்கு உதவிபுரியும் நண்பன் யாருமில்லை. 36சீழ்,
சலம் தவிர அவனுக்கு வேறு உணவும் இல்லை. 37பாவிகளைத்
தவிர வேறு யாரும் அதனை உண்ணமாட்டார்கள்” (என்றும்
கூறப்படும்).*

*38மனிதர்களே! இல்லை, நீங்கள் காண்கின்றவற்றின் மீதும்
39நீங்கள் காணா(த, காண இயலா)தவற்றின் மீதும் நான் சத்தியம்
செய்கிறேன். 40உறுதியாக(க் குர்ஆன் ஆகிய) இது கண்ணியமிக்க
ஒரு தூதர் (எடுத்துரைக்கும் எனது) சொல்லாகும். 41இது
ஒரு கவிஞரின் சொல்லன்று. (எனினும்) நீங்கள் அரிதாகவே
(இதன்மீது) நம்பிக்கை கொள்கிறீர்கள். 42இது ஒரு சோதிடனின்
சொல்லும் அன்று. (ஆயினும் அரிதாகவே) நீங்கள் நல்லறிவு
பெறுகிறீர்கள். 43இது அனைத்துலகங்களின் இறைவனிடமிருந்து
அருளப்பெற்றதாகும். 44அவர் (நாம் அருளாத) எவையேனும்
சில சொற்களை எம்மீது புனைந்து கூறியிருந்தால் 45நாம் அவரது
வலக்கரத்தைப் பிடித்திருப்போம்; 46பின்னர் அவரின் நாடி
நரம்பைத் துண்டித்திருப்போம். 47உங்களில் எவரும் அவரிடமிருந்து
(எமது தண்டனையைத்) தடுத்திருக்கமுடியாது. 48உறுதியாக
இது இறையச்சமுடையோருக்கு ஒரு நினைவூட்டலேயாகும்.
49உங்களில் இதனைப் பொய்மைப்படுத்துவோரும் உள்ளனர்.
50இது (ஓரிறை)மறுப்பாளர்களுக்குத் துயரமளிப்பதாகும். 51இது
உறுதியான சத்தியமாகும். 52எனவே (நபியே!) மகத்துவமிக்க
உமது இறைவனின் பெயரைத் துதிப்பீராக!*

# 70. உயர்வழிகள் (அல்மஆரிஜ்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

*1(நபியே! இறைமறுப்பாளர்களுக்கு) நேரக்கூடிய வேதனைபற்றிக்
கேட்பவன், (அது எப்போது நிகழும் என ஏளனமாகக்) கேட்டான்.
2(ஓரிறை)மறுப்பாளர்களுக்கு (அது நிகழும் போது) அதைத்
தடுப்பவர் எவருமில்லை. 3இது (ஏறிச் செல்லும் விண்) படிகளின்
உரிமையாளனான அல்லாஹ்விடமிருந்து நிகழும். 4வானவர்களும்
(கேப்ரியேல் ஆகிய) தூய ஆவியும் அவனிடம் ஏறிச் செல்வர்.
அவர்கள் ஏறிச் செல்லும் அந்த நாளின் அளவு (உலக, மானிடக்
கணக்கில்) ஐம்பதாயிரம் ஆண்டுகளாகும். 5எனவே நீர் அழகிய
பொறுமையைக் கடைப்பிடிப்பீராக. 6அவர்கள் அதனை மிகத்
தொலைவில் இருப்பதாக எண்ணுகிறார்கள். 7ஆனால் நாம்
அதை அருகில் (இருப்பதாகவே) காண்கிறோம். 8(மறுமையாகிய)
அந்நாளில் வானம் உருகிய பித்தளை போல் ஆகிவிடும்.
9மலைகள் பிரிக்கப்பட்ட கம்பளி ரோமங்களைப் போல்
ஆகிவிடும். 10(அந்நாளில்) எந்த நண்பனும் தனது நண்பனைப்பற்றி
விசாரிக்கமாட்டான். 11குற்றவாளி அந்நாளின் வேதனையிலிருந்து
தப்புவதற்காகத் தன் பிள்ளைகளையும் 12தன் மனைவியையும்,
தன் சகோதரனையும் 13தன்னைப் பாதுகாத்து வந்த தன்
குடும்பத்தாரையும் 14இன்னும் பூமியிலுள்ள அனைவரையும்
பிணையாகக் கொடுத்தேனும் தன்னைக் காத்துக்கொள்ள
விரும்புவான்.*

*15எனினும் அது நடவாது. அ(த்தகையோருக்குரிய)து கொழுந்து
விட்டெரியும் (நரக) நெருப்பாகும். 16அது தோலை உரித்துவிடும்.
17(சத்தியத்தைப்) புறக்கணித்து விலகிச் சென்றவர்களையும்
18செல்வத்தை(யே குறியாக கொண்டு அதனைச்) சேர்த்து(ப் பதுக்கி)
வைத்துக் கொண்டவர்களையும் அது அழைக்கும். 19உறுதியாக
மனிதன் பொறுமையற்றவனாகப் படைக்கப்பட்டுள்ளான்.
20அவனுக்கு ஒரு துன்பம் நேரும்போது பதறி விடுகிறான்.
21அவனுக்கு வசதி வாய்ப்புகள் ஏற்படும்போது (தேவையுள்ள*

*பிறருக்குக் கொடுக்காமல் தன்னிடமே) தடுத்துக்கொள்கிறான்.*
*22தொழுகையாளிகளைத் தவிர! (அவர்கள் இத்தகையோர்*
*அல்லர்.) 23அவர்கள் தங்கள் தொழுகையைத் தவறாது*
*கடைப்பிடிப்பர். 24அவர்களின் செல்வங்களில் ஒரு குறிப்பிட்ட*
*பங்கு, 25இரந்து வேண்டுவோர்க்கும் ஆதரவற்றோர்க்கும் உண்டு.*
*26அவர்கள் தீர்ப்பு நாளின் மீது நம்பிக்கை கொண்டிருப்பர்.*
*27தங்கள் இறைவனின் தண்டனை குறித்து அஞ்சுவர். 28(ஏனெனில்)*
*உறுதியாக இறைவனின் தண்டனை அச்சமற்றிருக்கக் கூடியதன்று*
*(என்பதை நன்கு அறிவர்). 29அவர்கள் தம் மறைவுறுப்புகளைப்*
*பாதுகாத்துக் (கற்பைப் பேணிக்) கொள்வர். 30தங்கள்*
*மனைவியரிடமும் தங்கள் வலக்கரங்கள் உடைமையாக்கிக்*
*கொண்ட (அடிமைப்) பெண்களிடமும் தவிர! (அதற்காக)*
*அவர்கள் பழிக்கப்படமாட்டார்கள். 31இதனையன்றி வேறு*
*வழிகளைத் தேடுபவர்கள்தாம் வரம்பு மீறியவர்கள். 32அவர்கள்*
*தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட கையடைப் பொருள்களையும்*
*(கொடுத்த) வாக்குறுதிகளையும் பேணுவர். 33தாங்கள்*
*அளித்த சாட்சியங்களின்மீது உறுதியாக இருப்பர். 34தங்கள்*
*தொழுகையைப் பேணுவர். 35அவர்கள்தாம் சொர்க்கச்*
*சோலைகளில் கண்ணியப்படுத்தப்படுவர்.*

*36(நபியே!) இந்த மறுப்பாளர்களுக்கு என்ன நேர்ந்தது?*
*அவர்கள் உம்மை (ஏளனம் செய்வதற்காக) உம்மை நோக்கி*
*ஓடிவருகிறார்களே! 37வலப்பக்கத்திலிருந்தும் இடப்பக்கத்திலிருந்தும்*
*கூட்டம் கூட்டமாக (வருகின்றனர்). 38அவர்களில் ஒவ்வொருவரும்*
*அருள்நிறைந்த சொர்க்கத்தில் நுழைந்துவிடலாம் என்று*
*பேராசை கொண்டிருக்கின்றனரா? 39அது ஒருபோதும் நடவாது.*
*நாம் அவர்கள் அறிந்த பொருளிலிருந்துதான் அவர்களைப்*
*படைத்துள்ளோம்.*

*40இல்லை, கிழக்கு மற்றும் மேற்குத் திசைகளின் இறைவ(னான*
*எ)ன் மீது சத்தியம் செய்கிறேன். 41(அவர்களை நீக்கிவிட்டு)*
*அவர்களைவிடச் சிறந்தவர்களைக் கொண்டு வருவதற்கு நாம்*

*ஆற்றல் பெற்றுள்ளோம். நாம் இயலாதவர்கள் அல்லர். [42]ஆகவே (நபியே!) அவர்களை விட்டுவிடும். அவர்கள் வீண் பேச்சுகள் பேசிக் கொண்டும் விளையாடிக் கொண்டும் இருக்கட்டும். இறுதியில் அவர்கள் வாக்களிக்கப்பட்ட நாளைச் சந்திக்கப் போகின்றனர். [43]அவர்கள் மண்ணறைகளிலிருந்து வெளியேறும் நாளில், (குறிப்பிட்ட) ஓர் இலக்கை நோக்கி ஓடுவதைப் போல விரைந்தோடுவர். [44](அப்போது) அவர்களின் பார்வைகள் தாழ்ந்திருக்கும். இழிவு அவர்களைச் சூழ்ந்துகொள்ளும். அதுதான் அவர்கள் எச்சரிக்கப்பட்டிருந்த நாளாகும்.*

# 71. நோவா (நூஹ்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]நாம் நோவாவை அவரது சமூகத்தாரிடம் (தூதராக) அனுப்பினோம். "உம் சமூகத்தாருக்குத் துன்புறுத்தும் வேதனை வருவதற்கு முன்பாகவே அவர்களை நீர் எச்சரிப்பீராக!" (என்று கட்டளையிட்டோம்)
[2]அவர்களிடம் அவர், "என் சமூகத்தோரே! நான் உங்களை வெளிப்படையாக எச்சரிப்பவனாக இருக்கிறேன்.
[3]நீங்கள் அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள்; அவனுக்கே அஞ்சுங்கள்; எனக்குக் கீழ்ப்படியுங்கள். [4](அவ்வாறு செய்தால்) அவன் உங்கள் பாவங்களை மன்னிப்பான். உங்களுக்கு ஒரு குறிப்பிட்ட காலம்வரை (வாழத்) தவணை அளிப்பான். உறுதியாக அல்லாஹ் விதித்த தவணை வந்துவிட்டால் உறுதியாக அது தள்ளி வைக்கப்படமாட்டாது. இதனை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டுமே!" என்று கூறினார்.*

*[5](எவ்வளவோ காலம் அவர் அழைத்தும் அம்மக்கள் அவரைப் புறக்கணித்து விடவே, இறைவனை நோக்கி) "என் இறைவா! நான் என் சமூகத்தினரை இரவு பகலாக அழைத்தேன். [6]ஆனால் எனது அழைப்பு அவர்கள் வெருண்டோடுவதைத்தான் மிகுதியாக்கிற்று.
[7]நீ அவர்களை மன்னிக்க வேண்டும் என்பதற்காக நான்*

*அவர்களை அழைத்தபோதெல்லாம் அவர்கள் தம் காதுகளை விரல்களால் அடைத்துக் கொண்டனர்; தம் ஆடைகளால் தம்மை மறைத்துக் கொண்டனர்; (இறைமறுப்பில்) பிடிவாதமாக இருந்தனர்; செருக்குக்கு மேல் செருக்குக் கொண்டனர்.*
*[8]பின்னர் நான் அவர்களை உரக்க அழைத்தேன்.*
*[9]நான் அவர்களிடம் வெளிப்படையாகவும் பேசினேன்; மறைமுகமாகவும் பேசினேன்.*
*[10](அவர்களிடம்) "உங்கள் இறைவனிடம் பாவமன்னிப்புக் கோருங்கள். உறுதியாக அவன் பெரும் மன்னிப்பாளன்.*
*[11](அவ்வாறு செய்வீர்களாயின்) அவன் உங்களுக்குத் தொடர்ந்து மழையை அனுப்புவான்;*
*[12]செல்வங்களையும் மக்களையும் உங்களுக்கு வழங்கி உதவுவான்; உங்களுக்காகத் தோட்டங்களை உண்டாக்கி ஆறுகளையும் ஓடச் செய்வான்.*
*[13](மேலும் அவர்களிடம்) உங்களுக்கு என்ன நேர்ந்தது? அல்லாஹ்வின் மகத்துவத்தை நீங்கள் ஏன் உணரவில்லை?*
*[14]அவன் உங்களை (அடுத்தடுத்த) பல நிலைகளாக(இறுதியில் முழு மனிதராக)ப் படைத்தான்.*
*[15]அல்லாஹ் ஏழு வானங்களையும் எவ்வாறு ஒன்றன் மேல் ஒன்றாகப் படைத்துள்ளான் என்பதை நீங்கள் அறியவில்லையா?*
*[16]அவற்றில் அவன் சந்திரனை ஒளியாகவும் சூரியனை விளக்காகவும் அமைத்துள்ளான்.*
*[17]அல்லாஹ்வே பூமியிலிருந்து (மண்ணிலிருந்து) உங்களை(த் தாவரங்கள் போல) உருவாக்கி வளரச் செய்தான்.*
*[18]பின்னர் அவன் உங்களைப் பூமிக்குள் திரும்பக் கொண்டு செல்வான். (அதன் பின்னர்) அதிலிருந்தே உங்களை (மீண்டும்) வெளிப்படுத்துவான்.*
*[19]அல்லாஹ் உங்களுக்காகப் பூமியை விரிப்பாக ஆக்கினான்,*
*[20]அதனுடைய விரிந்த பாதைகளில் நீங்கள் செல்வதற்காக (என்றெல்லாம் அவர்களுக்கு நான் எடுத்துரைத்தேன்" என இறைவனிடம் கூறினார். மேலும்)*
*[21]"என் இறைவா! அவர்கள் எனக்கெதிராகச் செயல்படுகின்றனர். செல்வங்களாலும் பிள்ளைகளாலும் மிகுந்த இழப்பைத் தவிர வேறொன்றையும் பெறாதவர்களை(த் தங்கள் தலைவர்களாகக் கொண்டு) அவர்கள் பின்பற்றுகிறார்கள்.*
*[22]அவர்கள் பெரும்*

*சூழ்ச்சிகளைச் செய்தனர். [23](அவர்கள் தங்களுக்குள்) 'நீங்கள் உங்கள் தெய்வங்களை ஒருபோதும் விட்டுவிடாதீர்கள். வத்து, சுவாஉ, யகூஸ், யவூக், நஸ்ர் ஆகியவற்றை ஒருபோதும் விட்டுவிடாதீர்கள்' என்று கூறிக்கொள்கின்றனர். [24]அவர்கள் பெரும்பாலோரை வழிகெடுத்து விட்டனர். எனவே நீ இந்தத் தீவினையாளர்களுக்குத் தவறான வழியைத் தவிர வேறெதனையும் மிகுதிப்படுத்தாதே" என நோவா (இறைவனிடம்) வேண்டினார். [25]தங்கள் பாவங்களின் விளைவாக அவர்கள் (வெள்ளப்பெருக்கில்) மூழ்கடிப்பட்டனர். பின்னர் (நரக) நெருப்பில் புகுத்தப்பட்டனர். அவர்கள் அல்லாஹ்விடமிருந்து தங்களைக் காப்பாற்றக்கூடிய எந்த உதவியாளரையும் பெறவில்லை.*

*[26](நோவா இறைவனிடம்) "என் இறைவா! நீ இவ்விறைமறுப்பாளர்களில் ஒருவரையும் பூமியில் வாழ விட்டுவிடாதே. [27]நீ அவர்களை விட்டுவிட்டால் அவர்கள் உன் அடியார்களை வழிதவறச் செய்துவிடுவர். தீயவனை, மறுப்பாளனைத் தவிர (வேறு நல்ல பிள்ளைகளை) அவர்கள் பெற்றெடுக்கவும் மாட்டார்கள். [28]என் இறைவா! எனக்கும் என் பெற்றோருக்கும் என் வீட்டில் நம்பிக்கையாளராக நுழைந்தவர்களுக்கும் நம்பிக்கைகொண்ட ஆண்கள், பெண்கள் அனைவருக்கும் நீ பாவமன்னிப்பு வழங்குவாயாக! தீவினையாளர்களுக்கு அழிவைத் தவிர வேறு எதையும் மிகுதிப்படுத்தி விடாதே" என்று இறைஞ்சி வேண்டினார்.*

# 72. ஜின்கள் (அல்ஜின்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1](நபியே! நீர் மக்களிடம்) "ஜின்களில் ஒரு கூட்டத்தார் (நான் குர்ஆன் ஓதுவதைச்) செவியுற்று(த் தங்கள் இனத்தாரிடம்) 'நாங்கள் அற்புதமான ஒரு குர்ஆனைச் செவியுற்றோம்' என்று கூறியதாக எனக்கு இறையறிவிப்பு வெளியாகியுள்ளது" என்று கூறுவீராக! [2](மேலும் அந்த ஜின்கள்) "அது நேர்வழியைக்*

காட்டுகிறது. எனவே நாங்கள் அதன்மீது நம்பிக்கை கொண்டோம் (இனி) நாங்கள் எங்கள் இறைவனுக்கு யாரையும் இணையாக்க மாட்டோம். [3]எங்கள் இறைவனின் தகைமை மிகவும் தனித்துயர்ந்தது. அவன் (தனக்கு) மனைவியையோ மக்களையோ உண்டாக்கிக் கொள்ளவில்லை. [4]நம்மிலுள்ள அறிவிலி ஒருவன் அல்லாஹ்வைப்பற்றி உண்மைக்கு மாறானவற்றைக் கூறிக் கொண்டிருந்தான். [5]மனிதர்களும் ஜின்களும் அல்லாஹ்வின் மீது ஒருபோதும் பொய் கூறமாட்டார்கள் என்றே நாங்கள் எண்ணியிருந்தோம். [6]மனிதர்களிலுள்ள ஆண்களில் சிலர் ஜின்களில் உள்ள ஆண்கள் சிலரிடம் பாதுகாப்பு வேண்டினர். இதனால் (மனிதர்களாகிய) அவர்கள் (ஜின்களாகிய) இவர்களின் செருக்கை மிகுதிப்படுத்தி விட்டனர். [7]"அல்லாஹ் யாரையும் எழுப்பமாட்டான் என்று (ஜின்களே!) நீங்கள் எண்ணியதைப் போலவே (மனிதர்களாகிய) அவர்களும் எண்ணியிருந்தனர்" என்று கூறினர்.

[8](பின்னும் அந்த ஜின்கள்) "நாங்கள் வானத்தை ஆராய்ந்தோம். அது கடுமையான காவலாளிகளாலும், தீச்சுவாலைகளாலும் நிரப்பப்பட்டிருப்பதைக் கண்டோம். [9]நாங்கள் (இதற்குமுன் வானவர்களின் பேச்சை ஒட்டுக் கேட்பதற்காகப்) பல இடங்களில் அமர்ந்திருப்போம். ஆனால் இப்போது யார் ஒட்டுக் கேட்க முயன்றாலும் அவர் தனக்காகத் தயார் நிலையிலுள்ள ஒரு தீச்சுவாலையைக் காண்பார். [10](இதனால்) பூமியில் உள்ளவர்களுக்கு ஏதேனும் தீங்கு செய்யும் விருப்பமா அல்லது அவர்களின் இறைவன் அவர்களுக்கு நன்மையை விரும்பியுள்ளானா என்பதை நாங்கள் அறிய மாட்டோம். [11]நம்மில் சிலர் நல்லவர்களாக இருக்கின்றனர்; வேறு சிலர் அல்லாதோராகவும் இருக்கின்றனர். நாம் பல்வேறுபட்ட வழிகளில் சிதறிக் கிடக்கிறோம். [12]நாம் பூமியில் அல்லாஹ்வை இயலாதவனாக்கிவிட முடியாது என்பதையும் ஓடிச்சென்று அவனிடமிருந்து தப்பிவிட முடியாது என்பதையும் உணர்ந்து கொண்டோம். [13]நாங்கள் (குர்ஆனாகிய) நேர்வழியைச் செவியுற்றபோது அதன்மீது நம்பிக்கை

*கொண்டோம். தம் இறைவன் மீது நம்பிக்கைகொள்பவர் (தம் நற்செயல்களுக்கான) கூலி குறையுமென்றோ அநீதி இழைக்கப்படுவோம் என்றோ அஞ்சமாட்டார். [14]நம்மில் சிலர் கீழ்ப்படிந்தவர்களாகவும் (வேறு) சிலர் தீவினையாளர்களாகவும் இருக்கிறோம். எனவே கீழ்ப்படிந்தவர்கள்தாம் நேர்வழியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டவர்கள் ஆவர். [15]வழிதவறியவர்கள் நரகத்தின் எரிபொருளாகத்தான் இருப்பர்" (என்று தம் இனத்து ஜின்களிடம் கூறினர்)*

*[16](நபியே! இம்மக்காவாசிகள்) நேர்வழியில் நிலைத்திருந்தால் நாம் அவர்களுக்குப் பயன்தரும் (மழை) நீரைத் தாராளமாக வழங்கியிருப்போம். [17](நன்றி செலுத்துகிறார்களா என்று) அதன்மூலம் அவர்களைச் சோதிப்பதற்காக! எவர் தம் இறைவனின் நினைவைப் புறக்கணிக்கிறாரோ அவரைக் கடுமையான வேதனையில் அவன் ஆழ்த்தி விடுவான். [18]பள்ளிவாசல்கள் உறுதியாக அல்லாஹ்வுக்கே உரியனவாகும். (எனவே, மக்களே! அவற்றில்) நீங்கள் அல்லாஹ்வுடன் வேறு யாரையும் (இறைஞ்சி) அழைக்காதீர்கள். [19]அல்லாஹ்வின் அடியார் (ஆகிய முஹம்மத் நபி) அவனை வணங்குவதற்காக எழுந்து நிற்கும்போது மக்கள் அவருக்கு எதிராகத் திரண்டு சூழ்கின்றனர். [20](நபியே!) "நான் என் இறைவனை மட்டுமே இறைஞ்சி அழைக்கிறேன் அவனுக்கு வேறு யாரையும் இணையாக்கமாட்டேன்" (என்று) நீர் கூறும். [21](மேலும்) "உங்களுக்கு ஏதேனும் தீமையோ நன்மையோ செய்யும் ஆற்றல் எனக்கில்லை" (என்றும்) கூறும். [22](அவனுக்கு நான் பணியாவிட்டால்) "அல்லாஹ்விடமிருந்து என்னை யாரும் காப்பாற்ற முடியாது; அவனைத் தவிர வேறு எந்தப் புகலிடத்தையும் என்னால் பெறவே முடியாது. [23]அல்லாஹ்விடமிருந்து (வரும் வெளிப்பாட்டைக்) கொண்டு சேர்த்து விடுவதும் அவனது தூதுச் செய்திகளை அறிவிப்பதுமே எனது பணியாகும். அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் எதிர்ச்செயல் செய்வோருக்கு உறுதியாக நரக நெருப்புத்தான் உண்டு. அதில் அவர்கள் என்றென்றும் கிடப்பர்" (என்றும் நபியே! நீர் கூறுவீராக!)*

24இறுதியாக, அவர்களுக்கு எச்சரிக்கப்பட்டதை (மறுமையில்)
அவர்கள் காணும்போது, யாருடைய உதவியாளர்கள்
வலுவற்றவர்கள், (யார்) எண்ணிக்கையில் குறைவானவர்கள்
என்பதை அறிந்து கொள்வார்கள். 25(நபியே! அவர்களிடம்)
“உங்களுக்கு எச்சரிக்கப்படுவது அண்மையில் உள்ளதா அல்லது
என் இறைவன் அதற்கு நீண்ட தவணையை விதித்திருக்கின்றானா
என்பதை நான் அறியேன்” என்று கூறுவீராக! 26அவன்தான்
மறைவானவற்றை அறிந்தவன். தான் மறைவாக
வைத்திருப்பவற்றை யாருக்கும் அவன் வெளிப்படுத்துவதில்லை,
27ஆயினும் அவன் விரும்பிய தூதுவரைத் தவிர (அவருக்கு
அதனை அவன் வெளிப்படுத்தக் கூடும்). அவருக்கு முன்னும்
பின்னும் (வானவராகிய) பாதுகாவலரை அவன் நியமித்து
விடுகிறான், 28அ(த்தூது)வர்கள் தங்கள் இறைவனின் தூதுச்
செய்திகளை எடுத்துரைத்து விட்டார்களா என்பதை அறிந்து
கொள்வதற்காக. அவன் அவர்களிடம் உள்ளதைச் சூழ்ந்து
அறிந்து கொண்டிருக்கிறான். அவன் ஒவ்வொரு பொருளையும்
கணக்கிட்டு வைத்திருக்கிறான்.

# 73. போர்த்திருப்பவர் (அல்முஸ்ஸம்மில்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

1போர்வை போர்த்திருப்பவரே! 2(நபியே!) இரவின் ஒரு
பகுதியில் (தொழுகைக்காக எழுந்து) நிற்பீராக 3பாதி இரவு
அல்லது அதைவிடச் சற்றுக் குறைத்துக் கொள்வீராக! 4அல்லது
அதைவிட அதிகமாக்கிக் கொள்வீராக! குர்ஆனை நிறுத்தி
நிதானமாக ஓதுவீராக! 5நாம் உம்மீது ஒரு கனமான (இறை)
வெளிப்பாட்டை இறக்கி அருளப்போகின்றோம்.

6(நபியே!) உறுதியாக இரவில் (வணங்க) எழுவது மனத்தைக்
கட்டுப்படுத்துவதற்கும் (குர்ஆனின்) சொற்களைச் சீராக
வெளிப்படுத்துவதற்கும் உகந்தது. 7உறுதியாக உமக்குப் பகலில்

*நிறையப் பணிகள் உள்ளன. [8]உம் இறைவனின் பெயரை நினைவுகூர்வீராக. முற்றிலுமாக அவன்பால் சார்ந்துவிடுவீராக! [9]அவன் கிழக்கு மேற்குத் திசைகளின் இறைவன். அவனைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை. எனவே அவனையே நீர் (உமக்குப்) பொறுப்பாளனாக ஆக்கிக்கொள்வீராக! [10]அவர்கள் (உமக்கெதிராகப்) பேசுவதைப் பொறுமையுடன் சகித்துக் கொள்வீராக! அழகிய (கண்ணியமான) முறையில் அவர்களைவிட்டு விலகியிருப்பீராக! [11](சத்தியத்தை) மறுத்துரைக்கும் சுகவாசிகளை என்னிடம் விட்டுவீராக! இன்னும் சிறிது காலம் அவர்களைப் பொறுத்திருப்பீராக! [12]எம்மிடம் அவர்களுக்காக விலங்குகளும் (நரக) நெருப்பும் (உள்ளன). [13]தொண்டையில் சிக்கிக்கொள்ளும் உணவும் துன்புறுத்தும் வேதனையும் (உள்ளன). [14](மறுமையாகிய) அந்நாளில் பூமியும் மலைகளும் குலுங்கும். மலைகள் சரிந்து மணற் குவியலாகிவிடும்.*

*[15](மக்காவாசிகளே!) உங்களிடம் ஒரு தூதரை அனுப்பி வைத்திருக்கிறோம்; (அவர்) உங்களைப்பற்றிச் சாட்சி கூறுபவராக (இருப்பார்). இவ்வாறுதான் (முன்னர்) ஃபாரோவிடமும் ஒரு தூதரை அனுப்பினோம். [16](அத்)தூதருக்கு எதிராக ஃபாரோ செயல்பட்டான். எனவே நாம் அவனைக் கடுமையாகத் தண்டித்தோம். [17]நீங்கள் மறுத்தீர்களானால் குழந்தைகளையும் நரைத்த(முதிய)வர்களாக்கும் (கடும் திடுக்கீடாகிய) அந்நாளின் வேதனையிலிருந்து எவ்வாறு தப்புவீர்கள்? [18]அப்போது வானம் வெடித்துவிடும். அவனது வாக்குறுதி நிறைவேறியே தீரும். [19]இது ஓர் அறிவுரையாகும். எனவே விரும்புகிறவர் தம் இறைவனின்பால் செல்லும் (இவ்)வழியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டும். [20](நபியே!) உறுதியாக நீரும் உமது தோழர்களில் ஒரு பிரிவினரும் ஏறத்தாழ இரவில் மூன்றில் இரு பகுதி அல்லது பாதிப் பகுதி அல்லது மூன்றில் ஒரு பகுதிவரை நின்று தொழுகிறீர்கள் என்பதை உமது இறைவன் அறிந்திருக்கிறான். அல்லாஹ்தான் இரவையும் பகலையும் கணக்கிடுகின்றான்.*

*உங்களால் அதனைச் சரியாகக் கணக்கிட்டுக் கொள்ளமுடியாது என்பதை அவன் அறிவான். எனவே உங்கள்மீது அவன் அருள் புரிந்துள்ளான். ஆகவே குர்ஆனிலிருந்து உங்களுக்கு எளிதான அளவு (தொழுகையில்) ஓதுங்கள். (ஏனெனில்) உங்களில் நோயாளிகளும் இறையரு(ளாகிய பொரு)ளைத் தேடிப் பூமியில் பயணம் செய்பவர்களும் மேலும் அல்லாஹ்வின் பாதையில் போர் புரிபவர்களும் இருப்பார்கள் என்பதையும் அவன் அறிவான். எனவே குர்ஆனிலிருந்து உங்களுக்கு எளிதான அளவு (தொழுகையில்) ஓதுங்கள். தொழுகையைக் கடைப்பிடித்துக் கடமையாக்கப்பட்ட கொடையையும் கொடுத்து வாருங்கள். அல்லாஹ்வுக்கு (அறச்செலவாகிய) அழகிய கடனை அளியுங்கள். உங்க(ள் மறுமை நலன்)களுக்காக நீங்கள் (இம்மையில்) சேர்த்து வைக்கும் நன்மைகளை அல்லாஹ்விடம் பெறுவீர்கள். அதுவே சிறந்ததும் கூலியில் மகத்தானதுமாகும். அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கேளுங்கள். உறுதியாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளன்; நிகரற்ற அன்பாளன் ஆவான்.*

## 74. போர்த்திக் கொண்டவர் (அல்முத்தஸ்ஸிர்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]போர்வை போர்த்திக்கொண்டவரே! [2](நபியே!) எழுவீராக!
(மனிதர்களுக்கு) எச்சரிக்கை செய்வீராக! [3]உமது இறைவனைப்
பெருமைப்படுத்துவீராக! [4]உமது ஆடைகளைத் தூய்மையாக
வைப்பீராக! [5](அகபுற) மாசுகளை வெறுத்துவிடுவீராக! [6](நீர்
கொடுப்பதைவிட) மிகுதியாகப் பெறக் கருதி(ப் பிறருக்கு)
உதவி செய்யாதீர். [7]உமது இறைவனுக்காகப் பொறுமையை
மேற்கொள்வீராக!*

*[8]எக்காளம் ஊதப்படும்போது, [9]அந்தநாள் மிகக் கடுமையான
நாளாக இருக்கும். [10]அது மறுப்பாளர்களுக்கு எளிதானதன்று.*

[11]*(நபியே!) நான் தனியாகப் படைத்த அந்த ஒருவனை என்னிடமே*
*விட்டுவிடும். [12]நான் அவனுக்கு ஏராளமான செல்வங்களைக்*
*கொடுத்தேன். [13]கூடவே இருக்கக் கூடிய ஆண்மக்களையும்*
*(வழங்கினேன்). [14](மேலும்) மிகுந்த வசதிகளையும் அவனுக்கு*
*ஏற்படுத்திக் கொடுத்தேன். [15]ஆயினும், நான் அவனுக்கு இன்னும்*
*மிகுதியாகத் தர வேண்டும் என்று (அவன்) பேராசைப்படுகிறான்.*
[16]*அது நடவாது, ஏனெனில் அவன் எமது வசனங்களுக்கு*
*எதிரானவனாக இருக்கிறான். [17]விரைவில் நான் அவனை*
*வேதனையின் சிகரத்தில் ஏறச்செய்வேன்.*

[18]*அவன் (குர்ஆனைப் பற்றிச்) சிந்தித்து (அதற்கெதிராகத்)*
*திட்டமிட்டான். [19]எனவே அவன் அழியட்டும்! எப்படிப்பட்ட*
*(கெடுவினை) ஒன்றை அவன் திட்டமிட்டான்! [20]அவன்*
*அழியட்டும்! எப்படிப்பட்ட (கெடுவினை) ஒன்றை அவன்*
*திட்டமிட்டான். [21]பின்னர் அவன் (சுற்றிலும்) பார்த்தான்;*
[22]*கடுகடுத்து முகம் சுளித்தான். [23]பின்னர் முதுகு காட்டித்*
*திரும்பிக் கொண்டான்; செருக்குக் கொண்டான். [24](பின்னர்க்*
*குர்ஆனைப் பற்றி) "இது வழிவழியாக வரும் சூனியமேயாகும்;*
[25]*இது மனிதனின் சொல்லேயாகும்" என்றும் கூறினான்.*

[26]*நான் அவனை மிக விரைவில் நரகத்தில் வீசியெறிவேன்.*
[27]*(நபியே!) 'நரகம்' எத்தகையது என்பதை எது உமக்கு உணர்த்தக்*
*கூடும்? [28]அது வாழவும் விடாது, சாகவும் விடாது. [29]அது தோலைக்*
*கருக்கிவிடும். [30]அதில் பத்தொன்பது வானவர்கள் (காவலர்களாக*
*இருக்கிறார்கள்). [31]நாம் நரகத்தின் காவலர்களாக வானவர்களை*
*மட்டுமே நியமித்துள்ளோம். நாம் அவர்களின் எண்ணிக்கையை(க்*
*குறித்து ஏளனம் செய்யும் (ஓரிறை)மறுப்பாளர்களுக்கு*
*(அவர்களைக் குழப்பும்) ஒரு சோதனையாகவே ஆக்கியுள்ளோம்.*
*வேதம் வழங்கப்பட்டவர்கள் உறுதி கொள்வதற்காகவும்*
*(ஓரிறை)நம்பிக்கையாளர்கள் தங்கள் நம்பிக்கையை மிகுத்துக்*
*கொள்வதற்காகவும் வேதம் வழங்கப்பட்டவர்களும்*
*நம்பிக்கையாளர்களும் ஐயம் கொள்ளாமல் இருப்பதற்காகவும்*

*உள்ளத்தில் நோயுள்ளவர்களும் (ஓரிறை) மறுப்பாளர்களும்
இந்தக் குறியீட்டின் மூலம் அல்லாஹ் என்னதான் (உணர்த்த)
விரும்புகின்றான் என்று பேசிக் கொள்வதற்காகவும்தான்
(பத்தொன்பது வானவர்கள் என எண்ணிக்கை அமைத்துள்ளோம்).
இவ்வாறு தான் விரும்பியோரை அல்லாஹ் வழிதவறச் செய்து
விடுகிறான்; தான் விரும்பியவர்களை நேர்வழியில் செலுத்துகிறான்.
உமது இறைவனின் படை(எண்ணிக்கை)களை அவனைத் தவிர
(வேறெவரும்) அறியார். (நரகத்தைப்பற்றிய செய்திகளாகிய)
இவை மனிதர்களுக்கான (எச்சரிக்கை) அறிவுரையேயாகும்.*

*[32]இல்லை; சந்திரன் மீது சத்தியமாக! [33]திரும்பிச் செல்லும்
இரவின் சத்தியமாக! [34]ஒளிவீசும் விடிகாலையின் மீது சத்தியமாக!
[35]உறுதியாக நரகம் மிகப் பெரியவற்றுள் ஒன்றாகும். [36]அது
மனிதர்களுக்கான எச்சரிக்கையாகும். [37]உங்களில் (நம்பிக்கையை)
முன்னோக்கியோ பின்னோக்கியோ செல்ல விரும்புபவர்களுக்கு
(எச்சரிக்கையாகும்). [38]ஒவ்வொரு மனிதனும் தன் செயல்களுக்குப்
பிணையாக உள்ளான், [39]வலப்புறத்தில் இருப்போரைத் தவிர.
[40]அவர்கள் சொர்க்கச் சோலைகளில் இருப்பர். [41]அவர்கள்
குற்றவாளிகளிடம், [42]"உங்களை எது நரகத்திற்குக் கொண்டு வந்தது?"
(என்று கேட்பர்). [43](குற்றவாளிகள்) "நாங்கள் தொழுபவர்களாக
இருக்கவில்லை. [44]ஏழைகளுக்கு உணவளிக்கவுமில்லை. [45]மாறாக
வீணாக வாதம் புரிபவர்களுடன் சேர்ந்து விவாதத்தில் மூழ்கிக்
கிடந்தோம். [46]நாங்கள் தீர்ப்பு நாளைப் பொய்யென மறுத்துக்
கொண்டிருந்தோம், [47]மரணம் எங்களை வந்தடையும் வரை" என்று
சொல்வார்கள். [48]எனவே (மறுமையாகிய அந்நாளில்) பரிந்துரை
செய்வோரின் பரிந்துரை அவர்களுக்குப் பயனளிக்காது.*

*[49](மக்காவாசிகளாகிய) அவர்களுக்கு என்ன நேர்ந்தது?
அவர்கள் (இந்த) அறிவுரையைப் புறக்கணித்துப் போகிறார்களே!
[50-51]அவர்கள் சிங்கத்தைக் கண்டு வெருண்டோடும் காட்டுக்
கழுதைகளைப் போல் இருக்கின்றனர். [52]அவர்களில்*

*ஒவ்வொருவரும் தங்களுக்கு (வேத வசனங்கள் அடங்கிய) விரிந்த ஏடுகள் வழங்கப்பட வேண்டுமென்று விரும்புகின்றனர்.*
*[53](ஒருபோதும் அது) நடவாது. மாறாக அவர்கள் மறுமையைக் குறித்து அஞ்சுவதில்லை. [54](இது சூனியமோ மனிதக் கூற்றோ) அன்று. இது ஓர் அறிவுரையாகும். [55]எனவே (நல்லறிவு பெற) விரும்புகிறவர் இதன்மூலம் அறிவுரை பெற்றுக் கொள்ளட்டும்.*
*[56]அல்லாஹ் விரும்பினாலேயன்றி அவர்கள் இதிலிருந்து அறிவுரை பெற்றுக் கொள்ளமாட்டார்கள். (மனிதர்களுக்கு) அஞ்சத் தக்கவன் அவன்தான். (அவர்களை) மன்னிக்கும் தகுதி வாய்ந்தவனும் அவன்தான்.*

# 75. மறுமைநாள் (அல்கியாமா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1](அவர்கள் நினைப்பது சரி) அல்ல, நான் மறுமை நாளின் மீது சத்தியம் செய்கிறேன். [2]இடித்துரைக்கும் மனசாட்சியின் மீதும் சத்தியம் செய்கிறேன். [3](இறந்து, உளுத்து மண்ணாய்ப் போன) அவனது எலும்புகளை நாம் ஒன்று திரட்டமாட்டோம் என்று மனிதன் எண்ணுகிறானா? [4]ஏன் முடியாது? நாம் அவனது விரலின் நுனியைக்கூடச் சரிப்படுத்தும் ஆற்றலுடையோம். [5]ஆயினும் மனிதன் (மறுமையை மறுத்துத்) தன் எதிர்காலத்திலும் பாவம் செய்யவே விரும்புகிறான். [6]"மறுமை நாள் எப்போது வரும்" என்று அவன் (ஏளனமாகக்) கேட்கிறான். [7]அது (மனிதனது) பார்வை தடுமாறும் போது, [8]சந்திரன் ஒளியற்றுவிடும் போது,*
*[9]சூரியனும் சந்திரனும் ஒன்று சேர்க்கப்படும்போது (வரும்).*
*[10]அந்நாளில் "நான் தப்பும் இடம் எங்கே?" என்று மனிதன் கேட்பான் [11]"முடியவே முடியாது. எங்குமே புகலிடம் இல்லை" (என்று கூறப்படும்) [12](மறுமையாகிய) அந்நாளில், (நபியே) உமது இறைவனிடம்தான் இறுதித் தங்குமிடம் இருக்கும். [13]அந்நாளில், மனிதன் செய்த செயல்களும் செய்யாமல் விட்டவையும் அவனுக்கு எடுத்துக் காட்டப்படும். [14](உண்மையில்) மனிதன்*

தனக்கே எதிரான சாட்சியாக இருப்பான். [15]அவன் எவ்வளவுதான்
பொய்க்காரணங்கள் கூறினாலும் சரியே! (அவை ஏற்கப்பட
மாட்டாது).

[16](நபியே! இறை வசனங்கள் மனத்தில் பதியத் தவறிவிடுமோ
என அஞ்சி) நீர் அவசரப்பட்டு அவற்றை ஓத உமது நாவை
அசைக்காதீர்! [17]உறுதியாக அதனை ஒன்றுசேர்ப்பதும்
(நீர்) ஓதும்படி செய்வதும் எமது பொறுப்பாகும். [18]எனவே
(கேப்ரியேல் மூலம்) நாம் அதனை ஓதும்போது பின்னர் நீர்
அதனைத் தொடர்வீராக! [19]அதனை விளக்குவதும் உறுதியாக
எமது பொறுப்பே ஆகும்.

[20](மனிதர்களே!) உண்மையில் நீங்கள் உடனடிப் பயனை
(உலக வாழ்க்கையை) விரும்புகிறீர்கள். [21](அதன் காரணமாக)
மறுமையை விட்டுவிடுகிறீர்கள். [22](மறுமையாகிய) அந்நாளில்
சில முகங்கள் பொலிவுடன் இருக்கும். [23]அவை தமது
இறைவனை நோக்கிய வண்ணமிருக்கும். [24]அந்நாளில் (வேறு)
சில முகங்கள் சோகமயமாக இருக்கும். [25]அவை தமக்கு இடுப்பை
முறிக்கும் பேரவலம் நிகழப் போவதாக உணர்ந்து (அஞ்சிக்)
கொண்டிருக்கும். [26](சரியல்ல, மறுமையை மறுக்காதீர்கள். ஒரு
மனிதனுடைய) உயிர் தொண்டையை அடைந்து விடும்போது,
[27]“மந்திரித்து ஊதுபவர் யாரேனும் இருக்கிறார்களா?” என்று
கேட்கின்றனர். [28](அவனோ) இது (உலகை விட்டுப்) பிரியும் நேரம்
என்பதை உறுதியாக உணர்ந்து கொள்வான். [29]கணுக்காலுடன்
கணுக்கால் பின்னிக்கொள்ளும். [30]அந்நாளில் (அவன்) உமது
இறைவனின்பால் (தண்டனைக்காக) ஓட்டிச் செல்லப்படுவான்.

[31]அவன் (இறை வேதத்தை) உண்மைப்படுத்தவில்லை,
தொழவுமில்லை. [32]மாறாக அதனைப் பொய்மைப்படுத்தி விலகிச்
சென்றான். [33]செருக்குடன் தன் குடும்பத்தாரிடம் சென்றான்.
[34](மனிதனே!) உனக்குக் கேடுதான். ஆம், உனக்குக் கேடுதான்.
[35]மேலும் உனக்குக் கேடுதான். ஆம், உனக்குக் கேடுதான். [36]தான்

*வெறுமனே விட்டு விடப்படுவான் என்று மனிதன் எண்ணிக்
கொண்டானா? [37]செலுத்தப்பட்ட ஒரு விந்துத் துளியாக அவன்
இருக்கவில்லையா? [38]பின்னர் அவன் இரத்தக் கட்டியாக ஆனான்.
அல்லாஹ் அவனைப் படைத்து(அவனது உறுப்புக்களை)ச்
சீராக்கினான். [39](இவ்வாறு படைக்கும்போது இரத்தக் கட்டியாக
இருந்ததை) ஆண் – பெண் என்ற இரு இனங்களாக்கினான்.
[40](இத்தகைய படைப்பாளி) இறந்தவர்களை மீண்டும் உயிர்ப்பிக்கும்
ஆற்றல் உடையவன் இல்லையா, என்ன?*

# 76. மனிதன் (அல்இன்ஸான்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]மனிதன் தான் சொல்லத் தகுந்த ஒரு பொருளாகக்கூட
இல்லாதிருந்த காலநேரம் ஒன்று அவனைக் கடக்கவில்லையா?
[2]நாம் மனிதனை ஒரு கலப்பான விந்திலிருந்து படைத்தோம்,
அவனைச் சோதிப்பதற்காக! (மேலும் அதற்காகவே) அவனைச்
செவியுறுபவனாகவும் பார்ப்பவனாகவும் ஆக்கினோம். [3]நாம்
அவனுக்குப் பாதையைத் தெளிவாக்கி விட்டோம். விரும்பினால்
அவன் நன்றியுள்ளவனாக இருக்கலாம் அல்லது நன்றி
கெட்டவனாக இருக்கலாம்.*

*[4]நாம் மறுப்பாளர்களுக்குச் சங்கிலிகளையும் விலங்குகளையும்
கொழுந்து விட்டெரியும் நெருப்பையும் தயார்செய்து
வைத்துள்ளோம். [5](சொர்க்கத்தில்) நல்லோர்கள் குவளைகளில்
கற்பூரம் கலந்த பானத்தை அருந்துவர். [6]அது இறையடியார்கள்
அருந்துகின்ற ஓர் ஊற்றாகும். அதை(த் தாம் விரும்பும்
இடங்களுக்கு) ஓடைகளாக ஓடச் செய்வார்கள். [7]அந்நல்லோர்
(உலகில் வாழ்ந்தபோது, தாங்கள் செய்து கொண்ட)
நேர்ச்சைகளை நிறைவேற்றுவர். கடுமை பரவியிருக்கும்
அந்த நாளைக் குறித்து அஞ்சுவர். [8](உணவின்) தேவையும்
விருப்பமும் தமக்கிருப்பினும் ஏழைகளுக்கும் அநாதைகளுக்கும்
சிறைப்பட்டவர்களுக்கும் உணவளிப்பர். [9](தம்மிடம் உணவு*

பெறுவோரிடம்) “இறைஉவப்பை விரும்பி நாங்கள் உங்களுக்கு
உணவளிக்கிறோம்; நாங்கள் உங்களிடமிருந்து கைம்மாறோ
நன்றியோ எதிர்பார்க்கவில்லை. 10நாங்கள் எங்கள்
இறைவனிடமுள்ள கடும் வேதனையான ஒரு நாளைக் குறித்து
அஞ்சுபவர்களாக இருக்கிறோம்” (என்று கூறுவர்). 11அல்லாஹ்
அவர்களை அந்நாளின் தீங்கிலிருந்து காப்பாற்றுவான்.
அவர்களுக்குப் பொலிவையும் மகிழ்ச்சியையும் அளிப்பான்.
12(இம்மையில்) அவர்கள் (துன்பங்களைப்) பொறுத்துக்
கொண்டிருந்ததன் காரணமாக சொர்க்கத்தையும்
பட்டாடைகளையும் அவர்களுக்கு வழங்குவான். 13அங்கு
அவர்கள் (பஞ்சணை) இருக்கைகளில் சாய்ந்திருப்பர். (கடும்)
வெப்பத்தையோ (கடுங்)குளிரையோ (அங்குக்)காணமாட்டார்கள்.
14சொர்க்கத்து (மரங்களின்) நிழல் அவர்களின்மீது படர்ந்திருக்கும்.
அதன் கனிகள் மிகத் தாழ்வாக தொங்கும் 15அவர்களுக்கு
முன்னால் வெள்ளிப் பாத்திரங்களும் கண்ணாடிக் குவளைகளும்
சுற்றிவருமாறு செய்யப்படும். 16(அவை கண்ணாடிகள் அல்ல;
கண்ணாடி போலத் தெளிவாக) வெள்ளியால் ஆனவை. அவற்றை
நிரப்புபவர்கள் (சொர்க்கவாசிகளின் விருப்பத்திற்கேற்பச்) சரியான
அளவில் நிரப்பி இருப்பர்.

17அங்கு அவர்களுக்கு இஞ்சி கலந்த மற்றொரு பானம்
வழங்கப்படும். 18இது அங்குள்ள ‘ஸல்ஸபீல்’ எனும் ஓர்
ஊற்றின் நீராகும். 19என்றும் (இளமை மாறாமல்) இருக்கும்
சிறுவர்கள் (பணிவிடைக்காக) அவர்களைச் சுற்றிக் கொண்டே
இருப்பார்கள். (நபியே!) நீர் அவர்களைப் பார்த்தால் தெளித்துக்
கிடக்கும் முத்துக்கள் எனக் கருதுவீர். 20(மேலும்) நீர் எங்கே
பார்த்தாலும் பேரின்பத்தையும் மிகப் பெரிய அரசாட்சியையும்
காண்பீர். 21(சொர்க்கவாசிகளான) அவர்கள்மீது மெல்லிய
பச்சைப் பட்டாடைகளும் (சரிகை இழைக்கப்பட்ட) கனமான
பட்டாடைகளும் இருக்கும். அவர்களுக்கு வெள்ளிக்காப்புகள்
அணிவிக்கப்படும். அவர்களின் இறைவன் தூய்மையான

*பானத்தையும் அவர்களுக்குப் புகட்டுவான். [22]“உறுதியாக இதுதான் உங்களுக்குரிய கூலியாகும். உங்களின் முயற்சி ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது” (என்று அவர்களிடம் கூறப்படும்.)*

[23](நபியே!) நாம்தாம் உம்மீது இந்தக் குர்ஆனைச் சிறிதுசிறிதாக
அருள்கின்றோம். [24]எனவே உமது இறைவனின் கட்டளைக்காகப்
பொறுத்திருப்பீராக! அவர்களில் (எந்த ஒரு) பாவிக்கோ
நன்றி கெட்டவனுக்கோ கட்டுப்படாதீர்! [25]உமது இறைவனின்
பெயரைக் காலையும் மாலையும் நினைவுகூர்வீராக! [26]இரவிலும்
அவனுக்குத் தலைவணங்குவீராக! இரவில் நீண்ட நேரம்
அவனைப் போற்றித் துதிப்பீராக! [27]இந்த மக்கள் உடனடிப்
பயனை (உலக வாழ்க்கையை) விரும்புகிறார்கள். தங்களுக்கு
முன்னிருக்கும் கடினமான ஒரு நாளை விட்டுவிடுகின்றனர்.
[28]நாம்தாம் அவர்களைப் படைத்தோம்; அவர்களின்
உடலமைப்பை உறுதிப்படுத்தினோம். நாம் நாடினால் (அவர்களை
அழித்துவிட்டு) அவர்களைப் போன்ற(ஆனால் நல்ல)வர்களை
அவர்களுக்குப் பதிலாகக் கொண்டுவருவோம். [29]இது ஓர்
அறிவுரையாகும். (எனவே) விரும்புகிறவர் தம் இறைவனின்பால்
செல்லும் பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டும். [30](எனினும்
மக்களே!) அல்லாஹ் விரும்பினாலன்றி நீங்கள் (எதனையும்)
விரும்ப முடியாது. உறுதியாக அல்லாஹ் முற்றும் அறிந்தவன்;
ஞானம் மிக்கவன். [31]தான் விரும்பியோரை அவன் தன் அருளில்
நுழையச் செய்கிறான். தீவினையாளர்களுக்கு அவன் துன்புறுத்தும்
வேதனையைத் தயார் செய்து வைத்துள்ளான்.

## 77. அனுப்பப்படுகின்ற காற்றுகள் (அல்முர்ஸலாத்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

[1]தொடர்ச்சியாக அனுப்பப்படுபவை(யான காற்றுகளின்) மீது
சத்தியமாக! [2]மிக வேகமாக வீசும் புயல் காற்றுகள் மீது சத்தியமாக!
[3](மேகங்களைப்) பரப்பிவிடும் காற்றுகளின் மீது சத்தியமாக!
[4](பல பகுதிகளுக்கும் மழையைப்) பிரித்தனுப்புபவற்றின் மீது

சத்தியமாக! [5]அறிவுரையை (இதயங்களில்) இடுபவை மீது
சத்தியமாக! [6]மன்னிப்பிற்காக அல்லது எச்சரிப்பதற்காக (அவற்றை
இறக்குகின்ற வானவர்கள் மீது சத்தியமாக!) [7]உங்களுக்கு
எச்சரிக்கை விடப்படுவது நடந்தே தீரும்.

[8]நட்சத்திரங்கள் ஒளியிழந்துவிடுதல், [9]வானம் பிளக்கப்படுதல்,
[10]மலைகள் தூள் தூளாக்கப்படுதல், [11](இறைத்)தூதர்கள்
குறிப்பிட்ட நேரத்தில் ஒன்று கூட்டப்படுதல் [12]இவையெல்லாம்
எந்த நாளுக்காகத் தவணை குறிக்கப்பட்டுள்ளன?
[13](இறுதித்) தீர்ப்பு நாளுக்காகவே! [14](நபியே!) தீர்ப்பு நாள்
எத்தகையதென்று உமக்கு எது விளக்கக் கூடும்? [15](உண்மையைப்)
பொய்மைப்படுத்துவோருக்கு அந்நாளில் கேடுதான். [16](அவ்வாறு
பொய்மைப்படுத்திக் கொண்டிருந்த) முன்னோர்களை நாம்
அழிக்கவில்லையா? [17]பின்னர் (குற்றம் புரிந்த) பின்னோர்களை
அவர்களின் பின்னே தொடரச் செய்தோம். [18]குற்றவாளிகளை
நாம் இவ்வாறே (வேதனை) செய்தோம். [19](உண்மையைப்)
பொய்மைப்படுத்துவோருக்கு அந்நாளில் கேடுதான்.

[20](மக்களே!) நாம் உங்களை அற்பமான நீரிலிருந்து
படைக்கவில்லையா? [21]பின்னர் அதனை(க் கருவறையாகிய)
காப்பறையில் வைத்தோம், [22]ஒரு குறிப்பிட்ட காலம்வரை.
[23]இவ்வாறே (அதன் வளர்ச்சிநிலைகளை) நாமே திட்டமிட்டோம்.
திட்டமிடுவோரில் நாமே மிகச் சிறந்திருக்கிறோம்.
[24](உண்மையைப்) பொய்மைப்படுத்துவோருக்கு அந்நாளில்
கேடுதான். [25](உங்களை) அணைத்துக் கொள்ளக்கூடியதாகப்
பூமியை நாம் ஆக்கவில்லையா? [26]உயிருள்ளவர்களையும்
இறந்தவர்களையும். [27]நாம் அதில் உயர்ந்த மலைகளை
அமைத்தோம். (அவற்றிலிருந்து) உங்களுக்குச் சுவையான நீரைப்
பருகவழங்கினோம்.[28](உண்மையைப்)பொய்மைப்படுத்துவோருக்கு
அந்நாளில் கேடுதான்.

[29](மறுமையில் அவர்களை நோக்கி) நீங்கள் பொய்யெனக் கூறிக்
கொண்டிருந்ததன்பால் செல்லுங்கள். [30]மூன்று கிளைகளுடைய

*அந்த(ப் புகை) நிழலின்பால் செல்லுங்கள்" (என்று கூறப்படும்).*
*[31]அது நிழலும் தராது; வெப்பத்திலிருந்தும் காக்காது. [32]உயர்ந்த*
*மாளிகையைப் போன்ற (பெரும்) நெருப்புக் கங்குகளைக் கக்கும்.*
*[33]அவை (விரைந்து பாயும் போது) மஞ்சள் நிற ஒட்டகங்களைப்*
*போன்றிருக்கும். [34](உண்மையைப்) பொய்மைப்படுத்துவோருக்கு*
*அந்நாளில் கேடுதான். [35]அது அவர்கள் பேச முடியாத நாளாகும்.*
*[36]பொய்க்காரணங்கள் கூறவும் அவர்களுக்கு அனுமதியளிக்கப்பட*
*மாட்டாது. [37](உண்மையைப்) பொய்மைப்படுத்துவோருக்கு*
*அந்நாளில் கேடுதான். [38]"இது தீர்ப்பு நாளாகும். நாம்*
*உங்களையும் முன் சென்றோரையும் ஒன்று திரட்டுவோம்.*
*[39]உங்களிடம் எனக்கெதிரான சூழ்ச்சி ஏதேனும் இருந்தால் சூழ்ச்சி*
*செய்துபாருங்கள். [40](உண்மையைப்) பொய்மைப்படுத்துவோருக்கு*
*அந்நாளில் கேடுதான்.*

*[41]உறுதியாக இறையச்சமுடையோர் (குளிர்) நிழல்களிலும்*
*ஊற்றுகளின் அருகிலும் இருப்பர். [42]அவர்கள் விரும்பும்*
*பழங்களையும் உண்பர். [43]"நீங்கள் செய்துகொண்டிருந்த*
*(நற்)செயல்களின் பயனாக மகிழ்ச்சியாக உண்ணுங்கள்;*
*பருகுங்கள்" (என்று கூறப்படும்.) [44]இவ்வாறுதான் நாம் நல்லறம்*
*புரிவோர்களுக்குக் கூலி வழங்குவோம். [45](உண்மையைப்)*
*பொய்மைப்படுத்துவோருக்கு அந்நாளில் கேடுதான். [46](இதனைப்*
*பொய்மைப்படுத்துவோர்களே! இம்மையில்) சில காலம்வரை*
*உண்ணுங்கள்; (சுகம்) அனுபவித்துக் கொள்ளுங்கள். (எனினும்)*
*உறுதியாக நீங்கள் குற்றவாளிகள்தாம். [47](உண்மையைப்)*
*பொய்மைப்படுத்துவோருக்கு அந்நாளில் கேடுதான்.*
*[48]"குனிந்து வணங்குங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால்*
*அவர்கள் குனிந்து வணங்குவதில்லை. [49](உண்மையைப்)*
*பொய்மைப்படுத்துவோருக்கு அந்நாளில் கேடுதான். [50](குர்ஆன்*
*ஆகிய) இதற்குப் பின் வேறு எந்த வாக்கைக் கொண்டு அவர்கள்*
*நம்பிக்கை கொள்ளப் போகிறார்கள்?*

# 78. பெரும் செய்தி (அந்நபஉ)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*1(நபியே!) மக்கள் தமக்குள் எதைப்பற்றி வினவிக்
கொண்டிருக்கிறார்கள்? 2(இறுதித் தீர்ப்புநாள் பற்றிய)
செய்திகளைப் பற்றி! 3அதுபற்றி அவர்கள் கருத்து
வேறுபட்டுள்ளனர். 4(அவர்கள் கருத்து) சரியன்று, விரைவில்
அவர்கள் அறிந்துகொள்வர். 5(அவர்கள் கருத்து) சரியன்று,
விரைவில் அவர்கள் அறிந்துகொள்வர். 6நாம் பூமியை விரிப்பாக
ஆக்கவில்லையா? 7மலைகளை முளைகளாக (ஆக்கவில்லையா?)
8(மனிதர்களே!) நாம் உங்களை (ஆண், பெண்) இணைகளாகப்
படைத்தோம். 9உங்களின் உறக்கத்தை (உங்களுக்கு) ஓய்வாக
ஆக்கினோம். 10இரவைத் திரையாக்கினோம். 11பகலை
வாழ்வாதாரம் தேடுவதற்கான நேரமாக ஆக்கினோம்.
12உங்களுக்கு மேலே ஏழு உறுதியான வானங்களை அமைத்தோம்.
13அதில் ஒளிரக்கூடிய (சூரிய) விளக்கையும் அமைத்தோம்.
14கார்மேகங்களிலிருந்து மழையைப் பொழியச் செய்கிறோம்.
15அதன்மூலம் தானியங்களையும் தாவரங்களையும் 16அடர்ந்த
தோட்டங்களையும் நாம் உண்டாக்குகின்றோம். 17உறுதியாகத்
தீர்ப்புநாள் (விசாரணைக்காகக்) குறிப்பிட்ட ஒரு நேரமாகும்.*

*18எக்காளம் ஊதப்படும் (அந்த) நாளில் நீங்கள் கூட்டம்
கூட்டமாக வருவீர்கள். 19வானம் திறக்கப்பட்டு அது பல
வாசல்களாகி விடும். 20மலைகள் இடம்பெயர்க்கப்பட்டு கானல்நீர்
போல் (இல்லாதவையாக) ஆகிவிடும். 21உறுதியாக நரகம்
எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. 22அது வரம்பு மீறியோரின்
இருப்பிடமாகும். 23அதில் அவர்கள் காலங்காலமாகத் தங்கியிருப்பர்.
24அதில் அவர்கள் குளிர்ச்சியையோ குடிபானத்தையோ சுவைக்க
மாட்டார்கள், 25கொதிக்கும் நீரையும் சீழையும் தவிர! 26இது*

(அவர்களின் செயல்களுக்குத்) தகுந்த கூலியாகும். [27]அவர்கள்
(மறுமையின்) விசாரணையை நம்பாதவர்களாக இருந்தனர்.
[28]எமது வசனங்களை முற்றிலும் பொய்யென மறுத்து விட்டனர்.
[29]ஆனால் (நாமோ அவர்களின் செயல்கள்) அனைத்தையும்
(பதிவேட்டில்) கணக்கிட்டு எழுதி வைத்துள்ளோம். [30]எனவே
(மறுமையில் அவர்களிடம்) "சுவையுங்கள். நாம் உங்களின்
வேதனையை மட்டுமே மிகுதிப்படுத்துவோம்" (என்று
கூறுவோம்).

[31]உறுதியாக இறையச்சமுடையோருக்கு வெற்றி கிடைக்கும்.
[32]தோட்டங்களும் திராட்சைகளும் [33]சம வயதுடைய
கன்னிப் பெண்களும் [34](பானங்கள்) நிரம்பிய கிண்ணங்களும்
(அவர்களுக்கு) உண்டு. [35]அங்கு (அவர்கள்) வீண்பேச்சையோ
பொய்யானவற்றையோ செவியுற மாட்டார்கள். [36]இவை
(நபியே!) உமது இறைவனிடமிருந்து வழங்கப்படும் அவர்களின்
நற்செயல்களுக்கேற்ற கூலியும் (அதற்கு மேலான) நன்கொடையும்
ஆகும். [37]அவன் வானங்கள் பூமி அவற்றிற்கு இடையிலுள்ளவை
ஆகிய அனைத்திற்கும் இறைவனாகிய அளவற்ற அருளாளன்.
அன்று அவன்முன் பேசும் ஆற்றல் எவருக்கும் இல்லை.
[38](கேப்ரியேல் ஆகிய தூய) ஆவியும் வானவர்களும் அணிவகுத்து
நிற்கும் (அந்)நாளில் எவரும் பேசமாட்டார், அளவற்ற
அருளாளன் எவருக்கு அனுமதியளிப்பானோ அவரைத் தவிர!
அவர் சரியானவற்றையே கூறுவார். [39]அந்நாள் (வருவது)
உண்மையாகும். ஆகவே (நற்பேற்றை) விரும்புகிறவர் தம்
இறைவன்பால் தம் இருப்பிடத்தை அமைத்துக் கொள்ளட்டும்.
[40](மனிதர்களே!) நாம் உங்களை நெருங்கிவரும் வேதனையைக்
குறித்து எச்சரித்து விட்டோம். மனிதன் தன் இரு கைகள் செய்து
அனுப்பியவற்றைக் காணும் (அந்)நாளில் மறுப்பாளன் "அந்தோ"
நான் மண்ணாக இருந்திருக்கக் கூடாதா?" என்று புலம்புவான்.

# 79. பறிப்போர் (அந்நாஸிஆத்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

*[1](கொடியோரின் உயிர்களை) வன்மையாகப் பறித்தெடுப்போர்
(ஆகிய வானவர்)கள் மீது சத்தியமாக! [2](நல்லோர் உயிர்களை)
மென்மையாகக் கைப்பற்றுவோர்(ஆகிய வானவர்)கள் மீது
சத்தியமாக! [3]விரைவாக (விண்ணில்) நீந்திச் செல்வோர்
(ஆகிய வானவர்)கள் மீது சத்தியமாக! [4]முந்திச் செல்வோர்
(ஆகிய வானவர்)கள் மீது சத்தியமாக! [5]அனைத்துச்
செயல்களையும் (இறைவன் கட்டளைப்படி) நிர்வகிப்பவர்கள்
மீது சத்தியமாக! [6]கடும் நிலநடுக்கம் ஏற்படும் நாளில், [7]அதன்
தொடர்ச்சியாக (அடுத்தடுத்த) அதிர்ச்சிகள் ஏற்படும். [8](இவ்வாறு
பிரபஞ்சமும் அழிந்து, உயிர்கள் விசாரணைக்காக எழுப்பப்பட்டு
புதுப் பிரபஞ்சம் உருவாகும்) அந்நாளில் (சில) இதயங்கள்
நடுநடுங்கிக் கொண்டிருக்கும். [9]பார்வைகள் கீழே தாழ்ந்திருக்கும்
[10](இறைமறுப்பாளர்கள்) “நாம் முந்தைய நிலைக்கு மீண்டும்
திரும்புவோமா” என்று கேட்கின்றனர். [11]“மக்கிப் போன
எலும்புகளாக நாம் ஆகிவிட்டாலுமா? [12]அப்படியானால் அது
பேரிழப்பிற்குரிய மீட்சியாகத்தான் இருக்கும்” என்று ஏளனமாகக்
கூறுகின்றனர். [13]ஆனால் (மறுமையாகிய) அதுவோ ஓர் உரத்த
அதட்டல்தான். [14]திடீரென அவர்கள் (உயிர்ப்பிக்கப்பட்டு)
வெட்டவெளியில் இருப்பர்.*

*[15](நபியே!) மோசேயைப்பற்றிய செய்தி உமக்கு வந்ததா?
[16]இறைவன் அவரைத் ‘துவா’ எனும் புனிதப் பள்ளத்தாக்கில்
அழைத்தான். [17]“நீர் ஃபாரோவிடம் செல்லும். அவன் வரம்புமீறி
விட்டான். [18]அவனிடம் நீர்: ‘நீ தூய்மையடைய விரும்புகிறாயா?
[19]நான் உனக்கு உன் இறைவன்பால் செல்லக்கூடிய பாதையைக்
காட்டுகிறேன். அதன்மூலம் நீ (அவனுக்கு) அஞ்சி நடப்பாய்’
என்று கூறுவீராக!” (எனக் கட்டளையிட்டான்). [20]எனவே மோசே
(அவனிடம் சென்று) அவனுக்குப் பெரும் சான்றைக் காட்டினார்.*

[21]ஆனால் அவன் அதனைப் பொய்யெனக் கூறி (அவருடைய
வழிகாட்டுதலை) ஏற்க மறுத்துவிட்டான். [22]பின்னர் அவன்
அவரை விட்டுவிலகி (அவருக்குத் தீங்கு செய்ய) முயன்றான்.
[23-24]மக்களை ஒன்றுதிரட்டி, "நான்தான் உங்களின் மிக மேலான
இறைவன்" என்று அறிவிப்புச் செய்தான். [25]எனவே இம்மை
மற்றும் மறுமையின் வேதனையால் அல்லாஹ் அவனைத்
தண்டித்தான். [26]உறுதியாக (இறைவனுக்கு அஞ்சி நடப்போருக்கு)
இதில் படிப்பினை இருக்கிறது.

[27](மனிதர்களே!) உங்களைப் படைப்பது மிகக் கடினமானதா
அல்லது வானத்தைப் படைப்பதா? (அவன்தான்) அதனைப்
படைத்தான். [28]அதன் முகட்டை உயர்த்தி அதனை
ஒழுங்குபடுத்தினான். [29]அதன் இரவை இருளாக்கினான்;
பகலை(ச் சூரிய ஒளிகொண்டு) வெளிப்படுத்தினான்.
[30]அதற்குப்பின் பூமியை (அவன்) விரித்தான். [31]அதிலிருந்து அதன்
தண்ணீரையும் மேய்ச்சல் பயிர்களையும் வெளிப்படுத்தினான்.
[32]மலைகளையும் (அவன்தான்) நிலைநாட்டினான் [33]உங்களுக்கும்
உங்கள் கால்நடைகளுக்கும் பயனளிக்கும் பொருட்டு (இவற்றைப்
படைத்தான்).

[34]எனவே அந்தப் பேரமளி வந்துவிடும்போது, [35]மனிதனுக்கு
(உலகில்) தான் செய்தவை அனைத்தும் நினைவுக்கு
வந்துவிடும். [36](அந்நாளில்) பார்ப்பவர்களுக்கு முன்னர் நரகம்
வெளிப்படுத்தப்படும். [37]எனவே எவன் வரம்புமீறினானோ
[38](மறுமையை விட்டு) இவ்வுலக வாழ்வைத் தேர்ந்தெடுத்துக்
கொண்டானோ [39]அவனுக்கு உறைவிடம் நரகம்தான். [40]எவன்
தன் இறைவனின் முன்னே நிற்கப் போவதைக் குறித்து அஞ்சி
மனத்தைத் தீய விருப்பங்களிலிருந்து தடுத்துக்கொண்டானோ
[41]அவனுக்கு உறைவிடம் உறுதியாகச் சொர்க்கம்தான்.
[42](நபியே!) மறுமையைப்பற்றி "அது எப்போது நிகழும்?" என
அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர். [43]அதனைப்பற்றி நீர் என்ன
சொல்லமுடியும்? (உமக்கு அந்த ஞானமில்லை!) [44]அதனைப்பற்றிய
முடிவு உமது இறைவனிடமேதான் உள்ளது. [45]அதைப்பற்றி

*அஞ்சுவோருக்கு நீர் எச்சரிப்பவர் மட்டுமே ஆவீர். [46]அவர்கள்*
*அதனைக் காணும் நாளில், ஒரே ஒரு மாலையோ அதன்*
*காலையோ (சிறிது நேரம்) தவிர உலகில் தங்கியிருக்கவில்லை*
*என்பது போலவே அவர்களுக்குத் தோன்றும்.*

# 80. கடுகடுத்தார் (அபஸ)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1](நபி) கடுகடுத்தார், முகத்தைத் திருப்பிக் கொண்டார்,*
*[2](அவையில்) தம்மிடம் பார்வையற்ற ஒருவர் வந்ததற்காக.*
*[3](நபியே!) உமக்கு என்ன தெரியும்? (அங்கு வந்ததன் மூலம்)*
*அவர் தூய்மையடையக் கூடும்; [4]அல்லது அவர் அறிவுரை*
*பெறலாம்; அந்த அறிவுரை அவருக்குப் பயனளிக்கலாம். [5]எவன்*
*தேவைகளற்றவன் என்று தன்னைக் கருதிக் கொண்டிருக்கிறானோ*
*[6]அவன்பால் நீர் கவனம் செலுத்துகிறீர். [7]அவன் (மார்க்கத்தை*
*ஏற்று) மனத்தூய்மை பெறாவிட்டால் அதற்கு நீர் பொறுப்பாக*
*மாட்டீர். [8]ஆனால் எவர் உம்மிடம் ஓடோடி வந்தாரோ,*
*[9]அவர் (இறைவனுக்கு) அஞ்சியவராக இருக்கிறார். [10]அவரை*
*நீர் அலட்சியம் செய்து விடுகிறீர். [11](இது) சரியன்று,*
*உறுதியாக (குர்ஆனாகிய) இது ஓர் அறிவுரையாகும். [12]எனவே*
*விரும்புகிறவர் இதனை நினைவில் வைத்துக் கொள்வார். [13]இது*
*கண்ணியமிக்க, [14]உயர்வான, மிகத் தூய்மையான ஏடுகளில்*
*உள்ளதாகும். [15](அந்த ஏடுகள் வானவர்களான) எழுத்தர்களின்*
*கைகளால் வரையப்பட்டவை. [16]அவர்கள் கண்ணியம்மிக்கவர்கள்;*
*நல்லவர்கள்.*

*[17](பாவியான) மனிதனுக்குக் கேடுதான்! அவன்*
*எவ்வளவு நன்றிகெட்டவனாக இருக்கிறான்! [18]அவனை*
*அல்லாஹ் எப்பொருளிலிருந்து படைத்திருக்கின்றான்?*
*[19]ஒரு துளி விந்திலிருந்து அவனைப் படைத்து (மனிதனாக)*
*வடிவமைத்திருக்கின்றான். [20]அவனது (நன்மை, தீமைக்கான)*
*பாதையை (சிந்தித்து ஏற்றுக்கொள்ளும் வகையில்)*

எளிதாக்கினான். 21பின்னர் அவனை இறக்கச் செய்து சவக்குழியில்
கொண்டு சேர்க்கிறான். 22பின்னர் அவன் விரும்பும்போது
மீண்டும் உயிர்பெறச் செய்வான். 23ஆயினும் மனிதன் அல்லாஹ்
விதித்த கட்டளைகளை நிறைவேற்றுவதில்லை. 24மனிதன் தன்
உணவை(ப் பற்றி)ச் சிந்தித்துப் பார்க்கட்டும். 25நாமே நன்கு
மழை பொழியச் செய்தோம். 26பின்னர் மண்ணை நன்கு பிளக்கச்
செய்தோம். 27 அதில் தானியங்களையும் (முளைக்கச் செய்தோம்).
28திராட்சைகளையும் காய்கறிகளையும் 29ஆலிவ், பேரீச்சை
மரங்களையும் 30அடர்ந்த தோட்டங்களையும் 31கனிகளையும்
தீவனங்களையும் 32உங்களுக்கும் உங்கள் கால்நடைகளுக்கும்
வாழ்வாதாரப் பொருள்களாகப் பயன்படுத்துவதற்காக
(முளைக்கச் செய்தோம்.)

33காதைச் செவிடாக்கும் பேரோசை ஏற்படும்போது,
34அந்நாளில் மனிதன் தன் சகோதரனிடமிருந்தும் 35தாய்,
தந்தையரிடமிருந்தும் 36மனைவியிடமிருந்தும் பிள்ளைகளிடமிருந்தும்
வெருண்டோடுவான். 37அந்நாளில் (மற்றவர்களைவிட்டுத்) தன்னை
மட்டுமே கவனிக்கும் நிலை ஒவ்வொரு மனிதனுக்கும் ஏற்படும்.
38சில முகங்கள் அந்நாளில் ஒளிர்ந்து கொண்டிருக்கும்; 39சிரித்துக்
கொண்டும் மகிழ்வுடனும் இருக்கும். 40அந்நாளில் சில முகங்களின்
மீது புழுதி படிந்திருக்கும்; 41அவற்றின்மீது இருளடர்ந்திருக்கும்.
42அவர்கள்தாம் (ஓரிறை)மறுப்பாளர்கள்; பாவிகள்.

## 81. சுருட்டுதல் (அத்தக்வீர்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

1சூரியன் சுருட்டப்படும்போது, 2நட்சத்திரங்கள் உதிர்ந்து
விடும்போது, 3மலைகள் இடம் பெயர்க்கப்படும்போது, 4பத்துமாத
நிறை கர்ப்ப ஒட்டகங்கள் கவனிப்பாரற்று விடப்படும்போது,
5வனவிலங்குகள் (ஊர்களில்) ஒன்றுதிரளும்போது, 6கடல்கள்
கொளுத்தப்படும்போது, (உலகம் அழிவுறும்). 7(பின்னர் மறுமையில்)

*ஆன்மாக்கள் (வகைபிரித்து) இணைக்கப்படும்போது [8–9]உயிருடன்
புதைக்கப்பட்ட சிறுமியிடம் 'அவள் எந்தக் குற்றத்திற்காகக்
கொல்லப்பட்டாள்' என்று கேட்கப்படும்போது, [10](மனிதர்களின்
வினைப்) பதிவேடுகள் விரிக்கப்படும்போது, [11]வானம்
திறந்துவிடும்போது, [12]நரகம் கொழுந்துவிட்டு எரிக்கப்படும்போது,
[13]சொர்க்கம் அருகே கொண்டு வரப்படும்போது [14](ஒவ்வோர்
ஆன்மாவும்) தான் கொண்டு வந்ததை அறிந்துகொள்ளும்.*

*[15] (எனவே, மனிதர்களே!) பின்வாங்கி மறைபவற்றின்
(நட்சத்திரங்கள்) மீது சத்தியமாக! [16](சுற்றுப் பாதையில்)
விரைவனவும் மறைவனவும் ஆகிய கோள்களின் மீது சத்தியமாக!
[17]விடைபெற்றுச் செல்லும் இரவின் மீது சத்தியமாக! [18]உதயமாகும்
காலைப்பொழுதின்மீது சத்தியமாக! [19]உண்மையில் (குர்ஆன்
ஆகிய) இது கண்ணியமிக்க (வானவத்) தூதர் ஒருவரால்
கொண்டுவரப்பட்ட (இறை) வாக்காகும். [20]அவர் வலிமை மிக்கவர்;
இறையிருக்கை உடையவனிடம் உயர்மதிப்புப் பெற்றவர். [21]அங்கு
அவரின் கட்டளை (வானவர்களால்) ஏற்றுக் கொள்ளப்படுகிறது.
அவர் நம்பிக்கைக்குரியவராகவும் இருக்கிறார். [22]உங்களின் தோழர்
பித்தர் அல்லர். [23] அவர் அந்த (வானவத்) தூதரைத் தெளிவான
அடிவானத்தில் உண்மையாகவே கண்டார். [24]அவர் (தமக்கு
அறிவிக்கப்பட்ட) மறை ஞானத்தை மக்களுக்கு (அறிவிப்பதில்)
கஞ்சத்தனம் காட்டுபவர் அல்லர். [25](மேலும்) இ(க்குர்ஆன்
ஆன)து விரட்டப்பட்ட சாத்தானின் சொல்லும் அல்ல. [26]எனவே
நீங்கள் (இக்குர்ஆனைவிட்டு) எங்கே செல்கிறீர்கள்? [27]இது
உலக மக்கள் அனைவருக்கும் ஓர் அறிவுரையேயாகும். [28]இது
உங்களில் நேர்வழியில் நடந்திட விரும்பும் ஒவ்வொருவருக்கும்
(உரியது). [29]ஆயினும் அனைத்துலகங்களின் இறைவனாகிய
அல்லாஹ் விரும்பினாலன்றி (நல்லறிவைப் பெற) நீங்கள் விரும்ப
மாட்டீர்கள்.*

# 82. பிளத்தல் (அல்இன்ஃபிதார்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

*[1]வானம் பிளந்து விடும்போது, [2]நட்சத்திரங்கள் உதிர்ந்து
சிதறும்போது, [3]கடல்கள் (தம் எல்லைகள்) பிளந்து (ஒன்று
கலந்து) விடும்போது, [4]சவக்குழிகள் புரட்டப்பட்டு (அவற்றில்
உள்ளவர்கள் எழுப்பட்டு) விடும்போது, [5]ஒவ்வோர் ஆன்மாவும்
(உலகில்) தான் முன்னர்ச் செய்த(னுப்பிய)வற்றையும்
செய்யாமல் விட்டவற்றையும் அறிந்துகொள்ளும். [6]மனிதனே!
அருட்கொடையாளனான உன் இறைவனிடமிருந்து (விலக்கி)
உன்னை ஏமாற்றியது எது? [7]அவன்தான் உன்னைப் படைத்து (உன்
உறுப்புகளை)ச் சீராக்கி உன்னைச் செவ்வையாக அமைத்தான்.
[8]அவன் விரும்பிய வடிவத்தில் உன்னை (ஒருங்கிணைத்து)ப்
பொருத்தினான். [9]எனினும் (மனிதர்களே!) நீங்கள் தீர்ப்பு
நாளைப் பொய்மைப்படுத்துகிறீர்கள். [10]உறுதியாக உங்கள்மீது
கண்காணிப்பாளர்கள் (நியமிக்கப்பட்டுள்ளனர்). [11]அவர்கள்
(வானவர்களான இரு) கண்ணியமான எழுத்தர்கள். [12]நீங்கள்
செய்வதையெல்லாம் அவர்கள் அறிவார்கள். [13](ஆகவே)
உறுதியாக நல்லவர்கள் சொர்க்க இன்பத்தில் (திளைத்திருப்பர்)
[14]தீயவர்கள் நரகத்தில்தான் (இருப்பர்). [15]தீர்ப்பு நாளில் அவர்கள்
அதில் நுழைவர். [16]அதிலிருந்து அவர்கள் தப்பிவிட முடியாது.
[17](நபியே!) 'தீர்ப்பு நாள்' என்னவென்று உமக்கு அறிவிக்கக்
கூடியது எது? [18]பின்னரும் (கேட்கிறேன்). 'தீர்ப்பு நாள்' என்பது
என்னவென்று உமக்குத் அறிவிக்கக் கூடியது எது? [19]அந்நாளில்
எந்த ஓர் ஆன்மாவும் மற்றோர் ஆன்மாவுக்கு (உதவி) எதையும்
செய்திட இயலாது. அந்நாளில் அதிகாரம் அனைத்தும்
அல்லாஹ்விடமே இருக்கும்.**

---

***முடிவில் இறுதித் தீர்ப்பு நாள் வரும் என்பதைக் குர்ஆன் நமக்குத் தெரிவிக்கிறது. அந்த நாளில் ஒட்டுமொத்த மனித இனமும் கூட்டப்பட்டு மனிதர்களின் செயல்களுக்கேற்பச் சொர்க்க வாழ்வு என்னும் வெகுமதியோ அல்லது நரக வாழ்க்கை என்னும் தண்டனையோ அளிக்கப்படும். இவை அனைத்தும் இந்த நடப்புலக வாழ்வின் நிகழ்வுகளை ஒத்தே அமைந்திருக்கின்றன. இந்த அறிவிப்பில், அர்த்தமுள்ள மானிடப் படைப்பின் நோக்கம் தெளிவாகிறது. மனிதனின் படைப்பிலுள்ள பொருள் பொதிந்த தன்மை அவன் பெறப்போகும் சொர்க்கம் அல்லது நரகம் என்பதன் நியாயப்பூர்வ தன்மையைக் கொண்டுள்ளது.**

# 83. அளவில் மோசடி செய்வோர் (அல்முதஃப்ஃபிஃபீன்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

*[1](அளவிலும் எடையிலும்) மோசடி செய்வோருக்குக்
கேடுதான். [2]அவர்கள் மக்களிடம் வாங்கும்போது அளந்து
நிறைவாக வாங்குகின்றனர். [3]ஆனால் மற்றவர்களுக்கு
அளந்தோ நிறுத்தோ கொடுக்கும்போது குறைத்து விடுகின்றனர்.
[4–5]மகத்தான ஒரு நாளில் "தாங்கள் எழுப்பப்படுவோம் என்பதை
அவர்கள் எண்ணிப் பார்ப்பதில்லையா? [6]அந்நாளில் மனிதர்கள்
அனைவரும் அனைத்துலகங்களின் இறைவனுக்கு முன்னால்
நிற்பர். [7]உறுதியாகத் தீயோரின் பதிவு 'ஸிஜ்ஜீனில்' இருக்கும்.
[8](நபியே!) 'ஸிஜ்ஜீன்' என்பது என்னவென்று உமக்கு அறிவிக்கக்
கூடியது எது? [9]அது (தீயோரின் செயல்கள்) எழுதப்பட்ட
ஒரு பதிவேடாகும். [10]பொய்மைப்படுத்துவோருக்கு அந்நாளில்
கேடுதான். [11]அவர்கள் தீர்ப்புநாளைப் பொய்மைப்படுத்துகின்றனர்.
[12]வரம்புமீறும் ஒவ்வொரு பாவியையும் தவிர வேறு எவரும்
அதனைப் பொய்மைப்படுத்த மாட்டார்கள். [13]எமது வசனங்கள்
அவனிடம் எடுத்துரைக்கப்பட்டால் "இவை முன்னோர்களின்
கட்டுக்கதைகள்" என்கிறான். [14]அவ்வாறன்று. மாறாக,
அவர்களுடைய செயல்கள் அவர்களின் உள்ளங்களின் துருவாகப்
படிந்து (உண்மையை) மறைத்து விட்டன. [15]அந்நாளில் அவர்கள்
தம் இறைவனை விட்டுத் தடுக்கப்படுவர். [16]பின்னர் அவர்கள்
நரகத்தில் புகுவர். [17]அவர்களிடம் "நீங்கள் பொய்மைப்படுத்திக்
கொண்டிருந்தது இதுதான்" என்று கூறப்படும்.*

*[18]ஆனால் உறுதியாக நல்லோர்களின் பதிவு 'இல்லிய்யீனில்'
இருக்கும். [19](நபியே) 'இல்லிய்யீன்' என்பது என்னவென்று
உமக்கு அறிவிக்கக் கூடியது எது? [20]அது (நல்லோரின் செயல்கள்)
எழுதப்பட்ட ஒரு பதிவேடாகும். [21](இறைவனுக்கு) நெருக்கமான
(வான)வர்கள் அதற்குச் சாட்சிகளாக இருப்பர். [22]உறுதியாக*

*நல்லவர்கள் பேரின்பத்தில் இருப்பர். [23]அவர்கள் இருக்கைகளில் சாய்ந்தவண்ணம் (சொர்க்கத்தின் காட்சிகளைப்) பார்த்துக் கொண்டிருப்பர். [24]அவர்களின் முகங்களில் இன்பத்தின் பொலிவை (நபியே!) நீர் கண்டறிவீர். [25]முத்திரையிடப்பட்ட தூய மது அவர்களுக்குப் புகட்டப்படும். [26]அதன் முத்திரை கஸ்தூரி ஆகும். ஆகவே (உலகில் சுகவாழ்வுக்காகப்) பேராசை கொள்பவர்கள் (அதைவிட்டு) இதன் மீதே பேராசை கொள்ளட்டும். [27]அந்த மதுவில் 'தஸ்னீம்' கலந்திருக்கும். [28]அது இறைவனுக்கு நெருக்கமானவர்கள் அருந்துகிற ஒரு நீரூற்றாகும். [29](உலகில்) குற்றவாளிகள் நம்பிக்கையாளர்களைப் பார்த்து ஏளனமாகச் சிரித்துக் கொண்டிருந்தனர். [30]நம்பிக்கையாளர்கள் அவர்களைக் கடந்து செல்லும்போது (அவர்கள் ஒருவருக்கொருவர்) சாடை காட்டிக் கொண்டிருந்தனர். [31]தங்கள் குடும்பத்தாரிடம் திரும்பும்போது (நம்பிக்கையாளர்களை ஏளனம் பேசிய) மகிழ்ச்சியுடன் திரும்புவர். [32]அவர்களை (நம்பிக்கையாளர்களைப்) பார்க்கும்போது 'இவர்கள் வழிதவறியவர்கள்' என்று கூறிக் கொண்டிருந்தனர். [33]அக்குற்றவாளிகள் நம்பிக்கையாளர்களுக்குப் பாதுகாவலர்களாக அனுப்பப்படவில்லையே! [34]ஆகவே (மறுமை நாளாகிய) இன்று நம்பிக்கையாளர்கள் மறுப்பாளர்களைப் பார்த்துச் சிரிப்பர். [35]இருக்கைகளில் சாய்ந்தவாறு (குற்றவாளிகள் படும் வேதனையைப்) பார்த்துக் கொண்டிருப்பர். [36](மறுமையை) நம்ப மறுத்த அவர்களின் செயல்களுக்கான கூலி கிடைத்துவிட்டதல்லவா? (என்று கேட்கப்படும்).*

## 84. வெடித்துப் பிளத்தல் (அல்இன்ஷிகாக்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1-2]வானம் தன் இறைவனின் கட்டளைக்குச் செவிசாய்த்து, அதற்கேற்ப வெடித்துப் பிளந்துவிடும்போது [3-5]பூமி தன் இறைவனின் கட்டளைக்குச் செவிசாய்த்து அதற்கேற்பத் தன்னுள் உள்ளவற்றையெல்லாம் எறிந்து, வெறுமையாகி (தட்டையாகப்)*

*பரப்பப்பட்டுவிடும் போது (உலக இறுதி நிகழும்). [6]மனிதனே!*
*(நன்மையோ, தீமையோ ஆகிய செயல்களில்) நீ கடும் முயற்சி*
*செய்து உன் இறைவனின்பால் சென்று கொண்டிருக்கிறாய்.*
*எனவே (மறுமையில்) நீ அவனைச் சந்திப்பாய். [7]எவரது பதிவேடு*
*அவரது வலக்கையில் கொடுக்கப்படுமோ [8]அவர் எளிதான*
*முறையில் விசாரிக்கப்படுவார். [9]தம்(மைப் போலவே தகுதிபெற்ற*
*தம்) குடும்பத்தாரிடம் மகிழ்ச்சியுடன் திரும்பிச் செல்வார்.*
*[10]ஆனால் எவனது பதிவேடு அவனது முதுகுக்குப் பின்னால்*
*கொடுக்கப்படுமோ, [11]அவன் மரணத்தை அழைப்பான்; [12]நரக*
*நெருப்பில் புகுவான். [13]அவன் (உலகில்) தன் குடும்பத்தாருடன்*
*மகிழ்ச்சியாக இருந்தான். [14](இறைவனிடம்) ‘தான் ஒருபோதும்*
*திரும்பி வரப்போவதில்லை’ என்றே அவன் எண்ணியிருந்தான்.*
*[15]ஏனில்லை? இறைவன் அவனை உற்றுநோக்கிக்*
*கொண்டிருக்கிறான். [16](அந்தி நேரச்) செவ்வானத்தின்மீது*
*(நான்) சத்தியம் செய்கிறேன். [17]இரவின்மீது அது தன்னுள்*
*அடக்கிக் கொண்டிருப்பவற்றின்மீதும் சத்தியமாக! [18]முழு*
*சந்திரன் மீது சத்தியம் செய்கிறேன். [19](மனிதர்களே!) உறுதியாக*
*நீங்கள் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்குப் பயணம்*
*செய்வீர்கள். [20](அவ்வாறிருக்க) அவர்களுக்கு என்னவாயிற்று?*
*அவர்கள் நம்பிக்கைகொள்வதில்லையே! [21]அவர்களிடம்*
*குர்ஆன் எடுத்துரைக்கப்பட்டால் அவர்கள் இறைவனுக்குத்*
*தலைவணங்குவதில்லையே! [22]மாறாக அவ்விறைமறுப்பாளர்கள்*
*அதனைப் பொய்யெனக் கூறுகின்றனர். [23]அவர்கள்*
*(உள்ளங்களில்) திரட்டி (மறைத்து) வைத்திருப்பவற்றை அல்லாஹ்*
*நன்கறிகிறான். [24]எனவே (நபியே!) அவர்களுக்குத் துன்புறுத்தும்*
*வேதனை உள்ளதென ‘நற்செய்தி’ கூறிவிடுவீராக! [25]ஆனால்*
*நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர்களுக்கு என்றென்றும்*
*முடிவுறாத கூலி உண்டு.*

# 85. கோள்கள் (அல்புரூஜ்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1]கோள்நிலைகளையுடைய வானத்தின் மீது சத்தியமாக!
[2]வாக்களிக்கப்பட்ட (மறுமை) நாளின் மீது சத்தியமாக!
[3]சாட்சியத்தின் மீது சத்தியமாக! [4]நெருப்புக் குண்டத்தைத்
தயாரித்தவர்கள் அழிக்கப்பட்டனர். [5]அதில் விறகுகள் இட்டு
எரிக்கும் பெருநெருப்பு இருந்தது. [6]அதன் அருகே அவர்கள் அமர்ந்து
[7](ஓரிறை)நம்பிக்கையாளர்களுக்குத் தாம் செய்து கொண்டிருந்த
(கொடுஞ்)செயல்களைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.
[8]யாவற்றினும் வல்லவனும் புகழுக்குரியவனுமாகிய அல்லாஹ்வின்
மீது நம்பிக்கை கொண்டார்கள் என்பதற்காகவே அவர்களை
இவர்கள் (பகைத்துத்) தண்டித்தனர். [9]வானங்கள், பூமி
ஆகியவற்றின் ஆட்சி அவனுக்கே உரியது. அவன் அனைத்திற்கும்
சாட்சியாக இருக்கிறான். [10]யாரெல்லாம் நம்பிக்கைகொண்ட
ஆண்களையும் பெண்களையும் (இவ்வாறு) துன்புறுத்திப் பின்னர்
(வருந்தி இறைவனிடம்) பாவமன்னிப்புக் கோரவில்லையோ,
அவர்களுக்கு நரக வேதனை உண்டு. மேலும் சுட்டெரிக்கும்
தண்டனையும் உண்டு. [11]உறுதியாக நம்பிக்கைகொண்டு
நற்செயல்புரிந்தவர்களுக்குச் சொர்க்கச் சோலைகள் உள்ளன.
அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அதுவே மாபெரும்
வெற்றியாகும். [12]உண்மையில் (நபியே!) உம் இறைவனின் பிடி
கடுமையானது [13]அவன்தான் முதன்முதலாகப் படைக்கிறான்;
பின்னர் அவன்தான் மீண்டும் படைப்பான். [14]அவன் பெரும்
மன்னிப்பாளன்; அன்பாளன். [15]மேலான இறையிருக்கையின்
உரிமையாளன். [16]தான் விரும்பியதைச் செய்யக்கூடியவன்.
[17–18](நபியே!) ஃபாரோ மற்றும் ஸமூதுடைய படைகளைப்பற்றிய
செய்தி உம்மிடம் வந்ததா? [19]இருப்பினும் இவ்விறைமறுப்பாளர்கள்
(சத்தியத்தைப்) பொய்யென மறுப்பதிலேயே முனைந்துள்ளனர்.
[20]ஆயினும் அல்லாஹ் அவர்களை முற்றிலும் சூழ்ந்துள்ளான்.
[21]உண்மையில் இது மகத்துவமிக்கக் குர்ஆனாகும். [22]இது
பாதுகாக்கப்பட்ட பலகையில் எழுதப்பட்டுள்ளது.

## 86. இரவில் தோன்றக்கூடியது (அத்தாரிக்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1]வானத்தின்மீதும் இரவில் தோன்றக் கூடியதன்
மீதும் சத்தியமாக! [2](நபியே!) இரவில் தோன்றக்கூடியது
என்னவென்று உமக்கு அறிவிக்கக்கூடியது எது? [3]அது மின்னும்
நட்சத்திரம். [4](எம்மால் ஏற்படுத்தப்பட்ட) கண்காணிப்பாளர்
இல்லாத எந்த உயிருமில்லை. [5]மனிதன் தான் எதிலிருந்து
படைக்கப்பட்டான் என்பதைக் கவனித்துப் பார்க்கட்டும்.
[6]குதித்து வெளிப்படும் நீரிலிருந்து அவன் படைக்கப்பட்டான்.
[7]அது முதுகெலும்புக்கும் நெஞ்செலும்புக்கும் இடையிலிருந்து
வெளியாகிறது. [8](இவ்வாறு படைக்கும்) அவன், (மனிதன்
இறந்தபின்) அவனை மீண்டும் படைக்கும் ஆற்றலுடையவன்.
[9]மறைபொருள்கள் சோதனைக்குள்ளாகி (வெளிப்படுத்தப்பட்டு)
விடும் நாளில் [10]அப்போது மனிதனிடம் எந்த வலிமையும்
இராது; எந்த உதவியாளரும் இருக்கமாட்டார். [11]மழைபொழியும்
வானத்தின்மீது சத்தியமாக! [12](தாவரங்கள் முளைப்பதற்காகப்)
பிளந்து கொடுக்கின்ற பூமியின்மீது சத்தியமாக! [13]உறுதியாக இது
தீர்மானமான இறுதிச் சொல்லாகும். [14]இது விளையாட்டான
சொல் அன்று. [15](நபியே!) அவர்கள் (உமக்கெதிராகச்) சூழ்ச்சி
செய்கிறார்கள். [16]நானும் (அவர்களுக்கெதிராகச்) சூழ்ச்சி
செய்கிறேன். [17]எனவே இவ்விறைமறுப்பாளர்களுக்கு நீர் கால
நீட்டிப்பு அளிப்பீராக! சிறிது காலம் (மட்டுமே) அவர்களை
விட்டு வைப்பீராக!

## 87. மிக உயர்ந்தவன் (அல்அஃலா)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1](நபியே!) மிக உயர்ந்தவனான உமது இறைவனின்
பெயரைப் புகழ்ந்து போற்றுவீராக! [2]அவன்தான் அனைத்துப்
படைப்புகளையும் படைத்துச் செம்மைப்படுத்தினான். [3]அவற்றின்

*இயல்புகளை அவன்தான் முடிவுசெய்து, அதற்கேற்றபடி
அவற்றுக்கு வழிகாட்டினான். 4அவன்தான் கால்நடைகளுக்கு
மேய்ச்சல் பயிர்களையும் உண்டாக்கினான். 5பின்னர் அவற்றை
உலர்ந்த, கருத்த சருகுகளாக்கினான்.*

*6(நபியே!) நாம் உமக்கு (கேப்ரியேல் மூலம் குர்ஆனை)
ஓதிக் காட்டுவோம். (ஆகவே) நீர் மறக்க மாட்டீர். 7அல்லாஹ்
விரும்பினாலன்றி (எதையும் மறக்கமாட்டீர்). அவன்
வெளிப்படையானதையும் மறைவானதையும் அறிகிறான்.
8எளிதானதாகிய (மார்க்கத்)தை உமக்கு மேலும் எளிதாக்கித்
தருவோம். 9அறிவுரை (ஏற்போர்க்குப்) பயனளிக்குமாயின்
அறிவுரை வழங்குவீராக! 10அல்லாஹ்வுக்கு அஞ்சுபவர்
அறிவுரையை ஏற்றுக் கொள்வார். 11ஆனால் நற்பேறற்றவன்
அதிலிருந்து விலகிக் கொள்வான். 12அவன் மாபெரும் (நரக)
நெருப்பில் புகுவான். 13பின்னர் (அவன்) சாகவும்மாட்டான்;
வாழவும்மாட்டான். 14(அறிவுரை பெற்றுத்) தம்மைத்
தூய்மைப்படுத்திக் கொண்டவர் வெற்றியடைந்து விட்டார்.
15தமது இறைவனின் பெயரை நினைவில் நிறுத்தித் தொழுகையை
நிறைவேற்றியவர் (வெற்றியடைந்து விட்டார்). 16ஆனால்
நீங்களோ இவ்வுலக வாழ்வையே தெரிந்தெடுத்துக் கொள்கிறீர்கள்.
17மறுமை (வாழ்வுதான்) சிறந்தது; நிலையானது. 18இதுவே
முந்தைய ஆகமங்களிலும் 19ஆப்ரஹாம், மோசே ஆகியோரின்
ஆகமங்களிலும் (குறிப்பிடப்பட்டுள்ளது).*

## 88. சூழ்ந்து கொள்ளக்கூடியது (அல்காஷியா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*1(நபியே! முற்றிலுமாகச்) சூழ்ந்துகொள்ளும் (மறுமையைப்
பற்றிய) செய்தி உமக்கு வந்ததா? 2அந்நாளில் சில முகங்கள்
இழிவடைந்திருக்கும்; 3அவை (வேதனையிலிருந்து தப்பக் கடும்)
பாடுபட்டவையாக, களைத்துப் போனவையாக இருக்கும்; 4அவை
கொழுந்து விட்டெரியும் நெருப்பில் புகும்; 5அவர்களுக்குக்
கொதிக்கின்ற ஊற்றிலிருந்து நீர் புகட்டப்படும். 6முட்செடிகளைத்*

*தவிர வேறெந்த உணவும் அவர்களுக்குக் கிடைக்காது. [7]அது
ஊட்டமும் தராது, பசியையும் போக்காது. [8]அந்நாளில் (வேறு)
சில முகங்கள் பொலிவுற்றிருக்கும்; [9](உலக வாழ்வில்) தாம் செய்த
நல்லற முயற்சி(க்குக் கிட்டிய நற்கூலி)க்காக நிறைவுற்றிருக்கும்.
[10]அவை உன்னதமான சொர்க்கச் சோலையில் இருக்கும்.
[11]அங்கு அவை வீணானவற்றைச் செவியுறமாட்டா. [12]அங்கு
ஓடிக்கொண்டிருக்கும் ஊற்றுகள் உண்டு. [13]உயர்வான கட்டில்களும்
இருக்கும். [14](நிரப்பி) வைக்கப்பட்ட குவளைகள் (இருக்கும்).
[15]வரிசையாக வைக்கப்பட்டிருக்கும் திண்டு, தலையணைகள்
(இருக்கும்). [16]விரிக்கப்பட்ட உயர்ந்த வகை விரிப்புகள்
உண்டு. [17](நபியே!) ஒட்டகம் எவ்வாறு படைக்கப்பட்டுள்ளது
என்பதை (இறைமறுப்பாளர்களாகிய) அவர்கள் சிந்தித்துப்
பார்ப்பதில்லையா? [18]வானம் எவ்வாறு உயர்த்தப்பட்டுள்ளது
என்பதையும் [19]மலைகள் எவ்வாறு நாட்டப்பட்டுள்ளன
என்பதையும் [20]பூமி எவ்வாறு விரிக்கப்பட்டுள்ளது என்பதையும்
(அவர்கள் பார்ப்பதில்லையா)? [21]எனவே நீர் அறிவூட்டுவீராக!
நீர் அறிவூட்டக்கூடியவர் மட்டுமே ஆவீர். [22]நீர் அவர்கள்மீதான
கண்காணிப்பாளர் அல்லர். [23]எனினும் எவன் (அறிவுரையைப்)
புறக்கணித்து (ஓரிறைக் கொள்கையை) மறுத்தானோ [24]அவனை
அல்லாஹ் கடினமான வேதனையால் தண்டிப்பான். [25]உறுதியாக
அவர்கள் எம் பக்கமே திரும்பி வர வேண்டியுள்ளது. [26]பின்னர்
அவர்களை விசாரணை செய்வது எம் பொறுப்பேயாகும்.*

## 89. வைகறை (அல்ஃபஜ்ர்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

*[1]வைகறையின் மீது சத்தியமாக! [2](புனித துல்ஹஜ் மாதத்தின்
முதல்) பத்து இரவுகளின் மீது சத்தியமாக! [3](துல்ஹஜ் மாத)
இரட்டை(ப் படை நாள் – பலியிடும் நாள் ஆகிய பத்தாம்
நாள்) மீது சத்தியமாக! (துல்ஹஜ் மாத) ஒற்றை(ப் படை –
ஒன்பதாம் நாளாகிய அரஃபா நாளின்) மீது சத்தியமாக!*

[4]கடந்து செல்லும் இரவின் மீது சத்தியமாக! (தீர்ப்புநாள்
வந்தே தீரும்) [5]அறிவுடையோருக்கு இதில் போதுமான சத்தியம்
இருக்கிறதல்லவா? [6](நபியே!) உமது இறைவன் ஆத் சமூகத்தினரை
எவ்வாறு (வேதனை) செய்தான் என்பதை நீர் அறிந்ததில்லையா?
[7](அவர்கள் உயரமான) தூண்களையுடைய இரம் (என்னும் நகர)
மக்கள் [8]அவர்களைப் போன்ற (வலிமை மிக்கச்) சமூகத்தினர் எந்த
நகரங்களிலும் படைக்கப்படவில்லை. [9](மேலும்) பள்ளத்தாக்கில்
பாறைகளைக் குடைந்(து அவற்றில் வாழ்ந்து வந்)த ஸமூத்
சமூகத்தினரை (அவன் எவ்வாறு வேதனை செய்தான் என்பதை
நீர் அறிந்ததில்லையா?) [10](பெரும்படைகள் தங்குவதற்கான
பல்வேறு கூடார) முளைகளையுடைய ஃபாரோவை (இறைவன்
எவ்வாறு வேதனை செய்தான் என்பதை நீர் அறிந்ததில்லையா?)
[11]அவர்கள் நாடுகளில் வரம்புமீறி நடந்தனர்; [12]அவற்றில் குழப்பத்தை
மிகுதிப்படுத்தினர். [13]எனவே உமது இறைவன் அவர்களின் மீது
வேதனையின் சாட்டையைச் சுழற்றினான். [14]உறுதியாக உமது
இறைவன் கண்காணித்துக் கொண்டிருக்கிறான். [15]மனிதனை
அவனது இறைவன் கண்ணியப்படுத்தி அருட்கொடைகளையும்
வழங்கிச் சோதிக்கும்போது, “என் இறைவன் என்னைக்
கண்ணியப்படுத்தினான்” என்று கூறுகிறான். [16]ஆனால் அவனது
வாழ்க்கை வசதிகளைக் குறைத்து அவனைச் சோதிக்கும்போது
“என் இறைவன் என்னை இழிவுபடுத்தி விட்டான்” என்று
கூறுகிறான். [17]உண்மை அதுவன்று. (மனிதர்களே!) நீங்கள்
அநாதைகளைக் கண்ணியமாக நடத்துவதுமில்லை; [18]ஏழைகளுக்கு
உணவளிக்குமாறு (ஒருவரையொருவர்) தூண்டுவதுமில்லை.
[19]பிறருடைய மரபுரிமைச் சொத்துக்களை(க் கவர்ந்து) நீங்கள்
முழுமையாக விழுங்கி விடுகிறீர்கள். [20]செல்வத்தின்மீது அளவுகடந்த
மோகம் கொண்டுள்ளீர்கள். [21]சரியன்று, (நபியே!) பூமி தூள்
தூளாகத் தகர்க்கப்படும்போது [22]உமது இறைவனும் (வருவான்);
வானவர்களும் அணிஅணியாக வருவர். [23]அந்நாளில் நரகம்
(கண்ணெதிரே) கொண்டு வரப்படும். அந்நாளில்தான் மனிதன்
புரிந்துகொள்வான். அப்போது ஏற்படும் புரிதலால் அவனுக்கு

என்ன பயன்? [24]“என் (மறுமை) வாழ்வுக்காக நான் (நன்மைகளைச்
செய்து) அனுப்பியிருக்கக் கூடாதா?” என்று அவன் (வருந்திப்)
புலம்புவான். [25]அந்நாளில் இறைவன் தண்டிப்பதைப்போல வேறு
எவரும் தண்டிக்கமாட்டார். [26]அவன் (பாவிகளைப்) பிணிப்பது
போல(க் கடுமையாக) வேறு எவரும் பிணிக்கமாட்டார்.
[27](ஆனால் நம்பிக்கை கொண்டு நல்லறம்புரிந்தவர்களை நோக்கி)
“சாந்தியடைந்த ஆன்மாவே! [28]உன் இறைவன்பால் திரும்பு! நீ
அவனால் நிறைவடைந்த நிலையிலும் உன்னைக் குறித்து அவன்
நிறைவடைந்த நிலையிலும் (திரும்பு!) [29]இணைந்துவிடு, என்
அடியார்களுடன்! [30]என் சொர்க்கத்திலும் நுழைந்து விடு! (என்று
கூறப்படும்)

## 90. நகரம் (அல்பலத்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1](நபியே!) இந்த (மக்கா) நகரின்மீது நான் சத்தியம் செய்கிறேன்.
[2]நீர் இந்நகரிலேயே வாழ்கின்றீர். [3](மனித குலத்தின்) தந்தை(யாகிய
ஆதம்) மீதும் அவர் பெற்றெடுத்த வழித்தோன்றல்மீதும்
சத்தியமாக! [4]மெய்யாகவே நாம் மனிதனைத் துன்புறுபவனாகவே
படைத்துள்ளோம். [5]தன்னை எவரும் அடக்கியாள முடியாது
என்று அவன் எண்ணுகிறானா? [6]“நிறைந்த செல்வத்தை (ஈட்டி
அவற்றை) அழித்தும் விட்டேன்” என்று (பெருமையாக) அவன்
சொல்லிக் கொள்கிறான். [7]தன்னை யாரும் பார்க்கவில்லை என்று
அவன் எண்ணுகிறானா? [8]நாம் அவனுக்கு இரு கண்களையும், [9]ஒரு
நாவையும் இரு உதடுகளையும் வழங்கவில்லையா? [10]இன்னும் நாம்
அவனுக்கு (நன்மை தீமை எனும்) இரு வழிகளையும் காட்டினோம்.
[11]ஆயினும் அவன் ஏறுமுகப் பாதையில் (செல்ல) முயலவில்லை.
[12](நபியே!) ‘ஏறுமுகப் பாதை’ என்னவென்று உமக்கு அறிவிக்கக்
கூடியது எது? [13](அது) ஓர் அடிமையை விடுதலை செய்வதாகும்.
[14-16]அல்லது உறவினரான அநாதைக்கோ, வறுமையில் உழலும்

ஏழைக்கோ, (பஞ்சம்) பசி நிலவும் நாட்களில் உணவளிப்பதாகும்.
[17]அத்துடன் நம்பிக்கைகொண்டு (ஒருவருக்கொருவர்)
பொறுமையை மேற்கொள்ளுமாறும், பரிவு காட்டுமாறும்
அறிவுரை கூறுகின்றவர்களில் ஒருவராக ஆகிவிடுவதும் (ஏறுமுகப்
பாதையில் செல்வதாகும்). [18]அவர்கள்தாம் வலப்பக்கத்தில்
இருப்போர் (சொர்க்கவாசிகள்) ஆவர். [19]எம் வசனங்களை
(ஏற்க) மறுத்தவர்கள்தாம் இடப்பக்கத்தில் இருப்போர்
[20]அவர்கள் (அனைத்து வழிகளும்) மூடப்பட்ட நரக நெருப்பில்
இடப்படுவர்.

# 91. சூரியன் (அஷ்ஷம்ஸ்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]சூரியன் மீதும் அதன் ஒளியின்மீது சத்தியமாக! [2]அதனைத்
தொடர்ந்து வரும் சந்திரன்மீது சத்தியமாக! [3](சூரியனை)
வெளிப்படுத்தும் பகலின் மீது சத்தியமாக! [4]அதனை மூடிக்கொள்ளும்
இரவின் மீது சத்தியமாக! [5]வானத்தின்மீது சத்தியமாக! அதனை
அமைத்தவன்மீது சத்தியமாக! [6]பூமியின்மீது சத்தியமாக! அதனை
விரித்தவன்மீது சத்தியமாக! [7]ஆன்மாவின்மீது சத்தியமாக!
அதனை (மனிதனாகச்) செம்மையாக உருவாக்கியவன்மீது
சத்தியமாக! [8]அதற்கு (அவ்வான்மாவிற்கு) தீமை(எது) நன்மை
(எது என) உணர்த்தியவன் மீது சத்தியமாக! [9]அதனைத்
தூய்மைப்படுத்தியவர் உறுதியாக வெற்றியடைந்து விட்டார்;
[10]அதனை மாசுபடுத்தியவர் உறுதியாகத் தோல்வியடைந்து
விட்டார். [11]ஸமூத் சமூகத்தினர் தங்கள் வரம்புமீறிய போக்கினால்
(தூதர் சாலிஹைப்) பொய்மைப்படுத்தினர். [12](அல்லாஹ்
அவர்களைச் சோதிக்க அனுப்பிய பெண் ஒட்டகத்தைக் கொல்ல)
அவர்களில் மிகவும் கேடுகெட்டவன் எழுந்து வந்தபோது,
[13]அவர்களிடம் இறைத்தூதர் (சாலிஹ்) “இது இறைவனின்
பெண் ஒட்டகம். இதை நீரருந்துவதற்கு(த் தடைசெய்யாமல்)
விட்டுவிடுங்கள்” என்று கூறினார். [14]ஆனால் அம்மக்கள்

*அவருடைய பேச்சை (நம்பாமல்) 'பொய்' என்றனர்; ஒட்டகத்தின் கால்நரம்பை வெட்டி(க் கொன்று) விட்டனர். எனவே இறைவன் அவர்களுடைய பாவத்தின் காரணமாக அவர்கள்மீது அழிவை இறக்கினான். அனைவரையும் (சாவில்) சமமாக்கினான்.* 15*அதன்*
*விளைவைக் குறித்து அவன் அஞ்சவில்லை.*

## 92. இரவு (அல்லைல்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

1*(இருளால் யாவற்றையும்) மறைத்துக்கொள்ளும் இரவின்*
*மீது சத்தியமாக!* 2*(ஒளிவீசி) வெளிப்படும் பகலின் மீது*
*சத்தியமாக!* 3*ஆணையும் பெண்ணையும் படைத்திருப்பதன்மீது*
*சத்தியமாக!* 4*(மனிதர்களே!) உறுதியாக உங்களின் முயற்சிகள்*
*பல்வேறுபட்டவையாக உள்ளன.* 5*எனவே எவர் (ஈகை) வழங்கி*
*இறையச்சத்துடன் நடந்து* 6*மிக அழகிய (சிறந்த மார்க்கத்)தை*
*உண்மையென ஏற்றுக்கொண்டாரோ* 7*அவருக்கு(ச் சொர்க்கம்*
*புகுவதற்குரிய) நேரிய வழியை நாம் எளிதாக்குவோம்.*
8*ஆனால் எவன் கஞ்சத்தனம் செய்து (இறையருள்) தனக்குத்*
*தேவையில்லை எனக் கருதி* 9*மிக அழகிய(மார்க்கத்)தைப்*
*பொய்யென மறுத்தானோ* 10*அவனுக்கு (நரகம் புகுவதற்கான)*
*கடுவழியை நாம் எளிதாக்குவோம்.* 11*அவன் (நரகத்தில்)*
*விழும்போது அவனது செல்வம் அவனுக்குப் பயனளிக்காது.*
12*உறுதியாக நேர்வழிகாட்டுவது எமது பொறுப்பாகும்.*
13*உறுதியாக மறுமையும் இம்மையும் எமக்கே உரியன.* 14*எனவே*
*(மக்காவாசிகளே!) கொழுந்து விட்டெரியும் நெருப்பைப்பற்றி*
*உங்களுக்கு நான் அச்சமூட்டி எச்சரிக்கை செய்கிறேன்.* 15*மிகக்*
*கொடியவனைத் தவிர வேறுயாரும் அதில் நுழையமாட்டார்கள்.*
16*அவன் சத்திய(மார்க்க)த்தைப் பொய்யென மறுத்தவன்.*
17*மிகுந்த இறையச்சமுடையவர் அ(ந்நரகத்)திலிருந்து தொலைவில்*
*(பாதுகாப்பாக) வைக்கப்படுவார்.* 18*(இம்மையில்) அவர்*
*தூய்மையடையும் பொருட்டுத் தம் செல்வத்தை (ஈகையாக)*
*வழங்குவார்.* 19*கைமாறு செய்யும் அளவுக்கு எவருக்கும் அவர்*

*நன்றிக் கடன்பட்டிருப்பதில்லை. [20]ஆயினும் மேலான இறைவனின் உவப்பைப் பெறுவதற்காகவே (அவர் ஈகை செய்வார்). [21]மிக விரைவில் (தம் இறைவன் அளிக்கும் கொடையைப் பெற்று) அவரும் நிறைவு கொள்வார்.*

## 93. ஒளிமிக்க முற்பகல் (அள்ளுஹா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]ஒளிமிக்க முற்பகலின் மீது சத்தியமாக! [2]இருண்ட இரவின் மீது சத்தியமாக! [3](நபியே!) உம் இறைவன் உம்மைக் கைவிடவுமில்லை; வெறுக்கவும் இல்லை. [4]மறுமைதான் இம்மையைவிட உமக்குச் சிறந்ததாகும். [5]மேலும் விரைவில் உம் இறைவன் உமக்கு(ப் பெரும் அருட்கொடைகளை) வழங்குவான். அப்போது நீர் நிறைவடைவீர். [6]அவன் உம்மை அநாதையாகக் கண்டு புகலிடம் அளிக்கவில்லையா? [7]உம்மை வழியறியாதவராகக் கண்டு, நேர்வழியில் செலுத்தினான். [8]உம்மை தேவையுடைவராகக் கண்டு (பிறகு உம்மைப் பிறரிடமிருந்து) தேவையற்றவராக்கினான். [9]எனவே நீர் அநாதைகளுடன் கடுமையாக நடந்துகொள்ளாதீர். [10]இரந்து நிற்பவரை விரட்டாதீர். [11]உம் இறைவனின் அருட்கொடைகளை (மக்களுக்கு) அறிவித்துக் கொண்டிருப்பீராக!*

## 94. விரிவாக்குதல் (அல்இன்ஷிராஹ்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1](நபியே!) உமது நெஞ்சத்தை நாம் விரிவாக்கவில்லையா? [2]சுமையை உம்மை விட்டு இறக்கினோம். [3]அது உமது முதுகை முறித்துக் கொண்டிருந்தது. [4]உமது புகழை மேலோங்கச் செய்தோம். [5]எனவே கடுமையுடன் எளிமை இருக்கிறது. [6]உறுதியாகக் கடுமையுடன் எளிமை இருக்கிறது. [7]எனவே நீர் (உமது பணிகளிலிருந்து) விடுபட்டதும் (இறைவனை வணங்கும்) அருமுயற்சியில் ஈடுபடுவீராக! [8]உமது இறைவனின் பக்கமே முழு கவனத்தையும் செலுத்துவீராக!*

# 95. அத்திப் பழம் (அத்தீன்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1]அத்தியின் மீதும் ஆலிவ் மரத்தின் மீதும் சத்தியமாக! [2]ஸினாய்
மலையின் மீது சத்தியமாக! [3]புகல் அளிக்கும் (மக்கா) நகரத்தின்மீது
சத்தியமாக! [4]நாம் மனிதனை மிக அழகிய வடிவில் படைத்தோம்.
[5]பின்னர் (அவனது தீச் செயல்கள் காரணமாக) அவனைத்
தாழ்ந்தவர்களில் மிகவும் தாழ்ந்தவனாக ஆக்கிவிடுகின்றோம்.
[6]ஆயினும் நம்பிக்கைகொண்டு நற்செயல்கள்புரிந்தவர்களைத்
தவிர. அ(த்தகைய)வர்களுக்கு என்றும் முடிவுறாத நற்கூலி உண்டு.
[7]ஆகவே (மனிதனே!) நீ எதைக் கொண்டு தீர்ப்பு நாளைப்
பொய்யெனக் கூறுகிறாய்? [8]அல்லாஹ் தீர்ப்பளிப்போரில்
எல்லாம் மிகச் சிறந்த தீர்ப்பளிப்பாளன் அல்லவா!

# 96. இரத்தக்கட்டி (அல்அலக்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1](நபியே! அனைத்துலகங்களையும்) படைத்த உம்
இறைவனின் பெயரால் ஓதுவீராக! [2]அவன் (கருவறைச்
சுவரில் ஒட்டிக் கொண்டிருக்கும்) இரத்தக் கட்டியிலிருந்து
மனிதனைப் படைத்தான். [3]ஓதுவீராக! உம் இறைவன்
மாபெரும் (அருட்)கொடையாளன். [4]அவன்தான் எழுதுகோல்
கொண்டு (எழுதக்) கற்றுக்கொடுத்தான். [5]மனிதனுக்கு அவன்
அறியாதவற்றையெல்லாம் கற்றுக்கொடுத்தான். [6]எனினும் மனிதன்
(நன்றி செலுத்தாமல்) வரம்பு மீறுகிறான். [7](இறையருளின்)
தேவையற்றவன் என்று தன்னை அவன் கருதுவதால் (அவ்வாறு
வரம்பு மீறுகிறான்) [8]உறுதியாக உமது இறைவனிடமே (அவன்)
திரும்ப வேண்டியுள்ளது. [9–10]ஓர் அடியார் தொழும்போது
அவரைத் தடுப்பவனை (நபியே!) நீர் பார்த்தீரா? [11]பார்த்தீரா,
அவர் நேர்வழியில் இருக்கும்போதிலுமா (அவன் தடுப்பான்?)
[12]அல்லது இறையச்சம் கொள்ளுமாறு (பிறரை) ஏவினாலுமா

*(அவன் தடுப்பான்?)* [13]*அவன் (சத்தியத்தைப்) பொய்மைப்படுத்திப் புறக்கணித்துச் செல்வதை நீர் பார்த்தீரா?* [14]*(அவனை) அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதை அவன் அறியவில்லையா?* [15]*(அவன் எண்ணுவது போல) இல்லை. அவன் (இத்தீச்செயலிலிருந்து) விலகிக் கொள்ளவில்லையெனில் அவனது நெற்றிமுடியைப் பிடித்து (நரகத்துக்கு) இழுத்துவருவோம்.*
[16]*பாவம் செய்கின்ற, (அப்)பொய்யனின் நெற்றியை!* [17]*(அச்சமயம் உதவிக்காகத்) தன் ஆதரவாளர்களை அவன் அழைத்துக் கொள்ளட்டும்.* [18]*(அவனைத் தண்டிக்க) நாமும் நரகத்தின் காவலர்களை அழைப்போம்.* [19]*(அவன் எண்ணுவதுபோல இல்லை நபியே!) அவனுக்குக் கட்டுப்படாதீர். உம் இறைவனுக்குத் தலைவணங்கி (அவனை) நெருங்குவீராக!*

# 97. விதியின் இரவு (அல்கத்ர்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]*‘விதியின் இரவில்’ இதனை நாம் அருளினோம்.* [2]*‘விதியின் இரவு’ என்பது என்னவென்று உமக்கு அறிவிக்கக் கூடியது எது?*
[3]*‘விதியின் இரவு’ ஆயிரம் மாதங்களை விடச் சிறந்ததாகும்.*
[4]*அவ்விரவில் வானவர்களும் (கேப்ரியேல் ஆகிய) தூய ஆவியும் தங்கள் இறைவனின் அனுமதி பெற்றுக்கொண்டு அனைத்துச் செயல்களுக்கும் அவனுடைய கட்டளைகளுடன் இறங்குகின்றனர்.*
[5]*வைகறை தோன்றும்வரை அந்த இரவு முற்றிலும் அமைதி நிரம்பியிருக்கும்.*

# 98. தெளிவான சான்று (அல்பய்யினா)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]*வேதமுடையோர், இணைவைப்போர் ஆகியோருள் (இந்தக் குர்ஆனை)மறுத்தவர்கள் தங்களிடம் தெளிவான சான்று வரும்வரை (தமது மறுப்பை விட்டு) விலகமாட்டார்கள்.* [2]*(அச்சான்றானது,*

அல்லாஹ்விடமிருந்து ஒரு தூதர் (வந்து அவர்களுக்குத்)
தூய்மையான (வேத) ஏடுகளை ஓதிக் காட்டவேண்டும்; [3]அந்த
(ஆகம) ஏடுகளில் நிலையான சட்டங்கள் இருக்க வேண்டும்
(என்பதாகும்). [4](ஆனால்) தெளிவான சான்று (ஆகிய எமது
தூதர்) வந்ததன் பின்னர்த்தான், வேதமுடையோர் (சிலர் அதை
மறுத்துத்) தமக்குள் பிளவுபட்டனர். [5]மார்க்கத்தை அல்லாஹ்வுக்கு
மட்டுமே உரித்தாக்கி முழு நம்பிக்கை உடையவர்களாக அவனை
வழிபடுதல், தொழுகையைக் கடைப்பிடித்தல், கடமையாக்கப்பட்ட
கொடையை அளித்தல் ஆகிய இவற்றைத் தவிர (வேறெதற்கும்)
அவர்கள் ஏவப்படவில்லை. இதுதான் சரியான மார்க்கமாகும்.
[6]உறுதியாக வேதமுடையோர், இணைவைப்போர் ஆகியோருள்
(இந்தக்குர்ஆனை)மறுப்பவர்கள் நரக நெருப்பில் நிலையாகக்
கிடப்பர். அவர்கள்தாம் படைப்பினங்களில் மிகவும் தீயவர்கள்.
[7](ஓரிறை)நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிந்தவர்கள்தாம்
படைப்பினங்களில் மிகவும் சிறந்தவர்கள். [8]இறைவனிடம்
அவர்களுக்குரிய கூலி நிலையான சொர்க்கங்களாகும். அவற்றில்
ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அவற்றில் அவர்கள் நிலையாகத்
தங்கியிருப்பர். அல்லாஹ் அவர்களைக் குறித்து உவப்படைவான்.
அவர்களும் அவனைக் குறித்து நிறைவடைவார்கள். இவை தம்
இறைவனுக்கு அஞ்சியவருக்கே உரியவையாகும்.

## 99. நிலநடுக்கம் (அஸ்ஸில்ஸால் )

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

[1]நிலநடுக்கத்தால் பூமி வலுவாக உலுக்கப்படும்போது, [2]தன்
சுமைகளை அது வெளித் தள்ளிவிடும்போது, [3]‘இதற்கு என்ன
நேர்ந்தது?’ என்று மனிதன் கேட்பான். [4]அந்த நாளில் அது தன்
(மீது நடந்த) நிகழ்ச்சிகளை அறிவிக்கும். [5]ஏனெனில் (நபியே!)
உம் இறைவன் அதற்கு அவ்வாறே கட்டளையிட்டிருப்பான்.
[6]அந்த நாளில் மக்கள் தங்களின் செயல்களைக்

*காண்பதற்காகத் தனித்தனிப் பிரிவுகளாக வருவர். [7]எவர் ஒரு*
*மிகச்சிறு அளவு நன்மை செய்திருந்தாரோ அவர் அதனை*
*(அங்கு)க் கண்டுகொள்வார். [8]எவர் ஒரு மிகச்சிறு அளவு தீமை*
*செய்திருந்தாரோ அவர் அதனை(அங்கு)க் கண்டுகொள்வார்.*

## 100. மிக வேகமாக ஓடக்கூடியவை (அல்ஆதியாத்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]மூச்சிறைக்க மிகவேகமாக ஓடுகின்ற குதிரைகள்மீது சத்தியமாக!*
*[2](குளம்புகளிலிருந்து) தீப்பொறி பறக்கச் செய்பவை, [3]புலர்காலைப்*
*பொழுதில் (எதிரிகள்மீது) பாய்ந்து தாக்குபவை [4]புழுதிப்*
*படலத்தைக் கிளப்புபவை, [5](அதிலிருந்து எதிரிப்) படைகளின்*
*நடுவே நுழைந்து விடுபவை (ஆகிய குதிரைகள் மீது சத்தியமாக!)*
*[6]உறுதியாக மனிதன் தன் இறைவனுக்கு நன்றி கெட்டவனாக*
*இருக்கிறான். [7]அதற்கு அவன்தான் சாட்சியாகவும் இருக்கிறான்.*
*[8]அவன் செல்வத்தின் மீது தீவிர மோகம் கொண்டுள்ளான்.*
*[9-10]சவக்குழிகளில் உள்ளவை (உயிர்கொடுத்து) எழுப்பப்பட்டு,*
*உள்ளங்களில் உள்ளவை எல்லாம் வெளிப்படுத்தப்படும் நேரத்தை*
*(அவன்) அறிந்துகொள்ள வேண்டாமா? [11]உறுதியாக அந்த*
*நாளில் அவர்களின் இறைவன் அவர்களைப்பற்றி நன்கறிந்தவன்.*
*(என்பதை அவர்கள் புரிந்துகொள்வர்).*

## 101. திடுக்கிடச் செய்யும் நிகழ்வு (அல்காரிஆ)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1]‘திடுக்கிடச் செய்யும் நிகழ்வு’! [2]‘திடுக்கிடச் செய்யும் நிகழ்வு’*
*என்றால் என்ன? [3](நபியே!) ‘திடுக்கிடச் செய்யும் நிகழ்வு’*
*என்னவென்று உமக்கு அறிவிக்கக் கூடியது எது? [4]அந்நாளில்*
*மனிதர்கள் ஈசல்களைப் போல் சிதறுண்டு கிடப்பர். [5]மலைகள்,*
*(கொட்டப்பட்ட) பலவண்ண (ஆட்டு) உரோமங்கள் போல(க்*

காற்றில் பறக்கூடியவை) ஆகிவிடும். 6எனவே எவரது (நன்மையின்)
எடை கனமாக இருக்குமோ, 7அவர் மிக மகிழ்ச்சியான வாழ்வைப்
பெறுவார். 8ஆனால் எவரது (நன்மையின்) எடை குறைவாக
(பாவத்தின் எடை கனமாகி) இருக்குமோ, 9அவரது உறைவிடம்
(நரகப்) படுகுழியாகும். 10(நபியே!) அது என்னவென்று உமக்கு
அறிவிக்கக் கூடியது எது? 11அது கொழுந்து விட்டெரியும்
நெருப்பாகும்.

## 102. பேராசை (அத்தகாசுர்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

1(செல்வத்தை மேன்மேலும்) மிகுதிப்படுத்திக்கொள்ளும்
பேராசை (இறைவன் மீதான நினைவிலிருந்து) உங்கள் கவனத்தை
மாற்றிவிட்டது. 2நீங்கள் சவக்குழிகளைச் சென்றடையும்வரை
(இவ்வாறே ஆக்கியது). 3சரியன்று, நீங்கள் விரைவில் (அதன்
விளைவை) அறிந்துகொள்வீர்கள். 4சரியன்று, நீங்கள் விரைவில்
(அதன் விளைவை) அறிந்துகொள்வீர்கள். 5சரியன்று,
(சத்தியத்தை) நீங்கள் உறுதியாக அறிந்துகொள்வீர்களாயின்
6நீங்கள் நரகத்தை(த் தொலைவிலிருந்து) காண்பீர்கள். 7(பின்னர்)
அதனைக் கண்கூடாகக் காண்பீர்கள். 8பின்னர் அந்த நாளில்,
(நீங்கள் உலகில் பெற்ற) அருட்கொடைகளைப்பற்றிக் கட்டாயம்
விசாரிக்கப்படுவீர்கள்.

## 103. காலம் (அல்அஸ்ர்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

1காலத்தின் மீது சத்தியமாக! 2உறுதியாக மனிதன் இழப்பில்தான்
இருக்கிறான். 3ஆயினும் யார் (இறை) நம்பிக்கைகொண்டு,
நற்செயல்கள் புரிந்து, ஒருவருக்கொருவர் சத்தியத்தை அறிவுறுத்திக்
கொண்டும் பொறுமையை(க் கடைப்பிடிக்க) அறிவுறுத்திக்

கொண்டு இருக்கிறார்களே அவர்களைத் தவிர! (இத்தகையோர் இழப்புடையோர் அல்லர்)

## 104. புறம்கூறித் திரிதல் (அல்ஹுமஸா)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

[1]புறங்கூறுபவனும் அவதூறு பேசுபவனும் ஆகிய
ஒவ்வொருவனுக்கும் கேடுதான். [2](அத்தகையவன்) செல்வத்தைச்
சேர்த்து வைத்து அதை (இறைவழியில் செலவிடாமல்)
எண்ணி எண்ணிப்பார்க்கிறான். [3]அவனது செல்வம் அவனை
என்றென்றும் நிலைத்து வாழவைக்கும் என்று எண்ணுகிறான்.
[4]அவ்வாறில்லை. (மறுமையில்) நொறுக்கிச் சிதைக்கும் இடத்தில்
அவன் வீசி எறியப்படுவான். [5](நபியே!) 'நொறுக்கிச் சிதைக்கும்
இடம்' என்னவென்று உமக்கு அறிவிக்கக் கூடியது எது? [6]அது
அல்லாஹ்வுடைய (கட்டளையால்) மூட்டப்படும் நெருப்பாகும்.
[7]அது (மனித) உள்ளங்களுள் சென்றடையும். [8]அது (அனைத்துப்
புறங்களிலிருந்தும்) அவர்களை மூடியிருக்கும். [9]உயரமான
(நெருப்புத்) தூண்களில் (அவர்கள் கட்டப்பட்டிருப்பார்கள்.)

## 105. யானை (அல்ஃபீல்)

**அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...**

[1](நபியே!) யானைப் படையினரை உமது இறைவன் என்ன
செய்தான் என்பதை நீர் அறியவில்லையா? [2]அவர்களின்
சூழ்ச்சியை அவன் வீணடிக்கவில்லையா? [3]அவர்களின் மீது
பறவைகளைக் கூட்டங்கூட்டமாக அனுப்பினான். [4]அவை
அவர்களின் மீது சுடப்பட்ட களிமண் கற்களை எறிந்தன.
[5]அதனால் (கதிர்கள் அனைத்தும்) மென்று தின்னப்பட்ட
(வயலில் கிடக்கும்) வைக்கோலைப் போல் அவர்களை அவன்
ஆக்கி (அழித்து) விட்டான்.

## 106. குறைஷிகள் (குறைஷ்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1]குறைஷிகளுக்கு (வணிகப் பயணங்கள்மீது) விருப்பத்தை உண்டாக்கியதற்காகவும் [2](அதாவது) குளிர்கால, கோடைக்காலப் பயணங்களை விரும்பி மேற்கொள்ள (வசதி) செய்ததற்காகவும் [3](நன்றி செலுத்த) அவர்கள் இந்த(க் கஅபா) இல்லத்தின் இறைவனையே வணங்கட்டும். [4]அவன்தான் அவர்களுக்குப் பசியின்போது உணவளித்தான்; அச்சத்திலிருந்து பாதுகாப்பளித்தான்.

## 107. அற்பப் பொருள்கள் (அல்மாவூன்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1](நபியே!) தீர்ப்பு நாளைப் பொய்யென்பவனை நீர் பார்த்தீரா? [2]அவன்தான் அநாதைகளை விரட்டுபவன். [3]அவன் ஏழைக்கு உணவளிக்கப் பிறரைத் தூண்டமாட்டான். [4]அந்தத் தொழுகையாளிகளுக்குக் கேடுதான்; [5]ஏனெனில் அவர்கள் தம் தொழுகையில் பாராமுகமாயிருக்கின்றனர். [6]அவர்கள் பிறருக்குக் காட்டுவதற்காகவே தொழுகின்றனர். [7](சாதாரணத் தேவைக்கான) அற்பப் பொருள்களைக் கூட(ப் பிறருக்குக் கொடுத்துதவுவதை) அவர்கள் தடுத்துவிடுகின்றனர்.

## 108. எண்ணற்ற நன்மைகள் (அல்கவ்ஸர்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1](தூதரே!) நாம் உமக்கு எண்ணற்ற நன்மைகளை வழங்கியுள்ளோம். [2]எனவே உமது இறைவனைத் தொழுது பலி கொடுத்து(த் தியாகம் செய்து) வருவீராக! [3]உறுதியாக உமது பகைவன்தான் வேரறுந்தவன்.

# 109. (ஓரிறை)மறுப்பாளர்கள் (அல்காஃபிரூன்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1](நபியே!) நீர் கூறும்: (ஓரிறை) மறுப்பாளர்களே! [2]நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்க மாட்டேன். [3]நான் வணங்குபவனை நீங்கள் வணங்குபவர்கள் அல்லர். [4]நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்குபவன் அல்லன். [5]நான் வணங்குபவனை (இனி) நீங்கள் வணங்குபவர்கள் அல்லர். [6]உங்களுக்கு உங்கள் மார்க்கம்; எனக்கு எனது மார்க்கம்".

# 110. உதவி (அந்நஸ்ர்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1](நபியே!) உமக்கு அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வரும்போது, [2]இறைமார்க்கத்தில் கூட்டம் கூட்டமாக மக்கள் நுழைவதை நீர் காண்பீர். [3](எனவே நன்றி செலுத்த) உமது இறைவனைப் புகழ்ந்து போற்றுவீராக! அவனிடம் பாவமன்னிப்புக் கோருவீராக! உறுதியாக அவன் பெரும் மன்னிப்பாளன்.

# 111. முறிந்துவிட்டது (தப்பத்)

*அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...*

[1]அபூலஹபின் கைகள் இரண்டும் முறிந்து விடட்டும்; அவன் அழிந்து போகட்டும். [2]அவனது செல்வமோ அவன் ஈட்டியவையோ அவனக்குப் பயன் தரமாட்டா. [3]மிகுவிரைவில் கொழுந்து விட்டெரியும் நெருப்பில் அவன் நுழைவான். [4]விறகு சுமந்து திரியும் அவனது மனைவியும் (நரகில் நுழைவாள்). [5]அவளது கழுத்திலே முறுக்கேற்றப்பட்ட (ஈச்ச நார்க்) கயிறுதான் இருக்கும்.

# 112. ஏகத்துவம் (அல்இக்லாஸ்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1](நபியே! மனிதர்களிடம்) நீர் கூறும்: "அல்லாஹ், அவன் ஏகன். [2]அல்லாஹ், (எவரிடமிருந்தும்) எத்தேவையும் அற்றவன். [3]அவன் எவரையும் பெறவும் இல்லை; அவன் எவராலும் பெறப்படவும் இல்லை. [4]அவனுக்கு நிகராக எவரும் இல்லை.*

# 113. அதிகாலை (அல்ஃபலக்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1](நபியே!) நீர் கூறும்: "அதிகாலையின் இறைவனிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். [2]அவன் படைத்தவற்றின் தீங்கிலிருந்தும், [3]இருள் படர்ந்துவிடும்போது ஏற்படும் இரவின் தீங்கிலிருந்தும், [4]முடிச்சுகளில் (சூனியம் செய்து) ஊதுகின்றவர்களின் தீங்கிலிருந்தும் [5]பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும்போது ஏற்படும் தீங்கிலிருந்தும் (நான் பாதுகாப்புத் தேடுகிறேன்.)"*

# 114. மனிதர்கள் (அந்நாஸ்)

***அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...***

*[1](நபியே!) நீர் கூறும்: "மனிதர்களின் இறைவனிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். [2]மனிதர்களின் அரசனிடம், [3]மனிதர்களின் வணக்கத்திற்குரியவனிடம் (பாதுகாவல் தேடுகிறேன்). [4]மறைவிலிருந்துகொண்டு தீய எண்ணங்களைத் தோற்றுவிப்பவனின் தீங்கிலிருந்து (நான் பாதுகாவல் தேடுகிறேன்). [5]அவன் மனிதர்களின் உள்ளங்களில் தீய எண்ணங்களைத் தோற்றுவிக்கிறான். [6](இத்தகைய சாத்தான்கள்) ஜின்களிலும் உள்ளனர்; மனிதர்களிலும் உள்ளனர்.*

## இம்மொழிபெயர்ப்பில் பயன்படுத்தப்பட்டுள்ள இறைத்தூதர்களின் பெயர்கள்

| | ஆங்கில வடிவப் பெயர் | அரபிமொழி பெயர்கள் |
|---|---|---|
| 1. | ஆதம் | ஆதம் |
| 2. | நோவா | நூஹ் |
| 3. | ஆப்ரஹாம் | இப்ராஹீம் |
| 4. | இஸ்மவேல் | இஸ்மாயீல் |
| 5. | ஈசாக் | இஸ்ஹாக் |
| 6. | ஜேக்கப் | யஃகூப் |
| 7. | ஜோஸஃப் / சூசை | யூசுஃப் |
| 8. | லோத் | லூத் |
| 9. | மோசே | மூஸா |
| 10. | ஆரோன் | ஹாரூன் |
| 11. | தாவீத் | தாவூத் |
| 12. | சாலமன் | சுலைமான் |
| 13. | யோப் | அய்யூப் |
| 14. | யோனா | யூனுஸ் |
| 15. | ஜான் | யஹ்யா |
| 16. | இயேசு | ஈஸா |
| 17. | முஹம்மத் | முஹம்மத் |

## கீழ்க்காணும் இறைத்தூதர்களின் பெயர்கள் தமிழ்ச்சூழலில் புழக்கத்தில் இல்லாததால் அவர்களின் அரபிப் பெயர்கள் அப்படியே பயன்படுத்தப்பட்டுள்ளன.

| | அரபிமொழி பெயர்கள் | ஆங்கில வடிவப் பெயர் |
|---|---|---|
| 18. | ஷுஐப் | ரகுவல் / ஜெத்ரோ |
| 19. | இத்ரீஸ் | எனோக் |
| 20. | ஹூத் | எபைர் |
| 21. | ஸாலிஹ் | சேலஹ் |
| 22. | துல்கிஃப்லு | துல்கிஃப்லு |

| | | |
|---|---|---|
| *23.* | *இல்யாஸ்* | *இல்யாஸ்* |
| *24.* | *அல்யஸ்வு* | *அல்யஸ்வு* |
| *25.* | *ஸகரிய்யா* | *சகாரியா* |

## இம்மொழிபெயர்ப்பில் பயன்படுத்தப்பட்டிருக்கும் சில முக்கியமான சொற்களும் கலைச்சொற்களும்.

### அல்லாஹ்

*ஏக இறைவனைக் குறிக்கத் திருக்குர்ஆன் பயன்படுத்தும் அரபிச் சொல்.*

### அரபி எழுத்துக்கள்

*திருக்குர்ஆனின் இரண்டாவது அத்தியாயம் உட்பட மொத்தம் 29 அத்தியாயங்களின் தொடக்கத்தில் சில தனித்தனி அரபி எழுத்துக்கள் இடம் பெறுகின்றன. (உதாரணத்திற்கு, அலிஃப் – லாம் – மீம்) அவற்றின் பொருள் குறித்து மார்க்கத்தில் எந்த விளக்கமும் சொல்லப்படவில்லை. அவற்றின் பொருளைக் குறித்து இறைவனே நன்கு அறிவான். இது தொடர்பான விவாதங்களும் தடை செய்யப்பட்டிருக்கின்றன. எனவேதான் குறிப்பிட்ட அத்தியாயங்களின் தொடக்கத்தில் அரபி எழுத்துக்களின் ஒலி வடிவம் அப்படியே கொடுக்கப்பட்டிருக்கிறது.*

### ஆன்மா

*ஆன்மா என்பதே உயிர் எனப்படுகிறது. ஆன்மாவைக் குறித்து மனிதனுக்கு மிகக் குறைந்த அறிவே கொடுக்கப்பட்டு இருப்பதாகத் திருக்குர்ஆன் (17:85) கூறுகிறது. மனிதனின் பூத உடல் அழிந்துவிடும். ஆனால் ஆன்மாவுக்கு என்றும் அழிவில்லை.*

*மரணத்தருவாயில் இறைவனின் வானவர்கள் மனிதனின் ஆன்மாவைக் கைப்பற்றிக் கொள்கின்றனர். பிறகு குறிப்பிட்டதோர் இடத்தில் அந்த ஆன்மா பாதுகாக்கப்படுகிறது.*

*உலக அழிவுக்குப் பிறகு மறுமையில் அனைத்து ஆன்மாக்களும் மீண்டும் எழுப்பப்படும். அவற்றிற்கு புதிய உடல் வழங்கப்படும். பிறகு அவை இறைவனுக்கு முன் விசாரணைக்காகக் கொண்டு வரப்படும். இந்த உலகில் நன்மைகள் செய்த ஆன்மாக்கள் சொர்க்கத்திற்கும் தீமைகள் புரிந்த ஆன்மாக்கள் நரகத்திற்கும் செல்லும்.*

**இறையிருக்கை**

*இது அல்லாஹ்வின் படைப்பிலேயே மிகவும் உயர்ந்த மகத்தான படைப்பாகும். இறைவன் இங்கிருந்தே தன் ஆணைகளைப் பிறப்பிக்கிறான். இறைவனின் இறையிருக்கை (அர்ஷ்) மிகவும் விரிவானது. படைப்புகள் அனைத்தும் இதற்குக் கீழே இருப்பவை. அதற்கு முன் இந்தப் பிரபஞ்சத்தின் அளவு என்பது பரந்து விரிந்த பாலைவனத்தில் இருக்கும் ஒரு சிறு குழியைப் போன்றதே.*

**இணைவைப்பாளர்கள்**

*ஏக இறைவனுக்கு நிகராகப் பிறவற்றையும் கடவுள் எனக்கொள்ளும் பல தெய்வக் கொள்கையே திருக்குர்ஆனின்படி ‘இணைவைத்தல்’ எனப்படுகிறது. இந்தக் கொள்கையை ஏற்றுக்கொள்பவரே ‘இணைவைப்பாளர்’ ஆவார்.*

**உதவியாளர்கள்**

*மத ஒடுக்குமுறை காரணமாக மக்காவிலிருந்து மதீனாவிற்குப் புலம் பெயர்ந்த மக்காவாசிகளுக்கு அடைக்கலம் கொடுத்து அனைத்து வகையிலும் உதவிய மதீனாவாழ் இறைநம்பிக்கையாளர்களே குர்ஆனில் ‘உதவியாளர்கள்’ (அன்சார்) என அழைக்கப்படுகின்றனர்.*

**கடமையாக்கப்பட்ட கொடை**

*அரபி மொழியில் இது ‘ஜகாத்’ எனப்படுகிறது. பொருளாதார வசதி படைத்தவர்கள் தங்களுடைய வருமானத்திலிருந்தும்*

*குறிப்பிட்ட அளவுக்குமேல் தங்களிடம் இருக்கும் தங்கம், வெள்ளி போன்றவற்றிலிருந்தும் ஆண்டுக்கு ஒருமுறை 2.5% ஈகையாகச் செலுத்த வேண்டியது கடமையாக இருக்கிறது. விவசாய வருமானத்திற்கும் விளைச்சலின் அளவைப் பொறுத்து ஈகை செலுத்துவது கடமையாகும்.*

## சனிக்கிழமைக்காரர்கள்

*இஸ்ரவேலர்கள் சனிக்கிழமையில் எந்த உலக அலுவல்களிலும் ஈடுபடக்கூடாது. அந்நாளை ஓய்வுக்கும் வணக்க வழிபாட்டுக்கும் உரிய நாளாக ஆக்கிவிட வேண்டும் என்று இறைவனால் கட்டளையிடப்பட்டிருந்தது. இந்த வரையறையை மீறிச் சனிக்கிழமையிலும் மீன் பிடிப்பதில் ஈடுபட்டவர்களையே 'சனிக்கிழமைக்காரர்கள்' என்று திருக்குர்ஆன் குறிப்பிடுகிறது.*

## சொர்க்கம்

*உலகியல் வாழ்வில் ஏக இறைவனால் வழங்கப்பட்ட சத்தியத்தை ஏற்று நற்செயல்கள் புரிந்தோர்க்கு மறுமையில் வெகுமதியாக வழங்கப்படும் நிரந்தரமான இன்ப உலகம் சொர்க்கம் (ஜன்னத்) எனப்படுகிறது. நற்செயல் புரிந்தோரின் படிநிலைகளுக்கு ஏற்ப இங்கே உறைவிடம் உண்டு.*

## புலம்பெயர்ந்தவர்கள்

*இறைத்தூதர் காலத்தில் மக்காவிலிருந்த முஸ்லிம்கள் மத ஒடுக்குமுறைக்கு ஆளானபோது முதல்கட்டத்தில் சிறிய குழு ஒன்று எதியோப்பியாவிற்கும் இரண்டாம் கட்டத்தில் பெரும் எண்ணிக்கையில் மதீனாவிற்கும் அகதிகளாகப் புலம் பெயர்ந்தனர். இவர்களே 'புலம்பெயர்ந்தவர்கள்'(முஹாஜிர்) என அழைக்கப்படுகின்றனர்.*

## புனித மாதங்கள்

*இஸ்லாமிய ஆண்டில் நான்கு மாதங்கள் புனிதமானவையாகக் கொள்ளப்படுகின்றன. அவை துல் கஅதா, துல்ஹஜ், முஹர்ரம்,*

*ரஜப் ஆகியவையாகும். இந்த மாதங்களில் போர்புரிவது தடை செய்யப்பட்டுள்ளது.*

### மறுப்பாளர்கள்

*சத்தியத்தைத் தெளிவாக அறிந்துகொண்ட பின்னரும் தம்முடைய கர்வத்தின் காரணமாகவும் பிடிவாதத்தின் காரணமாகவும் அதனை மூடி மறைத்து மறுத்துவிடுபவரையே திருக்குர்ஆன் 'மறுப்பாளர்' என்கிறது.*

### தொழுகை

*இஸ்லாத்தின் அடிப்படையான ஐந்து கடமைகளில் ஒன்று. ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட நேரங்களில் ஐவேளைத் தொழுகையை நிறைவேற்றுவது நம்பிக்கையாளர்கள் மீது கட்டாயக் கடமையாக இருக்கிறது.*

### நரகம்

*நரகத்தைக் குறிக்கும் 'ஜஹன்னம்' எனும் அரபிச் சொல் ஆழமான குழியையும் கணவாயையும் குறிக்கும். மறுமையில் விசாரணைக்குப்பின் தீவினையாளர்கள் அனைவரும் இங்குத்தான் நிரந்தரமான தண்டனைக்கு உட்படுத்தப்படுவர்.*

### நம்பிக்கையாளர்கள்

*ஏக இறைவனையும் வானவர்களையும் இறைவேதங்களையும் இறைத் தூதர்களையும் தீர்ப்பு நாள், விதி, மறுமை ஆகியவற்றையும் ஏற்றுக்கொண்டவரையே திருக்குர்ஆன் 'நம்பிக்கையாளர்' (முஃமின்) என்று அழைக்கிறது.*

### நயவஞ்சகர்கள்

*உள்ளொன்றும் புறமொன்றுமாக இருப்பவர்; இரட்டை நிலைப்பாட்டைக்கொண்டவர். திருக்குர்ஆனின்படி நாவினால் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டு உள்ளத்தால் இஸ்லாத்திற்கு எதிராகச் செயல்படுபவர்.*

## நோன்பு

*இஸ்லாமிய ஆண்டின் ஒன்பதாவது மாதமான ரமலான் மாதம் முழுவதும் சூரியன் உதிப்பதற்கு முன் தொடங்கி சூரியன் மறையும்வரை உண்ணாமல், பருகாமல், இல்லறத்தைத் தவிர்த்து இறைவணக்கத்தில் ஈடுபடுதல். இஸ்லாத்தின் ஐந்து கடமைகளில் நோன்பும் ஒன்று. முந்தைய சமூகத்தினர் மீதும் நோன்பு கடமையாக இருந்தது என்பதைக் குர்ஆன் எடுத்துக்காட்டுகிறது. (2:183)*

## மறுமை

*மனிதன் ஒரு நிரந்தரப்படைப்பாகப் படைக்கப்பட்டிருக்கிறான். அவனுடைய வாழ்க்கை, மரணத்திற்கு முந்தைய வாழ்க்கை மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கை என இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒருநாள், உலகம் முற்றிலும் அழிக்கப்பட்ட பிறகு இந்த பூமி வேறொரு பூமியாக மாற்றப்படும்; மனிதர்கள் அனைவரும் மீண்டும் உயிர்கொடுத்து எழுப்பப்பட்டு இறைவனின் நீதிமன்றத்திற்கு முன் விசாரணைக்காக நிறுத்தப்படுவர். உலக வாழ்வில் அவர்கள் செய்த நன்மை தீமையைப் பொறுத்து அவர்களுக்கு நிரந்தரமான சொர்க்கமோ நரகமோ வழங்கப்படும். இதையே திருக்குர்ஆன் ‘மறுமை’ என்றும் ‘இறுதித் தீர்ப்புநாள்’ என்றும் ‘நியாயத் தீர்ப்புநாள்’ என்றும் அழைக்கிறது. இதற்கு வேறு பல பெயர்களும் உள்ளன.*

## வேதமுடையோர்

*இறைவனால் வேதம் வழங்கப்பட்ட சமூகத்தினரான யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் குறிக்கும் சொல்.*

## ஹஜ் / உம்ரா

*வசதி படைத்தவர்கள் இஸ்லாமிய நாட்காட்டியின் 12வது மாதத்தில் மக்காவுக்குப் புனிதப் பயணம் மேற்கொண்டு*

*இறையில்லத்திலும் மக்காவைச் சுற்றியுள்ள பல்வேறு பகுதிகளிலும் வணக்க வழிபாடுகளை நிறைவேற்றுவது ‘ஹஜ்’ எனப்படுகிறது. இது இஸ்லாத்தின் ஐந்தாவது கடமையாகும். ஹஜ் அல்லாத காலங்களில் மக்காவின் இறையில்லத்தை இடஞ்சுற்றி வந்து சில குறிப்பிட்ட வணக்க வழிபாடுகளை நிறைவேற்றுவது ‘உம்ரா’ எனப்படுகிறது.*

## திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ள இடங்கள்

### அரஃபா

*மக்காவில் கஅபாவுக்குத் தென்கிழக்கே 22 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள ஒரு மலையின் பெயராகும். புனித ஹஜ்ஜுக்குச் செல்பவர்கள் துல்ஹஜ் மாதம் பிறை 9ஆம் நாள் இங்குள்ள மைதானத்தில் தங்குவர்.*

### உஹுத்

*மதீனாவிலுள்ள ஒரு மலையின் பெயர். ஹிஜ்ரி 3ல் இதன் அடிவாரத்தில் இறைநம்பிக்கையாளர்களுக்கும் மக்காவைச் சேர்ந்த இறைமறுப்பாளர்களுக்குமிடையே ‘உஹுத் போர்’ நடைபெற்றது.*

### கஅபா

*சவுதி அரேபியாவின் மக்கா நகரத்தில் அமைந்துள்ள சதுர வடிவமான கட்டடம். இறைத்தூதர் ஆப்ரஹாம் தம் மகன் இஸ்மாயீல் அவர்களின் உதவியோடு இதைக் கட்டினார். உலக முஸ்லிம்கள் அனைவருக்கும் இது ஏக இறைவனை வணங்குவதற்கான முன்னோக்கு திசையாக உள்ளது.*

### சபஉ

*எமன் நாட்டின் மேற்குப் பகுதியில் அமைந்துள்ள ஒரு நகரத்தின் பெயர்.*

## துவா

*எகிப்து, ஸினாய் தீபகற்பத்திலுள்ள ஒரு தூய பள்ளத்தாக்கு. இங்கு இறைத்தூதர் மோசேவுடன் இறைவன் உரையாடினான்.*

## பத்ர்

*மக்காவுக்கும் மதீனாவுக்கும் இடையே உள்ள ஓர் இடம். இது மதீனாவுக்குத் தென்மேற்கே சுமார் 175 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இங்குத்தான் மதீனா நகரில் இருந்த முஸ்லிம்களுக்கும் மக்கா நகர இறைமறுப்பாளர்களுக்குமிடையே ஹிஜ்ரி 2ஆம் ஆண்டு (கி.பி.624) ரமலான் மாதம் 17ஆம் நாளில் முதன்முறையாக 'பத்ருப் போர்' நடந்தது.*

## மத்யன்

*எகிப்துக்கும் பாலஸ்தீனத்துக்கும் இடையிலுள்ள ஒரு நகரம். இங்கு ஷுஐப் (கி.மு.1600–1490) என்பவர் இறைத்தூதராக அனுப்பப்பட்டிருந்தார்.*

## மஷ்அருல் ஹராம்

*மக்காவிற்கு வெளியே கிட்டத்தட்ட 15 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள 'முஸ்தலிஃபா' என்னும் திடல். (2:198)*

## யஸ்ரிப்

*அரேபியாவிலுள்ள மதீனா நகரத்தின் பழைய பெயர்.*

## ஜூதி

*சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்ப் பெருவெள்ளம் ஏற்பட்டது. அதிலிருந்து இறைத்தூதர் நோவா தம்மையும் தம்மைச் சார்ந்தவர்களையும் காத்துக்கொள்ள இறைவனின் கட்டளைப்படி கட்டிய கப்பல்* (Ark of Noah) *பிரளயத்திற்குப் பின் சென்று சேர்ந்த துருக்கி மலை.*

**ஸஃபா - மர்வா**

*கஅபா ஆலயத்திற்குக் கிட்டத்தட்ட நூறு மீட்டர் தொலைவிலுள்ள இரு மலைக்குன்றுகள்.*

*குழந்தை இஸ்மவேல் அவர்களுக்காகத் தண்ணீர்த் தேடி இவ்விரு குன்றுகளுக்கிடையே அன்னை ஹாஜிரா ஓடிய நிகழ்வை நினைவு கூறும் வகையில் ஹஜ் மற்றும் உம்ராவிற்காக வருகை தருபவர்கள் இவ்விரு மலைக் குன்றுகளுக்கிடையே ஏழு முறை குறைந்த வேகத்தில் ஓடுவர்.*

**ஸினாய்**

*இது ஒரு மலையின் பெயர். இது எகிப்துக்கும் சிரியாவுக்கும் நடுவில் இருக்கும் ஸினாய் பாலைவனத்தில் இருக்கிறது. இங்குத்தான் மோசேவுக்கு இறைவன் தவ்ராத் வேதத்தை அருளினான்.*

**ஹிஜ்ர்**

*மதீனாவிலிருந்து தபூக் செல்லும் வழியில் அமைந்துள்ள ஊர்.*

**ஹுனைன்**

*மக்கா மற்றும் தாயிஃப் நகருக்கு இடையிலுள்ள பள்ளத்தாக்கு.*

## திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ள மனிதர்களின் பெயர்களுள் சில

**அஹ்மத்**

*இறைத்தூதர் முஹம்மதின் மற்றொரு பெயர்.*

**இஸ்ராயீலின் மக்கள் (யஹூத்)**

*ஆப்ரஹாமின் மகன் ஈசாக்கிற்குப் பிறந்தவர் ஜேக்கப். இவருடைய வழித்தோன்றல்களான யூதர்களைக் குறிக்கத் திருக்குர்ஆன் இச்சொல்லைப் பயன்படுத்துகிறது.*

**எஸ்ரா (ஆஸர்)**

*இறைத்தூதர் ஆப்ரஹாமின் தந்தை. இவர் சிலை வணக்கம் புரிபவராக இருந்தார்.*

**கிறிஸ்தவர்**

*இறைத்தூதராக வந்த இயேசுவைப் பின்பற்றுவோர். பிற்காலத்தில் இயேசுவை இறைவனின் குமாரனாகவும் திரித்துவக் கோட்பாட்டையும் ஏற்படுத்திக் கொண்டவர்கள்.*

**கோரா (காரூன்)**

*ஃபாரோ மன்னனுடைய காலத்தில் வாழ்ந்த பெரும் செல்வந்தன்.*

**கோலியத் (ஜாலூத்)**

*இறைத்தூதர் தாவீத் காலத்தில் வாழ்ந்த தீய மனிதன்.*

**தாலூத்**

*இறைத்தூதர் தாவீத் காலத்தில் வாழ்ந்த நல் அரசர். கி.மு. 1028–1012ல் ஆட்சி செய்த இவர் கிறிஸ்தவ வேத நூலான பழைய ஏற்பாட்டில் 'சவுல்' எனக் குறிப்பிடப்படுகிறார்.*

**துல்கர்னைன்**

*பழங்காலத்தில் உலகின் பெரும்பகுதியை ஆண்ட அரசர். பாரசீக மன்னரான சைரஸ்தான் இவர் என்ற கருத்தும் உண்டு.*

**ஃபாரோ (ஃபிர்அவ்ன்)**

*ஃபாரோ என்பது எகிப்தை ஆண்ட மன்னர்களின் அரசமுறைப் பெயராகும். மோசே தன்னுடைய காலத்தில் வாழ்ந்த மன்னன் ஃபாரோவின்பால் சத்தியத்தை எடுத்துரைக்க இறைவனால் தூதராக அனுப்பப்பட்டார்.*

**மர்யம்**

*இறைத்தூதர் இயேசுவின் அன்னை. இவரை ‘முன்மாதிரிப் பெண்’ என்று திருக்குர்ஆன் சிறப்பிக்கிறது.*

**யஃஜூஜ் - மஃஜூஜ்**

*மிகப் பழங்காலத்தில் வாழ்ந்துவந்த பழங்குடி மக்கள். இவர்கள் பலவித அத்துமீறல்களில் ஈடுபட்டு வந்ததால் பிற மக்களின் குடியிருப்புப் பகுதிக்குள் நுழைந்துவிட முடியாதவாறு ஒரு தடுப்புச் சுவரை துல்கர்னைன் என்பவர் கட்டியதாகத் திருக்குர்ஆன் பதிவு செய்துள்ளது.*

**லுக்மான்**

*பழங்காலத்தில் வியக்கத்தக்க வகையில் கல்வியறிவையும், ஞானத்தையும் பெற்றிருந்த மாமனிதர். இவர் இறைத்தூதர் இல்லை என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இல்லை. ஈசாப் கதைகளின் ஆசிரியர் என்றும் இவர் கருதப்படுகிறார்.*

**ஸாமிரி**

*இறைத்தூதர் மோசேவுக்கு எதிராகச் செயல்பட்டுத் தன் சூனியத்தால் நம்பிக்கையாளர்களை வழிபிறழச் செய்து தங்கத்தால் உருவாக்கப்பட்ட காளைக்கன்றை வழிபடச் செய்தவன்.*

**ஸைத்**

*நபிகள் நாயகத்தின் தோழர்களில் ஒருவர்.*

## திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ள இனக்குழுக்கள்

**ஆத்**

*ஹூத் (கி.மு.2320–2450) என்பவரை இறைத்தூதராகப் பெற்றிருந்த வலிமைமிக்க மக்கள். இவர்கள் வாழ்ந்த இடம் ஓமானுக்கும் ‘ஹளரல் மவ்த்’திற்கும் இடையிலுள்ள பிரதேசம்*

*என்று கூறப்படுகிறது. இறைத்தூதர் ஹூதையும் அவர் கொண்டுவந்த சத்தியத்தையும் மறுத்த காரணத்தினால் கடுமையான புயல்காற்றால் அழிக்கப்பட்ட சமூகம்.*

**இரம்வாசி**

*‘ஆத்’ சமூகத்தின் மற்றொரு பெயர்.*

**சாபியீன்**

*‘சபஅ’ என்பதற்கு ‘ஒருபுறம் ஒதுக்குதல்’ என்று பொருள். சாபியீன் என்றால் ஒரு புறமாக ஒதுங்கிக் கொண்டவர்கள் என்று பொருள். இவர்கள் தொடக்கத்தில் ஓர் இறைத்தூதரைப் பின்பற்றிப் பிற்காலத்தில் மெல்ல மெல்ல வழிதவறிச் சென்றுவிட்டனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.*

**துப்பஉ**

*ஏமன் நாட்டில் (கி.மு.150) செல்வ வளத்துடன் வாழ்ந்த மக்கள். அதிகமாகக் குற்றம் செய்ததால் இவர்கள் அழிந்து போனதாகத் திருக்குர்ஆன் கூறுகிறது.*

**ரஸ்வாசி**

*ரஸ் என்றால் அரபி மொழியில் ‘கிணறு’ என்று பொருள். இவர்கள் தம்முடைய தூதரைக் கிணற்றில் போட்டதால் இவர்கள் ‘கிணற்றுவாசிகள்’ என அழைக்கப்படுவதாகக் கூறப்படுகிறது.*

**ரோம் (ரூம்)**

*பழங்கால ரோமாபுரிப் பேரரசு.*

**ஸமூத்**

*ஸாலிஹ் (கி.மு.2080–2150) என்பவரை இறைத்தூதராகப் பெற்றிருந்த வலிமை மிக்க மக்கள். அரேபியாவிலுள்ள ‘ஹிஜ்ர்’ என்ற பகுதியில் மலைகளைக் குடைந்து வாழ்ந்தவராவர். இறைத்தூதர் ஸாலிஹை மறுத்து அவருக்கு எதிராகச்*

*செயல்பட்டதனால் இறைவனால் அழித்தொழிக்கப்பட்ட சமூகம்.*

## திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ள பிற படைப்புகள்

### இப்லீஸ்:

*சாத்தான்களின் இடுபெயர்.*

### கேப்ரியேல் (ஜிப்ரீல்)

*இறைவனிடமிருந்து இறைத்தூதர்களுக்கு இறைச்செய்தியை கொண்டு வந்த வல்லமை மிக்க வானவத் தலைவர். (53:5)*

### சாத்தான்

*மனிதக் கண்களுக்குப் புலப்படாத ஒரு படைப்பு. சாத்தான் என்றால் 'மனிதர்களை வழிபிறழச் செய்கின்ற தீய படைப்பு' என்று பொருள்.*

### மைக்கேல் (மிகாயீல்)

*ஓர் உயர்ந்த வானவர். யூதர்கள் இவரை நண்பராகவும் வானவர் கேப்ரியேலைப் பகைவராகவும் கருதி வந்தனர். தவறான இந்தக் கருத்தை மறுத்துத் திருக்குர்ஆன் தெளிவுபடுத்தியது.*

### வானவர்கள்

*மனிதக் கண்களால் காணமுடியாத இறைவனின் மறைவான படைப்பு. இவர்கள் ஒளியால் படைக்கப்பட்டவர்கள். இவர்கள் இறைக் கட்டளைகளை அணுவளவும் பிசகாது நிறைவேற்றுபவர்கள்.*

### ஜின்

*மனிதக் கண்களால் காணமுடியாத இறைவனின் மறைவான படைப்பு. இவர்கள் நெருப்பால் படைக்கப்பட்டவர்கள், இவர்களில் நல்லவர்களும் உண்டு, தீயவர்களும் உண்டு.*

**ஹாரூத் - மாரூத்**

*பழைய பாபிலோன் நகரின் சம்பவம் ஒன்றுடன் சோதனைக்காக மனித உருவில் வந்த வானவர்கள்.*

## இம்மொழிபெயர்ப்பில் பயன்படுத்தப்பட்டுள்ள சில அரபிச் சொற்கள்

**இஹ்ராம்**

*ஹஜ் அல்லது உம்ரா செல்லும் ஆண்கள் மக்கா நகரை அடைவதற்கு முன் குறிப்பிட்ட எல்லையில் அணியும் தைக்கப்படாத வெள்ளைநிற ஆடைகள்.*

**இஸ்லாம்**

*சாந்தி, அமைதி, ஏக இறைவனுக்குக் கீழ்ப்படிதல், சமர்ப்பித்தல் என்பன இதன் பொருள்களாகும். முதல் மனிதர் ஆதம் முதற்கொண்டு இறுதித் இறைத்தூதர் முஹம்மத் (ஸல்) வரை அனைவருக்கும் வழங்கப்பட்ட ஒரே மார்க்கம்.*

**இஃதிகாஃப்**

*உலக விவகாரங்களிலிருந்து விடுபட்டு இறைவனை வணங்கும் எண்ணத்துடன் இறையில்லத்தில் சில நாட்கள் தங்கியிருத்தல். ரமளான் மாதத்தின் இறுதிப் பத்து நாட்கள் இதற்குரியவை.*

**இன்ஜீல் (பைபிள்)**

*இறைத்தூதர் இயேசுவுக்கு அருளப்பட்ட வேதம்.*

**ஒளு**

*தொழுவதற்கு முன்னர்ச் செய்யப்படும் உடல் தூய்மை, முகம், கை, கால்களைத் தண்ணீரில் கழுவித் தலையை ஈரக்கையால் தடவுதல்.*

**வஹீ (இறைச்செய்தி)**

*இறைவன் தன்னுடைய தூதர்களுக்கு வானவர் மூலமாக அனுப்பும் செய்தி ‘வஹீ’ ஆகும்.*

**மஸீஹ்**

*இயேசுவைக் குறிக்கத் திருக்குர்ஆன் பயன்படுத்தும் மற்றொரு சொல்.*

**பஅல்**

*அரபுப் பழங்குடியினரின் சிலைகளுள் ஒன்று.*

**மன்னு ஸல்வா**

*‘மன்னு’ என்பது இறைவன் மரங்களிலிருந்து தேனைப் போலக் கசியச் செய்த ஒரு வகையான இனிப்பைக் குறிக்கும்.*

*‘ஸல்வா’ என்பது காடை, கௌதாரி போன்றவற்றை ஒத்திருக்கும் சிறு பறவையாகும். இஸ்ராயீலின் மக்களுக்காக இறைவன் இவற்றைப் பூமியில் இறக்கினான்.*

**முஸ்லிம்**

*‘ஏக இறைவனுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்தவர்’ என்பதே இதன் பொருள்*

**லாத், உஸ்ஸா, மனாத்**

*நபிகள் நாயகத்தின் காலத்தில் அரேபியாவில் வாழ்ந்த மக்களால் வணங்கப்பட்ட சில புகழ்பெற்ற சிலைகளின் பெயர்கள்.*

**வத், ஸூவா, யகூஸ், யஊக், நஸ்ர்**

*நோவா காலத்தைய மக்களின் நேர்ச்சை விலங்குகளின் வகைப்பாடுகள்.*

**நபி / இரசூல்**

*இறைத்தூதரே ‘நபி’ எனப்படுகிறார். இறைவன் மனித குலத்தின் வழிகாட்டுதலுக்காக மனிதர்களிலிருந்தே சிலரைத் தேர்வு செய்து ‘நபி’ என்ற தகுதியை வழங்குகிறான். இறைவனால் வேதம் வழங்கப்பட்ட இறைத்தூதர்களுக்கு ‘இரசூல்’ என்று பெயர்.*

**தவ்ராத் (தோரா)**

*இறைத்தூதர் மோசேவுக்கு அருளப்பட்ட வேதம்.*

**தயம்மும்**

*தொழுகைக்கு முன் முகம் கை, கால்களைக் கழுவத் தண்ணீர் கிடைக்காதபோதும் நோய்வாய்ப்பட்டிருக்கும்போதும் சுத்தமான மணல்மீது இரு உள்ளங்கைகளையும் அடித்து ஊதி, முகத்தின் மீதும் இருகைகளின் மீதும் தடவிச் சுத்தம் செய்து கொள்ளும் சலுகை முறை.*

**ஸபூர்**

*இறைத்தூதர் தாவீதுக்கு அருளப்பட்ட வேதம்.*

*தோரா, ஸபூர், இன்ஜீல் ஆகிய இம்மூன்று வேத நூல்களும் நம் தமிழகச் சூழலில் ஆதியாகமம், புதிய ஏற்பாடு, தாவீதின் சங்கீதம் என்ற பெயர்களில் அறியப்படுகின்றன.*

*ஆனால் இந்த மூன்று நூல்களுமே அதன் மூலமொழியில் அசல் வடிவில் இல்லாமல் திரிக்கப்பட்டு, இடைச்செருகலுக்குப் பலியாகிவிட்டதாகத் திருக்குர்ஆன் கூறுகிறது.*

# திருக்குர்ஆன்

ஒவ்வொரு நூலுக்கும் ஒரு கருப்பொருளும் ஒரு நோக்கமும் இருக்கும். குர்ஆனின் கருப்பொருளும் நோக்கமும் இறைவனின் படைப்புத் திட்டத்தை மனிதனுக்கு எடுத்துரைப்பதாகும். அதாவது இவ்வுலகத்தை இறைவன் படைத்தது ஏன்? பூமியில் மனிதனைக் குடியமர்த்தியதன் நோக்கம் என்ன? மரணத்திற்கு முன்னுள்ள இந்த வாழ்க்கையில் மனிதன் என்ன செய்ய வேண்டும்? மரணத்திற்குப் பின்னரான நிரந்தர வாழ்க்கையில் என்ன நிகழும்? என்பனவற்றைத் தெளிவுபடுத்துவதேயாகும்.

மனிதன் இறைவனைப்பற்றிய ஞானத்தை அடையச் செய்வதும், இறைவனின் நெருக்கத்தைப் பெறச்செய்வதும், அமைதி மற்றும் ஆன்மிக ரீதியிலான வாழ்க்கையை வாழச்செய்வதும் குர்ஆனின் முக்கிய நோக்கங்கள். இறைமையைக் குறித்தும் இறைவன் உலகில் ஏற்படுத்தியுள்ள சான்றுகளைக் குறித்தும் ஆழ்ந்து சிந்தித்துணர்ந்து இவற்றை அடையலாம். இதனைக் குறிக்க தவஸ்ஸுூம், ததப்புர் மற்றும் தஃபக்குர் போன்ற சொற்களைக் குர்ஆன் பயன்படுத்துகிறது.

இவற்றையெல்லாம் மனத்தில் கொண்டே இந்த மொழி பெயர்ப்பும் விளக்க அடிக்குறிப்புகளும் செய்யப்பட்டுள்ளன.

goodwordbooks.com cpsglobal.org

ISBN 978-93-5179-130-0



Goodword Books